# கிராமாயணம்

கன்னட மூலம் :

ஆர். பி. குல்கர்னி (''ராவ்பகதூர்'')

தமிழாக்கம் :

எஸ். கே. சீதாதேவி



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

புது டில்லி

# முன்னுரை

தற்காலக் கன்னட நாவலின் வரலாற்றை எவ்வளவு தள்ளினாலும் அது நூற்றைம்பது ஆண்டுகளுக்குப் பின் நகருவதில்லை. உரைநடையில் ஒரு கதையை விரிவாகச் சொல்வது தான் நாவலின் இலக்கணம் என்று சொல்வதானால் சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் கெம்பு நாராயணன் எழுதிய முத்திரா மஞ்சூஷமே முதல் கன்னட நாவல் என்று சொல்ல வேண்டும். ஆனால் அது பழைய முத்திரா ராக்ஷசக் கதையையே சொல்லுகிறது. மூலக்கதைக்குக் குறைவு வராமல் உரைநடையில் அதை விரிவுபடுத்திச் சொல்லுகிறார் என்பதுதான் அதன் சிறப்பு. அதோடு, தற்கால உரைநடை, கதை இலக்கியம், இவை அதிலிருந்துதான் தொடங்கின என்பது இன்னும் ஒரு விசேஷம். ஆனால் நாம் இன்று நாவல் என்று சொல்லும் இலக்கியத்திற்கும் இந்த நாவலுக்கும் இடையில் உள்ள தொடர்பு இடைக்கால உரைநடை மட்டும்தான். நம்மிடையே நாவல் தோன்றியதும் வளர்ந்ததும் மேல்நாட்டு இலக்கியத்தின் பாதிப்பினால்தான். இன்றைக்கும் மேல்நாட்டு இலக்கியங்களின் பழக்கம் அதிகம் ஆகஆகச் சமகாலத்து நாவல்கள் பலவிதங்களில் நிறைவுபெற்று வெளியாகின்றன. சென்ற நூற்றாண்டின் நடுவில் கிறிஸ்தவ மத போதகர்கள் தம் கொள்கையைப் பரப்ப உதவும் கதைகளைக் கன்னடத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டார்கள். அதற்குப் பிறகு சில ஆண்டுக்காலம் மொழிபெயர்ப்பு வேலை தொடர்ந்து நடந்துகொண்டிருந்தது. புதிய பயிற்சி முறையில் மேல்நாட்டு இலக்கியங்களை அதிகமாகப் படிக்கும் வாய்ப்புக் கிடைத்தது. இவற்றின் விளைவுகளால் சென்ற நூற்றாண்டின் கடைசிப் பத்து ஆண்டுகளில் நாம் இன்று நாவல் என்று சொல்லும் இலக்கியம் சுதந்திரமாகத் தலை எடுத்தது. முதல் கன்னட நாவல் எது? என்பது சர்ச்சைக்குரிய விஷயம். ஆனால் அது தெளிவாகத் தோன்றித் தனிப்பட இயங்கத் தொடங்கியது இந்த நூற்றாண்டின் முதற்பகுதியில்தான் என்பதில் சந்தேகமில்லை.

மேல்நாட்டு இலக்கியத்தின் ஆட்சி, இந்த நூற்றாண்டின் முதல் முப்பது வருடங்களில் நம் இலக்கியத்தின் நிலை, போக்கு, கொள்கைகள் ஆகிய எல்லாவற்றையும் மாற்றிவிட்டது. இன்று நாம் மறுமலர்ச்சி என்று சொல்லும், புதிய மரபு ஒன்று ஏற்பட்டு விட்டது. கதையானாலும் கவிதையானாலும், அவற்றின்

பொருளும் அமைப்பும் வாழ்க்கையை ஒட்டியதாக இருக்க வேண்டும், தினசரி வாழ்க்கையின் அழகையும் பிரச்சினைகளையும் அவை எடுத்துக் காண்பிக்கவேண்டும் என்னும் யதார்த்தவாதம் தலையெடுத்ததன் பயனுகக் கதைகளும் நாவல்களும் வாழ்க்கையின் சாதாரண அனுபவங்களைப் பிரதிபலித்து, மக்களின் அன்பையும் ஏதோ ஒரு பயனையும் பெறுவது சாத்தியமாயிற்று. கதைகளும் நாவல்களும் வாழ்க்கைச் சித்திரம் என்று தோன்றியது. நேராகவோ மறைமுகமாகவோ வாழ்க்கையின் விமரிசனமும் அதன் அங்கமாகக் கருதப்பட்டது. பொழுது போக்கையே முக்கிய நோக்கமாகக்கொண்ட ஓர் இலக்கிய முறை, சுமார் முப்பத்தைந்து ஆண்டுகளில் உயிருள்ள இலக்கியமாக வளர்ந்து, ஆசிரியன் தன்னுள் அடங்கியிருந்த திறமையை வெளியிடவல்ல ஒரு முறையாக உருவாகியது. கடந்த முப்பது ஆண்டுகளில் கன்னட நாவல் குணத்திலும், தோற்றத்திலும், எண்ணிக்கையிலும் நோக்கத்தின் சாதனையிலும் சிறந்து பல துறைகளில் வளர்ந்திருக்கிறது. உண்மையை விளக்கும் இந்த ராஜபாட்டையில் முன்னேறி வெற்றி நடை போட்டுக் கொண்டிருக்கிறது. இவற்றில், ராவ்பகதூரின் கிராமாயணம் சிறந்த ஸ்தானத்தைப் பெற்றிருக்கிறது. கிராமாயணத்தின் சாதனை அதை இயற்றியவருடைய ஒப்பற்ற திறமைக்கு உதாரணமாவதோடு கன்னட நாவல் படைப்பின் திறமைக்கும் உதாரணமாயிருக்கிறது. நமது நாவல் வரலாற்றில் அது ஒரு பெருமைமிக்க மைல் கல். பிறரால் செய்ய முடியாத தனிப்பட்ட சாதனையும் ஆகும். எந்த இலக்கியத்துக்கும் பெருமை தரக்கூடிய ஒரு நாவலும் ஆகும்.

இந்த நாவலைப்பற்றிய விவரங்களோ விமரிசனமோ சொல்லுவது என்னுடைய நோக்கமன்று. நாவலே வாசகர்களின் கையில் இருக்கும்பொழுது அவை அசந்தர்ப்பமும் அனுவசியமும் ஆகும். நேஷனல் புக் ட்ரஸ்ட் நம்நாட்டு மொழிகள் எல்லாவற்றிலும் இதை மொழிபெயர்க்க வேண்டுமென்று முடிவு செய்திருப்பதே இந்த நாவலின் பெருமைக்குச் சான்றுகும். ஆனுல் அதன் சிறப்பு எப்படிப்பட்டது; அதில் என்ன விசேஷம்; எந்த நோக்கில் இது ஒரு பெரிய இலக்கியம் என்ற முறையில் சில வார்த்தைகள் சொல்வது அவசியமென்று தோன்றுகிறது. எந்தக் காரணத்தால் இது நாட்டின் எல்லா மொழிகளிலும் மொழிபெயர்க்கத் தக்கதாயிற்று என்பதை நாம் அறிந்து கொள்ளவேண்டும். ஒரு நூல் சிறப்பாக இருக்கவேண்டுமானுல் அது சூழ்நிலை, காலம், இடம், அனுபவம் எல்லாவற்றையும் மீறி நிற்கவேண்டும். இந்தக் கதை இங்கே மட்டும்தான் நடந்தது

என்பதில்லே. எங்கும் நடக்கக்கூடியது. இதில் வரும் எண்ணங்கள் இதிலுள்ள பாத்திரங்களுடன் மட்டும் தொடர்புள்ளவையல்ல, நம்மைச் சூழ்ந்த வாழ்க்கைக்கே பொருந்துவது என்னும் கருத்து ஏற்பட்டால் ஒரு நூலின் பயன் விரிகிறது. தோன்றும் விளேவு களேயும், இடத்தையும், காலத்தையும் தாண்டிப் பரவுகிறது. அப்படிப் பரவினுல்தான் ஒரு நூல் தான் தோன்றியதன் பயனே அடைகிறது. கிராமாயணம் அப்படிப் பயன் பெற்ற நாவல்.

இந்தச் சிறப்புக்களே அது எப்படிச் சாதித்தது! என்னும் பிரச்சினே ஆவலேத் தூண்டுகிறது. அதற்குப் பதில் சொல்ல வேண்டுமானுல் முழு நாவலேயும் படித்து ஆராய்ந்து அதில் உள்ள நூற்றுக்கணக்கான பகுதிகளின் விளேவுகள் எப்படி ஒன்றுக்கொன்று உதவுகின்றன என்பதை விவரிக்கவேண்டும். அது நடக்கக்கூடியதன்று. பொதுவாக இரண்டு அம்சங்களேச் சொல்லலாம். ஒன்று, இந்த நாவலில் அடங்கிய விஷயங்களும் கதையும் உண்டாக்கும் அனுபவம் நூற்றுக்கு நூறுபங்கு இயற்கையாய் இருக்கின்றன. நிலம், நீர், காற்று, ஒளி இவற்றின் இயற்கைத் தன்மையை அனுபவிக்கிருேம். இரண்டு, இயற்கை யான அந்த அனுபவமே ஒரு கதையாகி உலக வாழ்க்கையின் சொரூபத்தை எடுத்துக்காட்டும் ஒரு வியாக்கியானமாக நிற்பது. இந்த இரண்டு அம்சங்களேயும் சிறிது விவரமாகக் கவனித்தால் இந்த நாவலின் சுவாரஸ்யமும் பெருமையும் தானுகவே விளங்கும்.

கிராமாயணம் வட கர்நாடகத்தில் கிருஷ்ணு நதிக்கரையில் இருக்கும் பாதள்ளி என்னும் ஓர் ஊரின் கதை. ஒரு கிராமத்தின் கதை என்பதால் கதை நிகழ்வது ஒரு கிராமத்தில்தான் என்றே, இதில் பங்கு கொள்ளும் பாத்திரங்கள் கிராமத்தார் மட்டுமே என்றே சொல்ல முடியாது. இங்கே நடக்கும் கதை, அதில் வரும் பாத்திரங்களின் கதையாகவும் முழுக் கிராமத்தின் கதையாகவும் அமைந்திருக்கிறது. ஒரு கோணத்தில் இப்படிச் சொல்வது சரியானுலும் இந்தக் கதை கிராமத்தின் வீழ்ச்சியைச் சொல்லும் சோகக்கதை என்பதுதான் உண்மை. ஓர் ஊரின் வாழ்க்கை முழுவதும் சேர்ந்து அறுநூறு பக்கங்களில் விஸ்வரூபம் எடுக்கிறது. ஊரின் தீயசக்திகள் உள்ளிருந்தும் புறத்திலிருந்தும் சதி செய்வதால் ஊர் அழிந்துபோகிறது. படிப்படியாக, ஆனுல் தடுக்க முடியாதபடி, துரதிர்ஷ்டவசத்தால் எங்கேயோ ஓர் இடத்தில் பற்றிய ஒரு நெருப்புப்பொறி காட்டுத்தீயாகப் பரவுகிறது. ஒரு சிறிய சம்பவத்தில் தொடங்கிய கதை ஒரு சோகப் பெருவெள்ளமாகப் பரவுகிறது. ஊரின் அபிமானத்திற்கு அடையாளமாய் இருந்த மாளிகையில் உட்பூசல் ஏற்பட்டுத்

தெருவுக்கு வந்தபின் கட்சிகள் தோன்றின. பகை, போட்டி, பொருமை, சுயநலம், சூழ்ச்சிகள் ஆகியவை ஒன்றன்பின் ஒன்ருக அடக்க முடியாமல் பெருகின. வாழ்வின் அடிப்படையாக இருக்கவேண்டிய கிராமம், கொலை, சண்டை, வஞ்சம் இவற்றிற்குப் பிறப்பிடமாகிறது. கதையில் (அதாவது கிராமத்தில்) வரும் பாத்திரங்கள் தங்கள் தங்கள் குணநலன் களுக்கேற்றபடி நடந்துகொள்கின்றனர். ஊருக்கு ஆதரவாக இருப்பவர்களுக்கு எதிரான வஞ்சகர்களுடைய கை ஓங்குகிறது. நன்மை தீமைகளின் தாக்குதலில் தீமையே வெற்றி பெறுகிறது. ஊரில் தீயசக்திகளின் தொல்லையே அதிகமாக இருக்கும்பொழுது காலரா, ப்ளேக், வெள்ளம் முதலியவையும் சமயம் பார்த்து வந்து சோக முடிவுக்குத் துணை செய்கின்றன.

இங்கே நேரும் எல்லையற்ற துன்பங்களுக்குக் காரணமாக இருக்கும்-சந்நியாசி வேஷம் போட்ட-படதையா, தன்னுடைய வேஷம், பதவி இவற்றின் செல்வாக்கைத் தன்னுடைய, தன் பரிவாரத்தினுடைய சுயநலத்திற்காகவே முதலிலிருந்து கடைசி வரை உபயோகித்துக்கொள்கிருன். தன்னுடைய பிடிவாதம், சுயநலம் இவற்றின் முன் அவனுக்கு வேறு எதுவும் லட்சியமே யில்லை. நன்மை தீமைகளை ஆராயும் தன்மையே அவனிடம் இல்லை. எல்லாம் தன் இச்சைப்படி உழைக்கவேண்டிய சாதனங்கள்தான் அவனுக்கு. வேறு சிலர் தம்முடைய சுயநலத் துக்காக இப்படிப்பட்ட ஒரு துஷ்டனுக்கு உதவி செய்து அவனுடைய தீயசக்தியை வளர்க்கிருர்கள். அதை எதிர்த்து நிற்கவல்ல சுபாவமும் பலமும் உள்ள பாளாச்சாருக்கோ, கௌடருக்கோ ஆதரவு கிடைக்காததால் நல்ல சக்திகளுக்குப் பலம் குறைந்துவிடுகிறது. பாதள்ளியின் வாழ்க்கை முறையையே தீர்மானிக்கத் தக்க திறமை, படதையாவுக்கும் அவனுடைய பரிவாரத்திற்கும் ஏற்பட்டுவிட்டதால் கிராம வாழ்க்கை அழிவுப் பாதையை நோக்கிச் செல்லுகிறது. நாவல் முழுவதிலும் நாம் தீமையே வேகமாக இயங்குவதைக் காண்கிறோம். விசேஷமாக வாழ்வோடு ஒட்டிய எல்லாவற்றையும் ஆக்கிர மித்துக்கொள்ளும் பயங்கரத்தைக் காண்கிறோம். நன்மை வாழ வழியே இல்லை என்று மனம் குமுறும் சந்தர்ப்பங்களைக் காண்கிறோம். கடைசியில், தன்னுடைய அழிவுக்குத் தானே காரணமாகும் தீமையின் பஸ்மாசுர நாட்டியத்தையும் காண்கிறோம். நன்மையோடு தீமையும் அழிகிறது. இயற்கையின் நியதிப்படி, புதிய வாழ்வுக்கு மறுபடியும் இடம் தயாராகிறது. அழிவுக்குக் காரணமாகும் நிலைமையும் போக்கும் பிரளயத்தின் பயங்கரமும் இதில் வருகின்றன. ஆனுல் இந்தப் பயங்கரத்தின்

மடியிலேயே துளிர்க்கும் புத்தம் புது வாழ்க்கையின் சங்கேதமான அடையாளங்களையும் இந்த நாவல் சித்திரிக்கிறது. ஒரு கிராமத்தில் உள்ள மனிதர்களின் வாழ்க்கையே அந்தக் கிராமத்தின் வாழ்க்கையாகி, நூற்றுக்கணக்கான குணங்களின் மோதல்களில் அகப்பட்டுக்கொண்டு தள்ள முடியாத விளைவுகளின் பயனை எதிர்க்கவேண்டிய வாழ்க்கை முறைக்கு ஓர் உதாரணமாக இந்தக் கதை வளருகிறது.

கதை வளருகிறது—தானாகவே வளருகிறது என்று சொல்லுவதே ஆசிரியரின் திறமையைக் காட்டுகிறது என்று விமரிசகர் இவரைக் கௌரவிக்கவேண்டும். இந்த நாவலில், ஆசிரியர் நிகழ்ச்சிகளையெல்லாம் எட்ட நின்று கவனிக்கும் பார்வையாளர். பார்த்தவற்றை எடுத்துச் சொல்லும் அதிகாரம் மட்டுமே உள்ளவர் என்று நமக்குத் தோன்றுகிறது. கிராம வாழ்க்கையின் பல ஸ்வரங்களுக்குப் பிரதிநிதிகளாக வரும் நூற்றுக்கணக்கான பாத்திரங்களைக்கொண்ட ஒரு திருவிழாவே நம் கண்முன் நடக்கிறது. தம் நிலைமை, அன்பு, ஆசை, சூழ்நிலை இவைகளுக்கு ஏற்றபடி இதில் வரும் பாத்திரங்கள் நடந்துகொள்கின்றனர். எல்லாம் ஒன்று சேரும்பொழுது அவற்றின் பரஸ்பரத் தொடர்பிலேயே கதை உருவாகிறது. இந்தக் கதை அந்த வகையைச் சேர்ந்தது. 'இது ஒரு கட்டுக்கதை அன்று; எங்கேயோ நடந்ததையே சொல்லுகிறார்' என்னும் பிரமையை உண்டு பண்ணுவதால், ஆசிரியரின் கதை சொல்லும் திறமைக்குப் பொருளும் பயனும் கிடைக்கின்றன. அந்த இரண்டையும் கிராமாயணம் பெற்றிருக்கிறது என்று சொன்னால் உயர்வு நவிற்சி ஆகாது.

இது எப்படி முடிந்தது? ஆசிரியருடைய அறிவு அப்படிச் சமத்காரமாக வேலை செய்கிறது என்று சொன்னால் அதுவும் ஒரு பதில்தான். ஆனால் சமத்காரத்தின் சொரூபம் தெளிவாகிறதில்லை. ஒரு நாவலாசிரியர் தம் அனுபவத்திலிருந்து விஷயத்தைத் தேர்ந்தெடுக்கும் முறையிலும் அதை அவர் காணும் நோக்கிலும் அவருடைய அறிவுத் திறமையை அறிகிறோம். அந்த நோக்கமே தேர்வுக்கு முடிவு சொல்லுகிறது என்று சொல்லலாம். அது எப்படியிருந்தாலும் கதையாக உருவெடுக்கும் அனுபவத்தின் சொரூபத்திலும் ஆசிரியர் அதைக் காணும் நோக்கிலும்தான் ஆசிரியருடைய கற்பனைத் திறமையை அறிய முடிகிறது. இவருடைய அனுபவம் கிராம வாழ்க்கைக்குத் தொடர்பு உள்ளதாய் இருப்பதால் சம்பவங்களும் வர்ணனைகளும் நூற்றுக்கு நூறு பங்கு இயற்கையாக இருக்கின்றன என்பதை முன்பே சொல்லியிருக்கின்றேன். ஒரு கிராமத்தின் வாழ்க்கையில் ஊடும் பாவும்

போல் இழையும் அந்த ஜனங்களின் நடையுடை பாவனைகள், நீதி நியமங்கள், நம்பிக்கை, எண்ணம், தம்முடைய சிறந்த சூழ்நிலையோடு அவர்கள் ஒன்றிப்போவது போன்ற பல அம்சங்கள் அங்கேயிருக்கும் சில பாத்திரங்களையும் அவ்விடத்து வாழ்க்கை முறையையும் நிறைவாக நம் முன் கொண்டுவந்து நிறுத்துகின்றன. ராவ் பகதூருக்கு இந்த எல்லா அம்சங்களுடனும் நெருங்கிய பரிச்சயம் இருக்கிறது. கிராம வாழ்க்கையை முதலிலிருந்து கடைசிவரை அறிந்தவர் அவர். சர்வகலாசாலையில் பட்டம் பெற்றிருந்தாலும் விவசாய அரங்கிலேயே ஆழ்ந்த அனுபவம் பெற்றிருக்கிறார். உழைப்புமிக்க அந்தத் தொழிலையே ஏற்றுக்கொண்டிருக்கிறார். எந்த விஷயத்தையும் அவர் நுட்பமாக ஆராய்ந்து விரித்துச் சொல்லக்கூடியவர். அதனால் பிறரால் எடுத்துச் சொல்ல முடியாத கிராம வாழ்க்கையை இவர் இந்த நாவலில் தெளிவாக உருவாக்கிக் காட்டியிருக்கிறார்.

ஆனால் கிராம வாழ்க்கையை அப்படியே சித்திரிப்பது நாவலின் நோக்கமன்று. அது சாதிக்க நினைத்த வேறொரு லட்சியத்துக்கு இது சாதனமாக இருந்திருக்கிறது. ஒரு கிராம வாழ்க்கையைச் சித்திரிப்பதைவிட அந்த வாழ்க்கை வீழ்ச்சி யடையும் வழியிலேயே முன்னேறி, தள்ளமுடியாத நிலையில் அழிந்துபோவதைச் சித்திரிப்பதே அதன் நோக்கம். அந்த வாழ்க்கை முறையில் வீழ்ச்சிக்கே நிறைய இடம் இருப்பதை முதலிலிருந்து கடைசி வரையில் சொல்லியிருக்கிறார். அந்த அவருடைய நோக்கு ஒன்றுதான் நாவல் கதைக்குத் தற்போதைய உருவைக் கொடுத்திருக்கிறது. 'மனிதனுடைய சுயநலம், ஆசை, பொறாமை, அகம்பாவம் எல்லாம் தம் இச்சைப்படி வளர்ந்ததன் காரணமாகச் சுற்றிலும் இருப்பவர்களுடைய வாழ்க்கை எப்படி லட்சியம் சிதைந்து நிலைதடுமாறிப் பாழாகிறது' என்னும் ஒரு பயங்கரமான தத்துவத்தைக் கிராமாயணம் எடுத்துக்காட்டு கிறது. பாதள்ளி வாழ்க்கை முறையை உருவாக்கும் அதிகாரம், அப்படிப்பட்ட சுயநலம், பேராசை, பொறாமை, அகம்பாவம் எல்லாம் நிறைந்த மனிதர்களுடைய கையில் அகப்பட்டுக் கொள்கிறது. அந்தத் துன்பங்களே சோக முடிவுக்குக் காரணம் என்பது நாவல் முழுதிலும் நுட்பமாகப் பரவிப் படைப்புக்கு ஓர் ஒருமையை அளிக்கிறது; கருத்துக்கு விரிவைக் கொடுக்கிறது. படையா போன்ற பாத்திரங்களில் தீச்செயல்களுக்கு உள்ள திறமைகள் ஒன்று சேருகின்றன. மற்றவர்களுடைய அசிரத்தை யாலோ, திறமையின்மையாலோ, குறுகிய சுயநல புத்தியாலோ அந்தத் தீயசக்திகளின் பலம் மேலும் அதிகமாகிறது. அவை அழிவுக்கு வழிகோலின. தனிமனிதனைகட்டும், ஒரு ஸ்தாபன

மாகட்டும், தம் அதிகார சக்திகள் பரவப் பரவ அதன் புகழும் வளருகிறது. தன் அதிகார சக்தியை அது எதற்காக வளர்த்துக் கொள்கிறது என்பது பெரிய பிரச்சினை. அதன் வளர்ச்சி நன்மைக்கேயன்றித் தீமைக்கும் காரணமாகலாம். ஓர் இடத்தில் குவிந்த அதிகாரம் வேறிடத்திற்குத் திரும்புவது இயற்கை. அப்படிப்பட்ட அதிகாரமும் செல்வாக்கும் விபரீத விளைவுகளை உண்டாக்கியதற்கு வரலாற்றில் போதுமான உதாரணங்களைக் காண்கிறோம். பாதள்ளி போன்ற ஒரு சிற்றூருக்கு நேர்ந்த கதி ஒரு நாட்டுக்கும் நேரலாம்.

இன்று எந்தப் பக்கம் பார்த்தாலும் சுற்றுப்புறத்து வாழ்க்கையை நிர்ணயிக்கும் அதிகாரம் சிலரிடம்தான் ஒடுக்கப் பட்டுக்கொண்டிருக்கிறது என்பதைக் காண்கிறோம். இத்தகைய ஒரு சூழ்நிலையில் கிராமாயணத்தில் பொதிந்துள்ள செய்தி விசேஷ முக்கியத்துவம் வாய்ந்ததாகிறது; நமக்கு ஒரு எச்சரிக்கையாக அமைகிறது. சில நூற்றாண்டுகளுக்கு முன் நடந்த கதையானாலும் இந்தக் காலத்துக்கும் பொருந்துவதால் இது ஒரு சிறந்த நூல்.

**வி. எம். இலும்தார்**

# இந்த நாவலில் வரும் பாத்திரங்கள்

## பாதள்ளிக்காரர்கள்

| | | | |
|---|---|---|---|
| 1- | ராணோஜிராவ் (கோரப்படை) | : | பாதள்ளி ஜாகீர்தார். |
| 2. | லட்சுமிபாய் | : | ராணோஜிராவின் மூத்த மனைவி. |
| 3. | புத்லாபாய் | : | ராணோஜிராவின் இளைய மனைவி. |
| 4. | பாபு சாஹேப் (மணியக்காரர்) | : | கனகேரியின் மணியக்காரர். புத்லாபாயின் தம்பி. |
| 5. | ரத்னா | : | பாபு சாஹேபின் மனைவி. |
| 6. | யசவந்தராவ் (மணியக்காரர்) | : | அஜராணியின் மணியக்காரர். ரத்னாவின் தந்தை. |
| 7. | யமுனா | : | ஜாகீர்தார் வீட்டுச் சமையல்காரி. |
| 8. | சிலேதார் கோபாலன் | : | நாணுவின் தந்தை. |
| 9. | சிலேதார் நாணு | : | ஜாகீர்தாரின் நம்பிக்கைக்கு உரியவன்; ஊரில் செல்வாக்கு உள்ளவன்; சிமணுவின் தந்தை. |
| 10. | சிலேதார் லட்சுமணன் | : | நாணுவின் தம்பி; தாதாவின் தந்தை. |
| 11. | சிமணு | : | நாணுவின் மகள். |
| 12. | ருகுமா | : | நாணுவின் மனைவி. |
| 13. | தாதா (பீமசேனன்) | : | சிலேதார் லட்சுமணனின் மகன்; மற்போர் பழகிய இளைஞன். |
| 14. | சங்கரப்ப கௌடர் | : | பாதள்ளியின் மணியக்காரர். |
| 15. | பார்வதி அம்மாள் | : | சங்கரப்ப கௌடரின் மனைவி. |
| 16. | சிவன கௌடன் | : | சங்கரப்ப கௌடரின் மகன். |
| 17. | குருலிங்கப்பா | : | சங்கரப்ப கௌடரின் மைத்துனன். |
| 18. | பாளாச்சார் (ராஜ புரோகிதர்) | : | இந்துபுர சமஸ்தானத்தின் ராஜ புரோகிதர். |
| 19. | கோபாலாச்சார் | } | பாளாச்சாரின் அண்ணன் மகன்கள். |
| 20. | நாராயணச்சார் | } | |
| 21. | ஆச்சார் மனைவி | : | பாளாச்சாரின் மனைவி. |
| 22. | ஹநுமந்தாச்சார் | : | பாளாச்சாரின் சிற்றப்பா. |
| 23. | சேஷப்பா (கணக்கப்பிள்ளை) | : | பாதள்ளிக் கணக்கபிள்ளை. |
| 24. | துளசக்கா | : | சேஷப்பாவின் மனைவி. |

| | | |
|---|---|---|
| 25. | சாமராவ் (கணக்கப்பிள்ளை) | : பாதள்ளியின் மற்றொரு கணக்கப் பிள்ளை. |
| 26. | படதையா | : பாதள்ளி ஹிரே மடத்துக்கு குரு பாத ஸ்வாமிகளுக்குப் பின் வந்த மடாதிபதி; அஜராணிக் காரர். |
| 27. | லிங்கப்ப கௌடன் | : அஜராணிக் குறும்பன்; சங்கரப் பாவின் மகன்; பெயர் ஒற்று மையாலும் படதையாவின் சாமர்த்தியத்தாலும் பாதள் ளியின் மணியக்காரனாக வந்த வன். |
| 28. | சங்கரப்பா | : அஜராணிக் குறும்பன்; லிங்கப் பாவின் தந்தை. |
| 29. | குருபாதன் | : படதையாவின் சீடன். |
| 30. | தானம்மா | : படதையாவின் வைப்பாட்டி. |
| 31. | சிவயோகி சுவாமிகள் | : சதானந்த சிவயோகியின் அம்ச மாக பிறந்தவர்; கங்காதரை யாவின் குமாரர்; படதை யாவை வெளியேற்றிய பின் மடத்துப் பட்டத்துக்கு வந்த வர். |
| 32. | கங்காதரையா | : குருபாத சுவாமிகளின் தம்பி. |
| 33. | சதானந்த சிவயோகியார் | : ஹிரே மடத்துக்குக் குருபாத சுவாமிகளுக்கு முன்பு மடாதி பதியாக இருந்து மடத்தின் புகழை அதிகரிக்கச் செய்தவர். |
| 34. | ஜெயின் ஜின்னப்பா | : சங்கரப்ப கௌடரின் ஆப்த நண்பன்; குடியானவன். |
| 35. | பெரியகுறும்பன் மாயப்பா | : ஜாகீர்க் குடியானவன். |
| 36. | குத்தகைக்காரக் கரியப்பா | : ஜாகீர்க் குத்தகைக்காரன். |
| 37. | காசிம் சாயபு | ஜாகீர்தாரின் மற்றக் குடியான வர்கள். |
| 38. | ஸங்கப்பா | |
| 39. | பஸப்பா | |
| 40. | ராயண்ணா | |
| 41. | அஞ்சல் மல்லப்பன் | கௌடரின் பரிவாரம். |
| 42. | தலையாரி கல்லப்பன் | |
| 43. | தலையாரி கெஞ்சன் | |
| 44. | பிஞ்சார லாடன் | தாதாவின் தாலீம்கானா நண்பர் கள். |
| 45. | படகுத்துறை பசப்பா | |
| 46. | கடைக்காரன் சிவருத்திரன் | |

| | | | |
|---|---|---|---|
| 47. | பிராதார நிங்கம்மா | | குடியானவர்களின் மனைவிமார். |
| 48. | மூலைவீட்டுத் தாரம்மா | | |
| 49. | தலையாரிவீட்டு நாகம்மா | | |
| 50. | பெரியகுறும்பன் நிம்பம்மா | | |
| 51. | குள்ளன் சங்கரன் | : | படதையாவின் கையாள்; சோம்பேறி. |
| 52. | தளவாய் திப்பன் | : | புலிவேட்டைப் பழங்குடிகளின் தலைவன். |
| 53. | கொம்பு சிங்கன் | : | கொம்பு ஊதும் தொழில் செய்யும் சேரியாள். |
| 54. | சக்கிலியச் சன்னன் | : | பரம்பரையாகப் பாதள்ளியில் வசிக்கும் சேரியாள். |
| 55. | மல்லி | : | சன்னனுடைய தங்கை; கடவுளுக்கு என்று விட்ட தாசி. |
| 56. | ருத்திரன் | : | சேரிப் பிரமுகன். |
| 57. | பாள்யா | : | பாதள்ளியில் முதல்முதலாகக் காலராவுக்கு இரையானவன். |
| 58. | தலையாரிவீட்டு ரங்கி | : | கோபாலாச்சாரின் வைப்பாட்டி. |
| 59. | தரியா | : | அஞ்சல்காரன். |
| 60. | ரெட்டி பங்கன் | | மடத்திலேயே இருக்கும் சோம்பேறிகள். |
| 61. | லட்சுமியா | | |

வெளியூரிலிருந்து பாதள்ளிக்கு வந்தவர்கள்

| | | | |
|---|---|---|---|
| 62. | மகாராஜா | : | இந்துபுரத்து மன்னர்; லட்சுமிபாய்க்கு ஆதரவான உறவினர். |
| 63. | கிப்ஸன் துரை | : | பாதள்ளிக்கு வந்த உதவி கலெக்டர் |
| 64. | கிருஷ்ணராவ் | , | பாதள்ளிக்கு வந்த மாஜிஸ்திரேட். |
| 65. | ருக்மிணிபாய் | : | மாஜிஸ்திரேட்டின் மனைவி. |
| 66. | பக்ருதீன் சாயபு | : | பாதள்ளிக்கு வந்த சப்-இன்ஸ்பெக்டர். |
| 67. | ஜக்கப்பா | : | பாதள்ளிக்கு வந்த தாலூகா கச்சேரி சிரஸ்தார். |
| 68. | கேசவராவ் (ஆர்டர்லி) | : | சப்-இன்ஸ்பெக்டரின் ஆர்டர்லி. |
| 69. | கோபாலராவ் | : | மாஜிஸ்திரேட் குமாஸ்தா. |
| 70. | உஸ்மான் | : | மாஜிஸ்திரேட்டின் டவாலிச் சேவகன். |
| 71. | இஸ்மாயில் | : | பக்ருதீனுடைய போலீஸ் சேவகன். |

72. பாளராமன் (மார்வாடி) : பாதள்ளிக்கு வந்து நிலேத்து விட்ட வியாபாரி.

73. வெங்கண்ணு வாத்தியார் : பாதள்ளித் திண்ணேப் பள்ளிக் கூடத்து வாத்தியார்.

74. கல்லன கௌடன் : ஹாவனூர் மணியக்காரர்.

75. சந்திரி : அஜராணியிலிருக்கும் தாசி.

76. கன்ட்யா : சந்திரியின் தம்பி.

77. பஞ்சாபி லாமா : தாதாவிடம் தோற்ற மல்லன்.

78. உஸ்தாத் குலாப் : இந்துபுரத்துப் பயில்வான்.

79. போலீஸ் ஹவில்தார் : பாதள்ளிக்கு தாதாவைத் தேட வந்த ஹெட் கான்ஸ்டபிள்.

80. புலிவேட்டைப் பழங்குடிகள் : ஜாகீர்தாருடன் புலிவேட்டைக் குப் போகும் பழங்குடிகள். சாதாரணமாக இவர்கள் ஜாகீர்தார் மாளிகைக்குச் சம் பந்தபட்ட வரையில் ஆதர வாகவும் அவர்கள் சொன்ன வேலேயைச் செய்துகொண்டும் அவருடைய பரிவாரங்களாய் இருந்தார்கள்.

81. கடுபர் : குற்றம் செய்யும் ஜாதியைச் சேர்ந்த ஜனங்கள் என்று சர்க் கார் இவர்களேக் ''கிரிமினல் ட்ரைப்ஸ்'' (Criminal Tribes) ஸெட்டில்மென்ட்டில் சிறிது காலம் வைத்திருந்தார்கள். நாவல் நிகழ்ந்த காலத்தில் இவர்கள் பாதள்ளி ஜாகீர்தார் களின் ஆதரவால் வந்து குடி யேறியவர்கள். ஆண்களின் முக்கியத் தொழில் மீன் பிடிப் பது. பொம்மலாட்டம் காண் பிப்பது இவர்களது சிறப்பான தொழில். இவர்களுடைய பெண்மக்கள் பொம்மைகளே ஒட்டுப்போட்டுத் தைக்கும் தொழில் செய்பவர்கள்.

# கிராமாயணம்

## 1

பன்னிரண்டு மணிநேரம் இருந்த இரவு வேளை முடிந்து, மெல்ல ஒளி பரவும் அதிகாலை அளிக்கும் காட்சிதான் எத்தனை அழகானது! இருளும் ஒளியும் ஒன்றோடு ஒன்று பிணைந்திருந்தாலும் அவற்றின் பிரிவு தவிர்க்க முடியாததாகும். அப்பொழுதே திறந்த கண்கள், இந்தக் காட்சியால் குழப்பம் அடைவது இயற்கையே. இருளானது ஒளியைப்பற்றியே கனவு காண்பதாகத் தோன்றும்போது அந்த இரண்டுக்கும் பகை எங்கிருந்து வரும். ஒரு நோக்கில் அவ்விரண்டுக்கும் பரம்பரைத் தொடர்பு இருக்கிறது. சிருஷ்டியின் ஒருநாள் காலைச்சந்தி, பல யுகங்களின் சந்திப்பைக் கொண்டுவந்து நம் முன் நிறுத்துகிறது. அப்படி இருக்கும்போது தேசத்தின் வாழ்க்கையில் ஒரு நூற்றாண்டு கழிந்து மற்றொரு நூற்றாண்டு புகும் காலத்துக்குப் பெருமை உண்டாவதில் ஆச்சரியம் என்ன?

மனித சமூகம் பத்தொன்பதாம் நூற்றாண்டுக்கு முன் குடியரசு முறையில் வாழ்ந்துவந்தது. அது சமூகத்துக்கு விருப்பமான ஏகாதிபத்தியத்தின் பொற்காலமாக இருந்தது. வரப்போகும் நூற்றாண்டு என்ன என்ன புதுமைகளைக் கொண்டு வருமோ என்று நாடு ஆவலுடன் எதிர்பார்த்தது. சுதந்தரம், சமதர்மம், தேசீயவாதம் முதலிய புதிய பிரச்சினைகள் நிறைந்த இருபதாம் நூற்றாண்டு நம் நாட்டில் புகுந்த வேளை, நம் நாட்டில் குறிப்பிடத்தக்க ஒரு காலம். பழைய கட்டுப்பாட்டு முறை அழியவில்லை. புதிய சமூக விழிப்பு ஏற்படவில்லை. அந்நிய ஆட்சியின் பயனாக நாட்டில் பரவிய அஞ்ஞானம், ஏழ்மை முதலிய இருள் அகலவில்லை. கர்வம் பிடித்த அதிகாரிகளின் மனம்போன போக்கு, சுயநலமிகளின் சதிச் செயல்கள் இவை இன்னும் முற்றும் விலகவில்லை. 'இதுதான் நியாயம்' என்ற கருத்துக் குறைந்துவந்தாலும் பாமரர்களும் பலவீனர்களும் இவர்களுடைய வலைவீச்சிலிருந்து இன்னும் விடுபடவில்லை. வேத காலத்திலிருந்து வந்த ஜாதிமுறைக்குத் துணையாகப் புதுக் கட்டுப் பாட்டு முறையின் அங்கமாகப் புதிய ஜாதிமுறை ஒன்று

சேர்ந்தது. அதன் பயனுக ஏற்பட்ட சமூகப் பழக்கவழக்கங்கள் இன்னும் மாறவில்லே. சமூகக் கட்டுப்பாட்டின் அஸ்திவாரத்தைச் செல் அரிப்பதுபோல், 'பல்லாயிரம் ஆண்டுகளுக்குமுன் கட்டிய கோயில் இடிந்து விழுந்துவிடுமோ?' என்ற பயம் தோன்றியது. புதிய சமூக அமைப்பின் திட்டத்தின் தெளிவற்ற படம் சீர்திருத்த வாதிகளின் கனவுகளில் மட்டும் தோன்றிக்கொண்டிருந்தது.

ஆனுல் சாமான்ய வாழ்க்கை நடத்தும் மனிதர்களின் தினசரி நிகழ்ச்சிகளில் இதனுல் தடை ஏதும் ஏற்படவில்லே. இது வரலாற்று எழுத்தாளர்கள் கண்ணுக்கு மட்டும் தெரியும் பயங்கரச் சித்திரம். எந்தக் கொடிய பிரளயத்தின் சக்தியும் வாழ்க்கையின் விதையை அடியோடு அழித்துவிட முடியாது. வரலாற்றில் ஏற்பட்ட விபத்துக்களின் நிழலிலேயே வாழ்க்கையை ஓட்டச் சாமானிய மனிதனுக்குத் தைரியம் இருக்கிறது. 19ஆம் நூற்றுண்டின் கடைசிப் பகுதியிலும்கூடச் சாமானிய மனிதனின் சுகதுக்கங்கள் அடிக்கடியும் அபூர்வமாகவும் மாறி நிகழ்ந்துவந்தன. ஆனுல் சூழ்நிலேக்கு ஏற்றபடி அவனது வாழ்க்கை முறை அமைந்திருந்தது.

புதிய விஞ்ஞான ஆராய்ச்சிகளால் அவனுடைய சூழ்நிலே மாறவில்லே. அரசியல் புரட்சி, அவனுடைய வாழ்க்கையின் எல்லேயிலேயே சுற்றிச்சுற்றி வந்துகொண்டிருந்தது. அரசியல் ஒழுங்கீனத்தால் அவனுடைய பொருளுக்கும் வாழ்வுக்கும் பாதுகாப்புக் கிடைக்கவில்லே. நவநாகரிகத்தின் ஆதிக்கமும் சட்டமும் அவனுக்கு இன்னும் பரிச்சயமாகவில்லே. அவை இன்னும் வெகுதொலேவில் இருந்தன. நாட்டு நடப்பில் பெரும் மாறுதல் ஏற்பட்டது. நாட்டு மன்னர்கள் எல்லாம் அந்நியர் ஆட்சியில் அடைக்கலம் புகுந்தார்கள். கடல் வழியாக அயல் நாட்டுப் பண்பாட்டு வெள்ளம், மெதுவாகப் பெருக்கெடுத்து வந்தது.

இது நாட்டு மக்களேயே ஆட்கொண்டதில் வியப்பில்லே. இரண்டோர் ஆண்டுகளுக்கு ஒரு முறை வெளியிலிருந்து வந்த செய்தி நாட்டு மக்களே நடுங்கவைத்தது. ஆனுல் கடந்தகாலப் பண்பாடு அழிந்ததன் பயனுகச் சாதாரண மனிதன், கொஞ்ச காலம் மட்டுமே ஆழ்ந்த அஞ்ஞானத்தில் மூழ்கியிருந்தான். அவன் வரையில் ஊர் மணியமும் கர்ணமுமே மன்னர்கள்; அவர்கள் சொன்னதே வேதவாக்கு வறுமையே அவனுடைய பரம்பரைச் சொத்தாக இருந்தது.

நாடு முழுவதிலுமே பரவிய காரிருள் கிருஷ்ணுநதிக் கரையில் இருக்கும் பரசுராம க்ஷேத்திரத்தை மட்டும் விட்டுவிடுமா, என்ன?

ஸ்தல புராணத்தில் இந்தக் கிராமத்தைப் பரசுராம க்ஷேத்திரம் என்கிறார்கள். மனிதனின் பெயரே பல சந்தர்ப்பங்களில் மாறிவிடும்போது இந்தக் கிராமத்தின் பெயர் மட்டும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மாறாமல் இருக்குமென்று நாம் எப்படிச் சொல்ல முடியும்? பரசுராம க்ஷேத்திரத்திலிருந்து ராமக்ஷேத்திரம், ராமனஹள்ளி, ராமபாதள்ளி என்றெல்லாம் மாறிய பெயர், கடைசியில் பாதள்ளி ஆயிற்று. அநேகமாக நாட்டுப் பண்பாட்டு வீழ்ச்சியின் வரலாறு, இந்தப் பெயர்களின் வரலாற்றிலும் பிரதிபலித்திருக்கக்கூடும். அந்தக் கிராமத்து ஜாகீர்தாரின் பழைய பத்திரங்களில் இந்தப் பெயர்மாற்றக் கதையைப் படிக்கலாம்.

அந்தக் கிராமத்து மக்களே சொல்லும் கர்ணபரம்பரைக் கதை ஒன்று இந்தப் பகுதிகளில் பிரசித்தி பெற்றிருக்கிறது. புராண காலத்தில் 'அந்தகாசுரன்' என்னும் அரக்கன் ஒருவன், இந்தக் கிராமத்தில் தங்கியிருந்தானாம். பரசுராமர் அவனைக் கொன்றுவிட்டு இந்தக் கிராமத்தைப் பிராம்மணர்களுக்கு அக்கிரகாரமாக அமைத்துக் கொடுத்தாராம். ஆனால் அந்த அரக்கனுடைய உறவினர் பின்னும் வாழ்ந்துவந்தார்கள். அவர்கள் ஒரு காலத்தில் பிராம்மணர்களைத் துரத்திவிட்டு இங்கே தம் அதிகாரத்தை நிலைநாட்டினார்களாம். இந்தக் கதை இவ்விடத்து வாழ்க்கையின் ஓர் உண்மையை மட்டும் எடுத்துக் காட்டுகிறது. இங்கே வசிக்கும் கசடுபூர் (ஒரு ஜாதியினர்), சுற்றுப்புறக் கிராமங்களைக் கொள்ளையடித்து வாழ்க்கை நடத்தும் நிகழ்ச்சிகள் பழைய கதையை (அந்தகாசுரன் கதையை) விடப் பயங்கரமாக இருக்கின்றன. பத்தொன்பதாம் நூற்றாண்டில் இங்கே ஆண்ட மராத்தா ஸர்தார் ஒருவன், 'புலி வேட்டைக்காரர்' என்னும் ஒரு காட்டுமனிதர் கூட்டத்தை உருவாக்கி, அவர்களைக்கொண்டு வழிப்பறி செய்து தன் பொக்கிஷத்தை நிரப்பிவந்தானாம். அதனால் அவர்கள் ஸர்தாரின் அதிகாரத்துக்கு உட்பட்ட எண்பத்தெட்டுக் கிராமங்களையும் தம் வசப்படுத்திக்கொண்டு இந்த ஒரு கிராமத்தை மட்டும் அவன் ஆட்சிக்கு அடையாளமாக விட்டுவைத்தார்களாம். தற்போதைய ஜாகீர்தார் குடும்பப் பத்திரங்களில் இந்தச் செய்தியைக் காணலாம். ஜாகீரில் இந்தக் கிராமம் மட்டுமே மிஞ்சியதால் வழிப்பறி செய்வதே அரசனுடைய முக்கியத் தொழில் ஆயிற்று. கொள்ளைக்காரர்களையும் மிஞ்சிய புலி வேட்டைப் பழங்குடிகளின் தொல்லை, சுற்றுப்புறத்து மக்களின் தினசரி வாழ்க்கைக்குப் பெரிய இடையூறாக இருந்தது. கும்பினி சர்க்கார் மறைந்து ராணி ஆட்சி நிலைத்ததும் 'ஜாகீர்தார்களுக்கு அதிகாரம் போய்விடும்' என்று

மக்கள் நினைத்தார்கள். ராஜேஜி ராவ் அரசியல் சதுரங்கத்தில் கைதேர்ந்தவன். ஜாகீர்தார்களின் உதவியாளர்கள் ஆங்கிலேய அதிகாரிகளின் காதில் குழையடித்து, 'இவர்களைப் போன்ற ராஜபக்தர்கள் இந்தப் பகுதியிலேயே இல்லை' என்று நம்பவைத்தார்கள். விசாரணைக்கு வந்த ரெஸிடெண்ட், ஜாகீர்தார் மாளிகையின் சுகபோகங்களில் அமிழ்ந்து வெளியே போகவே இல்லை. இதனால் ராஜேஜி ராவ், உயிருடன் இருந்த வரையில் பழங்குடிகளின் தொழில், தடையில்லாமல் நடந்துவந்தது.

ராஜேஜி ராவ் காலமான பின், அவனுடைய மனைவியர் இருவர்களுக்குள்ளும் சொத்து விஷயமான சண்டை மூண்டது. ஜாகீருக்குச் சம்பந்தப்பட்ட பத்திரங்களை இளையாளான புத்லாபாய் எடுத்துக்கொண்டு பிறந்த வீட்டுக்குப் போய் விட்டாள். மூத்தாளான லக்ஷ்மிபாயைக் கிராமத்து மக்கள் தாய்போல் நினைத்து விசுவாசத்தோடு நேசித்தார்கள். மக்களின் மனப்பூர்வமான ஒத்துழைப்புடன் அவள் சில ஆண்டுக்காலம் ஜாகீரை நடத்தினாள். இச் சமயத்தில் பிரிட்டிஷ் சர்க்கார் நியமித்த இனும் கமிஷன் ஜாகீருக்குச் சம்பந்தப்பட்ட பத்திரங்களை ஆஜர்படுத்தும்படி நோட்டீஸ் கொடுத்தது. லக்ஷ்மிபாயிடம் பத்திரங்கள் இல்லை. ஜாகீரைப் பிடுங்கிக்கொள்வதாக அதிகாரிகள் தெரிவித்தனர். இச் செய்தி ராஜேஜி ராவின் அண்ணன் மகனுக்கு எட்டியது. அவன் எழுபத்தெட்டுக் கிராமங்கள் கொண்ட இந்துபூர் சம்ஸ்தானத்துக்குத் தலைவனாக இருந்தான். தன் பாட்டனருக்குப் பிரித்துக் கொடுத்ததில் சம்பந்தப்பட்ட பத்திரங்களில் 'பாதள்ளி கிராமத்தின் நூற்று இருபது நம்பர்கள், ஜமீனுக்குச் சொந்தம்' என்ற ஆதாரம் கிடைத்தது. அதை இனும் கமிஷனிடம் ஆஜர்படுத்தியதால் பாதள்ளி கிராம அதிகாரம் போனாலும் நூற்றிருபது நம்பர் பூமி லக்ஷ்மிபாய்க்கு மிஞ்சியது. இதனால் தனக்கு ஆதரவு கொடுத்த சமஸ்தானத் தலைவனிடம் லக்ஷ்மிபாய்க்குப் பாசம் உண்டாயிற்று. இவள் அங்கே போவதும் மகனிடம் (மச்சினன் மகன்) அன்பும் ஆதரவும் பெறுவதும் வழக்கமாகிவிட்டது. பாதள்ளி மக்களுக்கு இது பிடிக்கவில்லை. 'பங்காளியின் வீட்டில் விருந்துபசாரம் பெறுவது ஜாகீரின் புகழுக்கு இழுக்கை உண்டாக்கும்' என்னும் வதந்தி ஊரில் பரவியது இது போன்ற பல கருத்து வேற்றுமைகள் ஏற்படக்கூடிய நிகழ்ச்சிகள் தோன்றின.

இந்துபூர் அரண்மனையில் 'மன்னரின் சித்தி' என்று லக்ஷ்மிபாய்க்கு விசேஷ மரியாதை கிடைத்தது. ஓர் ஆண்டில் நாலைந்து முறை அவள் இந்துபூருக்குப் போய் வந்துகொண்டிருந்தாள்.

இந்தத் தடவை நவராத்திரிக்காக அங்கே போனவள், தீபாவளிக்குப் பிறகுகூடத் திரும்பி வரவில்லை. நவராத்திரி விழாவில் பாதள்ளியில் பத்து நாட்களும் ஜாகீர் மாளிகையின் விருந்து, கோலாகலமாக நடப்பது வழக்கம். ஆனால் இந்த வருஷம் மாளிகையில் லக்ஷ்மிபாயே இல்லாததால் பல புகார்கள் எழுந்தன. மக்களுக்கு அவள்மேல் அதிருப்தி ஏற்பட்டது. அந்தச் சமயத்தில் அஜராணி (ஓர் ஊர்)யின் மணியக்காரர் ஆகிய யசவந்தராவ் அங்கே இருந்தார். அவர் பரம்பரை மணியக்காரர். புத்லாபாயின் தாய்மாமன். ராஜோஜி ராவுக்கு மருமகன் (சகோதரி மகன்). பாதள்ளி ஜாகீர் மாளிகை நவராத்திரி விழா இல்லாமல் வெறிச்சோடியது அவருக்கும் குறையாகத்தான் பட்டது.

ஊர் மணியம், தேஷ்பாண்டே, கர்ணத்தின் குடும்பத்தார், பண்ணையார்கள் எல்லோரும் சேர்ந்து, 'ஜாகீர் மாளிகைக்குப் புத்லாபாயையே திரும்பவும் அழைத்து வாருங்கள்' என்று யசவந்தராவைக் கேட்டுக்கொண்டார்கள். 'ஊர் மக்களின் வேண்டுகோளைத் தாம் நிறைவேற்றுவது கடமை' என்று அவருக்கும் தோன்றியது.

அடுத்த ஆண்டு, பிள்ளையார்ச் சதுர்த்திக்கு லக்ஷ்மிபாய் வழக்கம்போல் இந்துபூருக்குப் புறப்பட்டாள். ராஜ புரோகிதரான பாளாச்சார், 'எப்பொழுது திரும்புவீர்கள்?' என்று கேட்டார். 'இந்துபூர் மகாராஜா உத்தரவு கொடுத்தபோது திரும்பிவருவேன்' என்று இயற்கையாகப் பதில் சொன்னாள். 'இவள் ஊருக்குப் போனபின் புத்லாபாயை வரவழைப்பது' என்று முன்பே தீர்மானம் ஆகியிருந்தது. புத்லாபாய் பாதள்ளிக்கு வந்தாள். ஆனால் தனியாக வரவில்லை. புத்லாபாயின் தம்பியும் கனகேரி (ஊர்) மணியக்காரனும் ஆன பாபு சாஹேபும் அவளுடன் வந்தான். அவனுடைய மனைவியும் கூடவே வந்ததால் ஒரு சிறிய கூட்டமே அவளுடன் வந்தது. பாபு சாஹேபின் ஆர்ப்பாட்டத்தால் நவராத்திரி விழா நன்றாகக் களைகட்டியது. விஜயதசமி அன்று புலிவேட்டைப் பழங்குடிகளுக்கெல்லாம் பாபு சாஹேப் புதிய அங்கவஸ்திரம், சட்டைகளைப் பரிசாகக் கொடுத்தான். மணியக்காரர் வீட்டுக்குப் புத்லாபாய் நேராகச் சென்று வன்னியிலைப் பிரசாதம் கொடுத்தாள். ஹிரே (பெரிய) மடத்துச் சாமியாருக்கு, மடத்தைப் புதுப்பிப்பதற்காகப் புத்லாபாயிடமிருந்து காணிக்கையாக ரூ. 100-00 கிடைத்தது. நவராத்திரியில் பிராம்மணர்களுக்கு ஜாகீர் மாளிகையிலிருந்து தினசரி அரிசி, பருப்பு முதலியவை கிடைத்தன.

தீபாவளிப் பண்டிகையை முடித்துக்கொண்டு ஒருநாள் மாலை லக்ஷ்மிபாய் ஊருக்குத் திரும்பி வந்தாள். அவளை எதிர்கொண்டது கிராமத்தின் பகைமைதான். மாளிகைத் தலைவாயிலின் அழகிய படியை அவள் தாண்டக்கூட இல்லை. அதற்குள், 'மாளிகைக்குள் காலை வைத்தால் தெரியும்' என்று தளவாயிடம் திண்ணையில் உட்கார்ந்தபடியே பாபு சாஹேப் கர்ஜித்தான். லக்ஷ்மிபாய் ஆச்சரியப்பட்டாள். ஆனால் தைரியமாகவே முன்நோக்கி நடந்தாள். புலிவேட்டைப் பழங்குடி தளவாய், லக்ஷ்மிபாய்க்கு முன்வந்து, கேலிதோன்ற வணக்கம் செய்தான். லக்ஷ்மிபாய் இன்னும் திகில் அடைந்தாள். தளவாய், "அம்மா, இப்போது தான் உங்களுக்கு மாளிகை நினைவு வந்துச்சா? பண்டிகையின் போது பாழ்போட்டுவிட்டு இப்ப வந்தீங்கன்னு யார் ஒப்புக்கு வாங்க? சாமி எங்க கட்சிலே இருந்தாரு. சின்னம்மா அவுங்க நாங்க கூப்பிட்டதும் வந்தாங்க. பெரிய பண்டிகை அன்னிக்கு மாளிகேலே விளக்கேத்தத் திக்கில்லாமெ செய்த உங்களுக்கு இங்கே என்ன வேலை? எங்கே போயிருந்தீங்களோ அங்கேயே இன்னமே போகலாம்" என்று நாடகத்தில் பேசுவது போலும் மரியாதை இல்லாமலும் பேசினான்.

லக்ஷ்மிபாய்க்குக் காலின்கீழ் நிலம் சரிந்து விழுவதுபோல் இருந்தது. 'தளவாய் திப்பனா இப்படிப் பேசினான்! வாழ்க்கையில் எப்போதுமே இது போன்ற பகையை நான் பார்த்ததில்லையே! தளவாய்க்கு இந்தத் தைரியம் எங்கிருந்து வந்தது!' என்று திகைத்த லக்ஷ்மிபாய்க்கு, கணநேரத்தில் எல்லாம் புரிந்து விட்டது. 'பாபு சாஹேப் கற்பித்த பாடத்தை அவன் ஒப்பித்திருக்கிறான். பாவம் அவன் என்ன செய்வான்? திண்ணையில் உட்கார்ந்தவர்கள் எல்லாம் யஜமானர்கள் தாமே!' 'என்ன திப்பா, நீ புலிவேட்டைக் கூட்டத்தின் தளவாய். எங்கள் உப்பைத் தின்றே உங்கள் வம்சம் எல்லாம் வளர்ந்தது. அப்படிப் பட்ட நீயே எதிர்த்து நிற்கிறாயா?' என்று சொல்லி லக்ஷ்மிபாய் திப்பனுடைய மனச்சாட்சியைத் தூண்டிவிட்டாள்.

திப்பன் இந்தப் பேச்சைக் கேட்டு உருகிவிட்டான். தலை உயரம் உள்ள மூங்கில் கம்பைப் பிடித்தபடி பெருமையாக விறைத்து நின்ற அவன் பிரம்புபோல் வளைந்துபோனான். தடியின்மேல் தலையைச் சாய்த்துக்கொண்டு கண்ணீரை மறைக்க முயன்றான். ஆனால் நடுங்கிய கைகள் அவனைக் காட்டிக்கொடுத்து விட்டன. உத்தரீயத்தின் நுனியால் கண்ணைத் துடைத்த வண்ணம், "அம்மா, வயித்துக்கொடுமைதான். சோத்துக்கடன் பொல்லாதது. நீங்க இங்கே வரமாட்டீங்கன்னு நெனச்சோம். 'எங்கே ஆதரவு போய்விடுமோ?'ன்னு சின்னம்மா கால்லே

விழுந்தோம். என்னைப் பரீட்சை செய்யாதீங்க, அம்மா......'' என்ற அவன், மேலே பேச வாய் எழாமல் அப்படியே தொப்பென்று உட்கார்ந்தான்.

லக்ஷ்மிபாய், 'இனிமேல் தடை இல்லை' என்று எண்ணி உள்ளே நுழைந்தாள். 'தானே ஜாகீர்தார்' என்னும் கர்வத்தோடு திண்ணையில் உட்கார்ந்திருந்த பாபு சாஹேபைக் கிண்டி விடும் முறையில் ஒரு பார்வை கோபத்தோடு பார்த்தாள். இது வரையிலும் சாவியோடு விளையாடிக்கொண்டிருந்த பாபுசாஹேப், அவள் திண்ணையில் ஏறியதும் 'தடால்' என்று எழுந்திருந்து வந்து, லக்ஷ்மிபாயின் காலைத் தொட்டு வணங்கி, 'அக்கா, ஸாஹேப், எப்பொழுது வந்தீர்கள்? எல்லாம் சௌக்கியந் தானே?' என்று க்ஷேமம் விசாரித்தான். லக்ஷ்மிபாய் பேசாமல் உள்ளே போனாள். அவள் பரிவாரமும் தொடர்ந்தது.

ஊர் முழுவதும் செய்தி பரவ வெகுநேரம் ஆகவில்லை. 'நிலத்தில் தனக்குப் பங்கு வேண்டும்' என்று புத்லாபாய் கேட்டது, 'உனக்கு பங்கு வேண்டும்' என்றால் நீ கொண்டுபோன வெள்ளி, தங்க, முத்து, ரத்ன நகைகள், ரொக்கம், பத்திரங்கள் எல்லாவற்றையும் திருப்பிக் கொடுக்கவேண்டும்' என்று லக்ஷ்மிபாய் சொன்னது எல்லாம் நான்கைந்து நாட்களுக்குள் வீடுவீடாகப் பரவிவிட்டது. சிலர் லக்ஷ்மிபாயின் பக்கமும், சிலர் புத்லாபாயின் பக்கமும் பரிந்து பேசினார்கள். பாதள்ளி ஜாகீர்தார் மாளிகை அவ்வூர் மக்கள் எல்லோருடைய ஆவலையும் தூண்டி விடும் மையமாக இருந்தது. அதன் நன்மை தீமையில் எல்லோரும் அதிக அக்கறை காட்டினார்கள். ஒருவிதத்தில் மாளிகை பொதுச் சொத்தாக இருந்தது. அங்கே நடக்கும் ஒரு சிறு சம்பவம்கூட ஊரின் போக்கையே மாற்றிவிடக்கூடியதாக இருந்தது.

ஊர் விவகாரத்தைத் தீர்த்துவைக்கும் ஜாகீர்தார் குடும்ப விவகாரத்தை ஊரார்தானே தீர்க்கவேண்டும்? பஞ்சாயத்தார் மாளிகையின் அழகிய தர்பார் 'ஹாலில்' கூடினார்கள். பாபு சாஹேப், வந்த பிரமுகர்களைத் தர்பார் வணக்கத்துடன் வரவேற்றான். லக்ஷ்மிபாயும் புத்லாபாயும் உட்புறத்து அறையில் உட்கார்ந்திருந்தார்கள். புத்லாபாய்க்குத் 'தன் கணவனுடைய சொத்தில் பங்கு கிடைக்கவேண்டும்' என்பது பாபு சாஹேபின் வாதம். 'அதை யாரும் மறுக்க மாட்டார்கள். அது நியாயந் தான். ஆனால் புத்லாபாய், பிறந்த வீட்டுக்குச் சுருட்டிச்சென்ற துணிமணிகள்; நகைநட்டுகள்; காசு, பணம்; எல்லாவற்றையும் திருப்பிக் கொண்டுவரட்டும்' என்று லக்ஷ்மிபாய் சற்று நிஷ்டுர

மாகவே சொன்னாள். சிலருக்கு 'அதுவும் சரி' என்று பட்டது. ஆனால் கடந்தகாலத்து உண்மையை, அதைச் சொல்பவரைப் பொறுத்தே நம்பவேண்டியிருக்கிறது. ''ராணோஜி ராவ், வேட்டைக்குப் போனபோது குதிரைமேல் இருந்து விழுந்து திடீரென்று இறந்துவிட்டார். கணவன் இறந்த துக்கத்தால் புத்லாபாய் உடுத்த உடையுடன் பிறந்த வீட்டுக்குப் போனாள். அப்போது மாளிகையில் இருந்தவள் லக்ஷ்மிபாய். பத்திரங்கள், கஜானா சாவி எல்லாம் லக்ஷ்மிபாயிடமே இருந்தன; 'வெள்ளி, தங்கம், ரொக்கப்பணம் இவற்றில் பங்கு கொடுக்க வேண்டி யிருக்கும்' என்று அவள் இந்த வாதத்தைக் கிளப்பியிருக்கிறாள். இந்தக் குற்றச்சாட்டுக்கு அர்த்தமில்லை'' என்று தெளிவாக பாபு சாஹேப் எடுத்துக் காட்டினான். 'அதுவும் உண்மை' என்று தோன்றியது.

தலைக்கோர் அபிப்பிராயம் சொன்னார்கள். 'லக்ஷ்மிபாய் இப்படிப் பேசுவது, அவருடைய பெருமைக்கே குறைவாகும்' என்று ஹீரே மடத்துச் சாமியார் அதிகாரத்துடனேயே கண்டித் தார். அப்படிப் பார்க்கப்போனால் ஜாகீர்தாரின் ஆட்சியில் இருவருக்கும் சமமான அதிகாரம் உண்டு. ஆண் குழந்தை களாவது பிறந்திருந்தால் இந்த விவாதத்துக்கு இடமே இருக்காது. சிறிது நேரம் பஞ்சாயத்தார் தீர்ப்பு யோசனை நடந்து கொண்டிருந்தது. 'இருவரும் ஒற்றுமையாக இருக்கக்கூடாதா?' என்று சிலர் கேட்டார்கள். 'அது முடியாத காரியம்' என்பது அடுத்த கணமே தெரிந்துவிட்டது. வெள்ளி, தங்கம், துணி மணிகள், நகைகள் விஷயத்தில் தெளிவாக ஒன்றும் சொல்ல முடிய வில்லை. 'அவரவரிடம் இருப்பவற்றை அவரவர் வைத்துக்கொள்ள வேண்டும்' என்று பஞ்சாயத்தார் தீர்ப்புச் சொன்னார்கள். 'ஜாகீர்ப் பரம்பரையில் முன்பு எப்போதும் சொத்தைப் பிரித்த தில்லை. அதனால் பங்கு போடுவதில் எனக்கு இஷ்டம் இல்லை' என்று லக்ஷ்மிபாய் அடம் பிடித்தாள்.

''அப்படியெல்லாம் நீங்கள் அடம்பிடித்தால் பஞ்சாயத் தாரை மீறியதாகாதா? இனிமேல் ஜாகீர் விவகாரத்தில் யாரும் தலையிட முடியாதபடி ஆகிவிடும். புத்லாபாய் சாஹேப் அவர் களுக்குக் குடியானவர்கள் எல்லாம் ஒப்பந்தம் எழுதிக்கொடுத்து அந்தப் பங்கை ஒப்பித்துவிட்டால் நீங்கள் என்ன செய்வீர்கள்? அதன்மேல் நீங்கள் தகராறு செய்தால் நாங்கள் கேட்டுக்கொள்ள மாட்டோம்'' என்று சாமியார், பஞ்சாயத்தார் பட்சமாக நின்று எச்சரிக்கை கொடுத்தார்.

பஞ்சாயத்துக் கூட்டம் குழப்பத்திலேயே முடிந்தது. பிறகு சில நாட்களில் புலிவேட்டைக் கூட்டத்தார், தாங்கள் புத்லா பாயைச் சேர்ந்தவர்கள்தாம் என்று சொல்லிவிட்டார்கள். பாபு சாஹேப், மாளிகையில் புத்லாபாயின் பிரதிநிதியாகப் பட்டங் கட்டாத ராஜாவாக நிலைத்துவிட்டான். ஏற்கனவே ஊரில் நிலைத்துவிட்ட அவனுடைய செல்வாக்கு, பஞ்சாயத்தின் அதிகார பலத்தினால் மேலும் அதிகமாயிற்று.

லக்ஷ்மிபாய், நிலைமையை உடனே புரிந்துகொண்டாள். பாதள்ளியில் எல்லோரும் தன்னை எதிர்த்து நிற்பதைக் கண்டு அவள் மனம் மறுகியது. 'இப்படிப்பட்ட எதிர்ப்பு நிறைந்த சூழ்நிலையில் நாம் இனிமேல் சுகமாக வாழமுடியாது' என்பது அவளுக்குத் தெரிந்துவிட்டது. 'மக்களின் நமபிக்கை எவ்வளவு நிலையற்றது!' என்பதற்கு நிறைய ஆதாரம் கிடைத்தபடியால் அவளுக்கு ஒருவித வெறுப்பே ஏற்பட்டுவிட்டது. ஒருநாள் புத்லாபாயிடம் பேசிக்கொண்டிருந்தபோது சகஜமாகச் சொல்வதுபோல் அவள், "இத்தனை காலம் இந்த ஆஸ்தியை நான் சாப்பிட்டு வந்தேன். இனிமேல் அதனுடைய உரிமை உனக்குத் தான். ஏனோ இங்கே இருக்க எனக்கு மனம் ஒப்பவில்லை. போகத் தோன்றிய இடத்துக்குப் போகிறேன்" என்று சொன்னாள். இந்தப் பேச்சைக் கேட்டுப் புத்லாபாயின் மனம் உருகியது. அக்காவோடு சண்டை போடுவதையே பகல் முழுவதும் எதிர் பார்த்துக்கொண்டிருந்தபடியால் உள்ளத்தில் ஆத்திரமே இருந்தது. ஆனால் இந்தப் பேச்சுக்கு என்ன பதில் சொல்வது? 'தான் ஏதாவது பேசினால் அது பைத்தியக்காரத்தனமாகப் போய் விடும்' என்ற பயத்தால் புத்லாபாய் பேசாமல் இருந்தாள். ஆனாலும் அவள் உள்ளம் ரகசியமாகக் கண்ணீர் சொரிந்தது.

பாபு சாஹேப் மட்டும், "நீங்கள் எங்கும் போகவேண்டிய அவசியம் இல்லை. பெரியவராக இங்கேயே இருக்கலாமே" என்று வறட்டு உபசார வார்த்தை இரண்டு சொன்னான். லக்ஷ்மிபாய் அவனுக்குப் பதிலே சொல்லவில்லை. அவளுடைய கௌரவத் துக்குப் பெரிய அடி விழுந்துவிட்டது. 'ஒரே உறையில் இரண்டு கத்திகள் சேர்ந்து இருக்க முடியாது' என்ற அநுபவம் இப்போது அவளுக்கு ஏற்பட்டது. இதயமே வெடித்துவிடும்போல் துக்கம் பெருகினாலும் அதை அவள் வெளியில் காண்பித்துக்கொள்ள வில்லை. அன்று கோபாலகிருஷ்ணன் கோயிலுக்குப்போய்க் கண் குளிரத் தரிசனம் செய்தாள். திரும்பிவந்து மாளிகையின் சுவாமி அறையில் ஒரு மணி நேரம் உட்கார்ந்து மௌனமாகக் கண்ணீர் வடித்தாள். அவளுடைய விசித்திரப் போக்கையும் ஆழ்ந்த மௌனத்தையும் எல்லோரும் பார்த்துக்கொண்டிருந்தார்களே

தவிர அவளிடம் பேசும் தைரியம் யாருக்கும் இல்லை. அன்றைக்கே அவள் தன் பரிவாரத்துடனும் தன் இரண்டு பெண்களுடனும் படோதைக்குப் புறப்பட்டுப் போய்விட்டாள்.

ஜாகீர்தார் மாளிகைக்கு பாபு சாஹேப்தான் சர்வாதிகாரி. புத்லாபாயின் தம்பியாதலால் 'ஜாகீரின் உரிமை, பொறுப்பு எல்லாம் தன்னையே சார்ந்தவை' என்னும் திமிருடனே நடந்து கொண்டான். அவன் இளமையிலேயே தந்தையை இழந்தவன். உல்லாச புருஷனாகவே வளர்ந்தான். செல்வத்தின் வசதியான பகுதியே அவனுக்குப் பரிச்சயமாயிற்று. அவனுக்குப் பிறவியினால் கௌரவம் ஒன்றும் இல்லை. இப்பொழுது, தமக்கையின் ஜாகீர், முயற்சியில்லாமலேயே கிடைத்துவிட்டது. ஹீரேமடத்துச் சாமியாரான படதையா, அவனுக்கு ஆப்த நண்பரானார். மணியக்காரர், கர்ணம் ஆகியோரின் குடும்பத்தார் அவனுடைய அதிகாரம் பலப்படுவதில் முனைந்து நின்றனர்.

பாபு சாஹேப் ஜாகீர்தார் என்ற முறையில் மட்டுமே ஊரில் பெரிய மனிதனாகத் தர்பார் நடத்தினான். 'மாளிகைச் சுற்றுச் சுவருக்கு அப்புறம் தனக்கு ஒன்றும் சம்பந்தம் இல்லை' என்பது போல் ஊர் விவகாரங்களில் நடந்துகொண்டான். அரண்மனை விவசாயம் யார் கையிலோ போய்விட்டது. மாளிகைக்கு முன்பிருந்த சோபை போய்விட்டது. கண்டவர்களெல்லாம் மாளிகைத் திண்ணையில் கூடத் தொடங்கினார்கள். ராணோஜி ராவ் காலத்திலிருந்து மாளிகையின் நில நீச்சுக்களை நிர்வகித்துவந்த சிலேதார் நாணாவை மட்டும் அப்படி ஒதுக்கிவிட முடியவில்லை. 'மாளிகையின் உள்விவகாரத்தின் சாவி அவனிடந்தான் இருக்கும்' என்ற நினைவில் சிப்பந்திகளின் நடுவில் அவன் பெருமை உயர்ந்தது. ஆனால் நாணா அதைத் தவறாக உபயோகித்துக் கொள்ளவில்லை. 'ஜாகீரின் கௌரவத்தைக் காக்கும் பொறுப்புத் தன்னுடையதே' என்பதுபோல் நடந்துகொண்டான்.

## 2

பாபு சாஹேப், மாளிகையில் வாழத் தொடங்கி எட்டு ஆண்டுகள் ஆயின. முதல்முதலில் பாதள்ளி மக்கள், அவனுக்கு வேற்று முகமாக இருந்தாலும் நாளடைவில் அவன் உள்ளூர் மனிதனாகவே ஆகிவிட்டான். ஜாகீர்தாருக்குச் சேரவேண்டிய கௌரவம், மரியாதை எல்லாம் அவனுக்கே கிடைத்தன. ஆனால்

அவனுடைய அடக்கமற்ற நடத்தையால், மக்கள் அவனிடம் வெறுப்புக் கொண்டார்கள். அதை, அவன் எதிரில் காண்பிக்கும் தைரியம் இல்லாவிட்டாலும் கண்மறைவாகப் பேச யாரும் தயங்கவில்லை.

மாளிகையின் நலத்தைக் காப்பதற்குப் பிறந்தது முதலே தன் வாழ்க்கையை அர்ப்பணித்த சிலேதார் நாணுவுக்கும் பாபு சாஹேபின் நடத்தை பிடிக்கவில்லை. பாபு சாஹேபின் பதவிக்கு உள்ள கௌரவத்தை நன்ருக அறிந்திருந்ததால், நாணு வாய்விட்டு எந்த அபிப்பிராயத்தையும் சொல்லவில்லை. தவிர்க்க முடியாத வேலை இருந்தால் மட்டும் பாபு சாஹேபைக் கண்டு பேசுவான். மற்றச் சமயங்களில் கூடியமட்டும் விலகியே இருந்தான். நாணுவின் மனைவி இறந்தபின் அவன் மாளிகையிலேயே குடியேறித் தனியாக வசிக்கத் தொடங்கினன். ஆனலும் பாபு சாஹேபிடம் அவன் பழக்கம் முன்போலவேதான் இருந்தது. நிலங்களையும் வீடுகளையும் கவனிப்பதற்கே அவனுக்குப் பொழுது சரியாக இருந்தது. சற்று ஓய்வு இருந்தால் ஊர் விவகாரம் அவனிடமே வரும். ஆரம்பத்திலிருந்தே பொது விவகாரங்களைத் தீர்ப்பதில் நாணுவுக்குக் கௌரவமான பங்கு உண்டு. இந்தக் காரணங்களால் பாபு சாஹேபுடன் அதிகமாகப் பழக அவனுக்கு வாய்ப்பே கிடைக்கவில்லை.

மனைவி போனபின் நாணுவுக்கு வாழ்க்கையிலேயே உற்சாகம் குன்றிவிட்டது. முன்புபோல் நிமிர்ந்த நடை இல்லை. கூரிய வேல்போல் ஒளிவீசும் கண்களில் இப்போது சோகத்தின் நிழல் படர்ந்தது. வில்லின் விறைத்த நாண்போல் இருந்த உடல், துக்கச் சுமையால் தளர்ந்துவிட்டது. அவனுடைய மகள் சிமணு ஒருத்தியாலேயே அவனுக்கு வாழ்க்கையில் ஆசை இருந்தது. அவள் சேலை உடுத்தத் தொடங்கியதும் அச்சச்சிலும் (தத்ரூபமாக) தன் தாயைப் போலவே இருந்தாள். தந்தையின் ஆரோக்கியத்தையும் தாயின் அழகையும் பிறப்புரிமையாகப் பெற்றிருந்த அவளைப் பாதள்ளிப் பெண்களுக்குள்ளேயே சிறந்த அழகி என்று கருதினர். அவ்வளவு வறுமையிலும் அன்புடன் வளர்த்ததால் சிமணு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தாள். அவளுடைய அழகும் வளர்ச்சியும் நாணுவுக்குக் கவலையை உண்டாக்கின. எங்கேயாவது வரன் பார்த்து அவளுக்குக் கல்யாணம் செய்து தன் கடமையை முடித்துக் கொள்ள வேண்டுமென்று நாணு திட்டமிட்டான்.

ஆனல் அது அவ்வளவு எளிதில் நடக்கக்கூடியதாக இல்லை. மகளைத் தனியாக விட்டுவிட்டு எப்படிப் போவது? அவனுடைய தம்பியாகிய லக்ஷ்மணனுடைய மனைவியும் இறந்துவிட்டாள்.

அதனுல் அங்கேயும் விட்டுப்போக முடியாது. பேச்சுவாக்கில் இந்த நிலைமையைப் புத்லாபாயிடம் சொல்லிக்கொண்டிருந்த போது நாணுவின் பிரச்சினை தீர்ந்தது. புத்லாபாய் சிமணுவின் பொறுப்பை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டாள்.

புத்லாபாய் சிமணுவைத் தன் வயிற்றில் பிறந்த மகளைப் போலவே பார்த்துக்கொண்டாள். மாளிகையில் தனியாக வசித்துவந்த அவளுக்கு மற்றொரு பெண் துணை தேவைப்பட்டது. இயற்கையாகவே அவர்கள் இடையில் நட்புப் பிறந்து வளர்ந்தது. சிமணு, புத்லாபாயின் சேலையை உடுத்தி நடமாடிக்கொண்டிருக் கும்போது மாளிகையைச் சேர்ந்தவளாகவே காணப்படுவாள். சிமணுவின் அழகைப் புகழ்வதே தினந்தோறும் புத்லாபாயின் பல்லவியாயிற்று.

ஆனி மாதம் வந்தது. மகளுக்கு வரன் தேட நாணு கொல்லா புரத்துக்குப் (கோலாப்பூர்) போக நேர்ந்தது. நாணுவின் மனைவி யாகிய ருக்மா கொல்லாபுரத்துக்காரிதான். அவள் இறந்தபின் அவன் அந்த ஊருக்குப் போகவே இல்லை. கடந்தகால நினைவே அவனுக்குக் கசந்தது. ஆனுல் இப்போது மாப்பிள்ளை வேட்டைக் காகப் போக வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதால் சிமணுவின் மேல் ஒரு கண் வைத்திருக்கும்படி புத்லாபாயிடம் சொல்லிவிட்டு பாபு சாஹேபிடமும் விஷயத்தைத் தெரிவித்துவிட்டு நாணு ஊருக்குப் புறப்பட்டான்.

நாணு ஊரில் இருந்தபோது பாபு சாஹேப் இரண்டு வேளை சாப்பாட்டுக்கு மட்டுமே சமையற்கட்டுக்குப் போவான். மீதிப் பொழுதெல்லாம் சோம்பேறிக் கூட்டத்தோடு மாளிகைத் திண்ணையில் உட்கார்ந்து அரட்டை அடிப்பதுதான் வேலை. இல்லாவிட்டால் மடத்தில் சாமியார் முன்னிலையில் சில சமயம் அரட்டைக் கச்சேரி நடந்தது. நாணு ஊருக்குப் போனபின் மாளிகையின் உட்புற விவகாரங்களையும் பாபு சாஹேப் கவனிக்க நேர்ந்தது.

கார்ப் பௌர்ணமிக்கு முதல் நாள் மாடுகளுக்கு விசேஷம். ஆகையால் மாளிகையில் உள்ள எருதுகளுக்கெல்லாம் நல்லெண்ணெயோடு கோழிமுட்டைக் கருவையும் கலந்து தடவி ஆற்றில் நீந்த அனுப்பவேண்டியிருந்தது. அங்கே அவைகளுக்கு நீந்தக் கற்றுக்கொடுப்பார்கள். பாபு சாஹேப், மாட்டுக் கொட்டகையில் இருந்துகொண்டு இந்த வேலையை மேல்பார்க்க வேண்டியிருந்தது. பாதியில் எண்ணெய் தீர்ந்துபோய்விட்ட தால், பாபு சாஹேப், 'நல்லெண்ணெய் வேண்டும்' என்று குரல் கொடுத்தான். சமையல் அறையில் வேலை செய்துகொண்டிருந்த

சிமனு, இந்தக் கூக்குரலைக் கேட்டு எண்ணெய்ப் பாத்திரத்தை எடுத்துக்கொண்டு அவசரமாக வந்தாள். அப்பொழுதுதான் எண்ணெய் தேய்த்து முழுகிய தலை, பளபளத்த கூந்தல், முதுகை நிரப்பிக் கிடந்தது. நெற்றி, மோவாய், மூக்கு முதலியவை தந்தத்தில் கடைந்தனபோல் பளபளத்தன. புகையாலோ எண்ணெய்க் குளியலாலோ கண்கள் சிறிது சிவந்திருந்தன. புத்லா பாயின் பட்டுச் சேலையை உடுத்திருந்த சிமனு அழகியாகத் தோன்றினாள். அவள் கையிலிருந்து எண்ணெய்ப் பாத்திரத்தை வாங்கிக்கொள்ளும்போது இயற்கையாகவே பாபு சாஹேபின் பார்வை அவள் பக்கம் திரும்பியது.

பாபு சாஹேப் இதற்குமுன் சிமனுவைப் பலமுறை பார்த்திருக்கிறான். ஆனால் தன் பதவிப் பெருமையாலோ 'நானுவின் மகள்தானே' என்ற அலட்சியத்தாலோ அவளைச் சரியாகக் கவனித்ததில்லை. அப்போதெல்லாம் அவன் கண்ணுக்கு அவள் சாதாரணப் பட்டிக்காட்டுப் பெண்ணாகவே தோன்றினாள். இன்றைக்கு அவளுடைய அழகு அவன் கண்ணைத் திறந்துவிட்டது. உள்ளே அடங்கியிருந்த ஆசை ஒன்று அந்தக் கணத்தில் சிமனுவின் சிறந்த அழகுக்கு மெருகூட்டியது.

வேலையாள், எண்ணெய்க் கிண்ணத்தைத் திருப்பிக் கொண்டு வரும் வரையில் சிமனு அங்கே நிற்கவேண்டியிருந்தது. 'என்ன செய்வது!' என்று தெரியாமல் அங்கே கிடந்த சோளத்தட்டைக் கடித்தவண்ணம் நின்றுகொண்டிருந்தாள். தவிட்டு மூட்டை ஒன்றின்மேல் உட்கார்ந்து, பாபு சாஹேப் வைத்த கண் வாங்காமல் அவளையே பார்த்துக்கொண்டிருந்தான். வேறு வேலை யாகக் கொட்டகைக்கு வந்த புத்லாபாய் இந்தக் காட்சியைக் கண்டாள். தம்பியின் சுபாவத்தை நன்றாக அறிந்த அவளுக்கு நிலைமை புரிந்துவிட்டது. சிமனுவுக்கு ஏதோ வேலை சொல்லி உள்ளே அனுப்பினாள். பிறகு தம்பியின் பக்கம் திரும்பி, 'ஏண்டா, இன்று வீட்டை விட்டு வெளியே போகவில்லை, பாபு' என்று பொருள்படவே கேட்டாள். திடீரென்று பதில் சொல்லும் நிலைமையில் அவன் இல்லை. 'ஆ...ங்! என்ன சொன்னாய் அக்கா?' என்று அவளையே திருப்பிக் கேள்வி கேட்டான்.

'எண்ணம் எங்கேயோ போயிருக்கிறது. கேட்டது என்ன வென்றே தெரியவில்லை' என்று மற்றோர் அம்பை எய்துவிட்டுப் புத்லாபாய் உள்ளே போக நினைத்தாள். ஆனால் பாபு சாஹேப் ஏதோ சொல்வதைக் கேட்டு நின்றாள். பாபு சாஹேப் மெதுவாகப் பேச்சைத் தொடங்கினான். ''நானு மாமாவுக்குப் புத்தியே இல்லை. பார் அக்கா, 'முத்துப்போல் அழகான பெண்ணை அந்தக் கொல்லாபுரத்துக் குதிரைக்காரனுக்குக்

கொடுக்க வேண்டும்' என்று போயிருக்கிறாரே! அதைத்தான் யோசித்துக்கொண்டிருந்தேன் அக்கா'' என்று வெட்கம் இல்லாமல் சொல்லித் தன் நடத்தையைச் சமாளித்துக் கொண்டான். புத்லாபாய்க்கு இது பிடிக்கவில்லை. தம்பியை எச்சரிக்க இது ஒரு நல்ல சந்தர்ப்பம் ஆயிற்று. சிமனுவின் எதிர் கால வாழ்க்கையைப்பற்றி அவளுக்கு ஏனோ இனம்புரியாத பயம் ஒன்று உண்டாயிற்று. ''பாபு, வயதுவந்த பெண்களைப்பற்றி இப்படியெல்லாம் பேசுவது சரியல்ல. சிமனு என் பெண்ணைப் போல. இப்படியெல்லாம் அசட்டுப்பிசட்டு என்று பேசினால் எனக்குப் பிடிக்காது'' என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டு உள்ளே போனாள். இந்தப் பேச்சு, பாபு சாஹேபின் நெஞ்சில் வேல்போல் பாய்ந்தது. ஆனாலும் தோல்வியை ஒப்புக்கொள்ள மனம் வரவில்லை. ''கல்யாணம் ஆகப்போகிற பெண், நல்ல தாகட்டும் என்று சொன்னேன். அப்படி என்ன சொல்லக் கூடாததைச் சொல்லிவிட்டேன்'' என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டான். ஆனால் அதைக் கேட்கப் புத்லாபாய் அங்கே நிற்கவில்லை. பாபு சாஹேபை மறுபடியும் சிமனுவின் மயக்கம் பற்றிக்கொண்டது. தமக்கையின் எதிர்ப்பால் அது இன்னும் தீவிரம் ஆகியது. ஆனால் புத்லாபாயின் பாதுகாப்பில் இருக்கும் சிமனுவின் அழகு 'பாம்பின் தலையில் இருக்கும் ரத்தினம் போல்' அணுக முடியாததாக இருந்தது. மற்ற விஷயங்களில் எல்லாம் கையால் ஆகாதவனாக இருந்தாலும் பெண்வேட்டையில் மட்டும் பாபு சாஹேப் கைதேர்ந்தவன். இந்தத் தோல்வி அவனுடைய துணிச்சலைக் கிளப்பியது. சுகமாக உட்கார மனம் ஒப்பவில்லை. இந்த விஷயத்தைப்பற்றித் தமக்கையிடம் பேச இடமே இல்லை. 'தன் ஆசை கைகூடுவதற்கு என்ன வழி?' என்ற யோசனையில் அவன் மனம் கொதிப்படைந்தது. 'மடத்துச் சாமியாரின் உதவி கிடைத்தால் வேலை எளிதில் முடிந்துவிடலாம்' என்ற யோசனை தோன்றியவுடன் உற்சாகமாக நடந்தான். பாபு சாஹேபின் இனிய பேச்சு, தன்னை அழைப்பது போன்ற ஒரு பார்வை இவற்றால் சிமனு வெட்கித் தலைகுனிந்தாள். நல்ல எதிர்காலத்தின் ஆசையாகிய ஒளி அவள் கண்களில் மின்னியது. புத்லாபாய் ஒரொரு சமயம் சிமனுவின் அழகைப் புகழும்போது, 'இந்த மாளிகைக்கு எஜமானி ஆகும் தகுதி உனக்கு இருக்கிறது' என்று சொல்வாள். அந்தச் சொற்களுக்குப் பாபு சாஹேபின் நடத்தை ஜீவனைக் கொடுத்தது. அபூர்வமும் தெளிவற்றதுமான அநுபவம் ஒன்று அவள் நெஞ்சில் அலைகளை எழுப்பியது.

மாளிகையின் வலப்பக்கத்தை ஒட்டியே படதையா (சாமியார்) மடம் இருந்தது. பழங்காலத்துக் கட்டடமான இது

பாதள்ளியின் தகுதிக்கு மீறிய சிறப்புடையதாக இருந்தது. தலை வாயிலைத் தாண்டியதும் பெரிய முற்றம். எதிரில் கன்னங்கரேல் என்ற சலவைக் கல்லால் கட்டிய தூண்களைக் கொண்ட ரங்க மண்டபம். இருபுறத்திலும் பக்தர்கள் தங்கும் அறைகள். ரங்க மண்டபத்துக்குப் பின்புறம் சமையல் அறையையும் சாமியாரின் தியான அறையையும் காணலாம். பாபு சாஹேப், மடத்துக்குப் போனபோது, படதையா, உட்புற அறையில் பகல் ஓய்வுக்காகப் படுத்திருந்தார். காவி அங்கி அணிந்த சிறுவன் ஒருவன் அவர் கால் களைப் பிடித்துக்கொண்டிருந்தான். பாபு சாஹேபைக் கண்ட வுடன் படதையா உரக்கச் சிரித்து, 'ஓஹோ, ஜாகீர்தார் வழி தவறி வந்துவிட்டீர்களே!' என்ருர். பாபு சாஹேப் ஏதோ சிக்கலில் மாட்டிக்கொண்டதுபோல் முகபாவம் தோன்ற, 'ஆமாம் சுவாமி, வழி கேட்கவே உங்களிடம் வந்திருக்கிறேன்' என்று பதில் சொன்னுன். பிறகு நுரங்கி வழிந்துகொண்டு காலைப் பிடித்துக்கொண்டிருந்த சிறுவனை பாபு சாஹேப் ஓரக்கண்ணுல் பார்த்தான். படதையா அதன் பொருளைப் புரிந்துகொண்டு, 'டே, குருபாதா, அந்தக் கஞ்சா அடிக்கிற கெஞ்சனிடம் நான் ஒரு வேலை சொல்லியிருந்தேன், செய்தாளுன்னு கேட்டுக்கிட்டு வாடா' என்று உத்தரவிட்டார். குருபாதனும் 'விட்டதே போதும்' என்று ஓடிவிட்டான்.

வெகுநேரம் இருவரும் ஆழ்ந்து யோசித்திருக்கவேண்டும். படதையாவின் அந்தரங்க அறையில் இருந்து வெளியில் வந்த போது பாபு சாஹேபின் முகம் மலர்ந்திருந்தது. 'சுவாமிகளே, உங்கள் திறமைக்கு எல்லையே இல்லை. பாருங்கள், நானும் மூன்று மணி நேரமாக மண்டையை உடைத்துக்கொண்டேன். ஆனல் இவ்வளவு சுலபமாக வேலையை முடித்துக்கொள்ளக்கூடிய யோசனை எனக்குத் தோன்றவில்லை' என்று புகழ்ந்து அவருக்கு நன்றி தெரிவித்துக்கொண்டான்.

படதையா, அவன் அருகில் வந்து, 'ஜாகீர்தார் சாஹேப், செய்தி ரகசியமாக இருக்கணும். ஒண்ணு சொல்லி வைக்கிறேன். அந்த தாதாவுக்கு இது தெரிஞ்சா ஒண்ணு கடக்க ஒண்ணு ஆயிடும். நீங்க என்னை நம்புங்க நம்ம தானி உங்களை வந்து கூப்பிட்ட வுடனே மடத்துக்கு வாங்க. கார்ப் பௌர்ணமி, மாளிகை எருது களின் ஊர்கோலத்தைப் பார்க்க ஊர் ஜனங்களெல்லாம் கோட்டை வாசலுக்கு முன்னலே நெறஞ்சிருப்பாங்க. அதே சமயத்திலே நம்ம தானி, சிமணுவை மடத்துக்கு அழைத்துக் கொண்டு வருவாள். நீங்க மாடுகளின் ஊர்வலத்தை முடிக்கும் வரையில் அவள் சிமணுவின் மனசைப் பக்குவப்படுத்துவாள்.

அவ வந்து கூப்பிட்ட உடனே நீங்க கையோடெ வரவேண்டும்' என்று யோசனை சொல்லி விடை கொடுத்தார்.

மறுநாள் நடுப்பகலுக்குமேல் கார்ப் பௌர்ணமி விழாவுக்காக ஊரெல்லாம் ஒரே தடபுடலாக இருந்தது. மாளிகைக் காளைகளின் ஊர்வலம் கோட்டை வாயிலுக்கு வந்தபோது இரண்டு மணி ஆயிற்று. ஊர் முழுவதும் ஊர்வலத்தின் உற்சாகத்தில் மூழ்கிக் கிடந்தது. ஜாகீர்தாரின் காளைகளைத் தொடர்ந்தே மணியக்காரர் காளைகளின் ஊர்வலமும் மிக ஆடம்பரத்துடன் வந்துகொண்டிருந்தது. அப்படி ஒன்றன்பின் ஒன்ருக மாலை வரையில் ஊர்வலங்கள் கோட்டை வாயிலுக்கு வருவது வழக்கம். நடுப்பகலிலேயே வந்து உட்கார்ந்த பெண் மக்கள் விளக்கேற்றும் வேளைக்கு அசுபம் நீக்கும் சடங்கைப் பார்த்து விட்டுத் திரும்பிப் போவார்கள். யாருக்கும் வீட்டு நினைவோ வேலைக் கவலையோ இருக்கவில்லை. இந்த நிலையில் சிமளு, தானம்மாவுடன் (தாலி) ஊர்வலத்துக்குப் போவதாகச் சொன்னபோது, புத்லாபாய் மறுக்கவில்லை. ''பாவம் சிறு பெண், ஊர்வலம் பார்க்க ஆசைப்படும்போது 'வேண்டாம்' என்று எப்படிச் சொல்வது?'' என்று நினைத்து அனுப்பிவிட்டாள். தானம்மா, நேராகக் கோட்டை வாயிலுக்குப் போகவில்லை. 'மடத்துக்குப் போயிட்டு, அப்பாலே போளுப் போச்சு, வா' என்று ஏதேதோ சொன்னதால், சிமளு வேறு வழி இல்லாமல் அவளைப் பின் தொடர்ந்தாள்.

தானம்மா, பேச்சில் வல்லவள். மடத்தில் சிமளுவை மட்டும் உட்காரவைத்துக்கொண்டு தேனெழுகும் சொற்களால் பாபு சாஹேபின் ஆசையை அவளிடம் சொல்லி மயக்கினுள். அவனுடைய அழகு, செல்வம், அதிகாரம் இவற்றுக்கெல்லாம் காது, மூக்கு வைத்து வருணித்தாள். இதைக் கேட்ட சிமளுவின் மனம் பல இனிய கனவுகளால் மயங்கியது. ஒன்றும் பேசாமல் திறந்த கண்களுடன் எங்கேயோ பார்த்தபடி தானம்மாவின் வார்த்தைகளைக் கேட்பதில் மூழ்கியிருந்தாள். தானம்மாவின் பேச்சினுல் அவள் கண்ணுக்குமுன் மனம் கவரும் எதிர்காலத்தின் சித்திரங்கள் உயிர்பெற்றுச் சுழலத் தொடங்கின. 'பாபு சாஹேபை மணந்துகொண்டால் பாதள்ளியிலேயே சிமளுவின் அந்தஸ்து எவ்வளவு உயர்ந்துவிடும்' என்னும் சித்திரத்தைத் தானம்மா, கண்ணில் கட்டியதுபோல் வர்ணித்துக்கொண்டிருந்தாள். மனத்தில் ஆசை நிறைந்திருந்தபோதிலும் சிமளு வெட்கத்துடனே 'நான் எங்கே! அவர் எங்கே!' என்று சொன்னுள்.

''நீ, 'உம்' என்று சொல்லு. உங்கப்பா வந்த ஒரு வாரத்துக்குள்ளே கண்ணாலம் ஆகாட்டி என் பேரையே மாத்திப்பிடு! அந்தப் பாரம் எல்லாம் சாமியைச் சேர்ந்தது. பாபு சாஹேபைக் கட்டிக்கிட்டா ஊர்ச் சனங்களெல்லாம் உன் காலிலே வந்து விழுவாங்க' என்று சொல்லித் தானம்மா வேட்டையைச் சிறைப் பிடித்துவிட்டாள்.

'நிச்சயம்மா அவர் என்னைக் கல்யாணம் செஞ்சுக்குவாரா?' என்று சிமணு ஏக்கத்துடன் கேட்டாள். மந்திரத்தில் கட்டுண்டவள்போல் இருந்தது அவள் நிலை.

'நீ ஒரு பைத்தியக்காரி! நீ தலையை அசைச்சாப் போதும். இந்துபுரத்து மகாராஜாவே வந்து உன்னைக் கட்டிக்குவாரு. தங்கப்பதுமை மாதிரிப் பொண்ணை யாராச்சியும் விடுவாங்களா? பாபு சாஹேபே வந்து சாமியைக் கும்பிட்டு உன்னைக் கல்யாணத்துக்குச் சம்மதிக்க வைக்கும்படி கேட்டுக்கிட்டாரு. சாமி சொன்னாச் சொன்னதுதான்! யார் வந்தாலும் மாத்த முடியாது. அப்படி ஆணை இட்டிருக்காரு. சாமியார் வாயாலேயே இந்த வார்த்தையைக் கேட்பியாம் உள்ளேவா' என்று கையைப்பிடித்து எழுப்பினாள்.

சிமணு, யந்திரம்போல் தானம்மாவைத் தொடர்ந்தாள். மடத்தின் அந்தரங்க அறையில் நுழைந்தார்கள். காவிவஸ்திரமும் அதன்மேல் புலித்தோலும் விரித்த கட்டிலில் சாமியார் உட்கார்ந்திருந்தார். சிமணுவைக் கண்டவுடன் எழுந்திருந்து ஆசீர்வதிக்கும் ரிஷிபோல் கையை நீட்டி நாடகபாணியில், 'வா, மகளே, வா! பெரிய மனிசரைக் கல்யாணம் பண்ணிக்கறதாலே உனக்கு அதிர்ஷ்டம் வரட்டும்' என்று வாழ்த்தினார்.

'தானி, நீ மாளிகைக்குப் போய், பாபு சாஹேபை வரச் சொல்லிவிட்டு வா. சிமணு, நீ அவர் வர்ர வரைக்கும் இங்கேயே உட்கார்ந்திரு' என்று சொன்ன படதையா, ஒரு விபரீதச் சிரிப்புச் சிரித்தார். தானம்மா போய்விட்டாள். சாமியார் யோசனையில் ஆழ்ந்திருப்பதுபோல மோவாயைத் தடவிக் கொண்டு உட்கார்ந்திருந்தார். ஒன்றும் அறியாத சிமணு, படதையாவின் வலது காதில் தொங்கிய தங்கப் பூண் போட்ட பெரிய ருத்திராக்ஷத்தையே பார்த்துக்கொண்டிருந்தாள். .........

அன்றிரவு மாளிகையில் புத்லாபாய் தன் அறையில் கண்கள் நெருப்பைக் கக்க, பாபு சாஹேபிடம் கோபமாகப் பேசிக் கொண்டிருந்தாள். சிமணு, அழுதவண்ணம் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தாள். 'அன்று சிமணுவைப் பலாத்காரம் செய்ததற்காகச் சுவாமிகளுக்கு நல்ல தண்டனை கொடுக்க

வேண்டும்' என்பது புத்லாபாயின் வாதம். 'சிமஞு போன்றவர்களின் பேச்சைக் கேட்டுக்கொண்டு ஊருக்குக் குருவானவர்மேல் அபவாதம் சுமத்துவது முடியாது' என்று பாபு சாஹேப் வெட்கமின்றி எதிர்வாதம் செய்தான்.

'நீ அவளைக் கல்யாணம் செய்துகொள்வதாக நம்பிக்கை ஊட்டி, மடத்துக்கு அழைத்துக்கொண்டு போய் அந்த ஓநாயிடம் விட்டுத் தங்கமான பெண்ணைப் பாழாக்கிவிட்டாய்! போதாததற்கு அவன் குற்றத்தை மறைக்கப் பரிந்துகொண்டும் வருகிறாயா? பஞ்சாயத்தார்மூலம் இந்த விவகாரத்துக்கு ஒரு முடிவு தேடாமல் நான் விடமாட்டேன்' என்றாள் புத்லாபாய். புத்லாபாயின் குரல் அநியாயத்தை எதிர்த்து ஆவேசத்துடன் குமுறியது. துக்கத்தால் அவள் கண்ணில் நீர் பொங்கியது.

'அக்கா, இது பஞ்சாயத்தார் விசாரணைக்குப் போகும் விஷயம் அன்று; கால்யாணம் ஆகவேண்டிய பெண். பக்குவமாக வழி காணவேண்டும். சுவாமிகள் ஒருவேளை தவறாக நடந்துகொண்டது நிஜமாக இருந்தாலும் இந்த விஷயம் நம்மைத் தவிர வேறொருவர் காதில் விழக் கூடாது படதையாவின் செல்வாக்கைப்பற்றி உனக்குத் தெரியாது. அவருக்கு எதிராக யாரும் மூச்சு விடமாட்டார்கள். சிமஞு, மடத்துக்குப் போனதே தப்பு. போனாலும் வாயைக் கையை மூடிக்கொண்டு பேசாமல் வந்திருக்க வேண்டும. இந்தச் செய்தி நாஞு மாமாவுக்குத் தெரிந்தால் உன் மரியாதை தக்காது. அவராவது வயசானவர்; நாலு வார்த்தை சொல்லிவிட்டுப் பேசாமல் இருந்துவிடுவார். ஆனால் விஷயம் தாதாவின் காதுக்கு எட்டினால் அவன் எல்லோருடைய உயிரையும் குடித்துவிடுவான். யோசித்துப் பார்' என்று பாபு சாஹேப், தன் விவகாரத் திறமையை உபயோகித்துப் புத்லாபாயின் மனத்தை மாற்ற முயன்றான்.

தாதாவின் பெயரைக் கேட்டதுமே புத்லாபாய் நடுங்கினாள். படதையா, சிமஞுவைக் கெடுத்த அக்கிரமத்தால், அவள் கோபவெறி கொண்டிருந்தாள். அவள் நெஞ்சு கொதிப்பது போல் சங்கடம் உண்டாகி இப்படியெல்லாம் பேசினாள். ஆனால் தாதாவின் நினைவு வந்ததும் 'தப்பு வழியில் போகிறோம்' என்பது அவளுக்கும் தோன்றியது. 'தாதா, அநியாயத்தைச் சிறிதும் பொறுக்கமாட்டான்' என்பது அவளுக்கு நன்றாகத் தெரியும்.

லக்ஷ்மிபாய் ஊரைவிட்டுப் போன அன்றைக்குச் சொத்துரிமை தனக்கே நிலைத்துவிட்டது என்ற மகிழ்ச்சியில் (லக்ஷ்மிபாய் ஊருக்குப் போனவுடனே) புத்லாபாய் கோயிலில் சுவாமிகு நைவேத்தியம் செய்து ஊருக்கெல்லாம் விருந்துச் சாப்பாடு

போட்டாள். அதனால் கோயிலில் ஒரே தடபுடலாக இருந்தது. தன் கையால் கட்டிய துளசி மாலையுடன் சுவாமியைச் சேவிக்கப் புத்லாபாய் சந்தோஷத்துடன் வந்துகொண்டிருந்தாள். அப்பொழுது தாதா, கோயிலின் பின்புறத்தில் வந்து அவள் வழியை மறித்தான். அப்பொழுது அவனுக்குப் பன்னிரண்டு அல்லது பதின்மூன்று வயது இருக்கும். கோபத்தால் உதட்டைக் கடித்தவண்ணம் 'பெரியம்மா அவங்களை ஊரைவிட்டுத் துரத்திட்டு நீ ஜம்பமா இருக்கலாம்னு பாக்கறியா?' என்று கத்திய வண்ணம் பாய்ந்துவந்தான். நல்ல காலம்! அங்கே இருந்த நாலு பேர், அவனைத் தடுத்து நிறுத்தியதால் ஆபத்து விலகியது. அன்றைய சிறுவன் இன்று இருபது வயது இளைஞனாக வளர்ந்திருக்கிறான். கோபத்தால் சிவந்த முகம். சிறுவன் ஆனபடியால் ஒன்றும் செய்யமுடியாத நிலைமை. உதட்டைக் கடித்துக் கொண்டிருந்த தோற்றம். உள்ளக் குமுறலைக் காட்டிய கண்கள்; கண்ணீர். இவற்றையெல்லாம் அன்று கண்ட புத்லா பாய் இன்னும் மறக்கவில்லை. சிலேதார் லக்ஷ்மணன் எத்தனைக் கெத்தனை சாந்தமூர்த்தியாய் இருக்கிறானே அத்தனைக்கத்தனை அவன் மகன் தாதா கோபக்காரனாக இருந்தான். அவனுக்குக் கோபம் வந்தால் என்ன விபரீதம் நேருமோ? புத்லாபாய் இனிமேல் நேரக்கூடிய விபரீத சம்பவங்களைப்பற்றி நினைத்துச் சிமனாவைச் சமாதானப்படுத்த முயன்றாள். 'இந்தச் செய்தி யார் காதிலும் விழாமல் இருக்கவேண்டும்' என்று எச்சரித்தாள்.

இந்த ரகசியத்தை மாளிகையில் நாலு சுவர்களுக்குள் மூடிவைக்க எவ்வளவுதான் முயன்றும் வேறு வழியில் அது வெளியே பரவியது. காற்றைப் பிடித்துவைப்பது எப்படிச் சாத்தியம் இல்லையோ அப்படியே செய்தியைப் பிடிப்பதும். நடந்த விஷயம் எல்லோரையும்விட அதிகமாகப் படதையாவின் வைப்பாட்டியான தானம்மாவுக்கு ஆத்திரத்தை மூட்டியது. 'தன்னைக் கெடுத்தது போதாமல் பச்சிளம் பெண்ணான சிமனா வையும் பாழாக்கிவிட்டான் அல்லவா?' என்று அவள் கொதித்து எழுந்தாள். சாமியாரின்மேல் வந்த கோபத்தின் பயனாக அவளுக்குச் சிமனாவின்மேல் இரக்கம் ஏற்பட்டது. ஆத்திரத்தைத் தீர்த்துக்கொள்ள வழி தெரியாமல் தானம்மா கண்டவர்கள் இடம் எல்லாம் சாமியாரின் தாம்பத்ய வாழ்க்கையைப்பற்றிப் பேசத் தொடங்கினாள். இது கேட்பவர்களுக்கெல்லாம் ஆவலைத் தூண்டும் அதிசயச் செய்தியாக இருந்தது. இதனாலும் தானம்மா வுக்குத் திருப்தி ஏற்படவில்லை; அவள் கோபம் தணியவில்லை. கோபம் தாங்க முடியாமல்தானோ என்னவோ? ஒரு நாள்

தானம்மா யாரோடும் சொல்லாமல் கொள்ளாமல் ஊரை விட்டே போய்விட்டாள்.

சாமியாரும் வெளியூரிலிருந்து ஓர் அழைப்பு வந்ததாகச் சொல்லிக்கொண்டு நிகழ்ச்சி நடந்த மறுநாளே ஊரைவிட்டுப் போனவர், சில மாதங்கள் வரை திரும்பவே இல்லை. சொல்லி வைத்தாற்போல் இந்த இரண்டு பேரும் போய்விட்டதால் ஊரார் பலவிதத்தில் கற்பனைசெய்து சந்தேகப்பட்டுப் பேசிக் கொண்டார்கள். கற்பனைச் செய்தி ஒன்றுக்குப் பத்தாகப் பரவியது. அந்தப் பேச்சுக்களில் உள்ள உண்மைச் செய்தி அணிந்த விகார வேஷத்தைக் கண்டு சத்தியமே வெட்கித் தலை குனிந்தது. எல்லோருக்குமே பாபு சாஹேபின்மேல்தான் சந்தேகம். 'அவன் சிமஞைவை மடத்துக்கு அழைத்துக்கொண்டு போய் தகாத செயலைச் செய்துவிட்டதால்தான் படதையா மனம் கலங்கி ஊரைவிட்டே போய்விட்டார்' என்பதே ஊரெல் லாம் பேச்சாக இருந்தது. சாமியாரின் கையாட்கள், 'தானம்மா சொன்னதெல்லாம் புளுகுமூட்டை' என்றும், 'தங்களுக்குத்தான் உண்மை தெரியும்' என்றும் ரகசியமாகச் சொல்லி எல்லோரை யும் நம்ப வைத்துவிட்டார்கள். ஜனங்களுக்குச் சந்தேகம் இருந்தது. எதையும் நம்ப முடியவில்லை. தானம்மாவும் சாமி யாரின் வைப்பாட்டிதானே! இந்த விஷயம் அரசமரத்தடியில் தினந்தோறும் கூடும் சோம்பேறிகளுக்குப் பேச நல்ல விஷயம் ஆயிற்று. பாபு சாஹேபையும் சிமஞைவையும் பற்றிய பேச்சு ஊரெங்கும் பரவி வந்தாலும் அதைத் தாதாவிடம் சொல் வதற்கு யாரும் துணியவில்லை.

இதற்குக் காரணம் இருந்தது. தாலிம்கானு* நண்பர்களுக்குத் 'தாதாவிடம் செய்தியைச் சொன்னுல் பாபு சாஹேபின் தலை உருளும் அல்லது சிமஞ பலியாகிவிடுவாள்' என்ற பயம்.

தாதா எதிலும் திறமைசாலியாக இருந்தது போலவே துடுக்குத்தனத்திலும் பேர்போனவனுக இருந்தான்; முன்கோபி. 'அவனைச் சீண்டினுல் நல்ல பாம்பைச் சீண்டுவது போலத்தான்' என்பது அவனுடைய நண்பர்களின் அநுபவம். இதனுல் தாதா வுக்குச் செய்தி எட்டவில்லை. எதிலும் தலையிடும் சுபாவம் தாதா வுக்கு இல்லாததால் சிநேகிதர்கள் முகபாவத்தைக் கொண்டும் அவன் ஒன்றும் சந்தேகிக்கவில்லை.

* மல்யுத்தப் பயிற்சிக்கூடம்

# 3

கார்ப் பௌர்ணமி எப்போதும்போல் இந்த ஆண்டு மழைக் காலத்துக்கு வரவேற்புப் பாடவில்லை. குடியானவர்களுக்கு நம்பிக்கை தரும் முன் மாரிக்காலம் சமயத்தில் ஏமாற்றி விட்டது. வானத்தில் கவிந்த மேகங்கள் பாதள்ளி விவசாயிகள் கையைக் கவித்துப் பார்த்துக்கொண்டிருப்பதை லக்ஷியம் செய்யாமல் ஊரைத் தாண்டிப் போய்விட்டன. நிலம் ஏமாற்ற மடைந்தது. பாளாச்சாரின் பஞ்சாங்கம் அவரையே ஏமாற்றி விட்டது. பாதள்ளியில் மழை பெய்யாவிட்டாலும் எங்கோ இருக்கும் மலைநாட்டில் ஏராளமாக மழை பெய்திருப்பதைக் கிருஷ்ணுவில் வந்த வெள்ளம் சொல்லாமல் சொல்லியது; ஊராரின் ஏக்கத்தை அதிகரித்தது. ஆற்றோரத்து நிலங்களில் மட்டும் விதை விதைத்தார்கள். தீபாவளிக்குப்பின் இரண்டொரு முறை கார்காலத்து மழை தலைகாட்டியதால் ஆற்றோரத்து விளைச்சல் மட்டும் கைக்கு எட்டும் நிலையில் இருந்தது. ஆனல் மற்ற நிலங்களெல்லாம் தரிசாகவே கிடந்தன. பஞ்சத்தின் கரிய நிழல் பாதள்ளியின் கரிய நிலங்களின்மேல் நீண்டு கிடந்தது.

எள் அமாவாசை வந்தது. நன்ருக மழைபெய்து பயிர் செழித்திருந்தால் அன்று நிலத்துக்குப் பூஜைசெய்து திக்பலி கொடுப்பது வழக்கம். இந்த ஆண்டு யாரும் வயல் பக்கமே தலைகாட்டவில்லை. அமாவாசையன்று விடியும்முன்பே ஆற்றில் குளித்து உற்சாகத்துடன் தண்ணீர் எடுத்துப்போகும் பெண்களைக் கிராமத்தில் காணலாம். ஆனல் இந்த ஆண்டு பஞ்சம் காரண மாகப் பொழுது விடிந்த பின்னும் வழக்கமான கெடுபிடி கிராமத்தில் இல்லை.

ஊரை ஒட்டி ஓடும் இந்த நதியின் பரப்பு, பாதள்ளிக்குப் பெருமை தருவதாக இருந்தது. கடும் கோடையிலும் வற்ருமல் நாலு மைல் நீளம் பரந்த மடு, ஊரை ஒட்டியே இருந்தது. அந்தப் பரந்த நீர்நிலையில் ஏராளமாக முதலைகள் இருந்ததைப் பாதள்ளி மக்கள் கண்ணுரப் பார்த்திருக்கிருர்கள். ஆனல் அவற்றினிடம் யாருக்கும் பயம் இல்லை. 'தண்ணீர் மட்டத்தில் மீன்களைப்போல் முதலைகளும் இருக்கும்' என்று அவர்கள் சகஜ மாகவே நினைத்தார்கள். பாளாச்சார் இருட்டுப் பிரியும் முன்பே ஆற்றில் நீந்தி ஆற்றின் நடுவில் உள்ள மணல் திட்டுக்குப் போவார். அங்கே வளர்ந்திருக்கும் துளசியைப் பறித்துப் பஞ்ச பாத்திரத்தில் எடுத்துக்கொள்வார். திரும்பி வரும்போது பஞ்ச

பாத்திரத்தை வேஷ்டியால் இடுப்பில் சுற்றிக் கட்டிக்கொண்டு நீந்திக் கரைக்கு வந்து சேருவார். அவர் 'ஒரு நாளும் ஒரு முதலையைக்கூடப் பார்த்ததில்லை' என்று சொல்வார்.

ஆற்றங்கரை, மக்களின் சுபாவத்தைப் பிரதிபலிப்பதுபோல் இருந்தது. வீட்டில் பத்திரமாக இருந்த ரகசியம் எல்லாம் இங்கே அம்பலம் ஆயின. அங்கே குளிக்கும் பெண்களின் பேச்சுக்குரல் நதியின் ஓசையையே அடக்கிவிடும்.

எள் அமாவாசையன்று காலையிலும் வழக்கப்படி பெண்கள் கூட்டம் ஆற்றங்கரையில் சேர்ந்தது. பல ஜாதியினரும் பல வயதினரும் கூடியிருந்தார்கள். ஆற்றோரத்தில் இருக்கும் களிமண்ணை எடுத்துக் குடத்தின் ஓட்டையை அடைத்துக் கொண்டிருந்த பிராதார் நிங்கம்மா, 'ஏண்டி, தாரி! உன் புருஷன் புதுச்சேலை வாங்கியாந்தானுமே? எங்களுக்குக் காட்டினுப் பிடுங்கிட்டுவிடுவோமா?' என்று, தலைக்குச் சும்மாடு சுற்றிக்கொண்டு நின்ற புது மணப்பெண்ணுகிய தாரம்மாவைக் கேட்டாள்.

'எல்லோரையும் போலே சீட்டுக் கட்டிய பணத்தில் வாங்கி யிருந்தால் காட்டியிருப்பாள் சின்னம்மா!' என்று தலையாரி வீட்டு நாகம்மா கிசுகிசுவென்று விளக்கினுள்.

'அப்படீன்னு என்னம்மா? திருடி வாங்கிட்டு வந்தான்னு சொல்றியா?' என்று அரைக்கண்ணை மூடி யோசித்தவண்ணமே நிங்கம்மா கேட்டாள்.

'திருடி வாங்கிட்டு வருவதற்கும் நெஞ்சுரம் வேணும் சின்னம்மா! இந்த ராஜாவுக்கு அவ்வளவு தைரியமா? பாபு சாஹேப் சொன்னபடியெல்லாம் ஆடி, பல்லையெல்லாம் தெரியக்காட்டியபின் அவன் பணத்தை எடுத்துக்கொடுத்தானும்' என்று நாகம்மா சொன்னபோது, தாரம்மா ஆற்றில் இறங்கிக் குடத்தில் தண்ணீர் மொண்டுகொண்டிருந்தாள். தன் கணவனைப் பற்றிய அவதூற்றுப் பேச்சை அவளால் பொறுக்க முடியவில்லை. 'ஆமாம் அக்கா, உங்களவனைப்போலெ வழிப்பறி செய்து, ஜாகீர்தாரின் மடியை ரொப்பி, அவர் பிடிப்பிடியாக் கொடுக்கிற பணத்தை வாங்க எங்களாலெ முடியுமா?' என்று கிண்டலாகச் சொல்லியபடி தலையில் குடத்தை வைத்துக்கொண்டாள்.

நிங்கம்மா, குடத்துக்கு மண் அடைக்கும் வேலை இன்னும் முடியவில்லை. 'நில்லுங்கடி! வேகமாப்போயி போளிதட்டி, வயலுக்குப் போறவங்க மாதிரியல்ல பொறப்பட்டுட்டிங்க. மழை ராஜாதான் ஊரை மறந்துட்டான். கறுப்புமண் வயலிலே கலப்பை ஓடவில்லை. வெறும் வயல்லெ தயிர் கலந்த கதம்பச்

சோற்றைத் தெளிக்கப்போறீங்களா?' மற்றவர்களை நிற்கவைப்பதற்காக நிங்கம்மா இப்படிச் சொன்னாள்.

பெரிய குறும்பன் வீட்டு நிம்பம்மா வெறும் குடத்தைக் கீழே வைத்துவிட்டுத் தண்ணீரில் இறங்கிக்கொண்டிருந்தவள், 'நிங்கத்தே, மழையும் வெளச்சலும் புண்ணியத்துக்குப் பலன். இந்த ஊர்லெ நடக்கற அக்கிரமத்தைப் பாத்தப்பறம் மழைராஜா எப்படி வருவான்?' என்று இயற்கையின் கோபத்துக்குக் காரணம் காட்டினாள். தலையாரி வீட்டு நாகம்மாவுக்கு இந்தப் பேச்சுப் பிடிக்கவில்லை. 'புண்ணிய காரியங்கள் இங்கே நடக்கறுப்பலெ வேறு எங்கே நடக்குது, நிம்பக்கா! அநுமந்த சாமியின் மஞ்சநீர் விழா, சின்னச் சாமியாரின் பூஜை எல்லாத்தையும் என்னப்பன் பாபு சாஹேப் நடத்தறான். இப்படிப்பட்ட புண்ணியவானை தொரையைக் கண்டும்காணாமெ திட்டற மட்டமான ஜனங்களைக் கண்டு வெறுத்துப்போய்த்தான் மழை வரலை. என்ன நிங்கம்மா, நான் சொல்றது சரியா, இல்லையா?' என்று தன் பேச்சுக்குப் பக்கபலம் தேடினாள்.

நிம்பம்மா, மாளிகைக்குப் பக்கத்திலேயே குடியிருப்பவள் மாளிகைக்குள்ளே நடக்கும் விஷயங்களை எல்லாம் அறிந்தவள். 'பாபு சாஹேப் செய்யும் தானதர்மங்களெல்லாம் பாபத்தை மறைப்பதற்காகச் செய்யும் தந்திரம்' என்பது அவள் கருத்து. அதனால் கழுத்தை நொடித்தே நாகம்மாவின் பேச்சை மறுத்து, ''நாகம்மா, உன் புருசன் புலிவேட்டைக்காரன். ஊரைக் கொள்ளையடிச்சு, ஜாகீர்தாரின் மடியை ரொப்பறான். அப்படிபட்ட காசுக்கு ஆசைப்படற ஜாகீர்தாரின் சாமர்த்தியத்தை என்ன சொல்ல? ஒரு காசு விடறதில்லெ; ஒரு பொண்ணெ விடறதில்லெ. இப்படிப்பட்டவங்க செய்யற புண்ணியத்தைப்பத்தி ஏன் சொல்றே? 'பாவக் குடம் ரொம்பர வரைக்கும் எகிரி விழுவான்' '' என்று கர்ஜித்தாள்.

அப்பொழுது நிங்கம்மா, சுற்றிலும் கண்ணை ஓட்டிச் 'செய்தவங்க பாவம் சொன்னவங்களுக்குத்தான் வரும். நட தங்கச்சி' என்று சொல்லியவண்ணம் தலையில் குடத்தை வைத்துக் கொண்டு நடந்தாள்.

நாகம்மா என்ன இருந்தாலும் மாளிகையின் உப்பைத் தின்றவள். பாபு சாஹேப் கொடைவள்ளலாகவே அவளுக்குத் தோன்றினான். 'நிம்பக்கா, ஏழை எளியவங்க கேட்டபோது கொடுக்கற எசமான் பாபு சாஹேப். இது ஒனக்குத் தெரிஞ்சிருக்காது. என்னமோ வயசுப்பிள்ளெ. ஒத்தர், ரெண்டுபேர் மேலெ ஆசைப்பட்டிருப்பான். ஆனா பலவந்தப்படுத்தி ஆரு

குடியையும் கெடுக்கலெ' என்ருள் நாகம்மா. பாபு சாஹேபின் பெண்ணுசை அவ்வளவு ஒன்றும் பெரிய குற்றம் இல்லே என்பது போல் பரிந்து பேசிஞள் அவள்.

நிம்பம்மாவுக்கு இது பொறுக்கவில்லே. 'ஐய, போதும் நிறுத்து உன் பாபு சாஹேபின் பெருமையை. சிமஞ, கள்ளங் கபடறியாத சின்னப்பெண். இவனுடைய தந்திரப் பேச்சிலே மயங்கிப் பலியாய்ட்டா. கடைசீலே அவ கதி இப்ப என்ஞச்சு, பார்? கொல்லாபுரத்துப் பிள்ளே 'வாண்டான்'னுடிச்சு. பாவம் பொண்ணு, கல்யாணம் ஆகாதெ கெடக்குது. வாக்குக் குடுத் தாப்பிலெ பாபு சாஹேப் அவளேக் கல்யாணம் கட்டியிருக்க வேண்டாமா? என்று கேட்டாள்.

'கட்டியிருப்பார் அக்கா, ஆஞ என்ன செய்யறது. சாமியார் முன்ஞலேயே எச்சப்படுத்திட்டார்னு கல்யாணம் கட்டிக்க மாட்டேன்னுட்டாராம்' என்று நாகம்மா பாபு சாஹேபுக்குப் பரிந்து பேசிஞள்.

'இந்தப் பேச்சை யார்கிட்டச் சொல்லறே! இப்படிப் பேச்சு வரும்னு பயந்துதான் சாமியார் மடத்தை விட்டுட்டு மூணுமாசம் ஊருக்குப் போயிருந்தார். பாபு சாஹேப் தன் பேச்சுப்படி கல்யாணம் கட்டிக்கறதாச் சொல்லி அனுப்பிச்சுச் சாமியாரெ வரவழைச்சான். அதையும் நடத்தலெ. கட்டிக்கற எண்ணம் இல்லாட்டி அந்தப் பொண்ணெயும் அவ அப்பனேயும் அவங்க வீட்டுக்கு ஏன் போகவிடக்கூடாது? மொத்தத்திலே அவன் நடத்தெ சரியில்லே; விடு. அன்னிக்கு மடத்துலெ குடிச்சுட்டு மயக்கத்திலெ என் மருமவளோடெ பேச வந்தாஞம். நாஞ இருந்தா கையிலெ இருந்த சாணிக் கூடையைத் தலேமேல போட்டுப் புத்தி சொல்லியிருப்பேன். பெரிய மனுஷருங்க அவங்களுக்குத் தகுந்த மாதிரி இருந்தா மரியாதை கெடைக்கும்' என்ருள் நிம்பம்மா. இப்படிச் சொன்னபோது அவள் குரலில் வேகம் ஏறிக்கொண்டே வந்தது. தலேயில் குடம் இருப்பதைக் கூட அவள் உணரவில்லே. ஆஞல் மற்றவர்கள் எத்தனே நேரம் குடத்தைச் சுமந்துகொண்டு நிற்பார்கள்?

நிங்கம்மா, பேச்சை மாற்ற வேண்டும் என்று, 'அதுசரி நிம்பம்மா. உன் மருமக பண்டிகைக்குன்னு ஊருக்குப் போனவ ஏன் இன்னும் வரலெ?' என்று கேட்டாள். அந்தக் கேள்வியில் ஏதோ ஓர் ஆவல் அடங்கியிருந்தது.

'என்னத்தைச் சொல்லறது, சின்னம்மா! அந்தப் பொண்ணெப் பிசாசு பிடிச்சிருக்கூன்னு சொல்ருங்க. நாங்க

கூப்பிடப்போறபோதெல்லாம் கட்டை மாதிரி வெறச்சு விழுந்தூடரு' என்ருள் நிம்பம்மா.

'இத்தினி நாள் வரைக்கும் வெளியூர்லெ இருந்தது சரி; இப்பவாவது போகட்டும்னு என் மருமகளைப் பொறந்த வீட்டுக்கு அனுப்ப நெனச்சேன். ஆனு என்ன செய்யறது? எனக்கு வாச்ச சம்பந்தி ஒரு நாடோடி. ஊரெல்லாம் வைசூரி, அதனலே 'வரவேண்டாம்'னு சொல்லி அனுப்பிச்சிட்டாங்க. வயலெல்லாம் உழாமெ கெடக்குது. வர்ர அறுவடைக்காலம் வரைக்கும் தள்ளணும். எப்படி ஆகுமோன்னு கவலையா இருக்கு. குழியிலே சோளம் கீளம் கொட்டிவச்சிருக்கயா, நிம்பம்மா' என்று கேட்டாள் நிங்கம்மா.

நிம்பம்மா, பசையுள்ள குடும்பத்தைச் சேர்ந்தவள். தேஷ்பாண்டே, ஜாகீர்தார் இருவருடைய வயல்களையும் அவள் கணவன் குத்தகைக்கு எடுத்துப் பயிர் செய்துவந்தான். எட்டெருதுச் சாகுபடி உள்ள குடும்பத்தில், என்ன இல்லை என்ருலும், இன்னும் மூன்று வருஷங்களுக்குப் போதுமான தானியச் சேமிப்பு இருக்கும். ஆனல் 'சோளம் நிறைய இருக்கிறது' என்ற உண்மையைச் சொன்னல், 'கடன் கொடுக்கும் சந்தர்ப்பம் வரலாம்' என்று நினைத்த நிம்பம்மா, 'பெரிய குழியிலே நாப்பது மூட்டை இருந்திச்சு. ஜாகீர்தார் புலி வேட்டைக்காரங்களை அனுப்பிக் குழியைத் தெறந்து கடன் வாங்கிட்டு இருக்காரு. காயிதம் எளுதிக் கொடுத்திருக்காராம். அதாலே நாக்கெ வழிச்சுக்கறதாங்கறேன். இதெ யாரோடெ சொல்லிக்கறது நிங்கம்மா! ஊர்லெ எல்லாருக்கும் ஆவறது நமக்கும் ஆவட்டும். இந்த வருஷத்துக்கு வேணுங்கற சோளம் சின்னக்குழிலெ இருக்குமோ என்னமோ?' என்று நிம்பம்மா முன் ஜாக்கிரதையாகச் சொன்னலும் மற்றவர்கள் விஷயத்தைப் புரிந்துகொண்டார்கள்.

''ஆமாம், மல்லேசரன் கோவிலுக்கு முன்னலே இருக்கற குழிலே கெடக்கற அறுவது மூட்டை சோளத்தைத் தொடவே இல்லையாமே. அன்னிக்கி மணியம் சங்கரப்ப கௌடர், 'ஊர்லே இருக்கிற எல்லாக் குழிச் சோளமும் சேர்ந்து ஊருக்கு ஆறு மாசச் சாப்பாட்டுக்கு இருக்கும்'னு பேசிக்கிட்டிருந்தாரு. அப்ப ஒங்க குழியைப்பத்தியும் பேச்சு வந்துது'' என்று நிங்கம்மா, 'நிம்பம்மா சொல்வது பொய்' என்பதை எடுத்துக் காட்டினள்.

'போன அறுவடையின்போது நான் ஹாவனூருக்குப் போயிருந்தேன். அந்தச் சமயத்துலெ பெரியவன் குழியைத் தெறந்து சோளத்தைக் கொட்டியிருக்கான். எவ்வளவு

கொட்டிஞ்னே அவனுக்குத்தான் தெரியும். ரொம்ப ஒழைப்பு இருக்கிற வீடு. அதோடெ எட்டெருதுச் சாகுபடி. கூலி நாலி கொடுக்க வேண்டாமா?' என்று சொன்ன நிம்பம்மா உதட்டை நாக்கால் தடவிக்கொண்டாள்.

'உன்னுது ஆத்தோரத்துப் பூமி. மண்வளம் நெறஞ்சது. ஊருக்குப் பஞ்சம் வந்தாலும் ஒனக்கென்ன கவலே சின்னம்மா!' என்று நாகம்மா இடையே ஒரு வார்த்தை சொல்லிவைத்தாள்.

'ஆத்தோரத்துப் பூமிதான். ஆனு எங்களுக்குச் சொந்தமா? ஜாகீர்தார் பூமி. அவர் பங்கும் அதிகப் பங்கும் கொடுத்து மிஞ்சினதுதான் எங்களுக்கு' என்று நிம்பம்மா மறுத்துச் சொன்னுள்.

ஆயிற்று. வாய்க்காலேத் தாண்டிஞல் அவரவர் வீட்டுக்கு வேறு வேறு வழி. சேர்ந்து வருவது இதுவரைக்கும்தான். இடுப்பிலும் தலேயிலும் நிறைந்த குடங்கள், ததும்பிச் சப்தம் செய்தன. கூடவே இவர்கள் அரட்டையும் ஓயாமல் தொடர்ந்தது.

இவர்கள் பேசிக்கொண்டு நடக்கும்போதே பறையர்கள் வறட்டியைச் சுமந்தவண்ணம் எதிர்பட்டார்கள். பெண்களுக்குப் பயமும் ஆவலும் அதிகரித்தது. 'சிலேதார் நாஞ சாஹேப் விடிய ஜாமத்துக்கு இறந்துவிட்டான்' என்று அவர்கள் (பறையர்கள்) சொன்னதைக் கேட்டுப் பெண்களுக்கு இடி விழுந்ததுபோல் ஆயிற்று.

'பாவம்! மக வளர்ந்து கல்யாணம் ஆகாதெ இருக்கறதைப் பாக்கமுடியாமெ நெஞ்சு வெடித்து நாஞ சாஹேப் உசிரை விட்டான் பார் அம்மா' என்று சொல்லி ஒருத்தி கண்ணீர் விட்டாள்.

'சீ, போடி! நெஞ்சு வெடிக்கருப்லே என்ன ஆயிடுச்சு. கார்ப் பௌர்ணமிக்கு முன்னலே மாளிகைலே டிக்காஞப் போட்டப்புறம் ஜாகீர்தாருக்கு மாமஞர் ஆயிட்டாரு. அதிலே ரொம்பக் குஷியாத்தான் இருந்தாரு' என்று நாகம்மா தனக்குத் தெரிந்ததைச் சொன்னுள்.

'ஒனக்குத் தெரியாதக்கா, கார்ப் பௌர்ணமிக்கு முன்னலே வீட்டுக்கு விலக்கான சிமஞ அப்புறம் முழுகவே இல்லே. கெழவனுக்கு அதுதான் மனவேதனே. 'தாதா காதுக்கு இந்தச் செய்தி எட்டிஞ, நாங்க ரெண்டு பேரும் மிஞ்சமுடியாது'ன்னு நம்ம வீட்லே உக்காந்து கண்ணீர் வடிச்சார் கெழவர். தாதாக்குத் தெரிஞ்சிடுச்சோ என்னமோ? அதஞலேதான் உசிரை விட்டிருப்

பாரு' என்று எல்லாம் தனக்குத் தெரிந்ததுபோல் நிம்பம்மா சொன்னாள். அது, 'விஷயத்தின் மர்மம் எல்லாம் தனக்குத் தெரியும்' என்று சொன்னதுபோல் இருந்தது.

''அதையெல்லாம் ஏண்டி நடுரோட்லே பேசறீங்க? ஒண்ணு கெடக்க ஒண்ணு ஆகப்போவுது. நிம்பம்மா! முந்தாநாள் பாபு சாஹேப் சாமியார்கிட்டெ குந்திக்கிட்டு, 'நாணு ஊரெல்லாம் பழிசொல்லிக்கிட்டுத் திரியாமெ தடுக்கறது எப்படி?'ன்னு யோசனை கேட்டுக்கிட்டிருந்தான். 'கெழவன் மூளை கெட்டவன் மாதிரி பேசிக்கிட்டிருந்தான்'னு என் காதிலும் விழுந்துதுன்னு சாமியார் சொன்னாராம். 'நேத்துக் கல்குண்டு போல இருந்த நாணு இன்னிக்கிப் பொழுது விடியறத்துக்குள்ளே போயிட்டான்'னு சொன்னா எங்கே பாபு சாஹேபும்......' என்று சொல்லி நிறுத்திய நாகம்மா, சாவைப்பற்றி ஒரு சந்தேகத்தைக் கிளப்பிவிட்டாள்.

''என்ன நடந்துதோ சிவனுக்கே வெளிச்சம்! நேத்துச் சாயங்காலம் கடைசீ வீட்டுத் திண்ணேலெ குந்திக்கிட்டுக் கெழவர் கயிறு திரிச்சிக்கிட்டிருந்தார். 'வயசாச்சு, மக சுட்ட சூடான ரொட்டியைத் தின்னுட்டு ஓய்வாக் குந்தியிருக்கக் கூடாதா, தாத்தா?'ன்னு நான் கேட்டேன். 'எனக்கு என்ன ஆயிட்டுது அம்மா! இன்னும் இடுப்பு வளையலே. ஒரு மூட்டை சோளத்தை அலாக்காத் தூக்கிப் போடுவேன்'னு சொன்னாரு. அப்படிச் சொன்ன மனுசன் வாயிலே பிடி மண்ணைப் போட்டுக்கிட்டுப் போயிட்டாரு''ன்னு சொல்லிப் பெருமூச்சு விட்டாள், நிங்கம்மா.

வாய்க்காலைத் தாண்டி ஆயிற்று. எல்லோரும் வேறு வேறு வழியில் பிரிந்து போனார்கள். ஊருக்குள் வந்துகொண்டிருந்த சிலர், வாய் பேசாமல் வந்துகொண்டிருந்தார்கள். ஊருக்கு நடுவில் இருக்கும் கோபாலகிருஷ்ணனின் கோயிலைத் தாண்டிப் போனபோது, மணியக்காரர், கர்ணம், அவர் கூட்டாளிகள், பாளாச்சார், பாபு சாஹேப் இப்படி ஊர்ப் பெரியவர்கள் எல்லாம் அங்கே காணப்பட்டார்கள். எல்லோர் முகத்திலும் சோகம் படிந்து கிடந்தது. நடையில் பரபரப்புக் காணப்பட்டது. பெரிய மனிதர்கள் இவ்வளவு பேர் கோயிலில் கூடியிருப்பதைக் கண்ட பெண்கள் எல்லோரும் தலைப்பை இழுத்துப் போர்த்துக் கொண்டு ஒவ்வொருவராகக் கோயிலைத் தாண்டிப் போனார்கள். நாணுவின் திடீர் மரணச்செய்தி ஊரையே ஒரு கலக்குக்கலக்கியது. ஊர்ப் பெரியவர்கள் தங்களை அறியாமலேயே அந்தச் சாவின் பொறுப்பை ஏற்றுக்கொண்டார்கள். சிமணுவின் அவமானமும்

நாணுவின் சாவும் தனிப்பட்டவர்களின் விவகாரமாக இருக்க வில்லை. இவை வெறும் துக்க நிகழ்ச்சியாக இருந்தால் நாலு வார்த்தை ஆறுதலாகச் சொல்லிச் சமாதானப்படுத்தலாம். ஆனால் இந்தத் துக்கத்தில் அக்கிரமத்தின் கறை படிந்திருந்தது. அக்கிரமமே இந்தத் துக்கங்களை இழுத்துக்கொண்டுவந்து பொது மக்களின் முன் ஒரு பெரும் பிரச்சினையாக நிறுத்தியிருந்தது. இதற்கு யார் ஜவாப்தாரி?

பாபு சாஹேப், ஜாகீர்தார் ஆகவோ தர்பார் நடத்தும் அரசனாகவோ தலை நிமிர்ந்து கர்வத்துடன் உட்கார்ந்திருக்க வில்லை. தலையில் தலைப்பாகை இல்லை. எப்பொழுதும் மடியிலேயே இருக்கும் சரிகை வேலைப்பாடு செய்த வெற்றிலைப் பை இல்லை. முகத்திலே சிரிப்பில்லை. யாராவது ஒருவர், அவனைக் குறிப்பிட்டுப் பேசினால் மட்டுமே வெகு சிரமத்துடன் பதில் சொன்னான். இல்லாவிட்டால் பிரமை பிடித்தவன்போல் பேசாமல் உட்கார்ந் திருந்தான். முகத்தில் குற்றவாளிக் களை சொட்டியது.

ஏற்கனவே பேசி முடித்தாகிவிட்டது. 'நாணுவின் உடலை ஆஸ்பத்திரிக்கு அனுப்பவேண்டும்' என்ற தீர்ப்பைப் பஞ்சாயத் தார் ஏற்றுக்கொண்டார்கள். 'நாணுவை விஷம் வைத்துத்தான் கொன்றிருப்பார்கள்' என்று மணியக்காரர் தீவிரமாக நம்பினார். இல்லாவிட்டால், 'எஃகுச் சிலைபோல் இருந்த நாணு இப்படித் திடீரென்று சாக முடியுமா?' அத்துடன், 'பாபு சாஹேப்தான் விஷம் வைத்திருக்கவேண்டும்' என்று மணியக்காரர் தெளிவாகக் குற்றம் சாட்டினார். இந்தக் குற்றத்தை, பாபு சாஹேப் ஒப்புக் கொண்டு, மாமூல்படி பஞ்சாயத்தாருக்கு அபராதப் பணம் கொடுக்கச் சம்மதிக்காதபடியால் நாணுவின் உடலை ஆஸ்பத் திரிக்கு அனுப்ப வேண்டியது கட்டாயம் ஆயிற்று.

மணியம் சங்கரப்ப கௌடரின் முகத்தில் பொறுப்புக் கோடுகள் (மடிப்புகள்) தெளிவாகத் தெரிந்தன. இந்த விஷயம் வழக்கம்போல் சாதாரணமானதாக இல்லை. சிலேதார் நாணு சின்ன மனிதனாக இருந்தாலும் அவனுடைய சாவு ஊர்ப் பிரமுகர் களை எல்லாம் சுற்றி வளைத்துக்கொண்டது. தவிர, இந்தச் சபையில் தாதாவோ அவனுடைய தகப்பன் லக்ஷ்மணனோ இருக்கவில்லை. தாதா, குஸ்திப் போட்டிக்காக ஜத்தி (ஓர் ஊர்)க் குப் போனவன், 'இன்னும் மூன்று நாட்களுக்கு அப்புறம்தான் திரும்புவான்' என்பது தெரியவந்தது. ஊரிலே மழை இல்லாது தீவனம் கிடைக்காதபடியால் லக்ஷ்மணன் தன்னுடைய பால் வற்றிய மாடுகளைச் சம்பந்திகளின் ஊராகிய தாசகாமில் விட்டு வரப் போயிருந்தான். இவர்கள் இருவருமே நாணுவின் நெருங்கிய

உறவினர்கள். இவர்கள் நாஞவின் சாவைப்பற்றிப் புகார் கொடுத்திருந்தால் மட்டுமே மணியக்காரர் நீதிபதியைப்போல் தீர்ப்புக் கொடுத்திருக்க முடியும். ஆனுலும் மணியக்கார கௌடருக்கு அதைப்பற்றிய கவலை இருந்தது. இந்தப் பின்னணி யில் யோசிக்க யோசிக்க மணியக்காரருக்கு வேறொரு நுட்பமான யோசனையும் தோன்றியது. 'இவர்கள் இருவரும் ஊரில் இல்லாத சமயம் பார்த்துத்தான் நாஞவுக்கு விஷம் இட்டிருக்கிருர்கள்' என்ற சந்தேகம் அவருக்குத் தோன்றியது. பிணத்தை ஆஸ்பத் திரிக்கு அனுப்ப இறந்தவரின் வாரிசுகள் யாராவது புகார் கொடுக்க வேண்டும். 'சிமஞவிடமிருந்து பிராது எழுதி வாங்கி விட வேண்டும்' என்ற யோசனையில் ஆழ்ந்தார் மணியக்காரர். இந்த யோசனைகளால் அவர் முகத்தில் குழப்பம் தெரிந்தது.

இது போன்ற பல விவகாரங்களில் புகழுடன் முடிவைச் சொன்ன கௌடருக்கு, சிமஞவைப் பிராது கொடுக்கச் சொல்லும் யுக்தி தோன்ற வெகுநேரம் ஆகவில்லை. வாயில் இருந்த தம்பலத்தைத் துப்பிவிட்டு, அஞ்சல் ஆளைப் பார்த்து, ''டே, தரியா! மாளிகைக்குப் போய்ச் சிமஞபாயைக் கையோடு கூட்டிவா; 'மணியக்காரர் கூப்பிட்டார்'னு சொல்லுடா'' என்று உத்தரவிட்டார். பிறகு பஞ்சாயத்தாரைப் பார்த்து, 'ஜாகீர்தார் கொலை செய்யாதிருந்தால் சிமஞதான் செய்திருக்க வேண்டும். அவளையே சாவடிக்கு அழைத்துவந்து கேட்டுத் தெரிந்து கொள்கிறேன். இந்த விவகாரத்தைத் துப்பறிந்து தீர்ப்புச் சொல்லாவிட்டால் மணியம் வேலையையே விட்டுவிடுகிறேன்' என்று மீசையை முறுக்கியவண்ணம் ஆர்ப்பரித்தார்.

''இதென்ன பேச்சுக் கௌடரே, மணியக்காரர் கைக்குள்ளே போலீஸ் அடங்கி இருக்குன்ஞ எப்படி வேண்டுமாஞலும் சந்தேகப்படலாமா? தகப்பனுக்குப் பெண் எங்கேயாவது விஷம் வைப்பது உண்டா? 'நாஞ மார்பு வலியால் இறந்தான்' என்று நான் பொய்யா சொல்கிறேன். பிணத்தை ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோய் என்ன செய்யப்போகிறீர்கள்?'' என்று பாபு சாஹேப் தர்க்கம் செய்தான்.

கணக்கப்பிள்ளை சேஷப்பா, ஒரு சிட்டிகை பொடியை மூக்கில் போடப் போனவன், நிறுத்திவிட்டுக் கையை நீட்டி, ''ஜாகீர்தார் சாஹேப், உங்களுக்கு இந்த ஊர்த் தண்ணிக் கோணம் தெரியாது. இந்த ஊரில் இது போன்ற சம்பவங்கள் எவ்வளவோ நடந்திருக்கின்றன. மகள் அப்பனைக் கொன்றதைப் பார்த்திருக்கிறேன். பெண்டாட்டி புருஷனைக் கொலை செய்ததைப் பார்த்திருக்கிறேன். இது மட்டும் அல்ல. சாக்ஷாத் அப்பனே பிள்ளையைக் கொன்றிருக்கிருன்! இந்த மண்ணின் குணம்

அப்படிப்பட்டது. 'சிமனு, வெறும் வெகுளிப்பெண்' என்று நீங்கள் நினைத்திருக்கலாம். ஆனால் நானுவின் கொலைக்கு 'அவள் தான் காரணம்' என்பது பஞ்சாயத்தாருக்கெல்லாம் தெரியும்'' என்று அடித்துப்பேசி முழங்கினார்.

பாபு சாஹேப், நம்பிக்கையை இழந்து தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டான். அப்பொழுது அஞ்சல் ஆள் தரியப்பா வந்து, 'சிமனு சாவடிக்கு வந்திருக்கிறாள்' என்பதை மணியக் காரரிடம் தெரிவித்தான். கௌடருக்கு அவசரம். சரிகை போட்ட சிவப்புத் தலைப்பாகையை வைத்த இடத்திலேயே மறந்து, வேட்டை அகப்பட்டதும் பாயும் புலிபோல், ஒரே பாய்ச்சலில் சாவடிக்கு ஓடினார். 'கௌடரே, கௌடரே! தலைப்பாவை விட்டுட்டீங்களே' என்று சேஷப்பா கத்தியதும் அவர் காதில் விழவில்லை. தரியப்பன், தலைப்பாவை எடுத்துக் கொண்டு இறைக்க இறைக்க ஓடி மணியக்காரரிடம் கொடுத் தான்.

கோயிலில் இருந்த மக்கள் எல்லோரும் பிரமை பிடித்தது போல் உட்கார்ந்திருந்தார்கள். யாருக்கும், 'என்ன செய்வது?' என்றே தோன்றவில்லை. ஆனால் அந்த மௌனமும் சகிக்கக்கூடிய தாக இல்லை. அப்பொழுது பாளாச்சார், அந்த நிலைமையின் பிகுவைத் தளர்த்த நினைத்து, '' 'இதோ பாருங்கள்! ஜாகீர்தார் சாஹேப், விவகாரத்தை வளர்க்கக்கூடாது' என்றுதான் மணியக்காரர் விஷயத்தை உங்களுக்கு நயமாகச் சொன்னார். உங்களுக்கு அது பிடிக்கவில்லை. பஞ்சாயத்தார் தெய்வத்துக்குச் சமமானவர்கள். அவர்கள் முன்னிலையில் குற்றத்தை ஒப்புக் கொள்ள ஒரு நாளும் வெட்கப்படக் கூடாது. மணியக்கார சங்கரப்ப கௌடர் முன்வைத்த காலை யாருக்காகவும் பின் வாங்கும் ஆசாமி அல்ல. பொழுது விடிந்தால் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொள்ளவேண்டியவர்கள், இப்படி முறைத்துக் கொண்டால் வாழ முடியாதையா!'' என்று சொன்னார். அவருடைய பேச்சில் நியாயத்தின் தீவிரம் இல்லை. நெகிழ்ந்த உள்ளத்தின் வேதனைதான் தெரிந்தது. நானு இறந்த துக்கத்தினால் துன்பம் அடைந்த அவருக்கு இந்தச் சிக்கல் நொந்த புண்ணில் வேல் பாய்ச்சியதுபோல் ஆயிற்று.

''ஆச்சார் சுவாமி, நான் செய்த உபகாரத்தை நீங்கள் எல்லோரும் இவ்வளவு சீக்கிரம் மறந்து விடுவீர்கள் என்று நான் நினைக்கவில்லை. 'ஊர்ச் சனங்கள் எல்லாம் சுகமாக இருக்க வேண்டும்' என்பதற்காக எத்தனை வகையில் உதவி செய்தேன் என்பது உங்களுக்குத் தெரியும். இவ்வளவுக்குப் பின்னும் என்

தலையில் பழியைப் போடுகிறீர்களே!'' என்று பாபு சாஹேப் பணிவோடு சொன்னான்.

''ஊருக்கு உபகாரம் செய்தீர்கள் என்றுதான் உங்களுடைய தாறுமாறான செயல்களை எல்லாம் பார்த்தும் பாராமல் இருந்தோம். இப்பொழுது உங்களைச் சார்ந்துள்ள குற்றம் சாமானியமானதன்று. 'இந்த விவகாரம் எல்லை மீறிப்போனால் மாளிகையின் பெயருக்கே களங்கம் வரும்' என்றுதான் இதை அப்படியே அடக்கிவிடும்படி மணியக்காரரிடம் சொன்னோம். அதைப்பற்றி யோசித்துப் 'பாவத்துக்குப் பிராயச்சித்தமாகப் பஞ்சாயத்தாருக்கு அபராதம் கொடுத்து முடித்துவிடலாம்' என்ற எங்கள் பேச்சுக்கு நீங்கள் மதிப்புக் கொடுக்கவில்லை. அதனால்தான் கௌடருக்குக் கோபம் வந்துவிட்டது'' என்று பாளாச்சார் அழுத்தமாகவே விவரித்தார்.

கர்ணம் சேஷப்பாவும் ஆச்சாரின் அபிப்பிராயத்தை ஆமோதித்தான். ''இங்கே பாருங்கள், நீங்கள் ஊர்ப் பிரமுகர். உங்கள் மானம் மரியாதையே ஊரின் மானம் மரியாதை ஆகும். எல்லாவற்றையும் உத்தேசித்துத்தான் 'விவகாரத்தை இங்கேயே முடித்துவிட வேண்டும்' என்று நாங்கள் திட்டம் போட்டோம். கௌடர், ஆச்சார், நான் எல்லோரும் இதுவரையில் அதே யோசனையில் இருந்தோம். மாளிகையின்மீதிருக்கும் அபிமானத்தால்தானே இவ்வளவும் செய்தோம். சட்டரீதியாகப் பார்த்தால் நாங்கள் செய்வது கொலையை மறைக்கும் குற்றந்தான். இருந்தாலும் உங்களுடைய கௌரவத்தைக் காப்பதற்காகப் பஞ்சாயத்தார் குற்றத்தைத் தங்கள்மேல் சுமத்திக்கொள்ள முயன்றார்கள். 'குற்றத்துக்கு அபராதம் கட்டித் தப்பித்துக்கொள்ளுங்கள் ஐயா!' என்று படித்துப் படித்துச் சொன்னோம். நீங்கள் கேட்கும் வழியாக இல்லை. இனிமேல் சட்டம் சொல்கிறபடி செய்கிறோம். எங்களுக்கு என்ன? சர்க்காரிடம் வேலை செய்கிறோம். கடமைக்கு இரக்கம் இல்லை, பாருங்கள். உடன்பிறந்த தம்பியே இது போன்ற குற்றம் செய்திருந்தாலும் அவன்மேலும் கேஸ் போட வேண்டி இருக்கும். வேறுவழி இல்லை'' என்று சேஷப்பா தன் பேச்சால் சுய நலத்தையும் பிறர் நலத்தையும் எடுத்துக் காட்டினான்.

'குற்றம் செய்திருந்தால் நீங்கள் சொல்வதை ஒப்புக் கொண்டிருப்பேன், கணக்குப்பிள்ளை! ஆனால், நானா மாமா மார்வலியால்தான் இறந்துவிட்டார். நானே அவரைக் கொலை செய்துவிட்டதாக நினைத்து என்மேல் பாய்ந்தால் நான் என்ன செய்ய முடியும்?' என்று பாபு சாஹேப் தலை நிமிராமலேயே பதில் சொன்னான்.

சொல்லிக் கைத்தடியால் சேஷப்பாவின் முதுகில் தட்டினார். 'இனிமேல் பணம் கைக்கு வருவது நிச்சயம்' என்ற சங்கேதத்தைக் காட்டியது அது.

கௌடர் வந்தவுடன் எல்லோரையும் ஒரு முறை பார்த்து விட்டுத் தம் இடத்தில் உட்கார்ந்தார். ''இதோ சிமனா பிராது கொடுத்திருக்கிறாள். 'தன் தகப்பனாருக்கு யாரோ விஷம் வைத்து விட்டதாகச் சந்தேகிக்கிறேன்' என்று சொல்லிக் கைநாட்டு வைத்திருக்கிறாள். 'யார்மேல் உனக்குச் சந்தேகம்?' என்று கேட்டேன். 'அதைப் போலீஸார் முன்புதான் சொல்வேன்' என்கிறாள். இப்பொழுது முறைப்படி தீர்ப்புச் செய்ய வேண்டும். அதற்காகப் பஞ்சாயத்தார் எல்லோரும் சாவடிக்கு வர வேண்டும்'' என்று பெருமிதத்தோடு சொன்னார்.

பாபு சாஹேபுக்கு உடம்பெல்லாம் வியர்த்தது. ஜுரம் வந்தவன்போல் உடம்பு நடுங்கியது. உட்கார்ந்த இடத்தில் இருப்புக்கொள்ளவில்லை. பாளாச்சாரின் காலில் விழுந்து, 'ஆச்சார் சுவாமி, என் மானத்தை வாங்காதீர்கள். இந்த விவகாரத்தை இத்துடன் முடித்துவிடுங்கள். நீங்கள் விதிக்கும் அபராதத்தைக் கொடுக்கத் தயாராக இருக்கிறேன்' என்று இரக்கம் தோன்றக் கேட்டுக்கொண்டான்.

'அதெல்லாம் நடக்காது. பிராது கைக்கு வந்துவிட்டபின் விசாரணை நடந்தே தீரவேண்டும். பிணம் ஆஸ்பத்திரிக்குப் போகாவிட்டால் பிராதைக் கிழித்துப் போட்டுவிட்டு நான் ஜெயிலுக்குப் போகவேண்டியிருக்கும். இப்போது யார் என்ன சொன்னாலும் நான் கேட்கப்போவதில்லை' என்று கர்ஜித்த வண்ணம் மணியக்காரர், கோயிலில் குறுக்கும் நெடுக்குமாக நடைபோட்டார்.

பாளாச்சார் தலையிட்டுச் சமாதானம் செய்யவேண்டி யிருந்தது 'கௌடரே, சிறிது உட்கார்ந்து ஆசுவாசப் படுத்திக்கொள்ளுங்கள். இதில் ஊரின் கௌரவமே அடங்கி யிருக்கிறது. ஜாகீர்தார், ஊருக்கு ராஜா போன்றவர். அவர் கௌரவத்துக்குக் கேடு வந்தால் அது ஊருக்கே வந்ததுதான். அதனால்தான் விவகாரத்தை இத்துடன் முடிப்பதே நல்லது என் கிறேன். பாபு சாஹேப், முன்பே சொல்லவில்லையா? ஆயிரம் ரூபாய் கொண்டுவந்து மணியக்காரரிடம் கொடுங்கள்' என்று சமாதானப்படுத்த முயன்றார்.

'ஆச்சாரய்யா, நீங்க சொன்னது பஞ்சாயத்தாருக்குச் செலுத்தும் அபராதப் பணம். இப்பொழுது பிராது கைக்கு

சொல்லிக் கைத்தடியால் சேஷப்பாவின் முதுகில் தட்டினார். 'இனிமேல் பணம் கைக்கு வருவது நிச்சயம்' என்ற சங்கேதத்தைக் காட்டியது அது.

கௌடர் வந்தவுடன் எல்லோரையும் ஒரு முறை பார்த்து விட்டுத் தம் இடத்தில் உட்கார்ந்தார். ''இதோ சிமனு பிராது கொடுத்திருக்கிறாள். 'தன் தகப்பனாருக்கு யாரோ விஷம் வைத்து விட்டதாகச் சந்தேகிக்கிறேன்' என்று சொல்லிக் கைநாட்டு வைத்திருக்கிறாள். 'யார்மேல் உனக்குச் சந்தேகம்?' என்று கேட்டேன். 'அதைப் போலீஸார் முன்புதான் சொல்வேன்' என்கிறாள். இப்பொழுது முறைப்படி தீர்ப்புச் செய்ய வேண்டும். அதற்காகப் பஞ்சாயத்தார் எல்லோரும் சாவடிக்கு வர வேண்டும்'' என்று பெருமிதத்தோடு சொன்னார்.

பாபு சாஹேபுக்கு உடம்பெல்லாம் வியர்த்தது. ஜுரம் வந்தவன்போல் உடம்பு நடுங்கியது. உட்கார்ந்த இடத்தில் இருப்புக்கொள்ளவில்லை. பாளாச்சாரின் காலில் விழுந்து, 'ஆச்சார் சுவாமி, என் மானத்தை வாங்காதீர்கள். இந்த விவகாரத்தை இத்துடன் முடித்துவிடுங்கள். நீங்கள் விதிக்கும் அபராதத்தைக் கொடுக்கத் தயாராக இருக்கிறேன்' என்று இரக்கம் தோன்றக் கேட்டுக்கொண்டான்.

'அதெல்லாம் நடக்காது. பிராது கைக்கு வந்துவிட்டபின் விசாரணை நடந்தே தீரவேண்டும். பிணம் ஆஸ்பத்திரிக்குப் போகாவிட்டால் பிராதைக் கிழித்துப் போட்டுவிட்டு நான் ஜெயிலுக்குப் போகவேண்டியிருக்கும். இப்போது யார் என்ன சொன்னாலும் நான் கேட்கப்போவதில்லை' என்று கர்ஜித்த வண்ணம் மணியக்காரர், கோபாவில குறுக்கும் நெடுக்குமாக நடைபோட்டார்.

பாளாச்சார் தலையிட்டுச் சமாதானம் செய்யவேண்டியிருந்தது. 'கௌடரே, சிறிது உட்கார்ந்து ஆசுவாசப் படுத்திக்கொள்ளுங்கள். இதில் ஊரின் கௌரவமே அடங்கியிருக்கிறது. ஜாகீர்தார், ஊருக்கு ராஜா போன்றவர். அவர் கௌரவத்துக்குக் கேடு வந்தால் அது ஊருக்கே வந்ததுதான். அதனால்தான் விவகாரத்தை இத்துடன் முடிப்பதே நல்லது என்கிறேன். பாபு சாஹேப், முன்பே சொல்லவில்லையா? ஆயிரம் ரூபாய் கொண்டுவந்து மணியக்காரரிடம் கொடுங்கள்' என்று சமாதானப்படுத்த முயன்றார்.

'ஆச்சாரய்யா, நீங்க சொன்னது பஞ்சாயத்தாருக்குச் செலுத்தும் அபராதப் பணம். இப்பொழுது பிராது கைக்கு

கி—3

வந்துவிட்டது. அதைக் கிழிச்சுப் போட்டுட்டுப் பிணத்தைப் புதைக்க அனுமதி கொடுத்தால் நான் போலீசாருக்குத் தண்டம் கொடுக்க வேண்டுமே! அதற்காக ஓர் ஆயிரம் கொடுக்கச் சொல்லுங்கள். அப்படீன்னு ஏதாவது செய்யறத்துக்கு எனக்குத் தைரியம் வரும். பெரியவராக இருந்துகொண்டு என்னை வம்பில் மாட்டிவிடாதீர்கள்' என்றார் கௌடர்.

அவர் குரலில் வெற்றியின் உத்ஸாகம் தொனித்தது.

'ஆகட்டும், அப்படியே ஆகட்டும். ஜாகீர்தார், முதலிலேயே நம்ம யோசனைக்கு ஒப்புக்கொண்டிருந்தால் விஷயம் இவ்வளவு தூரத்துக்கு வந்திருக்காது. போங்கள், பாபு சாஹேப்! கௌடருக்குத் தனியாக ஐந்நூறு கொடுத்துவிடுங்கள்' என்று பாளாச்சார் கௌடருக்கு ஒத்துப் பேசினார்.

வேறு வழியில்லாமல் பாபு சாஹேப் பணத்துக்கு ஏற்பாடு செய்யப் புறப்பட்டுப் போனான்.

'என்ன, ஆச்சார்! கௌடருக்குத் தனியாகக் கொடுக்கச் சொல்லிவிட்டீர்கள். கர்ணத்துக்குக் கிடைப்பது கொட்டாங்கச்சியா?' என்று சேஷப்பா சாடினான்.

'சரி, விடப்பா. அதில் பாதி உனக்கும் கொடுக்கச் சொல்கிறேன். சரிதானே?' என்றார் பாளாச்சார், சலிப்புடன்.

'நல்ல நியாயம் இது ஆச்சார்! கௌடருக்கு எவ்வளவு வருகிறதோ அவ்வளவு நமக்கும் வருவது மாமூல். வழக்கத்தை மாற்றுகிறீர்கள். நீங்கள் சொல்வது புது வழியாக இருக்கிறதே!' என்று சேஷப்பா சண்டை போட்டான்.

'சேஷப்பா, இங்கே ஒன்றும் அநியாயம் நடக்கவில்லை. ஆயிரம் ரூபாயில் மணியக்காரருக்கு ஐந்நூறு; அதில் பாதி உனக்கு. மீதி இருநூற்றைம்பது பஞ்சாயத்தாருக்கு என்று பங்கிடவேண்டி இருக்கிறது. இது தலைமுறை தலைமுறையாக வந்த வழக்கம். இதில் என்ன தவறு? போலீஸாருக்குக் கொடுப்பதற்காகக் கௌடருக்கு ஐநூறு ரூபாய் அதிகமாகக் கொடுப்பது நியாயம். உனக்குத் தனியாக இருநூற்றைம்பது ரூபாய் கொடுக்கச் சொன்னால் மணியக்காரருக்குக் கொடுத்ததுபோலவே ஆகிறதல்லவா!' என்று பாளாச்சார் புத்தி சொன்னார்.

அதற்குள் அநுமந்தாச்சார், 'அப்படி இல்லை, பாளு! மொத்தப் பணத்தில் மணியக்காரருக்குப் பாதி, அதில் பாதி கணக்குப்பிள்ளைக்கு. மீந்ததில் பத்தில் ஒரு பங்கு நம்மில் ஒவ்வொருவருக்கும் கிடைக்கவேண்டும். நீ இருபத்தைந்து வீதம் முடித்துவிட்டாயே' என்று பொக்கை வாயால் குறை கூறினார்.

'அநுமு சித்தப்பா, நானும் நீங்களும் வைதிகப் பிராம் மணர்கள். இந்த மாதிரி விஷயங்களில் தலையிட்டுப் பேசவே கூடாது. லஞ்சம் என்ற விவகாரமே நமக்கு ஆகாது. அது மணியக்காரருக்கும் கணக்குப்பிள்ளைக்கும் நடைமுறையில் வந்த உரிமை. நீங்கள் மேலே தகராறு செய்தால் என் பங்கை விட்டு விடுகிறேன்' என்ருர் பாளாச்சார்.

அநுமந்தாச்சாருக்குக் கோபம் வந்துவிட்டது. 'நீ ஒரு முட்டாள் பயல்! இதிலே உரிமையைப்பற்றிய கேள்வி எங்கே வருகிறது? இது பகல் கொள்ளை! ஜாகீர்தார், வழிப்பறி செய்து வந்த பணம் இது. அதனல் வேறு யார் மடியையோ நீ நிரப்பப் பார்க்கிருய்' என்று அவர் முணுமுணுத்தார்.

'நமது இந்தச் சண்டையில் பாபுசாஹேப் அடங்கிவிட்டான். என்ன வேண்டுமானலும் செய்துகொள்ளுங்கள். நான் இந்த விவகாரத்தில் தலையிடப் போவதில்லை. கௌடரே, வாங்க வேண்டியதை வாங்கிக்கொண்டு விவகாரத்தை முடித்துவிடுங்கள். சேஷு, நீ இன்னும் ஏதாவது அதிகப்பிரசங்கித்தனம் செய்து ஊரின் கௌரவத்தைக் குறைக்காதே! அநுமு சித்தப்பா! அப்பவே ஆத்துக்கு ஸ்நானத்துக்குப் புறப்பட்டயே' என்று சொன்ன பாளாச்சார் பொடியை உறிஞ்சியவண்ணம் எழுந் திருந்தார். அவர் குரலில் என்றும் இல்லாத ஏமாற்றம் தொனித்தது. முன்பு, பல விவகாரங்களில் அவரும் லஞ்சம் வாங்கியவர்தான். இன்று ஏனே அவருக்கு அலுப்புத் தட்டியது. எப்பொழுதுமே எடுத்ததைச் சாதிக்கும் மனம் உள்ளவர். அந்தக் காலத்தில் லௌகீகத்திலும் அதே பிடிவாதத்துடன் தம் கருத்தைச் சாதித்துக்கொண்டவர். தம் தனித்தன்மையின் பெருமையால் மணியம், கர்ணம் எல்லோரையும் தம் இஷ்டப்படி ஆட்டிவைத்தவர். ஆனல் இன்றைய விவகாரத்தில் ஏதோ ஓர் அம்சம் அவருக்கு வெறுப்பை ஊட்டியது. தாம் செய்வ தெல்லாம் 'அக்கிரமம்' என்று பட்டது. மனமும் திடீரென்று விரக்தி அடைந்தது. 'ஒருதரம் முகத்தைத் திருப்பிக்கொண்டால் போதும்; மறுபடி அந்தப் பக்கம் திரும்பிப் பார்க்கக்கூடாது' என்ற உறுதி அவருக்கு இருந்தது. நாணு இறந்ததால் ஏற்பட்ட துக்கமும் அதற்குக் காரணமாக இருக்கலாம்.

மத்தியான்னம் ஆகிவிட்டாலும் பனிக்காலத்து வெயில், நிலவைப்போல் காய்ந்தது. வடக்கிலிருந்து வீசிய காற்றுல் உடம்பு நடுங்கியது. இன்னும் வெயில் உறைக்கவேண்டும் போல் இருந்தது. 'ஆற்றங்கரையில் திகுதிகுவென்று எரிந்து கொண்டிருந்த நாணுவின் சிதை அனல் இந்தக் குளிருக்கு இதமாக இருந்தது' என்று தோன்றினல் ஆச்சரியம் இல்லை.

# 4

நாணுவின் பிணம் ஆற்றங்கரையில் எரிந்து எப்பொழுதோ சாம்பல் ஆகிவிட்டது. ஊர்ப் பெரியவர்கள் யோசனைப்படி மரண ரிஜிஸ்தரில், 'நாணு மார்வலியால் இறந்தான்' என்று ஷரா எழுதி, சர்க்கார் அதிகாரிகளின் பார்வை இந்த விவகாரத்தின் மேல் விழாமல் திரையிட்டுவிட்டார் கௌடர். 'விவகாரம் முடிந்துவிட்டது' என்று பஞ்சாயத்தார் நினைத்தார்கள். பாபு சாஹேபும் அப்படியே நினைத்து ஆயிரத்து ஐநூறு ரூபாய்களை மணியக்காரருக்குக் கொடுத்தான்.

பாதள்ளிப் பெரியவர்கள், இதற்கு முன்னால் இதுபோன்ற பல துர்மரணங்களை விசாரணை இல்லாமல் மறைத்து வெற்றி கண்டிருந்தார்கள். 'அவற்றில் எல்லாம் இல்லாத ஒரு பெரிய பிரச்சினை, ரகசியத்தை அம்பலத்துக்குக் கொண்டுவருமோ?' என்ற பயத்துக்குக் காரணமாக இருந்தது. பாபு சாஹேப் கொடுத்த பணத்தில் 'கௌடருக்கு ஆயிரம், கர்ணத்துக்கு இரு நூற்றைம்பது' என்று பங்கு பிரிந்ததால் சேஷப்பா ஆத்திரம் அடைந்தான். 'கௌடர் சாப்பிட்ட பணத்தை எப்படிக் கக்க வைப்பது?' என்ற யோசனையிலேயே அவன் ஆழ்ந்திருந்தான். தனக்கு வரவேண்டிய பணத்தைத் தர பாளாச்சாரிடம் அவன் கடைசிமட்டும் முயன்று பார்த்தான். ஆனால் அது பலிக்கவில்லை. ஆச்சாருக்கு இந்த விவகாரமே எரிச்சலைக் கொடுத்தது அதிலும் சேஷப்பாவினுடைய பணப் பேராசையையும் பிடிவாதத்தையும் பார்க்கப் பார்க்க அவர் மனம் கல்லாக மாறியது.

சேஷப்பாவின் மனம் இப்போது பாபு சாஹேப்பின் பக்கம் திரும்பியது. அவமானத்தால் வெதும்பிய அவன் உள்ளம் பழி வாங்குவதில் முனைந்தது. சேஷப்பா அதனால் லாபம் அடையாமல் போகவில்லை. ஆனால் 'தன்னை அவமதித்ததற்காக வஞ்சம் தீர்த்துக்கொள்ளவே வேண்டும்' என்று உறுதி கொண்டான். இருவருமாக யோசித்தார்கள். பாபு சாஹேபுக்கு வழி ஒன்றும் தெரியவில்லை. வெகுநேரத்துக்குப்பின் இருவரும் ஒரு முடிவுக்கு வந்தார்கள். மழை இல்லாமையால் ஜனங்கள் படும் அவஸ்தையை உபயோகித்துக்கொண்டு 'கௌடரிடம் தானியம் கேட்கும்படி ஜனங்களைத் தூண்டிவிட வேண்டும்; அல்லது கௌடர், பாபு சாஹேபிடமிருந்து பெற்ற பணத்தைப் பஞ்ச நிவாரணத்துக்காகக் கொடுக்க வேண்டும்' என்பதுதான் இந்த யோசனை.

பாபு சாஹேப், சேஷப்பாவின் தந்திரத்தை மெச்சினன். அதே சமயத்தில் ஊரைவிட்டுப் போயிருந்த சாமியார் படதையாவும் திரும்பி வந்தார். இந்தத் தந்திரத்துக்கு அவரும் தூபம் போட்டார். கௌடர் ஒப்புக்கொள்ளாவிட்டால் மக்களைக் கொண்டு புரட்சி செய்யவேண்டும். குழியைத் திறந்து தானியம் கொடுக்கும்படி கௌடரை நிர்ப்பந்திக்கவேண்டும். மூன்று பேரும் யோசித்து இதே முடிவுக்கு வந்தார்கள்.

இரவு மடத்தில் சபை கூடியது. சாமியாரின் தலைமையில் விவசாயிகளெல்லாம் வந்து கூடியிருந்தார்கள். 'தானியத்தை வைத்திருக்கும் குடியானவர்களின் குழிகளைத் திறந்து பட்டினி கிடக்கும் மக்களுக்குத் தானியத்தைப் பங்கிடும்படி பஞ்சாயத்தாரை நெருக்க வேண்டும்' என்று பாபு சாஹேப் சொன்னன். படதையாவும் இதை மனமார ஆமோதித்தார் ஜனங்களுக்குத் தலை சுற்றியதுபோல் ஆயிற்று.

அமாவாசைக்கு மறுநாள் மணியக்காரர் படுக்கையிலிருந்து எழுவதற்கு முன்பே ஏழை மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து அவர் வீட்டு வாசலில் நின்முர்கள். கௌடர் வெளியே வந்து பார்த்தார். அவர்களுடைய நிலைமை உண்மையிலேயே பரிதாபகரமாக இருந்தது. கூட்டத்தின் முன்வரிசையில் இருந்த ஒருவன், "ஐயா, நேற்று ஊரில் பிணத்தை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தபோது 'நாங்கள் வந்து தொந்தரவு பண்ணக்கூடாது' என்று இருந்தோம். அமாவாசையாவது அமாவாசை! வாயில் ஒரு ரொட்டித் துண்டுகூடப் போடவில்லை. தானியம் கொடுத்தே தீரவேண்டும்'' என்று அடம்பிடித்தான். அந்த முறையீடு முரட்டுத்தனம், குரோதம் இவற்றின் பின்னணியில் கல்நெஞ்சையும் கரையவைக்கும் பரிதாபம் ததும்பி வழிந்தது.

கௌடர் ஆறுதல் சொன்னர்; பாதள்ளியின் துன்பம் அவர் மனத்தைக் கலக்கியது. நடுப்பகலுக்குமுன் தானியம் கொடுக்க ஏற்பாடு செய்வதாக உறுதி கொடுத்து எல்லோரையும் வீட்டுக்கு அனுப்பினர்.

ஜனங்கள் எல்லோரும் வீட்டுக்குப் போனபின் மணியக்காரர் பஞ்சாயத்துச் சபையாரைத் தம் வீட்டுக்கே வரவழைத்துச் சபை கூட்டினர். கூடம்கொள்ளாமல் ஜனங்கள் நிறைந்திருந்தனர். ஊர்ப் பிரமுகர்களுக்கு என்று விரித்திருந்த கம்பளத்தில் பாளாச்சார், அநுமந்தாச்சார், சேஷப்பா ஆகியோருடன் கௌடரும் உட்கார்ந்திருந்தார். பாபு சாஹேப்புக்குச் சொல்லி அனுப்பியும் அவன் வரவில்லை.

ஏழைகளுக்குத் தானியம் கொடுப்பது பற்றிய பிரச்சினை எழுந்தது. பிரமுகர்களுக்கு இடையே மனஸ்தாபத்துடனே சபை கலைந்தது. கேள்விக்கு, தலைக்கு ஒருவிதமான பதில் சொன்னார்களே ஒழியப் பலன் ஒன்றும் ஏற்படவில்லை. ''ஜாகீர்தாரிடமிருந்து 'போலீசாருக்கு' என்று வாங்கிய ரொக்கத்தைக் கௌடர் இப்பொழுது செலவழித்தே ஆகவேண்டும். கொலையைப்பற்றி விசாரிக்க இனிமேல் யாரும் வரப்போவதில்லை என்றபின் கௌடரிடம் அந்தப் பணம் ஏன் இருக்கவேண்டும்?'' என்று சேஷப்பா காரசாரமாகத் தர்க்கம் செய்தான்.

கௌடர் அதற்கு ஒரே வார்த்தையில் பதில் சொன்னார்: 'அந்தப் பணத்தைப்பற்றிய பேச்சை எடுக்காதீர்கள். அமல்தார் (சப்-இன்ஸ்பெக்டர்) வந்து கேட்கும்போது அவனுக்குக் கொடுப்பதற்காக ஒதுக்கிவைத்த பணம் அது' என்று கௌடர் கண்டிப்பாகவே சொன்னார்.

'பஞ்சாயத்தாரின் பேச்சுக்குக் கௌரவம் கொடுத்து, மணியக்காரர் எவ்வளவு பெரிய பொறுப்பை ஏற்றுக் கொண்டார்! அந்தப் பணத்துக்குத் தேவை வரும்போதுதான் அதை உபயோகிக்கவேண்டும்' என்று பாளாச்சார் கௌடருக்குப் பக்கபலமாகவே பேசினார்.

சேஷப்பா கொதித்தெழுந்தான். 'சரிதான், ஆச்சார்! உங்கள் பேச்சைக்கேட்டு நான் சும்மா இருந்தேன். எனக்குத் தனியாகப் பணம் வாங்கிக் கொடுப்பதாகச் சொன்னீர்களா இல்லையா? அது வெறும் பேச்சுத்தானா?' என்று கேட்டுவிட்டான்.

''இதோ பார் சேஷப்பா, ஊர் விவகாரத்தில் இப்படியெல்லாம் முறைதவறிப் பேசினால் காரியம் நடக்காது. நான் 'பணம் வாங்கித்தருகிறேன்' என்று சொன்னபோது, பாபு சாஹேப் அங்கே இருக்கவில்லை. இப்பொழுது 'அதெல்லாம் தனக்குத் தெரியாது' என்று சொல்லுகிறான். நான் 'கையை விட்டுக் கொடுக்கவேண்டும்' என்கிறாயா?'' என்று பாளாச்சார் உள்ள நிலைமையை விளக்கவேண்டியதாயிற்று.

'விவகாரத்தை நிர்வகிக்கும் யோக்கியதை இல்லாதவர்கள் நடுவில் தலையிட்டுப் பேசியிருக்கக் கூடாது' என்று சேஷப்பா கடுகடுத்தான்.

நிலைமை அத்துமீறிப் போகாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது கௌடரின் பொறுப்பாயிற்று. அவர் பேச்சைக் கேட்பதால் என்ன லாபம்? 'ஆச்சாரய்யா! ஏழை மக்களின்

வயிற்றுக்குத் தானியம் கொடுக்க வழி சொல்லுங்கள்' என்று சொல்லிப் பேச்சை நல்ல வழியில் திருப்ப முயன்றார் கௌடர்.

''அவர் சொல்வது தெரிந்தே இருக்கிறது. 'ஊரில் யார் யாருக்குத் தானியக் குழி இருக்கிறது என்பதற்கு ஒரு லிஸ்ட் எடுங்கள்; பிறகு அவற்றைத் திறந்து தானியத்தைப் பங்கிடுங்கள்' என்று சொல்லிக் கழன்றுகொண்டுவிடுவார் 'ஊரைச் சுட்டாலும் ஹநுமார் வெளியேதானே!''' சேஷப்பாவின் கோழைத்தனம் கோபத்தை அடக்க முடியாமல் இந்தமாதிரிப் பேச வைத்தது.

பாளாச்சார் ஒன்றும் பதில் சொல்லவில்லை. ஆனால் 'தானியக் குழிகளைத் திறந்துவிட்டு இல்லாதவர்களுக்குக் கொடுப்பதைத் தவிர வேறு வழி இல்லை' என்று அவருக்காகக் கௌடரே பதில் சொல்லிவிட்டார்.

இத்தனை நேரம் வரையிலும் பேசாமல் உட்கார்ந்திருந்த அநுமந்தாச்சாருக்கு என்ன ஆவேசம் வந்ததோ தெரியவில்லை. தம் பொக்கை வாயைத் திறந்து, 'என்ன ஐயா, ஊரைக் காப்பாத்தறத்துக்கு நீங்கள் தெய்வம் என்று நினைத்துக்கொண்டிருக்கிறீர்களா? ஏழைகளிடம் இரக்கம் இருந்தால் இருக்கட்டும். பாபு சாஹேபிடம் வாங்கிய ரொக்கத்தை வீசி எறியுங்கள். ஏழைகளுக்குத் தானியத்தைக் கொடுங்கள்' என்று சொன்னார்.

இந்தப் பேச்சு, சேஷப்பாவுக்குப் பக்கபலம் ஆயிற்று. அவன் ஓரேயடியாகச் சிரிக்கத் தொடங்கினான். 'என் பங்குக்கு வந்த இருநூற்றைம்பது ரூபாயையும் நான் கொடுத்துவிடுகிறேன்; சரிதானே!' என்று அட்டகாசம் செய்தான். கௌடரின் கோபம் எல்லை மீறியது. 'வரவேண்டியது வேண்டாதது எல்லாத்தையும் கொடுத்து உபகாரம் செய்வதுபோல் வேஷம் போட்டால் ஒன்றும் நடக்காது. நேற்றுக் கலகலவென்று எண்ணி வாங்கிக் கொண்ட பணம் முழுவதையும் வீசி எறியுங்கள். என் பங்குக்கு வந்த ஐந்நூறு ரூபாயை நானும் வீசிவிடுகிறேன்' என்றார்.

பாளாச்சார், 'நீங்கள் கொடுத்தபின் மற்றவர்கள் மட்டும் ஏன் வைத்துக்கொள்ள வேண்டும்? அவர்களும் கொடுத்து விடட்டும். அநுமு சித்தப்பா, உன் பங்கான இருபத்தைந்து ரூபாயையும் கொடுத்துவிடு' என்றார்.

அநுமந்தாச்சார் இப்போதுதான் விழித்துக்கொண்டார். 'சீ, அதெப்படி முடியும்? ஏழைகளுக்காகப் பணம் கொடுக்கும் பேச்சு நடந்துகொண்டிருக்கிறது. அப்படியென்ன நான் பணக்

காரனா? ஏழைப் பிராம்மணன். கையில் வந்ததெல்லாம் செலவாகிவிடுகிறது. வேணுமானால் ஏழைகளுக்காகக் கொடுக்கும் தானியத்தில் எனக்குப் பங்கு வேண்டாம். சரிதானே?' என்றார். இந்தப் பேச்சில் பைத்தியக்காரத்தனம், கெட்டிக்காரத்தனம், கையாலாகாத்தனம் எல்லாம் தொனித்தன. கௌடர் வெற்றி கண்டவராய் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருந்தார். கடைசியில் ஒரு முடிவும் வரவில்லை. கௌடர், அமல்தாருக்கென்று வைத்துக்கொண்டிருந்த பணத்தின்மேலேயேதான் சேஷப்பாவுக்குக் கண். 'என்னதான் வந்தாலும் அந்தப் பணத்தைத் திருப்பிக் கொடுப்பதில்லை' என்பது கௌடரின் பிடிவாதம். எல்லோரும் தம்தம் பங்கைக் கொடுத்துவிட்டால் 'தாமும் தம் பங்கைக் கொடுத்துவிடுவது' என்று கௌடர் நினைத்தார். ஆனால் 'அதிகாரிகளுக்கு லஞ்சம் கொடுக்கவேண்டும்' என்ற பெயரில தம் பங்கையே மறைத்துவிட்டார் அல்லவா?' என்பது சேஷப்பாவின் வாதம். வரவரப் பேச்சுக் கடுமை ஆயிற்று. தனித்தனியாக ஒவ்வொருவரும் மற்றவர்மேல் குற்றம் சாட்டினார்கள். இதற்கு முன் நடந்த பல அக்கிரமச் செயல்களைப் பற்றி மறுபடியும் சர்ச்சை நடந்தது. எடுத்துக்கொண்ட பிரச்சினையையே எல்லோரும் மறந்துவிட்டார்கள். அதைப் பாளாச்சார்தான் நினைவூட்டினார்.

'ஊரில் ஒற்றுமை இருந்தபொழுது, தானியக் குழிகளைத் திறந்து எல்லோருக்கும் கொடுப்பது சாத்தியமாக இருந்தது. இப்பொழுது, ஜனங்கள் சம்மதித்தால் எடுத்துக் கொடுங்கள். சட்டவிரோதமான முறையில் குழியைத் திறக்கும் தைரியம் எனக்கு இல்லை. அதற்குத் தைரியம் உள்ளவர்கள் வேண்டுமானால் முன் வரட்டும்' என்று சொல்லிச் சேஷப்பா கௌடரை ஒரு பார்வை பார்த்தான்.

'எனக்கு மட்டும் சட்ட விரோதமான வேலையைச் செய்வது வேண்டியிருக்குமா? வயிற்றுக்குக் கஞ்சி இல்லாத ஜனங்கள் தானியத்தைக் கொள்ளையடித்தால் அதை விசாரித்துத் தீர்ப்புச் சொல்வதுதான் நமது கடமை' என்று கௌடர் சேஷப்பாவுக்குப் பதில் சொல்லிவிட்டு அலட்சியமாக இருந்தார்.

அதற்குமேல் பேசுவதற்கு யாரும் தயாராக இல்லை. தனித் தனியே ஒருவரைக் கண்டு ஒருவர் பயப்பட்டார்கள். குழியைத் திறந்து தானியத்தைப் பங்கிட்டால் 'சேஷப்பா மொட்டை விண்ணப்பம் எழுதித் தன்னை ஜெயிலுக்கு அனுப்பிவிடுவான்' என்று கௌடருக்குப் பயம். சேஷப்பாவுக்கோ ஊர் ஜனங்கள் மேல் இரக்கம் இல்லை. 'எந்த விவகாரம் வந்தாலும் அதிலே

தனக்கு எவ்வளவு லாபம் வரும்?' என்று கணக்குப் போடுவதே அவனுடைய சுபாவம். இவர்களை விட்டால் மற்றவர்கள் பேச்சுக்கு அவ்வளவு மதிப்பில்லை. 'ஏதாவது யோசனை சொன்னால் தங்களுக்கே வம்பு வருமோ?' என்பது அவர்கள் பயம். பாளாச் சாராலும் நிலைமையைச் சரிக்கட்ட முடியவில்லை.

சேஷப்பா, கௌடர் இருவருடைய பேச்சிலும் சூடேறத் தொடங்கியவுடனே மற்றவர்களுக்கு, 'இந்தப் பேச்சுப் போதும்' என்று தோன்றியது. 'சபை கூட்டியதால் ஏழைகளுக்கு எந்த விதத்திலும் லாபம் கிடைக்கப்போவதில்லை' என்பது தெளிவாகத் தெரிந்தது. பேசப் பேச சபை கூட்டியதன் நோக்கமே விபரீதமாகப் போய்விட்டது. தனிப்பட்ட துவேஷம், சுயநலம், பணப் பேராசை என்ற வியூகத்துக்குள் அது அடங்கிவிட்டது. 'பெரியவர்கள், தங்களுக்குத் தோன்றியபடி செய்யட்டும்' என்று மற்றவர்கள் ஒதுங்கிக்கொண்டார்கள்.

எவ்வளவு நேரம் தான் பேசாமல் உட்கார்ந்திருக்க முடியும்? சபையில் சூடேறியிருந்ததால் யாருக்குமே எழுந்திருக்கக்கூடத் தைரியம் வரவில்லை. 'சபை முடிந்தது' என்று கௌடரே சொல்லவேண்டியதாயிற்று. பஞ்சாயத்துச் சபை உட்கலகத்தால் ஒரு தீர்ப்புக்கும வராமல் முடிந்துவிட்டது.

அன்றிரவு சங்கரப்ப கௌடருக்குத் தூக்கமே வரவில்லை. தம் சுயநலம் காரணமாகப் பாதள்ளியே பட்டினி கிடக்கும்படி ஆயிற்றல்லவா? காலையில் வயிற்றுக்கு இல்லாமல் தானியம் கேட்கவந்த ஏழைகளின் இரங்கத்தக்க தோற்றம் இன்னும் அவர் கண் முன்னேயே நின்றது. 'மணியக்காரர்' என்று ஊரைக் காக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்ட அவரைத் தவிர வேறு யாரிடம் கேட்பார்கள்? கௌரவம் என்பது குறுக்கே நின்றது. 'பட்டினி கிடக்கும் மக்களுக்குத் தானியம் கொடுக்க நம்மால் முடியாமல் போய்விட்டதல்லவா?' என்று அவர் வருந்தினார். கணக்குப்பிள்ளைமேல் கோபம் வரத்தான் வந்தது. ஆனால் அவன் எழுத்தில் வல்லவன். அதோடு சட்டதிட்டங்களைக் கரைத்துக் குடித்தவன். சுயநலத்தைச் சாதித்துக்கொள்பவன். ஒரு மொட்டை விண்ணப்பம் எழுதி ஊரையே விழுங்கிவிடும் திறமை உள்ளவன். அதுவும் தவிர, பஞ்சத்திற்குப் பரிகாரம் தேடும் பொறுப்பு, மணியக்காரருக்குத்தானே தவிர, கணக்குப் பிள்ளைக்கு அன்று. ஊரில் உள்ள குழிகளில் ஆறு மாதங்களுக்கு ஆகும் தானியச் சேமிப்பு இருந்தது. 'நமக்குத்தான் அதிகாரம் இருக்கிறது' என்று தானியத்தை எடுத்தால் 'கொள்ளையடிப்பதாகப் பழி வந்துவிட்டால் என்ன செய்வது?' பேசாமல் இருந்

தாலும் திருட்டுக்கும் கொள்ளைக்கும் இடம் கொடுத்ததைப் போல் ஆகும். கடைசியில் 'நமக்குத் தோல்வியானாலும் சரி' என்ற முடிவுக்கு வந்து இருட்டோடு எழுந்த கௌடர், பாளாச் சாரின் வீட்டுக்குப் போனார்.

'இதோ பாருங்கள் ஆச்சார் சுவாமி! என் பங்குக்கு வந்த பணத்தை உங்கள் கையில் போட்டுவிடுகிறேன். என்ன செய் வீர்களோ? அந்தச் சேஷப்பாவைச் சமாதானம் செய்து ஒப்புக் கொள்ளச் செய்யுங்கள். ஊரில் இல்லாத வம்புகளெல்லாம் வராமல் பார்த்துக்கொள்ளவேண்டும்!' என்று கௌடர் பாளாச் சாரைக் கேட்டுக்கொண்டார்.

''நீங்கள் பணத்தைக் கொடுத்துவிடுவீர்கள், சரிதான். அதனால் சேஷப்பா 'சமாதனம் ஆகிவிடுவான்' என்று எனக்குத் தோன்றவில்லை. அவனுக்குப் பாபு சாஹேப் பக்கபலமாக இருக்கிறான். இருவருமாகச் சேர்ந்து 'ஊரைத் தங்கள் வசப் படுத்திக்கொள்ளவேண்டும்' என்று சூழ்ச்சி செய்கிறார்கள். இந்த பாபு நேற்றைக்கு வந்தவன். இந்தச் சேஷப்பனுடைய கணக்குப் பிள்ளை அதிகாரம் எத்தனை நாளைக்கு? முறைக்காரனாகிய சாமராஜை நாளைக்கே நியமித்துவிடலாம். அவனைக் கூப்பிட்டு, 'உன் வேலை உரிமையை நீ ஏற்றுக்கொள்ளப்பா' என்று சொல்லிவிட்டால், சேஷப்பா தானே அடங்கிவிடுவான். பாபு சாஹேபின் காரியங்களோ மாளிகையின் பெயரையே கெடுக் கின்றன. லக்ஷ்மிபாய்க்குக் கடிதம் எழுதி வரவழைத்துக் கொண்டால் அவனும் அடங்கிவிடுவான். இதையெல்லாம் நானே உங்களிடம் சொல்ல நினைத்தேன். நீங்களே வந்து விட்டீர்கள். நல்லதாயிற்று'' என்றார் பாளாச்சார். நடக்கும் விவகாரங்கள் அவருக்கு வெறுப்பூட்டியதை அவர் குரலே தெரிவித்தது.

''ஆகட்டும் ஆச்சாரய்யா, உங்கள் ஆசீர்வாதம் இருந்தால் சேஷப்பா வாலை ஆட்ட முடியாது. ஆனால் அவன் லேசுப்பட்ட மனிதன் அல்ல. உங்கள் ஒருவருடைய ஆதரவு இருந்தால் போதும். 'ஆதரவாக இருக்கிறேன்' என்று நீங்கள் சொன்னால் எனக்கு யானை பலம் வந்துவிடும். அப்புறம் பாருங்கள் ஆச்சார், சேஷப்பாவின் பேச்சை ஒரு கோழிக்குஞ்சுகூடக் கேட்காமல் செய்துவிடுவேன்'' என்றார் கௌடர். அவருக்குப் பெரிய பாரம் இறங்கியதுபோல் இருந்தது.

'அதெல்லாம் சரிதான், இப்பொழுது தானியத்துக்கு ஏதாவது வழி செய்யவேண்டுமே? அதைப்பற்றி யோசித்தீர் களா?'

'அதற்கு ஒரு வழி செய்வோம். எங்கள் தெரு மக்களுக்கு அறுவடைக் காலம் வரையில் நான் தானியம் கொடுத்து விடுகிறேன். சேஷப்பா, தன் தெரு மக்களைத் தானே கவனித்துக் கொள்ளட்டும்' என்றார் கௌடர்.

'உங்கள் தெரு மக்கள் எல்லோரும் வசதியாக இருக்கிறார்கள் கௌடரே. இருக்கும் ஏழெட்டு ஏழைக் குடும்பங்கள் நல்ல காலத்திலேயே உங்கள் ஆதரவால் வாழ்ந்து வருபவர்கள். ஆனால் சேஷப்பாவின் தெருவிலும் எங்கள் தெருவிலும் இருக்கும் யாருக்குமே உணவுப் பொருள் இல்லை. இவர்களுக்குத்தான் இப்பொழுது தானியம் கொடுக்க வேண்டும். வெறுமனே கர்ணத்தின்மேலும் பாபு சாஹேபின்மேலும் பாரத்தைப் போட்டால் உங்கள் குழியையே படையெடுத்துவிடுவார்கள்' என்றார் பாளாச்சார்.

'அவர்கள் இருவரும் ஏழைகளுக்காக ஒன்றும் செய்யவில்லை' என்பது தெரியட்டும் ஆச்சாரய்யா! ஜனங்கள் படையெடுத்தால் நான் இருக்கேன் அல்லவா? 'முதலில் ஜாகீர்தாருடைய குழிகளைக் கொள்ளையிட்டுவிட்டு அப்புறம் இங்கே வாங்க' என்று சொல்வதற்கு.

'பசித்த வயறு பொல்லாது, கௌடரே! உங்களுடைய வீம்புக்கு இடையே ஏழைகள் சாகக்கூடாது. இப்பொழுது நான் சொல்கிறபடி செய்யுங்கள். ஐந்நூறு ரூபாயைக் கொடுக்கத் துணிந்தவர், ஏழைகளுக்குத் தானியம் கொடுக்கப் பின்வாங்கக் கூடாது. முதலில் உங்கள் குழியைத் திறந்து, தானியத்தைக் கொடுங்கள். அதற்கப்புறம்தான் மற்றவர்களைச் சொல்வதற்கு நமக்கு வாய் இருக்கும். என்ன ஆனாலும் ஊருக்குத் தந்தை தாய் நீங்கள்தான் என்பதைப் பொய்யாக்கிவிடாதீர்கள் மணியக் காரரே!' என்றார் பாளாச்சார்.

பாளாச்சார் சொன்ன கடைசிச் சொல் கௌடரின் உள்ளத்தைத் தொட்டது. பாதள்ளி மண்ணின்மேல் மணியக்காரர் குடும்பத்துக்கு உள்ள அபிமானம் மற்ற யாருக்கும் இல்லை. அது அவர்களுடைய ரத்தத்தில் ஊறியது. கர்ணத்தைப்போல் மணியக்காரர் பறந்துபோய்விடும் பறவை அல்ல. 'மக்கள் வாழ்ந்தால், தான் வாழ்ந்தாற்போல' என்னும் கருத்து, கௌடர் குடும்பப் பண்பாட்டின் உயிர்நாடியாக இருந்தது; ஆகையால் கௌடரால் பாளாச்சாரின் பேச்சை மறுக்க முடியவில்லை. 'அப்படியே ஆகட்டும், ஆச்சாரய்யா! உங்கள் பேச்சை மீறுவதும் தெய்வத்தின் பேச்சை மீறுவதும் ஒன்றுதான்' என்று சொல்லி மணியக்காரர் புறப்பட இருந்தார். அதற்குள் சிலேதார்

லக்ஷ்மணன் அங்கே வந்தான். கௌடரைக் கண்டவுடன் 'ராம் ராம் மணியக்காரரே!' என்று வணக்கம் சொன்னான்.

லக்ஷ்மணன் அப்பொழுதும் விக்கி விக்கி அழுதுகொண்டிருந்தான். அழுதழுது கண்கள் சிவந்து கிடந்தன. தலையிலிருந்த முண்டாசு, பக்கவாட்டில் சரிந்திருந்தது. ஏற்கெனவே அவனை எல்லோரும் 'அப்பாவி' என்பார்கள் இப்பொழுதோ துக்க மேலீட்டால் அவன் முகத்துக்கு, மேலும் பைத்தியக்காரக் களை வந்திருந்தது. உள்ளம் நொந்திருந்ததால் முகம் துக்கமே உருவெடுத்ததுபோல் இருந்தது எப்பொழுதும் புல்லையோ வைக்கோலையோ சுமந்தவண்ணம், மாடு கன்றுகளுடனேயே காலம் தள்ளிக்கொண்டிருந்தான் லக்ஷ்மணன். நாணுவின் மரணத்தால் இடிந்துபோன அவன், நடக்க முடியாமல் நடந்து எப்படியோ பாளாச்சார் வீட்டுக்கு வந்து சேர்ந்தான்.

முதல் நாள் இரவு லக்ஷ்மணன் ஊரில் இருந்து வந்தபிறகு தான் நாணுவின் மரணச் செய்தியைக் கேட்டான். விடியற் காலையில் எழுந்திருந்து கௌடர் வீட்டுக்குப் போனான். அவர் வீட்டில் இல்லாததால் அவரைத் தேடிக்கொண்டு இங்கே வந்தான்.

'பேசாமல் இரு லக்ஷ்மணா! ஆண்பிள்ளை இப்படியெல்லாம் அழக்கூடாது! நீ அழுவதால் போய்விட்ட நாணு திரும்பி வந்து விடப்போகிறானா? பிறந்தவர்கள் எல்லோரும் கடவுள் அழைத்த போது போகவேண்டியதுதான் அப்பா!' என்று பாளாச்சார் அனுதாபத்துடன் ஆறுதல் சொன்னார்.

'கடவுள் நாணுவை அழைக்கவில்லை, ஆச்சாரய்யா! பிசாசு அவனுடைய உயிரைக் குடித்துவிட்டது. அவன் இறந்த செய்தியைக்கூடச் சொல்லியனுப்பாத அளவுக்கு நான் என்ன செய்துவிட்டேன், கௌடரே?' என்ற லக்ஷ்மணன், வேஷ்டித் தலைப்பால் முகத்தை மூடிக்கொண்டு மறுபடியும் அழத் தொடங்கினான்.

'நீயும் ஒன்றும் செய்யவில்லை, நாணுவும் ஒன்றும் செய்ய வில்லை. அதெல்லாம் தலையெழுத்து, லக்ஷ்மணா! அதை யார் தவிர்க்க முடியும், சொல்லு? சமாதானப்படுத்திக்கொள்' என்று பாளாச்சார் மனம் கசிந்து சொன்னார்.

'துக்கத்தின் வேகம் குறையட்டும்! என்று ஆச்சாரும் கௌடரும் சிறிது நேரம் மௌனமாக இருந்தார்கள். ஒரு தரம் உரக்க அழுத லக்ஷ்மணன், கண்ணைத் துடைத்துக்கொண்டான். மனம் எங்கோ இருக்கப் பொருளற்ற பார்வையுடன் அவன்

இருவரையும் மாறி மாறிப் பார்த்தான். கடைசியில் ஆச்சார் தான் மௌனத்தைக் குலைத்துப் பேசும்படி ஆயிற்று.

''இதோ பார், லக்ஷ்மணா! பாபு சாஹேப் இவ்வளவு கீழ்த் தரமான வேலையைச் செய்திருக்க வேண்டாம். அதோடு 'நாணாவின் ஆயுசும் முடிந்தது' என்று வச்சுக்கோ. அதனால்தான் பாபு சாஹேபுக்கு இந்தத் துர்ப்புத்தி பிறந்திருக்கிறது. நடந்தது நடந்துவிட்டது. அப்போது நீ இங்கே இருந்திருந் தாலும் நாங்கள் செய்ததைத்தான் செய்திருப்பாய்' என்று புரியும்படி சொன்னார்.

'ஆச்சாரய்யா சொன்னதைக் கேட்டாயா லக்ஷ்மணா! அவர் எப்பொழுதும் தவறாகப் பேசவே மாட்டார்' என்று கௌடர் பாளாச்சாரின் பேச்சுக்கு ஆதரவு தந்தார்.

''விஷம் வச்சுக் கொன்னு, 'ஆயுசு முடிஞ்சு செத்தான்'னு எப்படி நம்பட்டும் ஆச்சாரையா! தப்புச் செய்தவங்களைத் தண்டிச்சே தீரவேண்டும் ஐயா! இல்லாட்டி நாணாவைச் சேர்ந்த வங்களா இருந்து என்ன பிரயோசனம்?'' என்று லக்ஷ்மண னுடைய மனம் சவால் விட்டது.

'இப்படியெல்லாம் கோபத்துக்கு இடம் கொடுக்கக் கூடாது, லக்ஷ்மணா! நீயே யோசித்துப்பார். சிமணாவின் மானம் நம் வழியில் குறுக்கிட்டது. அவள் நாணாவின் மகள் என்றால் உனக்கும் மகள் அல்லவா? அவள் மானத்தை ஆத்தோட போக விட்டிருந்தால் சரி ஆகுமா?' என்று கௌடர் பொறுமையோடு பதில் சொன்னார். இது உனக்குப் பிடிக்காவிட்டால், சொல்லு. 'ஊர்ப் பெரியவங்களை எல்லாம் தண்டிக்கறதானா தண்டிச்சுடு' என்று அவன் மனத்தில் படும்படி சொன்னார்.

''தப்புச் செய்தவங்களை எல்லாம் தண்டிக்கணும், ஐயா! அதுதான் தெய்வத்தின் நியாயம். காரணம் இல்லாமெ 'பெரியவங்களை எல்லாம் தண்டிக்கணும்'னு' சொன்ன நாக்குப் புழுத்துப் போகும்?'' என்றான் லக்ஷ்மணன். இந்த முரட்டுப் பேச்சுக்கு அவன் அறியாமையே காரணம்.

''லக்ஷ்மணா, உன் பேச்சு நிஜம். இருந்தாலும் கொஞ்சம் யோசி. விவகாரத்தில் இப்போது எவ்வளவு சிக்கல் இருக்கிறது? போன விஷயத்தைக் கிளறினால் சிமணாவைக் கூப்பிடவேண்டும்; கேள்வி கேட்கவேண்டும். அப்புறம் உண்மைச் செய்தி வெளி யானால் 'நாங்கள் எல்லோரும் பணத்தைச் சாப்பிட்டுவிட்டுக் குற்றத்தை மறைத்தோம்' என்று ஜெயிலுக்குப் போகவேண்டும்!

இதனுல் என்ன லாபம்? நானு இறந்ததால் உனக்கு எவ்வளவு துக்கமோ அவ்வளவு துக்கம் எங்களுக்கும். ஆனுல் ஒன்றும் செய்ய முடியாமல் உட்கார்ந்திருக்கிறோம்.

'ஆச்சாரய்யா சொல்வதெல்லாம் சரியான பேச்சு, லக்ஷ்மணு! அநாவசியமாக ஆர்ப்பாட்டம் செய்வதால் லாபம் இல்லே. யாரிடமும் சொல்லாமல் சும்மா இருப்பதுதான் மேல்' என்று கௌடர் சொன்னுர்.

'அதெல்லாம் சரிதானுங்க. ஆனுல் பாபு சாஹேபுக்குத் தண்டனே கெடைக்காட்டி எப்படீங்க? இதுக்குச் சரியான பதில் சொல்லுங்க'ன்னு லக்ஷ்மணன் கேட்டான்.

'அதற்கு இரண்டு வழி இருக்குது, லக்ஷ்மணு! ஒன்று சிமணுவைப் பாபு சாஹேபுக்குக் கல்யாணம் செய்து கொடுப்பது; மற்றது லக்ஷ்மிபாயை வரவழைத்து பாபு சாஹேபை ஊரை விட்டு ஒட்டுவது. இந்த இரண்டில் எதைச் செய்யலாம், சொல்லு' என்று ஆச்சார் அவனேயே மடக்கினுர்.

'சிமணுவைப் பாபு சாஹேபுக்குக் கொடுப்பதா? என்ன வார்த்தை சொன்னீங்க, ஆச்சாரய்யா! செத்துப்போன நானு என்னேப்பத்தி என்ன நெனப்பான்? அந்தப் பேச்சை விட்டுத் தள்ளுங்க. பாபு சாஹேபை ஊரைவிட்டு ஒட்டுங்க. அது நமக்கும் பிடிச்ச விஷயம்' என்று லக்ஷ்மணன் பதில் சொன்னுன்.

'ஆனுல் பாபு சாஹேப் ஊரில் வேர்விட்டுவிட்டான் அப்பா! படதையா சாமியாரும் அவனும் உயிர்த் தோழர்கள். புளி வேட்டைக் கூட்டத்தை வலேச்சுப் போட்டிருக்கான். அவனே வெளியே தள்ளறதுன்னு கொஞ்சம் கஷ்டமான காரியந்தான்' என்று கௌடர் தம் அபிப்பிராயத்தைச் சொன்னுர்.

'அப்படியானு, எங்களேப்போல ஏழை ஜனங்கள் வாழவே முடியாது. அவனே ஊரைவிட்டுப் போகச்சொல்லக் கூடாதா ஐயா!' என்ற லக்ஷ்மணனுக்கு, மறுபடியும் அழுகை பொத்துக் கொண்டு வந்தது.

''இப்படியெல்லாம் அழாதே லக்ஷ்மணு! 'பாபு சாஹேபை வெளியே போகச் சொல்வது கஷ்டம்'ன்னு சொன்னேன். அப்படிப் பார்த்தால் நாமெல்லாம் வலேபோட்டுக்கொண்டிருக்க வில்லே. இப்பொழுது நீ எப்படியும் சிலேதார். லக்ஷ்மிபாயைக் கூட்டிவா. அதற்குமேல் நான் பார்த்துக்கொள்கிறேன்'' என்று கௌடர் ஆறுதல் சொன்னுர்.

'அப்படிச் சும்மாக் கூப்பிட்டா நடக்காது கௌடரே! லக்ஷ்மிபாய்க்கு ஊரில் ஆதரவு வேணும். முதலில் நாம்

சோளம், கீளம் கொடுத்து ஊர் ஜனங்களோடே அன்பைச் சம்பாதிக்கணும். அதுக்குமேலே எல்லா வேலையும் சுலபமா முடியும்' என்றார் ஆச்சார்.

'அதையெல்லாம் எங்கிட்ட விட்டுடுங்க ஆச்சாரய்யா! இதோ இப்போதே குழியைத் திறந்துவிடுகிறேன். மற்றக் குடியானவர்களையும் கொடுக்கச் சொல்கிறேன்' என்றார் கௌடர்.

'நான் போய்ப் பெரியம்மா அவங்களைக் கூட்டியாரேன் ஐயா! அதொன்னும் பெரிய காரியம் இல்லே. ஆனா, பாபு சாஹேப் மறுபடி இந்த ஊருக்கு வராமெ செய்யறது ஓங்க பொறுப்பு' என்று லக்ஷ்மணன் அதே நந்தியை மீட்டினான்.

'அதையெல்லாம் நாங்க செய்யறோம் லக்ஷ்மணா! மொதல்லெ நானாவோட காரியம் அதையெல்லாம் செய்யறதைப் பாரு. அதெல்லாம் முடிஞ்சப்புறம் நீதான் போய் லக்ஷ்மிபாயை அழைச்சிக்கிட்டு வரணும். சிமணாவுக்கு நீதான் ஆறுதல் சொல்லணும். நீதானே குடும்பத்துக்குப் பெரியவன். ஒன்று விடாம எல்லாத்தையும் நடத்திவை' என்று ஆச்சார் உபதேசிப்பதுபோல் சொன்னார்.

'அதெல்லாம் செய்துக்கலாமுங்க. ஆனா...' லக்ஷ்மணன் ஏதோ சொல்ல வந்தவனா தயங்கினான்.

'மறுபடியும் என்னப்பா இது? உன் அழுகைக்கு முடிவையே காணோமே?' என்று கௌடர் சற்றுச் சலிப்புடன் சொன்னார்.

'ஒன்னும் இல்லீங்க. நான் நீங்க போடற கோட்டைத் தாண்ட மாட்டேன். பெரியவங்க பேச்சை மீறி வாழ முடியுங்களா? ஆனா, நான் கேக்கறபடி என் மகன் கேப்பானா? என்னிக்குமே தாதா கொஞ்சம் மொரட்டுப பிள்ளைதான். இளம் ரத்தம் குதிக்கிறது. அதிலேயும் சிமணான்னா அவனுக்கு உயிர். இந்தச் செய்தியை அவன் காதிலெ போடவே இல்லெ. நானாவின் கதிதான் இப்படி ஆயிடுச்சு. என்னைவிடப் பெரியப்பா விடந்தான் ஒட்டிக்கொண்டிருந்தான் குழந்தை. இப்ப அவன் ஊர்லே இல்லேன்னாலும் நானாவின் காரியத்துக்கு வரத்தானே வேணும். அவன் வந்தப்புறம் என்ன ஆகுமோன்னு நெஞ்சு அடிச்சுக்குது' என்று லக்ஷ்மணன் தனக்குத் தோன்றிய பயத்தை வெளியிட்டான்.

அவன் கூறியதில் உண்மையில்லாமலில்லை. தாதாவின் முன்கோபம் எல்லோருக்கும் நன்கு தெரிந்துதான் இருந்தது.

சற்று நேரம் பாளாச்சார் யோசித்தார். 'ஆம் அது நிஜந்தான். தாதா எப்போதுமே முன் பின் யோசியாதவன். அவன் கொஞ்ச நாள் ஊருக்கு வராமல் தடுக்கவேண்டும். இப்போது எங்கே போயிருக்கிறான்?' என்று கேட்டார்.

'ஜந்தி*க்குப் போறதாகச் சொன்னாங்க. அங்கிருந்து ஷோலாப்பூருக்கும் பண்டரிபுரத்துக்கும் போய்ட்டுத்தான் வருவானுங்க. இந்த நெலமெலே அவனுக்கு எப்படீங்க சொல்லி அனுப்பறது! சீக்கிரத்திலேயே தாஸகாமுக்கு (ஓர் ஊர்) வந்தாலும் வருவான்.

'அப்படியானா ஒன்னு செய்யலாம். ஓர் அஞ்சல்காரனின் மூலம் அவனுக்குக் கடிதம் கொடுத்து, தாஸகாமுக்கு அனுப்பினாச் சரிதானே?' என்றார் பாளாச்சார்.

''அப்படீன்னா அந்தக் காயிதத்துலெ இப்படி எழுதுங்க. 'தாஸகாமுலெ மாட்டை விட்டுட்டு வந்திருக்கேன். நான்—அதாவது லக்ஷ்மணனுங்க—அங்கே வர வரைக்கும் தாஸகாமிலே மாட்டைக் கவனிச்சிண்டிரு'ன்னு எழுதி அனுப்புங்க. 'எங் கிட்டே இருந்து காயிதம் வர வரைக்கும் இங்கே வரக் கூடாது'ன்னு உத்தரவு போட்டுடுங்க! என்று லக்ஷ்மணன் சொல்லவேண்டியதை எல்லாம் சொல்லி முடிச்சு, 'வரேன் ஆச்சாரய்யா! வரேன், கௌடரே!' என்று சொல்லிப் புறப் பட்டான்.

'சரி, அப்பா! நாணுவின் சாம்பலெ ஆத்துலெ கரைக்கிற வேலையை அமைதியாகச் செய்து முடி' என்று பாளாச்சார் லக்ஷ்மணனுக்கு விடை கொடுத்தார்.

லக்ஷ்மணன், தம் பேச்சுக்குக் கட்டுப்பட்டு நாணு இறந்ததைப் பற்றி அதிகமாகத் தகராறு செய்யாததால் கௌடருக்குப் பெரிய பாரம் இறங்கியதுபோல் இருந்தது.

அப்பொழுது பனிக்காலச் சூரியன் உச்சிக்கு வந்தும்கூடக் குளிரின் வேகம் குறையவில்லை. கௌடருக்கு அங்கேயே 'இன்னும் சற்று நேரம் உட்கார வேண்டும்' என்று தோன்றினாலும் 'ஏழைகளுக்குத் தானியம் கொடுக்கவேண்டும்' என்ற நினைப்பு அவரை வீட்டுக்கு விரட்டியது.

---

* ஓர் ஊர்

# 5

எள் அமாவாசைக்கு முதல் நாள் ஐத்தியில் நடக்கும் குஸ்திப் போட்டியில் பங்கு கொள்ள பாதள்ளி மல்லர்கள் தாதாவின் தலைமையில் போயிருந்தார்கள். ராஜா சாஹேபின் மேல் பார்வையில் பெயர்பெற்ற பயில்வான்களின் குஸ்திச் சண்டைப் போட்டிகளை ஏற்படுத்தியிருந்தார்கள். பஞ்சாபின் புகழ்பெற்ற பயில்வானாகிய 'லாமா'வுக்குப் போட்டி, தாதா என்பது நிச்சயமாயிற்று. லாமாவின் பெயர் பிரசித்திபெற்றிருந்ததால் சுற்றுப்புறத்துக் கிராம மக்கள் ஆயிரக்கணக்கில் வந்து கூடியிருந்தார்கள்.

தாதா, இதற்கு முன் தோல்வியை அறியாத பயில்வான். சின்ன வயதிலேயே நானாப் பெரியப்பா, தாதாவுக்குக் குஸ்தியின் பிடிகள் எல்லாவற்றையும் சொல்லிவைத்திருந்தார். பாதள்ளியில் இருக்கும் தாலீம்கானாவின் மல்லர்கள் எல்லாம் தாதாவின் முன் மண்ணைக் கவ்வியவர்களே. அதனால் பஞ்சாப் லாமாவுக்குத் தாதாதான் 'தகுந்த ஜோடி' என்று அவனுடைய தோழர்கள் தீர்மானித்தார்கள். பாதள்ளித் தாலீம்கானாவின் புகழ் இதற்கு முன்பே அக்கம்பக்கத்து ஊர்களில் போதுமான அளவு பரவியிருந்தது. இன்று தாதா அந்தப் புகழ்க்கொடியை மேலும் உயர்த்தி ஜொலிக்கச் செய்யவேண்டியிருந்தது. இந்த உத்ஸாகத்தில்தான் தாதா, தன் கூட்டாளிகளுடன் குஸ்தி அரங்கத்துக்கு வந்திருந்தான்.

ஆரம்பத்தில் சாதாரணமான சில பயில்வான்களின் ஜோடி அரங்கத்தில் குதித்தன. அங்கேயும் பாதள்ளி மல்லர்களே வெற்றி பெற்றதைக் கண்டு, தாதாவின் கூட்டாளிகளுக்கு மகிழ்ச்சி எல்லை மீறியது. இவர்கள் போட்ட மகிழ்ச்சிக் கூக்குரலோடு சேர்ந்து முண்டாசுகளும் வானத்தில் பறந்தன. சாதாரணமாகப் பந்தய மைதானங்களில் சந்தோஷ ஆரவாரம் தொற்று வியாதிபோல் பரவும். இவர்களோடு சேர்ந்து மற்ற மக்களும் கூச்சலிட்டனர்.

தாதா, லங்கோடு அணியும்போதே 'லாமாவின் போட்டியாள் வந்துவிட்டான்' என்ற சலசலப்புக் கூட்டத்தில் எழுந்தது. எல்லோருடைய பார்வையும் தாதாவின் பக்கம் திரும்பியது. தாதாவுக்கு வயது பதினெட்டுதான். மாநிறமான முகத்தில் கண்டும் காணாமலும் மீசை அரும்பியிருந்தது. முகத்

திலும் கண் அசைவிலும் உதட்டில் அரும்பிய புன்னகையிலும் பச்சைக் குழந்தையின் வெகுளித்தனமே காணப்பட்டது. ஆனால் உடம்பு மட்டும் ஆற்றங்கரையில் வளர்ந்த ஆலமரத்தைப் போல் வாளிப்பாக வளர்ந்திருந்தது. நடக்கும்போது தரை நடுங்குவது போலவே தோன்றும். உடம்பு பருமனாக இல்லை. தன் போக்கில் வளர்ந்த மூங்கிலைப்போல் சீரான நிறைவு பெற்றிருந்தது. தாதாவின் கூட்டாளிகள் கோஷமிட்டுக்கொண்டு அவனைச் சுமந்து வந்து கோதாவில் இறக்கினர். லாமா, மலைபோல் பருத்த ஆள். தாதாவும் லாமாவும் எதிரும் புதிருமாக நின்ற போது 'தாதாவைப் போன்ற பொடிப்பயல் லாமாவை வெல்ல முடியாது' என்றே கூடியிருந்த எல்லோரும் நினைத்தார்கள். ஆனால் தாதாவின் கை லாவகத்தை அறிந்தவர்கள் மட்டும் சமமான இந்த ஜோடியைக் கண்டு முடிவை அறியப் பரபரப்புக் கொண்டனர்.

கோதாவில் நின்ற தாதா மின்னல் வெட்டியதுபோல் லாமாவை எதிர்த்துத் தரையில் இருந்த மண்ணை உடம்பிலும் கைகளிலும் தடவிக்கொண்டான். மல்லர் மரபுப்படி லாமாவின் கையை இழுத்துக் குலுக்கி முண்டாவைத் தட்டிச் சலாம் வைத்தான். தாதா கையைப் பிடித்ததும் 'ஒப்பற்ற பல முடைய வீரன் ஒருவன், தன்னை எதிர்த்து நிற்கிறான்' என்பதை லாமா புரிந்துகொண்டான். மற்றச் சமயங்களில் பட்டுப்போல் மெத்தென்றிருக்கும் தாதாவின் உடல் இப்பொழுது எஃகைப் போல் இறுகி இருந்தது. 'கையை இழுத்துத் தரையில் தள்ளி விடலாம்' என்று நினைத்த லாமாவின் தன்னம்பிக்கை மறைந்தது. எச்சரிக்கையாகவே கைகொடுத்துக் குஸ்தியைத் தொடங்கினான். தாதாவின் குஸ்தியில் அதிகச் சிரமம் தென்படவில்லை. ஏதாவது ஓர் அபூர்வமான பிடியை உபயோகித்து, எதிரி ஓய்ந்துபோகச் செய்து, தோற்கடிப்பது அவனது குஸ்தியின் சிறப்பான முறை. 'இப்பொழுது லாமாவைத் தோற்கடிக்க என்ன முறையைக் கையாள்வானோ?' என்று அவனுடைய கூட்டாளிகள் மூளையைக் குழப்பிக்கொண்டிருந்தார்கள். நின்றுகொண்டிருந்த தாதா, திடீரென்று தரையில் உட்கார்ந்து லாமாவின் இரண்டு கால் களுக்கும் நடுவில் தலையைக் கொடுப்பது தெரிந்தது. லாமா, சற்று அஜாக்கிரதையாக நின்றிருந்தால் அரைக்கணத்தில் தாதாவின் பிடிக்குப் பலியாகி இருப்பான். லாமா குஸ்தியில் பழமும் தின்று கொட்டையும் போட்டவன். மலைபோன்ற அந்த உடம்பில் சக்தி எங்கிருந்துதான் வந்ததோ? மின்னல் வேகத்தில் வளைந்து தாதாவின் கால்களைப் பிடித்தான். அதனால் தாதாவால் எழுந்திருக்க முடியவில்லை. லாமா, தன் தொடைகளின் நடுவில் தாதாவின் தலையை நசுக்கியபடி உட்கார்ந்தான்.

மூச்சைப் பிடித்துக்கொண்டு பார்த்துக்கொண்டிருந்த சபையோர்கள் இந்தப் பிடிகளைக் கண்டு திகைத்தார்கள். 'தன்னுடைய பாரத்தால் தாதா மூச்சு முட்டிச் சரண் அடைவான்' என்று பிகுவுடன் லாமா பிடியை இறுக்கிச் சுற்றிலும் ஒரு பார்வை பார்த்துச் சிரித்தான். தாதா முன்கூட்டியே இதை எதிர்பார்த்தான். கைதேர்ந்த நீச்சல்காரன் தண்ணீரில் மூழ்கியதுபோல் ஒரு நிமிஷம் இருந்த இடத்திலேயே அசையாமல் உட்கார்ந்திருந்து திடீரென்று தன் கைகள் இரண்டையும் லாமாவின் தொடைகளிலிருந்து விடுவித்துக்கொண்டான். லாமாவின் இரு கைகளும் தன் விலாவில் வரும்படி வளைத்துப் பிடித்ததுதான் தாமதம் தாதாவின் கால்கள் விடுபட்டன. ஒரு கணத்தில் தாதா, தலையை நிலத்தில் நட்டு எழுந்து நின்றுவிட்டான். லாமாவின் உடல் மல்லாக்காகத் தொப்பென்று தரையில் விழுந்தது. தாதா தோளைத்தட்டி நிமிர்ந்து நின்று இரண்டு கைகளையும் மேலே தூக்கித் தான் வெற்றி பெற்றதை அறிவித்துத் தன்னிடத்துக்குப் போனான். பார்க்க வந்த ஜனங்கள் போட்ட மகிழ்ச்சிக் கூச்சல் வானத்தைப் பிளந்தது. இந்தக் கோஷங்களின் இடையே லாமா பின்புறமாக வந்து தாதாவின் லங்கோட்டில் கைவைத்து 'டாங்கா' போட முயன்றான். உடனே சபையினர் போட்ட கூச்சல் கடலின் பேரொலிபோல் இருந்தது.

'லாமா கீழே விழுந்தவன், மறுபடியும் குஸ்தி போட அவனுக்கு அதிகாரமே இல்லை' என்று ஜனங்கள் கத்தினார்கள். தாதாவின் தோழர்கள் கோதாவில் புகுந்து அவனைச் சுமந்து கொண்டு வெற்றிக் கோஷத்துடன் கோதாவைச் சுற்றிவரத் தொடங்கினார்கள். அதற்குள் லாமாவின் கட்சியினர் வந்து 'குஸ்தி இன்னும் முடியவே இல்லை' என்று தர்க்கம் செய்தார்கள். தாதா, தன்னைச் சுமந்தவன்மேல் இருந்து கீழே பாய்ந்து இறங்கினான். சாய வேஷ்டி கட்டிய லாமாவின் ஆள் ஒருவன் சண்டைக்கு வந்தான். 'லாமா சரியாகக் கீழே விழவில்லை. முதுகு தரையில் பதியவில்லை. மறுபடியும் குஸ்தி செய்யத்தான் வேண்டும்?' என்றான்.

'தாதா, அலாக்காகப் பாய்ந்தபோது லாமா மல்லாக்காக விழுந்ததை இந்தக் கண்ணாலேயே பார்த்தோம். இல்லை என்று சொல்லுகிறானே? போடா, சோம்பேறிப்பயலே, போ' என்று கோபத்துடன் தாதாவின் தோழர்களெல்லாம் ஒன்றாகச் சேர்ந்து கத்தினார்கள்.

விவாதம் முற்றியது. இரண்டு மல்லர்களுக்கும் பரிந்து ஜனங்கள் இரண்டு கட்சிகளாகப் பிரிந்தார்கள். வாய்ப்பேச்சு

முற்றிக் கைகலந்தார்கள். 'குஸ்தி முடியவில்லை' என்று சொன்னவர்கள்மேல் பாதள்ளி மல்லர்கள் பாய்ந்து சென்று சிலரை அடித்தார்கள். சிலருக்கு மண்டை உடைந்தது. மைதானம் எல்லாம் துன்பக் கூக்குரல் எழுந்தது. நிலைமை கைமீறிப் போனதால் உள்ளூர் நிர்வாகிகள் 'நிகழ்ச்சி முடிந்து விட்டது' என்று அறிவித்தார்கள். போலீஸார், 'பாதள்ளி ஜனங்களைப் பிடிக்கவேண்டும்' என்று தேடினார்கள்.

குஸ்தி மைதானத்தில் உண்டான கலவரத்தால் பாதள்ளி மல்லர்கள் தங்களுக்குச் சேரவேண்டிய பரிசின் ஆசையையும் விட்டுவிட்டுக் கால்போன போக்கில் ஓடினார்கள். அப்பொழுது இருட்டத் தொடங்கியபடியால் அவர்களுக்கு ஒடித் தப்ப வசதியாக இருந்தது. சில மைல் தூரம் ஓடியபின் வழியில் இருந்த சிற்றூற்றில் தண்ணீர் குடித்து ஓய்ந்து உட்கார்ந்தார்கள். பாதள்ளி மல்லர்கள் ஒவ்வொருவராக அங்கேயே வந்து சேர்ந் தார்கள். ஆனால் தாதா மட்டும் வரவில்லை. 'போலீஸார் தாதாவைப் பிடித்திருப்பார்களோ?' என்று அவனுடைய நண்பர்கள் கவலைப்பட்டார்கள். 'அவன் இல்லாமல் ஊரில் எப்படித் தலை காட்டுவது?' என்ற யோசனையில் சாலையை அடுத்த ஒரு பாறையின் மறைவில் ஒளிந்துகொண்டார்கள். பாதி ராத்திரி வரையில் தாதாவின் வரவை எதிர்பார்த்திருந்தார்கள்.

வெட்ட வெளியில் இருட்டு மிகப் பயங்கரமாகவே கவிழ்ந் திருந்தது. யாரோ சொல்லும் முடிவில்லாத கதையைச் சலிப்புடன் கேட்பதுபோல் சுவர்க்கோழிகள் 'உம், உம்' என்று ஓசை செய்துகொண்டிருந்தன. அச் சமயத்தில் தூரத்தில் வண்டி ஒன்று வரும் ஓசை கேட்டது. பாறை மறைவில் ஒளிந் திருந்த தலையாரி கெஞ்சனும் பிஞ்சார லாடனும் எழுந்து போகாமல் இருக்க முடியவில்லை. 'வண்டி வராப்பலே தோனுதுரா?' என்று மற்றவர்களிடம் கிசுகிசுத்தார்கள்.

''ஏண்டா, குஸ்திபோட்டுக் கெடைக்காத பணத்தை, 'வழிப்பறி பண்ணிச் சம்பாதிக்கலாம்'னு பாக்கறியா?'' என்று படகு பசப்பா கேட்டான்.

'அசடே, பாதள்ளி எல்லையிலெ இருக்கிறதா நெனச்சயோ? நம்பளைத் தேடறத்துக்காகப் போலீஸார் வண்டி வைத்துக் கொண்டு வந்தாலும் வரலாம்' என்று கடைக்காரச் சிவருத்திரன் எச்சரித்தான்.

ஒரு கணம் யாரும் பேசவில்லை. வண்டியின் ஓசை வரவர நெருங்கியது. பசப்பா, பாபு சாஹேபின் புலிவேட்டைக் கூட்டத்திலேயே மிகவும் கெட்டிக்காரன். வழியில் கொள்ளை

அடிப்பது அவனுடைய தொழிலாக மட்டும் இல்லாமல் பழக்கமும் ஆகிவிட்டது. ''நள்ளிரவு; அடர்ந்த காடு; அக்கம் பக்கத்தில் யாரும் இல்லை; மக்கள் நடமாட்டம் நின்று வெகு நேரம் ஆயிற்று. அநாயாசமாக வண்டி வந்திருக்கும்போது 'யார், என்ன?' என்று விசாரித்து, முடிந்தால் ரெண்டு போடு போட்டு, ஏன் பணத்தைச் சம்பாதிக்கக் கூடாது? பொழுது விடிவதற்குள் பணக்காரர் ஆகும் அதிருஷ்டம் தங்களுக்கு இருந்தால் ஏன் விடவேண்டும்?'' பசப்பனால் தனது ஆவலைத் தடுக்க முடியவில்லை.

'வண்டி, கைக்கெட்டின தூரத்தில் வந்துட்டுதடா! நான் போய் வண்டியை நிறுத்திப் பொகயிலே கேக்கறேன். போலீஸ் வண்டியா இருந்தா ஓடி வந்துடறேன். வேற வண்டியா இருந்தாப் பொகயிலை கொடுத்தாலும் சரி, கொடுக்காட்டாலும் சரி; நீங்களெல்லாம் வந்து வண்டியைச் சூழ்ந்துண்டாப் போதும். இருக்கறதெல்லாம் கக்கிடுவாங்க. நாம இத்தனை பேரு யமதூதரைப்போல எதிரிலே போய் நின்னா, அவங்க நெஞ்சு வெடிச்சுப்போகாட்டி என்பேர் பசவன் இல்லே' என்று சொன்ன அவன், முண்டாசைக் கக்கத்தில் வைத்துக்கொண்டு பாறையிலிருந்து இறங்கி வண்டியை நோக்கிப் போனான்.

வண்டி பக்கத்தில் வந்தவுடன் பசப்பா இருமினான். எதிரே மனிதனைக் கண்டதும் மாடுகள் மிரண்டு குறுக்கே இழுத்தன. வண்டிக்காரன், 'யார் அது?' என்று உரக்கக் கத்தினான்.

பசப்பா, வண்டியின் பக்கத்தில் வந்து, 'கொஞ்சம் பொகயிலே இருந்தாக் குடுங்க'ன்னு பணிவோடு கேட்டான்.

'ஏதுடா பொகயிலே! நீ எந்த ஊர்க்காரன்? பாதிராத்திரீலெ வந்து பொகலெ கேக்கறான். விடரா வண்டியை!' என்று உள்ளே இருந்த யஜமானர் கத்தினார்.

இந்த அகாலத்தில் புகையிலை கேட்பது 'நல்லதுக்கு அடையாளம் இல்லை' என்பது வண்டிக்காரனுக்கு முன்பே தெரியும். உடனே சாட்டையடி கொடுத்து எருதுகளை விரட்டினான். பசப்பா வண்டிக்குள் எட்டிப் பார்க்கும்போதே வண்டியில் இருப்பவர்களின் அந்தஸ்தை ஊகித்துக்கொண்டான். வண்டியில் ஒரு கிழவனும் இரண்டு ஸ்திரீகளும் மட்டும் இருந்தார்கள். பெண்களுள் ஒருத்தி நடுவயது சுமங்கலி. அவள் பக்கத்தில் சந்திரகாவிச் சேலை உடுத்த இளம் பெண் ஒருத்தி உட்கார்ந்திருந்தாள். 'புது மருமகளை வீட்டுக்கு அழைத்துப்போகும்' வண்டி என்று பசப்பா தீர்மானித்துவிட்டான். மெதுவாகச் சீட்டியடித்துத்

தன் ஆட்களுக்குச் சாடை செய்தான். அவர்கள் பாறையி லிருந்து இறங்குவதற்குள் வண்டி அங்கேயே வந்துவிட்டது.

பசப்பா, பின்புறத்திலிருந்து ஓடிவந்து வண்டியை நெருங் கினன். கண்மூடித் திறப்பதற்குள் எல்லோருமாக வண்டியை முற்றுகையிட்டார்கள். எருதுகள் நின்றுவிட்டன. உள்ளே இருந்தவர்களுக்கு நா உலர்ந்துபோய்ப் பேச்சே எழவில்லை. வண்டியில் இருந்த யஜமானன் நடுங்கியவண்ணம், 'நாங்க ஏழைங்க அப்பா! எங்களண்டை ஒண்ணும் இல்லே. இதோ இந்தச் சோத்து மூட்டைதான் இருக்கு' என்று தடுமாறிச் சொல் வதற்குள் நாலு தடவை இருமினன்.

பிஞ்சார லாடன் 'சோத்து மூட்டையைக் கொண்டா இப்படி' என்று அதிகாரத்துடன் கேட்டான்.

கிழவன் மூட்டையைக் கொடுக்க வெளியில் கையை நீட்டிய வுடன் அந்தக் கையைப் பிடித்துக்கொண்டு, 'உயிரோடு தப்ப வேண்டுமானல் அந்தப் பொம்மனட்டி கழுத்தில் இருக்கிற சங்கிலியை எடுத்துத் தா' என்று உத்தரவிட்டான்.

பயத்தால் வண்டியே நடுங்கியது. ஸ்திரீகள் மூர்ச்சித்த நிலையில் இருந்தார்கள். வண்டிக்காரன் பயத்தால் கல்லாகச் சமைந்தான். ஆனல் பசப்பனுக்கு மட்டும் மனம் இரங்கவில்லை.

'ம், இருப்பதையெல்லாம் சீக்கிரம் எடுத்துக் கொடுத்துவிடு' என்று மறுபடியும் கர்ஜித்தான். ஒரு நிமிஷம் இப்படியே கடந் திருக்க வேண்டும். பயத்தில் எல்லாமே ஸ்தம்பித்துவிட்ட மாதிரி இருந்தது. எருதுகள்கூட அசையாமல் நின்றன.

அதற்குள் பின்னலிருந்து, 'யாரடா, அவன்! வந்துவிட்டேன் நில்லுங்கள்' என்று யாரோ கத்தியது காதில் விழுந்தது. காலமே ஓடாமல் நின்றுவிட்ட அந்தச் சமயத்தில் சற்றுச் சலனம் ஏற்பட்டது.

பசப்பா, திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். அவனுக்குக் குரலில் அடையாளம் தெரிந்துவிட்டதுபோலும். 'பீடை! இன்னும் ஒரு நாழி கழிச்சு வந்திருக்கக்கூடாது' என்று தனக்குள் திட்டிக்கொண்டே பின் வாங்கினன். மற்றவர்களும் பின் வாங்கினர்கள். பிஞ்சார லாடன் மட்டும் சோற்று மூட்டையுடன் பாறையின்மேல் ஏறினன்.

'இதுதான் சமயம்' என்று எருதுகளை முடுக்கினன் வண்டிக் காரன். வண்டி கடகடவென்று ஓடியது. சில நிமிஷங்களில் தாதா ஓடிவந்தான். 'வண்டி எங்கே?' என்று பசப்பனைக் கேட்டான்.

'வண்டியா? ஏது வண்டி?' என்று எதிர்க்கேள்வி கேட்ட வண்ணம் உதட்டை நாக்கால் தடவிக்கொண்டான் பசப்பா.

'டேய்! பொய் சொன்ஞ எல்லாருடைய முதுகுத் தோலேயும் உரிச்சிப்பிடுவேன். இதே வழீலே வண்டி போகலே? ஒன்னுமே தெரியாதது மாதிரி பேசுறீங்களே? நான் அதே வண்டிலே இதுவரைக்கும் வந்தேன். ஒடைக்கிட்ட எறங்கிக் கைகால் கழுவிக்கிட்டு வறத்துக்குள்ளே எல்லாத்தையுமே நாசமாக்கிட்டீங்களா?' என்று சொன்ன தாதா எல்லோரையும் முறைத்துப் பார்த்தான்.

'அண்ணு, வண்டி வந்துச்சு. கூப்பிடு தூரந்தான் போயிருக்கும். ஒரு வேளே தடம் மாறியிருக்கலாம். அவங்க தான் இந்தச் சோத்து மூட்டையைக் குடுத்தாங்க. நல்ல பணக் காரங்கபோலெ தெரியுது' என்று லாடன் உண்மையைச் சொல்லிவிட்டான்.

'வண்டியை மறிச்சீங்கல்லே. எங்கே போஞலும் ஏண்டா, ஒங்க கொணத்தை விடமாட்டேங்கிறீங்க. என்ன என்ன பிடுங்கிக்கொண்டீங்க. சொல்லாட்டிச் சும்மா விடமாட்டேன்' என்று தாதா அதட்டினுன்.

''ஒன்னும் இல்லேப்பா. எங்களேப் பார்த்ததுமே கெழவன் நடுங்க ஆரம்பிச்சுட்டான். அதுக்குள்ள நீ வந்தூட்டே, வண்டியை அப்படியே விட்டுட்டம். 'பசி உயிர்போகுது'ன்னு லாடன் சோத்து மூட்டையை வாங்கிகிட்டான். கெழவன் கையாலேயே எடுத்துக் கொடுத்தாண்டா!'' என்று பசவப்பா கிண்டலாகச் சொன்ஞன்.

'இந்த மூட்டையெல்லாம் அளக்காதெங்கடா! இந்தக் கிழவர் யாருன்னு நெனச்சீங்க? நம்ம பாபு சாஹேப் ஜாகீர்தாரின் மாமா. நாள் பார்த்து மருமகளே விட்டுக்கு அழைச்சிக்கிட்டு வருரு. நாளேக்குப் பொளுது விடிஞ்சா அமாவாசை. அதுக் கப்புறம் நாளே இல்லே. இன்னிக்குத்தான் முகூர்த்த நாளாம். குஸ்தியைப் பார்க்காதயெ கௌம்பறதா இருந்தாங்களாம். 'நானும் குஸ்தி போடறேன்'னு கேள்விபட்டுப் பாக்க வந்திருக் காங்க. குஸ்தி முடிஞ்சதும் 'வண்டி கட்டணும்'னு நெனச்ச போது தகராறு வந்திடுச்சில்லேயா? அப்போ இதே யசவந்தராவ் என்னேத் தேடிப் பிடிச்சு, ராஜா சாஹேபைப் பார்த்து ரொக்கப் பரிசை வாங்கிக் கொடுத்தாரு. அவரு வண்டிலெயே வந்து பள்ளத்துக்கிட்டே எறங்கினேன். நான் வரத்துக்குள்ளே இப்படியெல்லாம் ரகளே செய்து பாதள்ளியின் மானத்தையே வாங்கிட்டீங்களே' என்றுன் தாதா.

'பாபு சாஹேபின் மாமா'ன்னு சொன்னுத் தீந்து போச்சு. 'இனிமேல் ஊரிலெ தலேயே காட்டமுடியாது' என்று சொல்லிப் பசப்பா பெருமூச்சு விட்டான்.

'ஜத்திப் போலீஸார் உங்களை எல்லாம் பிடித்துக் கையிலே வெலங்கு மாட்டறதா இருந்தாங்க. யசவந்தராவ் புண்ணியத் தாலே தப்பிச்சீங்க. அவர் மேலே கைநீட்டி யோக்யதையைக் கெடுத்துக்கிட்டீங்களே! இப்ப நான் போய் அவர் காலலே விழணும்' என்ருன் தாதா.

'சிநேகிதக்காரர் மானத்தைக் கெடுத்து ஜெயிலுக்கு அனுப்ப ஆசையாயிருந்தா அப்படிச் செய்' என்ருன் பசப்பா.

''இந்தப் பேச்செல்லாம் எதுக்குடா? இங்கிருந்து அவங்க ஊர் ரெண்டு மைல் இருக்குது. அதோ மரம், செடிகளெல்லாம் தெரியுதே. அங்கெதான். 'இன்னிக்கு ராத்திரித் தங்கி நாளைக்குச் சாப்பிட்டதும் போகலாம்'னு என்னிடம் சொன்னுர். எல்லாருமாப் போயி அவர் காலிலே விழுவோம்'' என்று தாதா நண்பர்களுக்கு அழைப்பு விடுத்தான்.

'மொகத்தைக் காட்ட முடியாதப்பா, மகராஜா! அது எங்களாலே முடியாது. நீ வேணுமானுப் போயிப் பாத்தூட்டு வா. எங்க பேச்சையே எடுக்காதே! அவருக்கு எங்க விஷயம் தெரிஞ்சா நாளைக்குப் பாபு சாஹேப் எங்களை ஊரைவிட்டே தொரத்திடுவான்' என்று லாடன் அழுதுகொண்டே சொன்னுன்.

'அது சரி, சிநேகந்தான் பெரிசு. நான் யசவந்தராவ் வீட்டுக்குப் போறேன். உங்கள் வழியே நீங்கள் போங்கள்' என்று சொல்லி, தாதா புறப்பட்டான். தோழர்கள் அவனுக்கு விடை கொடுத்து, மறுநாள் சீக்கிரமாகவே தங்களுடன் வந்து சேர வேண்டும்' என்று சொல்லியனுப்பினுர்கள்.

நண்பர்களை அனுப்பிவிட்டுத் தாதா ஊரை நெருங்கியபோது நாய்கள் வெறி பிடித்ததுபோல் குரைக்கத் தொடங்கின. அப்போதே இரவு ஏழு மணி நேரத்தைத் தாண்டிவிட்டது. கும்மிருட்டில் கிராமமே தூங்குவதுபோல் இருந்தது. நக்ஷத்திரங் களின் ஒளியில் தாதா, மணியக்காரர் யசவந்தராவின் வீட்டைக் கண்டுபிடித்துக் கதவைத் தட்டினுன். கிழவர் பயத்தால் வெகு நேரம் கதவைத் திறக்கவில்லை. பல தடவை கூப்பிட்டபின் தாதாவின் குரலைப் புரிந்துகொண்டு கதவைத் திறந்தார். தாதா உள்ளே நுழைந்ததும் கிழவர் மகிழ்ச்சியால் மெய்ம்மறந்து போனுர். கட்டி அணைத்துக்கொள்ளாத தோஷம். 'உன் நண்பர்கள் எல்லாம் எங்கே?' என்று கேட்டதற்கு அவர்களைத்

தான் 'சந்திக்கவே இல்லை' என்று தாதா பொய் சொல்ல வேண்டியதாயிற்று. கிழவர், தாதாவுக்குச் சுடச்சுட பாலைக் கொடுத்தார். ஒரு கம்பளியைக் கொடுத்துப் படுத்துக்கொள்ளச் சொன்னார்.

தாதா, கூடத்தில் வந்து படுத்தான். நன்றாகத் தூங்கினான். நாலாம் ஜாமத்தில் அவலக்குரலில், 'பெரீப்பா, பெரீப்பா!' என்று உளறினான். அதைக் கேட்ட யசவந்தராவ், கவலையுடன் அவனை எழுப்பி 'என்ன நடந்தது?' என்று கேட்டார்.

தாதா அழுதுகொண்டிருந்தான். முகத்தில் ஒரே பயம்! மணியக்காரரைக் கண்டவுடன் அவன் துக்கம் அதிகம் ஆயிற்று. 'கனவிலே உளறினேன், தாத்தா! ஒன்றும் நெனச்சுக்காதிங்க' என்றான். அவர், கனவின் விவரங்களைச் சொல்லும்படி கேட்டார். தாதா தனக்கு நினைவில் இருந்ததைச் சொன்னான். ''தாத்தா, கனவிலே பெரியப்பா, சிமனு, நான் எல்லோருமாகப் பண்டரிபுரத்துப் பஜனையோடு புறப்பட்டுப் போனோம். பாபு சாஹேப் மொதலிலேயே குதிரைமேல் புறப்பட்டுவிட்டார். வழியில் நல்லா இருட்டிவிட்டது. சிமனு, கால்கழுவ வெளிப்பக்கம் போனாள். பாருங்க தாத்தா! பெரிய நாகப்பாம்பு வந்து அவளைக் கடிச்சுடுத்து. 'ஓ'வென்று கூச்சலிட்டு நெடுஞ்சாண் கிடையாக விழுந்துவிட்டாள். பாபு சாஹேப் அவளைக் கொண்டுவந்து நானு பெரியப்பா முன்னாலே போட்டார். அப்பறம் நடந்தது நெனவில்லே. அப்பறம் நானு பெரியப்பாவுக்கும் புத்லா பாய்க்கும் கல்யாணம் நடந்துது. பந்தல் போட்டிருந்தது. நானு பெரியப்பா குதிரைலே வந்தார். அதுக்குள்ளே ராஜோஜி ராவ் ஸர்க்கார் வந்து, புலியாக மாறிப் பெரியப்பாவின் வயிற்றைக் கிழித்தார். அப்பத்தான் நான், 'பெரீப்பா, பெரீப்பான்னு' கத்தினேன்'' என்று சொல்லி, தாதா குழந்தை போல் அழத்தொடங்கினான்.

யசவந்தராவின் அநுபவம் முதிர்ந்த முகத்தில் கவலை படர்ந்தது. அவரும் படித்தவர் அல்ல. ஆனாலும் அறுபது வருஷத்து வாழ்க்கை அவருக்கு வாழ்வின் சுகதுக்கங்களின் ஆழத்தை நன்றாகத் தெரியவைத்திருந்தது. தாதாவின் கனவில் அவர் வாழ்வின் வரலாற்றையே கண்டார்.

'தம்பி, இது கெட்ட கனவு. நீ ஊரைவிட்டு வரும்போது உன் பெரியப்பாவுக்கு உடம்பு சரியில்லாமல் இருந்ததா?' என்று அநுதாபத்துடன் கேட்டார்.

'நான் ஊரைவிட்டு அஞ்சு நாள் ஆச்சு, தாத்தா! நான் வரும்போது பெரியப்பா சௌக்கியமாகத்தான் இருந்தார். 'நான் குஸ்திக்குப் போறேன்'னு சொன்னேன். 'ஜயத்தோடெ திரும்பிவா'ன்னு ஆசீர்வாதம் செஞ்சு அனுப்பிஞரு'' என்ற தாதா ஒவ்வொரு பேச்சுக்கும் விக்கினன்.

'பெரியப்பா மேலே உசிரையே வெச்சிருக்கெ போல இருக்கே, தம்பி!' என்று மணியக்காரர் கேட்டதும், தாதா தன் வசம் இழந்து அவர் மடியில் விழுந்து அழத் தொடங்கினன்.

'எழுந்திரு, தம்பி! ஆஞ்சநேயர் கோயிலுக்குப்போய் விளக்கேற்றிவிட்டுக் கும்பிட்டுவிட்டு வா' என்று ஆறுதலாகச் சொன்னர், யசவந்தராவ்.

தாதாவின் மனம் குழம்பிக்கிடந்தது. கோயிலுக்குப்போய் விளக்கேற்றினன். விடிய ஒருமணி நேரம் இருந்தது. கோயில் திண்ணையின் ஓரத்தில் உட்கார்ந்து தாதா பெருமூச்சு விட்டான்.

தன்னையும் அறியாமல் தீவிரமான ஒரு பாசம் தாதாவின் வயிற்றைப் பிசைந்தது. கண் எதிரில் நாஞ பெரியப்பாவின் அழகிய தோற்றம் வந்து நின்றதுபோல் இருந்தது. பெரிய மீசை, கூரிய பார்வை, சிலேதாருக்கு உரிய தடி. இவற்றை எல்லாம் பார்த்தபோது தாதாவுக்குத் தன் குழந்தைப் பருவம் நினைவுக்கு வந்தது. தாதாவுக்கு அப்பா லக்ஷ்மணனைவிடப் பெரியப்பாவின் சலுகையே அதிகமாக இருந்தது. எண்ணத்தின் ஓட்டம் வந்தவழியைத் திரும்பிப் பார்த்தது. இப்பொழுது வயது கூடிய தாதா, ஒரு காலத்தில் இளமையின் உத்ஸாகப் பூரிப்பில் இருந்தான். ருக்கம்மாப் பெரியம்மா குறுக்கே நீண்ட குங்குமம் இட்டுக்கொண்டு தினந்தோறும் தனக்குப் பால் கொடுத்ததைத் தாதா என்றும் மறக்கவில்லை. அவன் ஒரு வயதுக் குழந்தையாக இருந்தபோதே தாயை இழந்தவன். அன்று முதல் நாஞ பெரியப்பாவின் தோளும் ருக்கமாப் பெரியம்மாவின் மடியும்தான் அவனுக்கு இருப்பிடம். தாதாவின் கண்ணீர் மற்றொரு முறை வெள்ளமாக வழிந்தோடியது.

'தாதா, மல்லஞக வேண்டும்' என்பதில் நாஞவுக்கு ஆசை அதிகம். அதஞல் நாஞ எருமை வாங்கிக் கட்டிஞர். தாதா, எத்தனை சாப்பிட்டாலும் அவருக்குத் திருப்தி ஆகாது. சிமஞ பிறந்தபோது, ''தங்கச்சி பிறந்திருக்கிருளடா, தாதா! தம்பியா இருந்தா உனக்கு ஜோடியா மல்லஞகத் தயாரித்திருப்பேன். 'உனக்குத் தீனி குறைந்துவிடும்' என்று கடவுளே அப்படிச் செய்துவிட்டார்'' என்று நாஞ சொல்வது வழக்கம். அவர்

தொட்டதெல்லாம் பொன் ஆயிற்று. நல்ல பொருள்களைக் கண்டவுடன் அதைப் புரிந்துகொள்ளும் தனித்திறமை அவருக்கு இருந்தது. விதைத் தானியத்தில் சிறந்தவற்றிலிருந்து நல்ல பொலி காளைவரைக்கும் அவர் பார்த்துச் சொன்னால் அதற்கு மேல் அப்பீல் இல்லை. அந்த நாணு பெரியப்பாவின் தாலீம் கானாவில் தயாரானவன் அவன்.

ருக்கமாப் பெரியம்மா இறந்தபின், நாணு பெரியப்பா, 'தங்கள் வீட்டிலேயே வந்திருக்க வேண்டும்' என்று தாதா பிடிவாதம பிடித்தான். ஆனால் நாணு சம்மதிக்கவில்லை. புத்லாபாய், மாளிகையில் வந்து இருக்கச்சொல்லி எவ்வளவோ வற்புறுத்தியும் நாணு முதலில் அசையவில்லை. சிமணாவைக் கவனிப்பது அவர் தலைப்பொறுப்பாக இருந்தது. கல்யாணம் ஆகும் வரையில் அவள் தன் வீட்டிலேயே சுதந்திரமாக இருக்க வேண்டும். 'தான் அநாதை' என்ற அநுபவம் அவளுக்கு ஏற்படாமல் அவளை வளர்க்க வேண்டும். 'அவள் தலையில் அக்ஷதை விழுந்த பிறகு தாதாவுடன் போய் இருந்துவிட வேண்டும்' என்று அவர் தீர்மானித்திருந்தார்.

கோலாப்பூருக்குப் போகும்போதுகூடச் சிமணாவை அரை மனத்தோடுதான் மாளிகையில் விட்டுப்போனார். திரும்பி வந்த பின் வேறு வீடு பார்க்கும் எண்ணமும் இருந்தது. ஆனால் புத்லாபாய், 'சிமணாவைப் பிரிந்திருக்கத் தன்னால் முடியாது' என்று கெஞ்சிக் கேட்டதால் நிராப்பொறியாக அவளுடன் நாணுவும் மாளிகையில் தங்கினார்.

'கொஞ்சநாளாகப் பெரியப்பா ஏனோ ரொம்பத் தளர்ந்து போய்விட்டார். இரும்பு போன்ற பழைய உடம்பு சோர்ந்து விட்டது. இனிமேல் பெரியப்பாவை நானே கவனமாகப் பார்த்துக்கொள்ள வேண்டும் அவருக்கு எந்தத் தொந்தரவும் கொடுக்கக்கூடாது. இப்பொழுது நிலைமை எப்படி இருக்கிறதோ? சின்னச்சின்ன வியாதிக்கெல்லாம் தளர்ந்துவிடும் உடம்பல்ல அது' என்று எண்ணமிட்டான் தாதா. கனவில் ரத்தத்தில் தோய்ந்து காணப்பட்ட உடலை நினைத்தபோதே தாதாவின் உடம்பு நடுங்கியது.

அப்பொழுதுதான் பொழுது விடிந்தது. தெருவில் ஜனங்கள் நடமாடத் தொடங்கினார்கள். ஆனால் தாதாவின் பார்வையில் எதுவுமே படவில்லை. தாதாவின் தைரியம் ஒப்பற்றது. அவன் உறுதியாகக் காலடிவைத்து எதிரே வந்தால் படுத்திருக்கும் புலிகூட எழுந்திருந்து வழி விடத்தான் வேண்டும். அப்படிப் பட்டவன் இன்று அடியோடு தைரியத்தை இழந்துவிட்டான். அவன் கனவில் கண்ட காட்சி, அவன் உள்ளத்தில் பெரும்

பயத்தை நிறைத்திருந்தது. அவனுடைய உயிர், தன்னுடைய இனம்புரியாத மொழியில் துன்பக் கதையைச் சொல்லிக் கொண்டிருந்தது.

நாணு பெரியப்பாவைப் பற்றித் தாதாவின் மனத்தில் என்றும் இல்லாத குறுகுறுப்பு ஏற்பட்டது. உடனே ஊருக்குப் புறப்படத் துடித்தான். ஆனால் யசவந்தராவ் இடம் கொடுக்க வில்லை. மற்போரில் வெற்றிபெற்ற வீரனுக்குச் சன்மானமும் விருந்தும் கொடுக்காமல் அப்படி அனுப்பிவிட முடியுமா? தவிர, தாதா, அவரைத் திருடர்களிடமிருந்து காப்பாற்றியிருக்கிறான். அவருடைய சொத்தையும் மருமகளின் மானத்தையும் காப்பாற்றியிருக்கிறான். தாதா, எவ்வளவோ கேட்டுக்கொண்டும் ஊருக்குப் போக உத்தரவு கிடைக்கவில்லை. தாதா கடைசியாக ஒரு தந்திரம் செய்தான். 'தன் நண்பர்களைத் தேட ஐக்திக்குப் போக வேண்டும்' என்றான். 'அதற்கு வேண்டுமானால் ஆளை அனுப்புவோம்' என்று அதையும் மறுத்துவிட்டார். இதனால் தாதா, அமாவாசையன்றும் பிரதமையன்றும் யசவந்தராவின் விருப்பத்துக்கு இணங்க அஜராணி (ஓர் ஊர்)யிலேயே தங்க வேண்டியதாயிற்று. ஆனால் அவன் மனத்தில் அமைதி இல்லை மணியக்காரரின் வற்புறுத்தலுக்காகத் தங்கினான்.

மறுநாள் சாப்பிட்டபின் தாதா ஊருக்குப் புறப்படத் தயார் செய்துகொண்டிருந்தான். அப்போது பாதள்ளியில் இருந்து வந்த ஹரிஜனன் ஒருவன் யசவந்தராவை வணங்கி ஓர் ஓலையைக் கொடுத்தான்.

யசவந்தராவ் எழுத்து வாசனையே அறியாதவர். தாதாவே எழுத்துகளைக் கண்ணால்கூடப் பார்த்திருக்கமாட்டான். அந்த ஊரில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் இரண்டு பிரஹஸ்பதிகள் தாம். ஒருவர் கிராமக் கர்ணம்; மற்றொருவர் அதே ஊரில் திண்ணைப் பள்ளிக்கூடம் வைத்திருக்கும் ஆசிரியர். கர்ணம் யாருக்காகவோ கிரய பத்திரம் எழுத விஜாபூருக்கு (பீஜப்பூர்)ப் போயிருந்தார். அறுவடைக் காலத்தில் சிறுவர்கள் வயல் களுக்குப் போய்விடுவதால் வாத்தியார் பள்ளிக்கூடத்தை மூடி விட்டுத் தம் ஊரில் நடக்கும் அறுவடைக்குப் புறப்பட்டுப் போய் விட்டார். அதனால் வந்த கடிதம் அவ்விருவருக்கும் புரியாத புதி ராக இருந்தது. அந்த ஆளையே கேட்டு விஷயத்தைத் தெரிந்து கொள்ள முயன்றார்கள். அதுவும் பலிக்கவில்லை. அவன் பாதள்ளிக் காரன் அன்று. அந்த ஊர் ஹரிஜனுக்கு உறவினன். பாதள்ளி ஆள் தனக்கு உடம்பு சரி இல்லாததால் கடிதத்தை இவனிடம் கொடுத்து யசவந்தராவிடம் கொடுக்கச் சொல்லியிருந்தான்.

'பாதள்ளியில் பஞ்சம்! அங்கே உணவே கிடைக்காத நிலைமை' போன்ற விஷயங்களை அவன் சொன்னான். தன் உறவின னுடைய நோயைப்பற்றியே அவன் சொல்லத் தொடங்கினான். 'வயத்துக்கு இல்லாததாலே இருந்த மக்கின தானியங்களை எல்லாம் தின்னுட்டானுங்க. ராவுலே வயித்தைக் கலக்கிப் பேதியாயிடுச்சு. தரையோடு தரையாப் படுத்துட்டானுங்க' என்று திரும்பத்திரும்ப சொல்லிக்கொண்டே இருந்தான். கல்வி அறிவு இல்லாதவர் ஆனாலும் யசவந்தராவின் அநுபவம் பெற்ற கண்ணுக்குக் கடிதத்தின் செய்தி ஓரளவு தெரிந்துவிட்டது. பொதுவாகச் சாவுச் செய்தியைத்தான் ஹரிஜன் மூலமாக அனுப்புவது வழக்கம். 'பாதள்ளிச் செய்தி க்ஷேமகரமான தன்று' என்பதை அவர் புரிந்துகொண்டார். இருந்தாலும் கடிதச் 'செய்தியைத் தெரிந்துகொள்ளாமல் புறப்படுவது தம் கௌரவத்துக்குக் குறைவு' என்று நினைத்தார். அதனால், 'தாதா, நீ முன்னே போய்ச் செய்தி அனுப்பு. அதுக்கப்புறம் நாங்க வரோம்' என்று சொல்லி அவனை அனுப்பினார்.

தாதா, தாமதமாகவே ஊர்போய்ச் சேர்ந்தான். சாதாரண மாக எட்டு நாழிகை வழியை நாலு நாழிகையில் கடப்பது அவனுக்கு எளிதாக இருக்கும். ஆனால் இப்போது மனம் சரியாக இல்லை. அதனால் ஒரு நாழிகைப் பொழுதிருக்கும்போது ஊர் போய்ச் சேர்ந்தான். லக்ஷ்மணன் பாளாச்சாரின் வீட்டிலிருந்து புறப்பட்டவன், ஆற்றுக்குப்போய் நானுவின் சாம்பலைக் கரைத்து விட்டு ஸ்நானம் செய்து வீட்டுக்குவந்தான். சற்று நேரம் படுத் திருந்துவிட்டு எழுந்திருந்து ஊரெல்லாம் அலைந்து தாஸகாமுக்கு ஆளை அனுப்ப ஏற்பாடு செய்துவிட்டுத் திரும்பி வந்திருந்தான். தாதா அப்போதுதான் வீடுபோய்ச் சேர்ந்தான். லக்ஷ்மணன் வாயிலாக நானு பெரியப்பா இறந்த செய்தியைக் கேட்டுக் கல்லாகச் சமைந்து உட்கார்ந்துவிட்டான்.

## 6

தாதா ஊருக்கு வந்தபின் வழிதவறிக்கூடத் தாலீம்கானுப் பக்கமே போகவில்லை. இடிபோன்ற சாவுச் செய்தியால் தாக்குண்டு வீட்டிலேயே படுத்துக் கிடந்தான். 'ஜத்தியில் பஞ்சாப் லாமாவை ஜயித்த தாதாவுக்கு மாலை போட்டு ஊர்வல மாக அழைத்துப்போக வேண்டும்; அவன் அன்று போட்ட

பிடிகளை அவனிடமே கற்றுக்கொள்ள வேண்டும்' என்ற உத்ஸாகத்தில் இருந்த சில உள்ளூர் மல்லர்கள் இதனல் ஏமாற்றம் அடைந்தார்கள். அவனுடைய வீட்டுக்குப்போய்த் துக்கம் விசாரித்து ஆறுதல் சொன்னுர்கள். நாணுவின் சாம்பலை ஆற்றில் கரைப்பதற்கு லக்ஷ்மணனுக்கு உதவியாகச் சுடுகாட்டுக்கும் இவர்கள் போயிருந்தார்கள். தாதாவின் ஆழ்ந்த மௌனத்தைக் கலைத்து அவனைப் பேசவைக்கும் தைரியம் மட்டும் யாருக்கும் எழவில்லை.

தாதாவின் வீடு அப்படியொன்றும் பெரிதன்று. மூன்றங்கணக் கூடம் ஒன்று; மூன்றங்கணச் சமையல் அறை இவ்வளவு தான். கூடத்துக்கு முன் உள்ள திறந்த முற்றத்தில் எருமைகள் கட்ட ஒரு கொட்டகை; மாடுகளைப் பக்கத்து வீட்டுக் கொட்டகையிலேயே கட்டியிருந்தார்கள். நாணு அந்த வீட்டை இருநூறு ரூபாய் ரொக்கம் கொடுத்து வாங்கியிருந்தான். தற்சமயம் அதன் சமையல் அறை காலியாக இருந்தது. கூடத்தையும் மற்ற அறைகளையும் தானியங்களும் விதைகளும் விவசாயக் கருவிகளும் வைக்க நாணு உபயோகப்படுத்தி வந்தான். நாணு, லக்ஷ்மணன் இருவரும் தனித்தனியாக இருந்தார்கள். அவர்களுக்குக் 'கடன் உடன் பற்றிய தகராறு வரக்கூடாது' என்று அவர்களுடைய தகப்பனுரான சிலேதார் கோபாலன் இருந்தபோதே நிலத்தை இருவருக்கும் பங்கிட்டுக் கொடுத்துவிட்டார். அதனல் இருவரும் பிரிந்துவிட்டதாகச் சர்க்கார் ரிகார்டுகளில் கண்டிருந்தது. ருக்குமா தனியாக இருந்த போது சமையல், சாப்பாடெல்லாம் ஒன்ருகவே இருந்தது. லக்ஷ்மணனுக்குக் கல்யாணம் ஆன பிறகு நிலைமை மாறியது. அண்ணன் தம்பிகளுக்குள் இருந்த அந்நியோன்னியமும் அன்பும் ஓரகத்திகளுக்குள் இருக்கவில்லை. அதன் பயனுகக் குடித்தனம் இரண்டாயிற்று. மாடு, கன்றுகள் மட்டும் பொதுச் சொத்தாக இருந்தன. லக்ஷ்மணன் வாழ்க்கை, நிலங்களைச் சாகுபடி செய்வதிலேயே கழிந்தது. குத்தகைக்குப் பூமி எடுத்தல், கொடுக்கல், வாங்கல் முதலிய விவகாரங்களை நாணு பார்த்துக் கொண்டான். தொழிலில் அண்ணன் தம்பிகளுக்கு மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருந்தது. லக்ஷ்மணன், நிலத்தில் உழைத்து அங்கேயே உயிரைவிடும் குடியானவன். அரசாங்க விவகாரத்தைக் கவனித்துக்கொண்டிருந்த நாணு, பிரமுகர்களுள் ஒருவன் ஆகிவிட்டான். அண்ணன் தம்பிகளின் அன்பு மட்டும் ஒரு நாளும் குறையவில்லை.

நாணு இருந்தபோது லக்ஷ்மணனுக்குக் குடும்பக் கவலையே இல்லை. மாளிகையில் 'மாமா சாஹேப்' என்று அழைக்கப்பட்ட

நாணு, குடும்பத்தைத் திறமையுடன் நிர்வகித்தான். இப்பொழுது அந்தச் சுமையும் லக்ஷ்மணன் தலையிலேயே விழுந்தது. இந்த நிலைமையை எண்ணி எண்ணி நொந்துபோன தாதா, வீட்டைவிட்டு நகரவில்லை.

தாதாவின் 'தாலிம்காணு' தோழர்களுக்கு மிகவும் கவலை உண்டாயிற்று. நாணுவின் சாவைப்பற்றிய செய்திகள், அவர்களுக்கு அதிகமாகத் தெரியாவிட்டாலும் காற்றுவாக்கில் சில செய்திகள் அவர்களுடைய காதில் விழுந்தன. பாபு சாஹேபுக்கும் சிமணுவுக்கும் இடையே அக்கிரமமான தொடர்பு இருந்ததாக அவர்கள் ஊகித்தார்கள். அதற்குப் 'படதையா சாமியார் உடந்தையாக இருக்கலாம்' என்ற சந்தேகமும் இருந்தது. எப்படியோ பாதி உண்மையும் பாதி பொய்யுமாக ஒரு கதை மக்களிடையே பரவியது. கார்ப் பௌர்ணமியின் மறுநாள் ஊரைவிட்டுப்போன படதையாவைப் பாபு சாஹேப் தீபாவளிப் பண்டிகைக்கு வரவழைத்துவிட்டான். மடத்தில் அவர்களுடைய அந்தரங்க ஆலோசனை நடந்தது. சிமணு, இரண்டு நாட்கள் 'வயிற்றுவலி' என்று அழுதாள். எள் அமாவாசைக்கு முதல்நாள் சௌக்கியமாக இருந்த நாணு மறுநாள் பொழுது விடிவதற்குள் இறந்துவிட்டான். 'பிணத்தை ஆஸ்பத்திரிக்கு அனுப்பவேண்டும்' என்று சொன்னபோது பாபு சாஹேப் புத்லாபாயின் துணிமணிகளைப் பெரிய குறும்பன் கடையில் வைத்து ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் வாங்கி வந்து பஞ்சாயத்தாருக்குக் கொடுத்தான். 'இதய நோயால் நாணு இறந்துவிட்டான்' என்று கௌடர் தீர்ப்புச் சொல்லி விவகாரத்தை மெழுகிவிட்டார்.

இது ஒவ்வொரு வீட்டிலும், ஆற்றங் கரையிலும், தாலீம் காணுவிலும் பரவி வளர்ந்த கதை. இதைச் சொன்னவர்களும் கேட்டவர்களும் தமது கற்பனையை உபயோகித்து அதை உயிருள்ள செய்தியாக மாற்றினார்கள். ஆனால் இதன் பொறுப்பை மட்டும் யாரும் ஏற்கவில்லை. யாரைக் கேட்டாலும் 'நமக்கு என்ன ஐயா, தெரியும்? எங்கள் காதிலே விழுந்தது இது' என்றே சொன்னார்கள். நாணு இறந்துவிட்டதால் லக்ஷ்மணன், 'தாதாவை விவசாயத்தில் போட்டுவிடுவான்' என்று அவனுடைய தோழர்களுக்கெல்லாம் பயம். 'ஜத்தி மைதானத்தில் தன் திறமையை நிலைநாட்டிய தாதா, எருதுகளுக்கு வால் பிடிக்க வேண்டுமா?' லக்ஷ்மணனுடைய மாடு, கன்றுகள் அவனுடைய வேட்டகத்தில் இருந்தன. 'அவற்றைக் கவனிக்க வேண்டும்' என்றால் தாதா நிச்சயமாக ஊரை விட்டுப் போகவேண்டியிருக்கும்.

அதைத் தவிர மற்றொரு விஷயமும் அவர்களைக் கவலைக்கு உள்ளாக்கியது. 'சிமணாவின் விஷயம் அதுவரையில் தாதாவுக்குத் தெரியாது. செய்தி, அவன் காதில் விழ வேண்டும்' என்று சிலர் விரும்பினார்கள். 'தெரிந்தால் அனர்த்தம் நேரும்' என்று சிலர் பயந்தார்கள். இதனால் அவனிடம் சொல்லலாமா? வேண்டாமா? என்ற தயக்கத்திலேயே இருந்தார்கள்.

யசவந்தராவின் வரவால் தாதாவின் நண்பர்களுடைய பிரச்சினை தீரும் வேளை அனாயாசமாகவே வந்தது. பாபு சாஹேப் கடிதத்தைப் படித்தபின் பாபு சாஹேபின் மனைவியான தன் பெண் ரத்தினாவை அழைத்துப் போவதற்காக அவர் வந்திருந்தார். பாதள்ளிக்கு வந்தவுடன் எள் அமாவாசையன்று திடீரென்று நானா இறந்துவிட்ட செய்தி அவருக்குத் தெரிந்தது. "அந்தச் செய்தியை முதலிலேயே தெரிவித்து ஏன் பயப்படுத்த வேண்டும்? 'ரத்தினாவை அழைத்துக்கொண்டு போகவேண்டும்' என்பதை எழுதி, 'அப்புறம் சொல்லிக்கொள்ளலாம்' என்று இருந்தேன்" என்றான் பாபு சாஹேப். அதைத் தவிர, நானா இறந்ததால் பஞ்சாயத்தார் தன்னைத் தவறாக நினைத்துக் கொண்டு, தனக்கு விரோதமாக இருப்பதாகவும் சொன்னான். ஆனால் சிமணாவின் செய்தியைப் பற்றித் தவறிக்கூட ஒரு வார்த்தை சொல்லவில்லை.

சிலேதார் நானா இறந்த செய்தியைக் கேட்டபோது யசவந்த ராவுக்கு ஏதோ தீங்கு நேரப் போவதாகத் தோன்றியது. 'ஜாகீர்தார் மாளிகையின் அபிமானத்தைப் பெற்ற வஸ்து ஒன்று போய்விட்டது' என்று அவர் வருந்தினார். சிலேதார் 'லக்ஷ்மணனை யும் தாதாவையும் பார்த்து ஆறுதல் சொல்ல வேண்டியது தம் முதல் கடமை' என்று நினைத்தார். ஆகையால் காலையில் எழுந்தவுடன் லக்ஷ்மணனுடைய வீட்டுக்குப் போனார்.

அவர் வீட்டுக்குள் நுழையும்போது தாதா கயிறு திரித்துக் கொண்டிருந்தான். மணியக்காரரைக் கண்டதும் அவனுக்குத் துக்கம் பொங்கி வந்தது. யசவந்தராவ்தான் அவனுக்கு என்ன சமாதானம் சொல்லுவார். 'அந்தச் சமயத்தில் மௌனமாக இருப்பதே நல்லது' என்று தோன்றியது. சற்று நேரத்துக்குப்பின் எல்லா விவரங்களையும் கேட்டுக்கொண்டார். தாதா 'பெரியப்பா வின் மரணச் சடங்கு முடிந்தபின் போகலாம், தாத்தா' என்று வற்புறுத்தினான்.

யசவந்தராவுக்கும் அதை மறுக்க மனம் வரவில்லை. 'அதற் கென்ன? இருந்தால் போகிறது, தம்பி' என்று பதில் சொன்னார்.

அஜராணி மணியக்காரரான யசவந்தராவ் லக்ஷ்மணன் வீட்டுக்குப் போயிருக்கும் செய்தியைக் கேள்விப்பட்டுப் பாதள்ளி சங்கரப்ப கௌடர், அங்கே ஓடிச்சென்றார். முன்பு புத்லாபாய், மாளிகையை வசப்படுத்திக்கொள்ள வந்தபோது, யசவந்தராவ், சங்கரப்ப கௌடரின் உதவியை நாடினர். அப்பொழுதே இருவரும் மனமொத்த நண்பர்கள் ஆனார்கள். சங்கரப்ப கௌடரின் சொந்த ஊர் அபிமானம் யசவந்தராவுக்குப் பிடித்திருந்தது. யசவந்தராவின் நற்குண நற்செய்கைகள் சங்கரப்ப கௌடரைக் கவர்ந்தன. பாபு சாஹேப் அவருடைய மாப்பிள்ளை ஆனதால் 'ஊருக்கு நல்லதைச் செய்வான்' என்று கௌடர் நம்பினர். ஆனால் இப்பொழுது கதையே மாறிவிட்டது. பாபு சாஹேப், படதையாவின் பக்க பலத்தைத் தேடிக்கொண்டு ஊருக்கே தூமகேதுவாக மாறியிருந்தான். கௌடருக்கு இப்பொழுது முன்னைப்போல் சாமியாரிடம் பக்தி இல்லை. கிராம வாழ்வு கெட்டுப்போனதால் அவருடைய மனம் வெறுப்படைந்தது. இவற்றையெல்லாம் கௌடர், யசவந்தராவிடம் சொல்ல விரும்பினர்.

தாதாவைப் புகையிலை வாங்கிவரக் கடைக்கு அனுப்பி விட்டுக் கௌடர் பேச்சைத் தொடங்கினர்.

'ஊரில் இது வரையில் அசைக்க முடியாத ஒற்றுமை இருந்தது, மணியக்காரரே! உங்கள் மாப்பிள்ளை அதைச் சிதைக்கத் தொடங்கியிருக்கிறான். வயிற்றுக்கு இல்லாத ஏழை மக்கள், இன்று என் தானியக் குழியைக் கொள்ளையடித்தால் நாளைக்கு மாளிகைக் குழிகளை விட்டுவைப்பார்களா?' என்று சங்கரப்ப கௌடர் உணர்ச்சிவசப்பட்டுப் பேசினர்.

தண்ணீருக்காக ஆற்றுக்குப் போயிருந்த லக்ஷ்மணன், வாயிற்படி ஏறுவதைக் கண்ட கௌடர், பேச்சை மாற்றி, 'நல்ல வேளை; உங்கள் ஊர்ப்பக்கம் மழையும் விளைச்சலும் நன்றாக இருக்கின்றன. பஞ்சத் தொல்லை உங்களுக்கு இல்லை' என்றார்.

'அது உண்மைதான்; ஆனால் திருடர்கள் வழிப்பறி செய்யத் தொடங்கியிருக்கிறார்கள். எள் அமாவாசையன்று ராத்திரி, தாதாவின் புண்ணியத்தால் திருடர்களிடமிருந்து எங்கள் வண்டி தப்பியது' என்று யசவந்தராவ், தம் சமீபகால அநுபவத்தைச் சொன்னர்.

'ஆங்! அப்படியா! அவங்கள்ளாம் உங்கள் பாபு சாஹேபின் புலிவேட்டைக் கூட்டத்தார்கள்தாம். அன்று குஸ்தி பார்க்க ஜத்திக்குப் போயிருந்தார்கள். சுற்றிலும் பத்துக் காத தூரம் வரைக்கும் எங்கே வழிப்பறி நடந்தாலும் அது எங்கள் ஊர்

ஆட்களின் வேலைதான்' என்று சொல்லிக்கொண்டே ஹுக்காவை உறிஞ்சினார் கௌடர்.

யசவந்தராவ் திகைத்தார். 'பாபு சாஹேபின் ஆட்களா!' அவரால் இந்த அவமானத்தைத் தாங்க முடியவில்லை. அவர் கண்டோ பள்ளாளனுடைய சரித்திரப் பிரசித்தி பெற்ற வமிசத்தைச் சேர்ந்தவர் தம் வமிசத்தைப்பற்றி அவருக்கு மிகப் பெருமை வந்தவர்களிடமெல்லாம் அந்தக் கதையைச் சொல்லி, 'கண்டோ பள்ளாளன் பிடித்த கத்தி' என்று ஒரு கத்தியைக் காண்பிப்பது அவர் வழக்கம். அதுபோலவே 'உயர்ந்த குடும்பத்தவன்' என்று கனகேரி மணியக்காரனை பாபு சாஹேபுக்குப் பெண்ணைக் கொடுத்தார். 'அப்படிப்பட்ட குடும்பத்துக்குப் பழியைக் கொண்டு வரும் ஈனச் செயல்களில் பாபு சாஹேப் இறங்கிவிட்டானே!' என்று வருந்தினார். 'இதற்குச் சாட்சி என்ன?' என்று அவர் மனம் கேள்வி போட்டது.

'என் மாப்பிள்ளை அப்படிப்பட்டவன் அல்லவே!' என்று சொல்லிக்கொண்டார்.

'ஜாகீர்தார் பிடித்திருக்கும் சிநேகம் எப்படிப்பட்டது? என்பதை வேண்டுமானால் லக்ஷ்மணனிடம் கேட்டுக்கொள்ளுங்கள்' என்றவண்ணம் கௌடர் மறுபடியும் ஹுக்காவை உறிஞ்சினார்.

'கௌடர் சொன்னதைக் கேட்டாயா, லக்ஷ்மணா?' என்று லக்ஷ்மணனைக் கேட்டார் யசவந்தராவ் லக்ஷ்மணன் அழுமூஞ்சியாகவே பதில் சொன்னான்.

'மணியக்காரரே! உங்கள் மாப்பிள்ளையா? ஏழை எளியவர்களின் கௌரவமே பறிபோகுது... வேணுமானால் உங்க மகள் ரத்தினக்காவையே கேளுங்கள்' என்றான்.

லக்ஷ்மணன் அடுப்புப் பற்றவைக்கும் தடபுடலில் இருந்ததைக் கண்ட யசவந்தராவ், 'சமையல் ஜோலியை வச்சுக்காதே, லக்ஷ்மணா! நீயும் தாதாவும் மாளிகைக்கே சாப்பாட்டுக்கு வந்துவிடுங்கள்' என்று சொல்லி, மாளிகையை நோக்கி நடந்தார். 'அப்புறம் பார்க்கிறேன்' என்று சொல்லிக்கொண்டே கௌடரும் புறப்பட்டார் வழியில் எதிர்ப்பட்ட தாதா, அவரிடம் புகையிலையைக் கொடுத்தான். அவனிடமும், 'மாளிகைக்கு வா' என்று சொல்லிவிட்டு. யசவந்தராவ், ராஜ புரோகிதரான 'பாளாச்சாரைத் தரிசிக்க வேண்டியது அவசியம்' என்று அங்கே போனார். பாளாச்சார், மணியக்காரரை ஆதரவுடன் வரவேற்றார் நலம் விசாரித்துக்கொண்ட பின் பேச்சு, பழைய விஷயத்துக்கே வந்தது.

'மணியக்காரரே, உங்க பாபு சாஹேப் நெருப்புடன் விளையாடுகிறுன்! படதையாவின் சகவாசம் நல்லதைச் செய்ய வில்லே' என்று சற்று வருத்தத்துடனேயே பாளாச்சார் சொன்ஞர். நடந்ததை எல்லாம் விவரமாகச் சொல்லும்படி யசவந்தராவ் கேட்டுக்கொண்டார்.

''படதையாவின் சிநேகம் ஜாகீரின் கௌரவத்தை அழித்துக் கொண்டிருக்கிறது! 'மாளிகை' என்ருல் ஊராருக்கெல்லாம் நல்ல அபிமானம் இருக்கிறது. அதை இந்த இருவரும் சேர்ந்து ஒழிச்சுடுவார்கள்போல் இருக்கிறது. மாளிகையும் மடமும் அழிஞ்சுவிட்டால் பாதள்ளியே பாழாஞப்பலேதான்!'' என்ற பாளாச்சாரின் கண்களில் துக்கம் நிழலாடியது. கடந்த காலத்தின் சிறப்புக்களெல்லாம் அவர் மனக் கண்முன் தோன்றி யிருக்க வேண்டும்.

''எப்படிப்பட்ட மடம்! எப்படிப்பட்ட குரு ஸ்தானம்! அதில் இந்தச் சனி வந்து உட்காந்திருக்கிறது. குரு பாதைய சுவாமிகள் இருந்தபோது ஆவணி மாதத்தில் மடத்தில் அகண்ட சிவ பஜனேயும் புராண படனமும் நடந்துவந்தன. நான் சிறுவஞக இருந்தகாலத்துச் சங்கதி இது, மணியக்காரரே! அப்போது எங்கள் பெரியவர்கள் கோபாலகிருஷ்ணன் கோயிலில் புராணம் சொல்லுவார்கள். சுவாமிகள் அங்கே தவருமல் வருவார். அவர் வராவிட்டால் 'இன்னிக்கு அண்ணு வரவில்லே; புராணம் இல்லே' என்று சொல்லி எங்கள் பெரியவர்கள் சுவடியைக் கட்டி விட்டு மங்களாரத்தி எடுத்துவிடுவார்கள். இப்படிப்பட்ட ஸ்தானத்துக்கு இந்த மகராஜன் வந்தது உங்கள் புண்ணியத்தால் தான்! என்பதால் இவற்றையெல்லாம் உங்களிடம் சொல்ல வேண்டியிருக்கிறது'' என்ருர். பாளாச்சாருடைய எண்ணம் பழைய நினேவுகளின் பின்னேயே ஓடிக்கொண்டிருந்தது. யசவந்த ராவ், கன்னத்தில் கையை வைத்தவண்ணம் உட்கார்ந்திருந்தார்.

'''இந்தப் படதையா, குருபாதைய சுவாமிகளின் தமக்கை யின் பிள்ளே; படித்தவன்; அவருடைய பரம்பரைப் பெருமையைக் காப்பாற்றுவான்' என்று உங்கள் ஊர்மக்கள் கூட்டமாகச் சேர்ந்து அவனே அழைச்சிண்டு வரவில்லேயா? சுவாமிகளின் சொந்த அண்ணன் மகன், படிப்பு இல்லாதவன் என்பதால் அவனே ஒதுக்கிவிட்டு உங்கள் எல்லோருடைய பேச்சுக்கும் மதிப்புக் கொடுத்து இவனுக்குப் பட்டங் கட்டிஞர்கள். உங்கள் ஊர்ப் பொம்மஞட்டி, யார்... அவள் பெயர்... ஆங், தானம்மா என்பவளே அழைத்துக்கொண்டு வந்து மடத்தில் வைத்தான். 'கணவனே இழந்தவள்' என்பதால், 'அவளுக்கு ஆதரவு கொடுத்

திருப்பான்' என்று ஜனங்கள் நினைத்தார்கள். அன்றிலிருந்து மடத்து நிகழ்ச்சிகள் எல்லாமே மாறிவிட்டன. புராணம், பஜனை எல்லாம் கோவிந்தா! விடிய விடியக் குடித்துவிட்டு ஸ்பேட் ஆட்டம் நடக்கிறது. வேலை இல்லாத சோம்பேறிகளுக்கு ஆதரவு கெடச்சாப்பிலெ ஆச்சு. பசித்து வந்தவர்களுக்கு ஒரு துண்டு ரொட்டியும் ஒரு தம்ளர் தண்ணீரும் கொடுப்பதுகூட நின்று போயிற்று. கௌரவம் உள்ளவர்கள் அங்கே கால்வைக்க மாட்டார்கள். ஊர்வம்பு பேசுபவர்கள் மட்டும் கூடுகிறார்கள். படதையா போட்ட கோட்டை அவர்கள் தாண்டுவதில்லை. உங்கள் பாபு சாஹேப் அவர்களுக்கெல்லாம் வலது கையாக இருக்கிறான். 'அவர்கள் வச்சாக் குடுமி, சரைச்சா மொட்டை!' அது எக்கேடோ கெட்டுப் போகட்டும். ஆனால் அவர்கள் செய்யும் பாபத்தின் பலனை ஊரார் அநுபவிக்கவேண்டி இருக்கிறது!'' இப்படிச் சொல்லிவிட்டுப் பாளாச்சார் பெருமூச்சு விட்டார்.

'சரி, ஆச்சார் சாமி வெனெ வெதச்சவன் வெனெ அறுப்பான் ஊரார் ஏன் அநுபவிக்க வேண்டும்?' என்று அநுதாபத்துடனேயே கேட்டார், யசவந்தராவ்.

'ஊருக்கே கேடுகாலம் வந்துவிட்டது, மணியக்காரரே! பாருங்க. சிமுணு, புத்லாபாயின் பாதுகாப்பில் இருந்தாள். அவள் பாபு சாஹேபுக்குத் தங்கை போன்றவள்தானே அவள் நிலைமை இங்கே என்ன ஆயிற்று? நாணு. ஏன்? எப்படிச் செத்தான்? அதன் பயனாக இப்போது ஊர்த் தானியக் குழிகளை எல்லாம் கொள்ளையடிக்கும் நிலைமை வந்திருக்கிறது. நூறு ரௌடிகளின் பக்கபலம் படதையாவுக்கு இருக்கிறது. பாபு சாஹேப் அவர்கள் உதவியுடன் மணியக்காரருடைய தானியக் குழிகளைக் கொள்ளையடிக்க ஏற்பாடு செய்திருக்கிறான். இப்படி விரோதம் பெருகி ஊர் இரண்டுபட்டால் யார் நிச்சிந்தையாக வாழமுடியும்?' என்று பாளாச்சார் நொந்த மனத்துடன் சொன்னார்.

யசவந்தராவுக்கு இப்போது எல்லாம் புரிந்துவிட்டது. நாணு இறந்தவுடன் பாபு சாஹேப் அந்தச் செய்தியைத் தெரிவிக்காமல், 'தன் மனைவியை அழைத்துக்கொண்டு போக வர வேண்டும்' என்று தமக்குக் கடிதம் அனுப்பியதன் மர்மம் இப்பொழுதுதான் விளங்கியது. நாணுவின் மரணத்தால் தோன்றிய நெருப்புப் பொறி, துவேஷம் என்னும் காட்டுத் தீயாகிப் பரவுவதற்கு முன்பே பாபு சாஹேப் தன் குடும்பத்தைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டியிருந்தது. அந்தக் காட்டுத் தீயைத் தூண்டிவிட்டு அதன் நடுவில் படதையா யமன்போல் நின்றிருந்தான். அவமானம் அடைந்த நெஞ்சம் பழிவாங்கத் துடித்தது.

உள்ளுக்குள்ளேயே துன்பம் புகைந்துகொண்டிருந்தது. பாவம், தன் வரிசையைக் காட்டக் காத்துக்கொண்டிருந்தது. இந்தக் கவலைகளால் தாக்குண்டவராய் யசவந்தராவ், மாளிகையை நோக்கிச் சென்றார்.

யசவந்தராவ் மாளிகையில் நுழைந்தபோது மணி பன்னிரண்டு அடித்தது. பாபு சாஹேப் குளிக்கப் போயிருந்தான். யசவந்தராவ் முன்புறத்து அறையில் திண்டில் சாய்ந்துகொண்டு வெற்றிலைப் பையை அவிழ்ந்தார். அவர் மனத்தில் அமைதி இல்லை. தம் மகள் ரத்தினாவின் வருங்காலத்தைப் பற்றிய கவலை ஏற்பட்டது. இவர் வந்த செய்தியை வேலைக்காரன் உள்ளே போய்ச் சொன்னான். ஐந்து நிமிஷத்தில் புத்லாபாய் அங்கே வந்தாள். திண்டில் சாய்ந்து காலை நீட்டிப் படுத்திருந்த யசவந்தராவ் அவளைக் கண்டதும் எழுந்து உட்கார்ந்தார்.

அவர், தாம் ஊரில் கேள்விப்பட்ட செய்திகளைப் புத்லா பாயிடம் சொன்னார். 'ஊருக்குள் எங்கே போனாலும் பாபு சாஹேபைப் பற்றியே பேசுகிறார்கள். ஏன் இப்படி ஆயிற்று?' என்று கேட்டார்.

புத்லாபாய் நேரிடையாகப் பதில் சொல்லவில்லை. ''ரத்தினாவை அழைத்துப் போக உடனுக்குடனே வரும்படி' பாபு உங்களுக்குக் கடிதம் எழுதியிருப்பது நீங்கள் சொல்லித்தான் எனக்குத் தெரியும். இனிமேல் பாபு 'ஊரில் இருப்பதே ஆபத்து' என்று தோன்றுகிறது'' என்று சொல்லமுடியாமல் சொன்னாள்.

'ஊரில் பாபுவுக்கு நல்ல மதிப்பு இருந்ததல்லவா? திடீரென்று ஏன் இப்படி மாறிவிட்டது?' என்று பிரச்சினையின் தீவிரத்தை நினைந்து அலுப்புடன் யசவந்தராவ் கேட்டார்.

புத்லாபாய் சுற்றிலும் ஒருமுறை பார்த்துவிட்டு, 'நானா மாமா செத்ததுதான் இதற்கெல்லாம் காரணம். உண்மையைச் சொல்லப்போனால், சிமணாவின்மேல் ஆசை வைத்து, பாபு இவ்வளவு குழப்பத்தை உண்டாக்கியிருக்கிறான்' என்று சொன்னாள்.

'படையனோடு சிநேகம் செய்துகொண்டு பாபு ஊரில் மதிப்பை இழந்துவிட்டான்' என்று நானும் கேள்விப்பட்டேன், என்று யசவந்தராவ் தமக்குத் தெரிந்ததைச் சொன்னார்.

''இதைப்பற்றி எவ்வளவு சொன்னாலும் போதாது. இப்போதைக்கு ரத்தினாவும் சிமணாவும் ஊரைவிட்டுப் போவது தான் சரி. பாபு நடந்துகொள்வது சரியல்ல. இல்லாவிட்டால் 'தன் மானத்தை வாங்கிவிட்டான்' என்று, பாபு, மணியக்

காரருடைய தானியத்தைக் கொள்ளையடிக்கும் வம்புக்குப் போவாரு?''

புத்லாபாய் கொடுத்த இந்தக் குறிப்பை யசவந்தராவ் எதிர் பார்த்தார். மாப்பிள்ளை வீட்டுக்கு வரவேண்டியதுதான். ஆனால் புத்லாபாயின் பேச்சில் இருந்த தீவிர நிலைமை தான் நினைத்ததை விடச் சிக்கலாக இருக்கும் என்பதைக் காட்டியது. சிறிதுநேரம் கழித்துப் புத்லாபாய் மறுபடியும் பேசத் தொடங்கினாள். ''இவ்விடத்துச் செய்தியெல்லாம் உங்களுக்குத் தெரியாது. இப்பொழுது பாபு, சிமனாவைக் கல்யாணம் செய்துகொண்டே தீரவேண்டும். 'ரத்தினாவுக்குப் போட்டியாக இன்னொருத்தியைக் கொண்டுவருவது எப்படி?' என்று உங்களுக்குத் துன்பமாக இருக்கலாம். பாபு, என் தம்பி என்பதால் நான் எதையும் மறைக்கவில்லை. ஆனால் கனகேரி மணியக்காரர் குடும்பத்தில் பிறந்து செய்யத்தகாத வேலையைச் செய்துவிட்டான் பாபு. இப்பொழுது 'சிமனாவைக் கட்டிக்கொள்ள மாட்டேன்' என்று முரண்டு பிடிக்கிறான். 'நானும் சிமனாவை மகள்போல் பார்த்துக் கொள்கிறேன்' என்று நானாவுக்கு வாக்குக் கொடுத்து விட்டேன். இப்போது கலியாணம் செய்துகொள்ள மறுக்கலாமா? 'சிமனாவின் வாழ்வு கெட்டதற்கு ஜவாப்தாரி யார்?' சொல்லுங்கள். இப்பொழுது பாபு மறுப்பதற்குக் காரணம் படதையாவின் சிநேகம்தான். இது இப்படியே வளர்ந்து கொண்டு போகட்டும், ஜாகீரின் பெயருக்குக் கேடு வராவிட்டால் என் பெயரை மாற்றிவையுங்கள்'' என்றாள் புத்லா.

புத்லாவின் குரலில் ஆவேசம் மிகுந்திருந்தது. உண்மையின் கசப்பும் இருந்தது.

மாப்பிள்ளையை நினைத்தாலே யசவந்தராவுக்கு அவமானமாய் இருந்தது. மகளைப் பற்றிய நினைவு சங்கடத்தை உண்டாக்கியது. ஆனால் புத்லாபாயின் பேச்சைத் தவறென்று தள்ள முடியாது. காலையில் வந்தது முதல் யாரைக் கண்டாலும் அவர்கள் பாபு சாஹேபைப்பற்றி ஏதாவது தூஷணை சொல்லிக்கொண்டே இருந்தார்கள். மணியக்காரரின் கௌரவத்திற்கு இது மாறாத வடுவாக நின்றுவிட்டது. அவர் உடலின் ரத்தம் கொதித்தது.

பேசி முடித்தபின் புத்லாபாய் உள்ளே போனாள். யசவந்தராவ் மறுபடியும் திண்டில் சாய்ந்துகொண்டு யோசனையில் மூழ்கினார். அப்புறம் சில நிமிஷங்களில் பாபு சாஹேப் ஸ்நானத்தை முடித்துக்கொண்டு மாமனாரை வந்து பார்த்தான். ஊரில் அவரை யார் யார் சந்தித்தார்கள் என்பதைக் கேட்டுத் தெரிந்துகொண்டான். யசவந்தராவ் எல்லை இல்லாத பொறுமையுடன் பதில் சொன்னார்.

மத்தியான்னச் சாப்பாட்டுக்குத் தாதாவையும் லக்ஷ்மணனையும் அழைக்கும்படி யசவந்தராவ், பாபு சாஹே பிடம் சொன்னார். அதைக் கேட்டவுடன் பாபு சாஹேப் புருவத்தை நெரித்தான். 'அதற்குள் புத்லாபாய் அவர்கள் இருவரும் வரச் சௌகரியமில்லை என்று சொல்லியனுப்பிவிட் டார்கள் மாமா. நீங்கள் இரண்டு பேரும் சாப்பிட வாருங்கள்' என்றாள்.

'அதெப்படி வருவதில்லை என்று சொல்வார்கள்? என் எதிரில் வருகிறதாகச் சொல்லிவிட்டு இப்பொழுது பேச்சை மாற்றுகிறார் களே. சரி, நானே போய் இன்னொரு தரம் அழைத்துவிட்டு வரு கிறேன்' என்று யசவந்தராவ் உறுதியுடன் புறப்பட்டார்.

அதை கண்ட பாபு சாஹேப், 'அவர்கள் இருவரும் மாளி கையில் கால் வைக்க லாயக்கில்லை, மாமா நீங்கள் போகா தீர்கள்' என்று கர்வத்துடன் சொன்னான்.

ஆனால் மாப்பிள்ளையின் கர்வத்தை மாமனார் ஏற்றுக்கொள்ள வில்லை. அன்று பாதள்ளியில் நேர்ந்த அவமானத்தால் யசவந்த ராவ் கோபத்தால் தீப்பிழம்பானார் அதோடு மத்தியான்னம் நடந்த சம்பவத்தால் அவர் பொறுமை இழந்தார். சாப்பாட்டு வேளையில் ஜன்மப் பகைவனே வந்தாலும் அன்புடன் விருந் தளிக்கும் பண்புடையவர் யசவந்தராவ். பிடிவாதம் பிடித்தா ரானால் உயிர் போனாலும் அதை விடாத சுபாவம் உள்ளவர். ஆகையால் பாபு சாஹேபின் அலட்சியத்தைப்போல் பத்து மடங்கு அலட்சியத்துடன், 'அப்படியென்றால் இன்று எனக்கும் மாளிகையில் சாப்பாடு இல்லை' என்று சொன்னார்.

பாபு சாஹேப் ஒன்றும் பேசவில்லை. யசவந்தராவ் புறப் பட்டேவிட்டார் பரிமாறிய இலையை விட்டுவிட்டுப் போகக் கூடாதென்று புத்லாபாய் வருந்தினாள்.

ரத்னா அழுதுகொண்டே தகப்பனார் காலைப் பிடித்துக் கொண்டு, 'சாப்பாட்டு வேளையில் இப்படி விட்டுவிட்டுப் போக வேண்டாமப்பா' என்று நொந்துகொண்டாள்.

ஆனால் யசவந்தராவ் கண்ணைத் துடைத்துக்கொண்டு, 'விடு, அம்மா. இன்னிக்கு இந்த வீட்டுச் சாப்பாடு எனக்குக் கொடுத்து வைக்கவில்லை' என்று சொல்லிக்கொண்டு புறப்பட்டுவிட்டார்.

இந்தச் செய்தி லக்ஷ்மணன், தாதா இருவருக்கும் எட்டியது. தாதா ஓடிவந்து அனுமார் கோயிலுக்குப் பக்கத்தில் போய்க் கொண்டிருந்த வண்டியை நிறுத்தினான். 'தாத்தா, நீங்கள் இப்படிச் சாப்பிடாமல் பாதள்ளியை விட்டுப் போவதற்கு நான்

விடப்போவதில்லை. வீட்டுக்கு வாருங்கள். நம்ம வீட்டில் சாப்பிட்டுவிட்டு வண்டியைக் கட்டுங்கள்' என்று சொன்னான்.

கோபத்தால் நொந்திருந்த யசவந்தராவுக்குக் கண்ணீர் பெருகியது. 'தாதா, நீ எனக்கு ஒரு வாக்குக் கொடுத்தால் உங்கள் வீட்டுக்கு வருகிறேன்' என்றார் யசவந்தராவ்.

'சொல்லுங்க தாத்தா. நீங்க சொல்றதை, எதுவானாலும் நான் செய்கிறேன்' என்று தாதா வாக்குக் கொடுத்தான்.

'என் மகள் ரத்னா. அவளுடைய குடும்பத்துக்கு ஒரு கெடுதலும் வராமல் பார்த்துக்கொள்கிறேன் என்று ஆணையிடு தம்பி. எங்கள் பாபு, படதையாவின் சகவாசத்தை விடும்படி செய்கிறேன் என்று உறுதிகொடு' என்றார். அவருடைய ஒவ்வொரு சொல்லிலும் ஆற்றாமை தொனித்தது.

'கடவுளுக்கு இந்த எண்ணமிருந்தால்தான் இந்த வாக்கைக் காப்பாற்றமுடியும் தாத்தா. என்னால் ஆகக் கூடியது ஏதேனும் இருந்தால் சொல்லுங்கள் தாத்தா. இப்பொழுதே வீட்டுக்கு வாருங்கள்' என்று சொல்லி, தாதா, யசவந்தராவுடைய வண்டியைத் திருப்பினான்.

யசவந்தராவ் வண்டியிலிருந்து இறங்கி தாதாவுடன் போனார். பாபு சாஹேப், தாதாவின் விஷயத்தில் ஏன் இப்படிப் பகைமை பாராட்டுகிறான் என்பதைத் தெரிந்துகொள்ள விரும்பினார். 'தாதா, நானா மாமாவின் சாவு காரணமாக ஜனங்கள் பேசுவதைக் கேட்டு, நம்ப பாபுவுடன் ஏதாவது சண்டை கிண்டை போட்டாயோ?' என்று கேட்டார்.

தாதா இந்தக் கேள்வியை எதிர்பார்க்கவில்லை. 'நான் ஊருக்கு வந்து இரண்டு நாள் ஆனாலும் வெளியே போகவில்லை. சிமனாவைப் பார்த்துப் பேசக்கூட மாளிகைக்குப் போகவில்லை. ஜனங்கள் என்ன பேசிக்கொள்கிறார்கள் தாத்தா?' என்று வெகுளித்தனமாய்க் கேட்டான்.

'எலும்பில்லாத நாக்கு என்னவேணுமானாலும் பேசிக்கொள்வார்கள். அதையெல்லாம் காதில் போட்டுக்கொள்ளாதே. சிமனாவைப்பற்றி ஜனங்கள் கட்டிவிட்ட செய்தியைக் கேட்டு மனசைக் கெடுத்துக்கொள்ளாதே' என்று யசவந்தராவ் எச்சரித்தார்.

தாதா பேசாமலிருந்தான். என்ன சொல்வதென்றே அவனுக்குத் தெரியவில்லை.

யசவந்தராவ் பேச்சைத் திசை திருப்பவேண்டியிருந்தது. கூடவே பாபு சாஹேப், படதையா இவர்களுடைய தகாத

சிநேகம், கௌடரின் தீவிரமான எதிர்ப்பு இவற்றைப்பற்றிச் சொல்லத் தொடங்கினார். 'இப்பொழுது படதையா, பாபு சாஹேப் இருவருமாகக் கௌடருடைய தானியக் குழிகளைக் கொள்ளை அடிக்கும் முயற்சியில் இருக்கிறார்கள். அதைத் தடுத்தால்தான் அவர்களுடைய சிநேகம் மாறும்' என்று ஜாடையாகச் சொன்னார். ஆனால் தாதாவின் லட்சியம் இந்தப் பேச்சில் இல்லை என்பதைப் புரிந்துகொண்டார். நாணுவின் மரணத்தைப்பற்றி ஜனங்கள் என்ன சொல்லிக்கொள்கிறார்கள் என்பதையாவது அவனிடம் தெரிவித்தாக வேண்டும். கடைசியில் தனக்கு இஷ்டம் இல்லாவிட்டாலும் பாபு சாஹேபுக்கும் சிமணுவுக்கும் இடையில் அக்கிரமத் தொடர்பு இருப்பதாகவும் சொல்ல வேண்டி வந்தது. நாணு விஷம் வைத்துக் கொல்லப்பட்டான் என்று ஜனங்கள் தீர்மானமாகப் பேசிக்கொள்வதைப் பற்றியும் சொல்லி, 'இதோ பார் தாதா, நடந்ததைப்பற்றி ஆத்திரப்படுவதில் பயனில்லை. இப்பொழுது நீ அவசரப்படக் கூடாது. பாபு, சிமணுவைக் கல்யாணம் பண்ணிக்கொண்டால் எல்லாம் சரியாகிவிடும். அந்தப் பொறுப்பை என்னிடம் விட்டுவிடு. இதனால் நாம் யாருடைய குடியையும் கெடுக்கப் போவதில்லை' என்று சமாதானமாகவே உபதேசித்தார். இந்தச் சம்பவங்களால் நேரக்கூடிய விபரீத விளைவுகளைப்பற்றி அவர் முன்கூட்டியே ஊகித்திருந்தார். நிலைமை எதிரிடையாக இருந்ததால் ஜாக்கிரதையாகவே நடந்து கொள்ளவேண்டி இருந்தது.

இந்தச் செய்திகளெல்லாம் தாதாவுக்குப் புதியவை. அவன் இவற்றை எதிர்பார்க்கவில்லை. சுற்றுப்புறத்து நிகழ்ச்சிகளைக் கவனித்தால் அவற்றை மறுக்கும்படியாக இல்லை. நாணு பெரியப்பா இறந்ததிலிருந்து இதுபோன்ற சம்பவங்கள் ஏதாவது அவருடைய சாவுக்குக் காரணமாய் இருந்திருக்கும் என்ற சந்தேகம் அவனுக்கு இருந்தது. இப்பொழுது யசவந்தராவின் வாய்மூலம் செய்திகளைக் கேட்டபின் அவன் உடம்பு பற்றி எரிய ஆரம்பித்தது. ஆனால் மணியக்காரர் தன் வீட்டுக்கு விருந்தாளியாக வந்திருக்கும்போது தன் உத்தேசத்தை வெளியே காண்பிக்கக் கூடாது. அவரை உபசரித்து அனுப்புவது தன் கடமை என்றெண்ணி உள்ளத்தில் ஏற்பட்ட காயத்தைப் பொறுத்துக் கொண்டான். சாப்பாடு முடிந்தவுடன் புறப்படத்தான் வேண்டும் என்று அவர் கண்டிப்பாய்ச் சொன்னதால், அவரை வழியனுப்புவதற்காக, தாதா மறுபடியும் அனுமார் கோயில் வரை வண்டியின் பின்னே சென்றான். அப்பொழுது யசவந்தராவ் தாதாவுக்குப் புத்திமதிகள் சொல்லிக்கொண்டிருந்தார்.

அவரை அனுப்பிவிட்டுத் திரும்பி வரும்போதே பிற்பகல் மூன்று மணி ஆகிவிட்டது. மாலைவரையில் பொழுதைக் கழிக்க அவனுக்குப் பொறுமை இல்லை. தாதா, தாலீம்கானுவுக்கு ஓடினான். தன் நண்பர்களிடம் தனக்கு நேர்ந்த துன்பங்களை எல்லாம் சொல்லிக்கொண்டு, வஞ்சம் தீர்த்துக்கொள்ள அவர்களுடைய உதவியை நாடினான் ஆனால் அங்கே அவனுடன் நெருங்கிப் பழகிய நண்பர்கள் காணப்படவில்லை. இருந்த இரண்டொருவர் தாதாவின் நெருப்புக் கக்கும் முகத்தைக் கண்டதுமே நடுங்கிவிட்டார்கள். நெருப்புப் பொறி பறக்கும் சிவந்த கண்கள்; 'சுளுக்கை' என்னும் ஒருவிதக் காட்டெறும்பு கடித்ததுபோல் சிவந்து வீங்கிய முகம்; நீண்ட பெருமூச்சு விடுவதால் விரியும் நாசித்துவாரங்கள்—இந்த லக்ஷணங்களில் எல்லாம் ஏதோ ஆபத்து இருக்கிறது என்ற ஜாடை தெரிந்தது. தாதா அங்குமிங்கும் பார்த்துவிட்டு, 'மற்றவர்களெல்லாரும் எங்கே போனார்கள்?' என்று இடிபோல் முழங்கினான்.

'படதையா சாமியாரின் மடத்திற்குப் போயிருக்கிறார்களோ என்னவோப்பா' என்ற பதில் வந்தது.

'அங்கே இவங்களுக்கென்ன வேலை? என்று கர்ஜித்தான் தாதா.

'ஏழைகளிடம் தானியம் இல்லை. கௌடருடைய தானியக் குழியைத் திறந்து அவர்களுக்குக் கொடுப்பதற்காக, பாபு சாஹேபும் சாமியாரும் ஏழை ஜனங்களை மடத்துக்கு அழைச்சிருக்காங்க. படகு பசவன், பிஞ்சார லாடன் இருவரையும் கூப்பிட்டதால் போயிருக்கிறார்கள். கௌடரின் களஞ்சியம் இப்போ கொள்ளை போகும். ஏழைகளுக்குத் தானியத்தைப் பங்கிட்டுக் கொடுப்பாங்க. பாபு சாஹேப் மடத்திலெ குந்திக்கிட்டு இதைத் தீர்மானித்திருக்கிறாராம்' என்று அவர்கள் தங்களுக்குத் தெரிந்த விஷயத்தை அரைகுறையாகச் சொன்னார்கள்.

தாதா தாலீம்கானுவிலிருந்து ஒரு கர்லாக் கட்டையை கதைபோல் எடுத்துத் தோளில் சார்த்திக்கொண்டு புறப்பட்டான்.

'இது என்னத்துக்கு தாதா?' என்று தோழர்கள் கேட்டதற்கு, 'பாபு சாஹேபின் தலையைப் பிளப்பதற்கு' என்று சொல்லியவண்ணம் தாதா, மடத்தை நோக்கி ஓடினான்.

மாளிகைக்குப் பக்கத்தில் அவனைச் சந்தித்த அஞ்சல்கார மல்லப்பன், அவன் முகத் தோற்றத்தைக் கண்டு, 'என்ன இப்படிப் புறப்பட்டுவிட்டாய், தாதா?' என்று கேட்டான்.

'கொலை செஞ்சவன் மண்டையை ஒடைக்கவும், தனக்குச் சொந்தம் இல்லாத பெண்ணைத் தொட்ட கையை ஒடிக்கவும் வேற எப்படிப் போவாங்களாம்' என்று சொல்லிக்கொண்டே தாதா, அவசரமாக முன்னேறினன்.

# 7

ஜாகீரின் மாளிகையைத் தாண்டியே மடத்துக்குப் போக வேண்டும். மாளிகையின் தலைவாசலில் இரண்டுபுறமும் உயர்ந்து அகன்ற திண்ணைகள் இருந்ததால் அந்த வழி குறுகலாக இருந்தது. தாதா, கர்லாக் கட்டையைச் சுமந்துகொண்டு வடக்குப் பக்கம் ஓடுவதை மாளிகைத் திண்ணையில் உட்கார்ந்து ஹுக்காப் பிடித்துக்கொண்டிருந்த புலிவேட்டைக் கூட்டத்தார் பார்த்தார்கள். மல்லப்பனுக்கு அவன் கொடுத்த பதிலும் அவர்கள் காதில் விழுந்தது. பாபு சாஹேப் அப்பொழுது மாளிகையில் இருக்கவில்லை. மாளிகையின் கூடத்தில் தொங்கிய ஊஞ்சலில் உட்கார்ந்து புத்லாபாய், சிமணாவோடு பேசிக்கொண்டிருந்தாள். அப்பொழுது தளவாய் ஓடிவந்து, 'அம்மா, ஆபத்து! சிமணம்மா சங்கதி தாதாவுக்குத் தெரிஞ்சிட்டுதுபோல இருக்கு. அவன் கர்லாக் கட்டையைச் சுழட்டிகிட்டு மடத்துப் பக்கம் ஓடறன். முகத்தைப் பாத்தா ஒரே பயங்கரமா இருக்கு' என்று மூச்சு இறைக்கப் பயத்துடன் புத்லாபாயிடம் சொன்னன். ஒரு மூலையில் உட்கார்ந்திருந்த சிமணவை அவன் முதலில் பார்க்கவே இல்லை. அவள் கண்ணில் பட்டதும் அவன் முகத்தில் அசடு வழிந்தது.

புத்லாபாய் பயந்துவிட்டாள். ஆனலும் பதற்றத்தைக் காட்டிக் கொள்ளாமல் தளவாய்க்கு, 'நீ போ' என்று சைகை செய்தாள். பிறகு 'ரத்தின, ரத்தின' என்று கூப்பிட்டாள்.

உட்புறத்து அறையில் தலைபின்னிக்கொண்டிருந்த ரத்தின அந்தக் குரலின் வேகத்தைக் கேட்டுப் பரபரப்புடன் ஓடிவந்தாள்.

'ரத்தின! உன்னுடைய மாங்கல்ய பலத்தால்தான் இன்னிக்கிப் பாபு, தாதாவின் கையிலிருந்து தப்ப வேண்டும். இப்ப என்ன செய்யறது?' என்று அழத் தொடங்கினள்.

இதைக் கேட்ட சிமண, 'தனக்கு முடிவுகாலம் சமீபித்து விட்டது' என்று நினைத்தாள். உடம்பில் ரத்தம் உறைந்து விட்டது. பயத்தால் பேச்சே வரவில்லை. வேடருடைய பார்வை

யால் பயந்த மானைப்போல் தனது பெரிய கண்களை அகல விரித்து மருட்சியுடன் பார்க்கத் தொடங்கினாள்.

முதலில் ரத்தினாவுக்கு ஒன்றும் புரியவில்லை. புத்லாபாய், தாதா, மடத்துக்குப் போயிருப்பதைச் சொன்னாள். ஆனால் ரத்தினா மனம் கலங்கவில்லை. பாதிபின்னிய கூந்தலை இறுக்கி முடிந்துகொண்டாள். தலைப்பை இழுத்துச் செருகிக்கொண்டு வெளியே வந்தாள். அவள் கண்கள் எங்கேயோ பார்த்துக் கொண்டிருந்தன. வாயை அழுத்தி மூடிக்கொண்டிருந்தாள். அவளுடைய இந்தத் தோற்றத்தைக் கண்ட புத்லாபாயின், 'எங்கே புறப்பட்டாய் ரத்தினா?' என்ற கேள்விக்குப் பதில் வரவில்லை. ஜாகீர் குடும்ப வழக்கப்படி அவள் கோஷா முறையைக் கையாள வேண்டும். ஆனால் அதை உதறிவிட்டு ரத்தினா வெளியே ஓடினாள். 'ரத்தினா, ரத்தினா!' என்று புத்லாபாயும், 'பாய் சாஹேப், பாய் சாஹேப்!' என்று தளவாயும் கத்தியது அவள் காதில் விழவில்லை.

அன்றிரவு கௌடரின் தானியக் குழிகளைக் கொள்ளையடிக்கும் திட்டத்தின் விவரங்களைத் தயாரிக்கப் படதையாவின் மடத்தில் அப்பொழுது சபை கூடியிருந்தது. சக்கிலியர்கள், தலையாரிகள், குறும்பர்கள், எல்லோரும் வந்து கூடியிருந்தார்கள். பாபு சாஹேபின் நம்பிக்கைக்கு உரிய மல்லர்களும் அங்கே இருந்தார்கள்.

''நீங்கள் எல்லோரும் சேர்ந்து இன்று கௌடர் வீட்டுக்குப் போங்கள். 'குழியைத் திறந்து தானியம் கொடுக்கவேண்டும்' என்று வற்புறுத்துங்கள். ஆறுமாசத்துக்குப் போதுமான தானியம் அவர் ஒருத்தரிடமே இருக்கிறது. சந்தர்ப்பம் வரும் போது மாளிகைக்குச் சேர்ந்த குழிகள் எல்லாம் உங்களுடையது தான்'' என்று பாபு சாஹேப் ஆவேசத்துடன் பேசிக்கொண்டிருந் தான். படதையா தலையைத் தலையை ஆட்டிக்கொண்டிருந்தார்.

மடத்தின் படிகளில் ஏறிய தாதா, 'ஜாகீர்தார் எங்கே?' என்று கூச்சலிட்டுக்கொண்டே உள்ளே வந்தான்.

பாபு சாஹேபின் பார்வை வாசல் பக்கம் விழவில்லை. தாதாவின் குரலைக் கேட்டவுடன் அந்தப் பக்கம் திரும்பிப் பார்த்தான். உதட்டைக் கடித்துக்கொண்டு வந்த தாதாவைக் கண்டதுமே அவன் உடம்பெல்லாம் வேர்த்துக்கொட்டியது. ஏதோ சொல்ல நினைத்தவன், உளறிக்கொண்டு உட்கார்ந்த இடத்திலேயே நடுங்கினான். தாதாவின் தோற்றமே அவனுக்குச் சாவின் பயத்தை உண்டாக்கியது. படதையாவின் காலைப்

பிடித்துக்கொண்டு, 'சுவாமிகள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும்' என்று கெஞ்சினான்.

ஜனங்களெல்லாம் பரபரப்படைந்தார்கள். சிலர் அவனுடைய கையிலிருந்து கர்லாக் கட்டையைப் பிடுங்க முயன்று மண்டையில் அடி வாங்கிக்கொண்டு ஒதுங்கிக்கொண்டார்கள். இந்தச் சமயம் பார்த்துப் பாபு சாஹேப் சாமியாரின் ரகசிய அறைக்குள் புகுந்து கதவைத் தாழிட்டுக்கொண்டான்.

படதையாவுக்கு நேராகத் தாதாவை எதிர்க்கத் தைரியம் இல்லை. ''ஏ, பசப்பா! ஏ, லாட சாயப்! அந்தத் தாதாவைத் தடுத்து நிறுத்துங்களடா! 'என்ன சொல்றான்'னு கேளுங்க. விசாரித்து நியாயம் செய்யறோம்'' என்று கத்தினார்.

பசப்பாவும் லாட சாயபுவும் தாதாவின் உண்மைத் தோழர்கள். அவனுடைய முகத்தைப் பார்த்ததுமே சட்டென்று கோபத்தின் காரணத்தை ஊகித்துக்கொண்டார்கள். இருவருமே அவன் காலில் விழுந்து, 'கொஞ்சம் பொறு, தாதா. இப்படியெல்லாம் கோபத்துக்கு இடங் கொடுக்காதே! சாமியார் சொல்வதைக் கொஞ்சம் கேள்' என்று புலம்பினார்கள்.

தாதா, அவர்களை ஒருபுறமாகத் தள்ளிவிட்டுப் படதை யாவின் எதிரே வந்து நின்று, 'சாமியாரே, மொதல்லே அந்தப் பாம்பை வெளியே தள்ளுங்க. அவன் ரத்தம் மடத்தில் சிந்த வேண்டாம்' என்று கர்ஜித்தான்.

'ஜாகீர்தார் அப்படி என்ன செய்துவிட்டார் தாதா? யார் யாரோ சொன்னதைக் கேட்டுக்கொண்டு, ஒன்று கிடக்க ஒன்று செய்யாதே, பைத்தியக்காரா' என்று குழந்தைக்குச் சொல்வது போல் சொன்னார் படதையா.

'அவன் என்ன செய்தாங்கிறதை அவன் வாயாலேயே சொல்ல வைக்கிறேன்யா. முதல்லே அவனை வெளியே விடுங்க' என்று சொல்லிய தாதா அவருடைய அனுமதிக்குக்கூடக் காத்திராமல் உள்ளே ஓடினான்.

கோப மிகுதியால் தாதாவின் புத்தி சுவாதீனத்தில் இல்லை. கர்லாக் கட்டையால் கதவை ஓங்கி அடித்தான்; காலால் உதைத்தான். பழங்காலத்துக் கதவானதால் விரிசல்விட்டது. இன்னும் இரண்டுமுறை அடித்திருந்தால் கதவு பிளந்திருக்கும். 'பாபு சாஹேபை தாதா நொறுக்கிவிடுவான்' என்று அங்கிருந் தவர்களெல்லோரும் கல்லாய்ச் சமைந்துவிட்டார்கள்.

'ஊர் ராஜாவின் கதி இப்படி ஆவதைப் பார்த்துக்கொண்டு சும்மா நிற்கிறீர்களே!' என்று கேட்கவேண்டுமென்று சாமியார் ஆனமட்டும் முயன்றார். ஆனால் குரல் வெளிவரவில்லை.

அப்பொழுது ஓடி வந்த ரத்னா திடீரென்று கதவில் சாய்ந்து கொண்டு நின்றாள். அவளுடைய உதடுகள் துடித்தன. கண்ணீர் பளபளத்தது. ஆனால் ஒரு சொட்டுக்கூடக் கீழே விழவில்லை. 'தாதா தாதா, அவருக்கு முன்னால் உன் அக்காவை அடித்து விட்டு உள்ளே போ. முதலில் என் தலையில் அடி' என்று உணர்ச்சி வசப்பட்டுச் சொன்னாள்.

வேகமாக விழ வந்த இடியின் போக்கை யாரோ தடுத்தது போல் ஆயிற்று. ஆனால் ஜனங்களுக்கு அது தெரியவில்லை. தாதா வீசிய கர்லாக் கட்டை ரத்னாவின் தலையில் விழுந்துவிட்டதென்றே நினைத்தார்கள். பெரு முயற்சியுடன் தாதா வீசிய கையை நிறுத்திக்கொண்டான். கை சுளுக்கிக்கொண்டது. 'அக்கா அக்கா, நீங்கள் இங்கே எல்லாம் வரக்கூடாது. மாளிகைக்குப் போங்க அக்கா. என்மேல் ஆணை' என்று தாதா கையைக் கூப்பி அவளை வேண்டிக்கொண்டான்.

'அவர் சாகு முன்பு மாளிகைக்குப் போய்வரவா தாதா. அக்கா என்று சொன்னாயல்லவா. அக்காவின் குங்குமத்தை அழித்துவிட்டு முன்னுக்குப்போ தாதா' என்றாள் ரத்னா.

தாதாவுக்குக் கண்ணீர் தாரை தாரையாக வழிந்தோடியது. 'இதை நான் எப்படி உங்களுக்கு விவரித்துச் சொல்லட்டும் அக்கா. எல்லாம் உங்களுக்குத் தெரிந்தது தான். சிமனாவின் கௌரவத் தைக் காப்பாற்றுவதற்காக இதைச் செய்யவேண்டி இருக்கிறது' என்று தாதா தன் செயலுக்குக் காரணங் காட்டினான்.

'என் குங்குமத்தை அழித்தால் உன் தங்கையின் மானத்தைக் காப்பாற்றினதாகுமா? யசவந்த மாமாவின் வீட்டிற்கு நான் பாழ் நெற்றியுடன் போனால் உனக்குச் சந்தோஷமாயிருக்குமா?' என்ற ரத்னாவின் பேச்சு, தாதாவின் உள்ளத்தை உருக்கியது.

'ரத்னாவின் குடும்பத்திற்குக் கேடுவராமல் பார்த்துக் கொள் வதாக வாக்குக் கொடு தாதா' என்று யசவந்தராவ் மனப் பூர்வமாகக் கேட்டுக்கொண்டது நினைவுக்கு வந்து, தாதாவின் வயிற்றைச் சங்கடம் செய்தது.

தாதா நின்ற இடத்திலேயே தொப்பென்று உட்கார்ந்து விட்டான். 'போ அக்கா, சுகமாக இரு. உன் புருஷனைக் காப்பாற்றிவிட்டாய். ஆனால் பாவத்துக்குத் தண்டனை

உண்டல்லவா அக்கா. நியாயத்தைச் சொல்லிவிட்டுப் போ' என்ருன் தாதா. அவன் கோபம் மறைந்தது. குழந்தைபோலாகிவிட்டான்.

'சிமஞ, என் தங்கச்சி தாதா. அவளும் என்னைப்போல் குடும்பம் நடத்த வேண்டும். இந்தப் பாவத்தைச் செய்தவர்கள் யாரென்று அவளையே கேள் தாதா. அவனிடமே அவளை ஒப்பித்து விடு. சும்மா உயிரைக் கொன்னு பாவத்தைக் கட்டிக்காதே. எதற்கும் அவசரப்படக் கூடாது தம்பி' என்று தாதாவுக்கு ஆறுதல் சொன்ஞள் ரத்ஞ.

கர்லாக் கட்டையுடன் ரத்னுவின் மெய்காப்பாளன்போல் அவள் பின்னே புறப்பட்டான் தாதா. கவலையால் மடத்துக்குப் போகவிருந்த புத்லாபாய் இவர்களை வீட்டுவாசலிலேயே சந்தித்தாள். இன்னும் தாதாவின் தோளில் கர்லாக் கட்டை இருந்தது. புத்லாபாய் அதைக் கண்டு பயத்தால் அங்கேயே தொப்பென்று உட்கார்ந்துவிட்டாள். 'நான் ஒரு தப்பும் செய்யவில்லை தாதா. சிமஞவைக் கல்யாணம் பண்ணிக்கோவென்று முதலிலிருந்தே பாபுவிடம் சொல்லிக்கொண்டே யிருந்தேன். என் பேச்சைவிடப் படதையாவின் பேச்சில்தான் அவனுக்கு அதிக மதிப்பு' என்று முறையிட்டாள். அழுதுகொண்டே தம்பிக்கு உயிர்ப்பிச்சை கொடு என்று கேட்டாள்.

தாதா அங்கே நிற்காமல் உள்ளே ஓடினன். சிமஞ இதை எதிர்பார்த்திருந்தாள். வாஞ்சையோடு பக்கத்தில் உட்கார்த்தி வைத்துக்கொண்டு வளர்த்த அண்ணன், இந்தச் சந்தர்ப்பத்தில் யமன்போல் வந்து நின்ருன். தன்னை அண்ணன் கொன்று விடுவான் என்று முன்பிருந்தே ஊகித்தாள். மானத்தை இழந்த பின் தான் வாழ விரும்பினலும் அண்ணன் வாழ விடமாட்டான் என்பது அவளுக்குத் தெரியும்.

'சிமஞ, இந்தப் பாபத்தை யார் செய்தாங்க?' என்று இடிக்குரலில் கேட்டான் தாதா.

'நான் செஞ்சதுதான் அண்ணு, என்னை விடாதே. என் மண்டையை உடை' என்று அவள் தாதாவின் காலில் விழுந்து புலம்பினள்.

நாஞ பெரியப்பா இறந்த பின், தாதா தங்கையின் முகத்தை இன்றுதான் பார்க்கிருன். ஒருகணம் அவளைப் பார்த்து 'நீயே செய்ததுதாஞ?' என்று கோபத்தால் கீழுதட்டை ரத்தம் வரும் படி கடித்துக்கொண்டு கேட்டான்.

'கல்யாணம் செய்துக்கணும்னு ஆசைப்படறது பாபமல்ல சிமணு. உன்னைத் தப்பு வழியில் இழுத்தது யாரென்பதைச் சொல்லு' என்று சிமணுவை எழுப்பி உட்கார்த்தினுள் ரத்னு.

'யார் பெயரைச் சொல்லி என்ன பிரயோசனம் ரத்னு அக்கா? அப்பாவின் உயிரைப் பலி வாங்கி மானத்தை இழந்த பின் எந்த முகத்தை வைத்துக்கொண்டு வாழ்வேன் அண்ணு? தப்புச் செய்தவள் நான், என்னைக் கொன்னுடு' என்ருள் சிமணு. அவளுக்கு இப்பொழுது என்றுமில்லாத தைரியம் வந்துவிட்டது. உயிரை விட்டாவது உலகத்தின் துன்பங்களிலிருந்து விடுதலை பெறலாம் என்ற ஆசை அவளை இப்படிப் பேசச் செய்தது.

'அப்படியெல்லாம் பேசக்கூடாது. செத்து எதைச் சாதிக்க முடியும் சிமணு? உன் ஒருத்தியுடன் போகுமா? பிறக்கப் போகிற குழந்தையோட அப்பா யாருன்னு மட்டும் சொல்லு' என்று ரத்னு வற்புறுத்தினுள்.

'சொல்லாவிட்டால் நான் விடுவேனு? குழந்தையின் அப்பன் யாரென்பது ஊருக்கெல்லாம் தெரியணும். அவனை உனக்குக் கல்யாணம் செய்துவைச்சு வாழவைக்காவிட்டா, நான் உன் அண்ணனுக இருந்து என்ன பிரயோசனம் தங்கச்சி? உனக்கும் பாபு சாஹேபுக்கும் சம்பந்தம் இருக்கு என்பது என் காதிலே விழுந்தது. அது உண்மையா இல்லையா சொல்லு?' என்று சமாதானமாகவே கேட்டான் தாதா.

'அண்ணு, அவன் கல்யாணம் செஞ்சுக்கிற சாதி இல்லை அண்ணு. அவன் ஒரு நாடோடிச் சந்நியாசி' என்று சிமணு மூச்சைப் பிடித்துக்கொண்டு வேறு வழி இல்லாமல் சொன்னுள்.

தாதாவுக்கு இடி விழுந்ததுபோல் ஆயிற்று. புத்லாபாய் ஆதியோடந்தமாய் அவனுக்கு விவரம் சொன்னுள்.

'இதெல்லாம் உண்மையென்று நம்பச் சொல்கிருயா?' என்று கேட்டான் தாதா. 'என்மேல் ஆணையாக நிசம் தாதா' பரிதாபமாகச் சொன்னுள் சிமணு.

தாதா சிறிது நேரம் ஆழ்ந்து யோசித்தான். ஒரு பெண்ணை விரும்பியவன் அவளை மணம் செய்துகொண்டு காப்பாற்றத்தான் வேண்டும். அதுதான் நியாயம் என்று அவனுக்குத் தோன்றியது. அவன் சந்நியாசி ஆனுலும் சரி, குடும்பி ஆனுலும் சரி, என்ன ஆனுலும் தங்கையின் வாழ்வு நல்லபடியாக இருக்கவேண்டும். இல்லாவிட்டால் இறந்துவிட்ட நானு பெரியப்பாவின் ஆத்மா சாந்தியடையாது. அதனுல் சிமணுவைப் படதையாவின் ஆதரவில் மடத்தில் விட்டுவிட வேண்டும் என்று தீர்மானித்தான்.

அந்தச் சமயத்தில் அவனுக்குச் சரியான வழி அதுதான் என்று தோன்றியது.

தாதா சிமணுவை மடத்துக்கு அழைத்துக்கொண்டு வந்தான்.

இது படைதையா எதிர்பாராத சம்பவம். பாபு சாஹேப்தான் சிமணுவின் காதலன் என்று நம்பிய பின் தன் பொறுப்பு விட்ட தென்று அவர் கவலையற்றிருந்தார். இப்பொழுதும் அதே வெறுப்புக் குரலில், 'உன் பராக்கிரமம் எல்லாம் முடிந்ததா தாதா? அப்போ பாபு சாஹேபை அடிக்கிற வீரனு வந்தே! இப்போ என்ன யோசனை வந்திருக்கு என்று சொல்லக்கூடாதா? ரத்னுவின் வாழ்வும் வீணைக்கூடாது. சிமணுவுக்கும் நல்ல புருஷன் வாய்க்கணும் என்பதற்காக நல்ல யுக்தி செய்தாயடா! உன் பேச்சைக் கேட்டு ஜனங்க சிரிப்பாங்க. ஊர் ஜனங்களுக்கெல்லாம் தெரிந்த சங்கதி பொய்யென்று சாதித்து அந்தப் பாவச் சுமையை என் தலையில் சுட்ட வந்தாயா? சிமணு சொல்லிட்டா, நான் ஒத்துக்க வேண்டாமா?' என்று தர்க்கம் செய்தார்.

'நீ செய்ததையும் செஞ்சுட்டுப் பழியைச் சிமணு தலைமேல் போடலாமென்று பார்க்கிறுயா? உன்னை... உன்னை...' என்ற வண்ணம் தாதா கையிலிருந்த கர்லாக் கட்டையைத் தூக்கினுன்.

அதற்குள்ளேயே ஊரில் உள்ள கௌரவமான குடும்பத்தினர் பலர் வந்து கூடிவிட்டார்கள். தங்களுடைய பூஜ்யரான குரு 'காமுகன்' என்பது தெரிந்திருந்தாலும், பொதுமக்கள் எதிரில் அதை ஒப்புக்கொள்ளும் சந்தர்ப்பம் இதுவரைக்கும் நேரவில்லை. குரு பக்தியால் தூண்டப்பட்டவர்களாகத் தாதாவைச் சூழ்ந்து கொண்டு 'ரௌடித்தனம் செய்துகொண்டு மடத்தின் கௌரவத்தை மண்ணுக்க வந்திருக்கிறுயா?' என்று திட்டத் தொடங்கினுர்கள்.

கர்ணம் சேஷப்பா, 'ஏ, தாதா! சிமணு கெட்டுப்போனது சுவாமிகளால்தான்; பாபு சாஹேபுக்கும் அவளுக்கும் ஒரு தொடர்பும் இல்லை என்று நீ நிரூபிக்க வேண்டும். நீ அதைச் செய். சாமியாரை ஊரைவிட்டே ஓட்டிவிட்டு வேறு பட்டம் கட்டிவிடுகிறேம். அதையெல்லாம் விட்டுவிட்டு அடாவடித்தனம் செய்தால் நடக்காது' என்றும், 'சட்டப்படி சாட்சி கொண்டு வந்து நிரூபிக்கும் பொறுப்பு தாதாவைச் சேர்ந்தது' என்றும் எச்சரித்தான்.

'இருட்டில் திருடுகிறவன் சாட்சி வைத்துக்கொள்வானு? என்ன, கணக்குப்பிள்ளை? ராஜாங்கமாக (பகிரங்கமாக) நடக்கும் விஷயமாக இருந்தால் நான் இங்கே வரச் சந்தர்ப்பம் ஏது?

சிமஞ, உங்கள் இருவரைத் தவிர விஷயம் வேறு யாருக்காவது தெரிந்திருந்தால் சொல்லு' என்ருன் தாதா.

'தானம்மா என்று ஒருத்தி மடத்தில் இருந்தாள். எல்லாம் அவளுக்குத் தெரியும். வேணுமானுல் அவளைக் கூப்பிட்டு எல்லாம் கேட்டுக்கங்க' என்று சிமஞ தலைகுனிந்த வண்ணம் சொன்னுள். இத்தனை ஜனங்களுக்கு எதிரில் நேர்ந்த அவமானத்தால் அவளுக்கு உயிரே போய்விடும் போல இருந்தது.

'வேலிக்கு ஓணன் சாட்சியாம்! அவள் ஒரு பட்டாம்பூச்சி. அவளைக் கூப்பிட்டுக் கேக்கணுமாம். இவ சொல்லுருளாம்!' என்று படதையா ஓர் இகழ்ச்சிச் சிரிப்புச் சிரித்தார்.

இந்தச் செய்தி கௌடருக்கு எட்டியது. படதையாவைப் பழிவாங்க அவருக்கு ஒரு நல்ல சந்தர்ப்பம் கிடைத்தது. அவருடைய கூரிய புத்தியினுல் அவர் முன்பே இதற்கு ஒரு திட்டம் இட்டு வைத்திருந்தார். 'சந்தர்ப்பம் வந்தால் உதவியாக இருக்கும்' என்று தானம்மாவைத் தேடிப் பிடித்தார். யாருக்கும் தெரியாமல் அவளைத் தம் வீட்டிலேயே வைத்துக் கொண்டிருந்தார். செய்தி கேட்டதுதான் தாமதம். அவளை மடத்துக்கு அழைத்துக்கொண்டு வந்துவிட்டார். ஒரு பெரிய கூட்டம் அவரைத் தொடர்ந்து வந்தது. சந்நியாசியின் காதல் விவகாரம் ஊராருக்கு வேடிக்கையாக இருந்தது. 'சாமியார், தாம் சுத்தமான சந்நியாசி என்பதை முதலில் நிரூபிக்கட்டும். சிமஞ அவர்மேல் சாட்டியுள்ள குற்றத்தை நிரூபிக்கும் பொறுப்பு என்னுடையது' என்று உறுதியாகச் சொன்னுர் கௌடர்.

'குரு பரம்பரையால் நடந்துவரும் மடம். அந்தச் சிம்மாசனத்துக்கு அவர் வந்திருப்பதுதான் சாட்சி. தெரிந்த விஷயத்தை எப்படி நிரூபிப்பது?' என்று சேஷப்பா குறுக்கே பேசினுன்.

அப்போது தானம்மா, தலையைப் புடைவையால் மறைத்துக் கொண்டு 'ஐயா, இங்கே கூடியிருக்கிற ஜனங்க கடவுளுக்குச் சமானம். நான் சொல்ற விஷயத்தை நம்பினு நம்புங்க, விட்டா விடுங்க. நான் பார்த்ததைச் சொல்றேன். சிமஞவை இந்தக் கதிக்கு ஆளாக்கியது சாமியார்தான். அவளை மடத்துக்கு அழைச்சிட்டு வந்தவ நான்தான். என் ஒருத்தியைக் கெடுத்தது போதாதுன்னு தங்கமான பொண்ணோட வாழ்வையும் கெடுத்தூட்டார்னு நான் அவரோடே சண்டை போட்டு மடத்தைவிட்டுப் போயிட்டேன். சிமஞவின் கல்யாணம் தடையானதனுலே நாஞ சாஹேப் போய்ட்டார்ன்னு கேள்விப் பட்டேன். சிமஞவைப் பார்த்து ஆறுதல் சொல்லணும்னு

தோனித்து. கௌடர்வீட்டு ஆள், மாடு விக்கறத்துக்கு விஜாபுரத்துக்கு (பீஜபூர்) வந்திருந்தான். அவனோடே முந்தா நாள் இங்கே வந்தேன். கௌடர் வீட்டிலே இருந்தேன். இந்தச் சாமியார் ஒன்னுதானா செஞ்சிருக்காரு! அப்பப்பா! என்னைப் போல புருஷனை இழந்தவங்களுடைய சாபம் அவரைச் சும்மா விடாது!' என்று வயிற்றெரிச்சலுடன் கையை நெட்டிமுறித்தாள்.

தானம்மா, சாமியாரின் சட்டபூர்வமாகக் கல்யாணம் செய்து கொள்ளாத மனைவியாக இருந்தவள். முள்ளால் முள்ளை எடுப்பதுபோல் பாவத்தைக்கொண்டே பாவத்தை வெளியே கொண்டுவரவேண்டியிருக்கிறது. தானம்மாவின் பேச்சை ஜனங்கள் நம்பினார்கள். 'சுவாமிகள் சிமணாவைக் கற்பழித்தது நிஜந்தான்' என்றார்கள். ஆனால் மடத்தில் வாழும் ஒரு சந்நியாசியின் தலையில் சிமணாவைக் கட்டி, மடத்தைப் போன்ற புனிதமான இடத்தில் குடும்ப வாழ்க்கை நடத்தவிடுவது அவர்களுக்குப் பிடிக்கவில்லை.

அதனால் 'பாபு சாஹேபின் பாபச் சுமையைச் சுவாமிகளின் மேல் சுமத்துவது சரிதானா ஐயா, மணியக்காரரே!' என்று சேஷப்பா வக்கீல் வாதத்தைத் தொடங்கினான்.

அறையில் ஒளிந்து உட்கார்ந்துகொண்டு இந்த விவகாரங்களை எல்லாம் கேட்டுக்கொண்டிருந்த பாபு சாஹேப், தாழ்ப்பாளைத் திறந்துகொண்டு வெளியே வந்து, ''நான் செய்த பாபம் மட்டும் எனக்கு இருக்கட்டும். ஆனால் 'செய்யாத பாபத்தை ஏற்றுக்கொள்' என்றால் உயிர் போனாலும் முடியாது. சாமியார் இப்படிப்பட்ட வேலை செய்த பின், நான் சிமணாவின் மேல் ஆசையையே விட்டுவிட்டேன். எங்க அக்கா, சிமணாவுக்குக் காவலாக இருந்துகொண்டு நான் அவளை நெருங்காமல் பார்த்துக்கொண்டாள். சாமியாரே, கார்ப் பௌர்ணமி போய் எத்தனை மாசம் ஆச்சு, நீங்களே கணக்குப் போட்டுச் சொல்லுங்க. முன்னேற்பாடாக மருந்தைக் கொண்டுவந்து கொடுத்தவங்களுக்குத்தான் அதெல்லாம் தெரியும்'' என்று சொன்னதும், படதையா, உட்கார்ந்த இடத்திலேயே குன்றிப் போய்விட்டார்.

'வேண்டியவங்களே பழிசுமத்தினா என்ன செய்யறது? உயிர்த் தோழரே என்னை எதிர்த்து நின்றால் எங்கே போவேன்! எல்லாம் சிவனுடைய விளையாட்டு!' என்ற ஏக்கமான சொற்கள் படதையாவின் வாயிலிருந்து வெளிவந்தன.

'எங்கிருந்து வந்தயோ இனிமேலே அங்கயே போலாம்' என்று கூட்டத்திலிருந்து துடுக்கான ஒருவன் சொன்னான்.

'நீ எவ்வளவு! உன் பேச்சு எவ்வளவு! இப்படியெல்லாம் பேசப்படாது தம்பி!' என்று சேஷப்பா புத்திசொல்லும் முறையில் பேசினன்.

சிமணுவின் கண்களிலிருந்து ஓயாத மழைபோல் கண்ணீர் வழிந்துகொண்டிருந்தது. எதிர்காலத்தின் பயங்கர நினைவில் அவள் கை கால்கள் ஓய்ந்தன. நாணு இறந்துவிட்டதால் வெறுப் படைந்த அவளுடைய உள்ளம் தரிசு நிலம்போல் வறண்டு கிடந்தது. அந்த நிலையிலும் பயம் இருந்தபோதிலும் தாதாவைத் தான் ஊன்றுகோலாக நினைத்தாள். முதல் கவளமே அவள் வாழ்க்கைக்கு விஷம் ஆகிவிட்டது. நாணுவின் அன்புப் பாது காப்பில் கவலையற்றிருந்தவள். ஊருக்குள்ளேயே எடுப்பான தன் அழகைப்பற்றிப் பெருமைகொண்டிருந்த வெகுளிச் சிறுமி. இத்தனை ஜனங்களுக்கு எதிரில் விசாரணைக்கு ஆளாகும்படி ஆயிற்று! அதுவும் மானத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அல்ல. 'பிறக்கப்போகும் குற்றமற்ற குழந்தையின் தந்தை யார்?' என்பதைத் தெரிவிப்பதற்காக. உண்மையைச் சொல்லியாகி விட்டது. என்ன பிரயோஜனம். பெண்ணின் பறிபோன மானம் தெளிவதற்கு அதென்ன கலங்கிய நீரா? தெரிந்த உண்மையால் பிரமுகர்களுக்கெல்லாம் சமாதானம் ஆகிவிட்டது. ஆனால் அந்தப் பெண்ணின் உள்ளக் கண்ணாடி சுக்கு நூறாக உடைந்து, அந்தத் துண்டுகளில் உண்மையின் விகாரரூபம் நிழலாடியது.

சிமணு அழுதுகொண்டே இருந்தாள். கவுடர்தான் அவளை இப்படிச் சொல்லிச் சமாதானப்படுத்தினார்: 'உள்ளே போ, தங்கச்சி; நீ இனிமேல் இந்த மடத்தில்தான் வாழவேண்டும். சிவனுடைய சித்தம் அப்படி இருந்தால் யார் என்ன செய்ய முடியும்? சாமியாரே! நாணு செத்த பின் சிமணு ஊராரின் குழந்தை. அவளுக்கு ஒரு கஷ்டம் வந்தால் ஊருக்கே வந்தது போல. இதைத் தெரிந்து நடந்துகொள்ளுங்கள்' என்று படதையாவையும் எச்சரித்துவிட்டுக் கூடியிருந்த மக்களைத் திரும்பிப் போகும்படி உத்தரவிட்டார்.

'என் தங்கச்சியை நீயே திருடி உன் மடியில் நெருப்பைக் கட்டிக்கொண்டாய். அவள் உயிருக்கு ஏதாவது நேர்ந்தால்......' இதற்குமேல் தாதாவின் வாயிலிருந்து பேச்சே வெளிவரவில்லை. கோபமும் துக்கமும் அவன் நெஞ்சில் மோதிக்கொண்டன. என்னைப் போன்ற அண்ணன் ஒருவன் இருந்தும் சிமணு அநாதை போல் மடத்தில் சேரும்படி ஆயிற்றே என்று சங்கடப்பட்டான். நீர் நிறைந்த கண்களுடன் ஒரு தரம் சிமணுவைப் பார்த்தான். இரண்டு கைகளாலும் முகத்தை மூடிக்கொண்டு மடத்துப் படிகளில் இறங்கி மெதுவாகச் சென்றான்.

# 8

நாதாவின் வாழ்க்கையில் இது வரையில் துக்கமான சம்பவங்களே வந்ததில்லை. வயது இருபதை எட்டியும் அவன் குழந்தை மனம் உள்ளவனாய் இருந்தான். தாலீம்கானாவும் குஸ்தி கோதாக்களும் தவிர அவனுக்கு வேறு உலகமே தெரியாது. நேற்று வரையிலும் நானாப் பெரியப்பா ஊர் விவகாரங்களில் ஈடுபட்டு அலைந்துகொண்டிருந்தாலும் தாதாவுக்கு அதன் வாசனைகூட எட்டவில்லை. பாலைக் குடித்துவிட்டுத் தேகப்பயிற்சி செய்வதைத் தவிர வேறு பொழுதுபோக்கு அவனுக்கு இருக்கவில்லை. தவிர அவன் கவலையற்று இருந்ததற்கு வேறொரு முக்கியமான காரணம் இருந்தது. பிறந்தது முதல் இருபது வயது வரை பகைமை என்ன என்பதே அவனுக்குத் தெரியாது. அந்தப் பகை என்பது குஸ்திப் போட்டியில்தான் இருந்தது. ஆனால் எதிராளிக்கோ இவனுக்கோ துவேஷம் இருந்ததில்லை.

ஆனால் இப்பொழுது? நானாப் பெரியப்பா இறந்ததால் அடக்க முடியாத துக்கத்தால் தாக்குண்டு அவன் மனநிலை தவறி விட்டது. தன் உலகமே அடியோடு கவிழ்ந்ததுபோலாகிவிட்டது. சிமனா தவறான தொடர்பால் தாயாகப் போகிறாள் என்று யசவந்தராவ் சொன்னவுடன் அவனுடைய ரத்தம் கொதித்தது. இயற்கையில் அவனுக்குப் பொறுமையே தெரியாது. மக்குப் போலிருந்த லக்ஷ்மணனுக்கு எதிர்ப்பதமாக தாதா பிறந்து விட்டான். ஆகையால், பாவிக்குத் தக்க தண்டனை கொடுத்தே தீரவேண்டும் என்ற நியாயத்தில் நம்பிக்கை வைத்து ஆவேசத்துடன் பழிவாங்கப்போனான். ஓர் அன்பு உள்ளம் அவன் வேகத்தைத் தடுத்தது. கோபம் சோகமாக மாறியது. அப்படி நொந்த மனதைத்தான் ஊர் மக்கள் விரோதம் நிமிஷத்துக்கு நிமிஷம் குத்திக்குத்தி துளைத்தது. மடத்திலிருந்து திரும்பியபின் அவனுடைய ஆத்திரம் தணிந்துவிட்டது.

'ஐயோ! நான் என்ன வேலை செய்துவிட்டேன் என்ற பச்சாத்தாபம் உண்டாயிற்று. பாவம் செய்தவனைத் தண்டிக்காமல் அநியாயமாகச் சிமனாவைப் படதையாவின் கையில் ஒப்பித்துவிட்டு வந்தது மானக்கேடல்லவா? நானாப் பெரியப்பா இருந்தால் இந்த வெட்கக்கேடான காரியத்திற்குச் சம்மதித்திருப்பாரா? இதற்கு உடன்படுவதைவிட மானத்தைக் காத்துக் கொள்ள அவர் ஒரு வேளை தற்கொலை செய்துகொண்டிருப்பாரோ? சிமனாவின் வருங்கால வாழ்க்கை இதனால் சீர்ப்படுமா?

என்றைக்கிருந்தாலும் படதையா அயோக்கியன். தானம்மாவைப்போல் அவளையும் துரத்திவிட்டால் அப்புறம் அவளுக்கு யார் கதி? இப்பொழுது அவள் வழி தவறிவிட்டாலும் அவளுடைய ரோஷத்திற்கொன்றும் குறைவில்லை. அவளும் நானும் பெரியப்பாவைப் பின்பற்றிவிடுவாளோ? அப்படி நடந்தால் நானே அவளை என் கையால் கொலைசெய்தது போலாகும்! அப்புறம் ஊரில் என் மதிப்பு, செல்லாக்காசுக்கும் கேவலமாய்விடும்!'

யோசித்து யோசித்து அவன் மூளை குழம்பியது. இந்த அனுபவம் அவனுக்குப் புதியது. வாழ்க்கையில் முதன்முதலாக ஏற்பட்ட துக்கம் அவனுக்குப் புதிய பாடம் கற்பித்தது. அவன் நினைத்ததுபோல் வாழ்க்கைப்பாதை அவ்வளவு சுகமாக இருக்கவில்லை. இது வரையில் தாதா ஊராரின் அன்பைப் பெற்றிருந்தான். ஊரே அவனிடம் அபிமானம் வைத்திருந்தது. ஆனால் இன்று ஒரு தவறும் செய்யாமலேயே மக்கள் பார்வையில் குற்றவாளியாகிவிட்டான். தற்செயலாக அவர்களுக்குள் ஏற்பட்ட துவேஷம் அவனுக்குக் கலவரத்தை உண்டாக்கியது. சாவுக்கும் பயப்படாத தாதா இப்பொழுது ஜனங்களுடைய கேலிச் சிரிப்புக்குப் பயந்தான். அவ்வளவு இருட்டிலும்கூடப் பாதள்ளியின் குறுகலான தெருக்களில் யாராவது தன்னைப் பார்த்துச் சிரிப்பார்களோ என்ற பயத்தால் தலையைக் குனிந்துகொண்டே நடந்தான்.

அதற்குமேல் சாப்பிடுவதென்பது முடியாத காரியம். இந்தச் சந்தர்ப்பத்தில் சாப்பிட நினைப்பதுகூட வெட்கக்கேடு. தாதா நேராகத் தாலீம்கானாவுக்குப் போனான். அங்கே சுவரில் காணப்பட்ட விஷப்பிரமாண அனுமாருடைய* சித்திரத்தை மனம் பதியாமல் பார்த்தவண்ணம் உள்ளே நுழைந்தான். உள்ளே இருள் கப்பிக்கிடந்தது. ஒரு கர்லாக் கட்டையையே தலையணையாக வைத்துக்கொண்டு தாதா தூங்கிவிட்டான்.

யசவந்தராவ் காலையில் வீட்டுக்கு வந்துவிட்டுப் போனபின் படோதைக்குப் போவதற்கு வழிச் செலவுக்காகப் பணம் வாங்கிவர அயலூருக்குப் போயிருந்த லக்ஷ்மணன் இரவில் வீட்டுக்குத் திரும்பினான். பூட்டுத் திறக்கப்படவேயில்லை. சாவி எடுத்து வருவதற்காக லக்ஷ்மணன் தாலீம்கானாவுக்குப் போனான். வாயிற் கதவு திறந்து கிடந்தது. உள்ளே விளக்கு இல்லை. ஆள் நடமாட்டமும் இல்லை. வாயிலுக்கு வெளியில் நின்றுகொண்டு, 'உள்ளே இருக்கிறது யாரப்பா?' என்று குரல் கொடுத்தான்.

* ஆஞ்சனேயரின் பெயர்

தாதா திடீரென்று கண் விழித்தான். எழுந்திருந்து வந்து தகப்பனாருடைய காலில் விழுந்து விக்கி விக்கி அழத் தொடங்கினான். அவன் எதற்காக அழுகிறான் என்றுகூடக் கேட்காமல் கூடவே லக்ஷ்மணனும் அழுதான். துக்கத்தின் வேகம் சிறிது குறைந்தபின், தாதா, 'குடும்பத்தின் கௌரவம் கெட்டு விடும் வேலையைச் செய்துவிட்டேன். மன்னித்துவிடு அப்பா' என்றான்.

லக்ஷ்மணன் பேசும் நிலையிலில்லை. 'வீட்டுக்கு வா, தம்பி' என்று சொல்லி மகனை அணைத்துக்கொண்டு நடந்தான்.

தந்தையும் மகனும் வீட்டுக்கு வந்தார்கள். அக்கம்பக்கத்தார் இதையே எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள் போலும். அன்று நூற்றுக்கணக்கான மக்களின் நடுவில் தாதா காண்பித்த தைரியம், 'தீமையை ஒழித்தவனே வீரன்' என்பதுபோல் சிமனாவின் வருங்காலத்தைச் சட்டுப்புட்டென்று தீர்மானித்த வகை, இவற்றையெல்லாம் பற்றி விரிவாகச் சொல்லி அவர்கள் தாதாவை வாயாரப் புகழ்ந்தார்கள். லக்ஷ்மணன் உடனே பாளாச்சார் வீட்டுக்குப் போனான்.

அன்று கௌடருடைய வீட்டுக்குப் போன பாளாச்சார் தாமதமாகவே வீட்டுக்கு வந்தார். வேஷ்டி உடுத்திச் சந்தியா வந்தனத்தில் ஈடுபட்டிருந்தார். லக்ஷ்மணன் வந்த செய்தி கேட்டு அதைச் சுருக்கமாக முடித்துக்கொண்டு, 'என்னப்பா லக்ஷ்மணா, இப்போ வந்திருக்கே' என்று கேட்டவண்ணம் விரித்திருந்த மான் தோலில் வந்து உட்கார்ந்தார்.

லக்ஷ்மணன் திண்ணையின் ஓரத்தில் உட்கார்ந்து, 'தாதா இன்னிக்கு என்னென்ன செய்தான்னு கேள்விப்பட்டீங்களா ஆச்சார் ஐயா' என்று கேட்டான்.

'நடப்பதெல்லாம் ஸ்ரீ ஹரியின் இச்சை' என்று தம் அபிப் பிராயத்தை ஒரே வார்த்தையில் சொன்னார் ஆச்சார்.

லக்ஷ்மணனுக்கு ஆச்சாரின் பேச்சில் அசைக்க முடியாத நம்பிக்கை. அவர் விவகாரங்களில் திறமை பெற்ற பரோபகாரி. எவ்வளவு சிக்கலிலும் சரியான வழியைக் காண்பிக்க வல்லவர் என்று சங்கரப்ப கௌடர்கூட இவரோட ஆலோசனையின்படி தானே நடக்கிறார். பாளாச்சாரின் செல்வாக்கும் செயல்களும் பாதள்ளிப் பொதுமக்களுக்கு நம்பிக்கையை ஊட்டியது. தம்முடைய அறுபதாண்டு வாழ்க்கையில் அவர் தவறிக்கூட யாரையும் அவமதித்துப் பேசியது இல்லை. அதனால்தான் கஷ்டங் களில் அகப்பட்டுக்கொண்டவர்கள் அவரிடம் ஓடிவருவார்கள். பாபு சாஹேபும் படதையாவும் சேர்ந்துகொண்டு தாதாவின்

மேல் புகார் எழுதி மறுபடியும் வம்பு செய்வார்களோ என்று லக்ஷ்மணன் பயந்தான். அப்படி ஏதேனும் நேர்ந்தால் மேலே என்ன செய்வது? இதைக் கேட்கத்தான் லக்ஷ்மணன் அங்கே ஓடிவந்தான்.

ஆச்சாரும் இதைப்பற்றித்தான் கவலைப்பட்டார். சாயங்காலம் மணியக்காரர் வீட்டுக்குப் போயிருந்தபோது அவர் எல்லாச் செய்திகளையும் கேள்விப்பட்டார். படதையா, கௌடர் இருவருமே பலம் மிக்கவர்கள். இவர்கள் கத்தி தீட்டினுல் ஊர் மக்களின் கதி என்ன? பார்க்கப்போனுல் சிமனுவின் விவகாரம் தனிப்பட்டவர் விஷயம். தாதா அண்ணன் ஆனதால் மனச்சங்கடம் காரணமாகத் தனக்குத் தெரிந்ததைச் செய்தான். ஆனுல் மற்றவர்கள், இருவரையும் சமாதானப்படுத்தி, நிலைமையைச் சீர்ப்படுத்துவதற்கு பதில் அதைத் தங்கள் சொந்தப் பிரச்னையாக மாற்றிக்கொண்டு ஏன் அடித்துக்கொள்ள வேண்டும். பாளாச்சாரின் நீண்டகால வாழ்க்கையில் இந்த அனுபவம் புதியதன்று. ஊர்ச் சண்டைகள் எல்லாவற்றுக்கும் அடிப்படையான தனிப் பிரச்னை ஒன்று இருந்துகொண்டிருக்கும். இப்பொழுதும் அதே நிலைதான்.

மறுநாளே தம்முடைய தானியக் குழிகளைத் திறந்து தானியம் கொடுக்கவேண்டும் என்று கௌடரிடம் ஆச்சார் சொல்லிவிட்டு வந்திருந்தார். படதையா ஏழைகளின் பசியை துர்விநியோகம் செய்து ஏழைகளை விட்டே கொள்ளையடிக்கத் தூண்டாமல் தடுக்கவேண்டும் அல்லவா? அப்படியே சேஷப்பாவையும் கூப்பிட்டு, 'உன் கைவரிசையால் ஊர் நாசமாகாமல் பார்த்துக் கொள்' என்று உபதேசம் செய்துவிட்டு வந்திருந்தார். இவ்வளவுக்கும் மேலாகப் பாபு சாஹேபை ஊரைவிட்டுத் துரத்தாவிட்டால் ஊரில் சுகமும் அமைதியும் நிலைப்பது அரிது என்று அவர் மனத்தில் பட்டது.

'படோதைக்குப் போகும் யோசனை என்ன ஆச்சு லக்ஷ்மணு?' என்று திடீரென்று நினைவு வந்ததால் அதைக் கேட்டார்.

'அதைத்தான் கேட்க வந்தேங்க. தாதா இன்னிக்குச் செய்த வேலைக்கு அவன்மேலே புகார் எழுதி பாபு சாஹேப் ஏதாவது தொந்தரவு கொடுத்தால் எப்படீங்க?' என்ருன் லக்ஷ்மணன்.

'நீ ஒன்றும் பயப்பட வேண்டாம், லக்ஷ்மணு! தாதாவின் செய்கையைக் கண்டு ஊரெல்லாம் சந்தோஷப்படுகிறது. பையன், சின்னவஞனுலும் அவனுடைய தைரியம் ரொம்பப் பெரிசு. அது வரைக்கும் பரவாயில்லே. தாதா, உனக்கு நல்ல பேரைத்தான் தேடித்தருவான்' என்று ஆச்சார் மனமாரப் புகழ்ந்தார்.

'ஆமாங்க, காட்டு மிருகம் மாதிரி இருக்கானுங்க. பெரியவன் ஆயிட்டான். எனக்கு அடங்கமாட்டானுங்க இனிமே. தைரியத்தைப் பற்றிச் சொல்றீங்களா? சமயம், எடம் பாத்துச் செய்ய வேண்டாங்களா?' என்றான் லக்ஷ்மணன்.

லக்ஷ்மணனுக்கு உள்ளூர இருந்த பயத்தால் மகனுடைய சாகசச் செயல்கூட வெறுப்பூட்டியது.

'இருக்கட்டும்ப்பா! அவன் தைரியத்தைக் கண்டு படதை யாவின் கூட்டம் எல்லாம் இன்னிக்கி எலி வளையிலே பூந்துக்கல்லே! இனிமேல் அவன் வழிக்கு வரமாட்டானுக. பாபுவும் அவன் ஜோலிக்கு வரமாட்டான். இனிமே அவனுகளெல்லாம் தாதாவின் நெழலைக் கண்டுகூடப் பயப்படுவாங்க. நீ ஒன்னும் கவலைப்பட வேண்டாம்ப்பா! தாதாவைப் பாதள்ளிக்காரங்களே உள்ளங்கையிலே வச்சுக் காப்பாத்துவாங்க. நீ படோதைக்குப் போய் லக்ஷ்மிபாயை அழைச்சுகிட்டு வருவதுதான் இப்போது அவசியம். ஜனங்க ஆதரவா இருக்கும்போதே பாபு சாஹேபை மாளிகையை விட்டு ஓட்டி ஊரின் உபத்திரவத்தைக் குறைக்க வேண்டும், இல்லையா? நீ என்ன சொல்கிறே?' என்று சாவதானமாகச் சொன்னார் பாளாச்சார்.

'ஆகட்டும், நாளன்னிக்கித் திங்கட்கெழமை. அன்னிக்குப் பொறப்படறேங்க ஆச்சாரையா! நீங்க கொஞ்சம் தாதாவைச் கூப்பிட்டுப் புத்தி சொல்லுங்க. அவன் என் பேச்சு ஒன்னையும் கேட்பான்னு தோணலை. அசட்டுப் பய! நாலுபேர் 'பேஷ்'ன்னு சொன்னாப் போதும். ஏதாவது துடுக்குத்தனமாச் செய்துட்டுத் தனக்கே கேடு தேடிக்கொள்கிறான்' என்று லக்ஷ்மணன் மூக்கால் அழுதான்.

அப்பொழுது கர்ணம் சேஷப்பா அங்கே வந்தான். வாசலுக்கு முன்னால் செருப்பை விடும்போதே லக்ஷ்மணன் சொன்ன கடைசி வாக்கியம் அவன் காதில் விழுந்தது.

'வம்பை வெலைக்கு வாங்கற வேலையைச் செய்தூட்டா எப்படித் தப்பறது லக்ஷ்மணா? இல்லையா ஆச்சார் சுவாமி!' என்று சொல்லிக்கொண்டே பொடியை உறிஞ்சினான்.

'நீ சாப்பிட்டு எத்தனை நேரம் ஆச்சோ! இனிமே நீ வீட்டுக்குப் போ லக்ஷ்மணா' என்றார் ஆச்சார். இனிமேல் அவர்கள் பேசப் போகும் ரகசியத்துக்கு லக்ஷ்மணன் தேவை யில்லை என்பதை அவர் ஜாடையாகச் சொன்னார்.

லக்ஷ்மணன், ஜாடையை அறிந்து, போய்விட்டான். சேஷப்பாவும் பாளாச்சாரும் வெகு நேரம் பல விஷயங்களைப் சிறிபைற்றிப்பேசிக்கொண்டிருந்தார்கள். கடசியில் ஆச்சார்து

கோபத்தோடேயே, சேஷப்பாவை எச்சரித்தார்! 'இதோ பார், சேஷப்பா! நீ படதையாவுக்கு வால் பிடித்துக்கொண்டு ஊரில் கட்சி பேதத்தை வளர்த்தால் அது ஊரையே சுட்டுவிடும்' என்றார் ஆச்சார்.

'நான் கட்சி கட்ட வேணும் என்று சொன்னேன், ஆச்சார்! கௌடன், படதையாவினுடைய மரியாதையைக் கெடுத்திட்டான். அவனே, கௌடன் நாணுவின் மரண விவகாரத்தை லஞ்சம் வாங்கிக்கொண்டு மறைத்ததை 'அம்பலம் ஆக்க வேண்டும்' என்று சபதம் செய்துகொண்டு உட்கார்ந்திருக்கிறன். அவன் ஊரிலே நாலு பேருக்கு வேண்டியவன். கௌடன் அவன் மானத்தைக் குலைத்திருக்கக் கூடாது' என்றன் சேஷப்பா. 'அது அப்படி அன்று. கௌடர் வந்து தலையிட்டதால்தான் இது வரையிலும் படதையா உயிரோடிருக்கிறன். இதை நீ அவனுக்குத் தெரியும்படி சொல்லியிருக்கவேண்டாம்?' என்று கேட்டார் பாளாச்சார்.

''ஆனல் ஆச்சார் சுவாமி, இந்தக் கௌடனுடைய பலம் வளர்ந்துவிட்டால் நம்மையெல்லாம் அவன் துரும்புக்கும் கேடாக மதிப்பான். படதையாவின் பேச்சு நிலையாக இருக்க வேண்டும் என்றல் அவனைக்கொண்டு கௌடனை அலறவைக்க வேண்டும். 'மொட்டை விண்ணப்பம் போட்டான்' என்றல், கௌடன் அடங்கிப் போய்விடுவான். கௌடனுடைய பகையைத் தேடிக் கொண்ட படதையாவுக்கு நம்ம ஆதரவு இல்லாமெ முடியாது. பலாபலம் சரியாக இருப்பதற்கு இது ஒரு வழி ஆச்சார். அப்பத் தான் ஊர், சுகமாக இருக்கும்'' என்றன் சேஷப்பா.

இந்தப் பேச்சால் சேஷப்பாவின் கீழ்த்தரமான குணம் நன்றக வெளிப்பட்டது. இந்த அல்பத்தனத்துக்குச் சுயநலம் தான் காரணம். கௌடரைப்போல் அவனுக்கு நானூறு ஏகரா பூமி இல்லை. மணியக்காரர் ஸ்தானத்தில் இருப்பதால் யானையையும் இழுத்தெறியக் கூடிய முதலை, கௌடர். சேஷப்பா கறையான் புற்றில் வசிக்கும் பாம்பு. அதனல் கட்சி கட்டாமல் வேரூன்றிக் கொள்வது அவனல் முடியாத காரியம்.

சேஷப்பா புறப்பட்டுப் போய்விட்டான். அப்பொழுது இரவு பதினெரு மணி இருக்கும். ஆச்சாரின் மனைவி, சமையல் அறையிலேயே இரவு பலகாரத்துக்காகக் காத்திருந்து அங்கேயே படுத்துக் கொண்டாள். இருந்த ஒரு மகனும் போய்விட்டபின் தம்பதிகள் இருவரும் இரவுச் சாப்பாட்டை விட்டுவிட்டார்கள். ஆச்சார் மனைவியை எழுப்பிப் 'பலகாரம் வேண்டாம்' என்று சொல்லி விட்டுப் படுத்துக்கொள்வதற்காக மறுபடியும் கூடத்துக்குப் போனர்.

வரவர ஆச்சாருக்கு முன்போல் தூக்கம் பிடிப்பதில்லை. சமீபத்தில் நடந்த சம்பவங்கள் அவருடைய சக்தியை உறிஞ்சி விட்டன. அவர், தம் சிறு வயதில் ஊரில் செய்த அழும்புகளுக்குக் கணக்கே இல்லை. ஆனால் மகன் இறந்த பிறகு அவர் ஊருக்கே நல்ல பெரிய மனிதர் ஆகிவிட்டார். வீடு, சூனியமானபின் வேறு வழியின்றி உலகத்தோடு ஒட்டிக்கொண்டிருந்தார். குடும்பத்தின் வைதிக மரபு அவருடைய ஆத்மிகக் கடமைகளுக்குப் பலம் கொடுத்தது. குளிரோ மழையோ, விடியற்காலையில் எழுந்திருந்து கோபாலகிருஷ்ணன் கோயிலில் புராணம் படிப்பதை விடவில்லை. அதோடு ஊருக்கு உபகாரியாகவும் இருந்தார்.

அவர் மான் தோலிலேயே படுத்துக்கொண்டார். தூக்கம் வரவில்லை. சேஷப்பாவினுடைய பேச்சு அவருடைய மனத்தில் ஒரு புயலை எழுப்பிவிட்டது. கொட்டாவி விட்டபடி எழுந்து உட்கார்ந்தார். நல்லெண்ணெய் அகல் நின்று எரிந்து கொண்டிருந்தது.

சேஷப்பா, 'கட்சி கட்ட வேண்டும்' என்று சொல்லிவிட்டுப் போனான். ஆச்சார், கட்சி பிரியும் இந்தக் கொடுமையை நன்றாக அனுபவித்தவர். அவருடைய குடும்பமே அதற்குப் பலியாகி யிருந்தது. நாம், அண்ணன் தம்பிகள் மூவரும் நன்றாக வாழ்ந்தபோது இருந்த கலகலப்பு இப்போது வீட்டில் இருக்கிறதா? ஏதோ அற்பமான காரணத்தால் குடும்பம் பிரிந்தது. அவருடைய பெரிய நமையனார் மகன் கோபாலாச்சார், படையாவின் மடத்தில் சேர்ந்துகொண்டு குடியிலும் சூதாட்டத்திலும் இறங்கிவிட்டான். வீட்டில் கல்யாணம் ஆகாத பெண் மூலையில் முடங்கிக் கிடந்தாள். அண்ணன் மக்களுள் நாராயணன்தான் நல்லவன். தகப்பனாருடைய பெயரைக் கெடுக்காமல் வாழ்ந்துகொண்டிருந்தான். ஆனால் அது என்ன வாழ்க்கை! நிலத்தை விற்றுவிட்டுப் பிடி சோற்றுக்குக் கதியில்லாமல் பிச்சையெடுத்துப் பிழைக்கிறான். அவர்கள் ஒன்றாக இருந்தால் கோபாலன் விவசாயத்தைப் பார்த்துக்கொள்ளலாம். நாராயணன் வேலை தேடிக் கொண்டிருக்கலாம். பிள்ளையைப் படிக்க வைத்திருக்கலாம். சொத்தைப் பிரித்துக்கொண்டாலும் பாசத்தோடு வாழலாம். கோபாலாச்சார், தலையாரி வீட்டு ரங்கியின் வலையில் விழுந்தான். படையாவுக்கு நண்பன் ஆனான். அவனுடன் சேர்ந்துகொண்டு பாளாச்சாரையே அழிக்கப் பார்த்தான். நாட்டின் நியாயம் ஆளை அடிப்பதுதானா?

நாராயணன் மட்டும் என்ன? தனக்குப் பங்கில் 'தங்கத்தைக் குறைத்துக் கொடுத்துவிட்டார்கள்' என்று கோர்ட்டுக்குப் போய், இருந்த சொத்தை எல்லாம் தொலைத்துவிட்டான். இல்லாவிட்டால் ஏன் பிச்சை எடுக்க வேண்டும்? 'தம் குடும்பம் க்ஷீணதசையை அடைவதற்கு மறைமுகமாகப் படதையாதான் காரணமாக இருந்தான். அவனுக்கு என்ன? 'நாலு பேர் தன் பேச்சைக் கேட்க வேண்டும்' என்ற ஆசை. அதற்காகக் குடியர் கூட்டத்தைப் பெருக்கிக் கட்சி கட்டி அக்கிரமத்தை நடத்தி வந்தான். சேஷப்பாவும் அவனுடன் சேர்ந்துகொண்டிருக்கிறான். சேஷப்பா கல்யாணம் செய்து விருந்து சாப்பிடுகிறவன் அன்று. போர் சுட்டுப் பொரி பொறுக்கி. ஊரில் அடிதடி சண்டை நடக்க வேண்டும். ஜனங்கள் கோர்ட்டுக்கு அலைய வேண்டும். அப்போது தான் தனக்கு நாலு காசு கிடைக்கும் என்பது அவன் நம்பிக்கை. சேஷப்பா, படதையா இவர்களுடைய சிநேகம் ஊருக்கே நாசத்தை விளைவிக்கக்கூடியது. இவர்கள் இருவரும் தங்களால் ஆனமட்டும், பற்றிய தீ அணையாமல் பார்த்துக்கொள்வார்கள். கௌடர், பாபு சாஹேப் இருவர்கள்மேலும் வஞ்சம் தீர்த்துக் கொள்ளப் படதையா மொட்டை விண்ணப்பம் எழுதலாம். அப்பொழுது கௌடரும் பாபு சாஹேபும் ஒன்றுகிவிடுவார்கள். 'நாணு கொலை செய்யப்படவில்லை' என்பதற்குச் சாட்சி தேட வேண்டும். 'சாட்சி சொல்லியவர்களின் வீடு கொள்ளை போகும்' என்று படதையா பயமுறுத்தலாம். பாபு சாஹேபுக்குப் புலிவேட்டைக் கூட்டம் துணை இருக்கிறது. கௌடருக்கு மல்லர்களின் துணை இருக்கிறது. படதையாவின் பரிவாரமும் பெரியதுதான். சிறு பொறி பெருந்தீ ஆவதற்கு இன்னும் என்ன வேண்டும்?

கௌடரும் பாபு சாஹேபும் ஒன்று சேர்ந்தால், பாபு சாஹேபை ஊரைவிட்டு ஓட்டும் திட்டத்தை எப்படி நிறை வேற்றுவது? கௌடரை முழுதும் நம்பக் கூடாது; நம்பாமலும் முடியாது. முன்பு குருபாத சுவாமிகளுடைய இஷ்டத்துக்கு விரோதமாக அஜராணியில் இருந்த படதையாவைக் கொண்டு வந்து பட்டம் கட்டியது கௌடர்தான். லக்ஷ்மிபாயை மாளிகையைவிட்டு விலக்கியதும் அவன்தான். ஆனல் இப் பொழுது அவனுடைய யோசனைகள் எல்லாம் மாறிவிட்டன. 'லக்ஷ்மிபாயை வரவழைக்க வேண்டும்' என்கிறுன். 'படதையாவை மடத்தில் இருந்து வெளியேற்றவேண்டும்' என்கிறுன். சேஷப்பாவைப்போல் இவனும் சர்க்கார் உத்தியோ கஸ்தன். இருவரும் சேர்ந்து ஊரை இரண்டாக்கும் சூழ்ச்சியில் இறங்கியிருக்கிறுர்கள். இவர்களுக்குள் கௌடன், தன்

கட்சிக்குத் தலைவனுகப் பொறுப்பேற்றுத் தானே நடத்தக் கூடியவன். ஆனல் சேஷப்பா இரண்டு கட்சிகளிலும் வேஷம் போடக்கூடிய தந்திரசாலி. கணக்குப்பிள்ளைத் தொழிலே அவர்களுக்கு இந்த மாதிரி 'நினைத்தபடி வேஷம் மாறும்' வித்தை யைக் கற்றுக் கொடுத்திருக்கிறது. சட்ட ஞானந்தான் அவனுடைய செல்வம். அந்தப் பலத்தில் பாதள்ளியையே ஆட்டிவைக்கும் திறமை அவனுக்கு இருக்கிறது. 'இந்த இருவருக்குள் யார் உயர்த்தி? யார் தாழ்த்தி?'

பாளாச்சாரின் மனம் தம் குடும்ப விவகாரத்திலிருந்து, பாதள்ளியின் வாழ்க்கைச் சக்கரத்தின் பக்கம் திரும்பியது. ''எந்தத் தெய்வம் இந்த வேற்றுமையின் மூலம் சூத்திரதாரியாக இருந்து ஆட்டிவைக்கிறதோ! யாருக்குத் தெரியும்? தம்முடைய 'அறுபதாண்டு வாழ்க்கையின் அனுபவம், பரம்பரையாக வந்த வித்தை, கூடவே பிறந்த புத்திக் கூர்மை இவை யாவுமே இந்தப் பிரச்னையை விடுவிக்கும் ஆற்றல் இல்லாதவை' என்று அவருக்குத் தோன்றியது. ஊரார் அத்தனைபேரும் அவர் பேச்சுக்கு மதிப்புக் கொடுத்திருந்தார்கள். அவருடைய மதப்பற்றில் ஜனங்களுக்கு அக்கறை இருந்தது. அவரது செயல்திறமையில் நம்பிக்கை இருந்தது. ஆனல் அவற்றல் என்ன லாபம் கிடைத்தது? 'ஜனங்கள் தம்மிடம் யோசனை கேட்க வருகிருர்கள்' என்று பாளாச்சாருக்கு உள்ளூரப் பெருமையாக இருந்தது. இப்பொழுது அது மறைந்துவிட்டது. ஜனங்கள் அவர் சொன்னபடி கேட்கிருர்கள். எதற்காக? எருமை காணமல் போய்விட்டால் ஜோசியம் கேட்க வருவார்கள். நடவு நட முகூர்த்தம் கேட்க வருவார்கள். அதிகமாகப் போனல் என்னுடைய புராணப் பிரசங்கத்தைக் கேட்க வருவார்கள். ஆனல் வாழ்க்கைத் தொல்லைகளை விடுவித்துக்கொள்ள மட்டும் யோசனை கேட்க யாரும் என்னிடம் வருவதில்லை. அவர்களுக்கு என்ன யோசனை சொல்ல முடியும்? வீட்டில் பிறந்த பிள்ளைகளான கோபாலனும் நாராயணனுமே நாம் சொன்னதைக் கேட்காமல் குட்டிச்சுவர் ஆகிவிடவில்லையா? கௌடன், சேஷப்பா, பாபு சாஹேப் இவர்களுந்தான் வருகிருர்கள். சுயநலத்தைச் சாதித்துக் கொண்டு ஊரின் அமைதியைக் கெடுப்பதற்காகத்தான் வருகிருர்கள். யோசிக்க யோசிக்கப் பாளாச்சார் மனம் சங்கடப் பட்டது. 'எந்த ஒரு மனிதனுடைய யோசனையையும் கேட்டு ஒருவர் வாழ்க்கை நடப்பதில்லை' என்னும் உண்மை அவருக்குப் புலனயிற்று.

பாளாச்சாரின் மனம் பாதள்ளியின் வாழ்க்கை முறையை மற்றொரு தடவை அசைபோட்டுப் பார்த்தது. அறுபதாண்டுகள்

அங்கேயே வாழ்ந்த அவருக்கு அந்த ஊரின் மூலை முடுக்குகள், தெருக்கள், வீடுகள், மக்களுடைய முகங்கள் எல்லாம் தாம் படிக்கும் புராணத்தின் ஏடுகள்போல் அத்துபடியாகி இருந்தன; ஊரின் வாழ்க்கையும் அப்படியே. 'அந்தக் காலத்தில் இருந்த சுகமும் அமைதியும் இப்பொழுது எங்கே பறந்து போய்விட்டன?' என்று அவருடைய மனம் கேட்டது. இந்த ஜனங்களுக்கு என்ன தான் வந்துவிட்டது! நானு மறைந்து மூன்று மாதங்கள் ஆகியும் அதன் காரணமாக ஏற்பட்ட பகைமையும் பொறுமையும் இன்னும் அலைபோல் வந்து மோதிக்கொண்டே இருக்கின்றன. இதற்கெல்லாம் என்ன காரணம்? அல்லது இந்த ஆதாரமற்ற தாண்டவத்தின் ஒழுங்கீனத்திலேயே புது வாழ்வு ஒழுங்காக உருவெடுக்கப் போகிறதோ? அதுவும் இருக்கலாம். ஜனங்கள் முன்புபோல் தங்களின் நிலங்களின்மேல் பற்றுவைக்கவில்லை. இந்த மணியக்காரர் பாதள்ளியின் ஒவ்வொரு பகுதியையும் அபிமானத்தோடு பார்த்துக்கொள்பவர். இப்பொழுது கட்சி கட்ட முன்வந்திருக்கிறார்! மாளிகையின் உன்னத நிலை இப் பொழுது வெறும் கனவாயிற்று. ஊரின் அபிமானத்தைப் பெற்ற மடம் குடிகாரர்களின் இருப்பிடமாக அழிந்துகொண் டிருக்கிறது. மக்களுக்கு 'நம் ஊர்' என்ற பற்று அழிந்து போயிருக்கவேண்டும். ஊரின் நிலைமையும் போக்கும் நம் வீட்டின் நிலைமையும் போக்கும் போலத்தான் இருக்கிறது. தலையணையைப் போல் சாய இடங்கொடுத்த நிலங்களையே விற்றுவிட்டு வெட்ட வெளியில் நிற்கும் தம் பிள்ளைகளின் தோற்றம் ஆச்சாரின் மனக் கண்ணின் எதிரில் தோன்றியது.

இதெல்லாம் எந்தப் பாபத்தின் பலன்? இந்தப் பாபம் எங்கே இருந்து தோன்றியது? அல்லது வாழ்க்கையை உருவாக்கும் பொறுப்பு நமக்கு இல்லையோ? அப்படி இருந்தால் அதை உருவாக்கும் சக்தி எது? பாளாச்சாரின் மனம் மேல்நோக்கிச் சென்று எல்லாவற்றையும் பார்க்கத் தொடங்கியது. பாதள்ளி நிலத்தின் சாரம் தீர்ந்துபோயிருக்கவேண்டும். உழாத நிலத்தில் செடி செத்தைகள் முளைத்தால் தப்பு என்ன? பாதள்ளி நிலத்தின் சத்தெல்லாம் போய்விட்டதோ? இல்லாவிட்டால் இப்படியா ஒரு விபரீதம்! ஒருவேளை வாழ்க்கையில் பாவத்துக்குப் பரிகாரம் இல்லையோ? பகவான் 'இதுபோன்ற சந்தர்ப்பங்களில்தான் அவதரிப்பார்' என்று சொல்வார்களே. 'எங்கே, எங்கே' என்ற கேள்வி பூதமாக நின்று அதட்டியது.

பாளாச்சாருக்கு மற்றொரு யோசனையும் தோன்றியது. 'நானோ போயும் போயும் வைதிகப் பிராம்மணன். புராணப் பிரசங்கத்தால் கிடைக்கும் பிடி அரிசிதான் என்னுடைய

சொத்து, சுகம் எல்லாம். அப்படியிருக்க இவற்றையெல்லாம் போட்டு ஏன் குழப்பிக்கொள்ள வேண்டும்? மகன் இருந்திருந் தால் ஆசை இருக்கும். அவன் இறந்துபோய், வெகு காலத்துக்கு முன்பே வைராக்கியப் பாதையைக் காட்டிவிட்டான். இந்த லௌகிகத்துக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்?

மனிதர் காலடி பட்டுப்பட்டு பாதை ஏற்படுவதுபோல் செய்த வினை தொடர்ந்து வந்திருக்கிறது. செயல்களைச் செய்து செய்து நம் வாழ்க்கையை நாம் உருவாக்கிக் கொள்கிறோம். திடீரென்று 'அது எனக்குச் சொந்தம் இல்லை' என்று எப்படிச் சொல்ல முடியும்? கோபாலகிருஷ்ணன் கோயிலில் புராணம் சொல்லிச் சொல்லித்தான் நான் பௌராணிகன் ஆனேன். நாளைக்கு நான் அதை நிறுத்திவிட்டால் 'பௌராணிகன் அல்ல' என்று ஆகிவிடுமா? அதுபோலவே 'என்னுடைய எல்லாவித லௌகிக விவகாரங்களின் பந்தமும் எனக்கு இல்லை' என்று எப்படிச் சொல்ல முடியும்? பாதள்ளியின் தொடர்பைத்தான் இல்லை என்று மறுக்க முடியுமா? ஆசை என்றால் கடன்; கடன் என்றால் கடமை; அந்தக் கடமையை மீறுவது அநீதி. ஆசை யுடன் செய்த வினை, கட்டிக்கொண்ட மனைவியைப் போன்றது; வயிற்றில் பிறந்த மக்களைப் போன்றது. விட்டுவிட்டுக் காட்டுக்கு ஓடினாலும் விடாத சம்பந்தம் அது. அந்தக் கடனைத் தீர்க்கத்தான் வேண்டும். ஆம். பாதள்ளியின் கடனைத் தீர்க்கத்தான் வேண்டும். மீதி உள்ள வாழ்நாளை எல்லாம் இங்கேதான் கழிக்க வேண்டும். பழைய வாழ்க்கையின் நூற்றுக் கணக்கான ஆசைகளுக்கும் செயல்களுக்கும் கொடுக்கவேண்டிய அபராதம் இது? அதுவரையிலும் விடுதலை இல்லை. அதற்குமேல் அழைப்பு வந்தால் தயாராக இருக்க வேண்டும். இந்த உடல் பாதள்ளி நிலத்தின் ஒரு பகுதியாகி, அதன் சாம்பல் கிருஷ்ணா நதியின் தண்ணீரில் மிதந்து செல்ல வேண்டும். தண்ணீரின் கடமையும் இருக்கிறதல்லவா? அதற்கு மேலும் மறு ஜன்மம் இருந்தால் தீவிரமான ஆசையும் இருந்தால் கோபாலகிருஷ்ணன் கோயிலில் உள்ள பிருந்தாவனத்தில் துளசி நாற்றாகப் பிறக்க வேண்டும்.

பாளாச்சாரின் மனம் ஒருவிதமாக அமைதி அடைந்தது. அப்பொழுதே விடியற்காலம் நாலு மணி ஆகிவிட்டது. இன்னும் ஒரு மணி நேரம் சென்றால் அவர் தினசரி எழுந்திருக்கும் நேரம். அதனால் படுத்துக்கொள்வதில் அர்த்தமில்லை என்று தோன்றியது. அகல் விளக்கைத் தூண்டிவிட்டார். ஒளி அதிக மாயிற்று. எறப்பின்மேல் இருந்த சுவடியை எடுத்துப் பிரித்தார். அது அவருக்கு மிகவும் பிரியமான பாகவதம். இதுவரைக்கும்

புராணம் படிப்பதற்கு மட்டும்தான் அதை உபயோகித்து வந்தார். ஆனால் இப்பொழுது அதில் பாளாச்சாருக்கு வாழ்வின் அர்த்தம் புலனாயிற்று.

ஒரு மணி நேரம் இப்படியே கடந்து இருக்க வேண்டும். அவருக்கு அதைப்பற்றிய நினைவேயில்லை. ஆனால் திடீரென்று விடியற்காலையின் அமைதியோடு சேர்ந்து,

'எழுந்திரும் ரங்கா! எழுந்திரும் சுவாமி!
எம்பெருமானே நீர் எழுந்திரும்;
பாலாழி வாசா! எழுந்திரும் சுவாமி!
பரமதயாள நீர் எழுந்திரும்'

என்ற பள்ளியெழுச்சிப் பாடல் அவர் காதில் விழுந்தது. அவருடைய தர்மபத்தினியின் தினசரி நிகழ்ச்சியின் தொடக்கம் இது. உதயராகம் அவரை இவ்வுலகத்துக்கு இழுத்துக்கொண்டு வந்தது. அவர் சுவடியைக் கட்டி மறுபடியும் அதற்குரிய இடத்தில் வைத்தார். இரண்டு உள்ளங் கைகளையும் பார்த்துக்கொண்டு, 'கராக்ரே வஸதே லக்ஷ்மீ கரமத்யே ஸரஸ்வதீ' என்னும் மந்திரத்தை முணுமுணுத்தார். எழுந்திருந்து தெருக் கதவைத் திறந்து வெளியே வந்து பார்த்தார். இன்னும் நன்றாக வெளிச்சம் வரவில்லை. ஆற்றுப் பக்கத்திலிருந்து குளிர்ந்த காற்று வீசியது. ஆகாயத்தைப் பார்த்தார். வெள்ளி முளைத்திருந்தது. வாசலுக்கு எதிரில் உள்ள வழியின்மூலம் வடக்குப் பக்கம் பார்த்தார். ஸப்தரிஷி மண்டலம் தொடுவானத்தை இடிப்பதுபோல் வளைந்திருந்தது. சிறிது நேரம் அதேயே பார்த்துக்கொண்டிருந்து விட்டு ஆச்சார் பசுமாட்டுக்குத் தீனி போட உள்ளே வந்தார்.

மேலும் ஒரு மணி நேரம் சென்றது. விடியற்காலையின் மங்கிய ஒளி எங்கும் பரவியது. ஆச்சாரின் மனைவி கஜேந்திர மோட்சத்துப் பாடல்களை முணுமுணுத்துக்கொண்டே வாசற் படிக்குக் கோலமிட்டுக்கொண்டிருந்தாள். அப்பொழுது சங்கரப்ப கௌடர் 'ஆச்சாரையா! ஆச்சாரையா!' என்று கத்திக் கொண்டே ஓடிவந்தார்.

இப்படி விடியுமுன்பே கௌடர் வீட்டுக்கு வருவதை எதிர் பார்க்கவில்லை ஆச்சார். அவரை அழைத்துத் திண்ணையின்மேல் விரிப்பை விரித்து உட்காரச் செய்தார்.

கௌடர் இரவெல்லாம் தூங்கவில்லை. தானம்மா அன்று தம்மிடம் சொன்ன ஒரு செய்தி அவர் மனத்தைக் கலக்கியதே அதற்குக் காரணம். அவள் சொன்னது நடக்கக்கூடிய விஷயந்தான் என்று அவருக்குத் தோன்றியது. கௌடருடைய

மூத்த மனைவி, படையாவின் பிறந்த ஊரான அஜராணியைச் சேர்ந்தவளே. முப்பது வருஷங்களுக்கு முன் இந்தக் கல்யாணம் நடந்தது. ஆனால் புருஷன் வீட்டுக்கு வருமுன்பே அவள் கருவுற்ற செய்தி கௌடருக்குத் தெரிந்தது. கௌடருடைய தகப்பனார் கற்புநெறி தவறிய பெண்ணை மருமகளாக ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை. ஆனால் மகனைக் கொண்டு அவளுக்கு விவாகரத்துப் பத்திரம் கொடுக்கச் செய்தார். அதற்குப் பிறகு அவள் தான் விரும்பியவனுடன் கூடவே இருந்தாள். அவன் பேரும் சங்கரப்பா தான். அதனால் அவர்களுக்குப் பிறந்த முதல் மகனைப் பாதள்ளியில் மணியக்காரராகக் கொண்டு வருவதற்குப் படையா சூழ்ச்சி செய்தான். விவாகரத்துப் பத்திரம் கொடுத்த தேதியிலிருந்து இரண்டு மாதங்களுக்குள் பிறந்த குழந்தை தன்னுடையதாக இல்லாவிட்டாலும் கோர்ட்டில் கேஸ் தாக்கலானால் தீர்ப்பு எப்படியாகும் என்பது கடினம். படையா கோர்ட்டு விஷயங்களிலும் வக்கீல்களிடமும் பழக்கமுள்ளவன். வக்கீலின் யோசனைகூட அவனுக்குச் சாதகமாக இருந்ததாகத் தான் தானம்மா சொன்னாள். அதனால் திகிலடைந்த கௌடர் பாளாச்சாரின் யோசனையைக் கேட்க ஓடி வந்தார்.

இந்தப் படையனை மடத்தை விட்டு ஓட்டிவிட்டு மடத்துக்கு வேறொரு சந்நியாசியைப் பட்டத்துக்குக் கொண்டு வந்தால் படையா எங்கள் குடும்பத்தையே அழித்துவிடுவானாம். தானம்மா சொன்னாள். அதனால்தான் ஓடோடி வந்தேன் என்றார் கௌடர்

ஆச்சாருக்கு மணியக்காரரின் முதல் கல்யாணத்தைப்பற்றித் தெரிந்துதான் இருந்தது. ஆனால் முப்பது வருஷங்களுக்கு முன்பே தொடர்பை அறுத்துக்கொண்டு வேறொருவனைக் கல்யாணம் செய்துகொண்டு பத்துக் குழந்தைகளைப் பெற்றவள் தன் மூத்த மகனை இந்தக் குடும்பத்தில் அனந்தர வாரிசாகச் செய்வது நியாயமற்ற செய்கை என்பது அவருடைய அபிப்பிராயம்.

வாரிசுரிமையைக் கேட்பது அந்தப் பெண் பிள்ளை அல்ல. அவள் பத்துக் குழந்தைகளும் அல்ல. அவளுடைய மூத்த மகன் தான் கேட்கிறான் அவன் விவாகரத்துப் பத்திரம் கொடுப்பதற்கு முன் பிறந்தவன் என்று படையா அவனைத் தூண்டிவிடத் திட்டமிட்டிருக்கிறானாம் என்று கௌடர் விவரித்தார்.

'யார் வேணுமானாலும் திட்டம் போடலாம் கௌடரே! இந்த யோசனைக்கு அவர்கள் மட்டும் எப்படி ஒப்புக்கொள்வார்கள்? தன்னைப் பெற்ற தந்தையை விட்டுவிட்டுத் தான் வேறொருவனுடைய மகன் என்று சொல்ல, அவன் மானம்

மரியாதைக் கெட்டவனுய் இருக்க வேண்டும். படதையாவின் பேச்சுச் சட்டப்படி செல்லுமோ செல்லாதோ? இது மட்டும் தண்ணியில் நட்ட கம்பம்தான். இந்த முட்டாளுடைய பேச்சைக் கேட்டுக்கொண்டு வீடுவாசல்களை இழந்துவிட்டு யார் கோர்ட்டுக்குப் போவார்கள். இதெல்லாம் இவனுடைய தகிடு தத்தம். யசவந்தராவ் அவ்விடத்து மணியக்காரர். அவர் பேச்சை மீறி இந்தச் சந்நியாசியோடு யார் சேருவார்கள்? எனக்கொன்றும் இதில் நம்பிக்கையில்லை. நீங்களும் அவன் பேச்சுக்குப் பயந்து மூளையைக் குழப்பிக்கொள்ள வேண்டாம்' என்று பாளாச்சார் கௌடருக்குச் சமாதானம் சொன்னுலும் நேற்றிரவு அவர் மனத்தில் ஓடிய நினைவுகள் மனக் கண்முன் வந்து நின்றன.

'அப்படியில்லீங்க. மடத்துக்கென்று மணியக்காரர் குடும்பத் தினர் கொடுத்த நிலங்களை நான் விடத் தயாராய் இல்லை. மடத்தில் தொட்டில் ஆடவேண்டுமென்று எங்கள் முன்னேர்கள் நிலம் கொடுக்கவில்லை. தர்மம் நடக்க வேண்டும் என்று கொடுத்தார்கள் ஆச்சாரையா. ஆகையால் நான் நிலத்தைப் பிடுங்கிக்கொள்ளப் போகிறேன். நடப்பது நடக்கட்டும்' என்ருர் கௌடர்.

'கௌடரே! நீங்கள் மடத்துக்குத்தான் கொடுத்தீர்கள். மடம் என்ருல் மடத்துத் தலைவன் அல்ல. இதை நினைவில் வையுங்கள். இவனைப் போன்ற அயோக்கியன் அந்த ஸ்தானத்தில் இருக்கிருன் என்று மடத்தின் மானம் மரியாதை ஆஸ்தி பாஸ்தி எல்லாவற்றையும் பிடுங்கிக்கொண்டால் நஷ்டம் அவனுக்கன்று; மடத்துக்குத்தான். குருபாத சுவாமிகள் போன்ற புண்ணிய ஆத்மாக்கள் மறுபடியும் பீடத்துக்கு வந்தால் அப்பொழுது மடத்துக்கு யார் நிலம் கொடுப்பார்கள்? தானமாகக் கொடுத்ததைத் திருப்பி வாங்கக் கூடாது கௌடரே! அப்படி வாங்குவது பெரும் பாவம். நீங்கள் இந்தக் கவலையை விட்டு விடுங்கள். தைரியம் இருந்தால், ஜனங்களின் ஆதரவு இருந்தால் இந்தப் படதையாவை வெளியேற்றிவிட்டு யோக்கியதையுள்ள வேறு ஒரு சாமியாரைக் கொண்டுவாருங்கள். நான் ஒப்புக் கொள்கிறேன்' என்ருர் பாளாச்சார்.

தர்க்கரீதியான இந்தப் புத்திமதியைக் கௌடர் ஒப்புக் கொள்ள நேர்ந்தது. ஆனுல் படதையாவைப் பதவியிலிருந்து நீக்கினுல் அவன் ஆத்திரமடைந்து தம்முடைய மணியக்கார உத்தியோகத்திற்கு வேருெரு வாரிசையே கொண்டு வந்தால் என்ன செய்வது? அதனுல் படதையாவை விரட்டும் யோசனையைக் கௌடர் விட்டுவிட்டார்.

'ஆனால் மடத்திற்கென்று கொடுத்த பூமியை மடத்துக்கே உபயோகம் செய்ய வேண்டுமென்று பஞ்சாயத்தாரிடம் சொல்லலாமா?'

'அவர்களைக் கேட்க வேண்டிய பிரமேயமே இல்லை கௌடரே. என்ன தானிருந்தாலும் மடத்துச் சாமியார் உங்கள் குரு. அதனால் மடத்தின் கௌரவத்தைக் கெடுக்கும் இந்தப் புதிய முறையை நீங்கள் கையாளக் கூடாது. நீங்களே போய்ப் படதையாவை ஒரு வார்த்தை கேளுங்கள்' என்றார் பாளாச்சார்.

'அவனுடன் பேசுவதென்றால் கைலாசத்துக்குப் போவது போலத்தான். மொட்டை விண்ணப்பம் எழுதி என்னை ஜெயிலுக்கு அனுப்பவேண்டும் என்று உளறுகிறானாம். ஆகட்டும். நானும் எல்லாவற்றுக்கும் தயாராகத்தான் இருக்கிறேன்' என்று கௌடர் மீசையை முறுக்கினார்.

'கௌடரே! போட்டி மிகவும் கெட்டது. நீங்கள் கட்சி கட்டுவது சரிதான். நாலு ரௌடிகள் முதலில் உங்கள் பேச்சைக் கேட்பார்கள். பிறகு அவர்கள் சொற்படி நீங்கள் கேட்கா விட்டால் உங்களையே ஒழித்துக்கட்டிவிடுவார்கள். கட்சி கட்டுவது வேதாளத்தை வசப்படுத்துவது போலத்தான்' என்று பாளாச்சார் மறுபடியும் உபதேசித்தார்.

கௌடருக்கு உள்ளூரக் கோபம் கொதித்தது. ஆனால் ஆச்சாரின் பேச்சை மறுக்க முடியாமல் பேசாமல் எழுந்துபோய் விட்டார். பொழுது விடிந்தவுடனே உலகத் தொல்லைகள் மறுபடியும் சுற்றிக்கொண்டுவிட்டன அல்லவா! என்று நினைத்த வண்ணம் பாளாச்சார் வழக்கம்போல் தம் தினசரி காலைக் கடன்களை முடிக்க உள்ளே சென்றார்.

## 9

கௌடருடைய தானியத்தைக் கொள்ளை அடிக்கும் திட்டத்தை ஏற்பதற்காக மடத்தில் கூடிய சபை, தாதா வந்து தாக்கியபோது குழப்பத்தால் கலைந்துவிட்டது. மறுநாள் ஜனங்கள் மறுபடியும் சபை கூட்டியிருக்கலாம். ஏனென்றால் பஞ்சம் காரணமாக ஜனங்கள் சோறில்லாமல் ஆலாய்ப் பறந்தார்கள். ஆனால் மறுநாளே சங்கரப்ப கௌடர் ஏழை மக்களுக்குத் தானியம் கொடுப்பதாக வெறும் வாய்ப் பேச்சில்

சொல்லாமல் செயலில் இறங்கினர். திங்கட்கிழமை வரையிலும் கொடுப்பது ஓயவேயில்லை. அவருடைய சுபாவத்தை அறிந்தவர்கள் அதைக் கண்டு ஆச்சரியமடைந்தார்கள். கௌடருடைய புகழ் இப்படி ஊரில் பரவுவதைக் கண்டு படையாவின் தூண்டுதலால் பாபு சாஹேபும் மாளிகையின் கௌரவத்தைக் காக்க அவருக்குப் போட்டியாக நின்றான். மாளிகையின் தானியக் குழிகளில் சூரிய வெளிச்சத்தையே காணுமல் கிடந்த சோளம் திங்கட்கிழமையன்று வெளிவந்தது. தானியத்தை விநியோகிப்பதில் ஆலோசகராக இருந்த படையாவை எல்லோரும் வானளாவப் புகழ்ந்தார்கள். அதற்கும் காரணம் இருந்தது. கௌடர் கொடுத்த தானியம் கடனுகக் கொடுக்கப் பட்டது. அறுவடைக்கப்புறம் வட்டியுடன் (ஒன்றுக்கு ஒன்றேகால் வீதம்) தானியத்தைத் திருப்பிக் கொடுப்பதாக ஜாமீன் கொடுத்து வாங்கிப் போகவேண்டியிருந்தது. அப்படிக் கொடுக்க முடியாதவர்கள் கௌடர் வீட்டில் கூலிக்கு வேலை செய்தும் வயலில் அறுப்பு நடவு வேலைகள் செய்தும் கடனைத் தீர்க்க வேண்டும்.

கௌடர் தானியம் கொடுக்கத் தொடங்கியதுதான் தாமதம். மறுநாளே படையா எந்த நிபந்தனையும் இல்லாமல் பாபு சாஹேப் தானியம் கொடுப்பார் என்று தண்டோரா போட்டார். திருப்பிக் கொடுக்க வேண்டிய அவசியமில்லாமல் வரும் தானியத்தை ஜனங்கள் இனும் என்றே கருதினர்கள். அதனுல் ஹரிஜனங்கள், தலையாரிகள், குறும்பர்கள், காட்டகர்கள் முதலியோர் மடத்தின் முன்பு கூட்டங் கூட்டமாக வந்து குவிந்தார்கள். வீடும் நிலமும் வைத்துக்கொண்டு, வாங்கிய கடனைக் கொடுக்கும் எண்ணம் உள்ள குடியானவர்கள் மட்டும் கௌடரிடம் சோளத்திற்காகச் சென்றார்கள்.

பாபு சாஹேபிடம் சோளம் வாங்கிச் சென்றவர்கள் அதை வீட்டுக்குக் கொண்டுபோய்ச் சேர்த்ததும், 'ஐயோ! இதை ஏன் வாங்கினேம்' என்று வருந்தினர்கள். பல வருஷங்கள் மட்கிக் கிடந்த சோளத்தில் நாற்றம் அடித்தது. அது மனிதர்கள் தின்னக் கூடியதாக இல்லை. 'மாடுகூடத் தின்ன முடியாத சோளத்தைக் கொடுத்துக் கௌடரின் வீட்டுக்குப் போகமுடியாமல் செய்த இவர்களுடைய தந்திரத்தில் ஏமாந்தது அசட்டுத்தனம்' என்று பலர் தம்மைத்தாமே நொந்துகொண்டார்கள்.

சக்கிலியச் சன்னன் தான் வாங்கிக்கொண்டு சென்ற சோளத்தைத் திரும்பக் கொண்டு வந்து முற்றத்தில் கொட்டி, 'சாமீ! சாமீ! வூட்டுலே எல்லாம் வேறே ஊருக்குப் போருங்

களாம். உங்க சோளத்தை உங்களுக்கே கொணுந்துட்டேன்' என்று சொல்லி மேல் வேட்டியை உதறிவிட்டு வெளியே போகத் தயாராஞன்.

படதையாவுக்கு மூக்குக்குமேல் கோபம் வந்துவிட்டது. 'ஏண்டா சன்ஞ! ஊரைவிட்டுப் போகக் கூடாதுன்னுதானே தானியம் கொடுத்தது. அப்படி என்னப்பா ஐசுவரியம் வந்து விட்டது? நிசமாப் போஞங்களா? சொல்லு. மாளிகைச் சோளத்தைத் திருப்பிக் கொடுத்துட்டா கௌடர் சோளம் கொடுப்பதாகச் சொன்ஞரோ?' என்று படதையா சன்னனை அதட்டிஞர்.

கௌடர் அப்படிச் சொன்னது நிஜந்தான். சன்னன், ஊரில் பரம்பரையாக வாழும் சக்கிலியன். ஊரிலுள்ள குடியானவர்கள் பாதிப்பேருக்குமேல் அவனை வாடிக்கையாக வேலைக்கு வைத்துக் கொண்டிருந்தார்கள். அவன் ஊரைவிட்டு வலசை போஞல் திரும்பி வரும்போது அவனுக்கு நிற்க இடமிருக்காது. அந்த வருஷம் வரவேண்டிய பாக்கிக்கெல்லாம் எள்ளும் தண்ணியும் விடவேண்டும். கௌடர் சொன்னபடி மாளிகைச் சோளத்தைத் திருப்பிக் கொடுத்துவிட்டு வெள்ளி மணிகளைப் போன்ற கௌடர் வீட்டுச் சோளத்தை அவன் வாங்கிக்கொள்ளத் தீர்மானித்தான்.

படதையா தன் எண்ணத்தைத் தெரிந்துகொண்டு விட்டானல்லவா! என்று சன்னன் ஒருகணம் தடுமாறிஞன். ஆஞல் அவன் கை தேர்ந்த நடிகன். அவனுடைய சாதுர்யப் பேச்சால் மயங்காதவர்களே இல்லை.

'ஐயா! நிசத்தைச் சொன்ஞலும் கேட்கப்போறீங்க; பொய் சொன்ஞலும் கேட்கப்போறீங்க. சாமிக்கு முன்ஞலே பொய் சொல்லுவேஞ ஐயா! ஊருக்குப் போவது நிசமுங்க. அதஞலே பாக்கி வைச்சுக்காமே சோளத்தைக் கொடுத்திடறது நல்லதில்லீங்களா! கௌடர் எங்களைத் திண்ணையின் கீழேகூட நிக்கவிடறது இல்லீங்க. சோளம் கொடுத்துடுவாரா? அப்படி ஊரிலேயிருந்தா உங்க மகனைப்போல நான்; உங்க காலுங் கீழே தானே வந்து விழுவேன்' என்று பொய் மூட்டையை அவிழ்த்தான் சன்னன்.

'கௌடர், கொடுக்கலேன்னுதானே இங்கே வந்தே மகனே!' என்று படதையா கர்ஜித்தார்.

'சாமீ! சாமீ! நீ அப்பன், நான் மகன். நீ தண்ணி, நான் சேறு. சம்பந்தம் எப்படி இல்லாமப் போகும்? இந்தப் பஞ்சக் காலத்திலே மகன் அப்பனை விட்டு எங்கே போவானுங்க? நீ

கொடுக்கணும், நான் தின்னணும். இன்னும் நீ கூப்பிடணும், நான் வரணும். நீ திட்டணும், நான் சிரிக்கணும்'. சன்னனது பேச்சில் பக்திக் கவிதை இழைந்தோடியது.

'குடுத்ததைத் திருப்பிக் கொண்டாற வெட்கமாயில்லே, சன்ன? எடுத்துட்டுப் போ' என்ருர் படதையா.

'அப்பனோட காலில் விழறதுக்கு வெட்கம் என்ன சாமீ? பசித்தபோது உங்கிட்டேயிருந்து எனக்கு கொடுன்னு வாங்கிட்டுப் போவேன். கையிலிருக்கும்போது இந்தா! உன்னுதுன்னு கொணுந்து கொடுப்பேன். வாங்கிட்டுப் போனதைத் திருப்பிக் கொடுத்தா என்ன தப்பு சாமீ?' என்று சன்னன் மூக்காலழுதான்.

'டேய்! உன்னோட ஜாலப் பேச்செல்லாம் இங்கே வேணும். இதோ பார்! நீ சோளத்தைத் திருப்பி எடுத்துட்டுப் போ. உனக்கு வேணட்டா உன் சேரியிலே ஏழைகளுக்குக் கொடுத்துடு. சாமியார் கொடுத்ததைத் திருப்பி வாங்கிக்கிட்டாரு என்கிற கெட்ட பெயர் எனக்கு வேண்டாம். அது சரி சன்ன! உங்க லக்ஷ்மியா அந்தக் கௌடர்கிட்டேயிருந்து சோளம் கடன் வாங்கிக்கிட்டாளுமே! நிசமாடா?' என்று படதையா உண்மையை வரவழைக்கப் பார்த்தார். 'சே சே! விடுங்க சாமீ. அவன் என்ன வாங்கியாந்தான். ஆளுனப்பட்டவங்களுக் கெல்லாம் நாமம் போடற கௌடர், லக்ஷ்மியா மாதிரி வாயில்லாப் பூச்சிக்குச் சோளம் கொடுப்பாரா? நம்ம சேரியிலே எல்லாம் ஒவ்வொரு வூட்டுலேயும் சாமியோடப் பேரைத்தான் வாயாரப் புகழுருங்க. சாமீ! நம்பினு நம்புங்க, விட்டா விடுங்க. சேரி முழுக்க உங்க சோளத்தோட மக்க நாத்தம்தான் அடிக்குது' என்று சன்னன் அபிநயத்துடன் சொன்னுன்.

படதையாவுக்கு இது அவமானமாக இருந்தது. கோபமும் வந்தது. 'அட என் பைத்தார மவனே! தானங் கொடுத்த மாட்டைப் பல்லைப் புடிச்சுப் பாத்தாங்களாம். பட்டினியாலே சாகறவங்களுக்குச் சோளம் கொடுத்துப் பொழைக்க வைச்சா மக்க நாத்தமா அடிக்குது!' என்று கோபத்துடன் கேட்டார்.

'இல்லே சாமீ! வேணுமானு நீயே வந்து பாரு' என்று சன்னன் அவருடைய பேச்சுத் தனக்குப் புரியாததுபோல் சொன்னுன். ஒரு அசட்டுச் சிரிப்புடன் சோளத்தைத் துண்டில் கட்டிக்கொண்டு நடந்தான்.

அவன் அங்கிருந்து நேராகக் கௌடர் வீட்டுக்கு வந்து அவருடைய எருமை மாடுகளுக்கு உபயோகப்பட்டால் படட்டும் என்று நினைத்துச் சோளத்தைத் திருப்பிக் கொடுக்காமல்

கொண்டு வந்துவிட்டதாகச் சொன்னான். கௌடரிடம் சோளத்தை வாங்கிக்கொண்டு புறப்படத் தயாரானான். அப்பொழுது மடத்தில் நடந்தவற்றையெல்லாம் ஓர் எழுத்துக் கூட விடாமல் சொல்ல மறக்கவில்லை.

கௌடர் தாம் மக்களிடம் வைத்திருக்கும் அன்பைப்பற்றித் தாமே பெருமைப்பட்டுக்கொண்டார். அவர் கொடுத்த சோளம் காரணமாகச் சக்கிலியர் சேரியையே தம் கட்சிக்கு இழுத்துக்கொள்ளும் ஆசை அவருக்கு இருந்தது. அதோடு படையாவுக்கு விரோதமாகப் பிரசாரம் செய்ய இது நல்ல சமயம் என்று தோன்றியது. அதனால் சன்னனிடம், 'இங்கே பாரடா! அந்தச் சாமியாரை எதிர்த்து நிற்கத் துணிச்சலுள்ள வர்கள் இங்கே வரட்டும்' என்று சொல்லி அனுப்பினார்.

அன்று பொழுது சாயும்பொழுது ஹரிஜனங்களுள் சிலர் சாவடிக்கு வந்து தாங்கள் மாளிகையிலிருந்து சோளம் வாங்கிப் போனதே தப்பு என்று கௌடரிடம் சொன்னார்கள். அவர்களெல்லோரும் படையாவுக்கு வேண்டியவர்கள். அதனால் கௌடர் அவர்களிடம் ஒன்றும் சொல்லாமல், 'நான் கொடுத்தாலும் ஒண்ணுதான்; பாபு சாஹேப் கொடுத்தாலும் ஒண்ணுதான்; எப்படியோ உங்களுக்குக் சோளம் கிடைச்சா சரிதான்' என்று சமாதானமாகச் சொல்லி அனுப்பினார்.

சாவடியிலிருந்து கௌடர் வீட்டுக்கு வந்தபோது, அங்கே அவருக்கு வேண்டியவருள் நம்பிக்கையுள்ள ஒருவனான அஞ்சல் மல்லப்பா அவருக்காகக் காத்துக்கொண்டிருந்தான். அவரைக் கண்டவுடன் அடக்கத்துடன் எழுந்திருந்து வணக்கம் செய்தான். கௌடர் புன்சிரிப்போடு அதை ஏற்றுக்கொண்டார். 'என்ன மல்லப்பா! என்ன புதுச்சேதி கொண்டு வந்திருக்கிறாய்?' என்று கேட்டார்.

மல்லப்பன் கௌடருடைய ஒற்றன். விசேஷச் செய்தி இல்லாமல் அவன் வீட்டுக்கு வரமாட்டான் என்பதை அறிந்தே கௌடர் அப்படிக் கேட்டார். மல்லப்பன் முன்வந்து அவன் தயாரித்த எருக்கிலைச் சுருட்டைக் கௌடரிடம் கொடுத்தான். பிறகு திண்ணையின் கீழே மாடத்திலிருந்த வறட்டித் தணலைக் கொண்டு வந்து கொடுத்தான். 'அமல்தார் சாஹேப் ஊருக்கு வரப் போகிறாராமே. உங்களுக்கு ஏதாவது காகிதம் வந்ததா?' என்று மெல்லிய குரலில் கேட்டான். மல்லப்பா ஊரெங்கும் இருக்கும் தன்னுடைய ஒற்றர் படையிடமிருந்து செய்தி சேகரித்திருந்தான். அவனுடைய பேச்சில் உண்மை இருக்கத்தான் வேண்டும் என்று கௌடருக்கு நம்பிக்கை பிறந்தது.

'யார் சொன்னது? யார் வருங்களாம்?' என்ற வண்ணம் கௌடர், சுருட்டுப் புகையை இழுத்து விட்டுக்கொண்டே கேட்டார்.

மல்லப்பன், தனக்கு எட்டிய சங்கதிகளைச் சந்தர்ப்பத்தோடு விவரித்தான் :

''ஐயா, சூரியன் மலைவாயில் விழ இன்னும் ஒரு மார் தூரம் இருந்தது. நான் மடத்தைத் தாண்டிச் 'சாவடிக்கு வரவேண்டும்' என்று புறப்பட்டேன். சக்கிலியச் சன்னன் வேட்டியில் சோளத்தைக் கட்டிக்கொண்டு இந்தப் பக்கமா வந்தானுங்க. 'இவனுக்கெப்படி இவ்வளவு சோளம் கெடச்சுது?'ன்னு நெனச்சு நான் அங்கேயே நின்னேன். மடத்திலேருந்து அந்தக் குள்ளச் சங்கரன் வெளியே ஓடிவந்து, 'அடே, சன்னு! கடைசீலே உஞ் சாதிப் புத்தியை நீ விடலியே!'ன்னு திட்டத் தொடங்கினன். இதென்ன, குள்ளச் சங்கரனுக்கு என்ன திமிர்! என்று நெனச்சுக் கிட்டு இரண்டடி முன்னலே போனேனுங்க. சங்கரன் சன்னனேடெ தோளிலே இருந்த சோள மூட்டையைப் பிடுங்கிக் கிட்டு மடத்துக்குள்ளெ போனனுங்க. சன்னனும் அவன் பின்ன லேயே மடத்திலே பூந்தான். படதையா பேசறதுக்கு ஒன்னும் மிச்சம் வைக்கல்லெ. எனக்குக்கூடக் கேட்கும்படி உரக்கப் பேசினரு. 'அடே, சன்னு! செத்துப்போன நாணுவின் பிசாசு, கௌடரை ஜெயில் ரொட்டியைத் திங்கவைக்கறத்துக்கு முன்னலே அவரோடெ உக்காந்து நீயும் தின்னுவயாம்'ன்னு, அந்த ஏழையோடே சோளத்தைப் பிடுங்கிக்கிட்டு வெளியே தள்ளிட்டானுங்க. படதையா, தாதாமேலே புகார் எழுதி அமல்தாருக்கு ஆள்கிட்ட குடுத்தனுப்பிச்சாராம். 'அமல்தார் வரப்போருர்'ங்கற பேச்சுக் காதிலே விழுந்துதுங்க'' என்று மல்லப்பன் சொல்லி முடித்தான்.

மெதுவாகப் புகையை விட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்த கௌடருடைய முகத்தில் மாறுதல் ஒன்றும் தெரியவில்லை. சும்மா செய்தியைக் கேட்டுக்கொண்டே ஏதோ நினைவை அசை போட்டுக்கொண்டிருந்தார். அதனல் 'தான் கொண்டுவந்த செய்தி அவ்வளவு முக்கியமானதாக இருக்காதோ?' என்று மல்லப்பனுக்குத் தோன்றியது. அதனல் அவனுக்குச் சற்று ஏமாற்றமும் ஏற்பட்டது. அதை மறைப்பதற்காக, 'கௌடரே, அமல்தார் சாஹேப் வந்தா அவருக்குச் சாமான் சப்ளை செய்ய ஏற்பாடு பண்ண வேண்டாமா?' என்று கௌடருடைய உத்தரவுக் காகக் காத்திருப்பதைச் சாடையாகத் தெரிவித்தான்.

'படதையா சொன்னபடி நடப்பதற்கு அவன் என்ன ஜோஸ்யமா சொல்றுன், மல்லப்பா! இது வெறும் பயமுறுத்தல்! அந்தப் பேச்சுக் கெடக்கட்டும், விடு. இருந்தாலும் நாலு கோழியும் ஓர் ஆடும் பார்த்து வை. அமல்தார் வந்ததும் டக்கென்று கொண்டுவந்துவிடலாம்' என்று சொல்லி, 'அந்தச் சன்னனைப் பிடித்துக்கொண்டு வா' என்று உத்தரவிட்டார்.

இரவுச் சாப்பாட்டை முடித்துக்கொண்ட கௌடர், சன்னனுக்காகக் காத்துக்காத்து அலுத்துவிட்டார். அவன் வாய் மூலமாகவே மடத்தில் நடந்த விஷயங்களை விவரமாகக் கேட்க கௌடர் விரும்பினுர். ஒவ்வொரு சுருட்டாகப் பிடித்துக் கொண்டே யோசிக்கத் தொடங்கினுர். அதற்குள் சன்னனும் வந்துவிட்டான். கௌடர் அவனுடன் கொட்டகைக்குப் போய்த் தனியே எல்லாவற்றையும் கேட்டுத் தெரிந்துகொள்ள விரும்பினுர். அந்தச் சமயத்தில் கொட்டகையில் கௌடருடைய எருமை கன்று போடும் நிலையில் இருந்தது. ஆட்கள், தடபுடல் செய்துகொண்டிருந்தனர். 'எருமை சுகமாகக் கன்று போடுகிறதா?' என்பதைப் பார்க்க வந்தவர்போல் எருமையைக் கவனித்துவிட்டு, 'மூக்கணுங்கயிற்றுக்கு வளையம் போடும்படி' ஆட்களிடம் சொன்னுர். திரும்பவும் கூடத்துக்குவந்து தலையணையில் சாய்ந்து உட்கார்ந்தார்.

சன்னன், அவர் பின்னுலேயே கொட்டகை வரைக்கும் போய்விட்டு வந்து அவருக்கு எதிரில் நின்றுகொண்டிருந்தான். கௌடர் அவனைப் பார்த்து, 'என்னப்பா சன்னு, பாத்தியோ இல்லையோ, நீ கொடுத்த சோளத்தை எருமைகூட மோந்துபாக்க மாட்டேங்குது!' என்று சொல்லித் தம்முடைய ஹாஸ்யத்துக்குத் தாமே சிரித்துக்கொண்டார்.

''ஐயா, ஏழைங்களோட அதிருஷ்டம் கெட்டது சாமி! நம்பினு நம்புங்க, விட்டா விடுங்கோ. நீங்க குடுத்த சோளம் 'தெருப் பக்கமா வந்து கொல்லைப் பக்கமாப் போச்சு!'ங்கற மாதிரி ஆச்சுங்க'' என்று சன்னன் கண்ணைத் துடைத்துக்கொண்டான்.

''நடந்ததைச் சொல்லித் தொலையேன்! பொட்டச்சி மாதிரி 'முளுமுளு'ன்னு அழுதுக்கிட்டு நின்னுக்க என்ன செய்ய முடியும்டா முட்டாள்! நான் இருக்கிற மட்டும் உனக்கென்ன பயம்? மளமளன்னு சொல்லக்கூடாது? கௌடர் தம் பேச்சில் இகழ்ச்சி, பகை, அன்பு, அபயம், கவலை எல்லாவற்றையும் தெளிவாகக் காட்டிவிட்டார். அந்த வேகத்தில் 'விஷயத்தைத் தெரிந்து கொள்ளவேண்டும்' என்ற விழிப்பும் ஏற்பட்டது.

''என்னத்தைச் சொல்லட்டும், ஐயா! 'ஏழையின் வயிறு ரொம்பட்டும்'னு கொடுத்த சோளத்தையெல்லாம், என் சாமி! மடத்து வழியாப் போறபோது வழீலே அடிச்சுப் பிடுங்கிக் கிட்டாங்களே! ஊருக்குள்ளேயே வழிப்பறி நடக்கருப்பிலே ஆயிடுச்சே!'' சன்னனில் குரலில் துக்கம் தொனித்தது.

'இப்பக் கூப்பிட்டனுப்பிச்சப்பறம்தான் அழுதுகிட்டு இதைச் சொல்லப் பொழுது கெடச்சுதாக்கும்! அப்பவே இப்படி யெல்லாம் செஞ்சாங்கன்னு சொல்ல வாயிலெ கொழக் கட்டையா அடச்சிருந்தது?' என்று கௌடர் கோபத்துடன் அதட்டினர்.

சன்னன் அவர் காலில் விழுந்தான். ''சாமி, மகனேடெ (என்னேட) புத்தி மழுங்கிப் போச்சுங்க. நீங்கதான் மன்னிக் கணும். படதையா அவங்க, 'அமல்தார் வராரு; உங்களுக்கெல் லாம் வெலங்கை மாட்டச் சொல்றேன்'னு பயமுறுத்திருங்க. அதனலேதான் பயந்திட்டு வாயை இறுக்கி மூடிக்கிட்டு வழியோட போயிட்டேனுங்க. 'எப்படிப்பட்ட மனுஷங்களைக் கொணந்து வச்சே சிவனே'ன்னு தியானம் செய்தூட்டுக் கோணி யாலே தலையை மறைச்சுக்கிட்டுத் திக்குத்திசை தெரியாமெ குந்திக்கிட்டேன்'' என்று பரிதாபகரமாக முறையிட்டான்.

'சரிதாண்டா, சன்ன! இவ்வளவு பயப்படறத்துக்கு அந்தப் படதையன் என்னதான் சொன்னுங்கறதைச் சொல்லக்கூடாதா?' என்று கௌடர் தடுக்க முடியாத ஆவலுடன் கேட்டார்.

''சாமி, நம்பின நம்புங்க, விட்டா விடுங்க. நாளைப் பொளுது விடியறபோது அமல்தார் வருவாராம். ஊரிலே 'கண்லே படற மனுஷங்க கையிலே எல்லாம் வெலங்கு போடுவாங்களாம்'ன்னு சொன்னருங்க. 'இந்தச் செய்தியைக் கௌடரிடம் சொன்ன உங் கைலேயும் விலங்கு விழும் மகனே!'ன்னு சொன்னருங்க'' என்று சொல்லிய சன்னன் தரையில் உட்கார்ந்துகொண்டான்.

''இவன் சொன்ன பேச்சை நடத்திவைக்கறத்துக்கு அவன் என்ன, 'தெய்வம்'னு நெனச்சியாடா! பொழுது போகாமெ கத்திண்டிருக்கான். இவன், 'கையிலே வெலங்க போட்டுட றேன்'னு சொல்றத்துக்கு நாங்கள்ளாம் கையிலே வளையா போட்டிருக்கோம்! உனக்கென்ன பயம்? அவன்தான் அமல் தார்னு நெனச்சுக்கிட்டுச் சோளத்தைக் குடுத்திட்டு வீட்டுக்குப் போனயா முட்டாள்!'' என்று சமாதானம் சொன்னர்.

'அமல்தார் ஒரு வேளை வந்தாலும் பயப்படவேண்டாம். 'கடன் வாங்கிட்டுவந்த சோளத்தே மடத்துக்காரரு பிடுங்கிக் கிட்டாங்க'ன்னு அமல்தார் காலிலே விழுந்து சொல்லிக்கோ.

பாக்கியையெல்லாம் நான் பார்த்துக்கறேன். 'இப்போ வீட்டிலெ சோளம் இருக்கா இல்லையா?' இல்லாட்டி எங்க வீட்டிலே கேட்டு நாலு படி வாங்கிட்டுப் போ'' என்று சன்னனுக்கு ஆறுதலாகச் சொன்னார்.

அமல்தாரை வரவழைக்கப் படைதையா கொடுத்த புகாரைப் பற்றிய விஷயத்தை முக்கியமாகத் தெரிந்துகொள்ளக் கௌடர் விரும்பினார். உணர்ச்சிவசப்பட்டுப் பேசிய சன்னன் அதை மறந்தேவிட்டான். அதை வெளிக்கொணர்வதற்கு அவனைத் தாஜா பண்ணித்தான் ஆகவேண்டும். அதனால் 'நீ சாப்பிடலைப் போலத் தோணுதே, சன்னு! ரெண்டு ரொட்டி குடுக்கச் சொல்றேன். அந்தப் பக்கமா உக்காந்து தின்னு' என்று சொல்லி வேலைக்காரனிடம் சன்னனுக்கு ரொட்டி கொண்டுவந்து கொடுக்கும்படி சொன்னார்.

சன்னன் ரொட்டியைத் தின்று தண்ணீர் வாங்கிக் குடித்த பின் கௌடர் அவனிடமிருந்து செய்தியை வரவழைக்க முயன்றார். 'அமல்தார் நாளைக்கு வருவார்னு படைதையாவே சொன்னாராடா, சன்னு?' என்று கேட்டார்.

'நாளைக்கு வரைக்கும் என்ன, சாமி இன்னிக்கு ராவிலேயே வந்தூடுவாராம்' என்று சன்னன் சொன்னான்.

'அதென்னடா, அவருக்குத் தபால் வந்த மாதிரியல்லவா சொல்றே' என்றார் கௌடர்.

'தபால் வந்து என்ன பிரயோசனமுங்க? அந்தக் குள்ளச் சங்கரன் இருக்கானில்லே. நேத்திக்கு அவனைக் குதிரைமேலே அமல்தார்கிட்டே அனுப்பிச்சாங்களாம். சங்கரப்பன்தான் இந்தச் சேதி கொண்டுவந்தான்னு மடத்திலே பேசிக்கிட்டாங்க.'

'ஊரிலே கண்டகண்டவங்களுக்கு எல்லாம் கைவிலங்கு போடறது இந்த ஊரிலேயே நடக்குமா? என்னடா?' என்று கௌடர் பேச்சை எடுத்துக் கொடுத்தார்.

'அதெல்லாம் எம்மாதிரி ஜனங்களுக்கு எப்படித் தெரியும் சாமீ? ஊரை ஆள்ற ராசா நீங்க. நீங்களே குழம்பறீங்க. அப்ப நம்ம கதியெல்லாம் என்ன? செத்துப்போன நாஞசாபின் பிசாசே எழுந்திரிச்சுக் குந்திக்கிச்சாம். படைதையா சொன்னுங்க. எது பொய்யோ? எது நெசமோ? சிவனுக்குத்தான் தெரியும்' என்று சன்னன் செய்தியின் பொறுப்பையெல்லாம் சிவன் மேலே சுமத்தி விட்டுப் பேசாமல் இருந்துவிட்டான்.

'அவனுடைய பிசாசு மடத்தைத்தான் பிடிச்சுண்டிருக்கு. முந்தாநாள் அவனை உசிரோட விட்டதுக்கு இப்படி நன்னி இல்லாத வேலை செய்ய இறங்கிவிட்டானே படையா!' என்று கௌடர் தமக்குள்ளேயே சொல்லிக்கொண்டார்.

அதன் பொருள் சன்னனுக்குப் புரிந்ததோ இல்லையோ? கடவுளுக்குத்தான் வெளிச்சம். உட்கார்ந்த இடத்திலேயே கொட்டாவிவிட்டுக் கையைச் சிட்டிகை போட்டு, 'வந்த வேலை ஆயிடிச்சு. இனிமே நான் போறேன். வணக்கம் சாமீ' என்று கும்பிட்டுவிட்டு அவன் புறப்பட்டான். கௌடருடைய வேலைக் காரன் அவனுடைய உத்தரியத்தில் நாலு படி சோளத்தைக் கொண்டுவந்து போட்டான்.

'சன்ன! நாளைக்கு அமல்தாரைப் பார்க்கும்போது உன்னை மிரட்டிச் சோளத்தைப் பிடுங்கிக்கொண்டதைக் கட்டாயம் சொல்லணும்' என்று கௌடர் உத்தரவிட்டார்.

'அப்பா! தானமாக் கெடச்ச சோளத்தின் கடன் இன்னும் என்ன தொல்லை எல்லாம் கொடுக்கப் போகுதோ' என்று முனகிக் கொண்டு தலையைச் சொறிந்தவண்ணம் வீட்டை நோக்கி நடந்தான் சன்னன்.

அன்றிரவு கௌடர் வீட்டு எருமை சேங்கன்று போட்ட தென்று வேலைக்காரன் வந்து அவரிடம் சொன்னான். கௌடருக்கு ஏனோ இந்தச் செய்தி பிடிக்கவில்லை. 'அந்தச் சனியனுக்குச் சேங்கன்று போடறதே ஒரு வியாதியாப் போச்சு' என்று தனக் குள்ளே சொல்லிக்கொண்டார். ஆனால் இந்தக் கவலையை மறக்கச் செய்யும் பல்வேறு கவலைகள் அவர் மனத்தைக் குழப்பின. அப்பொழுதே மணி இரவு பத்தாகிவிட்டது. ஓர் ஆளைத் துணைக்குக் கூட்டிக்கொண்டு ஆலோசனை நடத்தப் பாளாச்சார் வீட்டுக்குப் போனார்.

கௌடர் இரவு வெகுநேரத்திற்குப் பிறகு, தலைப்பாகையைக் கூட வைத்துக்கொள்ளாமல் வந்ததற்கு ஏதோ முக்கியமான காரணம் இருக்கவேண்டுமென்று பாளாச்சாரின் கூரிய புத்திக்குத் தெரிந்துவிட்டது. கௌடர் வந்த உடனே படையா வீசியிருக்கிற வலையைப்பற்றித் தமக்குத் தெரிந்ததைச் சொன்னார். பிறகு, 'அமல்தார் வரப்போறாரென்று நான் ஒன்றும் பயப்படவில்லை. ஆனால் இப்படியெல்லாம் அக்கிரமம் செய்யும் படையாவைத் தண்டிக்க வேண்டாமா?' என்று தம் உள்ளத் திற்கு வேதனை கொடுக்கும் செய்தியைப்பற்றிப் பிரஸ் தாபித்தார்.

'அது சரி கௌடரே! அவர்களிருவரும் சேர்ந்துகொண்டு வேண்டுமென்றே புகார் கொடுத்துப் பொய்ச்சாட்சி சேகரிக்கத் தயாராக இருக்கும்போது நாறு மார்பு நோயால்தான் இறந்தானென்று எப்படி நிரூபிப்பது?' என்று பாளாச்சார் தம் சந்தேகத்தை வெளியிட்டார்.

'செத்தவன் செத்துப்போய்விட்டான், ஆச்சாரையா. தன் பங்குப் பணம் கிடைக்கவேண்டுமென்று அமல்தார் தீர்மானித்திருக்கிறான். அதைப்பற்றி முன்னாலேயே ஏற்பாடு செய்துவிட்டது நமது சாமார்த்தியமல்லவா ஆச்சாரையா! இந்த அமல்தாரின் சங்கதி எனக்குத் தெரியாதா?' என்று கௌடர் தைரியத்தோடு தம் முதுகையே தட்டிக்கொடுத்துக்கொண்டார்.

கௌடரும் அந்த விவகாரம் வெளியே வரவேண்டும் என்று தான் நினைத்தார். தான் செய்த பஞ்சாயத்துத் தீர்ப்புப் பொய்யானால், அடுத்தபடி பாபு சாஹேப் கொலைக்குற்றம் சாட்டப்பட்டு ஜெயிலுக்குப் போகவேண்டியிருக்கும். தவிர, படதையா கொடுத்த புகார் நாறுவின் விவகாரத்தைப்பற்றி இருக்காது. தாதா, படதையாவை மிரட்டிய விஷயமாகத்தானிருக்கும் என்று அவருக்குத் தோன்றியது.

'இப்போது வந்திருப்பதெல்லாம் தாதாவின் விஷயமாகத்தானிருக்கும். தாதா படதையாவைக் கண்டித்தான்; மிரட்டினான். அதற்கு நானும் நீங்களும் உடந்தையாய் இருந்தோம் என்று பிராது கொடுத்திருப்பான்' என்று கௌடர் நிலைமையை விவரித்தார்.

'படதையா, தாதாவின்மேல் பிராது கொடுத்திருந்தால் அவனைத் தப்புவிக்க வழி ஒன்றும் இல்லையா, கௌடரே?' என்று பாளாச்சார் கேட்டார்.

'தாதா அமல்தாரின் கண்ணில் படக்கூடாது. அவன் ஊரை விட்டுப் போய்விடவேண்டும். லக்ஷ்மணனைக் கூப்பிட்டு மாடு கன்றுகளைக் கவனித்துக் கொள்வதற்காகத் தாதாவை ஊருக்கு அனுப்பச் சொல்லுங்கள்' என்று கௌடர் யோசனை சொன்னார்.

'கடைசியில் தாதாவை ஊரைவிட்டு அனுப்புவதே நல்லது' என்று இருவருமாகச் சேர்ந்து முடிவு செய்தபின் கௌடர் வீட்டுக்குப் போனார். அவர் வீட்டுக்குப் போனபோதே மல்லப்பன் அவருக்காகக் காத்திருந்தான். அமல்தார் ஊருக்கு வந்துவிட்டார் என்று கௌடருக்குச் செய்தி சொன்னான். கௌடருக்கு உடனே கடமையில் விழிப்பு ஏற்பட்டது. அவர் தலைப்பாகையை வைத்துக் கொண்டு உலக்கையைவிடச் சற்று மெல்லியதான வெள்ளிப்

பூண்போட்ட தடியைக் கையில் பிடித்துக்கொண்டு அவசரமாகச் சாவடிக்குப் போனார். பாதள்ளியின் அரசனைப்போல் மீசையை முறுக்கிக்கொண்டு பெருமையுடன் நடமாடும் கௌடர், இப்பொழுது சாவடித் திண்ணையில் செருப்பை விட்டுவிட்டு வெகு வணக்கத்துடன் அமல்தாரைக் காண வந்ததைக் கண்ட மல்லப்பனுக்கு உள்ளூர வருத்தம் ஏற்பட்டது.

'மணியக்காரரே, என்ன சங்கதி?' என்று சாவடியின் உட்புறத்தில் இருந்து இடிமுழக்கம் கேட்டது. கள் குடித்திருந்த தால் உக்கிரமாகக் கண்ணை மேலும் கீழும் உருட்டி விழித்துக் கொண்டு, மார்பு வரையில் தொங்கிய தாடியைத் தடவிக் கொண்டு, அமல்தார் ஃபக்ருதீன் சாயபு அவர்கள் உரத்த குரலில் பேசினார். நெஞ்சுரம் படைத்த கௌடருடைய தைரியங்கூட மறைந்துவிட்டது. 'கிராமத்திலே ஏழை ஜனங்கள் வாழ முடியாமெ தவிக்கிறாங்க. நீ இன்னும் மணியக்கார அதிகாரம் செலுத்தறியா? ரிப்போர்ட் எங்கே?' என்ற உருதுவில் கேட்ட அமல்தாருக்குக் குடிவெறியில் தாய்மொழியின்மேல் பிரமாத மான மோகம் வந்துவிட்டது. தவிர அதிகாரம் நடத்தவேண்டு மானால் 'உருதுவைப் போன்ற மொழி இல்லை' என்பது அவர்கள் திட சித்தாந்தங்களுள் ஒன்று.

'இல்லை, ராவ்சாஹப்! அப்படி ஒண்ணும் கெடுபிடி நடக்க வில்லைங்க' என்று கௌடர் பல்லை இளித்து வணக்கத்துடன் சொல்லும்போதே, 'பேசாம இரையா! எனக்கு எல்லாம் தெரியும்' என்று மற்றொரு முறை இடிமுழக்கம் கேட்டது

இந்தப் பேச்சுக்கு இடையில் மல்லப்பன் சாவடியில் திரை போட்டு அமல்தாருடைய சயனோத்ஸவத்துக்கு (தூங்குவதற்கு) ஏற்பாடு செய்துகொண்டிருந்தான்.

'ராவ் ஸாஹப்! களைத்து வந்திருக்கிறீர்கள்போல் இருக்கிறது. சற்று ஓய்வு எடுத்துக்கொள்ளுங்கள். பொழுது விடிந்தபின் வருகிறேன்' என்று கௌடர் தடுமாற்றத்துடன் ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லாமல் பேசினார்.

குடித்திருந்தாலும் அமல்தாருக்கு நினைவு தவறவில்லை. கௌடருடைய கள்ளக் கும்பீட்டால் அமல்தாருக்குக் கோபம் வந்தது.

'எல்லாம் தெரிஞ்சுபோச்சுங்க மணியக்காரரே!' என்று அதட்டிவிட்டு, 'ஆர்டர்லி, இந்த மணியக்காரனுக்கு எல்லா விஷயத்தையும் எடுத்துச்சொல்லு' என்று கர்ஜித்தார்.

இப்படிப் பேசிக்கொண்டே அவர், திரைக்குப்பின் மெத்தையின்மேல் படுத்துக்கொண்டார். 'பயங்கர நாடகத்தின் ஒரு காட்சி முடிந்தது' என்று கௌடர் நினைத்தார். ஒரு பெரிய கண்டத்திலிருந்து தப்பியது போன்ற ஆறுதல் அடைந்தார். ஆர்டர்லி கேசவராவ் கௌடருடைய பழைய நண்பன். கேசவராவ் சாப்பாடு நடை உடை பாவனைகள் எல்லாவற்றிலும் மிகமிகத் தாமஸப் பிரகிருதி என்று பெயர் படைத்திருந்தான். அவன் உடுத்த கிளாஸ்கோ மல் எப்பொழுதும் சுத்தமாக இருக்கும். கறுப்பு அல்பாக்காக் கோட்டைத் தவிர அவன் வேறு எதையும் அணியமாட்டான். அவன் புஞைச் செருப்பின் சிவப்பு நிறம் மங்கியதே இல்லை. இந்தக் காரணங்களால் அவனைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் அவனை வெள்ளைக்காரன் என்றே சொல்லி வந்தார்கள். அலங்காரத்தைப் போலவேதான் சாப்பாட்டிலும். பாதள்ளியிலிருந்து வெண்ணெய் வராவிட்டால் கேசவராவ் சாப்பிடமாட்டான். இந்த வெண்ணெயின் ருசிதான் கேசவராவின் பெருந்தயவைக் கௌடருக்கு வாங்கிக்கொடுத்தது.

கேசவராவ் அப்பொழுது சாவடித் திண்ணையில் உட்கார்ந்துகொண்டு தாம்பூலத்தைச் சுவைக்க ஆரம்பித்தான். வசவை வாங்கிக்கொண்டு திரும்பிவந்த கௌடரைப் பார்த்து, 'என்ன கௌடப்பா! எல்லாம் சௌக்கியந்தானே? அன்னிக்கு நீ அனுப்பித்த வெண்ணெயில் நெய்யே காணவில்லை' என்று க்ஷேமம் விசாரித்துக்கொண்டே பேச்சைத் துவக்கினான். இரண்டு பேரும் தம் பேச்சு அமல்தாரின் காதில் விழாத அளவுக்குச் சற்றுத் தள்ளிப் போனார்கள்.

'என்ன கௌடப்பா? இதே வேலையிலே உனக்குத் தலைகூட நரைத்துப்போச்சுது. இன்னும் தெரியலியே. நான் கேட்கிறேன். அமல்தார் வெள்ளைக் குதிரையிலேறி வந்த பிறகுதான் பேட்டிக்கு வருவதா? இப்பொழுது விவகாரம் எல்லாத்துக்கும் நீதான் காரணமாய் இருக்கே. ஊரிலே ஒரு கொலை நடந்திருக்கிறது. மார்பு நோயால் இறந்ததாகத் தீர்ப்புச் சொல்லிக் குற்றத்தை மறைத்துவிட்டதாக மொட்டை விண்ணப்பம் வந்திருக்கிறது. மேலும் அந்தப் புகாரில் என்ன என்ன எழுதியிருக்கிறார்கள் தெரியுமா? இந்தக் கொலைக்குற்றம் மறைக்கப்பட்டுவிட்டதால் ரௌடிகள் பட்டப்பகலிலேயே வீட்டில் புகுந்து ஜனங்களை அடித்திருக்கிறார்கள். ஏழைகள் பயமில்லாமல் வாழமுடியவில்லை என்றெல்லாம் எழுதியிருக்கிறார்கள்' என்று கேசவராவ் பேச்சை முடித்து, இவ்வளவு நேரம் கையில் வைத்துக்கொண்டு இருந்த புகையிலையை வாயில் போட்டுக்கொண்டார்.

கௌடர் சக்தியற்றவராய் இருந்துவிட்டார். நாமே குற்றவாளியாகும்படி நேர்ந்தது அல்லவா என்று இடிந்துபோய் விட்டார். என்ன சொல்வதென்று தெரியாமல், 'அதை விசாரிக்கத்தான் ராவ் சாஹேப், இப்படிப் பாதி ராத்திரியில் வந்திருக்கிறீரோ?' என்று கேட்டார்.

'இது ஒன்றுக்கு மட்டும் என்றால் இவ்வளவு அவசரமாக வந்திருக்கமாட்டார். இன்னுமொரு விவகாரம் இருக்கிறது. இந்த ஊரில் தாதா என்று ரௌடி ஒருவன் இருக்கிறானாமே? அவன் இங்கே படையைாமேலே பாய்ந்து அடித்து மானத்தை வாங்கிவிட்டானென்று அவன்மேல் பிராது கொடுத்து இருக்கிறார்கள். அப்புறம் அந்தத் தாதாவுக்கு ஊரில் பிரசித்தி பெற்ற பிராம்மணர்களுடைய ஆதரவு இருக்கிறதென்றும் இந்தப் பிராதில் கண்டிருக்கிறது. இந்த விவகாரம் மட்டும் ரொம்ப தூரம் போகலாம் இத்தனையும் நடந்து இருக்கும்போது நீங்கள் எங்கிருந்தீர்கள் மணியக்காரரே? பந்தோபஸ்து என்றால் பாதள்ளி கிராமத்தில்தான் என்று ஜம்பம் அடித்துக்கொண்டிருந் தீர்களே?' என்று கேசவராவ் விழுந்த ஆளின்மேல் ஒரு கல்லைத் தூக்கிப் போட்டான்.

சிறிது நேரம் கௌடர் பேசாமலிருந்தார். கடைசியில் கேசவராவ்தான் கதி என்ற முடிவுக்கு வந்து 'வேலியே பயிரை மேய்ந்தாற்போலாயிற்று கேசவப்பா. இந்தப் படையனே மொட்டை விண்ணப்பம் போடுவதாகப் பயமுறுத்திப் பாபு சாஹேபிடமிருந்து பணத்தைப் பறித்திருக்கிறான். மறுபடியும் அப்படியே பயமுறுத்தி மாளிகையில் இருந்த சோளத்தைப் பங்கிடச்செய்து தான் பெருமை பீற்றிக்கொண்டிருக்கிறான். சக்கிலியச் சன்னன் என் வீட்டிலிருந்து சோளம் வாங்கிக் கொண்டு வந்தான். மடத்து வழியாக வரும்போது அதை அவனிடமிருந்து பிடுங்கிக்கொண்டான். அவன் செய்யும் அக்கிரமம் ஒன்றா இரண்டா? அதெல்லாம் கிடக்கட்டும். இப்போது என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்?' என்று கேசவராவையே யோசனை கேட்டார்.

கௌடப்பா! அதெல்லாம் நிஜமாகவே இருக்குமோ? விவகாரம் மிகச் சிக்கலாக இருக்கிறதே. நீ எப்படியும் நாளைக்கு வருவாய் அல்லவா? அமல்தாரிடம் கேட்டுக்கொள். சிபாரிசு பிடித்துக் கேட்டுக்கொண்டால் ஏதாவது நடக்கும். அதற்கு மேல் உனக்குச் சொல்ல வேண்டுமா? என்று கேசவராவ் தனக்குச் சம்பந்தம் இல்லாததுபோல் கையை விரித்துவிட்டான்.

கௌடர் வீட்டுக்குப் போய்ச் சேரும்போது மணி பன்னிரண்டுக்குமேல் ஆகிவிட்டது. சாயங்காலம் முதல் கவலைப் பட்டுக் கவலைப்பட்டு அயர்ந்துவிட்டார். சாவடிக்கும் வீட்டுக்கு மாக அலைந்து களைத்துவிட்டார். கடைசியில் ஒரு வழியும் தெரியவில்லை. காலையில் ஒரு ஆபத்துக் காத்திருந்தது. அவர் வீட்டுக்குப் போகும்போதே சிலேதார் லக்ஷ்மணன் தம்மைக் காண வந்திருப்பதாகத் தெரியவந்தது. கௌடர் மிகச் சலிப்புடன், 'இதோ பார் லக்ஷ்மணு! தாதாமேல் புகார் போயிருக்கிறதாம் ஜாக்கிரதை. அமல்தார் அடக்க முடியாத கோபத்துடன் வந்திருக்கிறார். இந்தப் பிராதில் அவனுடைய வாயிலிருந்து தப்புவது கஷ்டம். தாதாவிடம் அவன் கண்ணில் படவேண்டாம் என்று சொல்லு. இப்பொழுதே அவனை ஊருக்கு அனுப்பிவிடு' என்று வழி சொல்லிக் கொடுத்தார்.

லக்ஷ்மணன் முகத்தில் அழுகை முத்திரையிட்டு இருந்தது. வேட்டி நுனியால் மூக்கைத் துடைத்துக்கொண்டு, 'போ என்று துரத்தினாலும் அவன் போற வழியா தெரியலே சாமீ! ராவ் சாஹேப் போனபின் ஊரை விட்டுப் போகிறேன் என்கிறான்' என்று சொன்னான்.

'என்ன பிடிவாதக்காரனடா அவன்! சும்மா போடான்னு சொல்லக்கூடாதா. புலியோடுகூட விளையாடலாம். இந்தச் சர்க்கார் ஆட்களிடம் அகப்பட்டுக்கொள்ளக் கூடாது. ஊரை விட்டுப் போகச் சொல்லு. முடியாது என்றால் தாலீம்கானாவிலோ நம்ம பாளாச்சார் வீட்டிலோ இருக்கச் சொல்லு. அதுவும் முடியாதுன்னா பாழுங் கிணற்றில் விழச்சொல். நம்மையும் தள்ளச் சொல்' என்று பல்லைக் கடித்துக்கொண்டு சொன்னார் கௌடர்.

லக்ஷ்மணன் கௌடருடைய பேச்சையும் தோற்றத்தையும் கண்டே நடுங்கினான். பயத்தால் அழுகையைக்கூட மறந்துவிட்டு அங்கிருந்து புறப்பட்டான். உடனே தாதாவிடம் சொல்லலாம் என்றால் அவன் வீட்டிலில்லை.

பொழுது புலர்ந்தது. தாதா தினசரி வழக்கம்போல் தாலீம் கானாவில் லங்கோடு தரித்துத் தேகப் பயிற்சி தொடங்கத் தயாராக இருந்தான். அப்பொழுது அங்கே அவனைத் தேடிக் கொண்டு லக்ஷ்மணன் சென்றான். கௌடரும் பாளாச்சாரும் சொன்னதை அவனிடம் சொன்னான். 'பாளாச்சாரின் வீட்டிலாவது போய் இரு' என்றுப் பதைபதைப்புடன் சொன்னான். ஆனால் அது தாதாவின் காதில் விழவேயில்லை.

'நான் தலைமறைவாக இருப்பதற்குத் திருடவில்லை. பொய் சொல்லவில்லை. இதெல்லாம் எனக்குச் சரிப்படாது. சிமணுவின் வாழ்க்கையைக் கெடுத்துப் பாழாக்கியவனை உயிரோடு விட்டு விட்டு அது எந்தப் போலீஸ்காரன் அவன்? என்ன அடக்கணும்னு வருகிறவன். அவனைப் பார்த்துவிடுகிறேன்' என்று பரபரப் புடன் சொல்லிவிட்டுப் பயிற்சியைத் தொடங்கினான்.

'உன் இஷ்டப்படி செய்துக்கோ. சொல்லச் சொன்னாங்க. சொன்னேன். உன் தலைவிதிப்படி நடக்கட்டும்' என்று முனகிக் கொண்டே லக்ஷ்மணன் புறப்பட்டுப் போய்விட்டான்.

## 10

பக்ருதீன் அக்காலத்து மற்ற அமல்தார்களைப் போலவே குற்றவாளிகளுக்கு யமனைப் போல் தோற்றமளித்தார். தாட்சண்யம் உள்ளவன் அதிகாரத்துக்கே லாயக்கில்லை என்று அந்தக் காலத்தில் எல்லோரும் நிச்சயமாக நம்பினார்கள். யமதூதர்களைப் போல் பயங்கரமாகத் தோன்றும் போலீஸ் களுடன் பக்ருதீனுடைய பரிவாரம் வந்தது என்றால் கஜினி முகம்மதினுடைய படை தாக்கியதுபோல் ஜனங்கள் அஞ்சி நடுங்கினார்கள். அவர்கள் எல்லோரும் ஊரைவிட்டுப் போகும் வரையில் யாரும் தூங்கமாட்டார்கள். பக்ருதீன் பகல் வேளையில் சாதாரணப் போலீஸ் அதிகாரி போலத்தான் காணப்படுவார். சாமான்களை சரியாகச் சப்ளை செய்திருக்கிறார்களா என்பதை அவர் எப்போதும் தன் காக்கைப் பார்வையால் பார்த்துக் கொண்டு இருப்பார். அஞ்சல்காரன் கொண்டு வந்த வெண்ணெய்ப் பாத்திரம் அவர் கண்ணாலும் மூக்காலும் பரீக்ஷித்த பின்புதான் சமையலறைக்குப் போக வேண்டும் என்பது கண்டிப் பான உத்தரவு. கோழிகளை நறுக்குமுன்பு அவைகளை முதலில் தூக்கிப் பார்ப்பார். அவை 'கொக் கொக் கொக்' என்று சிறகடித்துக்கொள்வதைப் பார்த்துப் பெரிதாகச் சிரித்து நிலத்தில் ஓங்கி அறைவார். வியாதிக்காரக் கோழி என்று தெரிந்தால் அவரது தீக் கக்கும் பார்வையிலேயே அதைக் கொண்டு வந்தவனுடைய வாழ்வு தீர்ந்தது என்பது எல்லா மணியக்காரர்களுக்கும் தலையாரிகளுக்கும் தெரிந்த விஷயந்தான்.

பாதள்ளி மணியக்காரர் சப்ளையில் தேர்ந்த புள்ளி என்ற புகழ் தாலுக்கா எங்கிலும் பரவியது. பக்ருதீன் சாஹேப் இந்தத்

தாலுக்காவிற்கு மாற்றி வந்த ஆண்டு பாதள்ளியைத் தமது பாத தூளியால் புனிதம் செய்துவைத்தார். அவர் கௌடர் கொடுத்த அமோகமான விருந்தால் மகிழ்ச்சி அடைந்தார். அவர் ஊரை விட்டுப் போகும்போது 'ஏதாவது அவசியம் நேர்ந்தால் என்னிடம் வாங்க மணியக்காரரே' என்று புகழ்ந்ததை, கௌடர் பல மாதங்கள் வரைக்கும் தன்னை மறந்து சொல்லிக்கொண்டு இருந்தார்.

ஒரு தடவை பக்ருதீன் சாஹேபினுடைய எருமை மலடாய் இருந்த செய்தி போலீஸ் இலாகா ஒற்றர்கள்மூலம் கௌடருக்கு எட்டியது. ஊரில் நல்ல இனக் கன்றை ஈனும் எருமை ஒன்றை, கௌடர், பக்ருதீன் சாஹேபின் வீட்டுக்கு அனுப்பி, அவரது மலட்டு எருமையை ஏழை சங்கப்பனுடைய வீட்டில் கட்டி வைத்தார். சங்கப்பன் அந்த மலட்டு எருமையை அக்கறையுடன் பாதுகாத்துவந்தான். அது சினையாகிக் கன்று போடப் போவது பக்ருதீனுக்குத் தெரிந்தால் அதை அவரிடமே அனுப்ப நேரிடும் என்று பயந்து சங்கப்பா அந்த எருமை செத்துப்போய்விட்டது என்று சில மாதங்களுக்கு முன் செய்தி அனுப்பியிருந்தான்.

பலபல என்று விடியும்போதே பக்ருதீன் எழுந்திருந்து காலைக் கடனைக் கழிக்கப்போவது வழக்கம். அன்றும் வழக்கம்போல் வெளியே போனார். சங்கப்பன் வீட்டிலிருந்து அவிழ்த்து விடப் பட்ட எருமை தன் தலை ஈற்றுக் கன்றுடன் அவர் இருந்த பக்கமாகவே போயிற்று. அவருடைய கூரிய பார்வைக்கு அது தம்முடையது என்பது தெரிந்தது. உடனே அவருக்குத் தலைக்கு மேல் கோபம் வந்துவிட்டது. சாவடிக்குத் திரும்பி வந்த பின் அவரைக் கண்டு வணக்கம் சொல்ல வந்த கௌடரே அவருடைய கோபத்துக்கு இலக்கானார். 'ஹூம்! மணியக்காரா! நம்பள் எருமை எங்கே?' என்று கர்ஜித்தார் (குடி மயக்கம் தெளிந்த சமயங்களில் அவர் கன்னடம்தான் பேசுவார்).

கௌடர் கைகூப்பி, 'சங்கப்பன் வீட்டிலே விட்டிருந் தேனுங்க. அது கன்று போட்டுச் செத்துப் போயிட்டுதாம். கன்று பெரியதாகும் வரைக்கும் காப்பாற்றி அப்புறம் உங்களிடம் அனுப்புப் படி சொல்லியிருக்கேனுங்க' என்று விண்ணப்பித்தார்.

பக்ருதீன் ருத்ரமூர்த்தியானார். அயோக்கிய ராஸ்கல். யார் சொன்னது? நான் இப்போதான் பார்த்துட்டு வந்திருக்கேன்' என்று சாவடியே எதிரொலிக்கும்படி கூச்சலிட்டார். சங்கப் பனுக்கு ஆள் போயிற்று. வந்த உடன் அவனைக் குற்றவாளி போலச் சாவடியிலேயே உட்கார்த்தி வைத்தார். கேசவராவ் அவனைச் சாப்பாட்டுக்காக அனுப்பிவிட்டுத் தானும் சாப்பாட்டுக் காகப் பாளாச்சார் வீட்டுக்குப் போனான்.

சங்கப்பன் பயந்து நடுங்கினன். எருமை செத்துப் போய்விட்டது என்று பொய் சொன்னதற்காக அவனுடைய அண்ணன் தம்பிகள் கவலைப்பட்டார்கள். சங்கப்பன் தன் வீட்டுக்குப் போகாமல் பாளாச்சாரின் வீட்டுக்கு வந்து ஆர்டர்லி கேசவராவின் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு அழுதான்.

'எழுந்திரு சங்கப்பா! பெரிய மனுஷங்களோட விவகாரம். வாழைமரம் முள்ளில் பட்டாலும் கிழிந்துவிடும்; முள் வாழை மரத்தில் பட்டாலும் கிழிந்துவிடும். வாழை மரத்துக்குதான் நஷ்டம். விஷயம் என்னவோ சின்னதுதான். ஆனல் அமல்தாரின் பிடிவாதம் பெரிதப்பா. கேசவராவ் நம்மைச் சேர்ந்தவர். எப்படியாவது தப்பை மன்னிக்கச் செய்வார். நீ போய்ச் சாப்பிட்டுவிட்டு வா' என்று பாளாச்சார் அவனுக்கு ஆறுதல் சொல்லி அனுப்பினர். ஆனல் அவன் போன உடன் அவன் மனைவியும் மக்களும் அழுதுகொண்டே வந்தார்கள்.

'எருமையைப்போல் இரண்டு பங்கு தண்டம் கொடுக்க வேண்டியிருக்கும். அபராதம் கொடுப்பதால் உபகாரம் சுலபமாய் முடிந்துவிடும்' என்று கேசவராவ் ஆசை காட்டினர்.

'சங்கப்பனிடம் செல்லாக் காசுகூட இல்லை. எருமையின் விலை ஐம்பது ரூபாய். நூறு ரூபாய் தண்டம் கொடுக்க இது அறுவடைக் காலமும் இல்லை சங்கப்பனுடைய வீட்டார் ஏமாற்றத்துடன் திரும்பினர்கள். சங்கப்பனுக்கு சாவடிச் சிறைவாசம் தப்பவில்லை. அவனுடைய தம்பியான ராயண்ணன் மார்வாடி பாளாராமனிடம் நிலத்தை அடகுவைத்து நூறு ரூபாய் கடன் வாங்கிக்கொண்டு சாவடிக்கு வந்தான். அப்பொழுது ராத்திரி பத்து மணி ஆயிற்று. நூறு ரூபாய் கேசவராவின் கையில் விழுந்தது. அவன் புன்னகையுடன் பெற்றுக் கொண்டான். அப்புறம் சங்கப்பனுக்கு விடுதலை கிடைத்தது.

எருமை இறந்துவிட்டதென்று பொய் சொன்ன ஒரு தவறுக்காக ஏழைச் சங்கப்பன் நூறு ரூபாய் தண்டம் கொடுத்தான் என்ற செய்தி கிராமம் முழுவதும் பரவ வெகுநேரமாகவில்லை. இந்தச் செய்தியால் ஊரார் எல்லாரும் பயந்தார்கள். சாவடி வழியாகப் போகக்கூட பயந்தார்கள். சூருவளிக்குமுன் சூழ்நிலை அமைதியாயிருப்பதுபோல பக்ருதீன் சாஹேப் சாந்தமாகத் தோற்றமளித்தாலும் அவருடைய நெருப்புப் பொறி பறக்கும் கண்களாலேயே வரப்போகும் விபத்தை ஊகிக்க முடிந்தது. இரவில் யாருக்கு பகாசுரன் சாவடிக்கு அழைப்பு விடுவானே என்று கவலைப்பட்டார்கள். படதையா பிராதும் விருந்தும்

கொடுத்துக் கொள்ளேநோயை (அமல்தாரை) ஊருக்குத் தருவித்துவிட்டார் என்று அங்கங்கே எல்லோரும் கிசுகிசுவென்று பேசிக்கொண்டார்கள். நேற்று, படதையா ஜனங்களேக் காப்பாற்றுபவர் என்று இருந்த அபிப்பிராயம், இன்று பாதிக்குப் பாதி குறைந்துவிட்டது. மாடுகூடத் தின்ஞத சோளத்தைக் கொடுத்தது, தாதாமேல் புகார் கொடுத்தது, கடைசியில் அதை விசாரிப்பதற்காக இப்படிப்பட்ட அதிகாரியை வரவழைத்தது இவையெல்லாம் அவருடைய கெட்டிக்காரத்தனத்துக்கும் தைரியத்துக்கும் சாட்சியாக இருந்தன. அவைகளே இன்று விபரீத நிலேயில் எல்லோர் கண்ணுக்கும் துரோகச் செயல்களாகத் தோன்றின.

ஆனுல் கர்ணம் சேஷப்பாவுக்கு மட்டும் அப்படித் தோன்ற வில்லே. ஊரில் ஏற்பட்ட இந்தக் குழப்பத்தால் அவன் உற்சாகம் அடைந்தான். அவனுடைய சுயநலமே உருவான நாக்கு ஊறுகாய் சாப்பிட்டதுபோல் நொட்டைவிட்டது. படதையா அவன் கண்ணுக்கு வீர புருஷன் ஆனுன். 'அவன்தான் சரியான ஆண்பிள்ளே. அப்படிப்பட்ட ஒருவன் ஊரிலிருந்தால் கௌடரின் கொட்டம் அடங்கிவிடும்' என்று சொல்லிக்கொண்டு அலேந்தான்.

இரவு மணி பதினென்று அடித்ததும் பக்ருதீன் சாஹேபின் கண்கள் சிவந்தன. சாவடி முழுவதும் சாராய நெடி அடித்தது. அவர் மயக்கத்துடனேயே, 'படதையாவைக் கூப்பிடு; அந்தத் தாதாவைக் கூப்பிடு' என்று அதட்டினுர்.

போலீஸ் கான்ஸ்டபிள் ஒருவன் அஞ்சல் மல்லப்பனுடன் தாலீம்கானுவுக்குப் போய், 'ராவ் சாஹேப் கூப்பிடுகிறுர்' என்று தாதாவை அழைத்துவந்தான்.

அன்று சாயங்காலம் சங்கப்பனுடைய தம்பி மகன் தாதா வைச் சந்தித்தான். குடும்ப நிலத்தை அடகுவைத்து ரூபாய் தண்டம் கொடுத்ததை அவனிடம் சொல்லியிருந்தான்.

'ஏழைகள் வாழறதே கஷ்டமாப் போச்சுப் பார் தாதா. எங்க எருமை ஒரு நாளேக்கு மூணுசேர் வெண்ணெய் கொடுக்கும். அதை எடுத்துக்கிட்டு ஒரு மலட்டு எருமையைக் கொடுத்தான். அதைக் காப்பாற்ற நாங்கள் கூலி இல்லாத வேலேக்காரர்கள் ஆனேம். அதையும் சமாளித்து வளர்த்தோம். அதுமேலேயும் இவன் கண் விழுந்துடுத்து. எங்க பெரியப்பா உங்க எருமை செத்துப் போயிடுத்துன்னு சொல்லி இருந்தாரு. அதற்காக நூறு ரூபாய் தண்டம் வசூலிக்கணுமாப்பா' என்று பசப்பன் கேட்டான்.

உடனே தாதாவுக்குக் கோபம் தலைக்கேறியது. பஞ்ச காலத்தில் இப்படி ஏழைகளைச் சுரண்டுவது பொறுக்க முடியாத அக்கிரமம் என்று அவனுக்குத் தோன்றியது. பௌஜ்தாரின் கொட்டத்தை அடக்கவேண்டுமென்ற எண்ணமும் தோன்றியது. இந்த நினைவுகளோடேயே அவன் போலீஸாரைத் தொடர்ந்து சாவடித் திண்ணையில் ஏறினான்.

சாவடியில் ஜனசந்தடி இருந்தது. கெடுபிடியாக ஓடிக் கொண்டிருந்த கேசவராவ் அப்பொழுது ஓர் அஞ்சல்காரனிடம் உரக்க ஏதோ உத்தரவு கொடுத்துக்கொண்டிருந்தான். திண்டில் சாய்ந்து உட்கார்ந்திருந்த பௌஜ்தாரின் எதிரில் படதையா மடத்துச் சாமியாருக்கேற்ற தோரணையோடு கால்மேல் கால்போட்டுக் கம்பீரமாக உட்கார்ந்திருந்தார். இரண்டு போலீஸ்காரர்கள் சமையல் சாமான்களை உள்ளே கொண்டு போவதில் முனைந்திருந்தார்கள்.

தாதா திண்ணையோரத்தில் செருப்பை விட்டுவிட்டு உள்ளே வந்து நின்றான். தம் முன்பு தலை வணங்கிக் கும்பிடுகூடப் போடாமல் நிமிர்ந்து நின்ற அந்த இளைஞன் லேசுப்பட்டவனல்ல என்று நினைத்தார் பௌஜ்தார். அவர் கோபம் பின்னும் அதிக மாயிற்று. எதிரில் வாதியான படதையா இல்லாதிருந்தால் தாதாவின் கன்னத்தில் இரண்டு அறை கொடுத்து ஆபீஸர் முன்பு எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்ற பாடத்தைக் கற்பித்து மறக்காதபடி செய்திருப்பார் பௌஜ்தார். ஆனால் தாதாவின் கைகளைக் கட்டி ஜெயிலுக்கு அனுப்பக்கூடிய குற்றங்களைத் தயாரிக்க வாதியிருக்கும்போது தற்போதைக்குப் பொறுமை வகிப்பதுதான் நல்லமுறை என்று பக்ருதீன் நினைத்தார். சிறிது நேரம் அவனைக் கடுகடுப்புடன் பார்த்து விட்டு, 'ஆர்டர்லி, தாதாங்கிற பயல் இவன்தானா?' என்று கேட்டார். கேசவராவ் 'ஆம்' என்று பதில் சொன்னான்.

'என்னடா? யார் முன்னாலே நிற்கிறேன்னு தெரியுமா, தெரியாதா?' என்று பௌஜ்தார் அதட்டும் முறையில் தாதா வைச் சீண்டினார்.

'தெரிஞ்சதுங்க' என்று தாதா அலட்சியமாகச் சொன்னான்.

'உன்னை இங்கே எதுக்காக அழைச்சு வந்திருக்காங்கன்னு தெரியுமா?'

'தெரியாதுங்க'. அதே அலட்சியத்தோடு பதில் வந்தது.

'அரே இஸ்மாயில்! இவனைக் கொண்டு போ' என்று பக்ருதீன் ஒரு கான்ஸ்டபிளுக்கு உத்தரவு போட்டார்.

இந்தச் சந்தர்ப்பத்தை உபயோகித்துக்கொண்டு படதையா 'பாருங்க ராவ் சாஹேப், எவ்வளவு பொல்லாதவனுயிருக்கிருன் இவன். இவனுக்கு அவ்வளவு திமிர் இருக்கிறது' என்று கோபத்தைத் தூண்டிவிட்டார்.

தாதா ஆத்திரமடைந்த புலியைப்போல் படதையாவைப் பார்த்தான். 'நாக்கை அடக்கிண்டு சும்மா உட்கார முடியாதோ? ஆபீஸர் இருக்கார். நான் இருக்கேன். நீ என்ன நடுவிலே?' என்று அவரை அதட்டினுன். அதற்குள் கான்ஸ்டபிள் இஸ்மாயில் வந்து தாதாவை வேறு புறமாக அழைத்துக் கொண்டு போனுன்.

'பார்த்தீங்களா சாஹேப்! என்ன கொழுப்பு இவனுக்கு? கண் எப்படிச் சிவக்கிறது? கண்ட கண்டவங்களை எல்லாம் இவன் எப்படிப் பயமுறுத்தலாம்? என்னை அடிச்சுத் திட்டிக் கொன்னுடு வேன்னு பயமுறுத்தி, என்னைப் போன்ற சந்நியாசியின் மடத் திற்குப் பழிச்சொல் வரவேண்டுமென்று தன் தங்கச்சியைக் கொணுந்து மடத்திலே சேர்த்துட்டான். மல்லப் பசங்களைக் கூட்டு சேர்த்துண்டு ஊரிலே குடியானவங்களை மிரட்டி தானியத் தைக் கொள்ளை அடித்துவிடுவதாகப் பயமுறுத்தினுன். அதனுலே தான் பாபு சாஹேப் ராவோட ராவா தானியத்தை எடுத்து ஏழைகளுக்குக் கொடுத்துத் தப்பிக்கிறதுக்குள்ளாறப் போதும் போதும்னு ஆயிடுத்து' என்று படதையா புகார் மூட்டையை அவிழ்த்தார்.

படதையா கூடியமட்டும் தாதாவின்மேல் குற்றத்தை அதிகப்படுத்த வேண்டுமென்று, விஷயத்திற்குக் காது, மூக்கு வைத்துச் சொல்லவேண்டியிருந்தது. சமயம் பார்த்துப் பௌஜ்தார் அவன்மேல் கோபம் கொள்ளும்படி என்ன செய்ய வேண்டுமோ அதையெல்லாம் செய்தார். இந்தச் சமயத்தில் தன்மானத்துடன் நிமிர்ந்து நின்ற தாதா பௌஜ்தாரின் பார்வையில் உண்மைக் குற்றவாளியாகவே தோன்றினுன். அதிகாரத்தின் கண்ணுக்குத் தைரியமும் தன்மானமும் உள்ளவர்கள் அதிகப்பிரசங்கியாகத்தான் தோற்றமளிப்பார்கள். இப்பொழுது படதையா சொன்னபடி தானியத்தைக் கொள்ளை அடிப்பேன் என்று பயமுறுத்தியதைப்பற்றிப் பாபு சாஹேபைக் கொண்டு புகார் எழுதியாக வேண்டும். உடனே பௌஜ்தார், 'அரே! ஜாகீர்தார் சாஹேபைக் கூப்பிடு' என்று கத்திஞர்.

ஒரு மல் சட்டையையும் உடம்போடு ஒட்டிய அரைச் சல்லடத்தையும் அணிந்துகொண்டிருந்த பாபு சாஹேப் அசட்டுச் சிரிப்புச் சிரித்துக்கொண்டு அடக்கத்துடன் பௌஜ் தாரைக் கும்பிட்டுவிட்டு உள்ளே வந்தான்.

'ராவ் சாஹேப்! ஜாகீர்தார் வந்திருக்கிறார் பாருங்க. வாங்க வாங்க ஜாகீர்தார் சாஹேப்' என்று படையாட்சி பாபு சாஹேபை வரவேற்றார்.

'ஜாகீர்தார் சாஹேப்! நீங்க தானியக் குழியைத் திறந்து ஏழைகளுக்குப் பங்கிட்டதாகக் கேள்விப்பட்டேன். இந்தச் சங்கதி நிஜம்தானா?' என்று சாஹேப் கேட்டார்.

இரண்டு பெரிய வயிரக் கற்கள் பதித்த மோதிரங்கள் அணிந்த கைகளைப் பிசைந்துகொண்டு பாபு சாஹேப், 'ஏழைகள் பட்டினி இருந்து சாகிறாங்கன்னு கேள்விப்பட்டேன். அதனாலே அவர்களுக்கெல்லாம் கொஞ்சம் கொஞ்சம் சோளம் பங்கிட்டேன்' என்றான். பாவம்! கேள்வியின் ரகசியம் அவனுக்குப் புரியவில்லை. தன்னுடைய கொடைத்தன்மையைப் பெருமையடித்துக்கொள்ளும் பதிலைச் சொல்வதால் தகராறு வரும் என்று அவனுக்குத் தெரியவில்லை.

படையாட்சி அவனுக்குத் தைரியம் சொல்லுவதுபோல், 'ஜாகீர்தார் சாஹேப்! நீங்க ஒண்ணுக்கும் பயப்பட வேண்டாம். சொல்ல வேண்டியதை எல்லாம் முன்னாலேயே பௌஜ்தாரிடம் சொல்லிவிட்டேன். தாதாவின் கூட்டம் வந்து தானியத்தைக் கொள்ளையிட்டு அக்கிரமம் நடத்த இடமே கொடுக்கக் கூடாது என்று நான் சொன்னதைக் கேட்டு நீங்கள் தானியம் கொடுத்ததை மறைக்க வேண்டிய அவசியம் இல்லை' என்றார்.

'ஆமாம். நம்ம மணியக்காரருடைய தானியத்தைக் கொள்ளையடிக்கக் கூட்டம் கூடியது' என்று குழப்பத்துடன் பாபு சாஹேப் முன்னுக்குப் பின் முரணாகப் பதில் சொன்னான்.

ஆசாமி கை விட்டுவிடுவான் என்று தோன்றியதால் படையாட்சி மிகக் கவலையுடன் பாபு சாஹேபைப் பாதியில் அடக்கிவிட்டுப் பேச்சைத் தாமே ஏற்றுக்கொண்டார்.

'பார்த்துக்கொள்ளுங்க. கௌடருடைய தானியத்தையே கொள்ளையடிப்பதற்காக இந்த தாதா ரௌடிகள் கூட்டத்தையெல்லாம் அழைத்துக்கொண்டு ரகளை செய்ய வந்தபின், அதே ரௌடிகள் இன்றில்லாவிட்டால் நாளைக்கு மாளிகையிலும் கை வைப்பார்கள் என்பதை நிச்சயமாக நம்பத்தான் வேண்டும். இந்த வார்த்தை காற்றில் வந்தது. அப்புறம் கேட்பானேன். புலிக்குத் தன் காடுமில்லை; புறங் காடுமில்லை. ஜாகீர்தார் சாஹேப்! தாதா உங்களுடைய சோளத்தையும் கொள்ளை அடிப்பேன் என்று ஊரெல்லாம் சொல்லிக்கொண்டு திரிந்ததைச் சொல்லுங்கள். தாதா இப்பொழுது போலீஸ் வசத்தில் இருக்

கிறுன். இனிமேல் அவனுடைய பயத்தை விடுங்கள்' என்று நிதானமாகப் படதையா, பாபு சாஹேப் சொல்லவேண்டியதைச் சொல்லி முடித்தார்.

தாதாவின்மேல் சுமத்திய குற்ற நாடகத்தால் அவனைச் சந்திக்கு இழுக்கவேண்டும். தாதா ஜாகீர்தாரின் தானியத்தைக் கொள்ளை அடிப்பேன் என்று பயமுறுத்தியதாகப் பாபு சாஹேபிடம் சொல்லிப் புகார் எழுத வேண்டும்.

ஆனால் இந்தச் சமயத்தில் கேசவராவ் தலையிட்டு விவகாரத்தின் போக்கையே மாற்றிவிட்டான். மொட்டை விண்ணப்பத்தில், பாபு சாஹேப் விஷம் வைத்து நானுவைக் கொன்றதாகப் பாபு சாஹேபின்மேல் குற்றம் சுமத்தப்பட்டு இருக்கிறது என்னும் செய்தியை பௌஜ்தாருடைய கவனத்திற்குக் கொண்டுவந்தான்.

'மார்பு நோயால் நானு இறந்தான் என்பதைச் சத்தியம் பண்ணிச் சொல்கிறேன், ராவ் சாஹேப்! விஷம் வைத்துக் கொல்லும்படி அவன் ஒரு பாவமும் செய்யவில்லை. அவனைப் போன்ற கௌரவமான மனிதர்கள் லட்சத்தில் ஒருவர்தான் இருக்கமுடியும்' என்று ஜாகீர்தாருக்கு ஏற்ற அஞ்ஞானத்துடன் பாபு சாஹேப் சாதித்தான்.

'அப்படியானால் விண்ணப்பத்திலிருக்கும் செய்தி முழுவதும் பொய் என்று சொல்கிறீர்களா? என்ன?' என்று கேசவராவ் குறுக்குக் கேள்வி கேட்டான். இதுபோல் ஆயிரம் விவகாரங்களைப் பார்த்து அநுபவம் பெற்ற கேசவராவுக்கு விவகாரத்தின் ரகசியம் முன்பே தெரிந்துவிட்டது. ஜாகீர்தாரின் அசட்டுத்தனம் அவனுக்கு வேடிக்கையாக இருந்தது.

'எனக்கொன்றும் தெரியாது. ஆகாத ஜனங்கள் எனக்கு விரோதமாகக் குற்றம் சாட்டியிருக்கிறுர்கள். விஷயம் உண்மையானுல் மொட்டை விண்ணப்பம் ஏன் எழுத வேண்டும்?' என்று ஒரு வகையான முரட்டுத்தனத்துடன் பாபு சாஹேப் மொட்டை விண்ணப்பத்தின் எல்லாச் செய்திகளும் பொய் என்று சொல்லத் தைரியமில்லாமல், தன்மேல் கண்ட குற்றம் மட்டும் ஆதாரமற்றது என்று தர்க்கம் செய்தான்.

படதையா இப்பொழுது தலையிடவேண்டிய அவசியம் நேர்ந்தது. இல்லாவிட்டால் கேஸ் அவர் மேலேயே திரும்பி விடும். அவர் ஆசனத்தில் காலை மாற்றி உட்கார்ந்தார். முகத்தில் புன்னகையைத் தருவித்துக்கொண்டு ஒரு முறை இருமி, கேட்பவர்களுடைய கவனத்தைத் தம் பக்கம் ஈர்த்துக்

கொண்டார். புதிய கதைக்குப் புதிய வேஷமும் புதிய தோற்றமும் வேண்டுமென்பதை அவர் அறிந்திருந்தார்.

'ராவ் சாஹேப்! கேளுங்க! இறந்துபோன நாஞ, தாதாவின் பெரியப்பா. அவன் வெகு நாளாகச் சிலேதாராக இருந்தவன். ஜாகீர்தாரின் நிலங்களைக் குத்தகை எடுத்துச் சாகுபடி செய்து வந்தான். பெண்டாட்டி இறந்த பின் இந்த நாஞ மகளுடன் மாளிகையில் வந்து தங்கினுன். அவனுடைய சொத்து, அவன் பேரிலிருந்த நிலம் நீச்சுக்கள் எல்லாம் தன் கையைவிட்டுப் போய் விடுமோ என்று தாதா நினைத்திருக்கவேண்டும். சிவனுக்குத் தான் வெளிச்சம். தாதா அவனுக்கு விஷம் வைக்க ஏற்பாடு செய்துவிட்டு ஊரைவிட்டுப் போயிருக்கவேண்டும். தான் செய்த குற்றத்தை இன்னொருவர்மேல் சுமத்தித் தான் தப்பித்துக் கொள்வதற்காகச் சர்க்காருக்கு முன் மொட்டை விண்ணப்பம் எழுதி ஏமாற்றியிருக்கிருன் என்று நமக்குத் தோன்றுகிறது. ஆனுல் செய்த வினை தன்னைத் தொடர்ந்துதானே தீரும். தான் விரித்த வலையில் தானே விழுந்துவிட்டான்.' இப்படிச் சொல்லிப் படதையா தாதாதான் நாஞவைக் கொன்ற குற்றவாளியாக இருக்கலாம் என்று சந்தேகம் வரும்படி சொல்லிக் கதையை முடித்தார்.

தாதாவின் கொழுப்பை அடக்க வேண்டுமென்று பக்ருதீனுக்கும் தோன்றியது. அதனுல் நாஞவைக் கொலை செய்த சதியைத் தாதாவின்மேல் ஏற்ற அவருடைய மனச்சாட்சி தடை சொல்லவில்லை. தவிர, துப்பறிய முடியாமல் போன ஒரு கொலை விவகாரத்தை வெளியே கொண்டு வந்த பெருமை அவருக்குக் கிடைக்க இடம் இருந்தது. குற்றம் ருசுவானுல் முன்னேற்றம். இல்லாவிட்டால் குற்றவாளியிடமிருந்து கை நிறையப் பணம் கிடைக்கும். இந்தப் பொன்னுன சந்தர்ப்பத்தை நழுவ விடக் கூடாது என்று பக்ருதீனுக்குத் தோன்றியது. சிறிது நேரம் தாடியைத் தடவிக்கொண்டு ஏதோ யுக்தி தோன்றியவரைப் போல் கண்ணைச் சுழற்றி விசித்திரமாகச் சிரித்தார். உடனே பாபு சாஹேபின் முதுகைத் தட்டிக் கொடுத்து, 'இப்படிச் செய்யுங்க ஜாகீர்தார் சாஹேப். நாஞவுக்கு விஷம் வைத்தவன் தாதாதான் என்று சாதியுங்கள். அதற்கு நாலு சாட்சி தயாரித்துக் கொடுங்கள். தாதாவின் கொட்டத்தை அடக்கி அவனுக்குத் தூக்குத் தண்டனை விதிக்கிறேம்' என்று சொன்னுர்.

அப்பொழுது ஆர்டர்லி கேசவராவ் 'பௌஜ்தார் படுக்க வேண்டிய நேரமாயிற்று' என்று சொன்னுன். பௌஜ்தார் எழுந்து உள்ளே போனுர். பாபு சாஹேப் மறுபடியும் ஒரு தரம்

அவருக்கு வணங்கிச் சலாம் செய்துவிட்டுப் புறப்படத் தயாராஞன். படதையாவும் எழுந்திருந்து கம்பீரமாகப் பௌஜ்தாருக்கு வணக்கம் செலுத்திஞர். இருவரும் அவரிடம் உத்தரவு பெற்று வெளியே வந்தார்கள்.

அப்பொழுதே பாதி ராத்திரிக்குமேல் ஆகிவிட்டது. அங்கங்கே நாய்கள் குரைக்கும் சப்தம் தவிர ஊர் அமைதியாய் இருந்தது. பாபு சாஹேப் தன்மேல் வந்த குற்றம் தாதாவின் மேல் போய்ச் சேர்ந்ததால் மகிழ்ச்சியால் பூரித்தான். இப்பொழுது பௌஜ்தார் சொன்னதைச் செய்தாக வேண்டும். அதற்குப் படதையாவின் யோசனை மிக அவசியமாக இருந்தது.

பாபு சாஹேப் அந்தக்காலத்துச் செல்வந்தர்களைப்போல் உடம்பு மட்டுமே வளர்ச்சி பெற்ற இளைஞனுயிருந்தான். வாழ்க்கையின் உல்லாசமான பகுதியே அவனுக்குப் பழக்கமாகியிருந்தது. அரசியல் அவனுக்கு விளையாட்டாக இருந்தது. அவனுடைய தீச்செயல்களில்கூட குழந்தைத்தனம் இருந்தது. கையில் கிடைத்த ஒரு ஜீவனைத் துன்புறுத்தி அது தவிப்பதைப் பார்ப்பது அவனுக்குத் திருப்தியாக இருந்தது. பிறந்தது முதல் கஷ்டம் என்பதே தெரியாமல் போகத்திலேயே புரண்ட அவனுக்குச் சுகம்கூட அலுத்துப்போய்விட்டது. பிறரைத் துன்புறுத்துவதால் அந்தச் சுகத்துக்கு ஒரு புதிய ருசி இருப்பதாகத் தோன்றியது. ஜமீன்தார் முதலியோர் பிறரைத் துன்புறுத்துவதற்கு இதுதான் காரணமோ என்னவோ?

அடுத்தாற்போல் சாட்சிகள் தயாரிக்க வேண்டும். மாளிகைச் சமையற்காரியான யமுனைவைச் சாட்சியாகப் போடவேண்டும். தாதா கொண்டுவந்து கொடுத்த விஷத்தை நாஞவின் உணவில் கலந்துவிட்டதாக அவள் சொல்லும்படி செய்ய வேண்டும் என்பது படதையாவின் யோசனை. அவருடைய புத்திசாலித்தனத்துக்குப் பாபு சாஹேப் தலையசைத்து மெச்சிஞன். எவ்வளவு பொருத்தமான யோசனை சாமியாரே! என்று அவரை வாயாரப் புகழ்ந்துவிட்டு, பாபு சாஹேப் மாளிகைக்குச் சென்றான்.

# 11

சாவடியிலிருந்து போன பாபு சாஹேப் மாளிகையை அடைந்தபோது இரவு பன்னிரண்டரை மணிக்குமேல் ஆயிற்று. அவன் சாவடிக்குப் போனது முதல் புத்லாபாய் கவலையுடன் அவன் வரவை எதிர்பார்த்துக்கொண்டு கூடத்து ஊஞ்சலில் அமைதியில்லாமல் உட்கார்ந்திருந்தாள். தம்பி மலர்ந்த முகத்துடன் திரும்பி வந்ததைக் கண்டதும் அவளுக்குக் கொஞ்சம் ஆறுதல் உண்டாயிற்று. கூடத்தைவிட்டு வெளியே வந்தாள்.

'பாபு! பௌஜ்தார் சாஹேப் உன்னை எதற்குக் கூப்பிட்டாராம்?' என்று கவலையுடன் கேட்டாள். அங்கே நடந்த விஷயங்களைப்பற்றி அறிய அவள் ஆவலாயிருந்தாள்.

'நானு மாமாவுக்கு நான்தான் விஷம் வைத்துக் கொன்றவன் என்று நமக்கு ஆகாதவர்கள் யாரோ மொட்டை விண்ணப்பம் போட்டிருந்தார்களாம். அதை விசாரிப்பதற்காக அழைத்தார்' என்று உடையை மாற்றிக்கொண்டே சொன்னான்.

புத்லாபாய்க்குத் திக்கென்றது. அந்த விவகாரம் தீர்ந்து போன விஷயமென்று அவள் நினைத்திருந்தாள். ரகசியமாகவே நடந்துகொண்டிருந்த இந்த விஷயங்களெல்லாம் அவளுக்குத் தெரியச் சந்தர்ப்பமில்லை. மூச்சைப் பிடித்துக்கொண்டே கேட்டாள் :

'அப்படியானால் நீ என்ன சொல்லிவிட்டு வந்தாய்?'

'நான் சொல்ல என்ன இருக்கிறது? உண்மை வெளி வந்து விட்டது!'

புத்லாபாய்க்குக் கண்கள் இருட்டின. நிற்கக்கூட முடியாமல் ஜமக்காளத்தில் உட்கார்ந்தாள். 'அப்படியானால் விஷத்தால் செத்தது உண்மை என்று சொல்லிவிட்டு வந்தாயா என்ன?' என்று சில கணங்களுக்குப் பின் பயத்துடன் கேட்டாள்.

பாபு சாஹேப் உரக்கச் சிரித்துவிட்டான். நள்ளிரவின் அமைதியில் மாளிகையின் கூடத்தில் அது எதிரொலித்ததால், மாளிகையே சிரித்ததுபோல் புலப்பட்டது. புத்லாபாய் நடுங்கினாள்.

'நான் சொல்லவேண்டிய சந்தர்ப்பமே வரவில்லை அக்கா. உண்மைக் குற்றவாளி யார் என்பது முன்பே பௌஜ்தாருக்குத் தெரிந்துவிட்டது' என்று பாபு சாஹேப் சொன்னான்.

'இனிமேல் என்ன செய்வது?' என்று ஒன்றும் தெரியாதவளாய்ப் புத்லாபாய் கேட்டாள்.

'இனிமே என்ன? யார் விஷம் கொடுத்தார்கள் என்பதற்கு யமுனு சாட்சி சொல்லுவாள். செத்த பிணம் வந்து சாட்சி சொல்லாது. இதைப் பார்த்தவர்கள் நாலுபேர் சாட்சி சொல்லுவார்கள். குற்றவாளிக்குத் தூக்குத் தண்டனை கிடைக்கும். இது இப்படி நடக்காவிட்டால் வேலையை ராஜிநாமா செய்து விடுகிறேன் என்று பக்ருதீன் சவால் விடுகிறுன்.'

'பாபு, குற்றவாளி யார் என்று தீர்மானம் ஆயிற்று?' என்று கேட்டாள்.

'நானு மாமா சாகவேண்டுமென்று யார் விரும்பினுர்களோ அவர்கள் விஷமிட்டார்கள் என்று பௌஜ்தார் தீர்மானித்திருக்கிறுர்' என்றுன் பாபு சாஹேப்.

'பாபு உன்மேல் சந்தேகமில்லையே?'

'அக்கா, நீ ஒரு பைத்தியக்காரி. அன்றைக்குக் கௌடன் பணம் பிடுங்கவேண்டுமென்று என்மேல் கொலைக் குற்றத்தைச் சாட்டினுன் என்றுல் நீ நம்புவாயா? சிமணுவுக்கும் எனக்கும் தொடர்பை உண்டாக்கி ஊர்ப் பஞ்சாயத்தார் தர்க்கம் செய்தார்கள். அன்று எனக்குப் பேச வாயில்லை; உன்மேல் ஆணையிட்டுச் சொல்கிறேன் அக்கா. நான் விஷம் வைக்கவில்லை. என்மேல் பௌஜ்தாரனுக்குச் சந்தேகமேயில்லை. நான் இப்பொழுது வாதி தெரியுமா?' என்று பாபு சாஹேப் தான் குற்றவாளி அல்ல என்பதைத் தெளிவாகச் சொன்னுன்.

'அப்படியானுல் விஷம் கொடுத்தவர்களுக்குத் தூக்கு தண்டனை வாங்கிக் கொடுக்கும் மகாராசன் நீதான் என்று சொல்லு.'

'ஆமாம்' என்றுன் பாபு சாஹேப்.

'பாபு என்னவென்று பிராது கொடுத்துவிட்டு வந்திருக்கிறுய்? யார்மேல் சந்தேகம் என்று சொன்னுய்?' என்று புத்லாபாய் சந்தேகத்துடன் கேட்டாள்.

'வேறு யார்? பெரியப்பா குத்தகைக்குப் பிடித்த நிலம் எல்லாம் தனக்கே வரவேண்டும் என்று தாதாதான் விஷம் வைத்திருக்கவேண்டும். இந்தச் சந்தேகம் பௌஜ்தாருக்கு வந்திருக்கிறது' என்றுன் பாபு சாஹேப்.

'அப்படியானுல் தாதாவுக்குத் தூக்குத் தண்டனை கொடுத்து விடுவார்களா?'

'கொடுக்காமல் எப்படி விடுவார்கள் அக்கா?'

இதற்குமேல் புத்லாபாயால் தாங்க முடியவில்லை. பயத்தால் அவள் முகம் வெளுத்தது.

அவள் அங்கே நிற்கவில்லை. தலைப்பால் முகத்தை மூடிக் கொண்டு நேராகத் தன் அறைக்குப் போனாள். படுக்கையில் விழுந்து புரண்டாள். மனம் தேறும் வரையில் அழுதாள். பொங்கி வந்த துக்கத்தின் வேகத்தைக் குறைத்துக்கொள்ள முயன்றாள்.

இரவு இரண்டு மணி அடித்தும்கூடத் தூங்காமல் புத்லாபாய் புரண்டுகொண்டிருப்பதை நடுவில் எழுந்திருந்து வந்த யமுனா பார்த்தாள். உள்ளே வந்தாள்

'என்னங்க அம்மா? தூங்கவில்லையே. என்ன கவலை?' என்று ஆதரவுடன் கேட்டாள்.

'தலைநோவு அதிகமாய் இருக்குது யமுனா. இப்பொழுது தான் தொடங்கியிருக்கிறது. ஆகையால் விடியற்காலையில் வந்து எழுப்பாதே' என்றாள் புத்லாபாய்.

'உங்களுக்கு முடிந்தபோது எழுந்திருங்கம்மா. நான் ஏன் எழுப்பறேன். ஆனா ஒண்ணு. உங்க முகத்தைப் பார்த்தா ஏதோ கவலைப்படற மாதிரி இருக்கே.'

'யமுனா நீ எனக்கு அக்கா மாதிரி. நானா மாமாவுக்கு விஷம் வைச்ச சங்கதி உலகத்துக்கெல்லாம் பரவிட்ட மாதிரி ஆயிட்டுது' என்றாள் புத்லாபாய். குரல் தழுதழுத்தது.

'சீ விடுங்கம்மா. என்ன வார்த்தை சொன்னீங்க. அந்த ரகசியம் உங்களுக்கும் எனக்கும்தான் தெரியும். மூன்றாம் பேருக்குத் தெரிந்திருந்தால் என் நாக்கை அறுத்துக் கொடுத் திடறேன்' என்றாள் யமுனா.

'இப்போ அந்தக் கஷ்டம்தான் வந்திருக்குது. நாளைக்கு பௌஜ்தார் கூப்பிட்டுக் கேட்டால் நீ சொல்லாதிருப்பாயா, யமுனா?' என்றாள் புத்லாபாய்.

'அம்மா! என்னிக்கும் என்னைக் கண்ணுக்குள்ளே வைச்சுக் காப்பாத்தினே. உன் மரியாதையைக் காக்க என் உயிரையே கொடுப்பேன். இவ்வளவு ரகசியமான செய்தியை மட்டும் சொல்லமாட்டேன்' என்றாள் யமுனா.

'நீ உண்மையைச் சொல்லாட்டி பாபு சாஹேப் ஜெயிலுக்குப் போகும்படியாயிருக்கும்' என்றாள் புத்லாபாய்.

'அது ஏனம்மா?' என்று கேட்டாள் யமுனா.

'நாஞ மாமாவுக்கு விஷம் வச்சவ நீதான்னு பௌஜ்தார் முன்ஞல் அவன் சொல்லிட்டு வந்திருக்கான்' என்ருள் புத்லாபாய்.

'ஏனம்மா? இந்தச் சங்கதியை நீயே பாபு சாஹேபிட.ம் சொல்லி ஆபத்தைக் கொண்டுவந்துவிட்டாயா என்ன?' என்று கேட்டாள் யமுஞ.

'உன்மேல் ஆணெ யமுஞ. நான் சொல்லலே. தாதா விஷத்தைக் கொண்டுவந்து உன் கையில் கொடுத்து நாஞ மாமாவுக்கு வைக்கச்சொல்லி இருக்கவேண்டும் என்று பிராது கொடுக்கும்படி பௌஜ்தார் சொன்ஞராம். பாபு கொடுத்துத் தொலேச்சிருக்கான். அவன் அப்படிக் கொடுக்காவிட்டா, பாபுவை ஜெயிலுக்கு அனுப்பிச்சுடுவாங்களாம்' என்ருள் புத்லாபாய்.

'சிவசிவா! முன்னப் போஞ கடிக்குது; பின்னே வந்தா உதைக்குது. என்ன சங்கடம் வந்திடுச்சம்மா? இதுக்கு நீதான் வழி சொல்லஞும்' என்று பயத்துடன் சொன்ஞள் யமுஞ.

'உனக்குத் தெரிஞ்ச உண்மையைச் சொல்லிடு' என்ருள் புத்லாபாய்.

'என்னே வெட்டிப் போட்டாலும் என்ஞல் இது முடியாதம்மா. நாலுபேர் நடுவிலே உன் பேரைக் கெடுத்தால் எனக்கு என்ன வரும்மா?' என்ருள் யமுஞ.

'யமுஞ, தெரிந்தோ தெரியாமலோ தப்பு நடந்துவிட்டது. என் பேச்சைக் கேட்டு ஒரு உசிரைக் கொன்னதே போறும். இன்ஞெரு உசிர் தாதாவுடையது. அவன் உசிரையும் குடிச்சிட்டா கடவுளுக்கு என்ன பதில் சொல்றது. யமுஞ, தாதாவின் பெயரைச்சொல்லி சாட்சி சொன்ஞல் என்னேக் கொன்னு தின்ன பாவம் வந்துடும்' என்ருள் புத்லாபாய்.

'அம்மா! உன் தைரியம் ரொம்பப் பெரிசு. உன் மனசும் ரொம்பப் பெரிசு. எங்களுக்கெல்லாம் என்ன தெரியும்? நீ சொன்னபடி நடந்துக்கறேம்மா. கவலேப்படாதே' என்ருள் யமுஞ.

'சும்மா நடந்ததைச் சொல்லு. எதையும் மறைக்காதே' என்ற புத்லாபாய் இனிமேல் பேச முடியாது என்பதுபோல் மறுபுறம் திரும்பிப் படுத்துக்கொண்டாள். யமுஞ இந்தச் சம்பாஷணேயால் ஆடிப்போய்விட்டாள். ஏதாவது வழிசெய்து புத்லாபாயைக் காப்பாற்ற முடியாதா? என்று அவள் மனம் கவலேயுற்றது. விவகாரம் இவ்வளவு சிக்கலாகிவிடும் என்று அவள் நினேக்கவில்லே. மேலே ஒன்றும் புரியாமல் தன் படுக்கையை நோக்கி நடந்தாள்.

புத்லாபாயின் மனம் தவியாகத் தவித்தது. தான் செய்த பாவம் தன்மேலேயே வெறுப்பைக் கொடுத்தது. இது வரையிலும் அந்தப் பாவத்தை மறைத்து வாழ்வது சாத்தியமாக இருந்தது. ஆனால் இப்பொழுது இன்னும் ஓர் உயிர் அந்தப் பாவத்திற்கு பலியாக வேண்டும் என்றால் மனம் ஒப்பவில்லை. தானாவைக் கொன்ற நினைவினால் உண்டான துக்கம் அவளை நிழல் போல் தொடர்ந்தது. அதை மறக்க முடியவில்லை.

நானாவைக் கட்டாயம் கொன்றிருக்கத்தான் வேண்டுமா? ஆம். அது தவிர்க்க முடியாததென்று அப்போது அவள் மனம் நினைத்தது. அந்த நிலையைப் பச்சாத்தாபம் மூண்ட இந்தப் பின்னணியில் விமர்சிக்கத் தொடங்கினாள்.

ஆம். அது ஒரு நோக்கில் தவிர்க்க முடியாததாகத்தான் இருந்தது. அதற்குரிய காரணங்கள் எவ்வளவு பலம் வாய்ந்தன வாக இருந்தன என்பதை நினைக்கவே ஆச்சரியமாக இருந்தது. சிமணாவின் பருவமும் மனத்தைக் கவரும் அழகும் நானாவின் கொலைக்குக் காரணமென்றால் யாரேனும் நம்புவார்களா? இந்த நாடகத்தில் பாபு சாஹேப் கீசகனுடைய பாத்திரத்தை ஏற்றிருந்தான். தன்னை மணந்துகொள்ள வேண்டுமென்று சிமணாவிடம் சொல்லி உற்சாகப்படுத்தும்படி புத்லாபாயைத் தொந்தரவு செய்தான். அவள் அதற்குச் சம்மதிக்கவில்லை. அநாயாசமாக இந்த நாடகத்தில் மற்றொரு பாத்திரம் புகுந்தது. படதையா ஆலோசகனாக வந்தவன் தானே வேடதாரியாக வந்துவிட்டான். சிமணா அவனுக்குப் பலியானாள். சிமணாவின் மானத்தைக் காக்க புத்லாபாய், பாபு சாஹேபைக் கெஞ்சவேண்டி இருந்தது. ஆனால் பாபு சாஹேப் இப்போது கல்யாணத்திற்கு ஒப்புக்கொள்ளவில்லை. சிமணா திசை தெரியாமல் தவித்தாள். அவள் எவ்வளவு தான் கண்ணீர் சொரிந்தும் புத்லாபாய் அவளுக்கு உதவ முடியவில்லை.

ஊருக்குப் போயிருந்த நானா திரும்பிவிட்டான். முதலில் அவனுக்கு விஷயம் புரியவில்லை. ஆனால் இயற்கை தானாகவே அதை வெளிப்படுத்திவிட்டது. படதையாவின் பேரை நானாவிடம் சொல்ல முடியவில்லை. நானாவுக்கு ஆத்திரம் வருவதற்கு அது தேவையாகவே இருக்கவில்லை. அவன் சந்தேகமெல்லாம் பாபு சாஹேபின் பேரில்தான். பாபு சாஹேப் சிமணாவைக் கல்யாணம் பண்ணிக்கொண்டுதான் தீரவேண்டுமென்று நானா பிடிவாதம் பிடித்தான். தினந்தோறும் புத்லாவிடம் இதையே பேசிவந்தான். கோபித்துக்கொண்டான். புத்லாபாய் பேசாமல் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்தாள்.

ஆனால் ஒரு நாள் விஷயம் கைமீறிப் போய்விட்டது. நாஞ ஒரு முடிவுக்கு வந்துவிட்டான். 'இந்த ஜாகீரில் செய்யும் உத்தி யோகத்தால் என்னுடைய வாழ்க்கையே பாழாகிவிட்டது. கௌரவம் மண்ணுகிவிட்டது. இனிமேல் நான் இருந்தாலும் ஒன்றுதான்; இறந்தாலும் ஒன்றுதான். ஆனால் இறக்குமுன்பு மாளிகை பாழானலும் பரவாயில்லை. பழிவாங்கியே தீர வேண்டும்' என்று நிச்சயித்துக்கொண்டான். 'பாபு சாஹேபை ஒப்புக்கொள்ள வைக்கப் போகிருயா இல்லையா?' என்று புத்லா வுக்குக் கடைசிப் பாணம் விட்டான். அவள் உயிரைப் பிடித்துக் கொண்டு, 'முடியாது' என்ருள். இதைக் கேட்டவுடன் தலை சுற்றியதோ அல்லது கண்ணை இருட்டியதோ, கோபத்தால் மூளை குழம்பிவிட்டதோ. வெடவெடன்று நடுங்கியவண்ணம் கிழவன் தரையில் உட்கார்ந்துவிட்டான். புத்லாபாய் பிடிக்கப் போனுள். அவன் 'என்னைத் தொடாதே' என்று கத்தினன். இதையெல்லாம் கண்ட சிமஞ ஒரு மூலையில் உட்கார்ந்து வெள்ளமாகக் கண்ணீரைப் பெருக்கினுள். நாஞ அடக்கி இருந்த கோபத்தை யெல்லாம் நெருப்புப் போன்ற வார்த்தைகளால் சாபம் கொடுப்பதுபோல் பேசத் தொடங்கினன்.

'சொல்லுவேன் கேள் புத்லா. சிமஞவின் வாழ்க்கை பாழாகி விட்டது. இனிமேல் நான் யாரையும் லட்சியம் செய்யப்போவ தில்லை. உனக்கும் எனக்கும் உள்ள சம்பந்தம் என்ன என்பதை ஊருக்கெல்லாம் தெரிவிக்கப் போகிறேன்' என்ருன்.

புத்லாவின் மர்மத்தில் வேல் பாய்ந்தது. மாளிகை முழுதும் நாஞவின் பேச்சு எதிரொலிப்பதுபோல் கேட்கத் தொடங்கியது. மறைந்திருந்த குற்றம் இப்பொழுது புத்துயிர் பெற்றுப் பயமுறுத்தத் தொடங்கியது. நாஞவின் கோபமே அப்படித்தான். மராட்டா சர்தார்களின் ரத்தம் அவன் உடம்பில் இன்னும் ஓடிக் கொண்டிருந்தது. கௌரவம் உள்ளவன் உடையலாம்; இரண்டு துண்டாகலாம்; ஆனல் வளைந்து கொடுக்கக் கூடாது. இதுதான் அவனது வாழ்க்கைத் தத்துவமாக இருந்தது.

புத்லாபாய் திடீரென்று பயந்து படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள். உடம்பெல்லாம் நடுங்கிக்கொண்டிருந்தது. வெள்ளம்போல் கொட்டிய வேர்வையால் புடவை நனைந்து போயிற்று கண்ணீரால் தலையணை நனைந்துவிட்டது. எல்லா வற்றையும் மறந்துவிட நினைத்தாள். அது எப்படி முடியும்? அந்தக் காரிருளிலும் பழைய நிகழ்ச்சிகள் நூற்றுக்கணக்கான சித்திரங்களாகி மனக்கண் முன் தோன்றின. செய்த பாவத்தை இல்லையென்று மறுப்பது எப்படி? நாஞவின் கொலைக்குக் காரண

மான கதை இத்துடன் முடியவில்லை. வெகுதூரம் போய்விட்டது. அது தள்ளமுடியாத அழியாத உண்மையாக இருந்தது. அந்தப் பாபத்தின் அநுபவம் அச்சடித்தால்போன்று இருக்கும்போது அதன் பொறுப்பை மட்டும் எப்படி ஒதுக்க முடியும்? எழுதி அழிப்பதற்குப் பாபம் என்பது சிலேட்டில் எழுதிய எழுத்துக்களா? அவளுடைய உள்ளத்தில் பாபம் சாசனமாகவே செதுக்கப் பட்டிருந்தது.

நினைவு கையைப் பிடித்து உலுக்கியது. அவள் களைத்த பிரயாணியைப்போல் இஷ்டம் இல்லாமலேயே நினைவைத் தொடர்ந்தாள். அங்கே எதைப் பார்க்கப் போகிறோம் என்பது அவளுக்குத் தெரியாதா?

பாதள்ளி ஜாகீர்தாரான ராஜேஜிராவை மணந்துகொண்டபொழுது அவள் பதினாறு வயதுப் பெண். ஆண் குழந்தை பிறக்கவில்லை என்ற காரணத்தால் ராஜேஜிராவ் அவளைக் கல்யாணம் செய்துகொண்டார். மூத்த மனைவி லக்ஷ்மிபாய் அழுது ஆர்ப் பாட்டம் செய்தும் கல்யாணம் நடந்தேறியது.

அவள் புது மணப்பெண்ணாகப் பாதள்ளிக்கு வந்தபோது ஊர்வலமாக அழைத்து வந்தார்கள். அப்போது இரவு பத்து மணி. ஊருக்குப் பக்கத்தில் வரும்போது புதுமணத் தம்பதிகளை வரவேற்க ஜாகீர்தாரின் பரிவாரம் ஆஞ்சநேயர் கோவிலுக்குப் பக்கத்தில் வந்து நின்றது. இயற்கையான ஆவலினாலோ சிறுபிள்ளைத்தனமாக ஆசையாலோ விதியின் தூண்டுதலாலோ தெரியவில்லை! அவள் முகத்தின் திரையை விலக்கிப் பார்த்தாள். தீவட்டி வெளிச்சத்தில் எதைக் கண்டாள்? மலைபோல் உயர்ந் திருந்த பஞ்ச கல்யாணிக் குதிரைமேல் ஜாகீர்தாரின் சிலேதாராகிய நானா கையில் உருவிய கத்தியுடன் உட்கார்ந்திருந்தான். மேகவண்ணச் சரிகை அங்கவஸ்திரம், சுத்தமான நாகரிக அங்கி, காது வரையில் வளைந்து நீண்ட கூரிய மீசை இவைகளுடன் நானா காணப்பட்டான். இந்தக் காட்சி வரலாற்றுக் காலத்தை முந்திய பழைய சர்தார் ஒருவன் ஊர்வலத்தைப் பார்க்க வந்ததுபோல் இருந்தது.

அந்த ஒரு பார்வையே அவளுடைய வாழ்க்கை முழுவதையும் கவர்ந்துகொண்டது. நானாவுக்கு அப்பொழுது முப்பது வயதிருக் கலாம். இயற்கையாகவே தன் அழகும் அவனைக் கவர்ந்து இருக்க வேண்டும். ஊர்வலத்தில் கண்ட நானாவின் தோற்றம் இப்பொழுதுகூட அவள் மனத்தை உலுக்கியது. மாளிகையில் நானாவைப் பல சந்தர்ப்பங்களில் காண நேர்ந்தது. பார்த்தவுடன் உள்ளம் சிலிர்த்தெழும்.

மற்றொரு நாள்! அந்த நிகழ்ச்சியை எப்படி மறப்பது? கனகேரியிலிருந்து அவளுடைய தந்தைக்கு உடம்பு சரியில்லை என்ற செய்தி வந்தது. அவள் ஊருக்குப் போக வேண்டுமென்று பிடிவாதம் செய்தாள். ராஜேஜிராவ் நாணுவை அழைத்து, புத்லாபாயை ஊரில் கொண்டுபோய் விட்டுவிட்டு வரச் சொன்னார். வண்டியில் அவள், யமுனா, நாணு மூன்று பேரும் புறப்பட்டார்கள். வெயில் படக் கூடாதென்று வண்டிக்குத் திரை போட்டிருந்தார்கள். வண்டி பாதி வழி வந்தபோது நடுப்பகல் வெயில் தகித்தது. சுற்றுப்புறம் வெட்டவெளி யெல்லாம் வெயிலால் மயங்கிவிட்டது போன்று மயங்கியிருந்தது. வண்டியில் யமுனா தூங்கி வழிந்துகொண்டிருந்தாள். வண்டியின் ஆட்டத்தால் புத்லாபாய் நாணுவுக்கு மிக நெருக்கத்தில் வந்திருந் தாள். மனத்தில் என்ன கீழ்த்தரமான எண்ணம் தோன்றியதோ! யமுனாவைப் படுத்துக்கொள்ளச் சொன்னாள். யமுனா தாராள மாகப் படுத்துக்கொள்ளட்டும் என்று தான் இன்னும் நாணுவின் பக்கமாக நகர்ந்தாள். காலை நீட்டும்போது, தலைப்பை இழுத்துப் போர்த்துக்கொள்ளும்போது, வண்டியின் ஆட்டத்தால் திரும்பி உட்காரும்போதெல்லாம் தவறாமல் நாணுவின் உடம்பின்மேல் அவள் உடம்பும் பட்டது. ஆசைத் தீ தானே மூண்டது. உடனே கண்ணில் ஆசை தோன்ற நாணுவைப் பார்த்தாள். கண்ணெல்லாம் அவனுடைய உருவத்தையே நிரப்பிக்கொள்ள வேண்டும்போலிருந்தது.

நாணுவும் அந்தப் பார்வையைப் புரிந்துகொண்டான். இல்லாவிட்டால் அவன் ஏன் அவ்வளவு தீவிரமாக யோசனையில் ஆழ்ந்துவிடுகிறான்? இருவருடைய மனமும் ஒரே விஷயத்தைப் பற்றிச் சிந்தித்தன. சும்மா இருக்கமுடியவில்லை. பேசத் தொடங்கினார்கள். ஏதேதோ அர்த்தமற்ற பேச்சுக்கள். எண்ணத்தின் ஓட்டத்தை வாயால் சொல்ல முடியவில்லை. அந்த வேலை வேறு முறையைக் கைக்கொண்டது. தோள்கள் ஒன்றோடொன்று இடித்துக்கொண்டன. அந்தத் தாக்குதலில் பல எண்ணங்கள் சுழன்றன.

போகும் வழியில் ஒரு சிற்றாற்றில் வெள்ளம் குறுக்கிட்டது. பாதி ராத்திரி வரையிலும் வழியிலேயே தங்க வேண்டிய தாயிற்று. வெள்ளம் ஒவ்வொரு கணத்துக்கும் அதிகமாயிற்றே தவிர குறையவில்லை. சூடேறிய உள்ளங்கள் இரவின் குளிர் காற்றால்கூட அமைதியை அடைவில்லை. நாணு பரபரப்புடன் வீணாக அங்குமிங்கும் அலைந்துகொண்டிருந்தான். விதி மனத்துள் ஆசைத் தீயை மூட்டிவிட்டுக் காத்துக்கொண்டிருந்தது. புத்லா

பாயே யமுனைவை வெள்ளம் குறைந்துவிட்டதா என்று பார்த்து வர அனுப்பினாள். வண்டிக்காரன் ஆற்றங்கரையிலேயே இருந்தான். யமுனா புறப்பட்டுப் போனாள்.

ஆம், அவள் போயிருக்கக் கூடாது. ஆனால் என்ன? நடக்க வேண்டிய நிகழ்ச்சி எட்ட நின்று காத்துக்கொண்டிருக்கும்போது நாம் அதைத் தொட்டாலே போதும். நடக்க வேண்டியது கணத்தில் நடந்துவிடும். அப்போது நாணுவுக்குப் பதிலாக உலகத்தையே கொடுத்தால்கூட அவளுக்கு வேண்டியிருக்கவில்லை. அந்தச் சுக ஸ்பரிசம், பார்வை, அணைப்பு எல்லாம் இப்பொழுது வெறுப்பாகத் தோன்றினாலும் அப்பொழுது சொர்க்க போகமாய் இருந்தது. அன்று நாணு அவளுக்குச் சொந்தமாகிவிட்டான். கிடைத்தற்கரிய பொருள் ஒன்று உள்ளங்கையில் அகப்பட்டது.

ஆனால் அந்த மயக்கம் தெளிந்தபின் அவளுக்கே மிகவும் சங்கடமாயிருந்தது. பாவமோ புண்ணியமோ? உடனே துக்கம் மூண்டது. மறுபடியும் வண்டி புறப்படும்போது நாணுவைப் பார்க்கவே கூச்சமாயிருந்தது. நாணுவும் வண்டியின் வெளிப்புறமாகவே பார்வையைச் செலுத்தி ஏதோ யோசனையில் ஆழ்ந்துவிட்டான்.

அப்புறம் கனகேரிக்குப் போய்ச் சேர்ந்தபோது புத்லாவின் தகப்பனார் இறந்துவிட்டார் என்று தெரியவந்தது. என்ன இடி போன்ற செய்தி. பிறகு சில மாதங்களுக்குள்ளேயே வேட்டையாடும்போது குதிரையிலிருந்து விழுந்ததே சாக்காக ராணோஜிராவும் இறந்துவிட்டார். ஆபத்துக்கள் சேர்ந்தே வந்தன. இவையெல்லாம் தான் செய்த பாவமே என்று அப்பொழுது தோன்றாமலில்லை. ஆனால் பிற்காலத்தில் பிடிவாதமாக நன்னெறியில் வாழ்ந்து காட்டினாள்.

ஆம். அவளுடைய பிற்கால வாழ்க்கை ஒரு கடின விரதமாக இருந்தது. நாணுவின் தாம்பத்திய வாழ்க்கையைத் தான் கண்ணால் பார்த்தும் பேசாமலிருந்தாள். இருவரும் நடந்த விஷயத்தை மறந்துவிட்டது போன்றே நடந்துகொண்டார்கள்.

நாணு மாளிகையிலேயே தங்கி வாழத் தொடங்கினான். அவனுடன் சிமணாவும் வந்தாள். தன் வாழ்வு நிறைவு பெற்றதாகப் புத்லபாய் திருப்தியுற்றாள். ஆனால் வேறு விபரீதம் காத்திருந்தது. தன் பாதுகாப்பில் சிமணாவை விட்டுவிட்டுப் போனபோதுதானா அந்த ஆபத்து நேர வேண்டும்? தன்னுடைய

துரதிர்ஷ்டத்தின் நிழல் அவள்மேலும் விழுந்துவிட்டதோ என்று புத்லாபாய் வருந்தினாள். நாஞ வந்த பின் மகளுடைய நிலைமையைக் கண்டு நெருப்பாகக் கொதித்தெழுந்தான். புத்லாபாய் பொறுப்பைத் தள்ளிவிட முடியவில்லை. உண்மையைச் சொல்லவும் முடியவில்லை. இதற்கிடையில் பாபு சாஹேப் பலியாக நேர்ந்தது. நாஞவுக்கு அவன்மேல்தான் சந்தேகம். சிமஞவைக் கற்பழித்த குற்றத்திற்காக அவளை மணஞ் செய்துகொள்ள வேண்டுமென்று வீம்பு செய்தான். விவகாரம் முற்றிப்போனதால் புத்லாபாய் நாஞவை நயத்தால் கெஞ்சவேண்டியிருந்தது.

இந்த நினைவுகளைப் புத்லாபாயால் தாங்கவே முடியவில்லை. மறந்துவிட நினைத்தாள். ஆனால் அது அவள் வசத்தில் இல்லை. மனம், புத்தி, மூளை எல்லாமே தான்தோன்றித்தனமாக நடந்துகொண்டன. பார்க்க வேண்டாமென்று நினைத்த தோற்றங்கள் கண்ணெதிரே வந்து கூத்தாடின.

அவள் கற்புடன் வாழவேண்டுமென்று இருந்த பிரதிக்ஞையை மீறவேண்டியதாயிற்று. நாஞ தனக்குச் சொந்தமாகிவிட்டால் இந்த விவகாரத்தின் கசப்புப் பாதிக்குப் பாதியாகக் குறைந்துவிடும் என்பது உள்ளூற இருந்த ஆசை. நாஞவின் மனத்தை வசப்படுத்திக்கொள்ளலாம் என்று நினைத்தாள். தனக்கு உடம்பு சரியில்லை என்று சொல்லியனுப்பினாள். நாஞ அறைக்குள் புகுந்தான். இரவு நேரம், உண்மையில் அவளுக்கு நோயா? ஆம். அவள் அசையக்கூடச் சக்தியற்றிருந்தாள். அந்த நோய் தீர்வதற்கு நாஞவின் கை படவேண்டும். அன்றிரவு நாஞ மறுபடியும் அவளுக்குச் சொந்தமாகிவிட்டான்.

ஆனால் அவன் நினைத்தது ஒன்று; நடந்தது ஒன்று. நாஞ அவளுக்கு வசமாகிவிட்டான். அதனாலேயே புத்லாபாயின்மீது அதிகாரமும் அதிகமாயிற்று. இவள் எந்தச் செயலால் லாபம் பெற நினைத்தாளோ அந்த லாபம் நாஞவுக்குக் கிடைத்துவிட்டது. அன்று முதல் அவளைப் பீடை பிடித்துக்கொண்டது. சிமஞ தாயான செய்தி வெளிவந்தபோது அவளை பாபு சாஹேப் தான் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று வற்புறுத்தினான். இவள் வெகுதூரம் சொல்லிப் பார்த்தாள். நாஞவின் பொறுமை எல்லை மீறியது.

தன் மகளுடைய வாழ்க்கை பாழானதால் கொதித்தெழுந்த நாஞ தங்கள் இருவருடைய தொடர்பையும் வெளிப்படுத்த நினைத்தான். அவனுக்கு யாரும் லட்சியமில்லை, வெட்கமுமில்லை. தானும் தன் மகளும் மட்டும் ஏன் அழிந்துபோக வேண்டும். பார்க்கப்போனால் புத்லாவும் இந்தக் கொடிய

விவகாரத்திற்குக் காரணமாக இருக்கிருள். அவளுடைய தம்பி ஒப்புக்கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் அவளே அவனைச் சம்மதிக்க வைக்கவேண்டும். ஊர் சிரிக்க என்றென்றும் அவமானத்தை அநுபவிக்க வேண்டும் என்று நினைத்தான்.

புத்லாபாயால் இதைத் தாங்க முடியவில்லை. அவள் பாபம் செய்தது நிஜந்தான். ஆனால் இதுவரை அது மூடிய கைக்குள் இருந்தது. அதைத் திறந்தால் ஏராளமான அவமானச் செயல்கள் அவள்முன் வந்து நிற்கும். இதுவரையிலும் அவள் கற்பரசி என்ற பெயர் வாங்கியிருந்தாள். ஜாகீரிலுள்ள மக்கள் எல்லாம் பக்தியோடு தலைவணங்கினார்கள். இந்த ரகசியம் அம்பலமானால் பாதள்ளியில் வாழ முடியாது. ஏன், உலகத் திலேயே தனக்கு நிற்க இடமில்லை. புத்லா தவித்தாள். இதிலிருந்து எப்படி மீள்வது?

நானாவைக் கொல்வது ஒன்றேதான் வழி என்று தோன்றியது. அதுவும் குற்றந்தான். நாளைக்கு இறந்தபின் கோரமான நரக தண்டனை காத்திருக்கும். அதுவும் உண்மைதான். ஆனால் புத்லாபாய்க்கு இந்த மானக்கேட்டால் ஊரில் சொல்லும் பழி என்ற நரகத்தின் முன் உண்மை நரகம் பரவாயில்லை என்று தோன்றியது. இந்த ஜனங்கள் பிறர் செய்த குற்றத்தில் ஏன் இவ்வளவு அக்கறை காட்டுகிறார்கள்! ஜீவன் தான் செய்த பாவத்தை அநுபவித்துத் தன்னைத்தானே தண்டித்துக்கொள் கிறது. அப்படி இருக்க மற்றவர்களுக்கு என்ன கவலை? ஆனால் ஜனங்கள் கேட்கிறார்களா?

இப்படி நினைத்த புத்லாபாய் ஒரு நாள் மற்றொரு குற்றத் துக்கும் தயாரானாள். அன்றிரவு நானாவுக்குத் தானே சாப்பாடு அனுப்பினாள். பொழுது விடியுமுன் நானா இறந்துவிட்டான். அப்பொழுதே அந்த விவகாரம் முடிந்துவிட்டது. வாழ்வு கெட்டுப்போனாலும் சிமனா படதையாவின் பாதுகாப்பில் இருந்தாள். புத்லாபாயின் கண்ணில்கூடப் படவில்லை. இந்தக் கதையின் ஒவ்வொரு விவரமும் நானாவின் உடலோடு எரிந்து சாம்பலாகிவிட்டது. இனி, தான் இறந்த பிறகல்லவா அதற்குப் பதில் சொல்லவேண்டும் என்று கவலையற்றிருந்தாள் புத்லா.

ஆனால் பாபம் என்பது ரத்தபீஜ ராட்சசனைப் போன்றது. கொன்றால் சாகாத வஸ்து அது ஒன்றுதான். நூறு நானா சாகேபுக்கள் இறந்தாலும் பாபம் இறக்காது. அவள் இறக்கும் வரையில் அழியாது. இப்பொழுது தாதாவின்மேல் பழியாக வந்த சாக்கில் பிழைத்து வந்துவிட்டது. புத்லாவின் வாழ்வுக்கு

மற்ருெரு சிக்கலான பிரச்னே. அதற்குப் பதில் சொல்லாமல் தப்ப முடியாது. பதில் சொன்ஞல் பழைய குற்றத்திற்கு மற்ருெரு குற்றம் துணையாக நிற்கிறது. ஒன்றைவிட ஒன்று கோரம். இதற் கென்ன உபாயம்? அப்பொழுது நாணுவின் கொலேயே தப்ப வழியாயிருந்தது. இப்பொழுது?

ஆம். இப்பொழுது, அது ஒன்றுதான் வழி. நாணுவின் வழி தான் அவளுக்கும் வழி. ஒரு விதத்தில் இருவருடைய வாழ்க்கையின் அதிர்ஷ்டமும் ஒன்ருேடொன்று இணைந்தே இருந்தது. அவற்றுக்கு விடுதலேயே இல்லே. உடம்பும் மனமும் காததூரத்தி லிருந்தாலும் உயிர்கள் ஒன்ருக இணைந்திருந்தன. அந்தப் பாபத்தை மறுமுறை செய்யக்கூடாதென்று அவள் கண்டிப்பாக இருந்தாள். அது எவ்வளவு நாள் நீடித்தது? புத்லாவின் காமம் நாணுவின் நன்மை தீமைகளேக் கவனித்துப் பார்த்து வந்தது. திருஷ்டி பட்டுவிட்டதோ என்னவோ? ருக்குமா புண்ணியம் செய்தவள். சுமங்கலியாக இறந்துவிட்டாள். நாணு அநாதையாஞன். இவள் அவனே அப்போது மாளிகையிலேயே வந்திருக்கும்படி ஏன் வற்புறுத்திஞள்? முதலில் நாணு சம்மதிக்க வில்லே. பிறகு மகளுக்கு வரன் பார்க்கப் போகும்போது சிமணுவைப் புத்லாபாயிடம் விட்டுச்சென்ருன்.

புத்லா சிமணுவைச் சொந்தப் பெண்ணுகவே ஏற்றுக் கொண்டாள். மற்றவர்கள் அதை அவளுடைய உதார குணமாகவும் அன்பின் ஆழமென்றும் நினேத்தார்கள். ஜாகீர் குடும்பத்தின் பெருந்தன்மைக்கு ஏற்றபடி நடந்துகொண்டாள் என்று புகழ் பரவியது. அதன் ரகசியம் அவளுக்குத்தான் தெரியும். இவளுடைய ஆதரவுக்கு நாணு கடன்பட்டிருக்க வேண்டும். ருக்குமா இறந்தாலும் நானிருக்கிறேன் என்று காட்டிக்கொள்ள வேண்டி இருந்தது. நாணு வீடில்லாமல் பரதேசியாக அலேயக் கூடாதென்று கருணேகாட்ட வேண்டும். இனிமேல் குடும்பம் ஒன்ருகிவிட்டதென்று சொல்ல வேண்டும் என்ற நினேவுகள்.

மாளிகைக்கு வந்த பின்னும் நாணு வெளிப்புறத்து அறையி லேயே படுத்துக்கொள்வான். எந்தவிதச் சலுகைக்கும் இடமில்லே. அவன் எதிலும் ஆசையில்லாமல் இருந்தான். ருக்குமாவின் சாவிஞல் சுகத்தை வெறுத்தான், முதலில் இருந்த ஆசையோ உற்சாகமோ இப்பொழுது அவனுக்கு இருக்கவில்லே. அதைக் கண்டு இவள் என்ன நினேத்தாள்? இந்த வைராக்கிய மெல்லாம் அழிந்துபடக் கூடியது என்றுதான் நினேத்தாள். ராஜேஜிராவ் இறந்த பின் இதே போன்ற வைராக்கியமெல்லாம்

அவளுக்கும் வரவில்லையா? அது இப்போது எங்கே போயிற்று? நாணுவைப் பார்க்கும்போதெல்லாம் மனத்தில் சூடு போட்டது போல் ஏன் துன்பம் உண்டாகிறது?

அதன் விளைவுதான் இரண்டாந்தரம் நேர்ந்த சந்திப்பு. அது மேலும் கேட்டை விளைவித்தது. நாணுவையே பலி வாங்கியது. இப்பொழுது என்னதான் செய்வது?

புத்லாவின் நினைவுத் தொடர் இங்கே தடைபட்டது. தன்னுயிர் நாணுவின் உயிரை ஆதரவாகக் கொண்டிருந்தது உண்மையானால் தன் அன்பு மனப்பூர்வமாக இருந்தால் நாணுவின் வழிதானே தனக்கும் வழி. நாணுவின் உயிரைப் பலி வாங்க, அவள் மனத்தில் தோன்றிய கொடிய திட்டத்திற்குக் காரணமில்லாத இந்த அன்பே காரணமாக இருக்குமோ? அளவற்ற அன்பின் கொடூரமே அப்படித்தான். தான் நிலைத்து நிற்க அது உயிரையே விழுங்கிவிடும். ஆனால் இந்தச் சொல் நாணுவைக் கொல்லும் அளவுக்கு உண்மையாக இருக்காது. துர்மரணம் அடையவேண்டும் என்ற சாபத்தோடு நாணுவும் அவளும் பிறந்திருக்கும்போது வேறு யோசனைக்கு இடமேது? ஒரு கணம் புத்லாவின் மனக்கண்ணெதிரில் தங்கள் இருவருடைய வாழ்க்கை ரகசியமும் வந்து நின்றது. இப்பொழுது சாவைப் பற்றிய பயம் தோன்றவில்லை. அது வெளியிலிருந்து வந்து நெருக்கவில்லை. உயிர் தன் விருப்பத்தை இறந்துதான் சாதிக்க வேண்டியிருந்தது.

புத்லா எழுந்திருந்தாள். விடியற்காலம் ஐந்து மணி. உலகெல்லாம் சுகமான உறக்கத்தில் ஆழ்ந்து கிடந்தது. சன்னற் கதவைத் திறந்ததும் மங்கிய ஒளி உள்ளே பரவியது. சுவரில் மாட்டப்பட்டிருந்த ராஜேஜிராவ் படத்திற்குக் கைகூப்பினுள். வேட்டையாடிய சிறுத்தை ஒன்றைக் கீழே கிடத்திக் கையில் துப்பாக்கியுடன் நின்றுகொண்டிருந்த மாதிரி இருந்தது அப் படம். சிறிது நேரம் கண் இமையால் அதையே பார்த்தாள்.

அவள் ஓசைப்படாமல் வெளியே வந்தாள். மாட்டுக் கொட்டகைக்குப் போய் குதிரையின் பின்னங்கால்களைக் கட்டும் கயிற்றை அவிழ்த்துக்கொண்டு அறைக்குள் வந்து கதவைத் தாழிட்டுக்கொண்டாள்.

கோழி கூவியது. கோபாலகிருஷ்ணன் கோயிலில் மணிகள் ஒலித்தன. சோளம் அறைக்கும்போது குடும்பப் பெண்கள் பாடும் இனிய குரல் காதில் ஒலித்தது. வாழ்க்கை விழித்துக் கொண்டது. பொழுது விடிந்த பின் எல்லாம் ஓட்டந்தானே?

யமுனு எழுந்திருந்து வந்து புத்லாபாய் சொன்னதையும் மறந்து பழக்கத்தின் தோஷத்தால் அறைக் கதவைத் தட்டினுள். 'இருட்டோடு வந்து எழுப்ப வேண்டாம்' என்று அவள் சொன்னது நினைவுக்கு வந்தது. அப்படியே வெந்நீர் அறைக்குச் சென்றாள்.

## 12

தாதாவின் விஷயத்தில் பௌஜ்தார் கொண்ட கடும் பகையைக் கண்டு படதையா பெருமை கொண்டார். நாணுவின் கொலையைத் தாதாவின்மேலேற்றி அவனைத் தூக்கிலேற்றும் திட்டத்தை உருவாக்கப் பௌஜ்தார் முனைந்தார். 'தாதா கொண்டுவந்து கொடுத்த விஷத்தைத் தான் கொடுத்ததாகப் பொய்ச் சாட்சியான யமுனு சொல்வாள். நாணு விஷமிட்டுக் கொல்லப்பட்ட போதிலும், தாதாவைக் காப்பாற்றுவதற்காக, கௌடர் மரண ரெஜிஸ்தரில் சாவுக்குக் காரணம் மார்பு நோய் என்று பொய்க் காரணம் எழுதியிருக்கிறார். குற்றத்தை மறைத்த தற்காக அவர் சிறைக்குச் செல்வது நிச்சயம்' என்ற உற்சாகத்தில் படதையா மாளிகைவரை போய், யமுனுவைச் சாட்சி சொல்லும்படி தூண்ட, புத்லாபாயிடம் சொல்ல வேண்டும் என்று பாபு சாஹேபிடம் சொல்லிவிட்டு மடத்திற்குத் திரும்பினர். அப்பொழுது இரவு மணி பன்னிரண்டு ஆயிற்று. அவருடைய சீடர் கூட்டம் மடத்தில் அவருக்காகக் காத்திருந்தது.

படதையா அவர்கள் முன்பு பெருமையுடன், 'தாதாவின் வாழ்வு முடிந்தது என்று தெரிந்துகொள்ளுங்கடா! பௌஜ்தாருக்கு முன் எந்த ஆண்பிள்ளை நிமிர்ந்து நிற்க முடியும்? இன்னும் பார்! அந்தக் கௌடன், அந்தப் பஞ்சாயத்தார்கள், அந்தத் தாதா எல்லோரும் மண்ணைக் கவ்வப்போகிறார்கள். என்னுடை தந்திரத்தைப் பாருங்க மக்களே!' என்று நாக்கை நீளவிட்டார்.

மடத்தில் ஒரு மூலையில் கஞ்சாக் குழலைத் தேய்த்துக்கொண்டு தலையாரி கெஞ்சன் உட்கார்ந்திருந்தான். அவன் ஒரு விசித்திர மான வேதாந்தி. வைராக்கியம் பெற்றவன் என்று சொல்லலாம். நாள் முழுதும் மடத்தில் அதே மூலையில் உட்காருவது அவனது வாடிக்கை. அவனுக்கிருந்த ஆழ்ந்த உலக அனுபவம் அந்த ஊரில் பாளாச்சாருக்குக்கூட இல்லை. இரவும் பகலும் கஞ்சா தயாரித்துக்

குடித்துக்கொண்டே பேசத் தொடங்கினான் என்றால், அவனைத் தடுப்பது என்பது யாராலும் முடியாது. தாதாவுக்கு ஆபத்து வந்ததைக் கேட்டதும் அவன் உள்ளம் நொந்தது.

'நெசமாவே தாதாமேலே கேசு போடுவாங்களா சாமீ!' என்று கேட்டான்.

'பொய் சொல்லறத்துக்கு நான் என்ன சுடுகாட்டுச் சித்தன் என்று நெனச்சயா, கெஞ்சா?' என்று கிண்டலாகக் கேட்டார் படையாச்சி.

'அப்படி ஏன் சொல்றீங்க சாமீ? இடிச்சு முழங்காம வந்தது மழையல்ல; செனையாகாதது மாடல்ல; ஒருத்தர் முன்னாலே ரகசியம் சொல்றவன் போலீஸ்காரனல்ல; அந்தப் பேச்சு நெனவு வந்துச்சுங்க. கையிலே காசு வுளுந்தா இவங்க வாய்க்கெல்லாம் பூட்டு வுளுந்துடுங்க. காலேல பாக்கலீங்களா? அந்தச் சங்கனைப் பிடிச்சு உட்காத்தினான். துட்டுக் கையிலே வுளுந்ததும் கப்சிப்னு வுட்டுட்டான். நாலு காசு பிடுங்க வாயிலே எதுவேணாலும் பேசுவாங்க சாமீ' என்று கெஞ்சன் தர்க்கம் செய்தான்.

கெஞ்சனுடைய பேச்சில் உண்மை இல்லை என்று சொல்ல முடியாது. தலை நரைத்த கெஞ்சனுக்கு அதிகாரிகளிடம் இருந்த பழக்கம் படையாச்சிக்குக்கூட இல்லை. திருட்டுத்தனமாகக் கள், சாராயம் முதலியன இறக்குபவர்களைப் பிடித்த அப்காரி இன்ஸ்பெக்டருக்குச் சக்கிலியக் கங்கியின் சிநேகம் செய்துவைத்து அவனுடைய மாமனாராக மாறித் தாராளமாகச் சாராயத்தைக் காய்ச்சிவந்த கதையைக் கேட்டுச் சிரிக்காதவர்களே இல்லை. இதற்கு முன்பு பௌஜ்தாராய் இருந்த மாருதிராவுக்கு ஏதோ ஒரு மரப்பட்டையிலிருந்து தயாரித்த கள்ளைக் கொடுத்து ஜப்தி செய்த திருட்டுச் சாராயத்தைத் திருப்பி வாங்கியது, கள்ளச் சாராயத்தை வாங்கிய ஹரிஜனச் சேரியில் இருந்த நித்யசுமங்கலி யான காசிக்குச் சேலை வாங்குவதற்காக பௌஜ்தார் தம் இடுப்பில் இருந்து பணம் எடுத்துக் கொடுத்தது எல்லாவற்றையும் கேட்டு எல்லோரும் ஆச்சரியப்படுவார்கள். ஒரு விதத்தில் கெஞ்சன் சர்க்கார் அதிகாரிகள் செய்த குற்றங்களை மறைக்கும் சித்ரகுப்தனாய் இருந்தான். இந்தக் குற்றங்களை மிக நெருக்கத்தில் கண்டதாலேயே அவன் வேதாந்தி ஆனான்.

'பக்ருதீன் லஞ்சத்துக்கு ஆசைப்படாத அரசாங்க அதிகாரி அல்ல. சட்டம் என்னும் பாக்குவெட்டியில் அகப்பட்டுக் கொண்டால் கௌடர் அவருக்குக் கனகாபிஷேகம் செய்யவும் பின்வாங்கமாட்டார். ஒரு வேளை பௌஜ்தாருக்கு லஞ்சம் கொடுக்கும் மோப்பம் கெஞ்சனுக்குத் தெரிந்திருக்குமோ?

இல்லாவிட்டால் அவன் ஏன் இப்படிப் பேசுகிறுன்' என்று படதையா சந்தேகித்தார். எப்படியாவது விஷயத்தை வெளிக் கொணர வேண்டும் என்று தீர்மனித்தார்.

'மண், பெண், பொன் இவை மூன்றும் சிவனுடைய மாயை. அதற்குச் சித்தர்களும் பக்தர்களும் அடிமையாகி நாய்போல் ஓடுவதைத் தெரிந்துகொள்ளாமலேயே பௌஜ்தார் காசு என்ருல் வாயைத் திறப்பார் என்று எப்படிச் சொல்கிருய் கெஞ்சா? பணத்தைத் தின்ருலும் குறிவைத்த வேட்டையை வலேபோட்டுப் பிடிக்காமல் விடமாட்டான் மனுஷன். அதனுலேதான் தாதாவின் கதையை முடித்துவிடுவான் என்று சொன்னேன்' என்று படதையா உபதேசிக்கும் தோரணையில் சொன்ஞர்.

தயார்ப்படுத்திய கஞ்சாவைக் குழாயில் அடைத்து அதன் மேல் காய்ந்த புகையிலேத் தூளே உதிர்த்து ஒழுங்கு செய்வதில் ஈடுபட்ட கெஞ்சனுக்குப் படதையாவின் பேச்சில் கவனமே இல்லே. கடைசி வாக்கியம் மட்டும் அவன் காதில் விழுந்தது. அது சரியன்று என்பதுபோல் தலேயை அசைத்து, ''எடுத்த வேலேயைச் சாதிக்கிறதுக்கும் நெஞ்சுரம் வேணும், சாமீ! இதுங்கள்ளாம் டிரஸ் மாட்டிட்டு, 'தஸ் புஸ்'னு பயமுறுத்திட்டு அலேயுதுங்க. அவங்க கையிலே அதிகாரம் இருக்குதுன்னு நாம குனிந்து சலாம் பண்ரோம். ஆனு அவங்க தைரியத்தைப்பத்தி இத்தினி பேர் நடுவிலே நீங்க சொல்ல வேணும். சொல்றேன் கேளுங்க. சோப்ளாங்கிச் சன்னனே இந்தப் பௌஜ்தாரின் கர்வத்தை யெல்லாம் இன்னிக்கு இறக்கிட்டான்' என்று பேச்சைப் பாதியில் நிறுத்தி, தீயாய்க் கனிந்த தேங்காய்ப் பஞ்சைக் குழாய் வாயில் வைப்பதில் முனேந்தான்.

கெஞ்சனுக்கு ஒரு கெட்ட பழக்கம் உண்டு. ஏதாவது ஒரு கதையை ஆரம்பிப்பான். பாதியில் நிறுத்திவிடுவான். கேட்பவர்கள் ஆவலால் துடித்துக்கொண்டிருப்பதுதான் அவனுக்குத் திருப்தி. இப்பவும் அதே கதைதான். கஞ்சாக் குழாயின்மேல் ஈரத் துணியைச் சுற்றி அதைப் படதையாவின் கையில் கொடுத்தான். படதையாவுக்குச் சன்னனின் கதையைக் கேட்பதில் அவசரம். அவர் குழாயை முத்தமிடாமல் சீடர்கள் கையில் கொடுக்கமாட்டார். மற்றச் சீடர்கள் எல்லோரும் கஞ்சாவுக்காகப் பரபரத்தார்கள். படதையா 'ஓம் சிவ' என்று குழாய்க்கு வணங்கிப் புகையை வாயால் உறிஞ்சினுர். உடனே குழாய் வாயில் பக்கென்று பற்றிக்கொண்டது. அவர் உறிஞ்சியது அந்தச் சுவாலேயையா புகையையா என்று தெரியவே இல்லே. ஏனென்ருல் குழாயைக் கெஞ்சன் கையில் கொடுத்துவிட்டு தியான

முத்திரையில் ஆழ்ந்து கண்ணை மூடினார். வாயிலிருந்து புகையோ மூச்சோ வரவில்லை. இந்தப் புகையடக்கும் வித்தை மூச்சைப் பிடிப்பது எல்லாம் அவருடைய தினசரி லீலைகளுள் ஒன்று.

பிறகு நாலைந்து நிமிடங்களுக்குப் பின் படதையா தமது தூக்க நிலையிலிருந்து விழிப்பு நிலைக்கு வந்தார். மூச்சை விட்ட உடனே அதைத் தொடர்ந்து புகுந்த புகை திசையெங்கும் பரவியது. அந்தப் புகைமண்டலத்தில் அவருடைய சிவந்த கண்கள் நெருப்புக் கண்களாகவே தோன்றின. அந்தப் புகை வளையத்தில் படதையா மன்மதனை எரிப்பதற்கு நெற்றிக் கண்ணைத் திறந்த சாட்சாத் சிவபெருமானைப்போலக் காணப்பட்டார்.

'கெஞ்சா! சன்னன் பௌஜ்தாரைப் பேட்டி கண்டானடா?' என்று புகை வட்டத்திலிந்து அசரீரி வாக்கு ஒலித்தது.

கெஞ்சனும் தவத்தில் ஆழ்ந்திருந்தான். இதைக் கேட்டுத் திடீரென்று அவனுடைய சமாதி கலைந்தது. 'ஆமாம் சாமீ! பேட்டி கண்டானுங்க. அவருக்குப் போதும் போதும் என்று ஆகும்படி செய்துட்டான்' என்று பதில் சொன்னான்.

'அது என்ன சங்கதி, சொல்லக்கூடாது? கஞ்சா இலை தின்னவன் மாதிரி கண்ணை மூடிக்காதே' என்றார் படதையா.

'கண்ணை மூடறதுக்கு, நான் என்ன சாமீ இந்தப் புகையை இன்னிக்குத்தான் பிடிக்கறேனா? இந்தத் தாய்க்குச் சேவை செய்யத் தொடங்கி இருபது வருசங்களுக்கு மேலேயே ஆச்சுது' என்று கெஞ்சன் ஆசையின் வேகத்தில் குழாயின் உயிரையே உறிஞ்சுவதுபோல் முத்தம் கொடுத்தான். மறுபடியும் தீ; மறுபடியும் புகை; என்று மாறி மாறி வந்தன.

'இதுகள்ளாம் உட்கார்ந்திருக்குங்க சாமீ! இந்த வெங்கன், நிங்கன், எல்லன் இதுகள்ளாம் குழாயைக் கையிலே பிடிப் பாங்களோ இல்லையோ உடனே கண்ணை மூடிடுவாங்க. மூக்கால் அழுதுகிட்டுக் கண்ணை மேலேயும் கீழேயும் சுழட்டுவாங்க. ஒரு குழாய் உறிஞ்சினா இந்த ஒலகமெல்லாம் மாயமா மறஞ்சு பரமாத்மாவே தெரியணும் சாமீ! கஞ்சாச் குடிக்கறதுன்னா அதுதான். நான் வாழ்ந்த நாளெல்லாம் இதனுடைய சேவையிலேயே கழிச்சிட்டேனுங்க. இந்தத் தாய் எனக்குப் புதுசில்லெ. இதுகளெல்லாம் ரொம்ப மோசம்! கஞ்சாவுக்கு ஆசைப்பட்டுத் திடீரென்று மடத்துக்கு வந்துட்டு வீட்டுக்கு ஓடிப்போற மனுசன் இல்லே நான். மடத்திலெயே இருந்து இங்கேயே வாழுவோம், இங்கேயே சாவோம்' என்ற கெஞ்சனின் குரலில் சூடேறியது.

'ஊட்டெ விட்டுட்டு மடத்திலே சேந்தூட்டே! யாரைக் காப்பத்தறத்துக்காக இங்கே கெடக்கறே?' என்று ரெட்டி யங்கன் பொறுக்காமல் கேட்டான்.

''ஒரு பாட்டிலெ ஓடைச்சு ஒரொரு குவளை 'தீர்த்தம்' போட்டாக்க இதுகளெல்லாம் வாயெ மூடிக்கொண்டு கெடக்கும் சுவாமி! 'ஊட்டெ வுட்டுட்டு மடத்திலெ வந்து சேந்தே'ன்னு சொல்றியா? யங்கா! சேரக் கூடாதா? தைரியத்தைப் பாத் தூடறேன்! 'தண்ணி போடறதை விட்டூடு'ன்னு சொன்ன பொஞ்சாதியை மண்டையை ஒடச்சேன்! அவ அழுதுட்டுக் கூட்டம் கூட்டினு. 'பல்லே ஒடச்சுடுவேன்!'னு சொல்லீட்டுப் பல்லே ஒடச்சுக் காட்டின வீரன்டா நான். எனக்குச் சரியா நிக்கறவன் யாருடா? பெரிய மவன் 'வயலுக்குப் போ, அப்பா'ன்னு சொன்னுன். வயலேயே வித்தூட்டேன்! கையிலே இருக்கற கொழாயெ விட ஒங்களாலே முடியாது. என்னடா பேசறீங்க? மாடு, கன்னு, நெல்லு, நெலம் எல்லாம் நெறஞ்ச வூட்டை விட்டூட்டு மடத்துலே சேர்ற தைரியம் ஒங்கள்லே யாருக்கு இருக்கு!'' என்று உலகத்துக்கே சவால் விட்டான் கெஞ்சன்.

கெஞ்சனுடைய ஆவேசத்தை இறக்கும் ரகசியம் படதையா வுக்கு மட்டும்தான் தெரியும். மற்றச் சமயங்களில் என்றால் இந்தத் தர்க்கத்துக்கு ஊக்கம் கொடுத்து மணிக் கணக்கில் கேட்டுக்கொண்டிருக்கலாம். ஆனால் அவர் சன்னனுடைய கதை யைக் கேட்கும் துடிப்பில் இருந்தார். ''உள்ளேபோய் 'தீர்த்த'ப் புட்டி இருந்தால் கொண்டுவந்து கொடு'' என்று அவனுக்கு உத்தரவிட்டார்.

கெஞ்சனுடைய ஆவேசம் சட்டென்று இறங்கியது. எழுந் திருந்து உள்ளேபோய் இரண்டு பாட்டில்களைக் கொண்டுவந்து ஒன்றைப் படதையாவின் எதிரில் வைத்து, மற்றொன்றைக் குவளையில் ஊற்றினன். பிறகு, 'சன்னன் பாருங்க சாமி! மாடு தின்று சாணிலே கலந்த சோளத்தைக் கொணர்ந்து பௌஜ்தார் எதிரிலெ தைரியமா வச்சானுங்க' என்று சொல்லத் தொடங் கினன் கெஞ்சன்.

சாராயம் நிரம்பிய குவளையைக் கைநீட்டி எடுத்த கோபாலாச்சார் (பாளாச்சாரின் அண்ணன் மகன்), 'இந்தப் பஞ்ச காலத்திலே சாணியிலே சோளம் விழுறப்பலே மாட்டுக்குச் சோளம் போடறவன், யாரப்பா அது?' என்று கிண்டலாகக் கேட்டான்.

'தான் சொன்னது பொய்' என்று கிண்டல் செய்ததால் கெஞ்சனுக்குப் பிரமாதமான கோபம் வந்துவிட்டது. கண்ணில் நெருப்புப் பறக்கக் கோபாலாச்சாரியைப் பார்த்தான். ஊர் பூராவும் வயல் இருந்தாலும் அசலாரிடம் சோளம் கடன் வாங்கி அடுப்பு மூட்டற பாப்பார் மட்டுமே ஊரிலே இல்லே, ஆச்சாரையா! அடிச்சிப் பிடுங்கிறு மூணு வருசங்களுக்கு வேணுங்கற சோளத்தைக் குடுப்பான் குடியானவன்! நெலம் இருந்தாலும் ஒழைக்க முடியாத சோம்பேறிங்கதான் நெலம் தரிசாக் கெடக்கறபோது கெடந்து முட்டிக்குங்க. பால் கறக்கற எருமையும் உழற எருதும் சோளம் திங்காட்டி அடுத்த வருஷம் மனுஷங்கதான் ஏற இழுக்கற நெல வந்துடும்' என்று படபடப் போடு பேசிக் கோபாலாச்சாரை அடக்கினான் கெஞ்சன்

'அப்பறம் என்னாச்சு, சொல்லேன்? வீணு, பேசறவங்க வாயைப் பாத்துகிட்டுக் குறுக்கெ பாயற எருது மாதிரியல்ல பாயறே' என்று படதையா கண்டித்தார்.

'சொல்றேன் சாமி, சொல்றேன். பௌஜ்தார் வயல் பக்கம் போயிட்டுச் சாவடிக்குள்ளே ஏறினாருங்க. சாமி பல்லக்குப் பொறப்படறபோதே பக்தர் விழுந்து கும்படறதைப் போலெ சன்னன் வந்து அவர் கால்லே விழுந்தானுங்க. அவன் தங்கச்சி—அதான் அந்தச் சாமிக்குவிட்ட வாயாடி மல்லி—பல்லால் முந்தானையைக் கடிச்சுகிட்டு ஒய்யாரமாகச் சாவடி ஓரமா நின்னுகிட்டிருந்தா. பௌஜ்தாரின் பார்வை வெகு கூர்மை யுங்க. கால்லெ விழுந்த சன்னன் அவர் கண்லே படவே இல்லேங்க. மல்லியையே பாத்துகிட்டு அந்தப் பக்கமா நடந் தாருங்க. சன்னன் எழுந்திரிச்சு, 'ஐயா, ஓம் மகன் (நான்) கும்பிட்டதைப் பாத்தூட்டு அந்தப் பக்கம் போய்ட்டே. ஓம் மகன் வவுத்துக்கில்லாதெ பட்டினி கெடக்கறேன், ஐயா!' என்று முறையிட்டுக்கொண்டான். ''வயித்துக்கு இல்லாட்டிக் கௌடன் கிட்டெப் போ. 'சோளம் கடன் குடுங்க'ன்னு கேளு'' என்று உண்மையைச் சொல்லி (வழி காண்பித்து)ப் பௌஜ்தார் முன்னேறினார். சன்னன் விட்டுடுவானு! 'ஐயா, நீ குடுத்ததை வாங்கிக்கறதுக்கு ஓம் மகன் வந்திருக்கேன். ஒதை கொடுக்க ணும்னு தோணிறு அதையே கொடு; ஒலக்கை கொடுக்கணும்னு தோணிறு அதையாவது கொடு'ன்னு வேண்டிகிட்டானுங்க. 'ஒலக்கை வேணுமா? வெலங்கு வேணுமா?' என்ற பௌஜ்தார், மல்லியைப் பார்த்து, 'நீ எதுக்கு வந்தே'ன்னு கேட்டாருங்க. அதுக்கு மல்லி என்ன சொல்லணுங்க? 'ஸர்தார் மனசுவச்சா வங்கிகூடப் போடுவீங்க. அது ஒண்ணும் பெரிசில்லே. இவன்

எங்க அண்ணன், பிள்ளைகுட்டிக்காரன், பட்டினி கிடக்கருனுங்க. வூட்டுலே ஒருமணி தானியங்கூட இல்லீங்க. ஸர்தார் வந்திருக்கீங்க, கொஞ்சம் கவனிக்கும்படி சொல்லுன்னு கேட்டு கிட்டானுங்க. அதான் வந்தோமுங்க' என்று சொன்னாள் மல்லி.

கெஞ்சன் கதைக்குச் சூடு பிடித்தது. திடீரென்று ஒரு பெண்மணியின் பாத்திரம் நுழைந்தவுடன் கதையின் போக்கே மாறிவிட்டது. கேட்பவர்கள் ஆச்சரியத்துடன் பேசாமல் உட்கார்ந்திருந்தார்கள். கெஞ்சன் வேண்டுமென்றே கதையை நிறுத்தி ஒரு மடக்குத் தண்ணி போட்டான்.

''அவளுடைய தளுக்கென்ன? மினுக்கென்ன? ஒய்யாரமாக் கையைத் திருப்பறதென்ன? சீச்சீ ஒண்ணும் சொல்ற மாதிரி இல்லேங்க. பௌஜ்தார் 'உன் பெயர் என்ன?' என்று கேட்டார். அவள் கூத்திலே பெண் வேஷம் போடருப்பலே நகத்தாலே தரையைக் கீறிக்கிட்டு 'மல்லி'ன்னு சொல்றதுக்கு ஒருமணி நேரம் ஆச்சுதுங்க. பௌஜ்தார் வலையிலே வுளுந்துட்டானுங்க. உடனே கௌடனிடம் சன்னனுக்குத் தானியம் கொடுன்னே சொல்லிட்டானுங்க. கௌடருக்குத் திகில் பிடிச்சிட்டுது. 'நேற்று இவன் நம்ம வூட்லேயிருந்துதான் தானியம் வாங்கிட்டுப் போனுனுங்க' என்று அவர் சொன்னர். பௌஜ்தார், சன்னன் முகத்தைப் பார்த்தானுங்க. ஆனு சன்னனுக்கு வெட்கமேது? மீனுக்கு நீச்சல் சொல்லிக் கொடுப்பதும் சன்னனுக்குப் பேசச் சொல்லிக் கொடுப்பதும் ஒண்ணுதானுங்க. பௌஜ்தார் காலில் மறுபடியும் சன்னன் வுளுந்தானுங்க. 'சாமீ, இல்லேன்னு சொன்னு நாக்குப் புழுத்துப்போகுங்க. எசமானர் தானியம் கொடுத்தது நெசந் தானுங்க. தானியத்தை எடுத்திட்டுப் போறபோது படதையா வோட ஆளுங்கவந்து பிடுங்கிட்டானுங்க. படதையா அந்தச் சோளத்தை வாங்கிக்கிட்டு அவரோட சோளத்தைக் கொடுத் தாருங்க. அந்தச் சோளமாவிலே செஞ்ச ரொட்டித்துண்டைத் தின்னு பிள்ளைகுட்டிங்கள்ளாம் தரையிலே குப்புறக் கவுந்து கிடக்குதுங்க'ன்னு சன்னன் சொன்னன். பௌஜ்தார் அந்தச் சோளத்தை மோந்து பார்த்தானே இல்லையோ, முகத்தைச் சுளுக்கிக்கிட்டு கையைக் களுவிட்டானுங்க.

இந்தக் கதையைக் கேட்ட படதையாவின் முகமும் விளக்கெண்ணெய் குடித்தாற்போல ஆயிற்று. கதை தம்மை நோக்கியே திரும்பும் என்று அவர் நினைக்கவில்லை. ஆனல் கெஞ்சனையும் தடுத்து நிறுத்த முடியவில்லை. மேலே என்ன நடந்தது என்று கேட்க படதையாவுக்கு ஆவலாக இருந்தது.

மல்லி அங்கேயே நின்றிருந்தவள், 'சர்தார், இந்த மாதிரி சோளத்தைத் தின்னு ஏழைகள் சாக ஆரம்பிச்சுட்டாங்க' என்று முறையிட்டுக்கொண்டாள். பௌஜ்தார் 'கௌடரே, இவளுக்கு நல்ல சோளம் கொடுங்க. ஏழை செத்துவைக்கப்போறா' என்று வெட்கமில்லாம சொன்னாருங்க. அதுக்கு மல்லி, நாணிக் கோணிண்டு, 'சர்தார் சாமிக்கு விட்டவ நான். செத்துச் சிவன் கிட்டப்போனா என்ன தப்புங்க? எங்க அண்ணன் ஏழை. புள்ளைங் களுக்கும் அவனுக்கும் சோளம் கொடுங்கன்'னு கேட்டுக் கிட்டாள். 'சாமீ! சோளத்தைக் கொணாந்தா இந்த ஊரிலே பிடுங்கிக்கிடுவாங்களே!' என்றான் சன்னன். பௌஜ்தார் 'பிராது எழுதிவிட்டு வா, போ'ன்னான். அப்புறம் மல்லியைப் பாத்து, 'நீ என்ன விண்ணப்பம் கொணாந்திருக்கே'ன்னு கேட்டான். அவள், 'சர்தார்! என்னோட விண்ணப்பத்தை விசாரிக்க உங்களாலே முடியாது! அதைச் சிவன்தான் செய்யணும். நட நட அண்ணா! தோவோட மொகத்தைப் பாத்துண்டே என் மொகத்தைத் திங்கற இவர் நம்ப விசாரணையை எங்கே நடத்தப்போறார்?' அப்படின்னு சொன்னாளுங்க. கூடியிருந்த ஜனமெல்லாம் அதிர்ந்துபோயிட்டாங்க. இப்படிச் சொல்லிக்கிட்டே அவள் புறப்பட்டுட்டாளுங்க.

பௌஜ்தார சும்மா விடுவானா அவனை. கான்ஸ்டபிளிடம் சொல்லி உட்காத்தி வச்சுட்டானுங்க. சன்னன் ஒரு பக்கமா சாஞ்சு நினைவு தப்பியவன்போல வுளுந்துட்டானுங்க. 'இரண்டு உதை கொடுத்தாத் தானா எழுந்திருக்கிறான்' என்று பௌஜ்தார் பூட்ஸ் காலால் உதைச்சானுங்க. மூச்சை உள்ளடக்கி வுளுந்த சன்னன் அசைஞ்சு கொடுப்பானா? ஹூம்! பௌஜ்தாரோட முவத்தை அப்பத்தான் பார்க்கணுங்க. வேர்த்துப் போச்சுதுங்க. 'கௌடரே, இவனைத் தூக்கிட்டுப்போய் இவன் வூட்டுலே சேர்க்கச் சொல்லுங்க'ன்னு சொல்லி, செலவுக்காக நிசார்ப் பையிலேயிருந்து அஞ்சு ரூவா எடுத்துக் கொடுத்தாருங்க. சன்னனைக் கௌடர் ஆளுங்க சுமந்துக்கிட்டுப் போனானுங்க. சாவடியிலேந்து கொஞ்ச தூரம் போனானுங்க. 'இனிமே நானே வூட்டுக்குப் போயிக்கறேன், வுடுங்கடா'ன்னு சொல்லி, அவன் அலக்காக் கீழே குதிச்சுட்டானுங்க. பௌஜ்தார்கிட்டே பணம் பிடுங்கச் சன்னன் ஆடிய நாடகம் இதுங்க. அதுனாலே தானுங்க 'அமல்தார் கொட்டம் இறங்கிப்போச்சுதுன்னு சொன்னேன்' என்று சொல்லி முடித்த கெஞ்சன் குடி மயக்கத்தில் விசித்திரமாகச் சிரித்தான்.

கெஞ்சன் சுற்றிப் பார்த்தான். பேச்சை முடித்துவிட அவன் விரும்பவில்லை. ஆனால் அவன் கதை முடியப்போகும் தருணத்தில் கூட்டத்தில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. இரவு மணி இரண்டு அடித்துவிட்டதால் சிலர் ஓசைப்படாமல் எழுந்து வீட்டிற்குச் சென்றனர். சிலர் குடிமயக்கத்தில் உட்கார்ந்த இடத்திலேயே படுத்தனர். கெஞ்சனுக்கு இந்த ஜீவன்களைப் பார்த்துப் பரிதாபம் ஏற்பட்டது. விடியவிடியக் குடித்தாலும் நினைவு தவறாத தீரன் அவன். கள்ளின் போதையைப்பற்றி ஆராய்ந்தான். ஒரு மடக்குக் குடிக்கும்போதே மயக்கிவிடும் கள்ளின் மாயை பெரியதா? ஒரு மடக்கைத் தாங்க முடியாத இந்தப் பிராணிகளின் பலஹீனம் பெரியதா? என்ற சிக்கலான பிரச்சினை அவனுள்ளத்தில் எழுந்தது. பரமாத்மாவின் மாயை பற்றி பக்தன் ஒருவனுக்குத்தான் தெரியும். அதுபோல் தன் ஒருவனுக்குத்தான் இந்த மாயை வசமாயிருக்கிறது. இல்லாவிட்டால் எல்லோரையும்விட அதிகம் குடித்தும்கூடக் கதையின் விவரங்களை ஒன்றுகூட விடாமல் சொல்லக்கூடிய திறமை யாருக்கு இருக்கிறது என்று நினைத்தான். ஆனால் ஒரு விஷயம் மட்டும் அவனுக்கு அவமானத்தைக் கொடுத்தது. இவர்கள் எல்லோரும் குடிமயக்கத்தில் மூழ்கி இருந்தபோது தான் மட்டும் கதையைச் சொல்லி வீணாகக் களைத்துவிட்டோம் அல்லவா என்று துக்கமாக இருந்தது.

திரும்பிப் பார்த்தான். படதையா சாமியாரும் தூக்கத்தில் ஆழ்ந்திருந்தார். கதை சொல்லும்படி தூண்டிய சாமியாரே விடைபெற்றுக்கொண்டுவிட்டால் அப்புறம் என்ன இருக்கிறது? தான் 'என்ன விஷயத்தைச் சொல்லும்போது இவர் தூங்கி விட்டாரோ?' என்று சிந்தித்தான். படதையாவின் பக்கத்தில் இருந்த புட்டியில் இன்னும் சிறிது சாராயம் இருந்தது. 'ஐயோ! அப்பனுக்குத்தான் என்ன கருணை!' என்று உள்ளம் பொங்கி வந்தது. அப்பனுடைய பிரசாதம் என்றபடி அதையும் எடுத்து விழுங்கிவிட்டான். தூங்கும்போதுகூட என்னை மறக்கவில்லை. கதை சொல்லச் சொல்லி மகனுடைய நெஞ்சு உலர்ந்துவிடும் என்று தண்ணியை மிச்சம் வைச்சுட்டு அப்பன் உறங்கியிருக்கிறார் என்று நினைக்க, அவன் உள்ளம் அன்பால் கசிந்தது. 'அநியாயமா அவர்கிட்டக் கோபிச்சிட்டுக்கிட்டேன் அல்லவா?' என்று பச்சாத்தாபம் அடைந்தான். கெஞ்சன் முதன் முதலில் விசும்பினான். பிறகு சிறு குரலில் அழுதான். பிறகு ஓவென்று பெரிதாக அழத் தொடங்கினான். நள்ளிரவில் மேல்காற்று வீசியது. இடிச்சத்தம் காதைப் பிளந்தது. அப்போது நாயின்

அழுகுரலைப்போல் அவனது அழுகுரல் வானமண்டலம் எல்லாம் பரவியது. அழுது அழுது ஓய்ந்துபோன கெஞ்சன் உட்கார்ந்த இடத்திலேயே, 'ஓம் நமச்சிவாய' என்றவாறு காலை நீட்டிப் படுத்துத் தூங்கிவிட்டான்.

ஆனால் கெஞ்சன் சொன்ன கதையைக் கடைசிவரையிலும் கேட்ட ஜீவன் இன்னொன்று இருந்தது. படையாவின் ரகசிய அறையில் சிறையிருந்த சிமுனாதான் அவள். அவளுக்குத் தூக்கமே போய்விட்டது. இயற்கை, அவளுக்குக் கொடுத்த சீர் கண்ணீர்தான். வாழ்நாள் முழுவதையும் அவள் விழித்துக் கொண்டே தள்ள வேண்டும். இந்த விழிப்பு, முதலிலேயே இருந்திருந்தால்...... என்ற நினைவும் அவளுக்கு வந்தது. இன்று தன் துக்கத்தை மறக்கக் கெஞ்சனுடைய கதையைக் கடைசி வரை கேட்டாள். சன்னன் மூர்ச்சை அடைந்தபோது அவனுக்கு உதவி செய்யாத மௌஜ்காரின் தோற்றம் அவள் மனக்கண்முன் தோன்றியது. இந்தக் குணம் ஆண் வர்க்கத்துக்கே உரியதோ என்று நினைத்தாள். சுமந்தவர்கள் தோளிலிருந்து குதித்துச் சென்ற சன்னனை நினைத்தபோது சிரிப்பு வந்தது. அடுத்த கணமே பரிதாபப்பட்டாள். பணத்துக்காகவும் வயிற்றுப் பிழைப்புக்காகவும் மனுஷன் எப்படியெல்லாம் வேஷம் போடவேண்டியிருக்கிறது என்று நினைத்தாள்.

அடுத்த கணமே முந்தானையைப் பல்லில் கடித்துக்கொண்டு மயக்க முயன்ற மல்லியின் தோற்றம் தெரியவந்தது. கெஞ்சன் அதை எத்தனை ரசமாக வர்ணித்தான். மற்றவர்கள் தம்மை மறந்தல்லவா அதைக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். ஒரு பெண்ணின் துன்பம்கூட ஆணின் காமத்தைத் தூண்டிவிடுகிறது என்றால், பெண் அதே தொழிலை ஏற்றுக்கொண்டபின் கேட்க வேண்டுமா? மல்லி பொட்டுக் கட்டிவிடப்பட்டவள். பார்க்கப் போனால் தனக்கும் அவளுக்கும் என்ன வித்தியாசம்? அவள் கடவுளுக்காக விட்ட பெண். கடவுளை வேண்டி மனிதனுடைய காமத்தைத் தீர்க்க வேண்டும். அதனால் கடவுள் திருப்தி அடையவேண்டும். தானோ வழுக்கி விழுந்தவள். கணவன் இல்லாமல் தாய்மையை அடைந்தவள். மல்லியின் வாழ்க்கைக்கும் தொழிலுக்கும் சமூகத்தில் மதிப்பு உண்டு. தனக்கு அது இல்லை என்று அவள் எண்ணம் ஓடியது.

கெஞ்சன் சொல்லிய மற்றொரு செய்தி அவளுக்குப் பெரும் கவலையைக் கொடுத்தது. அவளுடைய தந்தையைக் கொன்ற குற்றம் தாதாவின்மேல் வரப்போகிறது. நாம் எவ்வளவு ஆபத்துக்குக் காரணமாயிருக்கிறோம் என்று அவளுக்கு வருத்த

மாக இருந்தது. அவள் அழகு, பாபு சாஹேபைக் கவர்ந்தது. அதே காரணத்தால்தான் படதையாவும் அவள் வாழ்வைக் கெடுத்தான். அவள் கற்பை இழந்துவிட்டாள். அதற்காக ஏங்கி ஏங்கியே தகப்பனாரும் உயிரை விட்டார். பாபு சாஹேபின் மேலே கொலைக்குற்றம் வந்து விலகிப் போய்விட்டது. இப்பொழுது அவளுடைய அழகினால் நிகழ்ந்த விபரீதம் தாதாவைப் பலி கேட்கிறது. வாழ்வு கெட்ட தங்கையின் வாழ்வை எப்படியாவது சீர்ப்படுத்தலாம் என்று இரக்கத்துடன் செயலாற்றிய தாதா இந்தப் பழியை ஏற்கவேண்டி வந்தது. அவள் ஆயுட்காலம் முழுதும் இந்தக் குடிகார சந்நியாசியுடன் வாழ வேண்டும். தன்னால் யாருக்குச் சுகம்? கெட்ட முகூர்த்தமாகப் பார்த்து அவள் பிறந்திருக்க வேண்டும் என்று தன் பிறப்பையே சிமணு சபித்துக்கொண்டாள். தாயின் சாவு, தந்தையின் மரணம், அண்ணனுக்குத் தண்டனை, புத்லாபாயின் துன்பம் இவை எல்லாவற்றுக்கும் தானேதான் காரணம் என்று அவள் சங்கடப்பட்டாள்.

அதைவிடத் தானே இறந்துவிட்டால் என்ன என்ற யோசனையும் வந்தது. ஆம்; செத்தால் என்ன கெடுதல். இத்தனை நாள் வாழ்ந்ததற்குக் காரணமில்லை. உலகத்தில் என்னைப் போன்றவர்களுக்குக்கூடச் சாக மனம் வருவதில்லை. சன்னம் பட்டினி கிடந்தாலும் இறக்க விரும்பமாட்டான். மானத்தை இழந்தாலும் மல்லி இறக்க விரும்புவதில்லை. நான் சாவுகளுக்குக் காரணமாயிருந்தாலும் சாக விரும்பவில்லை. கருவில் இன்னும் உருவாகாத ஜீவன், 'அம்மா என்னைக் கைவிட்டு விடாதே' என்று இரவும் பகலும் குரல் கொடுக்கிறது. அந்தக் குரல் எப்படிப்பட்ட விசித்திர ஆசைகளை எல்லாம் தூண்டிவிடுகிறது. குழந்தை பிறந்தபின் அதன் அதிர்ஷ்டத்தினாலாவது நல்ல காலத்தைக் காணலாம். நாளைக்கே படதையாவின் மனம் மாறினால் இந்தக் கேடுகெட்ட வாழ்க்கைக்கும் ஒரு நிலையான வழியைக் காணலாம். இந்த ஆசைகளில் உண்மை இல்லாவிட்டால் இத்தனை துன்பங்களையும் பொறுத்துக்கொள்ள எனக்குச் சக்தி வருமா? மற்றொரு யோசனை, அவளுடைய ஆசைக்குப் புத்துயிர் அளித்தது. இப்போது சட்டத்தின் பிடியில் அகப்பட்டுக்கொண்டிருக்கும் தாதாவைக் காப்பாற்றவாவது நான் பிழைத்திருக்க வேண்டாமா என்று நினைத்தபோது சிமணுவுக்குத் தற்கொலை செய்துகொள்வது பயங்கரமாகத் தோன்றியது. வாழப் பயப்படுவது கோழைத்தனம் என்று அவளுக்குத் தோன்றியது. மற்றவரைக் காப்பாற்றுவதற்காகவாவது தான் உயிருடன் இருப்பது தைரியமான வழி. நாணுவின்

மகளாகப் பிறந்து பேடியைப்போல் தற்கொலை செய்துகொண்டால் அவளுடைய ஆத்மா சாந்தி அடையாது. இப்படி யோசித்து அலுத்த மனம் தூக்கத்தை விரும்பியது. வாழ்வுக்கும் தூக்கம் வேண்டும் என்று தோன்றியது. நிதானமாகத் தூங்கினாள் சிமனா.

அன்றிரவு தூங்காமல் கவலைப்பட்டுக்கொண்டிருந்த மற்றொரு ஜீவன் தாதா. போலீஸ் காவலில் தனியாகச் சாவடியின் அறையில் சிறைப்பட்ட தாதாவுக்குப் பல கவலைகள். முதலில் சிமனாவை மடத்துக்கு அழைத்துக்கொண்டு போகும்போது முன்பின் தெரியாதவர்கள் நடுவில் சந்தேகப்படக்கூடிய நிலையில் எப்படிச் சிமனா வாழமுடியும் என்ற யோசனை அவனுக்கு உண்டாகவில்லை. இன்று அவனது தனிமை அந்தக் கவலையைக் கிளப்பியது. தனிமை கவலையாகிய சூறாவளியை எழுப்பும் என்பது அவனுக்குப் புதிய அநுபவம். அவன் என்றுமே தனியாக இருந்ததில்லை. தாலீம்கானாவிலும் சரி, வீட்டிலும் சரி; அவனுடன் தோழர்கள் இருந்தார்கள். களைத்து மரக்கட்டைபோல் தூங்கிய பின்பே அவர்கள் அவனை விட்டுப் போவார்கள்.

இன்று தனிமை அவனை வாட்டியது. ஆண் பிள்ளையாகிய தனக்கே ஓரிரவுத் தனிமை இவ்வளவு பயத்தை உண்டாக்கினால், வாழ்நாள் முழுவதும் அதே நிலையில் கழிக்கவேண்டிய தங்கையின் கதி என்ன?

பிறருடைய காவலில் சுதந்திரமாக வாழ்வது எப்படி? அதை யோசிக்காமல் கோபாவேசத்தில் அவளை உயிருடன் வாட்டுவது புத்தி ஈனம் அல்லவா? தான் செய்த தவற்றின் பலனைச் சிமனா இறக்கும்வரை அநுபவிக்கவேண்டும். இப்பொழுது அந்தக் கோபத்தின் பலனை அவனும் அநுபவிக்கவில்லையா? சங்கப்பன் விஷயத்தில் நடந்த அக்கிரமத்தால் ஆத்திரப்பட்டு பௌஜ்தார் எதிரில் மரியாதையாக நடந்துகொள்ளாததால்தான் இந்த இருட்டறை வாசம்.

அக்கிரமமாகத் தன்னை அடைத்ததற்காக எதிர்த்துத் தாதா அன்று சாப்பிட மறுத்துவிட்டான். ஆனால் இரவில் பசி அதிகரித்துவிட்டது. போலீஸாரைக் கூப்பிட்டு ரொட்டி கேட்கலாமா என்று நினைத்தான். ஆனால் அடுத்தகணமே அது அவமானமாகத் தோன்றியது. அன்று சாயங்காலம் லக்ஷ்மணன் கொண்டுவந்த ரொட்டியைத் தின்னச் சொன்னபோது அந்த அற்பர்கள் எதிரில் தான் தின்னமாட்டேன் என்று மறுத்துவிட்டான். இப்பொழுது இந்தப் போலீஸ்காரனைக் கெஞ்சுவதா? இந்த நினைவிலேயே பசியை அடக்கிக்கொண்டு தாதா படுக்கையில் படுத்துத் தூங்க முயன்றான்.

வெளியில் யாரோ பேசுவது கேட்டது. பூட்டைத் திறக்கும் ஒலியும் கேட்டது. கதவைத் திறந்துகொண்டு யாரோ உள்ளே வந்தார்கள். 'தாதா!' என்று கூப்பிட்டவுடன், அது கௌடரின் குரல் என்று புரிந்துகொண்டான். ஒரு பெரிய வாழைப்பழச் சீப்பையும் ஒரு செம்பு பாலையும் அவன் முன்வைத்து, 'இதைச் சாப்பிடு தாதா' என்றார்.

கௌடருடைய உள்ளன்பை நினைத்த தாதாவுக்கு அழுகை வந்தது. பேச முடியாமல் பழத்தைத் தின்று பாலைக் குடித்தான். கௌடர் அவனுக்குத் தைரியமூட்ட வந்திருந்தார். மறுநாள் பௌஜ்தார் கூப்பிடும்பொழுது, 'கோபித்துக்கொள்ளக்கூடாது; பயமுறுத்தினால் பயப்படக்கூடாது' என்று உபதேசித்தார். நாணுவின் கொலைக்குற்றத்தை அவன்மேல் சுமத்த மற்றவர்கள் எல்லோரும் சூழ்ச்சி செய்திருப்பதை அவனுக்குச் சொல்லி, சட்டப்படி செய்யவேண்டியதை எல்லாம் நான் செய்கிறேன். நீ பயப்படாதே' என்று சொன்னார்.

தாதாவுக்கு உபதேசம் செய்துவிட்டுக் கௌடர் வெளியே போனார். பயப்படாதே என்று தைரியம் சொன்னாரே தவிர, அவருக்கே தைரியம் இல்லை. இந்தச் சூழ்ச்சி அவரது கைக்கு மீறிப் போய்விட்டது. பௌஜ்தார் முழுக்க முழுக்க பாபு சாஹேபின் ஆதரவைப் பெற்றிருந்தார். தாதாவின் தாலீம்கானா நண்பர்கள் சிலரிடம் சாட்சி வாங்கிக்கொள்ள வேண்டுமென்று பௌஜ்தார், ஆர்டர்லி கேசவராவிடம் சொன்னதைக் கேட்ட கௌடருக்குக் கைகால்களே விழுந்துவிட்டன. விவகாரம் இந்த ரீதியில் போய்க்கொண்டிருந்தால் தாதா தப்பமுடியாது. தாதா இருக்கட்டும். பொய்க்காரணம் காட்டிய கௌடரும் தப்ப முடியாது. அந்தத் தீர்ப்பை ஒப்புக்கொண்ட பஞ்சாயத்தாரும் தப்ப முடியாது. அப்படியானால் ஊர்ப் பிரமுகர்கள் எல்லாம் ஜெயிலுக்குப் போகவேண்டியதுதானா? அவர்கள் இத்தனை நாட்கள் வரையில் பணத்தை வாங்கிக்கொண்டது உண்மை தான். ஆனால் பணம் கொடுத்தவர்களின் தலைமுடிகூட உதிராமல் காப்பாற்றும் சாமர்த்தியம் அவர்களுக்கு இருந்தது. இப்பொழுது அந்தப் புண்ணியம் தீர்ந்துவிட்டது. இருக்கட்டும். பௌஜ்தாரின் மனம் உருகும்படி கேட்டுக்கொள்வது ஒன்றுதான் வழி என்று நினைத்தவண்ணம் கௌடர் வீட்டை நோக்கி நடந்தார். மாளிகையில் புத்லா, சாவடியில் தாதா, மடத்தில் சிமணா, தம் வீட்டில் கௌடர் ஆக இவ்வளவு பேரும் தூக்கமில்லாமல் தவித்துக்கொண்டிருந்தார்கள்.

பாதள்ளியில் அன்று இரவு ஊருக்கு நாதனே இல்லைபோல் இருந்தது. இந்த நாலுபேருடைய வாழ்வும் வாழ்வின் சூத்திரக்

கயிறுகளைப் பிடித்துக்கொண்டு தெய்வத்துடன் போராடிக் கொண்டிருந்தன. இந்த விளையாட்டை வெகு ஜாக்கிரதையாக விளையாடவேண்டியிருந்தது. இரவு, இவை எதையும் லட்சியம் செய்யாமல் பாதள்ளியின் வாழ்க்கையைப் பார்த்துக்கொண்டிருந்தது. பொழுது விடிவதற்குள் வாழ்க்கைக்கு ஒரு முடிவு ஏற்பட்டே தீரவேண்டும்!

# 13

மறுநாள் பொழுது விடியும்போதே 'சாவடிக்கு வரவேண்டும்' என்று பௌஜ்தாரிடம் இருந்து கௌடருக்கு அழைப்பு வந்தது. போலீஸ் அதிகாரி ஊரில் இருக்கும் வரையில் கௌடருக்குப் படுக்கக்கூடப் பொழுது இருக்காது. அவர் அவசரமாகச் சாவடிக்கு ஓடினார். பௌஜ்தாரிடம் நேற்று இருந்த மிடுக்கு இன்று இல்லை. அடக்கத்துடன் கௌடரைக் கூப்பிட்டு உட்கார வைத்தார். இந்த அதிவிநயத்தால் கௌடருக்குச் சந்தேகம் உண்டாயிற்று. 'வேறு எந்த மாதிரி வலை வீசப்போகிறாரோ?' என்று நினைத்தார்.

பௌஜ்தாரின் உபதேசம் இப்படித் தொடங்கியது: 'எப்படியாவது கௌடர் படதையாவுடன் ஏற்பட்ட மனஸ்தாபத்தைச் சரிப்படுத்திக் கொள்ளவேண்டும். பௌஜ்தாரின் வேட்டகம் அஜராணி; அதனால் அவர் இளமையிலிருந்தே படதையாவின் திறமையை அறிந்தவர். படதையா 'இடத்தைக் கொடுத்தால் மடத்தைப் பிடுங்கிவிடுவான்'. அதோடு உயர்ந்த போலீஸ் அதிகாரிகள் அவனுடைய சிஷ்யர்கள். மனம் வைத்தால் பாதள்ளிப் பிரமுகர் எல்லோரையுமே ஜெயிலுக்கு அனுப்பும் அளவுக்கு அவருக்குச் செல்வாக்கு உண்டு. அதனால் கௌடரும் படதையாவுடன் சேர்ந்துகொண்டு நாணுவின் கொலைக்குற்றப் பத்திரத்தைத் தயார் செய்யவேண்டும். குற்றவாளியைத் தண்டிக்கச் செலவாகும் பணத்தைக் கொடுக்க, பாபு சாஹேப் தயாராக இருக்கிறான். எப்படியும் தாதா தறுதலை, ரௌடி. எப்படியாவது ஒரு குற்றத்தை அவன்மேல் சாட்டி ஜெயிலுக்கு அனுப்பவேண்டியவன். அதனால் இப்பொழுதே அவனை ஜெயிலுக்கு அனுப்பி ஊருக்கு நேரும் தொல்லைகளைத் தடுக்க வேண்டும். தவிர, பௌஜ்தாராகிய அவர், குற்றப்பத்திரிகை தான் தயார் செய்ய முடியும். தீர்ப்புச் சொல்வது மாஜிஸ்தி

ரேட்டின் கடமை. தாதா, நிரபராதியாக இருந்தால் அங்கிருந்து தப்பிவரட்டும். இதையெல்லாம் செய்யக் கௌடர் பின்வாங்கக் கூடாது' என்பது அவர் உபதேசம்.

இந்தச் சம்பாஷணையால் 'நாணு கொலை செய்யப்பட்டுத்தான் இறந்திருக்கிறான்' என்று பௌஜ்தார் முடிவுகட்டியிருப்பது தெரிந்தது. கொலைக்குற்றம் ருஜுவானால் அதை மூடிமறைக்க முயன்ற குற்றம் தன்னையே சாரும் என்று கௌடர் உள்ளூர நடுங்கினார். 'நாணு கொலை செய்யப்படவில்லை' என்பது தீர்ந்த பின், 'தாதாவைப் போன்ற நிரபராதியைக் குற்றவாளி யாக்குவதா?' 'தாதா அவசரக்காரனாக இருக்கலாம்; வணங்கா முடியாக நடந்துகொண்டிருக்கலாம். படதையாவோடு சண்டைக்குப் போயிருக்கலாம். ஆனால் அவன் இன்னும் இளைஞன் தான். உடம்பில் ரத்தச்சூடு அதிகமாகத்தான் இருக்கும். தங்கைக்கு நேர்ந்த அவமானம் அவன் மூளையையே குழப்பி யிருக்கிறது. அவன் செய்த தவறுகள் சிறியவை. காலில் இடறிய கற்களை எல்லாம் மடியில் கட்டிக்கொள்வது பௌஜ்தார் போன்றவர்களுக்குத் தகாத செயல். படதையாவுடன் சிநேகமா? ஊரில் உண்டான எல்லா அனர்த்தங்களுக்கும் அவன்தான் காரணம். ஆனாலும் பௌஜ்தார் சொல்லியபின் அதைத் தள்ள முடியாது. எதற்கும் காலம் வரவேண்டும். இந்த நிலையில் இது போன்ற பிரச்சினைகளுக்கு முடிவு சொல்லிவிட முடியாது' என்று யோசித்த கௌடர், தம் எண்ணத்தை ஒருவாறு வெளியிட்டார்.

கௌடர் தம் பேச்சைக் கேட்டு, 'சில விஷயங்களையாவது ஒப்புக்கொண்டார் அல்லவா?' என்று பௌஜ்தார் சமாதானம் அடைந்தார். பிறகு காலைக்கடன்களை முடிக்க வெளியே போனார்.

கௌடரும் புறப்பட்டார். குளிர்கால வெயிலாக இருந் தாலும் சூடேறத் தொடங்கிவிட்டது. அவர் இன்னும் குளிக்க வில்லை; சிவபூஜை செய்யவில்லை. வீட்டில் மாடு கன்று, ஆள் அம்பு இவைகளைப்பற்றி நினைக்கக்கூட ஓய்வு கிடைக்க வில்லை. இரவும் பகலும் பௌஜ்தாருக்கு வால் பிடிக்கவே சரியாக இருந்தது. 'என்ன நிலைமையை உண்டாக்கினாய், சிவனே!' என்று பெருமூச்சு விட்டவராகச் செருப்பைப் போட்டுக்கொண்டு சாவடியிலிருந்து இறங்கினார் கௌடர்.

அதே சமயத்தில் அஞ்சல்கார மல்லப்பன் அங்கே ஓடிவந்தான். அவன் முகபாவத்தைக் கண்டே கௌடர் உள்ளூரப் பயந்தார். 'கௌடரே! பறைச்சேரியில் பாள்யா இருந்தான் அல்லவா? அவன் வாழ்க்கையே முடிஞ்சு போச்சுங்க!' என்று செய்தி சொன்னான். 'மொத்தத்தில் இன்று எழுந்த வேளை

சரியாக இல்லையடா! எங்கே திருப்பினாலும் சாவும் கஷ்டமுமாகத் தான் இருக்கிறது. என்னதான் நடந்தது? கடகடவென்று எல்லாச் சங்கதியையும் சொல்லக்கூடாதா?' என்று கௌடர், பொறுமை இழந்து கேட்டார். இரண்டு நாள்களாகவே அவர் மனத்தில் அமைதி இல்லை.

'என்ன சொல்லறதுங்க? எல்லாம் விசித்திரமாத்தான் இருக்குதுங்க! ஒரே ராவுலே பாள்யா, அவன் பொஞ்சாதி, அவள் நாலு பிள்ளைங்க எல்லாம் செத்துச் சுடுகாட்டுக்குப் போயிட் டாங்க' என்று மல்லப்பன் துக்கத்துடன் வருணித்தான்.

கௌடரால் அங்கே நிற்க முடியவில்லை. ஸ்நானம், சிவபூஜை எல்லாம் மறந்துவிட்டன. உடனே மல்லப்பனுடன் சேரிக்கு விரைந்து சென்றார். பாள்யா வாழ்ந்த குடிசைக்குப் பக்கத்தில் அவனுடைய உறவினர்களும் அக்கம்பக்கத்தாரும் கூடியிருந் தார்கள். அவர்கள் எல்லோரும் மார்பில் அடித்துக்கொண்டு அழுவதும் கூச்சல் இடுவதும் வெகு தூரத்துக்குக் கேட்டது. கௌடரைக் கண்டதும் அவர்களுடைய துக்கம் அணைபோட முடியாமல் பொங்கியது. பாள்யாவின் அண்ணன் காசன், ஓடிவந்து விக்கி விக்கி அழுதுகொண்டே கௌடரின் காலில் விழுந்தான். 'அழுதால் செத்தவர்கள் திரும்பி வந்துவிடுவார் களா, தம்பி? அழாதே' என்று கௌடர் உலக ரீதியாக உபசாரம் சொன்னார். ஆனாலும் 'தாம் சொல்வது சம்பிரதாயம். அதனால் ஏழைகளுக்கு என்ன லாபம்?' என்று அவர் நினைத்தார். துக்கம் நெஞ்சை அடைத்தது.

'நீ ஊருக்கே அப்பன். உன் கண்முன்னேயே உன் மகன் செத்துக்கெடக்கறான், பாரையா!' என்று பாள்யாவின் அக்காள் புலம்பி ஒப்பாரிவைத்துத் தீர்த்தாள்.

'பாள்யா! என் தங்கமே எந்திரி. கௌடர் வந்திருக்கிறார்; எந்திரி' என்று புலம்பிக்கொண்டே பிணத்தின்மேல் விழுந்து புரண்டாள்.

சேரி மக்கள் எல்லோரும் பாபு சாஹேபிடம் விசுவாசம் உள்ளவர்கள். ஆரம்பத்தில் இருந்தே அவர்கள் ஜாகீரின் குடிமக்கள். மாளிகையிலிருந்து அவர்களுக்கு எப்படியும் தானியம் கிடைக்கும். அதனால் கௌடர், சேரியில் தமக்கு வேண்டியவர் களுக்கு மட்டும் தானியம் கொடுத்துவந்தார். இந்தப் பாள்யா சென்ற ஆண்டு கௌடரின் வயலில் திருட்டுத்தனமாகச் சோளத்தைப் பிடுங்கியதற்காக நன்றாக உதை வாங்கினான். அந்தக் குற்றத்துக்காக எருமையை விற்று அபராதம் கொடுத் தான். அன்று முதல் அவன் உடல்நிலை கெட்டுவிட்டது.

குடும்பத்தில் உழைப்பாளி அவன் ஒருவன்தான். மனைவி பிள்ளைத்தாய்ச்சி. குழந்தைகள் சிறுவயதினர். இதனால் சில நாட்கள் அரைவயிறு சாப்பிட்டும் சில நாட்கள் பட்டினி கிடந்தும் அவன் பலவீனமாக இருந்தான். சேரியில் அவனுக்குத் தானியம் கொடுத்துப் போஷிக்கும் சக்தி உள்ளவர்கள் யாரும் இல்லை. முதல் நாள் மாளிகையில் இருந்து சேரிக்காரர்களுக்குத் தானியம் பங்கிட்டார்கள். பாள்யா படுக்கையில் கிடந்ததால் அவனால் போகமுடியவில்லை.

குடும்பம் நன்றாக இருந்ததால் பாள்யாவின் அண்ணன், அவன் பங்கையும தானே வாங்கிவந்து தம்பியின் குடிசையில் கொட்டினான். அது ஒரே மக்கல்நாற்றம் அடித்துக்கொண்டிருந்த போதிலும் அவன் குடும்பத்தார் அந்தச் சோளத்தை அரைத்து மாவாக்கி ரொட்டி சுட்டுத் தின்றார்கள். பட்டினிகிடந்த வயிற்றுக்கு மக்கிய சோளம் விஷமாகியது. அதனால் காலரா வந்ததுபோல் பேதி, வாந்தி கண்டு யாருடைய உதவியும் இல்லாமல் அந்தக் குடும்பம் பூராவும் ஒரே இரவில் அழிந்தது.

கூட இருந்த ஜனங்களின் வாய்மூலம் இந்த விவரங்களைக் கேட்ட கௌடர் மனம் மறுகினார். கிழிசல் தட்டியின்மேல் கிடந்த அந்தக் குழந்தைகள், அந்தப் பிள்ளைத்தாய்ச்சி, எலும்புக் கூடாகக் கிடந்த பாள்யா இவர்களின் பிரேதங்களைக் கண்ட கௌடரால் கண்ணீரை அடக்க முடியவில்லை. 'கிராமத்துக்கு ஏதோ சாபம் நேர்ந்துவிட்டது' என்று நினைத்தார். மேல் துண்டால் கண்ணைத் துடைத்துக்கொண்டு 'மாளிகைச் சோளத்தை யாரும் தின்னாதீர்கள். நம்ப வீட்டுக்கு வாங்க. உங்களுக்கு ஒரு மாதத்துக்குக் காணும்படி சோளம் கொடுக் கிறேன்' என்று கூடியிருந்தவர்களிடம் கௌடர் சொன்னார்.

கௌடருக்குக் கடமை ஒன்று காத்திருந்தது. சாவடிக்குப் போய் இந்தத் திடீர்ச் சாவுகளைப்பற்றித் தெரிவிக்கவேண்டும். அப்படி அவர் புறப்பட்டபோது வழியில் கள்ளர் சேரியிலிருந்தும் அழுகைக் குரல் கேட்டது. அங்கே ஒரு குழந்தையும் ஒரு கிழவியும் இதே நோயால் இறந்துவிட்டார்கள். தவிர, 'மாளிகைச் சோளத்தைச் சாப்பிட்ட பலருக்குக் காலராக் கண்டிருக்கிறது' என்பது தெரியவந்தது. கௌடர் தடுமாறினார். 'இன்னும் என்னவெல்லாம் பார்க்கவேண்டுமோ? என்னவெல்லாம் கேட்க வேண்டுமோ?' என்று கவலைகொண்டார்.

தண்டோராப் போடும் ஆளை அழைத்துவரச் சொல்லி, மல்லப்பனை அனுப்பிவிட்டுக் கௌடர் சாவடிக்குப் போனார். படதையாவையும் பாபு சாஹேபையும் வரச்சொல்லி ஆள்

அனுப்பிவிட்டுப் பௌஜ்தார் அங்கே அவர்களுக்காகக் காத்துத் கொண்டிருந்தார். கௌடர் இந்தத் துர்மரணச் செய்தியை அவரிடம் சொல்லிவிட்டு, 'இந்த நோய் மாளிகைச் சோளத்தைத் தின்றதால் வந்தது' என்று தெரிவித்தார். 'கூட்டம் கூட்டமாக மக்களைக் கொல்லும் இந்த விஷப்பிரயோகத்தை இனிமேலாவது நிறுத்திவிட வேண்டும்' என்பது அவருடைய அபிப்பிராயம். முதல் நாள் சன்னன் கொண்டுவந்த சோளத்தைப் பார்த்த பௌஜ்தார் கௌடருடைய இந்த யோசனையை ஆமோதித்தார்.

'என்ன சோளங்க! ரெண்டு தடவை கையைத் தேச்சுக் கழுவிக்கூடக் கைநாத்தம் போகலே! அப்படிப்பட்ட தானியத் தைத் தின்று மனுஷன் செத்தாக்கூடக் கேள்வி முறை இல்லையே' என்று சொல்லி அவர், தம் அநுமதியை வெளியிட்டார்.

'மாளிகையிலிருந்து கொண்டுவந்த சோளத்தை யாரும் தின்னக்கூடாது. தின்றால் காலரா வரலாம். அந்தச் சோளத்தை வைத்திருப்பவர்கள் அதையெல்லாம் சாவடியில் கொண்டுவந்து ஒப்படைக்க வேண்டும். சோளம் தேவைப்படுபவர்கள் கௌடரின் வீட்டுக்குப்போய்ச் சோளம் வாங்கிக்கொள்ளவேண்டும்' என்று தண்டோராப் போடும்படி கௌடர் உத்தரவிட்டார்.

வெயிலில் நன்றாகக் காய்ந்த பறை, அதையும் மிஞ்சிய வெட்டியானுடைய வெண்கலக் குரல், இடிபோல் ஒலித்து ஜனங்களைக் கலங்கவைத்தது. நாணுவின் சாவைத் தொடர்ந்து பாதள்ளிக்குத் துன்பங்கள் ஒன்றன்மேல் ஒன்றாக வந்து கொண்டிருந்தன. அந்தத் துன்பங்களுக்குக் கலசம் வைத்தது போல் பௌஜ்தார் ஊரில் டேராப் போட்டிருந்தார். இவை களுக்கும் மேலாகக் கொள்ளைநோய், எட்ட இருந்தே ஜாடை காட்டி, 'ஊரையே விழுங்கிவிடுவேன்!' என்று மிரட்டியது.

தண்டோராச் செய்தியைக் கேட்ட படதையாவுக்கு அடக்க முடியாத கோபம் வந்தது. 'மாளிகையிலிருந்து கொண்டுபோன சோளத்தைத் தின்னக்கூடாது' என்று சொல்லுவது துஷ்பிரசாரம். 'ஏழை மக்களின் இடையில் தன் பெருமையை நிலைநாட்டிக்கொள்ள கௌடர் செய்யும் சூழ்ச்சி இது' என்பது அவருடைய தீர்மானம். 'மாளிகைச் சோளம் குழியில் நான்கு வருஷமாக இருந்ததால் மக்கியிருக்கலாம். அந்தச் சிறிய காரணத்தாலேயே காலரா வரமுடியுமா? மாளிகைச் சோளத் தைச் சாவடிக்குத் தருவித்துத் திரும்ப அதையே கடனாக ஏழைகளுக்குக் கொடுக்கக் கௌடர் செய்த தந்திரம் இது. இந்தச் செய்தியை, பாபு சாஹேபிடம் சொல்லி, பௌஜ்தா ரிடம் சொல்லச்சொல்லி, இந்தத் தண்டோரா பொய்யானது

என்பதை வெளிப்படுத்த வேண்டும்'. இந்த யோசனையோடு படதையா, பாபு சாஹேபை அழைத்து வரும்படி கெஞ்சனை அனுப்பினார்.

கெஞ்சன் மாளிகையிலிருந்து சீக்கிரம் திரும்பி வரவில்லை. அவனை முந்திக்கொண்டு பாபு சாஹேபே மடத்துக்கு அவசரமாக வந்தான். அவனுடைய முகத்தைக் கண்டதும், 'ஏதோ துன்பம் நேர்ந்திருக்கவேண்டும்' என்பது படதையாவுக்குத் தோன்றியது. 'பொய்ச்சாட்சி சொல்ல யாரும் ஒப்புக்கொண்டிருக்க மாட்டார்கள்' என்று அவர் யோசித்தார்.

பாபு சாஹேப் வெறுங்காலுடனும் தலையில் முண்டாசு இல்லாமலும் ஓடிவந்தான். முகத்தில் பயத்தோடு அசட்டுக் களையும் தட்டியது. ஓடிவந்ததால் மூச்சு இறைத்தது. சிரமப்பட்டு கூடத்துப் படிகளில் ஏறிப் படதையாவைக் கைச்சாடையாலேயே அவருடைய ரகசிய அறைக்கு அழைத்தான்.

படதையா அறையிலிருந்து வெளியே வந்தபோது கெஞ்சன் தலைவாசல் வழியாக ஓடிவருவது தெரிந்தது. படதையா ஒன்றும் தெரியாததுபோல், 'என்னடா, கெஞ்சா! பாபு சாஹேபை அழைச்சுக்கிட்டு வர இவ்வளவு நேரமா? கௌடருடைய தண்டோராவைக் கேட்டுகிட்டு நின்னயா, மகனே? இத்தனை வயசாகியும் வெளையாட்டுப்புத்தி போகலே ஒனக்கு!' என்று கண்டித்தார்.

கெஞ்சன் பேயறைந்ததுபோல் நின்றான். அவனைப் பார்த்தால் திக்பிரமை பிடித்தவன்போல் இருந்தது. வாயிலிருந்து பேச்சு வெளிவரவில்லை. படதையாவின் கேள்விகளை அவன் மனம் வாங்கிக்கொள்ளவே இல்லை. சற்று நேரம் கழித்து, 'ஆபத்து! சாமி! ஆபத்து! புத்லாபாய்!......' என்று சொல்லிப் பாதியில் நிறுத்தினான்.

'என்ன ஆச்சு, சொல்லுடா! ஏன் இப்படி உளறிக் கொட்டறே?' என்று படதையா கோபிப்பதுபோல் நடித்தார்.

'நடக்கக்கூடாதது நடந்து போச்சு, சாமி! புத்லாபாய் செத்துப்போய்ட்டாங்க' என்று கெஞ்சன் மனத்தை உறுதி செய்துகொண்டு சொன்னான். அறுபது வயதான அந்த அரைவேதாந்தி கெஞ்சனுக்குக்கூடக் கண்ணீர் பொங்கிவந்தது.

'நெனவோட இருக்கியா? இல்லே, மயக்கத்துலே பேசறியா?' என்று படதையா மறுபடியும் அதட்டினார்.

'தூக்குப்போட்டுக்கிட்டு அறைக்குள்ளே தொங்கறதைப் பாத்தூட்டு வந்தேன், சுவாமி! அதைப் பாத்ததுமே மயக்கம்

தெளிஞ்சு கிலிபிடிச்சுப் போச்சுங்க!' என்று கிலியுடனேயே சொன்னான் கெஞ்சன்.

'பாபு சாஹேப் இப்பத்தான் இங்கே வந்தார். அவருக்கு ஒண்ணும் தெரியலே! ஒனக்கு யார் சொன்னாங்க?' என்று பயப் படுவதுபோல் கேட்டார் படதையா.

'ஒருத்தர் எதுக்குச் சொல்லணுங்க, சாமி? நான் போன போது, யமுனா, ரூம் வாசல்லே படிக்கிட்ட நின்னுக்கிட்டிருந்தா. பாபு சாஹேபை அங்கே காணலீங்க. உள்ளாற இருந்தாரோ என்னமோ? அவர் வரட்டும்னு நான் அங்கேயே நின்னுக்கிட் டிருந்தேன். திடீர்னு என்ன ஆயிட்டுதோ? யமுனா விக்கி விக்கி அழுதுக்கிட்டு உள்ளே போனா. 'ஏன் யமுனா அழுவறே?'ன்னு கேட்டேன். 'பார், அண்ணா! ரூமுக்கதவை உள்ளே தாப்பாப் போட்டிருக்குது. புத்லாபாய் அக்கா அவுக எந்திரிக்கவே இல்லே!'ன்னு சொன்னாளுங்க. நான்போய் கதவுச் சந்து வழியா உத்துப்பாத்தேனுங்க. அம்மா அவுங்க தூக்குப் போட்டுக்கிட்டுத் தொங்கறாங்க' என்று சொல்லிவிட்டுக் கெஞ்சனும் தேம்பித் தேம்பி அழுதான்.

கெஞ்சன் பேசிக்கொண்டிருந்தபோதே பாபு சாஹேபும் படதையாவும் தெருவாயிலைத்தாண்டி மாளிகைக்கு ஓடினார்கள். கெஞ்சனுடைய துக்கம் குறையவில்லை. வேஷ்டி நுனியால் கண்ணைத் துடைத்துக்கொண்டு ஏதேதோ யோசனைகளில் ஆழ்ந்து விட்டான். அவனுக்குப் பேசவேண்டிய செய்திகள் நிறைய இருந்தன. திருமணம் ஆகிவந்ததிலிருந்து புத்லாபாயைப் பார்த்துக்கொண்டிருப்பவன் அவன். தான் கண்டவற்றை யெல்லாம் இன்னொருவரிடம் சொன்னால்தான் அவனுக்குத் திருப்தி. ஆனால் கேட்பவர்கள்தான் யாரும் இல்லை.

ஆட்களின் உதவியால் அறைக்கதவை உடைத்து உள்ளே போனார்கள். தூக்குக்கயிற்றை அவிழ்த்துவிட்டுப் பிணத்தை இறக்கிப் படுக்கையில் கிடத்திப் போர்த்தினார்கள். பாபு சாஹேப் பக்கத்தில் உட்கார்ந்து விக்கி விக்கி அழுதான். ஆனால் அவனுடைய அழுகை இயற்கையாக இல்லை. எதையோ நினைவு மூட்டிக்கொண்டு அழுதான்.

படதையா சாவடிக்கு வந்தார். பௌஜ்தார் முன் உட்கார்ந்து ஒரு துக்கச் சூழ்நிலையை உண்டாக்கிக்கொண்டார். 'ராவ் ஸாஹேப்! எங்கள் ஊரின் ஏழைகளின் தாய் இன்று கைலாசம் போய்விட்டாள்' என்று சொன்னார்.

'நாற்றச் சோளத்தைத் தின்று மற்றொருத்தி இறந்து விட்டாள்' என்று ஊகித்த பௌஜ்தார் புருவத்தை நெரித்தார்.

இந்தச் சாவுச் செய்தி கேட்க அவர் பாதள்ளிக்கு வரவில்லை. 'இந்த ஜனங்கள் எல்லோரும் ஏன் என்னிடம் இந்தச் சாவுச் செய்திகளைச் சொல்கிறார்கள்?' என்று நினைத்தார் அவர்.

'என்ன இது? எழுந்திருச்சது முதல் இந்தச் செய்தியைத் தானே கேக்கவேண்டியிருக்குது!'ன்னு பொறுமையை இழந்து கேட்டார்.

'எல்லாருடைய சாவையும்போல அல்ல இது, ராவ் சாஹேப்! வயிற்றுக்குச் சோறு இல்லாமெ ஏழை ஜனங்கள் மக்கச்சோளத்தைத் தின்பதைப் பார்க்க முடியாமல் தானும் அதையே தின்று புத்லாபாய் செத்தூட்டாங்க. பாபு சாஹேப் பரதேசி ஆயிட்டார். ஏன் ஊரே பரதேசி ஆயுட்டுது!' என்று படதையா போலித் துக்கத்தோடு சொல்லித் துர்மரணத்தை மறைக்கக் கற்பனைத் திரை போட்டார்.

ஆனால் எப்பொழுதும் உலகத்தில் தீயவர் தீயவை இவற்றுட னேயே சகவாசம் வைத்துக்கொண்டிருந்த பௌஜ்தாரால் இதை நம்பமுடியவில்லை. 'ஜாகீர் குடும்பத்து யஜமானி, நாற்றச் சோளத்தைத் தின்று சாவது நடக்காத காரியம்' என்பது அவருக்கு நன்றாகத் தெரிந்த விஷயம்.

''படதைய சாமி! 'இந்தப் பூனை பாகக்காயைக் கொண்டு போச்சு'ங்கற செய்தியை என் எதிரில் சொல்லாதீர்கள். புத்லாபாயின் மரணச் செய்தியைத் துப்பறிந்து தெரிந்து கொள்ளவே வேண்டும். பாபு சாஹேப் என்ன சொல்றான்?'' என்று கேட்டார் பௌஜ்தார்

'என்ன சொல்றதுங்க? பாவம். போர்த்திக்கிட்டு படுத்துக் கிடக்கறாருங்க! சர்க்கார் நீங்க இருக்கீங்க. என்ன செய்யலாமோ செய்யுங்க' என்று பேசி முடித்தார் படதையா.

கௌடருக்கு மறுபடியும் அழைப்புப் போயிற்று. வீட்டுக்குப் போய் மாடு கன்றுகளைக் கவனித்துவிட்டு ஸ்நானம் செய்து சிவபூஜையை முடிக்க நினைத்திருந்தார். மறுபடி அழைப்பு வந்த போது பொறுமையை இழந்தவராய் வந்தார். 'கூடிய சீக்கிரம் வேலையை முடித்துக்கொண்டு போனால் போயிற்று' என்று நினைத்தார். ஆனால் வந்தவுடன் புத்லாபாயின் செய்தியைக் கேட்டு அவருக்கும் இடி விழுந்ததுபோல் ஆயிற்று! பௌஜ் தாருடன் அவரும் மாளிகைக்குப் போனார்.

அவர்கள் இருவரும் மாளிகையில் நுழைந்தபோது அங்கே ஒரு பெருங்கூட்டம் கூடியிருந்தது. செய்தியைக் கேட்டவர்கள் எல்லோரும் கூட்டம் கூட்டமாக வந்து நிறைந்துவிட்டார்கள்.

பகல் மணி பன்னிரண்டு ஆகியும்கூட யாருமே வீட்டுக்குப் போக அவசரப்படவில்லை. ஒவ்வொருவரும் சாவின் காரணத்தைக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். சிலர் தமக்குத் தெரிந்த முறையில் பதில் சொன்னுர்கள். 'மாளிகையின் வருங்காலம் என்ன ஆகுமோ?' என்பது சிலரின் கவலை. உள்ளே இருந்து அழுகையும் கூக்குரலும் ஓயாமல் கேட்டுக்கொண்டிருந்தன.

கௌடரும் பௌஜ்தாரும் கூட்டத்தை விலக்கிக்கொண்டு உள்ளே போனுர்கள். பாபு சாஹேப் அழுதுகொண்டே அவர்களை வரவேற்ருன். பௌஜ்தார் அவனிடம் உபசாரமாகச் சில வார்த்தைகளைப் பேசிவிட்டு உள்ளே போனுர். 'புத்லாபாய் எங்கே படுத்துக்கொண்டாள்? இரவில் அவளோடு யார் இருந் தார்கள்? இந்த இடத்துக்குப் பிணத்தை எப்பொழுது கொண்டு வந்தார்கள்?' என்று ஒவ்வொருவரிடம் ஒவ்வொரு கேள்வியைக் கேட்ட பௌஜ்தார் அவர்கள் பதில் ஒன்றுக்கு ஒன்று பொருத்தம் இல்லாமல் இருப்பதைக் கண்டார். 'புத்லாபாய் விஷத்தால் ஆவது இறந்திருக்கவேண்டும்; அல்லது தற்கொலை செய்து கொண்டிருக்க வேண்டும்' என்பது கௌடரின் முடிவு. பிணத்தைச் சுற்றிலும் மாளிகையின் பரிவாரமெல்லாம் சேர்ந்து ஓலமிட்டு அழுதுகொண்டிருக்கும்பொழுது பிணத்தைக் கூர்ந்து கவனிக்க முடியவில்லை. 'பஞ்சாயத்துக் கூடவேண்டும்' என்று கௌடர் சொன்னுர். 'தக்க காரணம் இருந்தால் அப்படியே செய்யலாம்' என்று சொல்லிவிட்டுப் பௌஜ்தார் சாவடிக்குப் போனுர். மாளிகையில் நடக்கும் ஒவ்வொரு சம்பவத்தின் பின்னும் ஒரு சூழ்ச்சியின் நிழலைக் கண்டுபிடித்த கௌடர் பஞ்சாயத்தைக் கூட்டிவிட்டார். 'பிணத்தின் கழுத்தில் கயிறு அழுந்திய அடையாளத்தையும் நாக்கு வெளியில் வந்திருப்பதை யும் கண்டதால் தூக்குப்போட்டு இறந்த லட்சணங்கள் இருக்கின்றன' என்று கௌடர் தீர்ப்பு எழுதினுர். 'சவப்பரீட்சைக் காகப் பிணத்தை ஆஸ்பத்திரிக்கு அனுப்பவேண்டும்' என்று கௌடர் நினைத்தார். ஆனுல் பௌஜ்தார் அதற்கு இசையவில்லை. 'சவத்தைப் பாபு சாஹேபிடம் ஒப்படைக்க வேண்டும்' என்று உத்தரவு கொடுத்தார்.

அன்று முழுவதும் பாதள்ளி கிராமத்தில் யாருக்கும் சாப்பாடு ருசிக்கவே இல்லை. 'மாளிகையின் வருங்காலக் கதி என்ன?' என்பதுதான் மக்களின் ஒரே கவலை. இதுவரையில் ஊருக்கு ஒரே ஆதரவாக இருந்த மாளிகை இன்று சூனியம் ஆயிற்று! லக்ஷ்மிபாய் வரும் வரையில் அது அப்படியேதான் இருக்கும். என்ன இருந்தாலும் பாபு சாஹேப் அந்நியன். பாதள்ளி ஆஸ்தி யின்மேல்தான் அவனுக்கு மோகம் இருந்ததே தவிர, ஊரின்மேல்

அபிமானமே இல்லை. ஜாகீர் மாளிகையின் புண்ணிய பலன் இன்றோடு தீர்ந்தது! மரணத்தின் வெறுமை அங்கே சூழ்ந்து கொண்டது. புத்லாபாய் இறந்த துக்கத்தைவிட இந்த வெறுமையே அவர்களை வாட்டிப் பிழிந்தது.

மனிதர் நடமாட்டம் அற்ற காட்டில் நடக்கும் ஒற்றை யாத்திரிகனுக்கு நகர்வதுபோல் பொழுது மெதுவாக நகர்ந்து கொண்டிருந்தது. மாளிகையைச் சுற்றிலும் ஜனங்கள் ஒரு லட்சியமும் இன்றித் திரிந்துகொண்டிருந்தார்கள். பிணத்தின் இறுதிச் சடங்குகள் இன்னும் முடியவில்லை. பாபு சாஹேப் குதிரையின்மேல் ஓர் ஆளை அஜராணிக்கு அனுப்பி யசவந்தராவை உடனே வரும்படி அழைத்திருந்தான். 'அவர் வந்து பிணத்தின் முகத்தைக் கடைசியாகப் பார்க்கவேண்டும்' என்பதற்காக இறுதிச் சடங்குகளை நிறுத்திவைத்திருந்தார்கள். மாளிகையில் அன்று அடுப்பு எரியவில்லை. பாளாச்சார் இதை அறிந்து பாபு சாஹேபைத் தம் வீட்டுக்குச் சாப்பிட அழைத்துப்போனார். வேலைக்காரர்களுக்கும் வேலை செய்ய மனம் ஓடவில்லை. கொட்டகையில் இருந்த மாடு கன்றுகளை மேய்ச்சலுக்காக யாரோ அவிழ்த்துவிட்டார்கள். வேலைக்காரர்கள் மாளிகைத் திண்ணையில் உட்கார்ந்து ஏதேதோ பேசிக்கொண்டிருந்தார்கள். யாராரோ வந்துகொண்டும் போய்க்கொண்டும் இருந்தார்கள். யாரும் அதை லட்சியமே செய்யவில்லை.

பொழுது சாய்ந்தது. பாதள்ளியில் இப்படி உத்ஸாகம் இன்றி மாலை நேரம் இருந்ததே இல்லை. மாடு கன்றுகள் திரும்பி வந்தன. அதைக்கண்ட புண்ணியவான்கள் யாரோ கொட்டகையில் கொண்டுபோய்க் கட்டினார்கள். சூழ்நிலையில் துக்கம், ஏமாற்றம், அவமானம் எல்லாம் நிறைந்திருந்தன. 'எப்பொழுது பகல்பொழுது போகும்! இருட்டு வரும்' என்று எல்லோரும் எதிர்பார்த்தார்கள். யாரும் பகல் வெளிச்சத்தை விரும்பவில்லை. உள்ளே பாபு சாஹேப், குற்றவாளியைப்போல் தலைகுனிந்த வண்ணம் உட்கார்ந்திருந்தான். அவனைச் சுற்றிலும் உட்கார்ந்திருந்த பரிவாரத்தார் அரட்டையில் ஈடுபட்டிருந்தார்கள்.

சாவடியில் சந்தடி இருந்தது. ஆனால் அது சுரத்தாக இல்லை. எப்பொழுதும் இருக்கும் திருநாள் போன்ற சூழ்நிலை காணப்படவில்லை. அங்கே வேலை செய்யும் அஞ்சல்காரர்கள் எல்லாம் அசிரத்தையாக இருந்தார்கள். பௌஜ்தார் அன்றிரவு படதையாவின் மடத்துக்குப்போய் அங்கே வெகுநேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டு நடு இரவில் சாவடிக்கு வந்தார். குளிர் நடுக்கியது. அவ்வளவு குளிரில் சாவடியிலே படுத்துக்கொள்வது அவருக்கு

ஒத்துக்கொள்ளாது. குளிருக்கு அடக்கமான இடத்தில் படுக்கையைப் போடும்படி மல்லப்பனிடம் சொல்லிவிட்டு அவர் ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தார்.

மல்லப்பனுக்குக் கவலை உண்டாயிற்று. முதல் இரவிலிருந்து தர்மசத்திரத்து அறையில் தாதாவைச் சிறையிட்டிருக்கிருர்கள். 'குளிருக்கு அடக்கமாகப் படுக்கை போடவேண்டும்' என்றுல் அந்த அறையில்தான் போடுவது வழக்கம். ஆனுல் பௌஜ்தாரின் உத்தரவில்லாமல் அறையைத் திறக்கப் போலீஸார் மறுத்தார்கள். வெகுநேரம் யோசித்த மல்லப்பன், பௌஜ்தாரிடமே போய்த் தணிந்த குரலில், 'ராவ் ஸாப்! தர்மசாலைக் காமரா உள்ளேக் காலிபண்ணணுங்க. அப்ப தாதாவை எங்கே வைக்கறது?' என்று மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு கேட்டான்.

பௌஜ்தாரும் ஒரு கணம் யோசித்தார். 'அவனேக் கௌடர் வீட்டுக்கு அனுப்பிக் கௌடரைப் பார்த்துக்கொள்ளச்சொல்லி ஹவில்தாரிடம் (தலைமைக் கான்ஸ்டபிளிடம்) சொல்லு!' என்ருர் பௌஜ்தார்.

தாதாவுக்குத் தாற்காலிகமாக விடுதலை கிடைத்தது. ஹவில்தார், அவனேக் கௌடர் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போய், 'இவனே இன்னிராவுக்கு ஒங்ககிட்ட அனுப்பச் சொன்ஞருங்க. கவனித்துக்கொள்ள வேண்டிய கைதி. உங்ககிட்ட ஒப்பிச்சிட்டேனுங்க. இருட்டோட இவனேச் சாவடியில் கொண்டுவந்து ஒப்பிப்பது ஒங்க பொறுப்பு' என்று சொல்லிவிட்டுப் போனன்.

பௌஜ்தாரையும் சில போலீஸ்காரர்களேயும் தவிரச் சாவடியில் வேறு யாரும் இல்லே. ஆர்டர்லி கேசவராவ், பாளாச்சார் வீட்டிலேயே சாப்பாடும் படுக்கையும் வைத்துக் கொண்டிருந்தான். ஏதோ யோசனேயுடன் உட்கார்ந்திருந்த பௌஜ்தாரின் காதில் கஞ்சா அடைக்கும் கெஞ்சன் வந்து ஏதோ கிசுகிசுத்தான். பௌஜ்தாரின் முகம் மலர்ந்தது. தாடி வளர்ந்த முகம் மயிர்க்கூச்செறிந்தது. பொங்கிவந்த மகிழ்ச்சியால் மேல் கீழ் என்ற வேற்றுமையை மறந்து அவர் கெஞ்சனுடைய முதுகில் தட்டிக்கொடுத்தார். சங்கோஜத்தால் கெஞ்சன் பின்னுக்கு நகர்ந்தான். பௌஜ்தார் அவசரமாக எழுந்திருந்து தர்மசத்திரத்து அறையில் நுழைந்தார்.

பௌஜ்தார், அந்த அறையில் நிலைகொள்ளாமல் படுத்துப் புரண்டார். பதினேந்து நிமிடங்கள் பதினேந்து ஆண்டுகள்போல் தோன்றின. அவருடைய மனம் அமைதியை இழந்தது. பாதள்ளியின்மேலேயே அவருக்குக் கோபம் வந்தது. பலதடவை அறைக்கு வெளியேபோய் எட்டிப் பார்த்துவிட்டுத் திரும்பி வந்தார்.

தண்ணீர் குடித்தார்; படுத்துப் புரண்டார். தனிமையைத் தாங்க முடியாமல் தலையைப் பிடித்துக்கொண்டார்.

அவருடைய தவம் பலிக்கும் நேரம் வந்தது. கெஞ்சன் மெதுவாக அறைவாயிலைத் தட்டினான். அதையே எதிர்பார்த்திருந்த பௌஜ்தார், எழுந்திருந்து வெளியேவந்து, 'ஆள் வந்துதா?' என்று கேட்டார்.

'ராவ் சாஹேப், வெளியே போலீஸ் காவல் காக்கரானுங்க. அவனை அனுப்பிவிடுங்க' என்று கெஞ்சன் எச்சரித்தான்.

'அரே இஸ்மயில், சாவடியில் காகிதக் கவர் ஒன்று இருக்குது. இவன்கிட்டக் கொடுத்தனுப்பு' என்று இஸ்மயிலுக்கு உத்தரவு போட்டார். இஸ்மாயிலுக்கு இந்த உத்தரவு புதியதன்று. அவன் சங்கேதத்தைப் (குறிப்பைப்) புரிந்துகொண்டான். நமுட்டுப் புன்னகை செய்தவண்ணம் கெஞ்சனுடன் சாவடிக்குப் போனான்.

மல்லி அறைக்குள் புகுந்தாள். ஆனால் அவளிடம் நேற்றைய தளுக்கும் மினுக்கும் காணப்படவில்லை. விக்கி விக்கி அழுது கொண்டிருந்தாள். 'சாஹேப் அவர்களே, என்னை உட்டுடுங்க. என் அண்ணன் பொஞ்சாதிக்கு காலரா வந்திருக்குதுங்க. துர்க்கம்மாவின் நோய் வந்தபோது என்ன நடந்தாலும் நடக்கலாம். பாள்யா வீட்டுக்காரரெல்லாம் இப்படித்தான் செத்தாங்க! என்னை விட்டுடுங்க' என்று கெஞ்சினாள். காலையிலிருந்து சாவுச் செய்தியைக் கேட்டுக்கேட்டு பௌஜ்தார் அலுத்துப் போய்விட்டார். அறைக்கதவைத் தடாரென்று சாத்தும்போதே அவருடைய கோபம் தெரிந்தது. மல்லி வெளியே வந்தபோது காலை ஆறு மணி.

## 14

'தர்மசத்திரத்து அறையில் சிறைப்பட்ட தாதாவை அன்றிரவு தாற்காலிகமாக விடுதலை செய்வித்தார்கள்' என்ற செய்தியை யாரோ லக்ஷ்மணனிடம் சொன்னார்கள். எளிமையாகவே வாழ்ந்த அவனுக்கு யாரையும் லட்சியம் செய்யாமல் வாழ்ந்த மகன் ஒரு சுமையாகவே இருந்தான். அவன் குற்றவாளியானாலும் இல்லாவிட்டாலும் சிறையில் அடைபட்டது லக்ஷ்மணனுடைய கபடற்ற மனத்துக்கு அவமானமாக இருந்தது. 'தன்

மகனை இம்சித்தார்களோ?' என்ற சங்கடமும் உண்டாயிற்று. 'அவனைப் பார்க்கவேண்டும்' என்ற பரபரப்பால் அவன் ஓடோடி வந்து கௌடர் வீட்டை அடைந்தான். தாதாவும் அப்பொழுது தான் அங்கே வந்து நின்றான். அவனுடன் வந்திருந்த இஸ்மாயில் கௌடருக்குச் செய்தியைச் சொல்ல உள்ளே போயிருந்தான். அவன் வெளியேவந்து சாவடியை நோக்கிப் போனபின் லக்ஷ்மணன், தாதாவைக் கட்டிக்கொண்டு அழுதான்! ஒருநாள் மகனைப் பிரிந்ததிலேயே அவன் சோர்ந்துபோய்விட்டான். சிறைவாசத்தால் 'மகனிடம் ஏதாவது மாறுதல் ஏற்பட்டிருக்கும்' என்று நினைத்துப் பார்வையாலேயே அவன் உடம்பையெல்லாம் தடவிக்கொடுத்தான். தகப்பனுடைய கபடற்ற அன்பால் தாதா வுக்குச் சிரிப்பும் அழுகையும் கலந்துவந்தன. மெதுவாகத் தன்னை விடுவித்துக்கொண்டு அவனைக் கௌடர் வீட்டுக் கூடத்துக்கு அழைத்துச் சென்றான்.

அப்பொழுது கௌடர் கூடத்தில் இருக்கவில்லை. உட்புறத்து அறையில் தமக்கு வேண்டிய சில ஆலோசகர்களுடன் ஆழ்ந்த ஆலோசனை நடத்திக்கொண்டிருந்தார். கடந்த மூன்று நாட்களில் பாதள்ளியில் நடந்த சம்பவங்களால் கௌடரின் மனம் நொந்து போயிருந்தது. நிலைமையைப் பார்க்கும்போது ஏதாவது ஒரு முடிவுக்கு வந்தே தீரவேண்டி இருந்தது.

''கடவுளே! படதையா சாமியார் இப்படிப் பொய்யையே சொல்லிக்கொண்டிருக்க வேண்டுமா? 'புத்லாபாய் அக்கா நாற்றச் சோளத்தைத் தின்று இறந்துவிட்டாள்' என்று பொய்ப் புகார் கொடுக்கவேண்டிய அவசியம் என்ன? இந்தத் தந்திரம் யாருக்குத் தெரியாது? 'நானே பாபு சாஹேபைத் தப்பவைத் தேன்' என்று ஊரில் ஜம்பம் அடித்துக்கொள்ள வேண்டாமா? அதற்காகத்தான். இப்பொழுது நாமெல்லாம் சும்மா உட்கார்ந் திருந்தால் அப்புறம் அவருடைய வாலாட்டம் அதிகமாகிவிடும். அப்படிப்பட்டவருடன் 'பழையபடி சிநேகம் செய்துகொள் ளுங்கள்' என்று பௌஜ்தார் என்னிடம் சொன்னார். 'என் கட்சிக்காரரைக் கேட்டுச் சொல்கிறேன்'னு தப்பித்துக்கொண்டு வந்தேன் ஐயா! நீங்கள் சொல்வதைச் சொல்லுங்கள்'' என்று கௌடர் உணர்ச்சி வேகத்துடன் சபைக்குச் சவால் விட்டார். குரலில் ஆற்றாமை தொனித்தது. கட்சி சேர்ந்துகொண்டு 'எதிராளியை நொறுக்கிவிட வேண்டும்' என்ற ஆத்திரம் இருந்தது.

'ஊருக்கு நன்மை ஏற்பட்டுப் படதையாவின் வால் ஆடிக் கொண்டிருந்தால் நாம் வேண்டாம்' என்று சொல்லப்போவ தில்லை. ஆனால் படதையாவின் சுபாவம் சிநேகத்துக்கு ஏற்றதல்ல.

அந்தப் பாபு சாஹேப் ஒரு பைத்தியம்! அவனைப் படதையா, தன் உள்ளங்கையில் வைத்துக்கொண்டு கூத்தாடவைக்கிறன். 'அவனுடைய மயிர்க்கால்களுக்குக்கூடக் கேடுவரக் கூடாது' என்று வாயால் சொல்கிறன். கையால் மொட்டை விண்ணப்பம் எழுதிப் பௌஜ்தாரை வரவழைக்கிறன். 'புத்லாபாயின் விவகாரத்திலிருந்து தப்பவேண்டும்' என்றல் பௌஜ்தாருக்கு இரண்டாயிரம் ரூபாய் கொடுக்கும்படி உபதேசம் செய்கிறன். 'நாஞ இறந்த விவகாரத்தில் நாம் எல்லாம் லஞ்சம் வாங்கிக் குற்றத்தை மூடி மறைத்துவிட்டோம்' என்று சொல்கிறன். இப்போது புத்லாபாய் இறந்துவிட்டாள். 'கௌடர், பொய்ப் புகார் வாக்குமூலம் எழுதவேண்டும்' என்று சொல்கிறர். மொத்தத்தில் பேச்சுக்கும் செய்கைக்கும் சம்பந்தம் இல்லாத மனுஷன். இப்படிப்பட்டவருடைய பொம்மை விளையாட்டை ஊர் எவ்வளவு தூரம் பொறுத்துக்கொள்ளவேண்டுமோ? எதற்காகப் பொறுத்துக்கொள்ளவேண்டுமோ? தெரியவில்லை. 'பாம்பும் அவரும் ஒன்று! இருவர் சிநேகமும் ஒன்றுபோல்தான்' என்று பாளார்சார் அழுத்தமாகத் தம்முடைய அபிப்பிராயத்தை வெளியிட்டார்.

''ஆச்சாரையா சொல்றது எல்லாமே சரிதான்! ஆனல் பௌஜ்தாரே உட்கார்ந்துகொண்டு, 'பொய்ப்புகார் எழுது' என்று சொன்னல் மறுக்க முடியுமா? கௌடரே! தாதாவைக் காப்பத்தணுமேயானல் பௌஜ்தாரைத் தாஜா பண்ணணும். நாஞ செத்துப்போய்விட்டான். புத்லாபாயும் போய்விட்டாள். 'ஒத்தன் வவுத்துவலியாலே போனன். இன்னெத்தி வயிறு கெட்டுச் செத்துப்போனள்'னு மொத்தத்திலே இந்தத் துர்மரணச் செய்தியெல்லாம் நல்லா மூடிமறைச்சிருந்தாத் தேவலேன்னு தோணுது'' என்று லிகாடி லிங்கப்பா, தலைப்பா விலிருந்து வெற்றிலை பாக்கை எடுத்துக்கொண்டே சொன்னன்!

பேச்சில் இன்னும் விறுவிறுப்பு ஏறியிருக்கும். பதில் சொல் வதற்காகத் தலை நிமிர்ந்த கௌடர் உள்ளே எட்டிப் பார்த்த வுடன் அஞ்சல்கார மல்லப்பனைக் கண்டார். 'என்ன மல்லப்பா? இன்னும் என்ன புது விஷயம்?' என்று கேட்டார்.

''அப்படி ஒண்ணும் இல்லீங்க. அந்தத் தாதாவின் அப்பா லக்ஷ்மணன் இருக்கானல்ல. அவன் வெளியேவந்து குந்தியிருக் கானுங்க. 'பாயி சாஹேப் (புத்லாபாய்) செத்த சங்கதி, அது எப்படி எப்படி நடந்துச்சு'ங்கற விவரமெல்லாம் தாதா எதிரி லேயே சொல்ல ஆரம்பிச்சுட்டானுங்க'' என்று மல்லப்பா செய்தி சொன்னன்.

'அப்படியா? அந்த லக்ஷ்மணனை இங்கே வரச்சொல்லு. அவனுக்குத் தெரியாம நாம் ஒண்ணும் செய்ய முடியாது. சுருக்க வரச்சொல்லு' என்று கௌடர் மல்லப்பனுக்கு உத்தரவிட்டார்.

பயத்தால் அகல விழித்து அங்கும் இங்கும் பார்த்துக் கொண்டு வந்த லக்ஷ்மணன், தயங்கியபடியே உள்ளே வந்தான். ஊர்ப் பெரியவர்கள் எல்லோரும் கூடியிருப்பதைக் கண்டு குழப்பம் அடைந்தான். அவனுக்கு 'என்ன செய்வது?' என்று தெரியவில்லை. எல்லோரையும் தரையில் விழுந்து கும்பிட்டான். எழுந்திருந்து கண்ணைத் துடைத்துக்கொண்டு பேசாமல் ஒரு மூலையில் போய் உட்கார்ந்தான். அக்கிரமத்துக்கும் அவமானத் துக்கும் பலியாகிய அவனுடைய முகத்தோற்றத்தைக் கண்ட கௌடருக்குக்கூட அவனிடம் பேசத் தைரியம் வரவில்லை.

பாளாச்சார், பொடியை உறிஞ்சியபடி, 'என்ன லக்ஷ்மணு, தாதா என்ன சொல்கிறான்?' என்று மௌனத்தைக் கலைத்துப் பேச முயன்றார். லக்ஷ்மணன் திருதிருவென்று விழித்தபடி எல்லோருடைய முகத்தையும் ஒரு கணம் பார்த்தான். பிறகு தன்னோடு பேச்சுக்கொடுத்தவர் பாளாச்சார் என்பதை அறிந்து அவர் பக்கம் திரும்பிப் பார்த்தான். மறுபடியும் தலைகுனிந்து தரையைக் கீறிக்கொண்டே பேசத் தொடங்கினான்.

''தாதாவா? என்ன சொல்றதுங்க. சிறுபிள்ளைத்தனம்! நானுப் பெரியப்பாவைக் கொன்ற பாபு சாஹேப், புத்லாபாயை யும் கொன்றுவிட்டான். 'பௌஜ்தாரைக் கையில் போட்டுக் கொண்டு, தப்பவேண்டும்' என்று சூழ்ச்சி செய்கிறான். 'இப்படிச் சூழ்ச்சிசெய்தால் அவன் பெண்டாட்டியின் தாலி மிஞ்சாது!'ன்னு சொல்றான். 'பொய்க்கேசு போட்டு என்னைத் தூக்குமரத்துக்கு அனுப்புவதாக இருந்தால் அவனைக் கொன்று விட்டே போவதில் என்ன தப்பு?' என்று சொல்கிறான். சுத்தப் பைத்தியம்!'' என்று சொல்லிப் பெருமூச்சுவிட்டான் லக்ஷ்மணன்.

இதைக் கேட்ட மற்றவர்கள் திடுக்கிட்டார்கள். 'இந்த மாதிரி பயங்கரமான யோசனை செய்யும் அளவுக்கு அவன் தலையில் சூடேறி இருக்கிறது' என்று அவர்களுக்குத் தோன்றவில்லை. 'இனிமேல் படையா சொன்னபடியெல்லாம் தாங்கள் ஆடினால் எதிர்பாராத அளவுக்கு முடிவு ஆபத்தாக இருக்கும்' என்று அவர்கள் பயப்பட்டார்கள்.

'இந்தக் கொலைக்கேசிலிருந்து தாதா விடுபடவேண்டும். அதனால் ஊருக்கும் நன்மை ஏற்படவேண்டும். இந்தச் சிக்கலான நிலைமையில், தாதா 'இப்படியெல்லாம் யோசிப்பதும் பேசுவதும்

சரியில்ல' என்று நீ சற்றுப் புத்தி சொல்லக்கூடாதா லக்ஷ்மணா?'' என்றார் பாளாச்சார்.

''இருக்கற ஒரு மகன் இப்படியெல்லாம் செய்து தூக்குக்குப் போகவேண்டியிருக்கும்னு கனவிலேயாவது நெனச்சேனா? பௌஜ்தார் இஷ்டப்படி செய்துகொள்ளட்டும். 'பள்ளம் இருக்கற எடத்துலே தண்ணி தேங்கிட்டுப் போவுது. பொய்க் கேசு போட்டவன் ஒன் தலை எழுத்தை மாத்தி எழுதமுடியாது'ன்னு சொல்லிக்கிட்டுக் குந்தியிருந்தேனுங்க. நீங்க கூப்பிட்டீங்க; இப்படி வந்தேன்'' என்று முகத்தைத் தொங்கப்போட்டுக் கொண்டே லக்ஷ்மணன் சொன்னான்.

இதுவரையிலும் பேசாமல் சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்த கௌடர், ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவர்போல், திடீரென்று எழுந்திருந்தார். அவருடைய நடையில் இருந்த வேகத்தைக் கண்டு யாரும் 'என்ன, ஏது?' என்று கேட்கவில்லை. கௌடர் மாட்டுக்கொட்டகைக்குப் போனார். அங்கே தாதாவை வரவழைத்து ஏதோ பேசிவிட்டுத் திரும்பினார்.

'என்ன, கௌடரே! இவ்வளவு சிக்கலான நிலைமையில் மேலே என்ன செய்வது? இதற்கு ஏதாவது ஒரு வழி கண்டுபிடிக்க வேண்டுமே?' என்றார் பாளாச்சார்.

கௌடருக்கு என்றும் இல்லாத ஆவேசம் வந்தது. அறுபதை நெருங்கிய தம் வயதையும் மறந்து நரைத்த மீசையில் கைபோட்டு, 'நாம் எல்லோரும் வளைபோட்டுக் கொள்ளவில்லை, ஆச்சாரையா! பௌஜ்தாரிடம் இதை நிரூபிப்பதுதான் அடுத்த வேலை. நாளைக்குப் பௌஜ்தார் என்ன வேஷம் போடப் போகிறானோ? அதற்குப் பதில் சொல்லும் பொறுப்பை என்னிடம் விட்டுவிடுங்கள். ஆனால் ஒன்று; இங்கே கூடியிருப்பவர்கள் தெய்வம் போன்றவர்கள். நீங்கள் எல்லோரும் சேர்ந்து எனக்குக் கைகொடுக்க வாக்குக்கொடுங்கள். நான் இருந்தாலும் சரி, சிவனிடம் சேர்ந்தாலும் சரி, என் குடும்ப கௌரவம் இப்பொழுது இருப்பதுபோலவே எப்பொழுதும் இருக்கும்படி பார்த்துக் கொள்ளும் பொறுப்பு உங்களுடையது. இதோ பாளாச்சார் இருக்கிறார். பாதள்ளியின் நடமாடும் தெய்வம் அவர். நீங்கள் எல்லோரும் இருக்கிறீர்கள். பாதள்ளி மணியக்காரக் குடும்பம் நான் இல்லாவிட்டாலும் முன்னேற வேண்டும். இதை நடத்திக் கொடுங்கள்' என்றார் கௌடர்.

கௌடருடைய குரலில் ஆவேசம் இருந்தது; போட்டி இருந்தது; ஊரின்மேல் அபிமானம் இருந்தது. மனச்சாட்சியின் தூண்டுதல் இருந்தது. கடமை உணர்வு இருந்தது. கூப்பிய கை

நடுங்கவில்லை. பார்வையில் சஞ்சலம் இல்லை. ஆனால் சுருங்கிய கன்னங்களில் கண்ணீர் வழிந்து ஓடியது.

கௌடருடைய தோற்றமும் பேச்சும் எல்லோருக்கும் பயத்தை உண்டாக்கின. இதுவரையிலும் கௌடர் செய்த அக்கிரமங்கள் அவர்களுக்குத் தெரியாமல் இல்லை. ஆனால் கௌடர் அபிமானத்துடன் பாதள்ளியை அணைத்துக்கொண்டது போல் வேறு யாரும் அணைத்துக்கொள்ளவில்லை. விழிப்புடன் எப்பொழுதும் ஊரைக் கோட்டைபோல் இருந்து காப்பாற்று கிறவர். அவருடைய குணம், செயல், பெருமைகளை எல்லோரும் ஏற்றுக்கொண்டிருக்கும்போது அவர் இப்படிப் பேசியது அவர்கள் உள்ளத்தைத் தொட்டது.

'ஏன் இப்படிச் சொல்றீங்க ஐயா! நீங்கள் கிழித்த கோட்டை என்றைக்காவது நாங்கள் தாண்டியிருக்கிறோமா? நீங்கள் ஊரின் யஜமானர்; எல்லாருடைய கௌரவமும் உங்கள் கையில்தான் இருக்கிறது. பெரியவங்க புண்ணியத்தாலே ஒங்க குடும்ப கௌரவத்துக்கு ஒருநாளும் கொறவு வராதுங்க. பாதள்ளிக்குக் கௌரவம் வேணுமானா உங்க கௌரவத்தை உள்ளங்கையிலே வச்சுக் காப்பாத்துவோம். வாக்குக் கொடுக்க நாங்க எம்மாத் திரம்!' என்று லிகாடி லிங்கப்பன் சொல்லும்போதே துக்கம் நெஞ்சை அடைக்கக் கௌடரின் காலைத்தொட்டுக் கும்பிட்டான்.

ஆனால் பேச்சு என்னமோ பேசி ஆயிற்று. விட்ட அம்பைத் திருப்ப முடியாததுபோல் அதை மாற்ற முடியாது. பாளாச்சார் அந்தப் பேச்சின் ஆழத்தில் உள்ள கருத்தைச் சட்டென்று புரிந்து கொண்டார். மின்னல் வெட்டும் நேரத்தில் பாதள்ளியின் வருங்கால வரலாறு அவர் மனக் கண்முன் தோன்றியிருக்க வேண்டும்.

''இதெல்லாம் என்ன பேச்சுக் கௌடரே! மணியக்காரரர் குடும்பம் நீடித்திருப்பது பாதள்ளிக்கு வேண்டாமா? நீங்களும் நானும் இன்று வந்து நாளைக்குப் போகத்தான் வேண்டும் கௌடரே! ஆனால் ஊருக்கு மணியக்காரரர் இருந்தே தீரவேண்டும் அல்லவா? உங்கள் முன்னோர்கள் காலத்துக்குப் பின் நாங்கள் எல்லோரும் உங்களை மணியக்காரராக நினைக்கவில்லையா? அவர்கள் எல்லோரும் இப்படித்தான் ஊராரிடம், 'வாக்குக் கொடு' என்று கேட்டார்களா? அப்படியிருக்க, பாதள்ளி மக்கள், 'உங்கள் வமிசம் நீடித்து முன்னேற விடமாட்டார்கள்' என்று ஏன் நினைக்க வேண்டும்? இது அநாவசியமான பயம்'' என்று பாளாச்சார் ஆறுதல் தரும் குரலில் சொன்னார்.

''அந்த மாதிரி சந்தர்ப்பம் வந்து குடும்ப கௌரவம் அழியும் போல் இருந்தால் 'உங்களுக்கெல்லாம் நினைவு இருக்கட்டும்' என்று ஒருவார்த்தை சொன்னேன், அவ்வளவுதான். இனிமேல் பாபு சாஹேப், தான் செய்த வினையின் பயனை அநுபவிக்க வேண்டும். அதை நாமே தவறவிட்டால் ஊர் மக்கள் நம் முகத்தில் காறி உமிழ்வார்கள். பௌஜ்தார் இன்றைக்கு இருப்பான், நாளைக்குப் போவான். ஜனங்களோடு இருப்பவர்கள் நாம் அல்லவா? அவர்களுடைய அன்பை இழந்தபின் நாம் இருந்தாலும் ஒன்றுதான்; செத்தாலும் ஒன்றுதான். அதற்காக இவ்வளவு தூரம் யோஜனை செய்ததில் ஒரு விஷயம் உறுதி யாயிற்று. தலைபோனாலும் பொய்ப்புகார் எழுதக்கூடாது. நாம் எழுதினாலும் தாதா நம் மானம் மிஞ்சவிடமாட்டான். இனி மேல் எந்த அநியாயமும் செய்ய முடியாது'' என்று கௌடர் ஆணித்தரமான குரலில் சொன்னார்.

'இதுவரையிலும் நீங்கள் அப்படி என்ன அக்கிரமம் செய்தீர்கள், கௌடரே! பஞ்சாயத்துக்குக் கட்டுப்பட்டு நடந்து கொண்டீர்கள். அதை அநியாயம் என்று யார் சொல்வார்கள்?' என்று அவருக்கு ஆறுதலாக இருக்கட்டும் என்றே சொல்லி வைத்தார், பாளாச்சார்.

''இதெல்லாம் மனசுக்குச் சமாதானமாகும் பேச்சு, ஆச்சாரையா! கடவுளுக்குச் சம்மதம் ஆகாது! நாணுவின் கொலை நடந்தபோது அதை மறைத்ததே பெரிய தவறாகிவிட்டது. ஊர் மக்கள் வந்து 'பொய்ப்புகார் எழுதியே தீரவேண்டும்' என்று வற்புறுத்தவில்லை. நாம் நாலுபேர் சேர்ந்து 'நம் கொள்கையே தான் ஊர்க்கொள்கை' என்பதுபோல் நடத்திக்கொண்டு வந்தோம். இதோ லக்ஷ்மணன் இங்கேதான் இருக்கிறான்; கேளுங்கள். அவன் நம் தீர்ப்பை மனதார ஒப்புக்கொள்ளவில்லை. தாதாவைக் கேளுங்கள். 'நாம் செய்தது அநியாயம்' என்கிறான். ஊர்ச் சேரி மக்களைக் கேளுங்கள். மனத்தைவிட்டு உண்மையைச் சொல்லமாட்டார்கள். 'அவங்க பெரியவங்க; துட்டைத் தின்னூட்டுப் பெரியவங்க செய்யற தப்பை மூடிமறைக் கறாங்க'ன்னு தங்களுக்குள்ளே பேசிக்கறாங்க. எவ்வளவுதான் மறைத்தாலும் அநியாயம் வெளியே வந்துதானே தீரவேண்டும்! நம்மைத் தெய்வந்தான் காப்பாற்ற வேண்டும். இல்லாவிட்டால் பெரியவங்க புண்ணியந்தான் காப்பாற்ற வேண்டும். அவர்கள் செய்த புண்ணியத்தால்தான் குடும்ப கௌரவம் நிலைத்திருக் கிறது. அதனால்தான் 'அதைக் காப்பாற்றுங்கள்' என்று உங்களை யெல்லாம் கேட்டுக்கொண்டேன்'' என்றார் கௌடர்.

கௌடரின் பேச்சு, சூரிய ஒளியைப்போல் பளிச்சென்று இருந்தது. அதை மறுக்க யாருக்கும் துணிவு இல்லை. பாதள்ளியின் உள்மனமே கௌடரின் வாய்மூலமாக இதைப் பேசவைத்தது. கௌடரின் பிடிவாதம் எல்லோருக்கும் தெரிந்ததுதான். ஒரு தரம் முடிவு செய்துவிட்டால் அவ்வளவுதான்! பாதள்ளியின் மலை சரிந்தாலும் சரியலாம்; கௌடர் தம் உறுதியைத் தளரவிட மாட்டார்! கௌடருடைய இந்தத் திடீர் மனமாற்றத்துக்குக் காரணம் யாருக்கும் தெரியவில்லை. அவர்கள் எல்லோருக்கும் வேறொரு கவலை வந்துவிட்டது. 'பாதள்ளிக்கு வந்த ஆபத்து இன்னும் தீர்ந்தபாடு இல்லை' என்பதுதான் அது. நேற்றுவரையில் கோட்டைபோல் உறுதியாக இருந்த பாதள்ளியின் பொது வாழ்வில் விரிசல்கள் கண்டுவிட்டன. புத்லாபாயின் மறைவினால் ஜாகீர்தார் குடும்பம் ஆபத்துக்கு உள்ளாகியது. படதையாவின் அவிவேகத்தால் ஹிரேமடம் அழிந்துவிடும் நிலையில் இருக்கிறது. கௌடர் வேறு இந்த முறையில் பேசிவிட்டார். இன்னும் 'என்ன விபத்துகள் காத்துக்கிடக்கின்றனவோ?'

பாளாச்சாரின் புருவங்கள் நெரிந்தன. இரவு வெகு நேரம் ஆகிவிட்டது என்று எல்லோருக்கும் கௌடர் விடைகொடுத்தார். வந்தவர்கள் எல்லோரும் அமைதியாகக் கௌடரை வணங்கி விட்டுச் சென்றார்கள். அவர்களை வழியனுப்பிவிட்டுக் கௌடர் படுத்துக்கொள்ளப் போனார்.

கௌடருடைய மனம் இன்னும் கவலைகளிலிருந்து விடுபடவில்லை. அவருடைய நாற்பதாண்டு மணியக்கார உத்தியோகத்தில் இது போன்ற பல சம்பவங்கள் நிகழ்ந்திருக்கின்றன. ஒருவிதமான அசட்டுத் தைரியத்தால் அவற்றை எதிர்த்துவந்தார். மணியக்காரக் குடும்பத்துக்கே உரிய பெருமை, அவருக்கு உயிர் நாடியாக இருந்தது. அதன் பலத்தால் ஆயிரம் அக்கிரமங்களுக்கு அவர் காரணமாக இருந்தார். ஆனால் தைரியத்தை இழக்கவில்லை. 'அக்கிரமம் செய்வது அதிகாரத்தின் ஒரு முக்கியமான பகுதி' என்பது அவருடைய முடிவு.

ஆனால் இரண்டு நாட்களுக்கு முன்பு சேரியில் பாள்யா குடும்பத்தினரின் பிணக்குவியலைப் பார்த்தபோது மட்டும் கௌடர் பயத்தால் நடுங்கினார். கௌடரே பாளையக்காரராக இருந்த காலம் அது. ஊர் மக்களின்மேல் தம் குடிமக்கள் போலவே அன்பும் அதிகாரமும் செலுத்திவந்தார். தம் கண்ணாலேயே பிணங்களைப் பார்த்தபோது தாம் தானியத்தைப் பங்கிட்டுக் கொடுக்காதது குற்றம் என்று அவருக்குத் தோன்றியது. ஜாகீர்தாரோடு போட்டியிட்டு ஏழைகளைக்

கொன்றதுபோல் ஆயிற்றல்லவா? யோசித்துப் பார்த்தால் பாதள்ளி முழுவதுமே கௌடருடையதுதான். ஜாகீரி முறை ஒழிந்தபின் அவர்களுக்கும் ஊருக்கும் என்ன தொடர்பு?

''நம் அதிகாரத்தில் ஊர் இருக்கும்போது நாம் என்ன செய்தோம்? சண்டை நடந்த இடங்களில் எல்லாம் நாம்தான் முதல் ஆள். இனிமேலாவது அக்கிரமங்கள் நடக்காமல் பார்த்துக் கொள்ளவேண்டும். அதனால் தலை போனாலும் பரவாயில்லை. சேரியில் பாள்யா பிணமாகக் கிடந்தான். அவன் உயிரைவிட நம் உயிர் பெரிதா? எப்பொழுதோ வந்த பெரிய பஞ்சத்தின் போது நம் பெரியவர்கள் தினந்தோறும் ஏழைகளுக்குத் தானியம் கொடுத்தபின்தான் தாங்கள் சாப்பிடுவார்களாம். நாமும் கொடுத்தோம். ஆனால் அதன் பின்னால் சுயநலம் இருந்தது. 'ஜாகீர்தாரைவிட நாம் குறைந்துவிடவில்லை' என்று காட்டும் தற்பெருமை இருந்தது'' என்று பச்சாத்தாபப் பட்டார் கௌடர்.

'ஒரு வழியாக நடக்கப்போவதை நிச்சயித்தாகிவிட்டது. இனிமேல்தான் நம்முடைய பலத்துக்குப் பரீட்சை நடக்க வேண்டும். இனிமேல் நியாயமாக நடந்துகொள்ளவேண்டும். இந்த நியாயத்தின் பின்னால் மறைந்திருக்கும் ஆயிரம் அக்கிரமங்கள் அம்பலமானாலும் பரவாயில்லை. அநியாயத்தால் அநியாயத்தை மறைத்துச் சுகமாக வாழலாம். ஆனால் அந்த இரண்டு அநியாயங்களின் இடையில் ஒரு மனிதன் உயிர் துடிதுடிக்குமே! பசித்த மற்றொரு ஜீவன் வேதனையால் மனம் பதைக்கும். நமக்கு எவ்வளவு துக்கம் வந்தாலும் சரி, நியாயமாக நடந்துகொள்ள வேண்டும்' என்று கௌடர் முடிவு செய்தார்.

கௌடர் மனக்கவலை நீங்கியது. நள்ளிரவுக்குப்பின் சுகமாகத் தூக்கம் பிடித்தது.

## 15

'சவப் பரீட்சைக்காகப் புத்லாபாயின் உடலை ஆஸ்பத்திரிக்கு அனுப்பவேண்டும்' என்று கௌடர் நிச்சயித்து, அதற்குத் தக்க ஏற்பாடும் செய்துவிட்டார். இந்தச் செய்தியைக் கேட்ட பௌஜ்தாருக்கு அடக்க முடியாத கோபம் வந்தது. இதனால் தம்முடைய கௌரவம் போய்விட்டதாக நினைத்தார். 'கேவலம் கௌடர் தம்முடைய உத்தரவை மீறிவிட்டானே!' என்ற கோபம் மட்டும்

அன்று. பாபு சாஹேபிடமிருந்து வரவேண்டிய பணப்பையைப் படதையா ஏற்கெனவே கொண்டுவந்து கொடுத்திருந்தார். 'அதை இப்பொழுது திருப்பிக் கொடுத்துவிட வேண்டுமே' என்ற ஆத்திரம் வேறு. 'அதைத் திருப்பிக்கொடுக்க வேண்டும்' என்ற நினைப்பு உயிரையே கொடுப்பதுபோல் இருந்தது. 'இந்தச் செய்கையால் கௌடன் நம்முடைய புகழ், பெருமை, கௌரவம் எல்லாவற்றையும் மண்ணுக்கிவிட்டானே. அவனுக்குச் சரியான மண்டபப்படி செய்யவேண்டும்' என்று பௌஜ்தார் நினைத்தார். கௌடரைச் சாவடிக்கு அழைத்தார். புத்லாபாயின் பிணத்தை வண்டியில் ஏற்றி ஊர்தாண்டி அனுப்பிய பின்பு வருவதாகக் கௌடரிடமிருந்து பதில் வந்ததால் பௌஜ்தார் ருத்திர மூர்த்தியே ஆனார்.

'ஊரையே சுட்டுக் கொளுத்திவிட வேண்டும்' என்று அவருக்கு ஆத்திரம் வந்தது. 'கௌடனுக்கும் தாதாவுக்கும் சேர்ந்தாற்போல் விலங்கை மாட்டி ஊர்வலம் செய்வித்தபின்பே தாம் ஊரைவிட்டுப் போகவேண்டும்' என்று உறுதிகொண்டார். கௌடரின் வீட்டிலிருந்து போலீஸ்காரனுடன் வந்த தாதா, சாவடியின் ஒருபுறமாக உட்கார்ந்தான். அவனைப் பார்த்ததுமே பௌஜ்தாரின் மனம் நிலை தவறிவிட்டது. 'அரே, இந்தக் கொலைகாரனுக்கு விலங்கு மாட்டு!' என்று உட்கார்ந்த இடத்திலிருந்தே போலீஸ்காரனுக்கு உத்தரவு போட்டார்.

போலீஸ்காரன் அவருடைய உத்தரவைச் செயலாக்க இருந்தான். அதற்குள் கௌடர் சாவடிக்கு வந்தார். அவரைக் கண்ட பௌஜ்தார், பசித்த புலி, மானைக் கண்டதுபோல் சிவந்த கண்களுடன் அவரை உறுத்துப் பார்த்து, ''நம்ம உத்தரவு என்றால் என்ன என்று நினைத்தீர்கள், கௌடரே? பொய்யாக மரண ரிஜிஸ்தர் எழுதி எழுதிக் 'கேட்பவர் இல்லை' என்று நினைத்து விட்டீர்களோ? நான் யார் என்பதைக் காட்டிவிடுகிறேன்! அரே இஸ்மாயில் மணியக்காரரையும் கைதுசெய்'' என்று சொல்லி விட்டு முகத்தைத் திருப்பிக்கொண்டு திரைக்குப் பின்னால் போனார்.

இஸ்மாயில் 'என்ன செய்வது?' என்று புரியாமல் பேசாமல் கௌடர் முன்வந்து நின்றான். 'நானும் போலீஸ் அதிகாரம் பெற்ற மணியம்தான். என்னை வேலையிலிருந்து நீக்கும் வரையில் உங்கள் அப்பனே வந்தாலும் விலங்கு போட விடமாட்டேன்' என்று அவமானத்தால் கொதித்தெழுந்த கௌடர் கர்ஜித்தார்.

பௌஜ்தார் அதைக் கேட்டு உட்கார்ந்த இடத்திலிருந்தே, 'அவனை ஸஸ்பெண்ட் செய்துவிட்டேன். அவனுக்கும் விலங்கு போடு!' உன்று உரத்துக் கத்தினார்.

கௌடர் எரிமலையாக நின்றார். 'இஸ்மாயில் அவரைத் தொடத் தைரியம் இல்லாமல் கண்ணை மூடிமூடித் திறந்தான். அவனுடைய உதவிக்கு மற்றும் இரண்டு போலீஸார் ஓடிவந்தார்கள். கௌடரும் அவர்களும் கைகலந்தார்கள். அந்தக் குழப்பத்தில் கௌடர் கீழே விழுந்தார். நடந்ததை எல்லாம் பார்த்துக்கொண்டு அங்கேயே உட்கார்ந்திருந்த தாதா, கௌடருக்கு உதவிசெய்யப் போனான். அவனுக்குப் பின்னால் இருந்த மற்றொரு போலீஸ்காரன் தாதாவின் கையைப் பிடித்து இழுத்தான்.

தாதா, திரும்பி அவன் கன்னத்தில் ஒன்று கொடுத்தான். அந்த வேகம் தாங்காமல் போலீஸ்காரன் கண்ணை மூடிக்கொண்டு தரையில் உட்கார்ந்தான். தாதா அவன் பக்கம் திரும்பவே இல்லை. கௌடரைப் பிடித்து அடித்துக்கொண்டிருந்த போலீஸ்காரனுடைய இடுப்பில் கைகொடுத்துத் தூக்கி அரைக்கணத்தில் தரையில் வீசினான். மற்றொரு போலீஸ்காரன் கதிகலங்கித் திரைக்குப்பின் மறைந்தான். நடப்பதைக் கண்ட பௌஜ்தார் மூலையில் இருந்த துப்பாக்கியில் கைவைத்தார். வெளியே போராடிக்கொண்டிருந்த தாதா திரைக்கு அருகே வந்தான். துப்பாக்கியை எடுப்பதைப் பார்த்து அவர் கையில் ஓர் அடி விட்டான். அடி விழுந்த வேகத்தில் துப்பாக்கி தரையில் விழுந்தது. அதைக் குனிந்து எடுக்க முயன்ற பௌஜ்தாரை தாதா கட்டிப்பிடித்தான். பௌஜ்தாரும் தேகப்பயிற்சி செய்த ஆசாமி. தாதா அவரை எடுத்து வீசினான். அவர் உடம்பில் அடிபடாமல் தரையில் காலை ஊன்றி விழுந்தாலும் திரும்பத் துப்பாக்கிப்பக்கம் கையை நீட்டினார்.

'தாதா, அவனுக்கு மயக்கம் ஏறியிருக்கிறது. அவனை விடு. எனக்கு விலங்கு போடுவதானால் போடட்டும்' என்று கௌடர் படபடத்தார்.

பௌஜ்தார் கீழே விழுந்த இடத்திலிருந்து சிறிது தூரத்தில் மற்றொரு துப்பாக்கி இருப்பது தாதாவின் கண்ணில் பட்டது. தாதா அதை எடுத்துக்கொண்டு பௌஜ்தாரின் முதுகில் ஓர் அடி கொடுத்தான். அவர், 'யா அல்லா!' என்று கூச்சலிட்டுக் குப்புற விழுந்தார்.

திரைக்கு வெளியே இருந்த கௌடர் உள்ளே நுழைந்தார். பயத்தால் 'என்ன செய்வது' என்று அறியாமல் திரைக்கு உட்புறம் நின்றிருந்த போலீஸ்காரன் கௌடர்மேல் பாய்ந்தான். தாதாவின் துப்பாக்கி அவன் தலையையும் தொட்டது. அடிபட்டு ரத்தம் வழிந்தது. அவன் மாட்டைப்போல் கதறிக்கொண்டு

வெளியே ஓடினன். முதலில் தாதாவிடம் அடிபட்ட போலீஸ் காரன் மாளிகைப் பக்கத்திலிருந்து படதையாவையும் பாபு சாஹேபையும் அழைத்துக்கொண்டு ஓடிவந்தான். ஆனல் தலையிலிருந்து ரத்தம் வழிய வந்துகொண்டிருந்த போலீஸ் காரனைக் கண்டு அவர்களெல்லாம் பயந்தார்கள்.

திரைக்குள் பௌஜ்தார் மட்டுமே இருந்தார். அவருடைய நிலைமை பரிதாபகரமாக இருந்தது. வாய்க்குவந்த பெயரைச் சொல்லிப் போலீஸ்காரர்களைக் கூப்பிட்டுக்கொண்டும் ஒன்றுக் கொன்று சம்பந்தம் இல்லாமல் உளறிக்கொண்டும் இருந்தார். முதுகில் விழுந்த அடியிலிருந்து சமாளித்துக்கொண்டு துப்பாக்கி யில் கைவைக்கப் போனபோது தாதா அவர் கையில் மற்ருேர் அடி கொடுத்தான். அந்தத் துப்பாக்கியையும் எடுத்துக்கொண்டு ஓடிச்சென்று சாவடித் திண்ணையில் நின்றுகொண்டான். கையில் இரண்டு துப்பாக்கிகளைப் பிடித்தவண்ணம் யமனைப்போல் ஆவேசத்தோடு நின்ற அவனைக் கண்ட உடனே படதையா திரும்பி ஓடிவிட்டார். பாபு சாஹேப் அவனைப் பார்க்கவில்லை. ஆனல் போலீஸ்காரர் ஓடிவந்ததைக் கண்டு திக்குத்திசை தெரியாமல் நின்ற இடத்திலேயே நின்றுவிட்டான். பாளாச்சார் வீட்டுக்குப்போன ஆர்டர்லி கேசவராவ், நடப்பது எதையும் அறியாமல் சாவடியின் மற்ருெரு புறத்தில் இருந்து வருவதைக் கண்ட ஜனங்கள், 'ஐயா, மேலே போகாதீர்கள்! உயிர் போய் விடும்!' என்று கத்தினர்கள். கேசவராவ், அதைக் கேட்டுத் திசை தெரியாமல் அவர்கள் பக்கமே ஓடினன். சாவடிக்கு வெளியில் கூடியிருந்த கூட்டத்தில் பெரும் கூச்சல் எழுந்தது.

தரையில் விழுந்துகிடந்த பௌஜ்தாருக்கு உதவி செய்யக் கூட அங்கே யாரும் இல்லை. அவர் நிலைமையைக்கண்ட கௌடருக் குச் சிரிப்பு வந்தது. அதை அடக்கிக்கொண்டு, 'ராவ்ஸாப், அடி ரொம்பப் பட்டுடுத்துங்களோ?' என்று கேட்டார். பௌஜ்தாருக்குப் பதில் சொல்லக்கூடச் சக்தி இல்லை; முனகிக் கொண்டே இருந்தார்.

தாதாவின் தாலீம்கான நண்பர்களுக்குச் செய்தி எட்டி விட்டது. அவர்கள் ஓடிவந்தார்கள். அவர்களுள் ஒருவன் தாதா வைத் தப்புவிக்க விரும்பி, 'எங்களோடு வா. ஆனல் கையில் இருக்கும் துப்பாக்கியை மட்டும் விடவேண்டாம்' என்று காதில் ரகசியமாகச் சொன்னன். தாதா அதைக் காதில் போட்டுக் கொள்ளாமல் சாவடிக்குள் நுழைந்தான்.

'என்ன, பௌஜ்தார்! பொய்க்கேஸ் எழுதிப் பணம் வாங்கினல் என்ன ஆகும் என்பது தெரிந்ததா?' என்று அதட்டிக்

கேட்டான். பௌஜ்தார் பேச நினைத்தாலும் வலி அவரைப் பேச விடவில்லை. கெஞ்சுவதுபோல் தாதாவைப் பார்த்தார். 'கௌடருக்கு விலங்கு போடு!'ன்னு சொன்னையல்ல. இனிமே போடுவையா?' என்று மறுபடியும் கேட்டான் தாதா. பௌஜ்தார் அப்பொழுது கௌடரை மன்னிப்புக் கேட்பதுபோல் பார்த்தார்.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் சங்கப்பனிடமிருந்து பௌஜ்தார் அநியாயமாக வாங்கிய பணத்தைத் 'திரும்பக் கக்கவைக்க வேண்டும்' என்று நினைத்தான் தாதா. 'சங்கப்பன் பணம் எங்கே இருக்கு? அதைக் குடுக்கறியா?' என்று கேட்டான். பௌஜ்தார் முனகிக்கொண்டே சாவியை வீசி எறிந்து பெட்டியைச் சுட்டிக் காட்டினார்.

தாதா, பெட்டியில் கை வைத்தவுடன் ஆயிரம் ரூபாய்கள் நிறைந்த இரண்டு பைகள் அகப்பட்டன. அவற்றின் அடியில் காகிதத்தில் பொட்டணம் கட்டிய நூறுரூபாய் இருந்தது. இந்தப் பைகளைத் தாதா எடுத்தவுடன் உயிர் போய்விடுவது போன்ற ஏக்கத்துடன் பௌஜ்தார், 'தாதா, அவை என்னுடைய சொந்தப்பணம்' என்று சொன்னார். தாதா, பைகளை அவர் பக்கம் வீசி எறிந்தான்.

தாதா, சங்கப்பனுடைய பணத்தை எடுத்துக்கொண்டு புரப்படத் தயார் ஆனான். அதற்கு முன்பு துப்பாக்கியைக் காட்டி, ''இதோபார் பௌஜ்தார்! இந்தத் துப்பாக்கி போனால் உன் வேலையே போய்விடும். நீ பிள்ளைகுட்டிக்காரன். அதனாலே, 'இந்தத் துப்பாக்கியை ஒனக்குக் கொடுக்கணும்'னு தோன்றது. ஆனால், 'கையில் துப்பாக்கி வந்துவிட்டது' என்று குட்டி போட்ட புலிபோல் பாய்ந்து ஏதாவது தொந்தரவு கொடுத்தாய் என்றால் நீ உயிருடன் ஊர் திரும்பமுடியாமல் செய்துவிடுவேன்'' என்று சொன்னான். பௌஜ்தாருக்கு அதற்கு எதிர்ப்புக்காட்டும் சக்தி இல்லை.

தாதா, கௌடரின் கையில் இரண்டு துப்பாக்கிகளையும் கொடுத்தான். பௌஜ்தார் ஊர் எல்லையைத் தாண்டியபின் அவர் கையில் கொடுக்கும்படி சொன்னான். சாவடித் திண்ணையிலிருந்து இறங்கிக்கொண்டிருந்தான். அதே நேரத்தில் சாவடி ஓரத்திலேயே வண்டியை நிறுத்தி யசவந்தராவ் இறங்கினார். தாதாவுடன் சேர்ந்தே சாவடிக்குள் போனார். சாவடியில் கண்ட காட்சி அவரைத் திடுக்கிடவைத்தது. பௌஜ்தார் முகத்தில் அசடு வழிந்தது. அடிக்கடி வலியால் முகத்தைச் சிணுக்கினார். கௌடர் அமைதியாக இருந்தாலும் வழக்கமான கம்பீரம் அவர்

முகத்தில் காணப்படவில்லை. எப்பொழுதும் கலையாத தலைப்பாகை கண்டபடி அவிழ்ந்து தொங்கியது. நடையில் பரபரப்புத் தெரிந்தது. 'ஏதோ விபரீதம் நேர்ந்திருக்க வேண்டும்' என்று யசவந்தராவ் உடனே ஊகித்துவிட்டார்.

'வாங்க, வாங்க; இப்பத்தான் வரீங்களா?' என்று கேட்டபடி கௌடர் அவரை வரவேற்றார். 'எப்ப வந்தீங்க, மணியக்காரரே?' என்று உபசாரமாகக் கேட்ட பௌஜ்தார், அவர் பார்வையில் படாமல் தம் முகத்தைத் திருப்பிக்கொண்டார். யசவந்தராவ் உள்ளே வந்து உட்கார்ந்தபின், தாதா தான் வீட்டுக்குப்போய்ச் சண்டையைச் சரிப்படுத்துவதாகச் சொன்னான். கௌடர், யசவந்தராவைப் பார்த்து, 'மணியக்காரரே, இன்று மாளிகைக்குப் போவது நல்லது. புத்லாபாய் அக்காவின் பிணத்தை ஆஸ்பத்திரிக்கு அனுப்பியிருக்கிறோம். பாபு சாஹேப் மாளிகையில் துக்கத்தோடு உட்கார்ந்திருக்கிறார். நீங்கள் அங்கே போனால் எல்லா விவரங்களும் தெரியும்' என்று ஜாடையாகச் சொன்னார்.

'பிணத்தை ஆஸ்பத்திரிக்கு எதற்காக அனுப்பினீர்கள்? துர்மரணமா?' என்று கேட்டார் யசவந்தராவ். அவர் குரல் பயத்தால் நடுங்கியது.

'ஏன், உங்களுக்குப் பாபு சாஹேப் தெரிவிக்கவில்லையா? என்ன தான் கடிதம் எழுதினார்?' என்று கௌடர் கேட்டார்.

''ஊரில் காலரா பரவியிருக்கிறது. புத்லாபாய் காலராவினால் இறந்துவிட்டாள். மேற்கொண்டு ஏற்பாடுகள் செய்யச் சீக்கிரம் வரவேண்டும்' என்று கடிதம் அனுப்பியிருந்தான். ஆனால் நீங்க சொல்றதைக் கேட்டால் விவகாரம் கைமீறிப் போய் விட்டதுபோல் தெரிகிறதே?'' என்று யசவந்தராவ் ஒன்றும் விளங்காமல் சொன்னார்.

''கைமீறிப் போகவும் இல்லை; ஒன்றும் இல்லை. 'இந்த விவகாரத்தில் எங்களைக் குற்றம் சாராமல் இருக்க வேண்டும்' என்பதற்காகவே உடலை ஆஸ்பத்திரிக்கு அனுப்பினேன். 'ஒன்று, புத்லாபாய் தூக்குப் போட்டுக்கொண்டு தற்கொலை செய்து கொண்டிருக்கவேண்டும். இல்லை என்றால் வேறொருவர் தூக்கிலிட்டுக் கொலை செய்திருக்கவேண்டும்' என்ற சந்தேகம் வந்தது. அதுதான் அப்படிச் செய்தோம். தற்கொலை செய்துகொண்டிருந்தால் யாருக்கும் 'கவலை இல்லை' என்று கௌடர் நடந்தவற்றைச் சுருக்கமாக விளக்கினார். இவற்றையெல்லாம் கேட்ட யசவந்தராவ் முதலில் குழப்பம் அடைந்தார். பிறகு தன் கடமை என்ன என்பது தானாகவே அவருக்குப் புரியத்தொடங்கியது. பாபு சாஹேப் கடிதத்தில் எழுதிய விஷயங்களுக்கும் இவ்விடத்து

நிகழ்ச்சிகளுக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருந்தது. இவற்றையெல்லாம் ஆராய்ந்து நிலைமையை ஒரு கட்டுப்பாட்டுக்குக் கொண்டுவருவது பெரியவரான தம்முடைய கடமை என்று நினைத்தார். பிறகு ''அப்படியே ஆகட்டும். மாளிகைக்குப் போய்வருகிறேன். 'தாதா, சண்டை ஒன்றும் வேண்டாம். நீ அந்த வம்பில் அகப்பட்டுக் கொள்ளாதே'' என்று தாதாவிடம் சொல்லிவிட்டு எழுந்திருந்தார்.

அதற்குள் யசவந்தராவ் ஊருக்கு வந்த செய்தியை அறிந்து பாபு சாஹேப் சாவடிக்கே அவரைப் பார்க்க வந்துவிட்டான். மாமனார், மாப்பிள்ளைகளுக்குள் க்ஷேமவிசாரணைகள் தணிந்த குரலிலேயே நடந்தன. விஷயங்களைத் தலைகீழாக மாற்றிப் பாபு சாஹேப் சொன்னது யசவந்தராவின் காதில் விழுந்ததோ இல்லையோ? சிறிது நேரத்துக்குப்பின் இருவரும் மாளிகையை நோக்கிப் போனார்கள். தாதா, கௌடருடன் அவர் வீட்டுக்குப் போனான். இதையெல்லாம் பார்த்துக்கொண்டு சாவடியின் பக்கத்துச் சந்து பொந்துகளில் ஒளிந்திருந்த கேசவராவும் மற்ற மூன்று போலீசாரும் தைரியமாகச் சாவடிக்கு வந்தார்கள்.

தாம் பாதள்ளியை விட்டுப்போய் மூன்றே நாட்களுக்குள் நடந்த விபரீத நிகழ்ச்சிகளைப் பாபு சாஹேப், யமுனா, மாளிகையின் ஆட்கள் எல்லோரும் யசவந்தராவிடம் சொன்னார்கள். 'தாதாவின்மேல் நானாவின் கொலைக்குற்றம் சுமத்தப்பட்டதால் தான் புத்லாபாய் தற்கொலை செய்துகொண்டிருக்கிறாள்' என்று யமுனா சொன்னாள். 'சிமனாவை மடத்துக்குத் துரத்திவிட்ட ஏக்கத்தாலேயே தற்கொலை செய்துகொண்டாள்' என்று பாபு சாஹேப் சொன்னான். யசவந்தராவ் இந்த விவரங்களைக் கேட்டு இடிந்துபோய்விட்டார். ஜாகீர் போன்ற கௌரவமான குடும்பத்தில் தற்கொலை போன்ற 'அவமானத்துக்கு இடமான சம்பவம் நேர்ந்துவிட்டதே' என்று அவருக்குச் சங்கடம் உண்டாயிற்று. மறைமுகமாகவாவது 'தம் மாப்பிள்ளை அதற்குக் காரணம் ஆகிவிட்டான் அல்லவா?' என்பது அவருக்குத் தலைகுனிவாக இருந்தது. பாபு சாஹேப் எவ்வளவோ வற்புறுத்தியும் அவர் அங்கே சாப்பிடவில்லை. அவருடைய மனம், இந்தத் துக்க சம்பவங்களின் காரணங்களை ஆராய்வதில் ஈடுபட்டிருந்தது. 'சிமனாவை மடத்திலிருந்து வரவழைத்துக்கொண்டுவிடலாம்' என்று யசவந்தராவ் சொன்னபோது, பாபு சாஹேப், 'அது வேண்டாம். அவள் இங்கே வரச் சம்மதிக்கமாட்டாள். அப்படிச் சம்மதித்தாலும் அவளுக்கு இப்போது இங்கே என்ன வேலை?' என்று கடுகடுப்புடன் கேட்டான்.

''அப்படியானல் நானே மடத்துக்குப் போய் அவளுக்குச் சமாதானம் சொல்ல வேண்டும். அநாதைப் பெண்! போனவர்களுடைய குழந்தைகளை இருக்கிறவர்கள்தானே கவனிக்க வேண்டும். நீயே சொன்னுய் : 'புத்லாபாய் அவள் காரணமாகத் தற்கொலை செய்துகொண்டாள்' என்று. அதனல், 'நான் பார்க்கப்போகலாம்' என்று இருக்கிறேன். படதையாவுக்கு ஒன்றும் தடை இருக்காதே?'' என்று யசவந்தராவும் கண்டிப்புடன் பதில் சொன்னர்.

'படதையாவையே இங்கே வரவழைத்துவிட்டால் போகிறது' என்ற பாபு சாஹேப், ஆளின்மூலம் படதையாவை வரச்சொல்லி அனுப்பினன். 'அந்தப் படதையாவாலேயே இந்த மாளிகையில் இரண்டு உயிர்கள் போய்விட்டன. அப்படியும் நீ அவனுடைய சிநேகத்தை விடவில்லை! அவனிடம் என்ன அவ்வளவு சலுகை!' என்று மனத்தை அடக்க முடியாமல் யசவந்தராவ் கேட்டுவிட்டார்.

பாபு சாஹேபுவுக்கே இந்தப் பிரச்சினை தொல்லை கொடுத்து வந்தது. ஆயிரந்தடவை இந்தக் கேள்வி அவன் மனத்தை ஊசி போல் குத்தியிருக்கிறது. அதைப்பற்றி வெகுதூரம் யோசித்துக் கடைசியில், 'படதையாவின் சிநேகத்தை விட்டால் தனக்குக் கதியே இல்லை!' என்ற முடிவுக்கு வந்தான். பாபச்செயல் செய்பவர்கள் எப்போதும் தனியாக இருக்கமுடியாது. அதோடு படதையாவின்மூலம் பல லாபங்களை அவன் எதிர்பார்த்தான். ஆனல், இந்த விஷயத்தை மாமனரிடம் சொல்லிக்கொண்டால் அது கோழைத்தனமாக இருக்கும் என்று பயந்தான். ஆனல், 'கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லி ஆக வேண்டுமே......?'

'அவனிடம் சலுகை என்ன வாழ்ந்தது? நாலு ரௌடிகள் அவன் கைக்குள் இருக்கிருர்கள். அவனுக்கு அமல்தாரிடம் செல்வாக்கு இருக்கிறது. அவனிடம் பகையை வளர்த்துக் கொண்டால் நாளைக்கு இந்த ஊரில் இருந்து குப்பைகொட்ட முடியாமல் போய்விடும். அதனல்தான் அவனைப் பகைத்துக் கொள்ளவில்லை' என்று பாபு சாஹேப் சாமர்த்தியமாகப் பதில் சொல்லிவிட்டான்.

''அவனிடம் நீ 'பகைத்துக் கொள்ளவில்லை' என்பது நிஜந்தான். ஆனல் பெயரைக் கெடுத்துக்கொண்டுவிட்டாய். முன்பு ஊரில் நாலுபேருக்கு வேண்டியவனக இருந்தாய். இப்பொழுது புத்லாவும் தவறிப் போய்விட்டாள். இனிமேல் இங்கே இருந்து குப்பை கொட்டுவது முடியுமா? ஊரார் லக்ஷ்மிபாயை அழைப்பதாக யோசித்திருந்தார்கள். இனிமேல் அவள் தானகவே வரலாம்'' என்று யசவந்தராவ் எச்சரிக்கும் தொனியில் கூறினர்.

'லக்ஷ்மிபாய் இப்போது வந்தால் யார் விடுவார்கள்? படதையா இருக்கும் வரையில் இந்த ஊரில் யாருடைய ஆட்ட பாட்டமும் செல்லாது' என்று பாபு சாஹேப் அலட்சியமாகச் சொன்னான்.

யசவந்தராவுக்கு இந்தப் பேச்சு ருசிக்கவில்லை. 'பாபு சாஹேப் முழுக்க முழுக்கத் தவருன வழியில் செல்கிருன்' என்பதை அவர் புரிந்துகொண்டார். படதையாவின் விஷயத்தில் அவன் வைத்திருக்கும் போலியான கௌரவத்தைக் கண்டு யசவந்தராவ் வெறுப்படைந்தார். ''புத்லாபாய் இறந்த பின்னும் கூடப் பாபு சாஹேப், 'தானே ஜாகீர்தார்' என்பது போல் அல்லவா நடந்துகொள்கிருன்!'' என்று நினைத்தார். வரவர இருவருக்குள்ளும் பேச்சுச் சண்டையாக முடிந்தது. என்றைக்குமே மாமனுருக்கும் மாப்பிள்ளைக்கும் ஒற்றுமை குறைவுதான். அதிலும் சில நாள்களாக பாபு சாஹேபின் விவேகம் அற்ற செயல்களைக் கேட்டுக் கேட்டு அவர் மனம் அவனிடம் வெறுப்புக்கொண்டது. அவருக்குக் குடும்ப கௌரவம் உயிரைவிடப் பெரிதாக இருந்தது. பாபு சாஹேபுக்கோ அதெல்லாம் லட்சியமே இல்லை. முக்கியமாக அவர் தன் விவகாரங்களில் தலையிடுவது அவனுக்குப் பிடிக்கவே இல்லை. இந்தக் காரணங்களால் இருவர் மனத்திலும் புதைந்திருந்த கசப்பு இப்பொழுது பேச்சின்மூலம் வெளிப்பட்டது. யசவந்தராவ் கண்டிப்பான மனிதர். சிமணுவுக்கு நேர்ந்த அவமானம், நாணுவின் கொலை, பௌஜ்தாரின் வருகை, தாதாவின்மேல் பொய்க் குற்றச்சாட்டு, கௌடருக்கும் பாபு சாஹேபுக்கும் ஏற்பட்டுள்ள விரோதம், புத்லாபாயின் தற்கொலை இவற்றை எல்லாம்பற்றி நிர்த்தாட்சண்யமாகக் கேள்விகள் கேட்டார். பாபு சாஹேபின் பலத்தையே உரைத்துப் பார்க்கத் தொடங்கிவிட்டார். 'பாபு சாஹேப், தாளுக ஒரு குற்றமும் செய்யாவிட்டாலும் குற்றம் செய்பவர்களோடு சேர்ந்திருப்பதே தவறுதான்' என்பது அவருடைய வாதம். அங்கும் இங்கும் சுற்றி வந்த பேச்சுக் கடைசியில் படதையாவின் சிநேகத்தைப்பற்றிய விஷயத்திலேயே முடிவடைந்தது.

'நீங்க என்னதான் சொல்லுங்கள். படதையாவின் சிநேகம் இருந்தால் நாளைக்குச் சமயம் வந்தபோது நிச்சயமாக எனக்கு உதவி கிடைக்கும்' என்று பாபு சாஹேப் பிடிவாதமாகவே சொன்னான்.

இந்தப் பேச்சுக்கும் யசவந்தராவ் சம்மதம் கொடுக்கவில்லை. அவருடைய அபிப்பிராயம் உறுதியாக இருந்தது. படதையாவுக்கு என்னதான் செல்வாக்கு இருந்தாலும் அவனுடைய கட்சியே

அநியாயமானது. அவனுடன் நட்புக்கொள்வது வேதாளத்தை வசப்படுத்திக்கொண்டது போல்தான். ஒருவனுடைய மந்திர சக்தி, பலமாக இருக்கும் வரைக்கும் அவன் சொன்னபடி ஆடும் வேதாளம், மந்திரத்தின் பலம் குறைந்தவுடன் அவனையே அழித்துவிடும். பாவிகளின் சேர்க்கையும் அப்படித்தான்.

''சமயத்தில், 'படதையாவின் உதவி உனக்குக் கிடைக்கும்' என்று மயங்காதே. அது உன்னைப் பாழாக்கத்தான் உதவும். என் பேச்சைக் கேட்க இஷ்டம் இல்லாவிட்டால் சொல்ல வேண்டிய அவசியம் எனக்கும் இல்லை'' என்று கோபத்துடன் சொல்லிவிட்டு ஒன்றும் செய்யத் தோன்றாமல் கீழே இருந்த தலைப்பாகையை எடுத்துத் தலையில் வேகவேகமாகச் சுற்றிக் கொள்ளத் தொடங்கினார். கோபத்தால் குரலில் அனல் வீசியது. 'பேச்சு, இவ்வளவு தூரத்துக்குப் போய்விடும்' என்று பாபு சாஹேப் நினைக்கவில்லை. படதையாவின் சிநேகத்தை விட்டு விடுவதாகச் சொன்னால் ஒழிய மாமனாரின் கோபம் தணிவதாக இல்லை. அவருக்கு என்ன பதில் சொன்னாலும் இக்கட்டில் கொண்டுவந்துவிடும். அதனால் பேச்சை மாற்ற நினைத்து, ''நாளைக்கு லக்ஷ்மிபாய் அக்கா வந்து 'ஆஸ்தியை ஒப்புவி' என்று கேட்டால் நமக்கு நாலுபேருடைய ஆதரவு வேண்டும். ஊர் ஜனங்களை வசப்படுத்தி வைத்துக்கொள்ள வேண்டாமா?'' என்று தான் எதிர்க்க வேண்டிய பிரச்னையைப்பற்றிப் பிரஸ்தாபித்தான்.

'இந்த மாளிகை லக்ஷ்மிபாய்க்குத்தான் சேரவேண்டியது; அவளுடைய குடும்பச் சொத்து. அவள் கேட்கும் முன்பே கூப்பிட்டுக் கொடுத்துவிட்டு மரியாதையாக உங்கள் ஊருக்கு நீ போய்விடு' என்று நான் சொல்கிறேன். இது என் மனப்பூர்வ மான வார்த்தை. புத்லா, உயிரோடு இருந்தபோது பேச்சே வேறு. அவள் பங்குக்கு இந்தக் குடும்பச் சொத்தில் பாதி கிடைக்க வேண்டும். அப்பொழுது இந்தச் சொத்தைச் சாப்பிட உனக்கு உரிமை இருந்தது. இப்போது அதைப்பற்றிய பேச்சே வேண்டாம். பேசாமல் லக்ஷ்மிபாய்க்குக் கடிதம் எழுதிப்போடு. இல்லையானால் சொல்லு; நானே எழுதிப் போடுகிறேன்' என்று யசவந்தராவ் கண்டிப்பாக நியாயத்தை எடுத்துச் சொன்னார்.

இந்தப் பேச்சு, பாபு சாஹேபுக்கு எதிர்பாராத அடி. அநாமத்தாக வந்த பெரிய சொத்தை விடுவதற்கு அவனுடைய பேராசை இடம் கொடுக்கவில்லை. 'இப்படிப் பேசும் மாமனாருக்கு என்ன பதில் சொல்வது?' என்று யோசித்துக்கொண்டிருக்கும் போது படதையா உள்ளே கால்வைத்தார்.

'மாமனாரும் மருமகனும் ஏதோ குடும்ப விஷயம் பேசறாப்பலே இருக்கு. இந்தச் சமயத்திலே நமக்கு இங்கே என்ன வேலை? அப்புறம் வருகிறேன்' என்று படைதயா உபசாரமாகச் சொன்னார்.

'இந்தப் பேச்சில் கலந்துகொள்ளத்தான் உங்களை அழைத்தது. வாருங்கள்' என்று பாபு சாஹேப் அவரை அழைத்து உட்காரவைத்துவிட்டு உள்ளே போனான். மாமனாரின் நிஷ்டூரப் பேச்சு என்னும் குண்டுக்குப் பலியாக அவன் தயாராக இல்லை.

படைதயா, திண்டில் சாய்ந்து சாவதானமாக உட்கார்ந்தார். பட்டுச்சால்வையால் விசிறிக்கொண்டார். 'எப்படியோ நீங்கள் வந்துவிட்டீர்கள், மணியக்காரரே! நம் கவலை நீங்கியது' என்று சொன்னார்.

'சுவாமிகளுக்கெல்லாம் கவலை ஏது? எங்களைப்போல சம்ஸாரத்தில் உழல்பவர்களுக்குத்தானே அதெல்லாம்' என்று யசவந்தராவ் சொன்னார். அவரையும் அறியாமல் அவர் குரலில் கிண்டல் தொனித்தது.

'சுவாமி! சந்நியாசியாக இருந்தால் என்ன, மணியக்காரரே? சிவனுடைய மாயவலையிலிருந்து தப்பும் வரையில் கவலை விடாது அல்லவா?' என்று வைராக்கியத்தோடும் அலட்சியத்தோடும் கம்பீரமாகப் படைதயா மறுமொழி சொன்னார்.

'அதிருக்கட்டும்; நான் அன்று ஊருக்குப் போனபின், தாதா, பெரிய பெரிய தகராறுகளைக் கிளப்பிவிட்டீட்டாளுமே?' என்று யசவந்தராவ் 'அவர் என்ன சொல்கிறார்?' என்பதைத் தெரிந்து கொள்வதற்காகவே கேட்டார்.

படைதயா ஆசனத்தில் நகர்ந்து நெளிந்து உட்கார்ந்தார். 'புதிய விஷயத்துக்குப் புதிய நடிப்பு, புதிய தோரணை' என்ற தத்துவத்தை அவர் மறக்கவில்லை.

''ஏன் கேட்கிறீர்கள், அந்த அக்கிரமத்தை? சிமணா சிறுபெண். தெரியாமல் எங்கேயோ வழுக்கி விழுந்திருக்கலாம். அந்தப் பாபத்தை என் தலையில் சுமத்தவந்தான். சிவனுடைய லீலை. 'இதுவும் எனக்கு அப்பன் செய்யும் பரீட்சை!' என்று நினைத்து 'சரி' என்று சொன்னேன். மூளைகெட்டு உளரும் மனிதனுக்கு நன்மை, தீமையை அறியும் புத்தி இருக்குமா? கோபம், மனிதனைச் சுட்டுப் பொசுக்கும் நெருப்பு. 'சிமணாவை மடத்திலேயே விட்டு விட்டுப் போ' என்று சொன்னேன்'' என்று சுவாமிகள் அபிநயத்தோடு சொன்னார்.

'இப்போது அவள் சௌக்கியம்தானே!'

''என்ன சொல்லட்டும், யசவந்தராவ்! அது ஒரு பைத்தியம்! 'தங்கச்சி, ஒங்க வூட்லே இருப்பதுபோலச் சந்தோஷமா இரு'ன்னு சொன்னேன். நாலுபேரை விட்டுச் சொல்லச் சொன்னேன். 'மூசுமூசு'ன்னு அழுதுக்கிட்டுச் சாப்பிடாமலே படுத்திருக்கா. புத்லாபாய் செத்துப்போன சங்கதி கேட்டப்பறம் நிலைமையைக் கேட்கவே வேண்டாம். பேச்சுக் கொடுப்பவர்களிடம் வாய்க்கு வந்தபடி வெடுக்கென்று ஏதாவது சொல்லி விடுகிறாள். இதுவும் சிவனுடைய லீலைதானே'' என்று சொல்லிச் சுவாமிகள் பெருமூச்சுவிட்டார்.

'பிள்ளைத்தாய்ச்சிப் பெண், இப்படிப் பட்டினி இருந்தால் என்ன கதி? நானே மடத்துவரைக்கும் வந்து அவளுக்குச் சமாதானம் சொல்வது நல்லதல்லவா?' என்று யசவந்தராவ் மனம் உருகிக் கேட்டதைப் படதையா மறுக்க முடியவில்லை.

''உங்கள் விருப்பம், உங்கள் பெண். நீங்கள் வேணுமானால் அவளை அழைத்துக்கொண்டுவந்து அவள் தலைக்கு ஏறியிருக்கும் துக்கத்தை இறக்க ஏதாவது வழி செய்யலாம். நான் ஏதாவது சொன்னால் அது தவறு ஆகிவிடும். 'ஏறினால் குற்றம், இறங்கினால் அபராதம்'. நீங்கள் பெரியவர்கள். என்ன சொன்னாலும் ஏற்கும். 'முக்கியமாக, அநாதைப் பெண்! எங்கேயாவது ஒதுங்கிக் கிடக்கட்டும்' என்று உங்களுக்குத் தோன்றுவது போலவே எனக்கும் தோன்றுகிறது. ஆனால் என்ன செய்ய முடியும் சொல்லுங்கள்'' என்ற சாமியாரின் குரலில், தாற்காலிகமாகக் கம்மியது.

'ஒண்ணும் செய்யவேண்டாம். நான் அவளையும் என் மகளாக நினைக்கிறேன். என்னுடன் ஊருக்கு அழைத்துப் போகிறேன்' என்றார் யசவந்தராவ்.

யசவந்தராவின் இந்தப் பதிலால் படதையாவுக்குச் சுவர்க்கமே கிடைத்ததுபோல் ஆயிற்று. 'உங்கள் மனசு தெரியுதுங்க. நெசமாவெ நீங்க ஏழைகளுக்குத் தகப்பனார்தான்' என்று அவரை வாயாரப் படதையா புகழ்ந்தார்.

பேச்சுவாக்கில் ஒரு பிரச்சினை தீர்ந்ததில் இருவருக்கும் திருப்தி உண்டாயிற்று. ஒருகணம் இருவரும் பேசவில்லை. ஆனால் யசவந்தராவ் அவர் சுபாவமாகப் பேச்சாளர் ஆனதால் அவரால் வெகு நேரம் சும்மா உட்கார்ந்திருக்க முடியவில்லை. மறுபடியும் அரட்டை தொடங்கியது. இப்பொழுது பேச்சு ஊர் விஷயத்துக்குத் திரும்பியது. பௌஜ்தாரின் வருகையால் ஊரில் ஏற்பட்ட கலவரத்தையும் கௌடர் செய்த அநியாயங்களையும்பற்றிப் படதையா, ரசமாக வருணிக்கத் தொடங்கினார். முக்கியமாகக்

கௌடரைப்பற்றித் தூஷணைகளே அதிகம் இருந்தது. தாதாவைப் போன்ற அயோக்கியனோடு சேர்ந்துகொண்டு கௌடர், 'கர்வத்துடன் ஊர் ஆட்சியை நடத்துகிறார்' என்பது அவருடைய அபிப்பிராயம். புத்லாபாய் இறந்தபின் 'பாபு சாஹேப்பை ஊரைவிட்டே ஓட்டவும் அவர் முயன்றார்' என்பதைச் சொல்ல மறக்கவில்லை. 'இதோ பாருங்க, மணியக்காரரே! நான் உயிருடன் இருக்கும்வரை இவர்கள் தலைகீழாக நின்றாலும் பாபு சாஹேப் ஊரைவிட்டுப் போக நான் விடமாட்டேன்' என்று படதையா சவால் விடுவதுபோல் அட்டகாசத்துடன் சொன்னார்.

''ஆம், சாமியாரே! சிநேகத்தால் நீங்கள் இப்படிச் சொல்வது சரிதான். ஆனால், தாடி நரைத்த எங்களுக்கெல்லாம், 'இவன் தன் ஊருக்குப்போய்க் கௌரவமாக வாழட்டும்' என்றுதான் தோன்றுகிறது. 'ஏழைகளுக்கு உதவியாக இருக்க வேண்டும்' என்றால் அதைத் தன் ஊரிலேயே செய்யட்டும். இங்கே ஏழைகளைக் கட்டிக் காப்பதற்குத்தான் நீங்கள் இருக்கிறீர்களே!'' என்று யசவந்தராவ் அதே தீர்மானமான குரலில் சொன்னார். படதையாவுக்கு உள்ளூரக் கிலிபிடித்துக்கொண்டது. கிழவருடைய பிடிவாதத்தைக் கண்டு அவருக்கும் கோபம் வந்தது. ஆனால் அடக்கிக்கொண்டு நயத்திலேயே அவரை வசப்படுத்திக் கொள்ளப் பார்த்தார்.

'நீங்கள் நட்ட செடியை நீங்களே பிடுங்கி எறிவது சரியா? இந்த ஜாகீர் நிலத்தின் பொறுப்பை ஏற்றுக்கொண்டவரும் நீங்கள்தான். பாபு சாஹேபைக் கொண்டுவந்து இங்கே விட்டவரும் நீங்கள்தான். இப்பொழுது நடுவில் எங்களையெல்லாம் கை விட்டுவிட்டுப் போகச் சொல்கிறீர்களே! புத்லாபாய் போனாலும் மாளிகை எங்கும் போகவில்லை. நாங்களும் நீங்களும் குடியானவர்களும் இருக்கிறோம். லக்ஷ்மிபாய் வந்தால் எந்தக் குடியானவன் முகம் கொடுத்துப் பேசுவான்? பாபு சாஹேப் மனம் வைத்தால் இன்றைக்கே ஊருக்கு ராஜா ஆகலாம்! ஏழைகள் எல்லாம் அவர் பக்கம்தான். ஆகாத நாலுபேர் கையில் நெட்டி முறித்தால் முறித்துக்கொள்ளட்டும். அவர்களுக்கு ஏன் பயப்பட வேண்டும்?' என்றார் படதையா.

யசவந்தராவுக்குப் பேச்சை வளர்த்த விருப்பம் இல்லை. படதையாவைப்பற்றி அவர் கேள்விப்பட்ட செய்திகள், நேரில் பார்க்கும்போது எல்லாம் உண்மை என்றே தோன்றியது. அதனால் பேச்சை மாற்றி, 'அதெல்லாம் பாபு சாஹேபுக்குச் சம்பந்தப்பட்ட விஷயம். அதில் நாம் ஏன் தலையிட வேண்டும்? இப்பொழுது சிமணாவை இங்கே அனுப்பிக் கொடுக்கிறீர்களா?

நான் மடத்துக்கு வந்து அழைத்துக்கொண்டு போகட்டுமா?' என்று கேட்டார்.

பேச்சு மாறியதுமே படதையா விஷயத்தைப் புரிந்து கொண்டுவிட்டார். 'கிழவர் அழுத்தமான ஆள்' என்பதும் தெரிந்துவிட்டது. 'நான்போய் அவகிட்டெ நீங்க சொன்னதைச் சொல்றேன். சம்மதிச்சு வந்தா நல்லது. இல்லாவிட்டால் நீங்கள் தான் வரவேண்டியிருக்கும்' என்று சொன்னார்.

அப்பொழுது பாபு சாஹேப் ஸ்நானத்தை முடித்துக்கொண்டு வெளியே வந்தான். மடத்துக்குப் புறப்பட்டுக்கொண்டிருந்த படதையா 'பாபு சாஹேபைப் பார்க்க வேண்டும்' என்று நினைத்தார். யசவந்தராவ் ஸ்நானத்துக்காக உள்ளே போகும் வரையில் இருவரும் காத்திருந்தார்கள். பிறகு இருவரும் மந்திரா லோசனை நடத்தினார்கள்.

யசவந்தராவ் சிமணாவைப் பார்ப்பது படதையாவுக்குப் பிடிக்கவில்லை. அவள் நிலைமையைப் பார்த்து இரங்கி இந்தக் கிழவன், தன் தந்திரச் செயல்களையெல்லாம் அம்பலமாக்கி விடுவான் என்ற பயம். அதனால் அவர் கண்ணில் படாமல் சிமணாவை எங்கேனும் அனுப்பிவிட வேண்டும் என்று இருவரும் ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். கெஞ்சனிடம் விஷயத்தைச் சொல்லி 'யசவந்தராவ் வருவதற்குள் வேலையை முடித்துவிட வேண்டும்' என்று படதையா பரபரப்புடன் மடத்துக்குச் சென்றார்.

## 16

பௌஜ்தார் முகாமை எடுத்துவிட்டாலும் பாதள்ளியில் அமைதி உண்டாகும் வழியைக் காணவில்லை. இரண்டு நாள்களுக்கு முன்னால் தோன்றிய காலரா நோய் வேகமாகப் பரவியது. முதலில் மாளிகைச் சோளம் தின்ற சாக்கில் சிலர் இறந்தார்கள். ஆனால் பிறகு செல்வவந்தர்கள் வீட்டிலும் காலராப் புகுந்து கொண்டது. பொழுது விடிந்த உடனேயே 'ஏதோ பயங்கரச் செய்தியைக் கேட்போம்' என்ற பரபரப்பு எல்லோரிடமும் இருந்தது. இரவில் காலரா யார்யாரைக் கொண்டுபோயிருக் குமோ? யாருக்குத் தெரியும்? 'இன்று ஒருவர், நாளைக்கு மற்றொருவர். நமது முறை எப்பொழுதோ?' என்று ஜனங்களெல்

லாம் தவித்தார்கள். காலராவால் நேர்ந்த சாவுகளைப்பற்றி மேலதிகாரிகளுக்குத் தெரிவித்துக்கொண்டும் இறந்தவர்களுடைய வீடுகளுக்குச் சென்று உறவினர்களுக்கு ஆறுதலாகச் சொன்ன தையே திருப்பித் திருப்பி சொல்லிக்கொண்டும் அலைந்து கௌடர் சோர்ந்து போய்விட்டார். 'இறந்தவர்களுடைய வார்சுதாரர்களை அழைத்து வாரிசு நிர்ணயிக்கும் விஷயமாக உடனுக்குடனே செய்தி அனுப்பாவிட்டால் அபராதம் விழும்' என்று அவருக்குச் சேஷப்பா நினைவூட்டித் தம் கடமையைத் தீர்த்துக்கொண்டான். இறந்தவர்களைப் புதைக்கப் பள்ளம் தோண்டுவது தாலீம்கானு மல்லர்களின் பொறுப்பாயிற்று. 'ஊரைச் சுற்றி இருக்கும் தேவதைகளுக்கு அபிஷேகம் செய்து ஆடு பலிகொடுத்து தேவியின் கோபத்தைத் தணிப்பது அவசியம்' என்று முடிவாயிற்று. அதற்காகக் கஞ்சி காய்ச்சச் சோளம் சேகரிப்பதற்குப் பாபு சாஹேபின் புலிவேட்டைக் கூட்டத்தின் தலைவனான தளவாய்க் குப்பனும் அவனுடைய கூட்டாளிகளும் பொறுப்பேற்றார்கள்.

ஊரில் பரவிய காலரா இப்படி எல்லோரையும் ஏதோ ஒரு விதத்தில் பொதுநலத்துக்கு உழைக்கச் செய்தது. திருவிழாவோ, யுத்தமோ, கொள்ளை நோயோ எது வந்தாலும் பொதுநலச் சேவை என்பது ஜனங்களுக்கு அற்புதமான உழைப்புச் சக்தியை உண்டாக்கிவிடுகிறது. இப்பொழுதும் அப்படித்தான் நடந்தது. படையா ஊரில் இருந்திருந்தால் தம் ஆட்களைச் சாவின் பிடியிலிருந்து காப்பாற்ற அசாத்தியமான முயற்சி செய் திருப்பார். அரசாங்க டாக்டரை அழைத்துவர என்று போனவர் திரும்பி வரவே இல்லை. சிமனுவையும் தன்னுடன் அழைத்துக் கொண்டு போயிருந்தார். ''அவளைத் தம் சீடப்பிள்ளை ஒருவரிடம் விட்டுவிட்டு 'டாக்டருடன் வருகிறேன்' என்று சொன்னவர் ஏன் இன்னும் வரவில்லை?'' என்பது கெஞ்சனுக்கு விடுவிக்க முடியாத புதிராக இருந்தது. அழுதுகொண்டு மடத்துக்கு வரும் ஜனங்களிடம் எல்லாம், 'அப்பா அவங்க இன்னிக்கு வந்துரு வாங்க. டாக்டரை இட்டுக்கிட்டு வருவாரு' என்று சொல்லிச் சொல்லி அது கெஞ்சனுக்குப் பாடம் ஆகிவிட்டது. காலரா அதிகம் ஆக ஆக மடத்துக்குத் தினந்தோறும் தண்ணிபோட வரும் பக்தர்கள் வருவதை நிறுத்திவிட்டார்கள். அவர்களெல் லாம் வீட்டோடு தங்கிவிட்டாலும் கெஞ்சன் மட்டும் மடத்தில் இருக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டது. கஞ்சா பக்தர் களும் மடத்துப்பக்கம் தலைகாட்டாதது அவனுக்கு இன்னும் வெறுப்பைக் கொடுத்தது. கள் குடிப்பதற்காகவே வீடு வாசலை விட்டுவிட்டு சந்நியாசியான இந்த வீர வைராக்கியசாலியான

கெஞ்சனுக்கும் இந்தத் தனிமை தாங்க முடியாததாயிற்று. தினந்தோறும் படதையாவின் வரவை எதிர்பார்த்துக்கொண்டும் காலராவால் இறந்தவர்களைக் கணக்கிட்டுக்கொண்டும் கெஞ்சன் பொழுதைக் கழித்தான்.

இரண்டு வாரங்கள் கழிந்தன. படதையாவும் வரவில்லை; அவர் அழைத்து வருவதாகச் சொன்ன டாக்டரும் வரவில்லை. இதற்குள் ஆயிரத்தில் நூறுபேர் சுவர்க்கம் போய்ச் சேர்ந்தார்கள். வாரத்துக்கு ஒருமுறை மாளிகையிலிருந்து ஆட்டுப்பலியும் பானைக்கஞ்சி நைவேத்தியமும் கொடுத்தும் மாரியம்மனின் கோபம் தணியவில்லை. ஏதோ 'பழைய கடனை வசூல் செய்ய வேண்டும்' என்ற பிடிவாதத்துடன் சாவு ஒவ்வொருவர் வீட்டு வாயிற்படியிலும் உட்கார்ந்து பலிகேட்டது. பாளாச்சாரின் வீட்டில் அவருடைய தம்பி மகன் கோபாலாச்சாரி, மடத்தி லிருந்து வீட்டுக்குப் போனவன், திரும்ப மடத்துக்கு வரவே இல்லை. ஒரே நாளில் வைகுண்டம் போய்ச் சேர்ந்தான். அன்று சாயங்காலமே பாளாச்சாரின் சித்தப்பாவான கிழவர் ஹநுமந் தாச்சார் காலராவுக்கு இரையானார்.

இந்தக் கொள்ளை நோயின் மும்முரத்தில் பாளாச்சாருக்கும் வேலை இருந்தது. உடம்புக்கும் மனத்துக்கும் ஓயாத வேலை. 'தண்ணீரைக் காய்ச்சிக் குடியுங்கள், *சக்கராணி வேரை அரைத்து மோரில் கரைத்துக் குடியுங்கள்' என்று யோசனை சொல்லும் வைத்தியராகிவிட்டார்.

இறந்தவர்கள் வீடுகளுக்குப் போய் தைரியம் சொல்லும் பொறுப்பும் அவரையே சார்ந்தது. மகனைக் காப்பாற்ற முடியாத சக்கராணி வேரை ஊர் ஜனங்களுக்கு அரைத்துக்கொடுக்கும் வேலையை அவர் விடவில்லை. அந்த வேரின்மேல் அவருக்கு அவ்வளவு நம்பிக்கை! 'தம்முடைய முயற்சிகள் எல்லாம் வீணாக லாம்' என்பது அவருக்குத் தெரிந்திருந்தது. தலைவிதியை மீறி யாரும் ஒன்றும் செய்ய முடியாது. 'வினைப்பயனுக்கு ஏற்ப விதி செய்யும் சோதனை யாரையும் விடாது' என்னும் உண்மை அவருக்குத் தெரிந்துதான் இருந்தது. 'தாம் தன்வந்திரியோ சக்கராணி வேர் சஞ்சீவினியோ அல்ல' என்பதும் அவருக்குத் தெரிந்ததுதான். ஆனால் இதனாலும் சிலர் பிழைக்கலாம் அல்லவா? தம் முயற்சியில் ஒன்றாவது பலிக்காதா? அப்படியிருக்க முயற்சியை ஏன் நிறுத்தவேண்டும்? உயிரைக்காக்கும் ஒப்பற்ற ஓர் சாதனமாக அந்த வேரைப்பற்றி அவர் நினைத்தார். அதனால் வீட்டிலிருந்த சந்தனக்கல் தேயும்வரை அந்த வேரை உறைத்துக் கொண்டே இருந்தார்.

* ஒரு மூலிகை

ஆனால் சாவு அவர் வீட்டிலும் பலி வாங்கியது. சக்கராணி வேரின் மதிப்பை அது லட்சியம் செய்யவில்லை. தம்பியின் மகன் இறந்துவிட்டான். ஆச்சாருக்கு அது பெரிய சவாலாகப் பட்டது. 'சாவின் துன்ப அநுபவம் தனக்கு ஏற்படவில்லை. மற்றொருவர் அநுபவிக்கும் இந்தத் துன்பத்தைக் கண்டு இருதயம் எப்படித் துடிக்கும்?' என்று அவருக்குத் தோன்றியது. மகனுடைய பிணத்தைப் பார்த்து ஆச்சாரின் மனைவி வாய் பேசாமல் கண்ணீர் வடித்தாள். கணவருடைய ஆழ்ந்த மௌனத்தைப் பார்த்தபின் குரலெடுத்து அழ அவளுக்குத் தைரியம் இல்லை. ஆச்சாருக்கு அந்த சூக்ஷமம் புரிந்தது. ஊர் மக்களுக்குச் சொல்லும் ஆறுதலான நாலு வார்த்தைகளையே அவளுக்கும் சொன்னார். மகனுடைய இறுதிச் சடங்குக்குத் தாம் போகாமல் சக்கராணி வேரை உறைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார். வேர், துண்டு துண்டாகத் தேய்ந்தும் தண்ணீரில் கரைந்தும் ஒவ்வொரு கணமும் செத்துக்கொண்டிருந்தது. 'வாழ்க்கையும் இப்படித்தானோ?' என்று ஒருகணம் ஆச்சாரியருக்குத் தோன்றியது.

அவருடைய இந்தச் செயலைக் கண்டு சிலர், 'கல்மனப் பார்ப்பான்!' என்று இகழ்ந்தார்கள். ஆனால் அது அவர் காதில் ஏறவே இல்லை. இப்பொழுது கோபாலகிருஷ்ணன் கோயிலில் உட்கார்ந்து வேரை உறைத்து மருந்து கொடுத்துக்கொண்டிருப்பதே அவருடைய வேலை ஆயிற்று. 'அவருடைய மனம் கல்லோ வெண்ணெயோ?' அவர் கொடுக்கும் மருந்தை மட்டும் ஜனங்கள் வாங்காமல் விடவில்லை. ஆச்சாரின் அநுதாபம் மருந்தாக வேலை செய்தது. மகன் இறந்த அன்று சாயங்காலம்கூட அவர் கோயில் திண்ணையில்தான் உட்கார்ந்திருந்தார். 'ஊர் பற்றி எரியும்போது செத்தவர்களைவிட இருப்பவர்களுக்காகவே உழைப்பவர் உண்மையில் உயர்ந்த மனிதர்' என்று மக்கள் சக்கராணி வேர் கலந்த மோரை வாங்கிக்கொண்டு அவருடைய பேருதவிக்காக அவரை வாழ்த்திக்கொண்டே சென்றார்கள். வேரும் குறைந்துவந்தது; பொழுது சாய்ந்தது. மருந்துக்காக வரும் கூட்டமும் குறைந்தது. ஆச்சார் எழுந்திருந்து கோயில் படிகளில் இறங்கினார். சந்தனக் கல்லைக் கக்கத்தில் இடுக்கிக்கொண்டு, போர்த்த வேஷ்டியைச் சரிசெய்துகொண்டு ஆச்சார் வீட்டை நோக்கி நடந்தார். கோயிலிலிருந்து சிறிது தூரத்தில் சக்கிலிய மல்லி அழுது கொண்டே நின்றிருந்தாள். காரணம் கேட்க வேண்டுமா? ஆச்சார், கண்ஜாடையாலேயே அவளைக் கேள்வி கேட்டார்.

'சாமி சன்னனுக்கு இப்பவோ பின்னையோன்னு இருக்குதுங்க. வேர் மிச்சம் இருந்தால் கொஞ்சம் குடுங்க' என்று கெஞ்சிக் கேட்டாள்.

'வேர்தானே? இதோ ஒருத்தருக்குப் போதுமான அளவுதான் மிஞ்சியிருக்குது பார் அம்மா! இந்தா' என்று சொல்லி வேரை அவள் கையில் கொடுத்துவிட்டு மேலே நடந்தார். 'தம்மிடம் இருந்த சக்கராணி வேர் தீர்ந்துபோய்விட்டதே! இனிமேல் என்ன செய்வது?' என்று அவர் கவலைப்பட்டார். அவருக்கு ஒரு வழியும் தெரியவில்லை. மிகவும் வருத்தமாக இருந்தது. அப்பொழுது அஞ்சல்கார நிங்கன் அவரை நோக்கிப் பாய்ந்து வந்தான். அவன் முகம் பேயறைந்ததுபோல் இருந்தது. 'ஐயா, ஆச்சாரையா! ஆபத்து வந்திருக்குங்க! கௌடருங்க......!' என்று சொன்ன நிங்கன் அழ ஆரம்பித்துவிட்டான்.

'இப்ப வருவதெல்லாம் ஆபத்துத்தான்! சொல்லு நிங்கா! என்ன ஆச்சு கௌடருக்கு?' என்று பயங்கரமான வருங்காலத்தை ஊகித்தபடியே ஆச்சார் கேட்டார்.

'ஆவது என்னங்க! இப்பவோ பின்னேயோ......' என்று சொல்லி மேலே பேச முடியாமல் தேம்பித்தேம்பி அழுதுகொண்டு மேல் துண்டின் நுனியால் கண்ணைத் துடைத்துக்கொண்டான்.

ஆச்சார் அவனுக்குப் பதில் ஒன்றும் சொல்லவில்லை. கடைசியில் சாவு கௌடர் வீட்டு வாசலுக்கும் வந்துவிட்டது! ஊரின் சோதனைக்காலம் இன்னும் முடியவில்லையா? அன்றிரவு கௌடர், 'தம் குடும்ப கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டும்' என்று கேட்டுக்கொண்டது அசரீரி வாக்குப்போல் பொருள் உள்ளதாகவே ஆச்சாருக்குத் தோன்றியது. காலராவினால் முதலில் இறந்த சேரி பாள்யாவை, கௌடர்தான் முதலில் போய்ப் பார்த்தார். அன்று முதல் அவருடைய செயல்களே மாறிவிட்டன. அப்பொழுதே அவர்மீது சாவின் நிழல் படிந்திருக்க வேண்டும்! இல்லாவிட்டால் மூன்று நாட்களில் இவ்வளவு மாறுதல் ஏற்படுமா? வயிரத்திலும் இறுகிய ஊக்கத்துடன் மீசையை முறுக்கிக்கொண்டு ஊரெங்கும் நடமாடிக்கொண்டிருந்த கௌடர் வெண்ணெயைவிட மிருதுவாக நொந்துபோய்விட்டார்! 'பாதள்ளியின் வாழ்க்கை முறையே மாறவேண்டும்' என்பது கடவுளின் சித்தம் போலும்!

பாளாச்சாருக்கும் கௌடருக்கும் கிட்டத்தட்ட ஒரே வயது. இளமையிலிருந்து ஒரே ஊரில் வளர்ந்ததால் இருவருக்கும் நெருங்கிய சிநேகம் ஏற்பட்டிருந்தது. ஊர் விவகாரம் காரணமாகச் சில சமயங்களில் இருவருக்கும் தீராத மனஸ்தாபம்கூட ஏற்படுவது உண்டு. ஒரு சமயம் ஏதோ விவகாரத்தில் கௌடர், 'தம்மை அவமானப்படுத்திவிட்டார்' என்று ஆச்சார், கௌடர் வீடு இருக்கும் தெரு வழியாகவோ சாவடி இருக்கும் தெரு

வழியாகவோ தப்பித்தவறிக்கூடப் போகாமல் ஒரு வருஷகாலம் பிடிவாதமாக இருந்தார். ஆனால் அவ்வளவு கடுமையான பகைமைகூட இருவருடைய சிநேகத்தையும் பலப்படுத்தத்தான் படுத்தியது.

அப்படிப்பட்ட கௌடர் இன்று சாகும் நிலையில் இருக்கிறார். அறுபதாண்டு வாழ்க்கை அநுபவத்தில் தவறிக்கூடக் கௌடரின் வாயினால் சாவைப்பற்றிய பேச்சையே ஆச்சார் கேட்டதில்லை. கௌடருடைய உடல், வயிரம் பாய்ந்தது. அவர், தெருவில் நடந்துபோனால் பாதள்ளிக் கோட்டையே அசைந்துபோவது போல் தோன்றும்! 'அப்படிப்பட்டவருக்கும் ஒரு முடிவு வரும்' என்பதை யாராலும் கற்பனைகூடச் செய்ய முடியவில்லை. ஆறு, கோயில், கோட்டை, சாவடி இவற்றைப்போல் கௌடரும் சாசுவதமாகத் தோன்றினார். சாவடித் திண்ணையிலோ ஊருக்கு முன்பு உள்ள தோட்டத்திலோ கோவிலிலோ தினந்தோறும் அவர் குரல் இடிபோல் எல்லோருக்கும் கேட்டுக்கொண்டே இருக்கும்.

அப்படிப்பட்ட கௌடருக்கும் முடிவுகாலம் வந்துவிட்டது! ஆனால் இப்பொழுது ஆச்சார் எதுவும் செய்யும் நிலையில் இல்லை. விதியின் சோதனைபோல் வேர் அத்தனையும் தீர்ந்துவிட்டது! அந்தக் கடைசித்துண்டு இருந்தாலும் 'கௌடரைக் காப்பாற்ற முடியுமோ என்னவோ?' என்ற நினைவில் மூழ்கியவராக ஆச்சார், கௌடர் வீட்டை நோக்கி நடந்தார்.

கௌடர் வீட்டைச் சுற்றிலும் ஊரே திரண்டு நின்ற போதிலும், வீடு, சுடுகாடுபோல் அமைதியாக இருந்தது! ஒருவர் முகத்திலேனும் சுரத்து இல்லை. ஆச்சார் வந்தபோதே அங்கிருந்தவர்களுக்குத் துக்கம் பொங்கி வந்தது. அங்கங்கே அழுது விசும்பும் குரல் கேட்டது. மௌனமாகவே ஜனங்கள் ஆச்சாருக்கு வழி விட்டார்கள். கடவுளைத் தியானித்தவண்ணம் ஆச்சார் உள்ளே போனார்.

கௌடருக்கு அப்போதுதான் வாந்தி ஆயிற்று. பலவீனத்தால் முகம் நனைந்துப் பிழிந்த துணிபோல் இருந்தது. நெற்றியில் வேர்வைத்துளிகள் நிரம்பியிருந்தன. கண்கள் பருத்தி விதைகள் போல் ஒளியிழந்து கிடந்தன. ஆச்சாரைக் கண்டவுடனே அவருக்கு நெஞ்சை அடைத்தது. கண்ணீர் ததும்பியது. படுத்த படியே இரண்டு கைகளையும் கூப்பி அவரைக் கும்பிட்டார். 'ஆச்சாரையா, இதுதான் என் கடைசி வணக்கம்! போகிறேன்' என்றார். கிணற்றில் இருந்து பேசுவதுபோல் பேசியதே அவருக்குக் களைப்பாகிவிட்டது. 'நிறையப் பேசவேண்டும்' என்ற எண்ணம் இருந்தது. ஆனால் உட்கார்ந்து பேச உடம்பில் சக்தியில்லை.

ஆச்சார், கம்பத்தில் சாய்ந்து உட்கார்ந்து சுற்றிலும் பார்வையை ஓட்டினார். கௌடரின் படுக்கைக்குப் பக்கத்தில் அவருடைய மனைவி பார்வதி, தன்னுடைய குழந்தைகள் இருவரையும் அணைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். பெரிய வனுக்குப் பதினன்கு வயது. சிறியவனுக்கு எட்டு வயது. கௌடருடைய பன்னிரண்டு குழந்தைகளில் மிஞ்சியவர்கள் இவர்கள். கௌடருடைய மரணச்செய்தி வீடுமுழுக்கப் பரவியது போல் இருந்தது. கொட்டகையில் இருந்த மாடுகன்றுகள்கூட அசைபோடுவதை நிறுத்தி ஏதோ முனகுவதுபோல் சப்தம் செய்துகொண்டு காதுகளை நிமிர்த்திக் கண்களை அகலவிரித்து எல்லோரையும் பார்த்துக்கொண்டிருந்தன. அவை ஊமை மொழியில் தங்கள் ஏக்கத்தைச் சொல்லிக்கொள்வதுபோல் இருந்தன.

சிறிது நேரம் மௌனமே ஆட்சி செலுத்தியது. கௌடர், குழந்தைகளை ஒருமுறை பார்த்தார். ''ஆச்சாரையா, 'இந்தக் குழந்தைகள் அநாதையாகிவிடும்' என்று பயப்பட வேண்டிய தில்லை. செத்தவர் குழந்தைகளை இருப்பவர் பார்த்துக்கொள் வார்கள்'' என்று இன்னும் ஏதோ சொல்ல வாயெடுத்தார். அவர் மனைவி, பயத்துடன் அவர் வாயைப் பொத்திப் பாளாச் சார் பக்கம் திரும்பி, ''பாருங்க, இப்படித்தான் பேச ஆரம்பிச் சுட்டாரு. 'காலரா நோய் வந்தவங்க பொழைக்கமாட்டார்'னு பயந்துட்டாருங்க. 'ஆச்சாரையா, ஊருக்கெல்லாம் வேரை உறைத்துக்கொடுத்து நூத்துக்கணக்கான பேரைக் காப்பாத்தி னீங்க! என்னையும் காப்பாத்துங்க'ன்னு கேக்கறதை விட்டுட்டு இப்படியா பேசறது? இப்படி அச்சானியமாப் பேசின என் நெஞ்சு வெடிச்சுப்போகுதுங்க!'' என்று சொல்லித் துக்கம் பொங்கிவர அழுதுவிட்டாள்.

ஆச்சாருக்கு எல்லாம் விளங்கியது. இந்தப் பிரச்சினையை அவர் ஏற்கெனவே எதிர்பார்த்திருந்தார். இதுபோன்ற நெஞ்சில் குமுறும் சங்கடத்துக்கு அவர் என்றும் வசப்பட்டதில்லை. மணியக் காரரின் மனைவியான பார்வதியம்மாவின் பேச்சுக்கு பதில் சொல்ல ஆச்சாருக்கு நா எழவில்லை. தம்மிடம் இருந்த சக்கராணி வேர் முழுவதும் தீர்ந்தபின் தேய்ந்துபோன கடைசிப்பகுதியைச் சென்னனுக்காக மல்லியிடம் கொடுத்துவிட்டு வந்திருந்தார். உயிரைக்காக்கும் சக்தியெல்லாம் அந்தக் கடைசித் துண்டில்தான் இருக்கவேண்டும். சற்று முன்பே தெரிந்திருந்தால் கௌடரைக் காப்பாற்றியிருக்கலாமோ என்னவோ? 'இப்பொழுது கௌடரைக் காப்பாற்றவேண்டும்' என்றால் கொடுத்த மருந்தைத் திருப்பி வாங்கிவர வேண்டும். ஆனல் சென்னன்,

மருந்தில்லாமல் செத்துவிட்டால் அந்தப் பாவத்துக்கு அவர் தானே ஆளாகவேண்டும். இப்பொழுது கௌடர் மனைவி, 'அவரைக் காப்பாற்றவேண்டும்' என்று மன்றுடுகிறாள். கௌடர் தம்முடைய ஆப்த நண்பர். அவருடைய இறுதிக் காலத்தில் உதவாவிட்டால் என்ன பயன்? இந்தத் தர்மசங்கடம் ஆச்சாரை விச்வரூபம் எடுத்து வாட்டியது. அவர் பார்வை நிலையில்லாமல் அங்கும் இங்கும் பாய்ந்தது.

கௌடரைப் பார்க்கச் சிலர் உள்ளே வந்தார்கள். அவர்களைப் பார்த்து ஆச்சார், 'இதோ பாருங்கள், கௌடருடைய நிலைமையைப் பார்த்துவிட்டீர்கள் அல்லவா? இனிமேல் வீட்டைப் பார்க்கப்போங்கள். இது பெரிய தொற்றுநோய்! வெகுநேரம் நிற்கவேண்டாம்' என்று சொன்னார். ஆனால் இது பார்வதி அம்மாளுக்கும் பிடிக்கவில்லை

'ஆச்சாரையா, நீங்களே இப்படி வந்தவங்களைக் காபராப் படுத்தினா, எப்படி வாழுறது? கௌடருக்கு மருந்து கொடுக்க வழிசொல்லுங்க' என்று குற்றம் சாட்டுவது போலவே கேட்டாள்.

'தங்கச்சி, காப்பவனும் அவன்தான், அழிப்பவனும் அவன் தான். அவனுடைய கருணை ஒண்ணு இருந்தா நெருப்பிலேயே நின்னுக்கூடப் பயம் இல்லே. அன்வந்திரியே வந்தாலும் தெய்வ சங்கல்பத்துக்கு எதிராக ஒண்ணும் செய்யமுடியாது. நீயும் எல்லாம் தெரிஞ்சவ. மருந்து கையிலே இருந்தா அதைத் தேய்ச்சுக்கொடுக்காமே பிரமை பிடிச்சுப்போய் உக்காந்திருப் பேனா, நான்?' என்று சொல்லி ஆச்சார் பெருமூச்சுவிட்டார்.

'வேர் இருந்தது; இப்போது மாயமாப் போயுட்டுதா ஆச்சாரையா?' என்று சந்தேகத்துடன் கேட்டாள். நாள் முழுவதும் கோபாலகிருஷ்ணன் கோயிலில் உட்கார்ந்து ஆச்சார், எல்லோருக்கும் மருந்து கொடுத்தது அவளுக்குத் தெரியும்.

'ஒத்தருக்குக் காணும்படிதான் இருந்தது. சற்று முன்புதான் வரும் வழியில் சக்கிலியச் சென்னனுக்குக் காலரா கண்டிருப்பதாகக் கேள்விப்பட்டேன். அதை அவனுக்குக் கொடுத்தனுப்பிச் சிட்டு வெறுங்கையோடு நின்னபோதுதான் கௌடர் சங்கதி தெரிந்தது' என்று ஆச்சார் நடந்ததை விவரித்தார்.

'போடா, மல்லா! சேரிக்குப்போய் சென்னன் வீட்டிலேருந்து அந்த வேரை வாங்கியா. கௌடருக்கு வேணும்னு சொல்லு' என்று பார்வதி அவசரமாக உத்தரவு போட்டாள்.

அதைக் கேட்ட கௌடர் மெலிந்த குரலில், 'போக வேண்டாம், மல்லா! எனக்கு அப்படிப் பிழைக்கவேண்டும் என்று

ஆசை இல்லை. உயிர் போகும் சமயத்தில் அந்த ஏழையைக் கொன்றுவிட்டுக் கொண்டுவரும் வேர் எனக்கு வேண்டாம். அந்தப் பாவத்தைச் செய்துவிட்டு எந்த நரகத்துக்குப் போவது!' என்று கத்தினர். அவ்வளவு பேசியதே அவருக்குக் களைப்பாகி விட்டது. கைகால்கள் முறுக்கிக்கொண்டன. வாந்தி எடுத்தார்.

'போகப் புறப்பட்ட மல்லப்பன் தயங்கிநின்றான். மறுபடியும் ஒருமுறை அவனைப் போகச்சொல்ல எண்ணிய கௌடரின் மனைவி அவர் வாந்தி எடுத்ததைக் கண்டு அவரைக் கவனிக்கத் தொடங்கினாள். ஆச்சார் ஊமைத் துக்கத்தால் ஸ்மரணை இல்லாமல் உட்கார்ந்துவிட்டார். அப்பொழுது மாளிகையில் இருந்து யசவந்தராவ் கௌடரைக் காண ஓடிவந்தார். அவர் உட்காரும் முன்பே சட்டைப்பையில் கைவிட்டுக் கர்ப்பூரத்துண்டு ஒன்றை எடுத்து 'இதை வெந்நீரில் போட்டுக் குடிக்கக்கொடுங்கள்' என்று சொல்லிப் பார்வதியின் கையில் கொடுத்தார்.

பார்வதிக்கு அது சஞ்சீவியாகத் தோன்றியது. அவசரப்படும் அவளுடைய மனம், வேலைக்காரியிடம் சொல்லி வெந்நீர் கொண்டுவரும் வரை காக்க மறுத்தது. 'தானே போய் வெந்நீர் கொண்டுவர வேண்டும்' என்று எழுந்திருந்தாள்.

''யசவந்தராவ், நீங்க வந்தது நல்லதாப்போச்சு. சாகும் முன்பு, 'எல்லோரையும் மன்னிப்புக் கேட்டுக்கொள்ள வேண்டும்' என்று வரச்சொல்லி அனுப்பினேன். பாபு சாஹேப் எங்கே? சேஷப்பா வரவில்லையே'' என்று பலவீனத்துடன் கேட்டார் கௌடர்.

'பேசிக் களைப்பை அதிகரித்துக்கொள்ள வேண்டாம். எல்லோரும் வருவார்கள்' என்று யசவந்தராவ் சொன்னார்.

'ஆம், நான் செத்தபின் வருவார்கள். பேச முடியும்போதே வந்திருந்தால் எல்லோரையும் மன்னிப்புக் கேட்டுக்கொண்டிருப் பேன்' என்றார் கௌடர்.

'கௌடரே, அப்படிப்பட்ட தப்பு ஒன்றும் நீங்கள் செய்ய வில்லை. சொல்லப்போனால் அவர்கள் உங்களை மன்னிப்புக் கேட்பதுதான் நியாயம்' என்று யசவந்தராவ் கௌடரைச் சமாதானப்படுத்த முயன்றார்.

'யசவந்தராவ், பேச்சை வளர்த்த வேண்டாம். அவருக்கு நிரம்ப ஓய்வு வேண்டும்' என்று பாளாச்சார் கேட்டுக் கொண்டார்.

அந்தப் பேச்சு, கௌடர் காதிலும் விழுந்தது. கௌடர் விசித்திரமாக ஒரு சிரிப்புச் சிரித்தார். பதற்றம் இல்லாமல்

ஆச்சாரைப் பார்த்து, 'ஆச்சாரையா, நீங்கள் சொன்னது சரியான வார்த்தை. இனிமேல் நிச்சயமாக ஒய்வெடுத்துக் கொள்ளப்போகிறேன். பேசுவதற்கு நான் வெகுநேரம் இருக்கப் போவதில்லை. இதோ என் குழந்தைகள். உங்கள் எல்லோரிடமும் ஒப்படைத்துவிட்டேன். அன்றைக்கே சொன்னேன். மணியக் காரர் குடும்பத்து மானம், மரியாதை எல்லாம் உங்களுடையதே. அதைக் காப்பாற்றவேண்டும். என் தவறுகளை எல்லாம் மன்னிக் கணும்' என்று சொல்லிய கௌடர் மறுபடியும் கைகூப்பினார். ஆனால் களைப்பால் கூப்பிய கை இழுந்தது. உடம்பை இறுக்கிப் பிழிவதைப்போல் புரண்டார். படுத்த இடத்திலேயே வாந்தியும் மயக்கமும் ஆரம்பித்தன.

அப்போது அவருடைய மனைவி உள்ளே இருந்து ஓடிவந்தாள். கர்ப்பூரத் தண்ணீரைக் குடிக்க வாயைத் திறக்கச் சொன்னாள். கௌடருக்குப் பல் கிட்டிவிட்டது. அவர் வாயைத் திறக்கவில்லை. பார்வதிக்கு நிலைமை புரிந்துவிட்டது. மார்பில் அடித்துக் கொண்டு, 'ஐயோ, என் குங்குமத்தின் துரையே! கைவளையை உடைத்துவிட்டு ஏமாற்றிவிட்டுப் போய்விட்டாயா?' என்று பெரும் குரலெடுத்து அழத்தொடங்கினாள். இந்தப் பயங்கரக் கூச்சலைக் கேட்டு நடுங்கிய கௌடருடைய சிறிய மகன் 'வீல்' என்று கத்திக்கொண்டு உள்ளே ஓடினான்.

பாளாச்சார் எழுந்துபோய்க் கௌடருடைய நாடியைப் பிடித்துப் பார்த்தார். இன்னும் ஏதோ பேசவேண்டும் என்ற நினைவில் இருக்கும்போதே கௌடருடைய ஜீவன் பறந்து போய் விட்டது. பாளாச்சார், பார்வதியைப் பார்த்து, 'தங்கச்சி, அழுதால் செத்தவர் திரும்பிவரப் போவதில்லை. உன்னுடைய பத்துக் குழந்தைகள் உன் கண் எதிரிலேயே செத்தபோது இப்படித்தான் அழுதாய். அவர்களைப் பிழைக்கவைக்க முடிந்ததா? இன்று கௌடர், நாளைக்கு நான்! உன்னைப்போன்ற விவரம் தெரிந்த பொம்பளைட்டி இப்படி அழக்கூடாது. ஊர் மணியக்காரர் மனைவி, ஊருக்கு ஆதரவு சொல்வதுபோய் நீயே அழலாமா?' என்று தைரியமும் ஆறுதலுமான நாலுவார்த்தை களைச் சொல்லிவிட்டு யசவந்தராவுடன் அங்கிருந்து வெளி யேறினார்.

ஆச்சார் வெளியே போனபோது கௌடரைக் கடைசியாகப் பார்ப்பதற்கு மக்கள் கூட்டம் கூட்டமாக அவர் எதிரே வந்தார்கள். பாதள்ளியே அங்கேவந்து நிறைந்துவிட்டது. அவர் களைக் கண்ட ஆச்சாருக்குத் துக்கம் நெஞ்சை அடைத்ததால் அவர்களுடன் ஒன்றும் பேசமுடியவில்லை. கிளி, பாடம் சொல்வது

போல் வெறும் சமாதானம் சொல்ல மனம் வரவில்லை. இடிபோன்ற கொள்ளை நோய், சாவு ஊர்வலத்தை நடத்தும் போது யாருக்கு யார் சமாதானம் சொல்வது? எல்லோர் மேலும் சாவின் முத்திரை படிந்துவிட்டதுபோல் ஆச்சாருக்குத் தோன்றியது. அங்கே நிற்கவும் முடியாமல் ஆச்சார், தலையைக் குனிந்துகொண்டு மேலே நடந்தார். அவருக்கு வழிவிடுவதற் காகச் சற்று ஒதுங்கி நின்ற ஜனங்கள் பொங்கிவரும் வெள்ளம் போல் அழுதுகொண்டு கௌடர் வீட்டில் புகுந்தார்கள்.

கௌடர் இறந்த அன்று இருபத்திரண்டுபேர் காலராவால் இறந்தார்கள்! காலீம்கானு இளைஞர்களால் சேர்ந்தாற்போல் அவ்வளவு குழிகளை வெட்ட முடியவில்லை. பழைய குழிகளையே தோண்டி, உள்ளேயிருந்த எலும்புக் கூடுகளை எடுத்து வெளியே எறிந்துவிட்டு அதில் பிணத்தைவைத்து மண்ணைப் போட்டு மூடும் எளிய வழியைக் கைப்பிடிக்க வேண்டியதாயிற்று. ராத்திரி மணி எட்டு இருக்கும். மடத்தில் கேட்பார் இல்லாமல் செத்துக்கிடந்த கெஞ்சனுடைய பிணத்தைச் சுமந்துவரப் போனபோது கௌடர் இறந்த செய்தி அவர்களுக்குத் தெரிந்தது. கௌடருக்காகக் 'கெட்டியான நிலத்தில் புதுக்குழி தோண்டவேண்டி வந்து விட்டதே' என்று சில இளைஞர்களுக்குச் சலிப்பாக இருந்தது.

'மகாராஜன் கௌடன்! இருந்தும் தொல்லை கொடுத்தான்; செத்தும் தொல்லை கொடுக்கிறுன்' என்று பெரிய குறும்பன் நிங்கன் சொல்லிய பேச்சு, கெஞ்சனுடைய பிணத்தைக் குழியில் வைத்துக்கொண்டிருந்த தாதாவின் காதில் விழுந்தது.

'செத்தும் தொந்தரவு கொடுக்கும் அப்படிப்பட்ட கௌடன் யாரப்பா?' என்று அவன் கேட்டான். பிணத்தின்மேல் மண்ணைப் போட்டு மூடிக்கொண்டிருந்த நிங்கனே அதற்கும் பதில் சொன்னுன்.

சங்கரப்பகௌடர் இறந்துவிட்ட செய்தியைக்கேட்டவுடனே தாதா, கைவேலையைப் போட்டுவிட்டுக் குழிக்கு வெளியேவந்து உட்கார்ந்தான். நெஞ்சில் சூடுபோட்டதுபோல் இருந்தது. நானுப் பெரியப்பா இறந்த துக்கத்தைவிட அவனுக்கு இந்தத் துக்கம் அதிகமாகவே இருந்தது. உட்கார்ந்த இடத்திலேயே பெருமூச்சுவிட்டு விக்கிவிக்கி அழத்தொடங்கினுன்.

'மொகத்திலே மீசை வளர்ந்தப்பறம்கூடச் சின்னப்பசங்க மாதிரி ஏண்டா அழறே அசடே! அந்தக் கௌடன் உனக்குப் பெரியப்பாவா? மாமாவா? சித்தப்பன் பெரியப்பன் பேரனு? அழுகிருப்பலே என்ன வந்தூடுத்து?' என்று நிங்கன், கிண்டலாகச்

சொன்ன பேச்சுகூடத் தாதாவின் காதில் விழவில்லை. அவன் மனம் சூன்யம் ஆகிவிட்டது. அப்படியே உட்கார்ந்திருந்தான்.

தாதாவின் துக்கக் காரணத்தைக் கேட்பதற்கோ ஆறுதலாக நாலுவார்த்தை சொல்வதற்கோ அவனுடைய நண்பர்களுக்குப் பொழுதில்லை! இன்னும் இரண்டு பிணங்களுக்கு மண்போட்டு மூடும் வேலை காத்திருந்தது. அவர்களுள் நாலுபேர் வேறொரு பிணத்தை எடுத்துவர அவசரமாகப் போனார்கள். மற்ற மூவரும் பழைய குழி ஒன்றைத் தோண்டத் தொடங்கினார்கள்.

மழையும் வெந்நீரும் மடுவைப்போல் இருக்க அதன் நடுவில் கிடந்த கெஞ்சமுடையார் பிணத்தைச் சுமந்து வருவது மிகச் சிரமமாக இருந்தது. அதனால் அதைக் கொண்டுவரப் போனவர்கள் அந்த வேலையை வேறு சிலரிடம் ஒப்படைத்துவிட்டுத் தாங்கள் குழிவெட்டும் வேலைக்கே வந்துவிட்டார்கள். கடப்பாறையின் அடி விழுந்துகொண்டே இருந்தது. கல்லோ இரும்புத்துண்டோ எலும்புக்கூடோ ஏதாவது மீது கடப்பாறை பட்டாலும் விசித்திரமான சப்தம் கேட்டுக்கொண்டிருந்தது. இல்லாவிட்டால் மெதுவாக லயத்துக்கு வெட்டப்படும் கடப்பாறையின் ஓசை கேட்டிருக்கும். குழியைத் தோண்டும்போது செத்தவனுக்குப் பதிலாகப் 'படையப்பாவே இறந்திருந்தால் என்ன நடந்திருக்கும்?' என்பதை ஊகித்துப் பார்க்கத் தொடங்கினார்கள். படையப்பா செத்துப் போயிருந்தால் கலெக்டர் அதிகாரத்துக்கு உடனே இரண்டு வந்திருக்கும். ஆனால் செத்தவன் திக்கில்லாத ஏழை. வீடு வாசலை விட்டொழிந்த அநாதை. அதனாலேயே எடுக்கத் திக்கில்லாமல் அவனுடைய பிணம் சாயங்காலம் வரைக்கும் நாறிக்கொண்டு கிடந்தது. ஏழையாக இருந்தால் என்ன? பணக்காரனாக இருந்தால் என்ன? இறந்துவிட்டால் அவர்களைக் குழியில் இடும்போது 'எல்லோரும் வரவேண்டும்' என்பது நியாயமுடைய வாதம். அதைக் கேட்ட அவனுடைய தோழனான ராமன், 'யாரிடம் அப்பா இந்த வார்த்தை சொல்றே? இப்பப் பழைய குழி ஒன்றைத் தோண்டி, அதில் ஒண்ணில்லே, இரண்டு பிணத்தை வச்சு மூடியிருக்கே! மணியக்காரன் பொணத்துக்கு மட்டும் புதுக்குழி தோண்டறயா இல்லையா? பெரிய மனுஷன் செத்தாலும் பெரிய மனுஷந்தான்!' என்று சொல்லி நிங்கன் வாயை அடக்கினான். தாதாவின் காதிலும் இந்தப் பேச்சு விழுந்தது. அப்போதைக்கு அந்தப் பேச்சு அவனுக்குச் சரியாகவே பட்டது. சங்கரப்ப கௌடருடைய பெருந்தன்மை அவன் கண்ணில் கட்டியதுபோல் தோன்றியது.

தீவட்டி ஒளியில் குழிகளை வெட்டும் வேலை ஓயாமல் நடந்து கொண்டிருந்தது. எலும்புக்கூடுகளின் துண்டுகளை வெளியே எடுத்து எறியும்போது ராமனுடைய கையில் ஒரு மண்டையோடு கிடைத்தது.

'அடே நிங்கா, இதைப் பாரடா. நல்ல பெரிய மனுஷனோட மண்டைபோல் இருக்கு' என்று பரபரப்போடு சொன்னான்.

'' 'பெரிய மனுசன் தலை'ன்னு அது மேலே எழுதி வச்சிருக்கா என்ன? அசடு! செத்தவனுடைய மண்டையோட்டை வச்சிண்டு மனுசனையே அளக்கறயே நீ?'' என்றான் நிங்கன்.

'இந்த மண்டையோட்டின் அளவை நீதான் பாரேன்! இவன் உசிரோடெ இருக்கறபோது பதிறுறு மொழம் துணியைத் தலைக்குத் தலைப்பாவாச் சுத்தியிருக்கணும். இவ்வளவு பெரிய தலை உள்ளவங்க யாராவது இப்ப இருக்காங்களா?' என்று ராமன் தன் ஆச்சரியத்தை வெளியிட்டான்.

'இவனைச் சொமக்கறதுக்கு நாலுபேராலெ முடிஞ்சிருக்காது! இப்ப வந்ததுபோல அப்பவும் ஊரிலே இப்படிக் காலரா கீலரா வந்திருந்தா, சொமந்தவங்க இடுப்பே ஒடிஞ்சுபோயிருக்கும்!' என்று சொல்லிச் சிரித்த நிங்கன், கையில் அகப்பட்ட எலும்புகளை வீசி எறிந்தான்.

இந்தக் குழிதோண்டும் சப்தத்தின் பின்னணியிலே தாதாவின் எண்ணச் சக்கரம் சுழன்றது. கௌடர் இறந்ததைக் கேட்டபின் அவனுடைய உத்ஸாகமே குன்றிவிட்டது.

நள்ளிரவுப்பொழுதுக்குக் கௌடருடைய பிணத்தைத் தவிர மற்றவைகளை அடக்கம் செய்யும் வேலை முடிந்தது. காலையிலிருந்து ஓயாமல் குழிகளைத் தோண்டித்தோண்டி செத்துச் சுண்ணாம்பாகி விட்ட தாலீம்கானு ஆட்கள், 'அப்பாடா!' என்று ஆறுதலாக மூச்சுவிட்டார்கள். அதற்குமேல் படுக்க வீட்டுக்குப் போகும் சக்தி அவர்களுக்கு இல்லை. கடப்பாறைகளையே தலைக்கு அடியில் வைத்துக்கொண்டு அங்கேயே படுத்துச் சுகமாகத் தூங்கி விட்டார்கள். நள்ளிரவின் குளிர்காற்றுச் சுள்ளென்று உரைத் தாலும் அவர்கள் தூக்கம் கெடவில்லை. சாவின் துக்கம் தூக்கத்தில் மறைந்துவிட்டது. இரவு, ஆறுதலைப்போல் குளுகுளு வென்றிருந்தது. மற்றவர்கள் தூங்கிய பின்னும் தாதாவுக்குத் தூக்கம் வரவில்லை. திரும்பத்திரும்ப சங்கரப்ப கௌடருடைய உருவமும் குரலும் அவன் நினைவிலே சுழன்றுகொண்டே இருந்தன. இனம்புரியாத வேதனை ஒன்று, அவனுடைய உடலை யும் உள்ளத்தையும் ஓயாமல் வாட்டிக்கொண்டிருந்தது. தன் தோழர்கள் எல்லாம் தூங்கிய பிறகு அவன் எழுந்திருந்து

கௌடர் வீட்டுக்குப் போனான். ஆனால் அங்கும் அழுகுரலும் கூப்பாடும் பெரும் வெள்ளமாகப் பெருகிக்கொண்டிருந்தன.

தொலைவில் இருந்தே அதைக் கண்ட அவனுக்கு வீட்டுக்குள் அடிவைக்கத் துணிவு இல்லை. அப்படியே புதைகுழிகள் இருக்கும் இடத்துக்குப்போய்த் துக்கத்தை மறப்பதற்காகக் கௌடருக்குத் தேவையான புதிய குழியைத் தோண்டுவதில் ஈடுபட்டான். அவன் உடம்பில் ஆவேசம் வந்ததுபோல் இருந்தது. 'சங்கரப்ப கௌடருக்குத் தான் செய்யக்கூடிய நன்றிக்கடன் இது ஒன்று தான்' என்று அவன் நினைத்தான். அந்த நினைவில் களைப்பையும் லட்சியம் செய்யாமல் பள்ளம் தோண்டிக்கொண்டிருந்தான். உறுதியான தரை, கடப்பாறைத் தாக்குதலுக்கு லேசில் அசைந்து கொடுக்கவில்லை. ஆனால் தாதாவின் உறுதி நிலத்தின் அழுத்தத்தை விட அதிகமாக இருந்தது. அவன் குழியைத் தோண்டிமுடித்த பொழுது வெளிச்சம் பரவியது.

மறுநாள் நடுப்பகல் நேரத்தில் கௌடரின் உடல் பாதள்ளி மக்கள் எல்லோருடைய அநுதாபத்துடனும் இறுதிச் சடங்கைப் பெற்றது.

பாதள்ளியில் காலரா நோயால் இறந்தவர்களுள் கௌடர் தான் கடைசி ஆள். மறுநாள் புதிதாக யாருக்கும் காலராக் காணவில்லை. ஏற்கெனவே நோய் கண்டவர்களும் சாகவில்லை. அதற்குப் 'பாளாச்சாரின் வேரின் மகாத்மியம்தான் காரணமாக இருக்கும்' என்று சிலர் சொல்லிக் கொண்டார்கள். எப்படியோ காலரா தன் விசுவரூபத்தைக் காட்டியபின் ஊரைவிட்டுப் போய் விட்டது. ஆனால், 'பாதள்ளியின் வாழ்க்கை எப்படி முடியும்?' என்ற தெளிவு யாருக்கும் இல்லை. கொள்ளைநோய் ஒழிந்து ஊர் அமைதியானபின் என்ன மிஞ்சியிருந்தது? எதிரிப்படை புகுந்து சூறையாடியதுபோல் ஊரின் வாழ்க்கையே துவம்சம் ஆகி விட்டது! கோட்டையாக இருந்து ஊரைக் காத்துவந்த கௌடர் போய்விட்டார். 'சில மனிதர்களோடு பிரச்சினைகளும் ஒழிந்தன' என்பது உண்மைதான். ஆனால் இந்தப் பிரளயத்திலேயே சில புதிய பிரச்சினைகளும் தோன்றின. இனிமேல் அவைகளால் மறுபடியும் ஓயாத வாழ்க்கைப் போராட்டம் தொடங்கப் போகிறது!

—முதல் பாகம் முடிந்தது—

## பாகம் 2

## 17

காலராவினால் பாதள்ளிப் பொதுவாழ்க்கைக்குப் பெருத்த சேதம் ஏற்பட்டுவிட்டது. புக்லாபாய் இறந்ததால் ஜாகீர் மாளிகை நாதன் இல்லாததாகிவிட்டது. கௌடர் இறந்ததால் அவருடைய குடும்பம் நட்டாற்றில் மிதந்தது. இந்த இரண்டு சாவுகளின் பயனாகவே புதிய பெரும் பிரச்சினைகள் தலைதூக்கின. அவைகளைத் தீர்க்காவிட்டால் பாதள்ளி வாழ்க்கை முன்னேறும் என்று தோன்றவில்லை. பெரிய பொறுப்பொன்று பாளாச்சாரின் தலையில் விழுந்தது. முதல் முதலில் ஜாகீர்தார் குடும்ப விஷயத்தைச் சீர்ப்படுத்தவேண்டும். லக்ஷ்மிபாயை வரவழைத்து மாளிகையை அவளிடம் ஒப்பித்து, பாபு சாஹேபை ஊரை விட்டு அனுப்பவேண்டும். ஆனால் அதற்குள்ளேயே 'மணியக்காரர் குடும்பத்து வாரிசு விவகாரம் தலையை நீட்டுமோ?' என்று அவருடைய தூரதிருஷ்டி கவலையைக் கொடுத்தது. கௌடர் இறக்கும்போது சொன்ன வார்த்தையை முடித்துக்கொடுக்க வேண்டும். அதற்காக ஆச்சார் கௌடருடைய குடியானவர்களுக்கு எல்லாம் கௌடருடைய கடைசி வேண்டுகோளைத் தெரிவித்திருந்தார். அவர்களும் கௌடருடைய குடும்ப கௌரவத்தைப் பாதள்ளியின் கௌரவத்தைப் போலவே நினைத்து 'நடத்திக் கொடுப்போம்' என்று ஆணை இட்டிருந்தார்கள். ஆனால் மறைவாகத் தீயசக்திகள் ஊரின் சூத்திரங்களைப் பிடித்து ஆட்டிக்கொண்டிருந்தால் என்ன செய்ய முடியும்?

பாளாச்சாரின் சந்தேகம் விரைவிலேயே உண்மையாயிற்று. கௌடர் இறந்து ஒருவாரம் ஆகியிருக்கும். ஒருநாள் படதையா, லிங்கப்பனை அழைத்துக்கொண்டு பாதள்ளிக்கு வந்தார். புக்லாபாய் இறந்து அன்று ஒரு மாதம் ஆகியிருந்தது. பாபு சாஹேப் அவர்கள் இருவரையும் எதிர்கொண்டு ஊர்வலமாக அழைத்து வந்தான். ஊருக்கெல்லாம் இந்தச் செய்தி தெரியவேண்டும் என்றே அவர்கள் இந்தச் சூழ்ச்சி செய்தனர். ஊர்வலத்தின் விசேஷம், அதில் கர்ணம் சேஷப்பாவும் பங்கு கொண்டிருந்தது தான். பாபு சாஹேப் லிங்கப்பாவைத் தனது மாளிகையில் 'வைத்துக்கொள்ள வேண்டும்' என்று ஆசைப்பட்டாலும் சுவாமிகள் ஒப்புக்கொள்ளவில்லை. 'அவன், மடத்தில் இருப்பது தான் நியாயம்' என்பது அவருடைய உறுதியான அபிப்பிராயம்.

இந்தக் காட்சியைப் பாளாச்சார் பார்த்தார். அவருக்கு நிலைமை நன்முக விளங்கிவிட்டது. லிங்கப்பாவை பாபு சாஹேப் வரவேற்ற சங்கதியைப் பொருள் பொதிந்ததாக அவர் நினைத்தார். 'அது அனர்த்தத்துக்கு இடம்' என்று அவர் நினைத்தார். திட்டம் இட்டுப் பிணங்களின்மேல் வந்து உட்காரும் பருந்துகளையும் காக்கைகளையும்போல், பாபு சாஹேப், படைதயா இருவரும் சதிசெய்வது அவருக்குத் தெரிந்தது இன்னும் தாமதித்தால் 'விஷயம் கை மீறிவிடும்' என்று நினைத்தார். லக்ஷ்மிபாயை வரவழைக்க லக்ஷ்மணனிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்து அன்றிரவே இந்துபுரிக்கு (இந்தூர்) அனுப்பினுர்.

லக்ஷ்மிபாய் பாதள்ளிக்கு வருவதற்கு முதல் முதலில் சந்தேகப் பட்டாள். பழைய அநுபவத்தை அவள் என்றும் மறக்க முடியாதல்லவா? 'இப்பொழுதும் அப்படி அவமானம் தனக்காகக் காத்திருந்தால் என்ன செய்வது?' என்று கவலை உண்டாயிற்று. ஆனுல் ராஜபுரோகிதரிடம் இருந்தே அழைப்பு வந்திருந்ததால் அந்தச் சந்தேகம் தீர்ந்தது. மறுநாள் சாயங்காலமே லக்ஷ்மிபாய் பாதள்ளிக்கு வந்தாள். அவள், நன் பரிவாரத்துடன் ஆற்றின் அக்கரைக்கு வந்திருக்கும் செய்தி பாதள்ளிக்கு எட்டியது. உடனே பாளாச்சார், தாதா மற்றும் தாலிம்கானு ஆட்கள் எல்லோரும் போய் லக்ஷ்மிபாயை வரவேற்று அழைத்து வந்தார்கள்.

இந்தச் செய்தி பாதள்ளி எங்கும் விரைவிலேயே பரவியது. திரும்பவும் ஜாகீர்தார் குடும்பம் ஜனங்களின் ஆவலுக்கு மையம் ஆயிற்று. லக்ஷ்மிபாய் மாளிகைக்குப் புறப்படும்போது பழைய நிலைமையே எதிர்கொண்டது. பாபு சாஹேப் அவர்களை மாளிகையில் நுழையவிடவில்லை. மாளிகையின் மூடிய தலைவாசல் திறக்கவே இல்லை! அவமானத்தால் வெந்தவண்ணம் லக்ஷ்மிபாய் திரும்ப நேர்ந்தது ஆனுல் இரவு நேரம் ஆனதால் அவர்கள் உடனே இந்துபுரிக்குத் திரும்பமுடியவில்லை. பாளாச்சார் லக்ஷ்மிபாய் தங்குவதற்குத் தம் வீட்டின் ஒரு பகுதியை ஒழித்து விட்டார்.

ஜாகீருக்குச் சொந்தமான நிலங்கள் எல்லாம் இன்னும் லக்ஷ்மிபாயின் பெயரிலேயே இருப்பதாக ஸர்க்கார் கணக்கின் மூலம் தெரியவந்தது. ஆனுல் பாபு சாஹேப் ஜாகீரின் எல்லா நிலங்களையும் இருபது வருஷகாலக் குத்தகைக்குப் பிடித்திருந்தான் என்பதாகக் கர்ணம் சேஷப்பாவின் உதவியால் ஸர்க்கார் பத்திரங்களில் எழுதியிருப்பது விரைவிலேயே தெரிந்துவிட்டது.

லக்ஷ்மிபாய் ஏமாற்றத்துடன் வந்த வழியிலேயே திரும்ப நேரிட்டது.

இதுபோலவே மற்றொரு ரகசியமும் வெளிவந்தது. சங்கரப்ப கௌடரின் வாரிசு உரிமையை அவருடைய பெரிய மகனை லிங்கப்பாவின் பெயருக்கு மாற்றியிருப்பதும் தெரியவந்தது. கௌடர் குடும்பத்துக்குச் சொந்தமான ஐந்நூறு ஏகரா பூமியில் இருநூறு ஏகரா கௌடரின் சொந்தச் சாகுபடியில் இருந்தது. மற்றப் பூமியைக் குடியானவர்களிடம் சாகுபடிக் குத்தகைக்கு விட்டிருந்தார். இவர்கள் சங்கரப்ப கௌடரின் குடியானவர் களாக இருபத்தைந்து ஆண்டுக்காலம் நிலத்தைப் பயிர் செய்து வந்தவர்கள். படதையா, சேஷப்பா, பாபு சாஹேப் ஆகியோர் இந்தக் குடியானவர்களை அழைத்து லிங்கப்பாவின் பெயரில் குத்தகை ஒப்பந்தம் எழுதித் தரும்படி மனத்தை மாற்றப் பார்த்தார்கள். அப்படிச் செய்யாவிட்டால் அவர்களிடமிருந்து நிலங்களைப் பிடுங்கிக்கொள்வதாகப் பயமுறுத்தினார்கள். ஆனால் குடியானவர்கள் அதற்கு மசியவில்லை. அவர்களுக்கு இன்னும் கௌடர் குடும்பத்தின்மேல் விசுவாசம் இருந்தது. கௌடர் காலராவுக்கு இரையாகிவிட்டதால் அவர் குடும்பத்தாரிடம் குடியானவர்களுக்கு எல்லையற்ற அநுதாபமும் இருந்தது. எல்லாவற்றுக்கும் மேலாகச் சாவதற்கு முன்பு கௌடர் கேட்டுக் கொண்ட வேண்டுகோள் இன்னும் அவர்களுடைய இதயங்களில் ஒலித்துக் கொண்டிருந்தது. 'தங்களால் அந்த வேலை செய்ய முடியாது' என்று அவர்கள் கண்டிப்பாகச் சொல்லிவிட்டார்கள்.

கௌடர் சொந்தச் சாகுபடிக்கு என்று வைத்துக்கொண்டிருந்த ஆற்றோரத்து நிலங்களில் பயிர் செழிப்பாக வளர்ந்தது. அந்த நிலங்களின் விளைச்சலை வசப்படுத்திக்கொள்ளப் படதையாவும் பாபு சாஹேபும் திட்டமிட்டார்கள். 'தந்திரத்தால் காரியத்தைச் சாதிக்க வேண்டும்' என்று மிருகத்தனம் ஊக்கம் கொடுத்தது. சில வாரங்களுக்கு முன்னால் படையெடுத்த காலராவினால் தந்தை, தாய், அண்ணன், தம்பி, மனைவி இப்படி யாரோ ஒருவரை இழந்து குடும்பம் சீர்குலைந்ததால் பலர் துக்கத்தால் எதிலும் பற்றில்லாமல் இருந்தார்கள். யாருக்கும் தாற்காலிகமாக வாழ்வு வெறுத்துவிட்டது. சாவுத்துக்கம் எல்லோரிடத்திலும் ஒரு வெறுப்பை ஊட்டியது. அந்த வெறுப்பைப் போக்கிக்கொள்ள 'செழித்து நின்ற விளைச்சலைக் கொள்ளையிட்டு வரவேண்டும்' என்ற உத்ஸாகத்தில் காடவரும் புலையர்களும் கருக்கரிவாளைத் தீட்டிடத் தொடங்கினார்கள். காலராவினால் நேர்ந்த துக்கம் ஜனங்களின் மனிதத்தன்மையையே வேருடன் அழித்துவிட்டது. இப்பொழுது மிஞ்சியிருப்பது கலப்பில்லாத

மிருகத்தனம்தான். எல்லாவற்றையும் இழந்து சூனியமான இதயம் எரிச்சலுடன் பாய்ந்து எழுந்தது. படையா, அதற்கு நெய்வார்க்கத் தயாராக நின்றார்.

பாளாச்சார் சூழ்நிலைக்குப் பின்னணியில் பரவிக்கொண்டிருந்த இந்தக் காட்டுத்தீயைப்பற்றி ஊகித்திருந்தார். லேசாக வந்துகொண்டிருந்த புகை, அவருடைய மூக்கைத் தாக்கியது. 'இந்தச் சமயத்தில் பேசாமல் இருப்பது தவறு' என்று அவர் நினைத்தார். இந்த அனர்த்தங்களுக்கெல்லாம் சேஷப்பா தான் மூலபுருஷன் என்பது அவருக்குத் தெரிந்திருந்தது. ஆகையால் உடனே அவன் வீட்டுக்குப்போய் அவனைச் சந்திக்க விரும்பினார். சேஷப்பா வீட்டில்தான் இருந்தான். பாளாச்சாரைக் கண்டவுடன் அவரை வரவேற்று, 'அடே! ஏது இப்படி ஆச்சார் தயவு செய்தது?' என்று விசாரித்தான்.

'இப்படி ஊர்ப் பொது விஷயங்கள் தலைச்சுமையாக வந்து குவிந்தால் கணக்குப்பிள்ளையாகிய உங்களிடம் வராமல் எப்படி முடியும் அப்பா! நீயும் ஏதோ சூழ்ச்சி நடத்தி இருக்கிறாயே' என்று ஆச்சார் வந்த விஷயத்தை நேராகவே கேட்டுவிட்டார்.

சேஷப்பா, இதை எதிர் பார்த்துத்தான் இருந்தான். அதனால் கொஞ்சங்கூடச் சலனம் அடையாமல் மூக்கில் பொடியைவைத்து உறிஞ்சியபடியே, ''சூழ்ச்சி ஏது ஆச்சார்? ஊர்ப்பஞ்சாயத்தார் நீங்கள் இருக்கும்போது என் பெரியதனத்தை உடைப்பில்தான் போடவேண்டும்! செய்வதென்ன இருக்கிறது? 'தகப்பனுடைய வாரிசு, மகனைச் சேர்வது நியாயம்!' என்று சட்டமே சொல்கிறது. தகப்பனுடைய ஆஸ்தி பிள்ளையினுடையது. அதை அவன் 'ஏற்றுக்கொள்கிறேன்' என்று சொன்னால் சட்டப்படி அவனுக்கு எவ்வளவு சேரவேண்டுமோ அவ்வளவையும் அவனுக்கு வாங்கிக் கொடுப்பது நம் கடமை. முறைப்படி பார்வதியம்மா தன் நிலத்தில் மூன்றில் ஒரு பங்கை லிங்கப்பாவுக்குக் கொடுக்க வேண்டும். உண்மையில் நீங்களே இந்த விஷயத்தை அவர்களுக்குப் புரிய வைக்கவேண்டும். என் பேச்சை அவள் கேட்பதாக இருந்தால் இதையே அவளிடம் தெளிவாகச் சொல்லிவிடுவேன். இதில் அப்படி என்ன அநியாயத்தை நீங்கள் கண்டீர்கள்?'' என்று குத்தலாகவே கேட்டான் சேஷப்பா.

''அப்பா, உன்னிடம்தான் பேசக் கற்றுக்கொள்ள வேண்டும்! ஏண்டா, சேஷப்பா! 'அந்த லிங்கப்பன் சங்கரப்ப கௌடரின் மகன்தான்' என்பதுபோல் பேசுகிறாயே! கௌடர், தன் மூத்த மனைவிக்கு விவாகரத்துப் பத்திரம் கொடுத்த பல நாட்களுக்குப்

பின் இந்த லிங்கப்பா பிறந்தான். இது தெரிந்திருந்தும் தெரியாதவன்போல எனக்கே புத்தி சொல்லுகிறீரே!''

'''அதுவும் நிஜந்தான்'னு வச்சுக்குங்க ஆச்சார். 'சட்டம் ஒரு கழுதை' என்பார்கள். 'ஜனன ரிஜிஸ்தரின் பிரதியைக் கொண்டுவந்து ஆஜர்செய்து, வாரிசு உரிமை பெறவேண்டும்' என்று கேட்கும்போது, எனக்குப் பேச வாயில்லை பாருங்கள்'' என்று சேஷப்பா விவாதித்தான்.

''ஜனன ரிஜிஸ்தரின் பிரதி உன் வாயைக் கட்டவில்லை. அவனுக்காகப் பாபு சாஹேப் கொடுத்த பணம் உன் வாயைக் கட்டிவிட்டது. இதோ பார்! நீ வைஷ்ணவன் என்பதால் 'ஒரு வார்த்தை சொல்லலாம்' என்று வந்திருக்கிறேன். இப்போது தோன்றியிருக்கும் வழக்கே போதும். இன்னும் வேறு அதிகப் பிரசங்கித்தனம் பண்ணாதே! 'இவனைக்கூட மணியக்காரர் குடும்பத்துக்கு நாதி இல்லை' என்று, 'வேகற வீட்டிலே பிடுங்கினது லாபம்'னு நடந்துக்கறது லாபம் அல்ல'' என்று பாளாச்சார் உள்ளம் நொந்து வேதனையுடன் சொன்னார்.

பாளாச்சாரின் சொல்லம்புகளால் சேஷப்பா பேச முடியாமல் அடங்கிவிட்டான். 'பாதுஷாஹியின் அராஜகம் ஏற்படுமோ' என்று அவனுக்கு ஒன்றும் வருத்தம் இல்லை. ஆனால் தான் பாபு சாஹேபிடம் இருந்து பணம் வாங்கினதாகச் சொன்ன சொல் அவனை உறுத்தியது. இது வரையில் வெளிவந்திராத செய்தியை அவன் எதிர்பார்க்கவில்லை. ஆகையால்தான் மௌனமாக இருந்தான். ஆனால் தான் பேசாமல் இருந்துவிட்டால் அதற்கு ஆச்சார் விபரீத அர்த்தம் கற்பித்து 'அதை நிஜம்' என்று சாதித்துவிடுவார் என்று பயந்தான். அதனால் ஓர் அசட்டுச் சிரிப்புச் சிரித்துக்கொண்டு, ''ஆச்சார் ஸ்வாமி, இப்பொழுது அந்தப் பாபு சாஹேப், நானுவின் கொலை நடந்த காலத்துப் பாபு சாஹேப் அல்ல. இப்பொழுது அவன் பௌஜ்தாரையும் தாசில்தாரையும் ஜேபியில் போட்டுக்கொண்டிருக்கும் படைதையாவின் சிஷ்யன். அப்படிப்பட்டவன் 'என் போன்ற அற்பனை கணக்குப்பிள்ளைக்குக் கையைத் தளர்த்துவான்' என்று நினைக்கிறீர்களா? இல்லை, தெரிந்து தெரிந்து என்மேலே பழி சுமத்துகிறீர்களே!'' என்று சொல்லிப் பார்வையில் கேள்வி தொனிக்க ஆச்சாரைப் பார்த்தான்.

''இந்தத் தில்லுமுல்லுகளை எல்லாம் விட்டுவிடு சேஷப்பா! படைதையா ஆடும் ஆட்டம் எல்லாம் நீ அவனுடைய வாலாக இருப்பதனால்தான். உன்னுடைய பக்கபலம் படைதையாவுக்கு இருப்பதால்தான் பாபு சாஹேப் அவனுக்குச் சீடனாக இருக்கிறான்.

'லிங்கப்பாவுக்கு மணியத்தைக் கொடுத்துச் சுதந்திரம் பெற வேண்டும்' என்று நீ இந்தத் தந்திரம் செய்திருக்கிறாய். நன்றாக யோசித்துப் பார். பாபு சாஹேபின் ரொக்கம், படையா போட்டிருக்கும் கணக்கு எல்லாம் வீணாகும் காலம் வரும்!'' என்றார் பாளாச்சார்.

பாளாச்சார் எச்சரிக்கை செய்தார். ஆனால் சேஷப்பா, வாயை இறுக மூடிக்கொண்டு அடம்பிடித்து உட்கார்ந்திருந்தான். பேச்சை வளர்த்தால் ஆச்சாரிடம் தோற்கவேண்டியதுதான். தன்னுடைய தந்திரமான சூழ்ச்சிகள் எல்லாம் பலிக்க நல்ல சமயம் வாய்த்திருக்கிறது. அப்படியிருக்க ஆச்சாரின் பேச்சைக் கேட்டு நடப்பது அவனுக்குப் பிடிக்கவில்லை

இந்த மௌனத்தையும் நெஞ்சழுத்தத்தையும் ஆச்சார் புரிந்து கொண்டார். சேஷப்பாவின் பேச்சில், 'நீங்கள் என் வழிக்கு வரவேண்டும்' என்ற பொருள் எழுதி ஒட்டியிருந்தது. அதனால் அவர் மேலே பேச விரும்பாமல், 'வருகிறேன் சேஷப்பா' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

# 18

'பாரத (மாசிமாத)ப் பௌர்ணமியின் மலர்ந்த நிலவுவீசும் இரவு! தாதா, வயலில் கதிரோடுகூடிய சோளத்தட்டுப் போர், கோதுமை வைக்கோல் போர், வேரோடு பிடுங்கிய கடலைச் செடிக் குவியல் இவற்றின் பக்கத்தில் உட்கார்ந்து வானத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான் அவன் போர்த்துக்கொண்டிருந்த தடிக்கம்பளியையும் மீறிக் குளிர்காற்று உடம்பில் பட்டு அவனை நடுங்கவைத்தது. இரவு நேரத்தில் தூக்கத்தை விட்டுவிட்டு வயலைக் காக்க வேண்டியிருந்ததால் அவனுடைய மனத்தில் பல கவலைகள் போட்டியிட்டுப் புகுந்துகொண்டன. ஒரு முறை பூர்ண சந்திரனைப் பார்த்தான்; மற்றொருமுறை எட்டுத்திக்கிலும் பரவி வழிந்து வயல்களை எல்லாம் தடவிக் கொடுத்துக்கொண்டிருந்த வெண்ணிலவை ஆர அமர ஆராய்ந்தான். பூமிதேவி, வெண்ணில வின் மாயையில் தூங்கிவிட்டதுபோல் இருந்தது. அவன் மனம் பழைய நினைவுகளில் ஓடியது: நாணப் பெரியப்பா இறந்த அன்று அஜ்ஜராணி அநுமார் கோயிலில் தான் தனியாக இருந்து விடியற் காலை மேகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தது நினைவு வந்தது. அன்று வானத்தில் எண்ணற்ற நட்சத்திரங்கள் மின்னிக்

கொண்டிருந்தன. இன்றைக்கு அவைகளெல்லாம் நிலவாகிய கடலில் முழுகிப்போய்விட்டன. உட்கார்ந்து உட்கார்ந்து தாதாவுக்கு அலுத்துவிட்டது. யக்ஷகானப் பாட்டு ஒன்றை வாய்க்குள்ளேயே முணுமுணுத்துக்கொண்டு சோளப்போரின் பக்கம் போனுன். வெளுத்த நீர்நிறைந்த மடுவில் கறுப்பு எருமை ஒன்று படுத்திருப்பதுபோல் சோளப்போரின் நிழல் விழுந்த பகுதி அவனுக்குத் தோன்றியது. அங்கேயே அசையாமல் நின்று விட்டான்.

இந்த அநுபவங்கள் அவனுக்குப் புத்தம் புதியவை. இதற்கு முன் தாலீம்கானுவை விட்டுவிட்டு இரவு நேரத்தில் வயலில் நிற்கும்படி நேர்ந்ததில்லே. அறுவடைக் காலத்தில் நானுப் பெரியப்பா காவல் இருப்பார். அவர் இல்லாதபோது லக்ஷ்மணன் இருப்பான். லக்ஷ்மிபாயை வழியனுப்ப லக்ஷ்மணன் இந்து புரிக்குப் போயிருந்தபடியால் அந்தப் பொறுப்புத் தாதாவின் தலேயில் விழுந்தது. இந்த வயலேப் பாபு சாஹேபிடமிருந்து நானு குத்தகைக்கு எடுத்திருந்தான். நானு இறந்தபின் பஞ்சாயத்தார் அந்த நிலத்தை லக்ஷ்மணனிடம் ஒப்பித்தார்கள். சிமணுவின் பேரைச் சொல்லி, பாபு சாஹேப், வயலில் உள்ள சோளம் முதலியவற்றை எல்லாம் அபகரிக்கத் திட்டமிட்டிருந்த செய்தி லக்ஷ்மணன் காதில் விழுந்தது. தான் ஊரில் இல்லாதபோது 'ஆற்ருேரத்தில் விளேந்த வருஷாந்தப் பயிரைப் பாபு சாஹேப் அடித்துக்கொண்டு போய்விடக்கூடாது' என்ற முன்யோசனே யினுல் சோளப்பயிரை எல்லாம் பிடுங்கி லக்ஷ்மணன் குவித்திருந் தான். வேறு வயல்களில் பயிரான கோதுமை, கடலே இவற்றை யும் 'ஒரே இடத்தில் வைத்திருந்தால் காவலுக்கு எளிதாக இருக்கும்' என்று இங்கேயே களத்தடிக்குக் கொண்டுவந்து கொட்டியிருந்தான். ஊருக்குப் புறப்படும்போது, 'தாதா, வயலின்மேல் ஒரு கண் இருக்கட்டும். நான் திரும்பி வரும்வரை தாலீம்கானுவுக்குப் போகவேண்டாம். இரவு, பகல் எப்போதுமே இங்கிருந்து நகராதே' என்று உத்தரவு போட்டிருந்தான். ஆனுல் 'ஏன் இப்படிக் காவல் காக்கவேண்டும்?' என்பதன் காரணத்தை வேண்டுமென்றே தாதாவிடம் சொல்லவில்லே. தாதாவும் கேட்க வில்லே. தகப்பன் சொன்னபடி வயலுக்குவந்து காவல் இருந்தான்; அவ்வளவுதான்.

தாதா சோளப்போரைச் சுற்றிவந்தான். பயிர் அடிக்கும் இடத்துக்குப் பக்கத்தில் வந்து கடலேயோடு கூடிய செடிக் குவியலின் பக்கத்தில் உட்கார்ந்தான். பக்கத்து அடுப்பில் இருந்த வறட்டி, காற்றில் நன்ருகக் கனிந்துகொண்டது. சும்மா உட்கார்ந் திருந்து என்ன செய்வது? ஒருபிடி கடலேயை அடுப்பில் போட்டுச்

சுட்டுத் தின்ன விரும்பினான். அப்படிச் சுட்ட கடலையை ஒவ்வொன்றாக மென்றுகொண்டு உட்கார்ந்திருந்தான். சந்திரன் தலைக்குமேல் வந்திருந்தான். கடலையைத் தின்னும் சாக்கில் தாதாவின் சலிப்புக் கொஞ்சம் குறைந்தது. திடீரென்று பின்னால் திரும்பிப்பார்த்தான். தூரத்தில் யாரோ கிசுகிசுவென்று பேசுவது கேட்டது. திடீரென்று காற்றுத் திசை மாறி வீசியதால் பேச்சுச் சத்தம் அடங்கிவிட்டது. மனிதர்கள் கண்ணில் படவில்லை. 'இந்த நடுராத்திரியில் ஊருக்கு இரண்டு மைல் தூரம் தள்ளியிருக்கும் இந்த இடத்துக்கு யார் வருவார்கள்?' என்று எண்ணித் தானே சிரித்துக்கொண்டான். மறுபடியும் சுட்ட கடலையை உரித்துத் தின்பதில் ஈடுபட்டான்.

சில நிமிஷங்களுக்குப்பின் மறுபடியும் அதே சத்தம் கேட்டது. இந்தத் தடவை பேச்சும் கால் அடி ஓசையும் சேர்ந்து தென்புறத்துப் பள்ளத்திலிருந்து கேட்டன. தாதா அந்தப்பக்கம் எட்டிப் பார்த்தான். பொதுவாகக் காவல்காரர்களுக்கு உண்டாகும் பயம் அவனுக்கும் உண்டாயிற்று.

மூன்றுபேர் பள்ளத்தின் வழியாக அவன் இருந்த இடத்தை நோக்கி வந்துகொண்டிருந்தார்கள். நிலா வெளிச்சத்தில் அவர்கள் கம்பளி போர்த்துக்கொண்டு வருவது தெரிந்தது. 'கடலைச் செடிகளைத் திருடிக்கொண்டு போகவே யாராவது வந்திருப்பார்கள்' என்று அவன் நினைத்தான். 'வரட்டும் என்னுடைய பட்டைக் கோடாலியின் ருசியை அவர்களுக்குக் காண்பிக்கிறேன்' என்று நினைத்தவண்ணம் தாதா, கோடாலியைக் கையால் தடவிக்கொண்டு அவர்கள் வரவையே பார்த்தபடி உட்கார்ந்திருந்தான். அவர்கள் வரும்போது 'கண்மறைவாக இருக்கவேண்டும்' என்று கோதுமைத்தாள் போரின் மறைவில் ஒளிந்து உட்கார்ந்துகொண்டான். வந்தவர்கள் நேராக அங்கேயே வந்தார்கள். அங்கே நின்று சுற்றுமுற்றும் பார்த்தார்கள். 'தாதாவை இங்கே காணலியே?' என்று ஒருவன் சொன்னான்.

'அப்படியானா ரொம்ப நல்லதாப் போச்சு' என்றான் மற்றொருவன்.

'இல்லாமல் எங்கடா போவான்? சோளப்பயிர்ப் போருக்குப் பக்கத்திலே படுத்திருப்பான்' என்று இன்னொருவன் யோசனை சொன்னான்.

'மூச்சு விட்டால்கூடத், தான் அங்கே இருப்பது அவர்களுக்குத் தெரிந்துவிடுமோ என்று தாதா மூச்சையும் அடக்கிக்கொண்டான். வேட்டையைப் பிடிப்பதற்காகப் பதுங்கி உட்கார்ந்திருக்கும் புலியைப்போல் கண்ணைக் கொட்டாமல் அவர்களைப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான்.

அந்த மூவருள் ஒருவன், வைக்கோல் போரைச் சுற்றிக் கொண்டு தாதாவின் பின்னால் வந்து நின்றான். தாதா உடனே திரும்பி, 'யார் நீ?' என்று அதட்டினான்.

அந்த மனிதன் கையைத் தட்டி வயலெல்லாம் எதிரொலிக்கும்படி உரக்கச் சிரித்து, 'மிருகம் இங்கே உக்காந்திருக்குது, வாங்கப்பா' என்று கத்தினான். அவன் கூட்டாளிகளும் அங்கே வந்தார்கள். அவன் உரக்கப் பேசும்போதே அவன் குரலைத் தாதா கண்டுகொண்டான். தானும் சிரித்துக்கொண்டே எழுந்து நின்றான்.

'ஏ, பயல்களா! கம்பளியாலே முட்டாக்குப் போட்டுகிட்டு திருடப் பொறப்பட்டாப்பலே ஏன் இப்படி வந்தீங்க?' என்று கேட்டான்.

'திருடப் பொறப்பட்டவங்களோட நாங்களும் சேர்ந்து புறப்பட்டோம். அதனாலே அவங்க மாதிரியே கம்பளியைப் போத்திக்கிட்டோம். தெரிஞ்சிக்கிட்டயா, தாதா?' என்று பெரிய குறும்பு நிங்கன் தாதாவின் முதுகைத் தட்டிக் கேட்டான்.

தாதாவுக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனால் அவர்களுடைய கிண்டல், அவர்கள் நள்ளிரவில் புறப்பட்டிருப்பது, கம்பளி முக்காடு இட்டிருப்பது, திருட்டைப்பற்றிய பேச்சு எல்லாம் சேர்ந்து அவனுடைய ஆவலைக் கிளப்பின. '' 'சங்கதி என்ன'ன்னு சீக்கிரம் சொல்லக்கூடாதா?'' என்று பரபரப்புடன் கேட்டான்.

'இதோ பார் தாதா! ஊர் பூராவும் இன்று கௌடருடைய வயலில் கொள்ளை அடிப்பதற்காகப் புறப்பட்டிருக்கு. படையா அவங்க இத்தினி பேரையும் ஒன்றாகக் கூட்டி வயலில் முத்தின பயிரைக் கொள்ளையடித்து வரச்சொல்லி அனுப்பியிருக்காரு' என்று நிங்கன் நிலைமையை விளக்கினான்.

அன்று மாலையில் படையா புலி வேட்டைக்காரர்களை அழைத்து வீடு வீடாக அனுப்பி ஜனங்களை எல்லாம் மாளிகைக்குத் தருவித்திருந்தார். அவர்களிடம் 'லிங்கப்ப கௌடர், இனி மேல் ஊர் மணியக்காரராகப் போகிறார். அவரோட நிலத்திலே வெளஞ்ச தானியம் அவருடையது. அதைப் பார்வதியம்மா ஒழுங்காக் கொடுக்கமாட்டா. அதனாலே நீங்கள்ளாம் போய் அந்தத் தானியத்தைக் கொணர்ந்து லிங்கப்ப கௌடரிடம் கொடுக்கணும்' என்று சொல்லியிருந்தார்.

'எங்களையும் மாளிகைக்குக் கூப்பிட்டாங்களா?' என்று நிங்கன் கேட்டான். ''இந்த மாதிரி வேலை செய்ய 'நம் கையால் ஆகாது' என்று நாங்கள் சொன்னபோது, பாபு சாஹேப் என்ன

சொன்னார் தெரியுமா? 'அட பயல்களா! தாலீம்கானுக் கட்டடம் கட்டிக் கொடுத்ததுக்கு இதுதானு நீங்கள் நன்றி காட்டற லக்ஷணம்! தாதாவின் பேச்சைக் கேட்டுகிட்டு நீங்கள்ளாம் கூத்தாடினு முடியாது. ஊர் ஜனங்களே எங்கபக்கம் இருக்கற போது நீங்க யார் குறுக்கிட!' என்றார் அவரோடெ தர்க்கம் செய்ய முடியுமா? 'ஆகட்டும்'னு சொல்லிட்டு, தலேலே கம்பளியைப் போட்டுகிட்டு அந்த ஜனங்களோடயே பொறப்பட்டோம் அப்பா. வழிலே பள்ளத்துப் பக்கமா ஒவ்வொத்தரா நழுவி மெல்ல இங்கேவந்து சேந்திட்டோம். ஒங்கிட்ட இந்தச் சங்கதியைச் சொல்லனும்னு வந்தாக்கா, நீ புலி மாதிரிப் பதுங்கிக் குந்திக்கிட்டு எங்களேயே பயப்படுத்தப் பாக்கறே!'' என்று சொல்லிச் சிரித்தான் நிங்கன்.

இந்தச் செய்தியைக் கேட்ட தாதாவுக்கு இடி விழுந்ததுபோல் ஆயிற்று. திடீர் என்று பல எண்ணங்கள் தோன்றிக் குழப்பியதால் 'என்ன செய்வது?' என்பது புரியவில்லை. அந்தச் செய்தியை அவனால் நம்பமுடியவில்லை. அதனால் மறுபடியும் கேட்டு உறுதிப் படுத்திக்கொள்ள நினைத்து, 'என்ன நிங்கா! ஊர் ஜனங்கள் கௌடருடைய பயிரைக் கொள்ளையடிக்க நெசமாவே பொறப் பட்டுட்டாங்களா?' என்று ஆச்சரியத்துடனும் பயத்துடனும் கேட்டான்.

'இப்ப கௌடருடைய நெலத்துக்குப் போய்ப் பாத்தா எல்லாம்தானே தெரியுது' என்று பதில் கொடுத்தான் நிங்கன்.

தாதாவின் முகம் கோபத்தால் சிவந்திருப்பது நிலவொளியில் நன்றாகத் தெரிந்தது. மூக்குத் துளைகளைக் கிழித்துக்கொண்டு பெருமூச்சு வெளிவந்தது. உதடுகள் துடித்தன.

''இதோ நான் பொறப்பட்டுட்டேன். 'எப்படிக் கொள்ளையடிக்கிறாங்க'ன்னு ஒருகை பாத்துடறேன்! நிங்கா, நான் வரவரைக்கும் எங்க நெலத்தைக் காப்பது உன் தலைப்பொறுப்பு'' என்ற தாதா பட்டைக்கோடரியை எடுத்துக்கொண்டு மின்னல் போல் புறப்பட்டான்.

''அடே, தாதா! அங்கே முந்நூறு நானூறு ஜனங்க கூடியிருக்காங்க. காடவர், புலையர், குறும்பர் ஆகிய எல்லா ஜாதியாரும், ஊரிலே வீட்டுக்கு ஒரு ஆளுனன்னும் வந்து கூடியிருக் காங்க. அத்தனை கூட்டத்திலே நீபோய் என்ன செய்வே, தம்பி? நீ இங்கிருந்து போறதைப் பாத்தூட்டு அவங்க ஒன்னோட நெலத் துலே பூந்தாலும் பூந்திடுவாங்க. இந்தச் சோளம், கடலை, கோதுமைப் புல் எல்லாம் அவங்க ஒத்தொத்தனுக்கும் ஒரு பிடிக்குக் காணுமா? 'ஒன்னொட பயிர் ஒனக்குந் தக்கட்டும்'னு

உங்கிட்டச் சொல்ல வந்தா, நீயே வயலேவிட்டு ஓடறியே! அசடே, சும்மாக் குந்து'' என்று நிங்கன் பெரியவனுய் லக்ஷண மாய்த் தாதாவுக்கு உபதேசம் செய்தான். அவன் கையைப் பிடித்துத் தடுத்தான்.

ஆனுல் தாதா, உபதேசத்தைக் கேட்கும் நிலேயில் இல்லே. கோபத்தால் அவன் ரத்தம் கொதித்தது. ஆத்திரத்தால் அவன் கால்களுக்கு இறக்கை முளேத்தன.

''நிங்கா, விடு கையை. வீணுத் தடுக்காதே! என் வயலே அழிப்பார்களா? என்ன செய்யறேன்னு பாத்துகிட்டிரு. பெஞ்சாதி தாலியைக் கையிலே அறுத்துகிட்டுவர வீரன் எவன் இருக்கான்? அவங்க என் வயல்லே 'கால் வைக்கட்டும்'னு எல்லோருக்கும் கேட்கும்படி சொல்லிவருவதற்காகப் போறேன். என்னேத் தடுக்காதே'' என்று சொல்லியவண்ணம் தாதா, கௌடருடைய நிலத்தைப் பார்க்க ஓடினுன்.

ஒரே மூச்சில் தாதா, கௌடரின் நிலத்துக்கு வந்து சேர்ந் தான் ஆற்றோரத்து நிலமான இந்தப் பகுதியென்ருல் சங்கரப்ப கௌடருக்கு உயிர். தம்முடைய உழைப்பு முழுவதையும் அதற்கே செலவிட்டிருந்தார். நிறைய எருவிட்டுப் பூமியைச் செழிப்பாக்கிப் பயிரிட்டிருந்ததால் தேங்காய் அளவு பெரிய மணிகளுடன் சோளக்கதிர்கள் நிமிர்ந்து நின்றன. வெகுகால முயற்சியால் பயனேப்பெற்ற—சிரமப்பட்ட மனம்—அதிருப்தி யால் அசைவதுபோல் சோள மணிகளின் பாரத்தால் கதிர்கள் அசைந்து ஆடின. நிலவான மாயையில் காற்ருகிய ஊஞ்சலில் ஆடும் பயிர்கள் உயிருள்ளனவாகவே காணப்பட்டன. விதைக்கும் விதையிலிருந்து பயிர் நுனிவரையில் மனிதனுடைய அன்பான ஸ்பரிசம் பட்டுக்கொண்டிருந்ததாலோ என்னவோ மனித னுடைய அநுதாபத்தை அவை வேண்டுவதுபோல் இருந்தது. மணியம் வாரிசு தகராறு காரணமாகச் சோளத்தை அறுக்க ஆட்கள் வராததால் சோளம் இன்னும் முற்றி வலுத்திருந்தது. ஆனுல் அறுவடைக்காலம் தாண்டிவிட்டபடியால் சிற்சில இடங்களில் சோளத்தட்டு ஒடிந்து மணிகள் நிலத்தில் கொட்டி யிருந்தன. இந்தக் காட்சியைக் கண்ட தாதாவின் கண்களில் நீர் வழிந்தது.

கம்பளி போர்த்த ஜனங்கள் நிலத்தின் எதிர்ப்பகுதியில் புகுந்து கைக்கு எட்டிய கதிர்களே ஒடித்துக் கம்பளியின் தலேப்பில் நிரப்பிக்கொள்வதில் ஈடுபட்டனர். இப்படி அசைந்தாடிக் கொண்டிருக்கும் கதிர்களே ஒடிப்பது மனிதர்களுடைய கழுத்தை ஒடிப்பதுபோல் தாதாவுக்குத் தோன்றியதால் அவனுக்கு

ஆக்ரோஷம் வந்தது. அதைப் பார்த்துக்கொண்டு நிற்க அவனுக்குப் பொறுமை இல்லை. நிமிர்ந்து நின்ற சோளப்பயிர் களின் வழியாக உள்ளே புகுந்து கதிர்களை ஒடித்துக்கொண்டிருப் பவர்களுள் ஒருவனுக்குப் பின்னால் போய் நின்றான் தாதா. தன்னுடைய கோடாரியால் அவனை ஓர் அடி அடித்தான். அடிபட்ட அவன் 'வீல்' என்று கத்தினான். அந்தக் கூச்சலைக் கேட்டுப் பக்கத்தில் இருந்த சிலர் ஓடிவந்து அவனுக்குப் பட்டிருந்த காயத்தையும் வழியும் ரத்தத்தையும் பார்த்துப் போர்த்திருந்த கம்பளியைக்கூட மறந்து கிடைத்த வழியில் ஓடத்தொடங்கி னார்கள். அவர்கள் புலம்பிக்கொண்டும் 'ஆபத்து, ஆபத்து!' என்று கத்திக்கொண்டும் ஓடுவதைப் பார்த்த வேறு சிலர், பயந்து அவர்கள் பின்னாலேயே ஓடினார்கள். அதற்குப் பிறகு தாதா அங்கே நிற்காமல் வயலின் மற்றொரு பக்கத்துக்கு ஓடிப்போய் அங்கிருந்த சிலரைப் பிடித்து 'ஹாம், ஹூம்' என்று கர்ஜித் தான். எதிர்பாராமல் வந்த இந்த ஆபத்தைக் கண்டு அவர்கள் திகைத்து நிற்கையில் ஒருவனைத் தாதாவின் கோடாரி தாக்கியது. அங்கிருந்தவர்கள் திகில்பிடித்து வயிற்றைப் பிசைந்துகொண்டு வயல் வரப்பைத் தாண்டும் வரையில் கீழே விழுந்து புரண்டு சென்றார்கள். அதற்குப் பிறகு எழுந்திருந்து வயலைத் திரும்பிக் கூடப் பார்க்காமல் ஓடிப்போய்விட்டார்கள்.

வழியில் இருந்த ஒரு மேட்டில் வேப்ப மரத்தடியில் கம்பளியை விரித்து லிங்கப்பா, படதையா, பாபு சாஹேப் ஆகிய மூவரும் உல்லாசமாக அரட்டையடித்துக்கொண்டிருந்தார்கள். இந்த மும்மூர்த்திகளின் பெருமைகளைப் புகழ்ந்துகொண்டு அவர் களுக்கு எருக்கிலைச் சுருட்டுகளைக் கட்டிக் கொடுத்துக்கொண் டிருந்த பக்தர்கள், திசை தெரியாமல் ஓடிவரும் கூட்டத்தைக் கண்டார்கள். அவர்களும் நடுங்கத் தொடங்கினார்கள்.

அதைக் கண்ட மும்மூர்த்திகளுக்குத் 'தங்கள் சைனியம் தோற்று வந்துவிட்டது' என்ற ஏமாற்றம் உண்டாயிற்று. வருபவர்களைத் தடுத்து நிறுத்தி ஊக்கமூட்டி மறுபடியும் கொள்ளையடிக்கத் திருப்பியனுப்பும் சாமர்த்தியம் லிங்கப்பா வுக்கு இல்லை. படதையா, தாமே அந்தத் துணிகரச் செயலுக்கு முன் வந்தார். அப்பொழுது மேட்டின் பக்கமாக வேறு சிலர் ஓடிவந்தார்கள். அவர்களுள் ஒருவனைப் பிடித்து நிறுத்தி, 'இப்படி ஏன் ஆட்டுமந்தை மாதிரி ஓடிவறீங்க, பசங்களா?' என்று படதையா அதட்டிக் கேட்டார்.

அந்த ஆள் வெடவெடவென்று நடுங்கினான். உடனே வாயில் பேச்சு எழும்பவில்லை. படதையா கெட்டியாகக் கையைப்

பிடித்துக்கொண்டிருந்ததால் ஓடவும் முடியவில்லை. படையா மேலும் மூன்று நான்கு தடவை அதட்டியபின் அவன் வாயைத் திறந்தான். அப்பொழுதுதான் குரலால் அவன் படையாதான் பேசுகிறார் என்பதைப் புரிந்துகொண்டான்.

'அப்பா! அதொன்னும் சொல்ல முடியாதுங்க, ஐயா! அதைக் கண்டவங்கெல்லாம் நெஞ்சு வெடிச்சு ஓடியாருங்க. சங்கரப்ப கௌடரோட பிசாசு கத்தியை உருவிகிட்டுப் பயிர்லே கை வச்ச வங்க எல்லாரையும் வெட்டி வெட்டிப் போடுதுங்க!' என்று சொல்லிவிட்டு, இறைக்க இறைக்கப் பம்புற விழுவதுபோல் ஓடினான். படையாவுக்குப் பேய் பிசாசுகளின்மேல் நம்பிக்கை அதிகம். முன்பு ஒருதரம் பாளாச்சாரை இம்சைப்படுத்துவதற் காக ஒரு மாந்திரிகனைச் சந்தித்து, வேதாளத்தைத் தனக்கு வசமாக்கும்படி கேட்டுக்கொண்டார். அதற்கு அவன் சொன்ன விதிமுறைகள் பயங்கரமாக இருந்தன. 'சுடுகாட்டில் புதைந்த பிள்ளைத்தாய்ச்சியின் வலக்கை எலும்பைக் கொண்டுவந்து பச்சை மாமிசத்தால் ஹோமம் செய்ய வேண்டும். வேதாளம் ஹோமம் நடத்தாமல் தடுப்பதற்குப் பல ரூபங்களில் வந்து பயமுறுத்தும். அதற்குப் பயப்படக்கூடாது. இப்படி ஓயாமல் முயன்றால் கடைசியில் வேதாளம் வசமாகும்; அடிமையே ஆகிவிடும்' என்றெல்லாம் ஏதேதோ சொன்னான். ஆனால் அவன் சொன்ன கதையினால் படையாவுக்கு மிகுந்த பயம் உண்டா யிற்று. 'பாளாச்சாருக்கும் மந்திர தந்திரங்களில் அநுபவம் உண்டு. நான் சொன்னபடி செய்யாவிட்டால் ஹோமத்தின் முடிவு விபரீத பலனைக் கொடுக்கும்' என்று அவன் படையா விடம் சொன்னான். அதனால்தான் ஹோமம் நின்று போயிற்று.

பழைய பயங்கர நினைவுகள் படையாவின் மனத்தில் பாம்பு தலை தூக்குவதுபோல் தூக்கின. நள்ளிரவின் சூழ்ந்த மௌனம், ஜனநடமாட்டம் இல்லாத பயங்கர அமைதி, செய்த குற்றத்தின் உறுத்தல் இவைகளெல்லாம், அந்த மனிதன் உருக்கொண்டு பிசாசுக் கதையைச் சொன்னால், நம்பாமல் இருப்பது எப்படி? பிசாசாக இல்லாவிட்டால் ஒரு மனிதன் முந்நூறு நானூறு பேரைப் பயமுறுத்தி விரட்டியடிக்க முடியுமா? 'பாளாச்சாரே தம் மந்திர சக்தியால் பிசாசுகளைச் சிருஷ்டித்துக் கௌடருடைய வயலைக் காக்க அனுப்பியிருப்பாரோ?' 'அருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்' என்பதுபோல் படையாவுக்கு அந்தப் பிசாசுக் கதை நிசமாகவே தோன்றியது. பளிச்சென்று விபூதி அணிந்து மீசை துடிக்க வெண்ணிலவின் ஒளியில் உருவிய கத்தியை வீசிக்கொண்டு நடமாடும் கௌடருடைய சித்திரம் அவருடைய கண்ணெதிரில் நிழலாடியது.

பிசாசு என்று சொல்லிக் கரடிவிட்ட மனிதன் ஓடியபோது படதையா தன் பேச்சை நம்புவார் என்று நினைக்கவில்லை. 'மனிதர்கள் வந்து தடுத்ததால் பயந்து ஓடுகிறோம்' என்று சொன்னால் அது பேடித்தனமாக இருக்கும் என்று நினைத்து அவன் இந்தப் பிசாசுக் கதையைக் கற்பனைசெய்து சொன்னான். ஆனால் வயலின் தனிமையில் பேய், பிசாசுகள் விஷயத்தில் அசைக்க முடியாத நம்பிக்கைகொண்ட படதையா அதை அப்படியே நம்பிவிட்டார். அவருடைய கைகால்கள் நடுங்கிக்கொண்டிருந்தன. அவ்வளவு குளிரிலும் நெற்றியில் பயத்தால் வேர்வை துளிர்த்திருந்தது.

அதைத் துடைத்துக்கொண்டு, 'லிங்கப்பா, பாபு சாஹேப் எழுந்திருங்க போகலாம். இல்லாட்டி அந்தப் பிசாசு இங்கேயே ஓடிவந்துடும்' என்று விகாரமாகக் கூச்சலிட்டு ஓடுபவர்கள் பின்னாலேயே அவசரமாகத் தானும் ஓடினார்.

'சங்கரப்ப கௌடரின் பிசாசு கத்தியை உருவிக்கொண்டு வயலைக் காக்கிறது' என்னும் கதைக்குக் காதும் மூக்கும் உண்டாகி பாதள்ளியின் ஒவ்வொரு வீட்டிலும் பரவியது. அந்தப் பிசாசு வயலில் இருந்துகொண்டு 'யாரையும் அங்கே நுழைய விடுவதில்லை' என்று படதையாவே சொன்னதாக ஒருவன் சொன்னான். மற்றொருவன் தன் சொந்த அநுபவத்தையே பெரிதாக்கிச் சொன்னான். அவன் கதிர்களை ஓடித்துக்கொண்டிருந்தபோது பிசாசு அவனுடைய கம்பளியைப் பிடித்து இழுத்தது, அவன் தைரியமாக நகர்ந்துகொண்டது, பிசாசு உதைத்ததால் கீழே விழுந்தது, அதனால் இப்பொழுதுகூட முதுகெலும்பு வலித்துக்கொண்டிருப்பது முதலிய சங்கதிகள் எல்லாம் அவன் வாயால் உண்மைபோலவே வெளிவந்தன. கோடரியின் அடி பட்டு விழுந்து, காலில் காயம்பட்ட கெஞ்சனுடைய மகன் ராமன், 'எனக்கு நினைவு வந்தபோது புண்ணியவானான தாதா, தோளில் என்னை உட்கார வைத்துக்கொண்டு வீட்டில் கொண்டு வந்து விட்டான். காயத்துக்கு எண்ணெய் கொண்டுவந்து பஞ்சை நனைத்துக் காலில் வைத்துக் கட்டுப்போட்டான். அந்த மகராஜனுடைய புண்ணியத்தால் பிசாசினிடமிருந்து தப்பி வந்தேன்' என்று கண்ணீருடன் சொன்னான்.

'தாதா தான் பட்டைக் கோடரியுடன் வந்து கொள்ளையடிக்க வந்தவர்களை எல்லாம் பயமுறுத்தினான்' என்று சிலர் சொன்ன போதிலும் அதை யாரும் நம்பவில்லை. 'கௌடருடைய பிசாசு தான் தாதாவைப்போல் தோற்றம் அளித்திருக்க வேண்டும்' என்று கேட்டவர்களுக்கெல்லாம் அவர்கள் பதில் சொல்லிக்

கொண்டிருந்தார்கள். அதற்கு ஆதாரமும் இருந்தது. காயம் பட்ட ராமனை வீட்டில் கொண்டுவந்து சேர்த்தவன் தாதா! ஜனங்கள் விட்டுவிட்டுப்போன கம்பளிகளை அவரவர்கள் வீட்டில் சேர்ப்பித்தது தாதா! அதோடு அன்றிரவு அவன், 'தங்களுடைய வயலைக் காவல் காத்துக்கொண்டிருந்தான்' என்பதும் எல்லோருக்கும் தெரியும். ஒருவன் போய் எல்லோரையும் எப்படி எதிர்ப்பான்? 'பயந்து கூக்குரல் இட்டதைக் கேட்டபின் அங்கே போய் அடிபட்டவர்களுக்கு உதவி செய்திருப்பான். கௌடருடைய பிசாசு வயலைக் காவல் காப்பது நிஜந்தான்' என்பதை ஊரில் எல்லோரும் நம்பினார்கள். உண்மைச் சங்கதி, பார்வதி, பாளாச்சார், தாதாவின் தோழர்கள் இவர்களுக்கு மட்டும் தெரியும்.

பிசாசுக் கதை நிஜமோ பொய்யோ? அதன் விளைவு நல்ல தாயிற்று. அன்றிரவு கௌடரின் பயிரைக் கொள்ளையடிக்கும் திட்டம் தோல்வியுற்றதும் பலவந்தமாக நிலத்தை ஆக்கிரமிக்கும் யோசனை போய்விட்டது. 'கௌடரின் பிசாசு நம்மையும் விடாது!' என்ற பயத்தில் கௌடரின் சொத்தில் கைவைக்கும் தைரியம் யாருக்கும் வரவில்லை. பஞ்சத்தால் துன்பம் உற்ற இந்த நிலையில் படதையாவின் யோசனை ஜனங்களுக்கு ருசியாகத் தான் இருந்தது. 'கைகொண்ட மட்டும் தானியம், சோர்வைப் போக்கச் சுறுசுறுப்பான வேலை.' இது எல்லோருக்கும் பிடித்து தான் இருந்தது. ஆனால் 'படதையாவின் திட்டம் பலிக்கக் கூடாது' என்று விதி சங்கல்பித்தது போலும்! ஜனங்கள் கொள்ளையடிக்க முற்பட்டது படதையா ஆசைகாட்டிய லஞ்சத் துக்காக ஆசைப்பட்டுதான். அப்பொழுதும் 'நாம் செய்வது பாவம்!' என்று அவர்கள் மனச்சாட்சி உறுத்தியது. போகா விட்டால் 'ஊருக்கே கேடு நேரலாம்' என்னும் பயம் இருந்தது. அதனால் 'ஊருக்கு ஆனது நமக்கும் ஆகட்டும்' என்னும் அசட்டுத் தைரியத்தால் அவர்கள் கொள்ளையடிக்கப் போனார்கள். அதனாலேயே தாதா அங்கே வந்து தங்கள் எல்லோரையும் தனியாக எதிர்த்துத் தோல்வியுறச் செய்தது, பிசாசின் வேலை யாகவும் தங்களுடைய பாவத்துக்குத் தண்டனையாகவும் அவர் களுக்குத் தோன்றியது. தாதா எதிர்த்தபோது நூற்றுக் கணக்கான அவர்களுள் சிலராவது அவனை எதிர்த்திருக்கலாம். ஆனால் யாரும் பொறுப்பேற்காத இந்தத் தீச்செயலின் பாவம் அவர்களைத் தடுத்தது.

'தாதா, தனியாக நின்று தங்கள் வயலைக் காப்பாற்றினான்' என்னும் செய்தி மணியக்காரர் மனைவியின் காதில் விழுந்தது. அவனிடம் ஆதரவு, அபிமானம், பாசம் எல்லாம் பொங்கி

வந்தன. பௌர்ணமியின் மறுநாள் தன் நன்றியைத் தெரிவித்துக் கொள்ள அவனுக்கு அழைப்புவிட்டாள். ஒன்றுமே அறியாத பச்சைக் குழந்தைபோல் ஆச்சரியச் சிரிப்புடன் தாதா வந்து அவளை வணங்கினான். அவள் நாத்தழுதழுக்க, 'என் இரண்டு குழந்தைகளுடன் நீயும் ஒரு குழந்தை. இன்று முதல் நீ தாய் இல்லாத அநாதை என்று நினைக்கவேண்டாம் தாதா. உனக்குக் கஷ்டமோ சுகமோ வந்தால் என்னிடம் சொல்லி உரிமையுடன் வேண்டியதை வாங்கிக்கொள்ள வேண்டும். ஆம்!' என்று சொன்னாள் பார்வதி.

அவள் மனப்பூர்வமாகச் சொன்ன இந்தச் சொற்களைக் கேட்டுத் தாதாவின் மனமும் உருகியது; கண்ணீர் பொங்கி வந்தது. பக்தியுடன் அவள் காலில் விழுந்து, 'அம்மா, உன் ஆசீர்வாதத்தின் பலம் எனக்கு இருக்கட்டும். நான் உன் மகன். சமயம் வந்தபோது என் உயிரையும் பணயம் வைத்து உனக்கு உதவுவேன் என்பதைத் தெரிந்துகொள்' என்று சொல்லிக் கண்ணைத் துடைத்துக்கொண்டு கௌடர் வீட்டை விட்டு வெளியே வந்தான்.

'படதையாவின் அக்கிரமம் இவ்வளவு தூரம் போகும்' என்று பாளாச்சார் நினைக்கவில்லை. அதிகமாகப் போனால், லிங்கப்பா, நிலத்தைப் பகிரங்கமாக வசப்படுத்திக்கொள்ள வந்தால், 'அவர்களுக்கும் கௌடரைச் சேர்ந்தவர்களுக்கும் கைகலப்பு ஏற்படும்' என்று அவர் எதிர்பார்த்தார். ஆனால் பாதி ராத்திரியில் நிறைந்து விளைந்த பயிரை அறுக்கத் தீர்மானித்தது மிகக் கீழ்த்தரமான செயலின் எல்லை என்று அவருக்குத் தோன்றியது. 'பாதள்ளியின் புண்ணியமே தீர்ந்து போய்விட்டதோ!' முற்றிய பயிர்களில் இதுவரை யாரும் கை வைத்ததில்லை (திருடியதில்லை). இப்போது அதுவும் நடந்து விட்டது.

கொள்ளை நடந்தபோது தாதா தனியே நின்று 'எல்லோரையும் எதிர்த்து ஆபத்தைத் தவிர்த்தான்' என்று கேட்டு அவர் மிகச் சந்தோஷம் அடைந்தார். தீயசக்திகள் சேர்ந்து புரட்சி செய்யும் இக்காலத்தில் தாதா ஒருவனே நம்பிக்கையின் ஒளிக் கிரணமாக விளங்கினான். 'முழுகும் நிலையில் இருந்த புண்ணியத்தைத் தாதாவின் தைரிய சாகசங்களே காப்பாற்ற முடியும்' என்று அவருக்குத் தோன்றியது. அவர் தாதாவை தம் வீட்டு வரைக்கும் அழைத்துக்கொண்டு போய் முதுகைத் தடவிக் கொடுத்துப் பாராட்டி ஆசீர்வதித்தார். அன்று முதல் கௌடரைச் சேர்ந்தவர்களுக்கும் தாதாவின் பெரிய சாகஸங்களில் ஒரு நம்பிக்கை ஏற்பட்டது.

சில நாட்களுக்குப் பின் படதையாவுக்கும் தாதாவின் வீரச் செயல்பற்றிய செய்தி எட்டியது. சங்கரப்ப கௌடரின் பிசாசுக்குப் பதிலாக, இப்பொழுது தாதா, அவரது மனத்தைப் பிடித்து ஆட்டினுன். 'தம்முடைய திட்டங்களுக்கெல்லாம் தாதாவே தடையாக நிற்கிறுன்' என்பது அவருக்குத் தெரிந்தது. தமது வழியிலிருந்து இந்த முள்ளைப் பிடுங்கி எறியாவிட்டால் 'தம் பெருமை இந்த ஊரில் நிலேக்காது' என்று நினைத்தார். துணிந்து செயல்படும் சுபாவம் கொண்ட அவனை ஏதாவது ஒரு வம்பில் சிக்க வைத்து 'சக்கையாக உதைவாங்கி வைக்க வேண்டும்' என்ற யோசனை இரவும் பகலும் அவர் மனத்தைக் குடைந்துகொண்டே இருந்தது.

லக்ஷ்மிபாய் பாதள்ளிக்குத் திரும்பிவர இசைய மாட்டாள். அப்படியானுல் பாபு சாஹேப் தடையில்லாமல் ஜாகீரை நடத்து வான். படதையாவின் செல்வாக்குக் கொடிகட்டிப் பறக்கும். லிங்கப்பா, மணியக்காரஞகி கால் ஊன்றிவிடுவான். அவன் புதிய தர்பார் நடத்துவான். தொல்லே பிடித்த துஷ்டர்களான இந்த மூவராலும் பாதள்ளியின் வாழ்க்கை பாழாகாமல் இருக் காது. 'இந்தக் குழப்பத்தில் நீதியை நிலேநாட்டுவது தம் பொறுப்பு' என்று பாளாச்சார் நினைத்தார். இந்தப் பிரச்சினே களைத் தீர்க்க அவர் ஏதாவது ஒரு வழியைத் தேடியே ஆக வேண்டும். சட்டென்று அவருக்கு யசவந்தராவின் நினைவு வந்தது.

'லக்ஷ்மணனை அஜராணிக்கு அனுப்பி யசவந்தராவை வர வழைக்க வேண்டும்' என்பது பாளாச்சாரின் யோசனை. ஜெயின் ஜின்னப்பன், 'அந்த அசட்டு லக்ஷ்மணனை அனுப்பினுல் காரியம் கைகூடாது' என்று அஸ்து போட்டான். 'லக்ஷ்மணனை விட்டால் அனுப்ப வேறு யாரும் இல்லே. தற்போதைக்கு லக்ஷ்மணன் போகட்டும். காரியம் நடக்கவில்லே என்ருல் ஹோலிப் பௌர்ணமைக்கு அப்புறம் தாதாவையே அனுப்புவது' என்று முடிவாயிற்று. லக்ஷ்மணன் அஜராணிக்குப் போய்விட்டு மறு நாளே திரும்பி வந்தான். 'அஜராணியில் காலரா பரவியிருக் கிறது' என்றும், 'அதன் மும்முரம் குறைந்த பின் யசவந்தராவ் வருவார்' என்றும் அவன் சொன்னுன்.

'நான் மொதல்லயே சொல்லலேயா? அந்த அசட்டு லக்ஷ்மணனை அனுப்ப வேண்டாம்'னு என்று சொல்லி ஜெயின் ஜின்னப்பன் பெருமையடித்துக்கொண்டான். 'மேலே என்ன செய்வது?' என்ற யோசனையில் ஆழ்ந்தார் பாளாச்சார்.

பார்வதியைச் சேர்ந்தவர்களுக்குக் கவலைதரும் ஒரு செய்தியும் அன்றைக்கே வந்தது. லிங்கப்பாவின் வாரிசை எதிர்த்துப் பார்வதி ஒரு மறுப்பு விண்ணப்பம் கொடுத்திருந்தாள். தாசில்தார் அதைக் கிழித்தெறிந்துவிட்டு ''லிங்கப்பா, சங்கரப்ப கௌடரின் மகன் ஆதலால் 'அவனே வாரிசுதாரன்' என்று அவன் பெயரை வாரிசுப் பட்டியலில் சேர்க்க உத்தரவு கொடுத்து விட்டார்'' என்று லிங்கப்பன் கூட்டத்தார் சர்க்கரை வழங்கினர்கள். ஊரில் புதிய சலசலப்பு ஏற்பட்டது. எங்கிருந்தோ வந்த ஒருவன் பாதள்ளியின் மணியக்காரன் ஆவது யாருக்கும் அவ்வளவாகப் பிடிக்கவில்லை.

அன்று சாயங்காலம் வழக்கம்போல் பாளாச்சார், சுவாமி தரிசனத்துக்குப் போயிருந்தார். சுவாமியைத் தரிசித்தபின் அங்கேயே திண்ணையில் சற்று உட்காருவது வழக்கம். அப்பொழுது பாபு சாஹேபும் லிங்கப்பாவும் அவர் இருந்த இடத்துக்கே வந்து விநயத்தோடு வணக்கம் சொன்னர்கள். பாளாச்சார் அவர்களுக்குப் பதில் வணக்கம் செய்து உட்காரச் சொன்னர். சொல்லிவைத்ததுபோல் சேஷப்பாவும் வந்து திண்ணையில் உட்கார்ந்துகொண்டு ஆச்சாரிடம் பொடியை நீட்டினன்.

லிங்கப்பா, சர்க்கரைப் பொட்டலத்தை அவர் முன்பு வைத்து, 'வாரிசுதாரர் விவகாரம் முடிஞ்சுதுங்க. என் பெயரையே வாரிசு ரிஜிஸ்தரில் எழுத உத்தரவாயிட்டுதுங்க. சர்க்கரை கொணந்திருக்கேன். எடுத்துக்குங்க' என்று போலிப் பணிவுடன் சொன்னன்.

இந்த எதிர்பாராத அதிவிநயத்தால் ஆச்சாருக்கு முதலிலேயே சந்தேகம் வந்தது. பணிவாகத் திரைக்குப்பின் நடந்த நாடகத்தை அவர் தெரிந்துகொள்ள விரும்பினர். அது இப்பொழுது தெரிந்துவிட்டது. சர்க்கரைப் பொட்டலத்தைத் திரும்பிக்கூடப் பார்க்காமல், 'தாசில்தார் உத்தரவல்லவா? அப்பீல் செய்தால் வெற்றி கிடைக்குமா, சேஷப்பா?' என்று சேஷப்பாவின் பக்கம் திரும்பிக் கேட்டார்.

சேஷப்பாவுக்கு 'என்ன பதில் சொல்வது?' என்பது உடனே தெரியவில்லை. ஆச்சாரின் துடுக்குத்தனத்துக்கு அகப்படாமல் எப்பொழுதும் நழுவிக்கொண்டே இருப்பவன் அவன். அதனல் நேராகப் பதில் சொல்லாமல், 'உண்மைக்கு அழிவில்லை, ஆச்சார்! நியாயம் இருக்கிற கட்சிக்கு ஜயம் கிடைக்கத்தானே வேண்டும்' என்று கோமுட்டி சாட்சி சொல்லிப் பொடியை உறிஞ்சினன்.

''அப்படித்தானே! 'லிங்கப்பனுடைய வாரிசு நியாயம்' என்று உனக்குத் தோன்றுகிறது. நான் பார்வதியம்மாளுக்கு வேண்டியவன். எனக்கு அது அநியாயம் என்று தோன்றுகிறது. உங்கள் கட்சி ஜயிப்பது சாத்தியம் இல்லை. அதனால் நான் சர்க்கரையை எடுத்துக்கொள்ளமாட்டேன்'' என்று ஆச்சார் வெட்டொன்று துண்டிரண்டாகத் தம் அபிப்பிராயத்தைச் சொல்லிவிட்டார்.

ஆச்சார் கோயிலிலிருந்து வீட்டுக்குப் புறப்படும்போதே இருட்டிவிட்டது. அவர் யோசனையில் ஆழ்ந்தவண்ணமே வீட்டை நோக்கி நடந்தார். கௌடர் இறந்த காட்சி, அவர் கண்ணில் கட்டியதுபோல் இருந்தது. 'ஆச்சாரையா, எங்கள் குடும்பக் கௌரவத்தை உங்களிடம்தான் ஒப்பித்திருக்கிறேன்' என்ற சொல் அவர் காதில் ஒலித்துக்கொண்டே இருந்தது. பாதள்ளியின் வருங்காலம் மனத்தை ஆக்கிரமித்துக்கொண்டது. வீட்டுக்கு வந்து சுவாமிக்கு மங்களாரத்தி எடுத்தார். விக்கிரகத்தின் பிரபைக்கு நடுவில் நுழைந்துவந்து எலி ஒன்று நந்தாவிளக்கின் எண்ணெயில் வாயை வைத்தது. அதைக் கண்டு ஆரத்தி எடுத்துக்கொண்டிருந்த ஆச்சாரின் கை நடுங்கியது.

## 19

மழை இன்மையால் நேர்ந்த பஞ்சநிலை, காலராவின் படையெடுப்பால் பலர் இறந்தது — இந்தக் காரணங்களால் பாதள்ளியில் இந்த வருஷத்து ஹோலி பௌர்ணமியின் உத்ஸாகமெல்லாம் அடங்கிவிட்டது. யாரும் சட்டை செய்யாத விருந்தாளியைப்போல் வந்த காமன் பண்டிகையை 'ஏன்' என்று கேட்பார் இல்லை. கோட்டைக்கு முன் காம தகனத்துக்காகத் திருடிக்கொண்டுவந்து குவித்த மலை போன்ற வறட்டிக்குவியல்களை இப்போது காணவில்லை. மாடு மேய்க்கும் சிறுவர் சிலர் கூச்சலிட்டுக்கொண்டு, தம் அக்கம்பக்கத்துப் பெண்கள் இடிந்த சுவரில் தட்டியிருந்த வறட்டிகளைத் திருடித் திட்டு வாங்கிக்கொண்டு, கொண்டுவந்து குவித்த வறட்டி ஒரு குவியல்கூடக் காணாது. கோட்டைப் பக்கம் சென்றவர்களுக்கு இந்த உற்சாகக் குறைவு நன்றாகத் தெரிந்தது.

காமன் பண்டிகைக்கு முதல் நாள் இரவு. படதையாவின் மடத்தில் வழக்கம்போல் கஞ்சா பக்தர் கூட்டம் தண்ணிப்

பிரசாதத்துக்காகக் காத்துக்கொண்டிருந்தது. மடத்தில் படையாவையும் லிங்கப்பாவையும் காணவில்லை. கெஞ்சன் இருந்திருந்தால் மடத்தில் கூடும் கூட்டங்களுக்கு நன்றாகக் களை கட்டும். 'ஊரில் யார் செத்தால் நமக்கென்ன?' என்று அலட்சியமாகச் சொல்பவர்கள்கூடக் 'கெஞ்சன் இல்லாததால் மடமே களை இழந்துவிட்டது!' என்று நினைத்தார்கள். மடத்தில் இப்போது காடவரும் சேரி ஆட்களும் கூடியிருந்தார்கள். யஜமானர்கள் யாரும் இருக்கவில்லை. பொழுதைப் போக்க ஏதேதோ பேசினார்கள். சேரி ருத்ரன், தான் ஒருமுறை குயவன் துளஜப்பனுடைய வறட்டித் தொம்பையை உடைத்து முப்பது மூட்டை வறட்டி திருடிய பராக்கிரமத்தை நினைத்துக் கொண்டு, 'இந்த வருசம் காமண்ணனுக்கு நெருப்புக் கொடுக்கற யோசனையே இல்லைப்போல இருக்குதே?' என்று சொல்லிப் பெருமூச்சுக்குப் பதிலாகக் குழாயிலிருந்து புகையை உறிஞ்சி வெளியே விட்டுக்கொண்டு சொன்னான். அந்தப் புகையோடு அவன் மனக்குறையும் சேர்ந்து வந்தது.

கோட்டைக்கு முன் ஊரிலேயே பெரிய காமண்ணனுக்கு நடு ராத்திரியில் தீ வைப்பது நடந்துவந்த மரபு. அதற்கு முன்பு பறைச்சேரிக் காமனுக்குத் தீ வைத்து அதைக் கொண்டுவந்த பின், கோட்டைக்கு முன் காம தகனம் நடக்கவேண்டும். ஜாகீர் தார், தேஷ்பாண்டே, கௌடர், கணக்கப்பிள்ளை முதலிய ஊர்ப் பிரமுகர்களின் வீடுகளுக்குத் தப்பட்டைக்காரர் சென்று வாத்தியத்தோடு அழைப்பார்கள். அவர்கள் எல்லோரும் சாவடிக்கு வந்தபின் புலிவேட்டைக் கூட்டத்தார், தீ எடுத்து வர, தப்பட்டைக்காரர் சேரிக்குத் திக்விஜயம் செய்வார்கள். அங்கே ஒரு விளையாட்டுச் சண்டை நடக்கும். புலிவேட்டைக் காரர்கள் தீ எடுக்கக் கை வைத்தவுடன் சேரிக்காரர்கள் அதை எடுக்க முடியாதபடி அவர்கள் கைகளின்மேல் மாட்டின் எலும்பு களை வீசுவார்கள். ஓயாத எலும்பு மழை பெய்தாலும் பேச்சு மூச்சுக் காட்டாமல் தீயை எடுத்து வருவதில் *நசிகேதனைப்போல் புகழ் பெற்றவன் தலையாரி மல்லன். ருத்ரன் இப்படிப் பேசியது அவனுக்குப் பொறுக்கவில்லை.

'என்னடா, ருத்ரா! காமனை எரிக்க முடியாமெ சோந்து போய்க் குந்திக்கெடக்கலெ நாங்க. பொழுது விடிஞ்சாப் பௌர்ணமி வருது. நெருப்புக் கொண்டுவரும் சாமர்த்தியத்தைப் பாரு! தீ வைக்கப் போறதில்லைன்னு எதைக் கொண்டு சொல்றே?' என்று கோபத்துடன் மீசையை முறுக்கிக்கொண்டு சுற்றுமுற்றும் பார்த்தான் தலையாரி மல்லன்.

*யமனிடம் சென்றும் மீண்டவன்.

'அப்படியில்லீங்க மல்லப்ப கௌடரே! ஒவ்வொரு வருசமும் மணியக்காரர் காமண்ணனுக்குத் தீ வைச்சுகிட்டிருந்தாரு. நீங்கள்ளாம் சண்டை போட்டுகிட்டுத் தீ எடுத்து வருவது பெருமையாக இருந்தது. இந்த வருசம் வறட்டியும் சேரல்லே! பாதி ராத்திரிவரைக்கும் பட்டினியிருந்து காமண்ணனுக்குத் தீக் கொடுக்கக் கௌடரும் இல்லே. அதனலேதான் அப்படிச் சொன்னேனுங்க' என்று ருத்ரன் தணிந்து பதில் சொன்னன்.

'அடே, முட்டாள் மவனே! நீ எங்கே இருக்கே? தாசில்தார், லிங்கப்ப கௌடர் பேரிலே மணியத்தை எழுதிட்டாராம். தாலூக்காவிலேருந்து காயிதம் வந்திருக்குது. அதுக்காக ஊருக்கெல்லாம் சக்கரை கொடுக்க அவரும் படதையாவும் சேந்தே போயிருக்காங்க. லிங்கப்ப கௌடர், மணியக்காரர்னு நாளைக்குத் தம்பட்டம் அடிக்கவேண்டியதுதான். காமண்ணனுக்கு அவரை விட்டே தீவைக்கச் சொல்லறது' என்று பக்கவாட்டில் பைவைத்த ஜிப்பாவும் பெரிய தலைப்பாகையும் அணிந்த சிவபுத்ரப்பா, வெள்ளைத்தாடியை உருவிக்கொண்டு ருத்ரனுடைய அறியாமையைக் கேலி செய்தான்.

'லிங்கப்பனைப் போன்றவங்க காமண்ணனுக்குத் தீ வச்சா நமக்கெல்லாம் என்ன கெடைக்குங்க?' என்று தளவாய்த் திப்பன் தலையை ஆட்டிக்கொண்டே கேட்டான்.

'மகனே, போளியும் நெய்யும் வாங்கி ஜமாய்க்கலாம்ங்கறத்துக்குக் கௌடருக்குக் கல்யாணம்னு நெனச்சயா என்ன? தீ வைச்சப்பறம் ஊர் ஜனங்கள்லாம் சேந்துகிட்டுக் கூச்சல் போடுவாங்க, அவ்வளவுதான்!' என்று தலையாரி மல்லன் கிண்டலாகவே சொன்னன். சங்கரப்ப கௌடர் இருந்தபோது பௌர்ணமி அன்று இரவு புலிவேட்டைக் கூட்டத்தாருக்கெல்லாம் போளியோடு சாப்பாடு போட்டார். லிங்கப்பனோடே ஆட்சியிலே அதொன்றும் இல்லை என்று அவன் ஜாடையாகச் சொன்னன்.

'அப்படியானு காமண்ணனை எரிக்கறது நிச்சயம் ஆனப்பலெதானுங்க. அப்போ எரிப்பது பிரமாதமாகத்தான் இருக்கணும்! நூத்துக்கணக்கா, மலைமலையா வறட்டி சேக்காட்டி அதென்ன பெரிய எரிப்பாட்டம். இல்லாட்டிப் பாக்கவந்த ஜனங்கள் காரி உமிஞ்சுட்டுப் போவாங்க'ன்னு உப்பார மாளப்பன் முனகினன்.

'நம்ம சேரிப் பசங்ககிட்ட சொல்லியிருந்தா வறட்டியை மலைமலையாக் கொணந்து கோட்டை மைதானத்திலே எல்லாம் ரொப்பி இருப்பாங்களே!' என்று ருத்ரன் சொல்லிக்கொண்

டிருந்தது மடத்து வாசலில் நுழைந்துகொண்டிருந்த படதையா வின் காதிலும் விழுந்தது.

'' 'எலும்பில்லாத நாக்கு'ன்னு வாய்க்கு வந்ததையெல்லாம் பேசாதேங்கடா! ஒங்க சேரி ஜனங்க 'மானங்கெட்டவங்க'ன்னு அக்கம்பக்கத்துக் கிராமங்களுக்கெல்லாம் அது தண்டோராப் போட்டாப்பலே ஆகும்'' என்று படதையா அவன் வாயை அடக்கிக் கூடத்தில் தமக்காகக் காத்திருந்த சிம்மாசனத்தில் அமர்ந்துகொண்டார்.

'சாமி, நீங்க சொன்னபடி கேக்கறவங்க நாங்க. உத்தரவு கொடுங்க. பாத்தாலே தலையைச் சுத்தறமாதிரி வறட்டிக் குவியலைக் கொணாந்து சேக்காட்டி நீங்க சொன்னது சரி' என்று ருத்ரன் தரையைத் தொட்டுக் கும்பிட்டான்.

''அடே, அது ஒங்க கையாலே ஆகவே ஆகாது. 'சோளத்தை முறிச்சுக்கிட்டுப் போயி, பெஞ்சாதி, பிள்ளை வவுத்துக்குப் போட்டுச் சுகமா வாழுங்கடா'ன்னு சொன்னேன். குடுகுடுன்னு வயலுக்குப் போயிட்டு மூச்சு எறைக்க எறைக்கக் கீழே விழறது கூடத் தெரியாமெ ஓடிவந்தீங்க! இப்படிப்பட்ட பேடிகள் ஊரார் வீட்டு வறட்டித் தொம்பையைத் திருடிகிட்டு வர முடியுமா?'' என்று படதையா தம்மையும் அறியாமல் அலட்சியமாகச் சொன்னார்.

''என்ன செய்யறது சாமி! ஊர்ச்சனங்களை எல்லாம் கூட்டி னீங்க. வயல்லே பயிரை ஒடிக்கறத்துக்கு முன்னாலே 'ஒடம்பெல் லாம் கண்ணா இருக்கணும்'ன்னு அவுங்களுக்கு எங்கே தெரியுது? 'கோடாலி அடி விழுந்துச்சு'ன்னு ஒத்தன் சத்தம் போட்டா ளேல்லியோ, ஒடனே எல்லாரும் ஆட்டுமந்தை மாதிரி ஓடீட்டாங்க'' என்று ருத்திரன் 'ஊரில் எல்லோருமே பேடிகள்' என்று குற்றம் சாட்டுவதுபோல் சொன்னான்.

'டே ருத்ரா! மத்தவங்க ஓடினாங்க. நீங்க சில பேர் இருந்து ஏன் கொள்ளை அடிச்சுகிட்டு வரலே?' என்று தலையாரி மல்லன் அவனைச் சீண்டினான்.

''இங்கிருந்து பொறப்படறதுக்கு முன்னாலே சாமியார் சொன்னத்தைக் கேக்கலையா, கௌடரே? 'பசங்களா, நாலு பேராச் சேந்து இருங்கடா'ன்னு சொன்னாரு. மத்தவங்க ஓடற போது நாங்கமாத்திரம் நின்னுகிட்டா, சாமியார் 'இடுப்பெ ஒடிச்சுடுவாரு'ன்னு பயந்துகிட்டு நாங்களும் ஓடிட்டோம்'' என்று ருத்திரன் சொல்லி, எல்லோர் வாயையும் அடக்கி விட்டான்.

படதையா, சீடன் ஒருவன் மடித்துக்கொடுத்த வெற்றிலையை வாயில் போட்டுக்கொண்டு, 'ஏ, ருத்ரா! அப்படியானு இன்னிக்கி ஒரு வேலே செய்யுங்க. கௌடர் வீட்டுப் பொழக்கடைலே வறட்டித் தொம்பை இருக்கும். அதையெல்லாம் திருடிகிட்டு வந்து கோட்டை மைதானத்திலே கொட்டுங்க' என்றார்.

''வறட்டியைத் திருடப்போய் 'வீட்டைக் கொள்ளையடிச் சாங்க'ன்னு 'புகார் வரக்கூடாது' சுவாமி. அதனாலே லிங்கப்ப கௌடர், நீங்க, மல்லப்ப கௌடர் எல்லாரும் முன்னாலே வரணும். அப்பறம் பாருங்க எங்க சாமர்த்தியத்தை!'' என்று சொன்னான் ருத்திரன்.

படதையாவுக்கு 'அவன் கொடுத்த பிடிப்பு வரவேற்கத் தக்கது' என்று தோன்றியது. ருத்திரனுடைய பேச்சில் அடிபட்ட 'வீட்டைக் கொள்ளை அடித்தல்' என்ற சொல் அவர் மனத்தில் மறைந்திருந்த ஆசை ஒன்றைத் தூண்டியது. வறட்டியைத் திருடப் பெரிய மனிதர்களே புறப்பட்டால் உத்ஸாகம் மிக்க நூற்றுக்கணக்கான இளைஞர்கள் பின் தொடர்ந்து வருவார்கள். இந்தச் சாக்கில் வயலைக் கொள்ளையடிக்கப் போனபோது நேர்ந்த தோல்விக்குப் பழிவாங்கிவிடலாம். இப்போது கௌடரின் பிசாசு காவல் இருக்குமா? அந்த வதந்தியை அழித்துவிட வேண்டும். ஹோலிப் பௌர்ணமியின் நியாயமான திருட்டிலேயே மற்றொரு திருட்டை நடத்திவிடவேண்டும் என்ற யோசனையில் படதையா ஆழ்ந்திருந்தபோதே, லிங்கப்பா, பாபு சாஹேப், சேஷப்பா ஆகிய மூவரும் உள்ளே நுழைந்தார்கள். அவர்களோடு தண்ணிப் புட்டிகளும் உள்ளே வந்தன. சேஷப்பா தூர நகர்ந்து உட்கார்ந்துகொண்டான். மற்றவர்கள் தண்ணி போட்டதால் உத்ஸாகமாக இருந்தார்கள். போதை ஏறியது. 'வறட்டிக் குதிரை உடைக்கவேண்டும்; காமனை எரிக்கவேண்டும்; லிங்கப்ப கௌடரைப் பதவியில் உட்கார்த்தவேண்டும்' என்று ஒரே குரலில் ஒருவர் சொன்னதையே மற்றவர்களும் சொல்லத் தொடங்கினார்கள்.

படதையாவின் கூட்டம் இப்படிக் கோஷமிட்டுக்கொண்டு மடத்திலிருந்து கிளம்பியது. குடித்தவர்கள், குடிக்காதவர்கள் எல்லோருமே நினைவு தவறியதுபோல் இருந்தார்கள். நிலா தெருவெங்கும் அழகாக வீசிக்கொண்டிருந்தது. நள்ளிரவில் குளிர்காற்று வீசிக்கொண்டிருந்ததால் கோடை உஷ்ணத்துக்கு இதமாக இருந்தது. இந்தக் கூட்டம் மாளிகையைத் தாண்டிக் கோட்டைக்கு முன் வந்தது. மாளிகை முன் இருந்த ஜனங்களும் அக்கம்பக்கத்தில் இருந்த வீடுகளில் உள்ளவர்களும் இந்தக் கூட்டத்தோடு சேர்ந்துகொண்டார்கள். எல்லோரும் நேராகக்

கௌடர் வீட்டுக்குப் போகாமல் காடவர் தெரு, பறைச்சேரி, குறும்பர் சேரி முதலிய இடங்களுக்குப் போய் ஆள் சேர்த்துக் கொண்டார்கள். வறட்டியைச் சுமந்துவரக் கம்பளிகளையும் எடுத்துக்கொண்டு கௌடர் வீட்டை நோக்கி நடந்தார்கள். இந்தச் சமயத்தில் நாய்கள் குரைத்ததால் ஊர் ஜனங்கள் எல்லோரும் விழிப்புடன் இருந்தார்கள்.

ஒவ்வொரு வருஷமும் இந்தத் திருட்டுக்காகப் பெரியவர்கள் தலைமையில் இருபது முப்பது பேர் போவது வழக்கம். அப்பொழுதெல்லாம் இல்லாத ஒரு விசேஷம் இப்பொழுது இந்த ஜனங்களுக்குத் தொந்தரவு கொடுத்தது. தொண்டை கிழிய நாய்கள் குரைத்துக்கொண்டிருந்ததால் விழித்துக்கொண்டவர்கள், 'யாரது, யாரது?' என்று கேட்டுக்கொண்டே இருந்தார்கள். இந்த ஆண்டு வயல்களில் தானியங்களைக் குவிக்கும் வேலை இருக்கவில்லை. மேற்புறத்து நிலம் கலப்பை காணுமல் தரிசாகக் கிடந்தது. ஒவ்வோர் ஆண்டும் தானியங்களைக் காவல் காக்கும் நாய்கள், வேலை இல்லாததால் ஊரில் சுற்றத் தொடங்கின. வயலுக்குப் போகவேண்டிய ஜனங்கள், வீட்டிலேயே இருந்தார்கள். அதனுல் வழக்கம்போல் திருட்டு யாத்திரை எளிதாக இருக்கவில்லை. ஆனுல் படதையா முன்வைத்த காலைப் பின்வைக்க மாட்டார். தொடர்ந்து வரும் ஜனங்களின் எண்ணிக்கையின் மேல் அவருக்கு அபார நம்பிக்கை இருந்தது. தவிர 'ஹோலிப் பௌர்ணமியின் சட்டத்துக்கு உட்பட்ட திருட்டை எந்த முட்டாள் எதிர்ப்பான்? அப்படி எதிர்த்து, அவன் வறட்டிகளைத் தங்கவைத்துக்கொள்ள முடியுமா?' என்ற தீர்மானத்தில் பாபு சாஹேப், லிங்கப்பா, படதையா ஆகிய மூவரும் மணியக்காரரின் வீட்டுப் பின்புற வாயிலுக்குப் பக்கத்தில் வந்து நின்ருர்கள்.

வறட்டிக் குதிர்களை முற்றுகை இடக் கையால் ஜாடை காட்டினுர் படதையா. உடனே அவர் பின்னுல் வந்த ஜனங்கள் பின்புறத்து வேலியைப் பிடுங்கி எறிந்துவிட்டு உள்ளே புகுந்தார்கள். வறட்டியில் கை வைப்பதற்கு முன்பு — போதை ஏறியிருந்ததாலும் வீட்டாருக்கு எச்சரிக்கை கொடுக்கவேண்டும் என்ற நினைவாலும்—பயங்காரமாகக் கூச்சல் இட்டார்கள். அதனுல் விழித்துக்கொண்ட கௌடர் வீட்டார், 'கொல்லைக் கதவைத் திறந்தால் வீட்டுக்குள்ளே புகுந்துவிடலாம்' என்பது படதையாவின் திட்டம். அந்த வேலைக்காகவே தயாராக நின்ற ஒரு படை, அவர் பக்கத்திலேயே நின்றிருந்தது.

அவர்கள் போட்ட பெரும் கூச்சலைத் தொடர்ந்து வறட்டிக் குதிர்களை உடைக்கும் சத்தம் கேட்கவில்லை. போதையில் அவர்

களையே அறியாமல் ஓயாது கூச்சல் இட்டுக்கொண்டிருந்தார்கள். படதையா காதைத் தீட்டிக்கொண்டார். ஐம்புலன்களும் செவிப்புலனுகவே மாறின. 'கூச்சலால் விழித்துக்கொண்ட கௌடர் வீட்டார் கதவைத் திறப்பார்களோ?' என்று எதிர் பார்த்தார். ஆனல் கதவு திறக்கவில்லை. வறட்டிக் குதிரை உடைத்தபாடும் இல்லை; கதவு திறந்தபாடும் இல்லை. ஆனல் ஜனங்கள் சங்கை ஊதுவது மட்டும் ஓயவில்லை. படதையா அதையே கூர்ந்து கவனித்தார். முதல் முதலில் கூச்சலில் தொனித்த உத்ஸாகமும் போதையின் வேகமும் குறைந்தன. அவற்றுக்குப் பதிலாகக் கூச்சலில் மிகுதியான ஏக்கம் தொனித்தது. வறட்டி மூட்டைகளைத் தூக்கிக்கொண்டு வெற்றிப் பெருமிதத்துடன் வருவதற்குப் பதிலாக, மண்டை உடைந்து ரத்தம் வழியும் ருத்திரனைச் சிலபேர் தூக்கிக்கொண்டு வந்தார்கள். படதையா இடி விழுந்ததுபோல் ஆனர். 'கௌடருடைய பிசாசு, தொம்பையை உடைத்துக்கொண்டு வந்து இந்தக் கொலைச் செயலுக்கு முயன்றிருக்குமோ?' என்று ஆச்சரியப்பட்டார்.

'என்னடா, இது? ருத்ரனுடைய தலையெழுத்து இப்படியா இருக்கணும்?' என்று பயந்துகொண்டே கேட்டார்.

'சாமி, கல் மழை பெய்யுதுங்க! வறட்டித் தொம்பையைச் சுத்திப் பத்துத் தெசையிலேயும் இருந்து வந்து கொட்டுதுங்க! கல் வீசற ஆளையே தெரியலேங்க. குறிவச்சு வீசறதெப்போல வந்து விழுதுங்க. ஒன்ெனுன்னு கவண்கல் அளவு இருக்குதுங்க! அவருடைய ஒரு கேள்விக்கு, கல்மழை பெய்தது போலவே வந்த பேச்சு மழையைக் கேட்டுப் படதையா செயலற்று நின்றுர்.

'வேண்டாம், நடங்க. காமண்ணனே கௌடர் வீட்டைச் சேர்ந்தவன். அப்படீன்னு கௌடர் வீட்டு வறட்டி நமக்கு எப்படிக் கிடைக்கும்' என்று பாபு சாஹேப் ஏமாற்றத்துடன் சொன்னதை எல்லோரும் ஆமோதித்தார்கள். சிலர் ஏற்கெனவே வேலியைத்தாண்டி ஓடிவிட்டார்கள். அடிபட்ட ருத்ரனைச் சிலர் அவன் வீட்டு வரைக்கும் சுமந்துகொண்டே போனுர்கள். லிங்கப்பா மட்டும் கல் எறிந்தவர் யார் என்று துப்பறிவதற்காகத் தனியாகவே வறட்டிக் குதிர்களை நோக்கி நடந்தான். பாவம்! அவன் ஆராய்ச்சியைத் தொடங்கவே இல்லை. அதற்குள்ளேயே எலுமிச்சம் பழத்தளவு கருங்கல் ஒன்று அவன் முழங்காலைப் பதம் பார்த்தது. 'ஐயோ, செத்தேன்!' என்று அவன் நிலத்தில் சாய்ந்தான். படதையாவின் இரும்பு மனம்கூட அந்தத் தீனக்குரலைக் கேட்டு நடுங்கியது. கௌடர்வீட்டுக் கொள்ளைக்குப்

பொறுப்பேற்றுக்கொண்ட தலையாரி மல்லன், லிங்கப்பாவைச் சுமந்துகொண்டு மடத்துக்குப் போனான்.

பௌர்ணமிக்கு முதல் நாள் நடந்த சம்பவம், மறுநாள் ஒரு ரசமான கதையாகப் பரவி, ஹோலிப் பண்டிகையின் உத்ஸாக நெருப்புக்கு வண்ண நீர் ஆரத்தி எடுத்து அதை வளர்த்தது. 'கௌடர் வீட்டு வறட்டியைத் திருடப் போனவர்களைக் காவல் இருந்த கௌடரின் பிசாசு கல்மழை பெய்து விரட்டிவிட்டது' என்ற செய்தி பரவியது. தாதாவும் அவனுடைய தாலீம்கானு நண்பர்களும், 'மச்சில் மறைவாக நின்றுகொண்டு, நாங்கள் தான் கல் எறிந்தோம்' என்று சொல்லியிருந்தால்கூடக் கேட்டவர்கள், 'அதெல்லாம் வெறும் கட்டுக் கதை!' என்று சிரித்திருப்பார்கள். மணியக்காரரின் பிசாசு விஷயத்தில் ஜனங்களுக்கு அவ்வளவு நம்பிக்கை இருந்தது.

பௌர்ணமி அன்று பார்வதி அம்மாள் வழக்கம்போல் தன் மகன் சிவப்பகௌடனைப் பாதிராத்திரி வரையிலும் வற்புறுத்திப் பட்டினி இருக்கச் செய்தாள். எப்போதும்போல் வறட்டி ஏராளமாகச் சேரவில்லை. ஆனாலும் தாதாவும் அவன் நண்பர்களும் சேர்ந்து கொண்டுவந்த நாலைந்து வறட்டிக் குவியல்களைக் கோட்டை மைதானத்தில் குவித்திருந்தார்கள். இரவு, பாளாச்சார் முறைப்படி காமன் பூஜை செய்து முடித்தபின் ஜனங்கள் எல்லோரும் தப்பட்டையுடன் தீ எடுத்துவரப் பறைச் சேரிக்குச் சென்றார்கள்.

சேரியைச் சேர்ந்த ருத்ரன், முதல் நாள் மண்டை உடைபட்டு வந்ததால், சேரிக்காரர் எல்லோரும் மிகவும் ஆத்திரம் அடைந்திருந்தார்கள். பதிலாக இப்பொழுது 'தீ எடுக்க வருபவர்களுடைய மண்டையை உடைக்கவேண்டும்' என்று அவர்கள் காத்திருந்தார்கள். இது எப்படியோ வெளியே தெரிந்துவிட்டதால் தீ எடுக்க யாரும் முன் வரவில்லை. தாதாவின் கையில் தீவட்டி எரிந்துகொண்டிருந்தது. ஏதேதோ பேசிக்கொண்டுவந்த தாதா, 'ஐயோ பாம்பு டோய்!' என்று கூச்சலிட்டுக் கையிலிருந்த தீவட்டியைப் பக்கத்திலே இருந்த முள் வேலியின்மேல் போட்டுவிட்டான். நெருப்புக்குக் காவல் இருந்தவர்களுக்குள் குழப்பம் ஏற்பட்டது. 'வேலிக்கு நெருப்புப் பிடித்துவிடும்' என்று சிலரும், 'பாம்பு வந்துவிட்டது' என்று சிலரும் தீவட்டி விழுந்த இடத்தை நோக்கி ஓடினார்கள்.

'அங்கேதான், அங்கேதான்! சரசரன்னு போகுது பாருங்க!' என்று சொல்லிக்கொண்டே எல்லோரையும் ஏமாற்றிவிட்டுத் தீயை எடுத்துக்கொண்டு தாதா சங்கை ஊதி முழக்கினான்!

'கடைசியில் தாதா தீ எடுத்துத் தப்பிவிட்டான்!' என்று சொல்லிச் சேரி ஆட்கள் எல்லோரும் தப்பட்டை முழங்கக் கோட்டைக்கு நடந்தார்கள்.

'இந்தத் தடவை லிங்கப்பன்தான் காமனை எரிக்கத் தீ வைப்பான்' என்று ஜம்பம் அடித்துக்கொண்ட யாரும் அங்கே இருக்கவில்லை. அவனுடைய முழங்கால் தக்க சமயத்தில் ஏமாற்றி விட்டது. சிவப்பகௌடவே தீ வைத்து மரபு தவறாமல் பார்த்துக் கொண்டான். காமதகனம் ஆனபின் சிவப்பா பாரணை செய்யும் போது புலிவேட்டைக் கூட்டத்தாருக்கும் பார்வதி விருந்து ஏற்பாடு செய்திருந்தாள். ஆனால் பாபு சாஹேப் அவர்களுக்கு மாளிகையிலேயே விருந்து தயாரித்து அவர்கள் யாரும் 'மணியக் காரர் வீட்டுக்குப் போகக்கூடாது' என்று தடுத்துவிட்டான். அவர்கள் போகாததால் அந்தச் சாப்பாட்டைச் சேரிக்காரர் களுக்குக் கொடுத்தார்கள். சேரிக்கு அழைப்புப் போனபோது நள்ளிரவு தாண்டிவிட்டது. ஆனாலும் சேரிக்காரக் குழந்தைகள், பெரியவர்கள் எல்லோருமே மடக்குகளை எடுத்துக்கொண்டு போய் கௌடர் வீட்டிலிருந்து போளியை வாங்கிக்கொண்டு திருப்தியாகச் சென்றார்கள்.

மறுநாள் காலை மஞ்சள் நீர் விளையாட்டு. இளைஞர்களுக்குக் கொண்டாட்டம்தான். சிறுவர்கள் எல்லாம் கழுதை சவாரி செய்தார்கள். எதிரில் வந்தவர்களைச் சங்கு ஊதி வரவேற்று அவர்கள் உடையில் சாணிக்குழம்பைத் தெளித்து அன்றைய நிகழ்ச்சியை ஆரம்பித்துவைத்தார்கள். பாதள்ளியில் அன்று ஒருநாள் மட்டும் சின்னவர், பெரியவர் என்ற வேற்றுமை, கௌரவம், மரியாதை எல்லாம் சாணிக்குழம்பில் முழுகிவிடும். நேரம் ஆக ஆகப் பெரியவர்களையே பிடித்துக் கழுதைமேல் உட்காரவைத்து கந்தல் செருப்பு மாலை போட்டு, குப்பைமேட்டில் கிடந்த கூடை, முறங்களை எல்லாம் குடைகளாகவும் சாமரங் களாகவும் உபயோகித்து, அபூர்வ வைபவத்துடன் அவர்களை ஊர்வலமாக இட்டுச்சென்றனர். சங்கு முழக்கம் மேன்மேலும் எழுந்து வானத்தை எட்டியது. அப்போது ஸ்நானத்துக்காக ஆற்றங்கரைக்குப் புறப்பட்ட பாளாச்சாரின்மேல் இளைஞர்களின் பார்வை விழுந்தது. அந்தக் கூட்டத்தில் ஒரு சோம்பேறி இருந்தான். வருஷம் முழுவதும் ஹோலிப் பௌர்ணமியின் வேஷங்களிலும் அதன் கற்பனைகளிலும் ஈடுபட்ட ஓர் ஆச்சாரின் மகன் அவன். அவன் ஆச்சாரிடம் வந்து போலி வணக்கத்துடன் ''ஆச்சார்ரே! உங்களையும் கொஞ்சம் 'பரிசுத்தம் செய்யணும்னு' நாங்கள்ளாம் ஆசைப்படறோம்'' என்று சிரித்துக்கொண்டே

சொன்னுன். இந்தக் கூட்டத்தைப் பார்த்தவுடன் பாளாச்சாருக்கும் தம்முடைய சிறுவயது நினைவு வந்துவிட்டது போலும்.

'ஏனப்பா, ஊரில் பெரிய பெரிய மனிதர்கள்; கர்ணம் சேஷப்பா, ஜாகீர்தார் எல்லாரும் இருக்கறப்போ, என்னைப் போன்ற ஏழைப் பிராமணனுக்கு ஏண்டாப்பா இந்த மரியாதை எல்லாம்? அவங்கெல்லாரையும் உக்காத்துங்க அப்பா! அவங்கெல்லாரையும் உக்காத்திவச்சு, அவங்க பின்னுலே புகழைப் பாடிகிட்டுவரும் பட்டனு நான் வரேன்' என்று ஆச்சாரும் சிரித்துக்கொண்டே பதில் சொன்னுர். இளைஞர்கள் கூட்டம் 'ஓகோ!' வென்று சிரித்து உரக்கக் கத்திக்கொண்டு சேஷப்பாவின் வீட்டு வாயிலில் வந்து நின்றது.

சேஷப்பா வீட்டுக் கதவு தாளிட்டிருந்தது. 'இப்படி நடக்கும்' என்பதை முன் கூட்டியே ஊகித்திருந்த சேஷப்பா, கதவைத் தாளிட்டுவிட்டு ஒளிந்துகொண்டிருந்தான். இளைஞர்கள் பெருங் கூச்சல் இட்டுக் கதவை இடித்து இடித்துத் திறக்க முயன்ருர்கள். ஆனுல் கோட்டையைப் பிளக்க முடியவில்லை. இந்த முற்றுகையும் நகர்வதாக இல்லை. சங்கு ஊதல் அதிகரித்துக் காதைத் துளைத்ததால், 'வீட்டிலே அவர் இல்லேடா, கம்மனுட்டிப் பசங்களா! பேசாமெ நின்னு கூப்பிடறதுக்கு என்ன கேடு?' என்று யஜமானி அம்மாள் உள்ளே இருந்தபடியே எரிந்து விழுந்தாள்.

இளைஞர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள். பாளாச்சாரே 'ஒருகணம் பேசாமல் இருங்கள்' என்று அவர்களுக்குச் சைகை காட்டினுர். அவரே முன்வந்து நயமான குரலில், 'துளஸக்கா! கொஞ்சம் கதவைத் திறக்கறயா அம்மா!' என்று கூப்பிட்டார்.

'அவர் வீட்டில் இல்லையே, ஆச்சாரே!' என்று பிகுவாகவே பதில் வந்தது.

'நான்மட்டும் உள்ளே வந்து பாக்கறேன் அம்மா! சேஷப்பா இல்லேன்னு இவங்கள்ளாம் பேசாமெ திரும்பிப் போயிடுவாங்க' என்று பாளாச்சார் சொன்னுர்.

துளஸக்கா வேறு வழி இல்லாமல் கதவைத் திறந்தாள். பாளாச்சார் உள்ளேபோய் உள் மனத்தின் தூண்டுதலால் ஊகித்தபடி சோளக் களஞ்சியத்தைச் சோதனை போட்டார். 'சேஷப்பா அதில்தான் இருப்பான்' என்று அநுபவத்தால் அவர் ஊகித்தது பொய்யாகவில்லை. அவன் குடுமியைப் பிடித்துத்

தூக்கினுர். பல்லேக் காட்டிக்கொண்டே தலையைத் தடவிக் கொண்டிருந்தான் சேஷப்பா.

'கழுதைமேல் உட்கார்ந்து பெருமைப்படுவது இந்தப் பண்டிகையின் கௌரவம். மத்த சமயங்களிலே ஏன் ஒன்னேக் கூப்பிடறுங்க?' என்று பாளாச்சார் சொன்னதும், சேஷப்பா, 'ஜாகீர்தார் பாபு சாஹேப் இருக்கும்போது எனக்கு எதுக்கு மரியாதை, ஆச்சார்?' என்று தடுத்துப்பார்த்தான்.

''ஆகட்டும் அப்பா, ஜாகீர்தார், படதையா, 'மணியக் காரன் ஆகப்போறேன்'னு வந்திருக்கானே அந்த லிங்கப்பா, எல்லோருக்குமே அந்தஸ்துப் பிரகாரம் மரியாதை நடக்கட்டும். யார் வேண்டாங்கறு? ஆனுல் கணக்குப் பிள்ளேயான நீ வந்தாத் தான் அவாள்ளாம் வருவாப்பா'' என்று ஆச்சார் உத்ஸாகப் படுத்தி, என்றும் இல்லாத அன்புடன் சேஷப்பாவைக் கழுதை மேல் ஏறச் செய்தார். சேஷப்பாவே கறுப்பு. தீய்ந்த தோசைக் கல்லின் அடிப்பக்கத்துக் கரி அவர் முகத்துக்குப் பொருத்தமாகவே இருந்தது. சேஷப்பாவை ஊர்வலத்தில் உட்கார்த்திவிட்டு எல்லோரும் பாபு சாஹேபை அழைக்க மாளிகைக்கு வந்தார்கள். பாபு சாஹேபும் படதையாவும் தப்ப முடியாமல் ஒப்புக் கொண்டார்கள். அவர்களுடைய ஜோடி ஊர்வலம் கோட்டை வரைக்கும் வந்தபின் 'லிங்கப்பா எங்கே?' என்ற கோலாகலம் எழுந்தது.

'அவனுக்கு உடம்பு சரியில்லே. கால் நோவு' என்று சேஷப்பா வக்காலத்து வாங்கியும் பலிக்கவில்லே. ஜனங்கள் கேட்கவில்லே. 'நம்ம ஊர் மணியக்காரர் ஆகப்போறவர் அப்பா அவர். அவருக்கு மரியாதை செய்வதைத் தடுத்துவிட்டு நீயே எல்லா மரியாதையையும் ஏற்றுக்கொள்கிருயா என்ன?' என்று பாளாச்சார் சொன்னதுதான் தாமதம்! தாதா மடத் துக்குப் போய் லிங்கப்பாவைத் தூக்கிக்கொண்டு வந்தான். ஏற்கெனவே முழங்கால் நோயால் முக்கி முனகிக்கொண்டிருந் தான் லிங்கப்பா. தலேக்குமேல் கடுமையான வெயில். எந்தப் பக்கம் நகர்ந்தாலும் உதைக்கவரும் கழுதைகள்! அதனுல் அவனுக்கு ஊர்வலம் 'போதும் போதும்' என்று ஆகிவிட்டது.

தெரு வழியே சென்ற இந்த ஊர்ப் பிரமுகர்கள் நால்வரோடு தளவாயும் ஒரு கழுதைமேல் ஏறி முந்திக்கொண்டு போனுன். அவர்களுக்குப் பின்னுல் ஊர்ச் சோம்பேறிகள் எல்லாம் வாய் நோவதைக்கூட மறந்து சங்கை ஊதிக்கொண்டிருந்தார்கள். சிறுவர்கள் சிலருடைய உதடுகள் சங்கு ஊதி ஊதி வீங்கிவிட்டன. தலேக்குமேல் வெயில் தகித்துக்கொண்டிருந்தது. பெண்கள்

சந்து பொந்துகளில் நின்று ஊர்வலத்தைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தார்கள். பாபு சாஹேபை அவமானம் பிடுங்கித் தின்றது. படையா 'ஊரைவிட்டே ஓடிப்போகலாமா?' என்று நினைத்தார். லிங்கப்பாவுக்கு இது புதிய அநுபவம். இதைவிட 'உயிரை விட்டுவிடலாம்' என்று தோன்றியது. பாளாச்சார் மட்டும் சிரித்தவண்ணம் அவர்களைப்பற்றிப் புகழ்ச்சியாகப் பேசிக்கொண்டு ஊர்வலத்தோடு சென்றார்.

கிழவரின் முகத்தில் குறும்புச் சிரிப்பு மாறவே இல்லை.

சில நாட்களுக்கு முன்னால் ஊரில் நேர்ந்த துர்மரணங்களும் காலராவும் காரணமாக நண்பர்களையும் உறவினர்களையும் இழந்தவர்களுக்கு இந்த வேடிக்கையான காட்சி சற்று நேரமாவது துக்கத்தைப் போக்கி மகிழ்ச்சியைக் கொடுத்தது. தவிர இந்த வருஷம் பாளாச்சார் அந்தப் பிரமுகர்களுடைய குணங்களைப் புகழ்ந்துகொண்டு சென்றது ஒரு விசேஷ சம்பவமாக இருந்தது.

பௌர்ணமிக்கு மறுநாள் வேட்டை. புலிவேட்டைக்காரர்களும், மற்ற மாமிசம் சாப்பிடும் சாதி இளைஞர்களும், வேறு நடுவயது மக்களும் மறுநாள் வேட்டைக்குத் தயாரானார்கள். தாதாவுக்குக் குஸ்தியைப்போல் பிரியமான விளையாட்டு, வேட்டை ஒன்றுதான். ஹோலிப்பண்டிகை அன்றும் யுகாதியன்றும் வேட்டை நாய்களைவிட வேகமாக ஓடி வேட்டையாடினாலும் தாதா களைத்துப்போகமாட்டான். சென்ற ஆண்டு சாயங்காலம் வரைக்கும் காட்டில் சுற்றியும்கூட வேட்டையே கிடைக்கவில்லை. இரவு அங்கேயே பட்டினியாகப் படுத்திருந்துவிட்டு மறுநாள் மாலையில் ஒரு முயலை அடித்துக்கொண்டு வந்த சம்பவத்தைத் தாதா மறக்கவில்லை. அப்பொழுது வயதானவர்களே அதிகமாக வேட்டைக்குச் சென்றிருந்ததால் இந்த நிலைமை ஏற்பட்டது. அதனால் தாதா இந்தத் தடவை 'தன் நண்பர்கள் எல்லாம் வேட்டைக்குத் தவறாமல் வரவேண்டும்' என்று உத்தரவு போட்டிருந்தான். தாதா தீர்மானித்துவிட்டால் யாரும் மறுக்க முடியாது. அதனால் ஜொயின் ஜின்னப்பனுடைய மகனும் நெற்றியில் நாமம் இட்டுக்கொண்டு பளிச் சென்று வேட்டைக்காரருடன் சேர்ந்துகொண்டான்.

மறுநாள் பொழுது விடியும் முன்பே எல்லோரும் வேட்டைக்குப் புறப்பட்டார்கள். பஞ்சத்தின் பயனாக வயல்களில் பயிர்களே காணப்படவில்லை. இந்த ஆண்டு வேட்டைக்கு வசதி இல்லாததற்கு அதுவும் ஒரு காரணம். எந்தப் பக்கம் பார்த்தாலும் விசாலமான வெட்டவெளி. கோடை வெயிலைப்

போலவே அதுவும் மக்களைச் சுட்டது. ஒருகாத தூரம் போனாலும் தலைக்குமேல் நிழலே கிடைக்கவில்லை. வேட்டைக்காரருக்குச் சரியாக, மெதுவாக நடந்ததால் நாய்கள் சோர்ந்துபோய் விட்டன. பொழுது சாயும் வரையில் அலைந்தும் தப்பித் தவறிக் கூட ஒரு மான் கூட்டத்தைக் காண முடியவில்லை. கானல் நீரோட்டத்தைப் பார்த்துப் பார்த்தே கண்கள் பூத்துவிட்டன. பள்ளம், குழிகள், வரப்பு, வளை, முட்புதர்கள் இவை எங்கெங்கு தேடியும் தட்டியும் ஒரு முயல்கூட வெளிவரவில்லை.

நடந்து நடந்து வேட்டைக்காரர்கள் களைத்துப்போனார்கள். மாலைப்பொழுது வந்ததும் வெளிச்சம் தேய்வதுபோல் வேட்டை யின் ஆசையும் மங்கியது. ஓர் ஓடைக்கரையில் உட்கார்ந்து ரொட்டியைத் தின்று ஊற்றுத் தண்ணீரைக் குடிக்கும்போதே ஹாவனூர் வேட்டைக்காரர்களும் அங்கே வந்தார்கள். பாதள்ளிக்காரர்களைப் போலவே அவர்களும் வேட்டையில் ஏமாந்தவர்களே. இரண்டு ஊர்க்காரர்களும் 'இவ்வளவு தூரம் தான் போகலாம். இதுதான் எல்லை' என்ற தடை இல்லாமல், 'இஷ்டப்படி அலைந்து ஏன் வேட்டை ஆடக்கூடாது?' என்ற விஷயத்தைப்பற்றி சர்ச்சை செய்தார்கள்.

கடைசியில் இப்படித் தீர்மானம் ஆயிற்று: 'ஒரு பிராணி புறப்பட்ட இடத்துக்குச் சொந்தமில்லை; போய்ச் சேர்ந்த இடத்துக்குத்தான் சொந்தம்.' பிறகு இருசாராரும் வேட்டை யைத் தேடத்தொடங்கினார்கள். பொழுது சாய்ந்த பின்னும் இருட்டவில்லை. பாதள்ளி எல்லைக்குள் இருந்த புதரிலிருந்து இரண்டு முயல்கள் கிளம்பியது தாதாவின் கண்ணில் பட்டது. நாய்கள் அவைகளைத் துரத்தியதால் அவை ஹாவனூர் எல்லைக்குள் ஓடின. நாய்களோடு தாதாவும் ஓடினான். நாய்கள் அவைகளைப் பிடிக்க, தாதா பின்னாலிருந்து வந்து முயல்களை அடித்துக் கால்களைக் கட்டிக் கொம்பில் மாட்டிக்கொண்டிருந்த போது ஹாவனூராரும் ஓடிவந்தார்கள். 'எங்களூர் எல்லைக்கு வந்த பிராணியை நீ எப்படித் தொடலாம்?' என்று முயல்களைப் பிடுங்க முன்வந்தனர்.

பேச்சு வளர்ந்து விஷயம் விபரீதமாகிவிட்டது. ஹாவனூரார் ஏழெட்டுப்பேர்; தாதா ஒருவன். மற்றவர்கள் பின்தங்கி விட்டார்கள். 'தனியாகவே அவர்களைச் சமாளிக்கலாம்' என்ற தைரியம் இருந்தாலும் கையிலிருந்த பிராணிகளைக் கீழே வைக்க முடியவில்லை. இந்தத் தகராறிலிருந்து தப்பிக்க, தாதா ஒரு யுக்தி செய்தான். கையிலிருந்த கோடரியால் வரப்பின்மேல் வளர்ந்திருந்த கிளுவமுள்ளை அவர்களுடன் பேசிக்கொண்டிருந்த போதே வெட்டினான். அதைக் கையில் வைத்துக்கொண்டே

முயல்களைக் கோடரிக்காம்பில் கட்டி இடக் கையில் பிடித்துக் கொண்டான். வலக் கையால் முள் செடியைத் தூக்கிக் கொண்டான்.

வேட்டைப் போட்டியால் ஹாவனூராரர் அவன்மேல் பாய்ந் தனர். அவர்கள் பக்கத்தில் வந்தவுடனே தாதா, பலத்தையெல் லாம் ஒன்று சேர்த்து எல்லோர் மேலும் முட்செடியால் பரபர வென்று இழுத்துவிட்டான். செடியால் பட்ட அடியாலும் முள்ளால் உண்டான காயத்தாலும் ஹாவனூராரர்கள் தத்தளித் தார்கள். தாதா கையில் முட்செடியைப் பிடித்தவண்ணமே பின்புறமாகவே நடந்து தன் ஜனங்களுக்குக் குரல் கொடுத்தான்.

தாதாவின் சமயோசிதமான இந்தச் செயல் 'ஊரின் கௌரவத்தைக் காப்பாற்றியது' என்று பாதள்ளியின் வேட்டைக் காரர்கள் அவனைக் கட்டித்தழுவிக்கொண்டார்கள். வேட்டை யாடிப் பிடித்த முயலுடன் ஊர்போய்ச் சேரும்போது இருட்டி இரண்டுமணி நேரம் ஆகிவிட்டது. தாதாவின் வீரச்செயல் ஊரெல்லாம் பரவியது. அன்றிரவு மடத்தில் வழக்கம்போல் ஜனங்கள் கூடியபோது அவர்கள் அரட்டையில் தாதாவின் வீரச் செயலே அடிப்பட்டது. தலையாரி மல்லன், நடந்தவற்றை யெல்லாம் விவரித்துச் சொல்லி, 'தாதா, சாமானியப் பையன் அல்ல; மிகவும் கெட்டிக்காரன்!' என்று வாயாரப் புகழ்ந்தான். 'யமதூதர் மாதிரி எட்டுப்பேர் ஹாவனூர்க்காரர்கள் வந்து எதிர்த்தார்கள். அவன் கொஞ்சமாவது பயந்தானா? என்ன அடியுங்க அது? இத்தினி நேரத்துக்கு அவங்கள்ளெ ஒத்தன் செத்துப்போயிருந்தாலும் போயிருப்பான்' என்று அவன் ஜோஸ்யம் சொன்னான்.

படதையாவுக்கு இந்தப் பேச்சு ரசிக்காவிட்டாலும் இந்த விஷயத்தைக் கொண்டு தம் கனவை நனவாக்கிக்கொள்ளலாம் என்ற ஆசை தோன்றியது. தம் எண்ணத்தை வெளிக்குக் காண்பிக்காமல் மல்லன்மூலம் வேட்டை விவரங்களையெல்லாம் தெரிந்துகொண்டார். தம் அபிப்பிராயம் ஒன்றையும் சொல்ல வில்லை. மறுநாள் பொழுது விடியும்போதே அவர் குதிரை ஏறி ஹாவனூருக்குச் சென்றார். அவ்வூர்ப் பிரமுகர்களைத் தனியாகச் சந்தித்து, சப் இன்ஸ்பெக்டரிடம் தாதாவின்மேல் பிராது கொடுக்கும்படி தூண்டிவிட்டு வந்தார்.

பாதள்ளிக்குத் திரும்பி வரும்போது படதையா சிரித்துக் கொண்டே வந்தார். சப் இன்ஸ்பெக்டர் பக்ருதீனுக்குத் தாதா வால் நேர்ந்த அவமானத்துக்குப் பழிவாங்க வகை செய்து கொடுத்தால், தாதா, 'கனவில்கூடப் பாதள்ளியைக் காண

முடியாது' என்பது அவர் யோசனை. தாதாவை ஒரு தடவை ஜெயிலுக்கு அனுப்பிவிட்டால் 'பாதள்ளியில் தாம் பயமின்றி வாழலாம்' என்பது அவருடைய எண்ணம். இந்த முடிவுடன் அவர் ஊர்வந்து சேர்ந்தபோது நடுப்பகல் ஆகிவிட்டது.

யசவந்தராவிடமிருந்து 'அஜராணியில் காலரா குறைந்து விட்டது' என்ற செய்தி வந்தால் ஒழிய, 'தாதா அங்கே போகக் கூடாது' என்று பாளாச்சார் சொல்லியிருந்தார். ஹோலிப் பண்டிகை கழிந்து எட்டு நாளுக்குமேல் 'காலரா குறைந்திருப்ப தாக' அஜராணியிலிருந்து செய்தி வந்தது. மறுநாளே தாதா அஜராணிக்குப் போக நினைத்தான். ஆனால் அன்று இரவே ஹெட் கான்ஸ்டபிள் ஜமால் சாகிப் பாதள்ளிக்கு வந்துவிட்டார். அவர் தாதாவைப் பிடிக்க வாரண்ட் கொண்டுவந்திருந்தார். சாவடிக்கு வந்தவுடன் 'தாதா ஊரில் இருக்கிறானா?' என்று அவர் கேட்ட தோரணையிலேயே அஞ்சல் மல்லப்பனுக்கு ஏதோ சந்தேகம் தோன்றியது.

'என்னங்க, தனியா தாதாவைப்பத்தியே கேக்கறீங்க?' என்று கேட்டான்.

'அவன் எங்கிருக்கான் சொல்லு? இல்லாட்டி அவனோடெ வீட்டைக் காட்டு. வேண்டாத விசாரணை எல்லாம் செய்யாதே' என்று அவர் அவனை அதட்டினார்.

அஞ்சல் மல்லப்பன் மணியக்காரருக்கு விசுவாசமுள்ள வேலைக் காரன். தாதாவின்மேல் ஹாவனூரார் பிராது கொடுத்திருந்த செய்தி அவன் காதிலும் விழுந்திருந்தது. ஹெட் கான்ஸ்டபிளைச் சாவடியிலேயே உட்காரச் சொல்லிவிட்டு, தாதாவைத் தேடும் சாக்கில் மல்லன் புறப்பட்டான். ஆனால் அவன் போனது பாளாச்சார் வீட்டுக்கு. அவரிடம் எல்லா விஷயங்களையும் சொன்னான். 'என்ன வேணுமானாலும் செய். தாதா போலீஸார் கையில் சிக்காமல் பார்த்துக்கொள்' என்று அவர் யோசனை சொன்னார்.

மல்லப்பன் அங்கிருந்து பார்வதியின் வீட்டுக்குப் போய் அவளிடமும் செய்தியைத் தெரிவித்தான். பார்வதி இதைக் கேட்டு வருந்தினாள்; பயமும் உண்டாயிற்று. 'கௌடர் போனபின் இந்த வீட்டைத் தாதா இரவும் பகலும் காவல் காத்து வருகிறான். அவனுக்கா இந்த ஆபத்து?' பார்வதி உதட்டைக் கடித்துக்கொண்டாள். 'ஊரைக் காக்கும் பையனைக் கண்ணுக்கு மறைவாக் கொண்டுபோகத் திட்டம் போட்டிருக் காங்க, படுபாவிகள்!' என்று தனக்கு ஆகாதவர்களை எல்லாம் சபித்தாள். பிறகு, 'தாதா மச்சுமேலே படுத்திருக்கான்பாரு.

மல்லப்பா! அவனை அழைச்சுகிட்டு வா. வூட்டுக்குள்ளேயே குந்தச் சொல்லு. வெளியே போகவே வேண்டாம்' என்று தாதாவை மறைத்துவைக்க யோசனை சொன்னாள். 'எது வந்தாலும் சரி. தாதா ஜெயிலுக்குப் போகாமெ இருக்கணும் சிவனே!' என்று பிரார்த்தனை செய்துகொண்டாள்.

# 20

பார்வதி அம்மாளின் வேண்டுகோள் பலித்தது. தாதாவின் வீடு, தாலிம்கானா, கௌடர் வீடு ஆகிய எல்லா இடங்களிலும் ஹெட் கான்ஸ்டபிள் சல்லடை போட்டுச் சலித்துவிட்டார். ஆனால் தாதா எங்குமே காணப்படவில்லை. பார்வதி அம்மாள் சமையலறையில் தாதாவை மறைத்து வைப்பாள் என்ற சந்தேகம் படதையாவுக்குக்கூட வரவில்லை. ஹெட் கான்ஸ்டபிள் ஊருக்கு வந்திருக்கும் செய்தியைக் கேட்டுத் தாதா தலைமறைவாகப் போயிருப்பான் என்று கடைசியாகத் தீர்மானித்தார்கள். ஹோலிப் பண்டிகை ஆனவுடனே தாதா அஜராணிக்குப் போவான் என்ற செய்தியை யசவந்தராவின் ஆளிடம் கேட்டுத் தெரிந்துகொண்ட பாபு சாஹெப் அதைச் சொன்னதும் அந்தத் தீர்மானம் உறுதியாயிற்று. தாதா அகப்பட்டுவிட்டால் கைக்குப் பணம் வரும் என்று அறிந்த ஹெட் கான்ஸ்டபிள் உடனே அஜராணிக்குப் பயணம் ஆனார்.

ஹெட் கான்ஸ்டபிள் அஜராணிக்குப் போய்ச் சேர்ந்தபோது பொழுது விடியவில்லை. அவர் போலீஸ் மணியமான யசவந்த ராவின் வீட்டுக்கு நேராகப் போனார். யசவந்தராவ் காலைக் கடன்களை முடித்துக்கொள்ள வெளியே போனவர் இன்னும் திரும்பவில்லை. ஹெட் கான்ஸ்டபிள் வந்தவுடன் வீட்டில் உள்ளவர்கள் எல்லாரும் பயந்தார்கள். ஹெட் கான்ஸ்டபிளின் அதிகாரத்திற்குப் பயந்து வாயை மூடிக்கொண்டிருந்தார்கள். தம்முடன் வந்த போலீஸ்காரர்களை அங்கும் இங்கும் அனுப்பி விட்டு ஹெட் கான்ஸ்டபிள் மணியக்காரரின் வரவை எதிர் பார்த்துக் காத்துகொண்டிருந்தார்.

யசவந்தராவ், வீட்டுக்கு வந்த பின் தாதாவின்மேல் வாரண்ட் இருக்கும் செய்தியைத் தெரிந்துகொண்டார்.

'ஆனால் அவன் இந்தப் பக்கமே வரவில்லேங்க' என்று யசவந்த ராவ் பேசத் தொடங்கியபோது, ஹெட் கான்ஸ்டபிள், 'அவன்

இங்கு வந்திருக்கும் செய்தி கிடைச்சிருக்குங்க கௌடரே, அவனைத் தப்ப வைப்பதற்காகப் பொய் சொன்னால் நடக்காது' என்று எல்லாம் தெரிந்தவர்போல் நமட்டுச் சிரிப்புடன் சொன்னார்.

'உங்களிடம் சொன்னவர்களே பொய் சொல்லியிருப் பார்கள். அவன் இங்கு வரவே இல்லை. அவன் நிஜமாகவே வந்திருந்தால் பிடித்துக் கொடுப்பது மணியக்காரனாகிய என் னுடைய பொறுப்பல்லவா' என்று அமைதியாக யசவந்தராவ் சொன்னார். ஆனால் ஹெட் கான்ஸ்டபிள் நம்பவில்லை. அதைக் கண்ட யசவந்தராவ், 'இதோ பாருங்கள்! நான் அவனை வீட்டிற்குள் மறைத்து வைத்துக்கொண்டு பொய் சொல்லு வதாகச் சந்தேகம் இருந்தால் என் வீடு முழுக்கச் சோதனை போட லாம். ஊரில் நீங்கள் சந்தேகித்த எந்த வீட்டிலும் தேடலாம்' என்று சற்றுக் கோபத்துடனேயே பதில் சொன்னார்.

'கொஞ்சம் பொறுங்க மணியக்காரரே, சந்தேகப்பட்ட வீடு களின் பட்டியல் கைக்கு வரட்டும். சோதனை போடுவோம். நாங்கள் பிரிட்டிஷ் அதிகாரம் பெற்ற போலீஸார். உங்கள் சமஸ்தானப் போலீஸார்போல் முன் யோசனை யில்லாமல் எதுவும் செய்யமாட்டோம். எல்லாம் சட்டப்படிதான் நடக் கணும்' என்று ஹெட் கான்ஸ்டபிள் ஜம்பம் அடித்துக் கொண்டார்.

அதற்குள் லிங்கப்பனுடைய தந்தையான சங்கரப்பாவின் வீட்டுக்குப் போன போலீஸ்காரன் வந்து ஹெட் கான்ஸ்டபி ளுக்குச் சலாம் வைத்தான். அவர் எழுந்திருந்து அவன்கிட்டே போனார். அவன் இவர் காதில் ஏதேதோ சொன்னான். அவருடைய முகம் புன்சிரிப்பால் மலர்ந்தது. யசவந்தராவின் பக்கம் திரும்பி 'மணியக்காரரே, வாரண்ட் வந்த ஜனங்கள் தேவடியா வீட்டில்தான் தலைமறைவாக இருப்பார்கள் என்பது நம் அனுபவம். உங்கள் ஊர்த் தேவடியா வீடுகளைச் சோதனை போடணுமே' என்றார் ஹெட் கான்ஸ்டபிள்.

'இந்த ஊரின் சேரியில் சந்திரி என்று தேவதாசி ஒருத்தி இருக்கிறாள். சக்கிலியர் சேரியில் மற்றொருத்தி இருக்கிறாள். உங்களுக்கு யார் வீட்டைச் சோதனை போட வேண்டும் என்று சொன்னால் அங்கே போவோம்' என்று யசவந்தராவ் பதில் சொன்னார். அவர் மனத்தைச் சங்கடம் செய்தது. அதை வெளியில் காட்டிக் கொள்ளவில்லை.

ஹெட் கான்ஸ்டபிள் மணியக்காரரின் பேச்சிற்குப் பதில் ஏதும் சொல்லவில்லை. இருவரும் சாவடிக்குப் போனார்கள்.

அங்கிருந்து சங்கரப்பனுடைய வேலைக்காரன் வழி காட்ட ஹெட் கான்ஸ்டபிள் ஹரிஜனச் சேரிப்பக்கம் போனார். மணியக் காரரைத் தம்மோடு வரவேண்டாம் என்றதால் அவர் சாவடியி லேயே இருந்தார்.

அப்பொழுதுதான் பொழுது விடிந்திருந்தது. சேரி மக்கள் எழுந்திருந்து தெருவைக் கூட்டிச் சுத்தம் செய்துகொண்டிருந் தார்கள். மேலே கிளம்பிய புழுதியால் தெருவில் நடப்பவர்கள் மற்றவர்களுக்குத் தெரியவில்லை. ஹெட் கான்ஸ்டபிளின் அதிகாரம் நிறைந்த மனத்துக்குப் புழுதியைக் கண்டதும் கோபம் வந்தது. குப்பையைப் பெருக்கிக்கொண்டிருந்த ஒருவனிடம், 'ஏ கழுதே, நிறுத்து. எங்க மேலேயே குப்பையைத் தள்ளுவ போலிருக்கே' என்று கர்ஜித்தார்.

குனிந்து தெருக் கூட்டிக்கொண்டிருந்த 'கண்ட்யா' என்பவன் நிமிர்ந்து பார்த்தான். ஹெட் கான்ஸ்டபிள்! போலீஸார்! அவர்களுக்குப் பதில் சொல்லவும் பயந்து அவன் வீட்டுக்குள்ளே ஓடினான். வழி காண்பிக்க வந்த ஆள், 'இப்ப ஓடினான் பாத் தீங்களா, இவன்தான் சந்திரியின் தம்பி கண்ட்யா. இவன் சந்திரியின் வீட்டுக்குள்ளேதான் ஓடியிருக்கான். பாதள்ளி ஆசாமி இருப்பது இந்த வீட்டில்தானுங்க' என்று சொல்லித் தன் கடமையை முடித்தான்.

கண்ட்யா பயந்து வீட்டுக்குள் ஓடியதால், சங்கரப்பா கொடுத்த செய்தி உண்மை என்று ஹெட் கான்ஸ்டபிள் ஊகித் தார். தேடிய ஆள் கிடைத்துவிட்டதில் மகிழ்ச்சியும் உண்டா யிற்று. ஆனால் உள்ளே போன கண்ட்யா ஏதாவது தந்திரம் செய்யலாம் அல்லவா? அதனால் தம்முடன் இருந்த போலீஸ் காரர் இருவரையும் வீட்டின் பின்புறம் காவல் இருக்கச்சொல்லி அவர் சந்திரியின் வீட்டு வாயிலுக்குப் போனார்.

சேரிக்குப் போலீஸ் அதிகாரிகள் வந்திருப்பதைக் கண்ட சிலர் உடனே சேரி எங்கும் செய்தியைப் பரப்பிவிட்டார்கள். அதனால் சந்திரியின் வீட்டின் முன்னே ஏழெட்டுப் பேர் கூடிவிட்டார்கள். அவர்களைக் கண்டவுடன் ஹெட் கான்ஸ்டபிளுக்குக் கோபம் வந்தது. 'ஓரடி முன் வைத்தால் என்ன செய்கிறேன் பாருங்கள். குற்றவாளிகளைத் துப்பறியும் சர்க்கார் வேலைக்குத் தடை செய் தார்கள் என்று குற்றம் சாட்டி உங்கள் எல்லோருக்கும் விலங்கு போட்டுவிடுவேன்' என்று அதட்டிவிட்டு, 'ஏ கண்ட்யா! வெளியே வா' என்று கூச்சலிட்டார்.

கண்ட்யா நடுங்கிக்கொண்டே வெளியே வந்து ஹெட் கான்ஸ்டபிளுக்குக் கும்பிடு போட்டான். அவன் கால் நிலத்தில்

பாவவே யில்லே. ஏற்கெனவே வற்றி வறண்டு கிடந்த முகம் இன்னும் சுண்டைக்காய் ஆயிற்று. அவன் பின்னலேயே வந்த சந்திரி, ஹெட் கான்ஸ்டபிளுக்குக் கும்பிடு போட்டு நின்ருள். அவர் அவளைக் கவனித்தார். தலையை முந்தானையால் மூடிக் கொள்ளவில்லே. அப்பொழுதுதான் குளித்து வந்திருந்ததால் கூந்தல் முதுகெல்லாம் பரவிக் கலேந்திருந்தது; புடைவையை முழங்காலுக்குமேல் தூக்கிச் சொருகியிருந்தாள். நிறம் சாந்துக் கறுப்பு. வெற்றிலே பாக்குப் போட்டுக்கொண்டிருந்ததால் சிவந்த வாய். ஹெட் கான்ஸ்டபிள் உறுத்துப் பார்த்துக் கொண்டே, 'இவ யாருடா, கண்ட்யா?' என்று தம் அதிகாரத்தை உபயோகித்துக் கேட்டார்.

சந்திரிக்குக் கேள்வியின் அர்த்தம் புரிந்துவிட்டது. அவருடைய பார்வையில் இருந்தே மனத்தின் ஆழத்தை அவள் மதிப்பிட்டிருக்க வேண்டும். அவர் கேட்டது தன்னைத்தான் என்பதுபோல், 'சாமி, இவன் என் தம்பி கண்ட்யா. தெரியாமெ ஏதாச்சும் தப்புச் செஞ்சிருந்தா மன்னிச்சிடுங்க' என்று தன் நடையே ஒரு தெருக்கூத்துபோல் தோன்றக் கைகுவித்து வெளியே வந்தாள்.

'தெரியாம தப்புச் செஞ்சவனு, இந்தக் கண்ட்யா? பாதள்ளிக் குற்றவாளியை உள்ள வச்சிகிட்டு நாங்க வந்தவுடனே திடீர்னு உள்ளே பாஞ்சிட்டான் இவன்' என்று உத்ஸாகமாகவே சொன்னர். அவருக்கும் கொஞ்சம் விளையாட்டு வேண்டி யிருந்தது போலும்!

சந்திரம்மா இடுப்பிலிருந்து வெற்றிலேப் பையை எடுத்துத் திறந்தாள். அதை நிதானமாகவே பிரித்து, 'ஐயோ சிவனே! பாதள்ளிக் குற்றவாளிதான் உங்களுக்கு வேணுமா? யார் வேணும்பாங்க ஸர்தார்? குஷாலா அழைச்சுகிட்டுப் போங்க. அந்த ஆளைக் கூட்டியாந்தது நான். வூட்லே வச்சிகிட்டவ நான். அவனுக்கு என்னங்க தெரியும், இதெல்லாம்? உங்களுக்கு அவன் மொகத்தைப் பாத்தாலே தெரியலே?' என்று அபிநயத்துடன் பேசினள். அவள் பேசியபோது அவள் அசைவும் ஆட்டமும் பார்த்தவர்கள் மனத்தையே ஆட்டிவிடும்போல் இருந்தன. நின்ற இடத்தில் நிற்கவில்லே. கை, கண், வாய் எல்லாம் பேச்சின் லயத்துக்கு ஏற்ப நடனமாடின. இப்படிச் சொல்லி விட்டு ஒரு புன்சிரிப்புடன் ஒரு பாக்குத் துணுக்கை வாயில் போட்டுக்கொண்டு வெற்றிலேக்குச் சுண்ணும்பு தடவிக்கொண்டே அவரை ஒட்டினல்போல் வந்து நின்ருள்.

ஹெட் கான்ஸ்டபிளின் மனம் ஒரு கணம் எல்லாவற்றையும் மறந்தது. வெறும் பேச்சிலேயே நினைத்த காரியம் முடியப் போகிறதல்லவா? 'தாதாவைப் போன்ற இளைஞன் இவளுடைய வலையில் விழுவது அதிசயம் ஒன்றும் இல்லை. ஹெட் கான்ஸ்டபிளின் உருகிய மனம் அவர்கள் இருவருடைய தொடர்பில் இருந்திருக்கக்கூடிய அற்புதமான இன்பத்தை ஊகித்துப் பார்த்தது. 'குற்றவாளிக்கு இடம் கொடுத்தவள்' என்று இவளைப் பயமுறுத்தி அலைய வைத்தால், இந்தப் பெண் இன்னும் நெருங்கி வந்தாலும் வரலாம். குற்றவாளியைப் பிடித்துக் கொடுத்த புகழ், பாபு சாஹெப் கொடுக்க இருக்கும் பணம், கைக்கெட்டிய தூரத்தில் நிற்கும் இந்தப் பெண் எல்லாம் அவருக்குச் சொந்தமாகும். ஆனால் அதெல்லாம் 'கைகூட வேண்டும்' என்றால் இன்னும் அதிக அதிகாரத்தைக் காண்பிக்க வேண்டும். 'மனம் இசையாமல் செய்வதற்கெல்லாம் கடமை என்பது பெயர் அல்லவா?'

'குற்றவாளியை வீட்டில் வைத்துக்கொண்டவள்னு தைரியமாச் சொல்லிக்கறே. நாளைக்குக் கைவிலங்கு போட்டு ஸப் இன்ஸ்பெக்டர் முன்னால் போகும்போது சொல்லுவியாம்' என்று ஹெட் கான்ஸ்டபிள் கெடுபிடியாகச் சொல்லி அடக்கமுடியாமல் விஷமச் சிரிப்புச் சிரித்தார்.

''பார், மல்லப் பெரியப்பா! 'அநாதைப் பொணமாப் போற வங்களை வூட்லே வச்சுக் காப்பாத்தினா புண்ணியம் வரும்'னு நீங்களெல்லாம் சொன்னீங்க. இப்போ ஹெட் கான்ஸ்டபிள் சாகெப் 'விலங்கு போடறேன்'னு சொல்றாரு, கேளு!'' என்று சந்திரி அங்கே இருந்தவர்களுள் வயது சென்ற மல்லப்பாவிடம் சொன்னாள்.

'இருக்கட்டும் தங்கச்சி! அதிகாரம் யார் கையிலே இருக்கு? மனசு வந்தா வெலங்கும் போடுவாங்க; இல்லாட்டி உழுத நெலத்தெக்கூடக் குடுத்துடுவாங்க. சிவனை நம்பி மனசை நெம்மதியா வச்சுகிட்டு நடந்தாப் போதும்?' என்று மல்லப்பா தன் அநுபவத்தையே அவளுக்கு ஆறுதலாகச் சொன்னான்.

'ஏ கண்ட்யா! என்னடா பாத்துகிட்டு நிக்கறே? பாதள்ளிக் குற்றவாளியைக் கொணந்து வெளியே தள்ளு' என்று ஹெட் கான்ஸ்டபிள் விரட்டினார்.

'ஐயா, அது ஒரு பேச்சு மட்டும் சொல்லாதீங்க. பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவங்க அவங்க. நான் எப்படிக் கைவச்சு இட்டார முடியும்?' என்று கண்ட்யா அடக்கமே உருவாகப் பதில் சொன்னான்.

'ஸர்தார், அவ்வளவு தூரத்திலே இருந்து குத்தவாளியைத் தேடம்னும்னே வந்திருக்கீங்க. ரெண்டடி வச்சு உள்ளே வாங்க. உங்களுக்கு வேண்டிய குத்தவாளியைக் கூட்டிப் போங்க. நான் வாண்டாம்னு சொன்ளுக் கேளுங்க' என்று தம்பலத்தைத் துப்பிவிட்டுச் சொன்னுள் சந்திரி.

ஹெட் கான்ஸ்டபிளுக்கு இந்தப் பேச்சுச் சரி என்று தோன்றியது. இருந்தாலும் பிகுவை விடாமல், ஏன், '''குற்றவாளியைப் பிடிச்சுகிட்டுப் போகப் பயப்படுவேன்'னு நெனச்சயா என்ன? ஒங்க எல்லாருக்குமே வெலங்கு பூட்டிக் கொண்டு போயிடுவேன். அப்பத்தான் தெரியும்!'' என்று அதட்டிவிட்டு, ஹெட் கான்ஸ்டபிள் போலீஸ்காரர்களுடன் சந்திரம்மாவின் வீட்டுக்குள் புகுந்தார். வெளியே இருந்த ஜனங்கள் ஆவலுடன் காத்துக்கொண்டிருந்தார்கள்.

அந்த வீடே சிறியது. இருந்த இரண்டு அறைகளிலும் தாதாவைக் காணவில்லே. பின்புறம் வாசல் இல்லாததால் அப்படித் தப்பி ஓடியிருக்க முடியாது. சுற்றிலும் காவல் இருந்தது. ஹெட் கான்ஸ்டபிள் ஏமாற்றம் அடைந்தார். சமையல் அறையின் ஒரு மூலேயில் பாயின்மேல் பெண் ஒருத்தி முனகிக்கொண்டு படுத்திருந்தாள். ஹெட் கான்ஸ்டபிளின் கோபத்துக்குப் போக்கு இல்லாததால், 'ஏ பைத்தியக்கார முண்டே! பாதள்ளி தாதா எங்கே இருக்கிறுன்?' என்று அவளேயே கேட்டார்.

'அவளுடைய முக்கலும் முனகலும் குறையவில்லே. ஆண் குரல் கேட்டதும் அது பின்னும் அதிகமாயிற்று.

'யாரது? வெளியே போங்க. முதலில் வெளியே போங்க' என்று நோவு பொறுக்காமல் கத்திஞள்.

ஹெட் கான்ஸ்டபிள் பின்னுலே வந்த சந்திரம்மா அவள் பக்கத்தில் போய் 'ஏனம்மா, ஒனக்கும் இப்பத்தான் இடுப்பு நோவு எடுத்துச்சா?' என்றவள், ஹெட் கான்ஸ்டபிள் பக்கம் திரும்பி, ''இதொ பாருங்க ஸர்தார், 'பாதள்ளிக் குற்ற வாளி'ன்னு சொன்னீங்களே, அது இந்தப் பொண்தான். பிள்ளே நோவு பட்டுகிட்டிருக்கா. கொழந்தை பெத்தப்புறம் கூட்டிப் போறீங்களா? இப்பவே கூட்டிப் போறீங்களா?'' என்று கேட்டாள்.

ஹெட் கான்ஸ்டபிளின் முகம் கறுத்தது. தம் கனவு இவ்வளவு சீக்கிரத்தில் உடைந்துவிடும் என்பதை அவர்

எதிர்பார்க்கவில்லை. அவருக்கு வேண்டியவன் தாதா. இந்தப் பெண்பிள்ளை அல்ல. அந்தக் கணத்தில் சந்திரி கிடக்கட்டும்! உலகமே அவருக்குப் பயனற்றதாகத் தோன்றியது. இனிமேல் வாழ்வதிலோ உத்தியோகம் செய்வதிலோ அர்த்தமில்லை என்று தோன்றியது. ஒன்றும் பேசாமல் ஏமாற்றத்துடன் வெளியே வந்தார்.

இதற்குள் சேரிப் பெரியவர்கள் எல்லோரும் அங்கே கூடிவிட்டனர். அவர்கள் ஹெட் கான்ஸ்டபிளைக் கும்பிட்டு, '' 'சாமி, ஏழைங்களுக்குத் தாயாரும் தகப்பனும் நீங்கதான்! யாரும் திக்கில்லாத ஒரு பொண்ணு அநாதைப் பிணமாகப் போய்விடக் கூடாது' என்று இந்தச் சந்திரம்மா வீட்டுக்குக் கூட்டி வந்தா. இப்ப அந்தப் பெண் பிள்ளை பெத்தா செலவெல்லாம் அந்த ஏழைதான் ஏத்துக்கணும். எங்க ஜாதிப் பொம்பளையானால் அது விஷயம் வேறே. அவங்க உங்களைப் போல ஒசந்த ஜாதியைச் சேந்தவங்க. நாங்க 'ஜாதியைக் கெடுத்திட்டம்'னு நாளைக்கு அவங்க புருசன், அண்ணன் தம்பிங்க வந்து எங்களைத் திட்டக் கூடாதுங்க. அதுக்கு ஒரு வழி சொல்லீட்டுப் போங்க'' என்று அவர் காலில் விழுந்தார்கள்.

ஹெட் கான்ஸ்டபிளுக்கு இதெல்லாம் வேண்டியிருக்க வில்லை. அங்கே நிற்கவே வெறுப்பாக இருந்தது. ஆனால் காலில் விழுந்தவர்களுக்கு ஏதோ ஒரு வழி சொல்லித்தானே ஆகவேண்டும்?

'சாவடிக்குப் போய் யசவந்தராவிடம் இந்தச் சங்கதியைச் சொல்லுங்க. அந்தப் பொம்பளை யாரு, என்ன என்பதெல்லாம் விசாரிச்சு அவர் என்ன சொல்றாரோ அப்படிச் செய்யுங்க' என்று சொல்லிவிட்டு அவர் அங்கிருந்து நடையைக் கட்டினார்.

தாம் போட்ட திட்டம் கெட்டுவிட்டதால் ஹெட் கான்ஸ்டபிள் மிகவும் ஏமாற்றம் அடைந்துவிட்டார். என்றாலும் அவர் கண்ட நிகழ்ச்சிகள் வேறு ஆசைகளைக் கிளப்பிவிட்டன. தாதா அகப்பட்டிருந்தால் அவனை மறைத்த குற்றத்தைக் காட்டிச் சந்திரம்மாவைத் தம் வலையில் பிடித்திருக்கலாம். அது கிடக் கட்டும். 'சந்திரம்மாளின் வீட்டில் இடுப்பு நோவால் வருந்திக் கொண்டிருந்த பெண் யாராக இருக்கலாம்? பாதள்ளிக்கும் அந்தப் பெண்ணின் நடத்தைக்கும் வெளிக்குத் தெரியாத தொடர்பு ஏதோ இருக்கிறது?' என்று நினைத்த ஹெட் கான்ஸ் டபிள் அந்த உண்மையை அறிய விரும்பி, அவர் சங்கரப்பாவின் வீட்டுக்கே போனார்.

'சந்திரம்மா வீட்டில் இப்பொழுது நோவுடன் படுத்திருக்கும் பெண் யார்?' என்பதுதான் அவருடைய முதல் கேள்வி.

சங்கரப்பா தனக்குந் தெரிந்ததைச் சொன்னன். 'முந்தா நா சந்திரம்மா சந்தைக்குப் போயிருந்தாளாம். திரும்பி வரபோது, பொழுது சாஞ்சிடிச்சு. அப்போ இந்தப் பொண்ணை வழிலே பாத்தாளாம். நெறமாசமான அந்தப் பொண்ணைச் சந்திரம்மா எல்லா விவரங்களையும் கேட்டுத் தெரிஞ்சுகிட்டா. அந்தப் பொண் பாதள்ளிக்காரி. அவளுடைய புருசன் அவளை யாரிடமோ விட்டுட்டுப் போயிட்டானும். இப்ப அவளுக்கு யாரும் திக்கில்லே. இதையெல்லாம் கேட்ட சந்திரம்மா மனசு இரங்கித் தன் வீட்டுக்குக் கொண்டுவந்து வச்சுகிட்டிருக்கா. இதெல்லாம் எனக்கு இப்பத்தான் தெரிஞ்சுதுங்க' என்றன் சங்கரப்பா.

ஹெட் கான்ஸ்டபிளின் மனம் இந்தச் செய்தியைக் கேட்டதும் வேருெரு கதையைப் பின்னத் தொடங்கியது. படையாவைப் பயமுறுத்தி அடித்து, கர்ப்பவதியான தன்னுடைய தங்கையை மடத்தில் தாதா விட்டுவிட்டுப் போன செய்தி இன்ஸ்பெக்டர் வாயிலாக அவருக்குத் தெரிந்திருந்தது. 'இந்தப் பெண் தாதாவின் தங்கையாக இருப்பாளோ?' என்று அவர் சந்தேகித்தார். அதனல் 'தாதாவின் தங்கை படையாவின் மடத்தில் இன்னும் இருக்கிருளா?' என்று அவர் சங்கரப்பாவைக் கேட்டார். 'இல்லே' என்று பதில் வந்ததால் அவருடைய சந்தேகம் உறுதிப்பட்டது.

ஹெட் கான்ஸ்டபிள் அங்கிருந்து சாவடிக்குப் போனர். அங்கே சேரி மல்லப்பனேடு ஊர்ப்பிரமுகர்கள் பலரும் காத்துக் கொண்டிருந்தார்கள். ஹெட் கான்ஸ்டபிளைக் கண்டவுடன் மல்லப்பன் அவருக்குக் கும்பிடு போட்டான். ''சாமி, நீங்க சொன்னபடி அந்தப் பொம்பளையைப் பத்தி மணியக்காரரிடம் சொல்லிட்டு வந்தோம். அவர் அவளைத் தங்க வீட்டுக்குக் கூட்டிகிட்டுப் போயிருக்காரு. அவ மணியக்காரரிடம் 'கடபள்ளியைச் சேர்ந்தவள்' என்று சொன்னுள். மணியக்காரர் 'சந்திரம்மாவுக்கு ஒரு நல்ல சேலையா வாங்கிக் கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறேன்' என்று சொன்னர்'' என்று மல்லப்பா செய்தியை எல்லாம் விவரித்தான்.

ஹெட் கான்ஸ்டபிளுக்கு அதற்குமேல் சந்தேகமே இருக்கவில்லை. 'யசவந்தராவைச் சந்தித்து உறுதிப்படுத்திக்கொள்வோம்' என்று எண்ணி, அவர் வீட்டுக்குப்போனர். யசவந்தராவ் மிக மகிழ்ச்சியுடன், 'நீங்கள் நல்ல வேளையில் வந்தீர்கள். தாதா இந்த ஊருக்கு வராவிட்டாலும் அவன் தங்கை வந்திருப்பதைக் கண்டுபிடித்துச் சொன்னீர்கள். அவளுக்குச் சுகப்

பிரசவம் ஆகி ஆண் குழந்தை பிறந்திருக்கிறது' என்று சொன்னார்.

ஹெட் கான்ஸ்டபிள் இந்தச் செய்தியைக் கேட்டுச் சர்க்கரை வழங்கத் தயாராக இல்லை. ஆனால் அவருடைய ஆவல் இன்னும் அதிகமாயிற்று. 'தாதாவின் தங்கை கல்யாணம் ஆகாதவள்' என்பது அவருக்குத் தெரியும். அப்படியானால் ஜனன ரிஜிஸ்தரில் 'குழந்தையின் தகப்பன்' என்று யார் பெயரை எழுதுவார்கள்? அவர் மூக்கைச் சுற்றி வளைத்து யசவந்தராவிடம் இந்தச் சந்தேகத்தை வெளிப்படுத்தினார். யசவந்தராவுக்கு முன்னால் ஒன்று, பின்னால் ஒன்று சொல்லிப் பழக்கம் இல்லை. சிமணாவின் காதலன் தன் மருமகன்தான் என்பதில் அவருக்குச் சந்தேகமே இல்லை. அதனால் பேச்சுவாக்கில் ''அந்தப் பெண், குழந்தையின் தகப்பன் யார்' என்று சொல்லுகிறாளோ அந்தப் பெயரையே எழுதிவிடுவேன். அவள் பாபு சஹேபின் பெயரைச் சொன்னால் அதையே எழுதிவிடுகிறேன்'' என்று சற்று உத்ஸாகமாகவே பதில் சொன்னார்.

ஹெட் கான்ஸ்டபிள் அதற்குமேல் அங்கே நிற்கவில்லை. முதலாவதாகத் 'தாதாவைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். அப்புறம் தாம் கண்டு, கேட்ட நிகழ்ச்சிகளிலிருந்து லாபம் பெற வேண்டும்.' இதனால் அவர் அஜராணியிலிருந்து பாதள்ளிக்குத் திரும்பினார். பாதிராத்திரி நேரத்துக்குப் பாதள்ளியை அடைந்து சாவடிக்குப் போகாமல் படதையாவின் மடத்துக்கே போனார். படதையாவிடம் நடந்த செய்திகளை விவரித்து, கடைசியில் 'நீங்கள் ஒரு பெரிய கண்டத்திலிருந்து தப்பினீர்கள்! தாதாவின் தங்கையைத் தேடுவதற்காக ரொம்பக் கவலைப்பட்டுக்கொண்டிருந்தீர்கள் அல்லவா? இப்பொழுது எனக்குப் பக்ஷீஸ் கொடுக்க வேண்டும்!' என்று சொல்லி அசட்டுச் சிரிப்புச் சிரித்தார்.

படதையாவுக்கு இந்தச் செய்தி ஒன்றும் மகிழ்ச்சியைக் கொடுக்கவில்லை. அவருக்கு வேறொரு கவலை உண்டாயிற்று. ''நான் இருக்குமட்டும் பக்ஷீஸைப்பற்றிய பேச்சே வேண்டாம். ஆனால் தாதாவைப் பிடிக்காவிட்டால் நாம் வாழவே முடியாது! இப்பொ அவனுடைய தங்கச்சி கொழந்தெ பெத்திருக்கிற செய்தி வேறு சொன்னீர்கள். எனக்கு அதுவும் ஒரு கழுத்தறுப்பு. 'அந்தக் கொழந்தையின் தகப்பன் நான்தான்' என்று பெயர் தாக்கல் செய்துவிட்டால், அப்புறம் தாதாவின் அக்கிரமத்துக்கு எல்லையே இருக்காது. அவனைப் பிடித்து ஜெயிலில் போட்டே தீர வேண்டும்!'' என்று கவலையுடன் சொன்னார்.

தாதாவைப் பிடிப்பதைப்பற்றி இருவருமாக வெகு நேரம் பேசினார்கள். தாதா எங்கே ஒளிந்திருந்தாலும் 'தேடிக் கண்டு பிடித்துவிடவேண்டும்' என்று ஹெட் கான்ஸ்டபிள் கங்கணம் கட்டிக்கொண்டார். அதைப் படதையா மேலுக்கு ஒப்புக் கொண்டாலும் அவருடைய செயலில் அவருக்கு நம்பிக்கை இல்லை. அவருடைய சூழ்ச்சியே வேறுவிதமாக இருந்தது. யுகாதி நடந்த பத்தாம் நாள் அநுமாருக்கு மஞ்சள் நீர் உத்ஸவம் நடக்கும். காலராவும் பஞ்சமும் ஊரைத் துடைத்துக்கொண்டு போன பிறகு 'மஞ்சள் நீர் போன்ற திருவிழாக்கள் செய்யவேண்டாம்' என்பது சிலருடைய கருத்து. ஆனால் தெய்வ காரியத்தை நிறுத்தலாமா? அதை மாளிகையைச் சேர்ந்த பாபு சாஹேப் தான் நடத்தவேண்டும். அதன் செலவை ஜாகீர்தார்தான் ஏற்று நடத்துவது ஆண்டுதோறும் நடந்துவந்த சம்பிரதாயம். பாபு சாஹேப் இந்தச் சந்தர்ப்பத்தை நழுவவிடத் தயாராக இல்லை. ஆகையால் மஞ்சள் நீர் உத்ஸவம் நடந்தே தீரும். அதற்கு யசவந்தராவும் வருவார். அவரைப் பார்க்கத் தாதா எங்கிருந்தாலும் அப்போது வந்துவிடுவான். அந்த நாட்களில் பந்தோபஸ்து என்ற பெயரில் ஹெட் கான்ஸ்டபிள் ஊரில் இருந்தால் போதும்!

'படதையா விரித்த வலையில் தாதா நிச்சயமாக வந்து அகப்பட்டுக்கொள்ளுவான்' என்று ஹெட் கான்ஸ்டபிள் நினைத்தார். இதுவரையில் அவர் பட்ட சிரமம், மஞ்சள் நீர் உத்ஸவத்தின் போது அவரால் ஆகவேண்டிய உதவி எல்லாவற்றையும் உத்தேசித்துப் படதையா, பாபு சாஹேபின்மூலம் அவருடைய பையை நிரப்பினார்.

ஹெட் கான்ஸ்டபிள் ஊருக்குப் புறப்படும் முன்பு சொன்ன ஒரு பேச்சு, பாபு சாஹெபின் மூளையைக் குழப்பியது: ''உங்கள் கௌரவம் சிமணாவின் கையில் இருக்கிறது! அவள் 'குழந்தையின் தந்தை' என்று உங்கள் பெயரை ஜனன ரிஜிஸ்தரில் எழுதாமல் பார்த்துக்கொள்ளுங்கள்'' என்று ஜாடையாகச் சொல்லிவிட்டுப் போனார். இந்தக் கவலையால் பாபு சாஹேபுக்குத் தூக்கமே வரவில்லை. சிமணா, தன்மேல் ஆசை வைத்தது நிஜந்தான். தானும் முதன்முதலில் ஆசை காட்டியது நிஜந்தான். ஆனால் படதையா அவசரப்பட்டுவிட்டதால் தன் மனம் பின்வாங்கியதும் இயற்கைதான். படதையா சந்நியாசியாகவே விலகி நின்றுவிட்டான். தான் காமுகனாகவும் சம்சாரியாகவும் இருந்ததால் இந்த விவகாரங்கள் எல்லாம் தன் தலையில் விழுந்தன. தன் அந்தஸ்து, பணம், அழகு, வாழ்க்கை முறை எல்லாம் தனக்கு ஆபத்தாகவே இருக்கின்றன. எவ்வளவுதான் விலகிச் சென்றாலும்

பயன் இல்லை. இது காரணமாகவே நாஞ இறந்தான். புத்லா பாயும் இதனுல்தானே இறந்தாள்? சிமஞ 'இந்தக் குடும்பத்தின் சாபமாகவே உருவெடுத்து வந்திருப்பாளோ?' தன்னையும் சிமஞைவயும் ஒன்று சேர்க்க எந்த விதி துடித்துக்கொண்டிருக் கிறது? இது தெய்வத்தின் பிடிவாதமாகத்தான் இருக்க வேண்டும். பாபு சாஹெபின் வாழ்க்கையின் முன்பகுதியில் இம்மாதிரி நிகழ்ச்சிகள் எவ்வளவோ நடந்திருக்கின்றன! பாதள் ளியின் பெண்கள் பலர் அவன் வலையில் விழுந்திருந்தார்கள். அப்பொழுதெல்லாம் இப்படி விவகாரம் முற்றித் துரத்தவில்லை. சிமஞவின் விஷயத்தில் பாபு சாஹெப் பழிக்குக் காரணமாக இருந்தானே ஒழிய, அவனுக்கு நேரிடையாக இந்த விவகாரத்தில் ஒரு சம்பந்தமும் இல்லை. தாதா, சிமஞைவ மடத்தில் விட்ட பிறகு ஒருவகையாகப் பாபு சாஹெபின் தொடர்பு அற்றுப் போயிற்று. அவள் ஊரை விட்டுப் போனதும் அவன் மனம் அந்தக் கவலையை அறவே விட்டுவிட்டது. தான் அதிலிருந்து தப்பிவிட்டதாகவே நினைத்தான். ஆனுல் சில நாட்களுக்குத்தான் இந்த விடுதலை நினைவு நிலைத்தது. அதிர்ஷ்டம் தனக்குத் தெரி யாமலேயே ரகசியமாக வேறொரு வழியில் திட்டம் இட்டது. இப்போது கண்ணெதிரில் வந்து நிற்கிறது. இதுவரையிலும் வெறும் நினைவாக இருந்தது இப்போது உண்மைச் சங்கதியாகப் பயமுறுத்துகிறது. 'சிமஞ, தன் பெயரைச் சொல்லிவிட்டால்?' சட்ட நோக்கில் அதுவே சத்தியம் ஆகிவிடும். சிமஞ, தன் பெயரைச் சொல்லக்கூடாதென்று ஒன்றும் இல்லை. எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் அவன் சிமஞவுக்குத் தக்க வரன்தான். அதோடு அவள் படதையாவின்மேல் என்றும் ஆசை வைத்ததில்லை. ஒருவேளை அவள் படதையாவின் பெயரைச் சொன்னுல், குழந்தை சந்நியாசியின் மகன் என்ற அவச்சொல் லுக்கு ஆளாக நேரும். ஜனங்களுடைய அபிப்பிராயத்திலும் அவன்தான் சிமஞவின் காதலன். அவ்வளவு தூரம் போவானேன்! சாக்ஷாத் அவனுடைய மாமஞர் யசவந்தராவ் கூட அப்படித்தானே நினைத்துக்கொண்டிருக்கிருர்.

என்னதான் மண்டையை உடைத்துக்கொண்டாலும் பாபு சாஹெபுக்கு வழியே ஒன்றும் புரியவில்லை. யோசிக்க யோசிக்கத் தன் பெயரையே நிச்சயமாகச் சொல்லிவிடுவாள் என்று அவ னுடைய உள் மனம் சொல்லியது. அவஞல் தாங்கமுடியவில்லை. பொழுது விடிந்தவுடனே தனது விசுவாசமுள்ள வேலைக்காரனை அழைத்து அஜராணிக்குப் போய் யசவந்தராவைக் கையோடு அழைத்துவரச் சொன்ஞன். தனக்கு உடம்பு சரியில்லை என்றும் உடனே புறப்பட்டு வரவேண்டும் என்றும் அவனிடம் சொல்லி அனுப்பிஞன்.

பாபு சாஹேபுக்கு உடம்பு சரியில்லை என்ற செய்தியைக் கேட்டவுடன் யசவந்தராவ் பாதள்ளிக்குப் புறப்படத் தயாரானார். புறப்படுவதற்கு முன்பு அவருக்கு என்ன தோன்றியதோ சிமணாவைப் பார்க்கப்போனார்.

சிமணா இன்னும் பிரசவ அறையிலேயே இருந்தாள். யசவந்தராவின் பணிவிபுடைய அன்பான கவனிப்பில் சிமணா சுகமாகவே இருந்தாள். ஆனால் அவளுடைய மனம் துக்கத்தின் பிடியிலிருந்து விடுபடவில்லை.

'பாதள்ளிக்குப் போய் வருகிறேன் சிமணா, ஏதாவது சொல்லி அனுப்புகிறாயா?' என்று யசவந்தராவ் அன்புடன் கேட்டார்.

'யாருக்கு என்ன சொல்லுவது மாமா' என்று சொல்லிய சிமணா, விக்கி விக்கி அழத் தொடங்கினாள். இப்பொழுதெல்லாம் யாராவது அனுதாபத்துடன் பேசினாலே அவளுக்கு அழுகையை அடக்க முடிகிறதில்லை.

'அழாதே தங்கச்சி, முன்னைப்போல் நீ இப்பொழுது அநாதையில்லை. இதை உன் வீட்டைப்போல் நினைத்துக்கொள் என்று பலமுறை சொல்லியிருக்கிறேன். தாதாவுக்கு ஏதாவது சொல்லி அனுப்புவாயோ என்று பார்த்தேன்' என்று யசவந்தராவ் ஆறுதல் சொல்ல முயன்றார்.

'தாதாவின் நினைப்பில் நான் என்றைக்கோ இறந்து விட்டேன், மாமா. அவனுக்கு இன்னும் என்மேல் இருக்கும் கோபம் குறையவில்லை. அவன் முகத்தில் விழிக்க முடியாத இந்தப் பாவி ஜன்மத்தை எப்படிக் கழிப்பேன், மாமா? இனிமேல் நான் உசிரோடு இருப்பதில் அர்த்தமில்லை. நான் செத்து விட்டேன் என்று அவன் நினைத்தாலும் இந்தக் குழந்தை அவனுக்கு மருமகன். தாய் செத்தாலும் தாய் மாமன் இருக்கணும்னு சொல்லுவாங்க. இந்தக் குழந்தையை எடுத்துக் காப்பாத்தணும்னு அவனிடம் சொல்லுங்க' என்றாள் சிமணா.

'உன் குழந்தையைக் காப்பாத்த தாதா எதற்குச் சிமணா? குழந்தையின் தகப்பன் கட்டாயம் காப்பாத்துவான். நீ யாருடைய பெயரைச் சொல்லுகிறாயோ அதையே குழந்தையின் தகப்பன் பெயராக எழுதுகிறேன்' என்றார் யசவந்தராவ்.

'நிசமாவே குழந்தையோட தகப்பனார் பெயரை எழுதுவீங்களா, மாமா' என்று கேட்ட சிமணாவின் குரலில் நூறு ஆசைகள் உற்சாகமாய்த் தலை தூக்கின.

'ஆமாந் தங்கச்சி! நீ பாபு சாஹேபின் பெயரைச் சொன்னாலும் எழுதுகிறேன். சரிதானே' என்றார் அவர்.

யசவந்தராவின் அபயந் தரும் இந்த ஆறுதலுக்குச் சிமணாவின் துக்கம் அடங்காமல் பொங்கியது. அவரிடம் என்ன சொல்லுவது? தாதாவிடம் அவள் உண்மையைச் சொல்லியிருந்தாள். அவனும் அதை நம்பினான். இப்பொழுது பாபு சாஹேபின் பெயரைச் சொல்ல முடியுமா? குழந்தையின் வருங்காலத்திற்கு அது ஆதரவாயிருக்கும். பாபு சாஹேபின் சொத்துக்குத் தன் மகன் அனந்தர வாரிசாக வந்தால் நல்லது தானே? ஆனால்...ஆனால்... சிமணாவால் இந்த மனப் போராட்டத்தைத் தவிர்க்க முடியவில்லை. செய்த பாவம் வரலாறாகி ஒவ்வொரு கணமும் அவளுடைய துக்கத்தைத் தூண்டிக் கொண்டே இருந்தது. ஊற்று நீரைப் போல அந்தத் துக்கம் அட்சயமாய் இருந்தது.

சிமணா ஒன்றும் பேசவில்லை. கண்ணீர் விட்டுக்கொண்டு முகத்தை மூடியவண்ணம் கயிற்றுக் கட்டிலின்மேல் பொத்தென்று விழுந்துவிட்டாள். விழுந்த வேகத்தில் இதுவரையிலும் சுகமாகத் தூங்கிக்கொண்டிருந்த குழந்தை விழித்துக்கொண்டு 'வீல் வீல்' என்று கத்தத் தொடங்கியது.

யசவந்தராவ் அங்கே நிற்காமல் புறப்பட்டுப் போய் விட்டார்.

## 21

யசவந்தராவ் பாதள்ளிக்கு வந்தபோது பாபு சாஹேப், படதையா, லிங்கப்பா இந்தத் திரிமூர்த்திகளும் சேர்ந்தே அவரை எதிர்கொண்டார்கள். யசவந்தராவுக்கு அவர்களைப் பார்த்தவுடன் மனத்தில் ஏதோ உறுத்தியது. கூடியமட்டும் முகபாவத்தைக் கசப்பாக்கிக்கொண்டு, 'உடம்பு சரியில்லேன்னு சொல்லி அனுப்பியிருக்கே? இந்தக் காற்றில் ஏன் வந்தாய்?' என்று தம் மாப்பிள்ளையைப் பார்த்துக் கேட்டார்.

பாபு சாஹேப் முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு பேசாமல் நின்றான். அப்போது படதையாதான் பாபு சாஹேபுக்காகப் பரிந்து பேசவேண்டியிருந்தது. 'மஞ்ச நீர்

உத்ஸவத்துக்கு நீங்க கட்டாயம் வரணும்னு ஜாகீர்தாருக்கு ஆசை. அதைச் சொல்லி அனுப்பினல் நீங்க வருவீங்களோ மாட்டீங்களோன்னு இப்படிச் சொல்லி அனுப்பியிருக்கிருர்' என்று சிரித்துக்கொண்டே சொல்லிப் பிரச்சினையின் கடுமையைக் குறைக்க முயன்ருர்.

''மாருதி தேவனின் உத்ஸவத்தைத் தலைமுறை தலைமுறையாக ஜாகீர்தார் குடும்பமே நடத்திவருகிறது. ஒவ்வொரு வருஷமும் நான் வருகிறேன், போகிறேன். அப்படியிருக்க 'சாமி உத்ஸவம்' என்று சொல்லி அனுப்பினல் வரமாட்டேனு? சரிதான் உங்க மனசுக்குத் தோணினபடி பண்ணுங்க'' என்று துரும்பை முறித்துப் போட்டாற்போல் சொல்லி யசவந்தராவ் குதிரைமேல் இருந்து இறங்கினர்.

யசவந்தராவ், பாதள்ளிக்கு வந்து மூன்று நாட்கள் ஆகியும் தாதாவின் இருப்பிடமே தெரியவில்லை. லக்ஷ்மணனுக்கும் அவன் இருப்பிடம் தெரியவில்லை. போன தடவை அவர் பாதள்ளிக்கு வந்துவிட்டுப் போனதிலிருந்து அங்கே நடந்த நிகழ்ச்சிகள் அவருக்கு வேறு வேறு ஆட்கள்மூலம் தெரியவந்தன. ஆனல் முக்கியமாக அவர் மனத்தை அரித்துக்கொண்டிருந்த விஷயம், கௌடர் குடும்ப வாரிசு விவகாரந்தான். யசவந்தராவ் பாளாச்சாரின் வீட்டுக்குப் போன பின்னும் இதே கவலைதான்.

சங்கரப்ப கௌடர் இறந்தபோது யசவந்தராவும் அங்கே இருந்தார். 'மணியக்காரரர் குடும்பம் நீண்டகாலம் வாழ வேண்டும்' என்று விரும்பியவர்களுள் அவரும் ஒருவர். அந்தக் குடும்ப கௌரவத்தைக் காக்கும் நியாயமான பொறுப்பில் அவருக்கும் பங்கு உண்டு. அப்படியிருக்கத் தம் ஊர்க்காரனே ஆன சங்கரப்பாவின் மகன் லிங்கப்பா, இப்போது 'கௌடருடைய மகன்' என்று சொல்லிக்கொண்டு வாரிசாக முயல்கிறுன் என்று கேட்டதும் அவருக்கு அது தவருகத் தோன்றியது. தம்முடைய மாப்பிள்ளை பாபு சாஹேபும் அதில் ஏன் பங்கெடுத்துக்கொள்ளவேண்டும்? முதல் விஷயம்: பாபு சாஹேப் பாதள்ளிக்கு வந்ததே அவருக்கு இஷ்டம் இல்லை. வந்த பின்னும் தன்னுடைய ஸ்தானத்தை அறிந்து நடந்துகொள்ளாமல் ஊரின் அமைதியைக் கெடுப்பதிலேயே ஈடுபட்டிருக்கிறுன். புத்லாபாய் இறந்ததுமே அவன் தன் சொந்த ஊருக்குத் திரும்பிப் போயிருக்கவேண்டும். அதற்காகத் தாமே நேரில் இந்துபுரத்துக்குப் போய் லக்ஷ்மிபாயைப் பாதள்ளிக்கு வரும்படி அழைக்கவும் அவர் தயங்கவில்லை. அதற்குத் தாம் தயாராக இருப்பதாகப் பாளாச்சாரிடம் தெளிவாகச் சொல்லி

யிருந்தார். அதைத் தவிர, சிமஞ்வின் விஷயமாகவும் யோசிக்க வேண்டியிருந்தது.

''சிமஞ சம்மதித்தால் 'குழந்தையின் தந்தை பாபு' என்றே எழுதி, நானே அந்தக் குழந்தையை வளர்க்க நினைத்தேன். அந்தச் சிறுவன் பாபுவின் வாரிசாவான். ஆனால் என்ன செய்வது? அந்தப் பைத்தியக்காரப் பெண் ஒருவழிக்கும் போக விடமாட்டேங்கரு. 'குழந்தையோட தகப்பன் யார்? சொல்லு' என்று கேட்டதற்கு வாயே திறக்கவில்லை. எதைக் கேட்டாலும் பொலபொலவென்று கண்ணீரைக் கொட்டுகிருள்'' என்று தம்முடைய பிரச்சினையைப் பாளாச்சார் முன் வைத்தார்.

பாளாச்சாருக்கு இந்தப் பிரச்னையின் உள்நோக்கம் புரிந்தது. 'குழந்தையின் தந்தை, பாபு சாஹேப் அல்ல' என்பது தாதாவின் மூலம் அவருக்கும் தெரிந்திருந்தது. விஷயமெல்லாம் கேட்ட பின், 'யார் பாபத்தை யார் தலையில் கட்டுவது? அது தெய்வம் மெச்சும் செயல் அல்ல! மணியக்காரரே! குழந்தையின் தந்தை படதையாவாக இருக்கும்போது பாபு சாஹேபின் பெயரை அந்தப் பெண் எப்படிச் சொல்லும்?' என்று யசவந்தராவிடம் பாளாச்சார் உண்மையை எடுத்துக் காட்டினர்.

யசவந்தராவ் ஏமாற்றத்தால் ஒன்றும் பேசவில்லை. சிறிது நேரம் தரையைப் பார்த்தபடி பேசாமல் இருந்தார். ''என் யோசனையே வேருக இருந்தது ஆச்சார். 'சிமஞவுக்குக் கலியாணம் செய்து வீட்டில் விளக்கேற்றும்படி செய்ய வேண்டும்' என்று என் மகள் எப்போதும் சொல்லிக்கொண்டிருந்தாள். நாஞ இறந்தபின் அந்தப் பேச்சுக்கே இடமில்லாமல் போய்விட்டது. தாதா குழப்பம் செய்து சிமஞவை மடத்தில் கொண்டுபோய் விட்டிருக்காவிட்டால் பாபுவிடம் சொல்லிக் கல்யாணம் செய்து வைத்திருக்கலாம். சிமஞவின் நிலைமையை நீங்கள் பார்க்கவில்லை, ஆச்சார். சாக முடியாமல் உயிரை வைத்துக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது. அவளை நான் என் பெண்ணுகவே நினைக்கிறேன். 'அவளுடைய மகன், பாபுவின் வாரிசாக வேண்டும்' என்பது என் ஆசை. கடைசியில் தத்து எடுத்துக்கொண்டாலும் பரவாயில்லை. அந்தக் குழந்தைக்கு ஒரு நல்ல வழி செய்யவேண்டும். அதற்காகத்தான் 'பாபுவின் பெயரை எழுதலாம்' என்று நான் சொன்னேன்'' என்று யசவந்தராவ் மனப்பூர்வமாகத் தம் அபிப்பிராயத்தைச் சொன்னர்.

மணியக்காரருடைய உதார குணத்தைக் கண்டு பாளாச் சாரின் மனம் உருகியது. மனிதத்தன்மை மிக்க, இந்தக் காரண

மற்ற கருணையை என்னவென்று சொல்வது? 'பாதள்ளியில் நடந்த ஒரே ஒரு சம்பவம் எத்தனை மனிதர்களைச் சுற்றிவளைத்துக் கொண்டிருக்கிறது?' என்று நினைத்தார் அவர்.

'சிமனு எப்படிச் சொல்கிறுளோ அப்படி நடப்பதுதான் நியாயம். அவள் யார் பெயரைச் சொல்லுகிறுளோ அதைப் பதிவதுதான் கிரமம். அந்தக் குழந்தையின் வருங்காலத்தைப் பற்றி நீங்கள் கவலை எடுத்துக்கொள்வதில் ஒன்றும் தவறில்லை மணியக்காரரே! ஆனல் உங்களால் எவ்வளவு செய்ய முடியும்? உண்மையான பொறுப்புப் பகவானுடையது. அவனே அந்தக் குழந்தைக்கு நிச்சயமாக நன்மை செய்வான். இந்த எண்ணம் உங்களுக்கு இருக்கட்டும், அதுபோதும்!' என்று பாளாச்சார் இந்தச் சர்ச்சைக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தார்.

இந்த வருஷத்து மஞ்சள் நீர் உத்ஸவத்துக்கு ஊரின் சூழ்நிலை சரியாக இல்லை. பஞ்சத்தால் சாப்பிடக் கஞ்சி இல்லாதபோது வீட்டுக்கு உத்ஸவம் பார்த்து நண்பர்களும் உறவினர்களும் வந்தால் அவர்களுக்கு எப்படிச் சாப்பாடு போடுவது? காலரா வினல் பலர், தம் குழந்தை குட்டிகளைச் சாகக் கொடுத்திருந்த தால் அவர்களுக்குத் திருவிழாவில் உத்ஸாகம் இல்லை. ஊருக்கே ஆதார ஸ்தம்பம்போல் உயர்ந்திருந்த கௌடர் இறந்ததால் பொது விழாக்கள் கேட்பார் இல்லாமல் நின்றுவிட்டன. ஜாகீர் தார் மாளிகையும் சூனியமாகிவிட்டது. பாபு சாஹேப் எட்டுக் கரணம் போட்டாலும் ஜாகீர்தார் ஆக முடியாது. அதனல் ஊர்க் கூலிக்காரர்களும் குடியானவர்களும் படதையாவிடம் போய் 'இந்த வருஷம் மஞ்சள் நீர் உத்ஸவம் செய்யவேண்டாம்' என்று சொல்லிவிட்டு வந்தார்கள். பாளாச்சாரிடமும் அதையே சொன் ஞர்கள். ஆனல், 'சுவாமி காரியம், செய்யவேண்டாம்' என்று சொல்வதற்கு அவருக்கு வாய் எழும்பவில்லை. 'சுவாமிக்கு மனம் இருந்தால் அவரே நடத்திக்கொள்வார்' என்று அவர் மதில்மேல் பூனைபோல் பதில் சொல்லிவிட்டார்.

பாளாச்சாரின் ஜோஸ்யம் ஒருவகையில் பலித்துவிட்டது. 'அநுமார் உத்ஸவம் என்றைக்கும் நின்றதில்லை. நிற்கவும் நிற்காது' என்னும் அவருடைய எண்ணத்தைக் கடவுளே நிறைவேற்றி வைத்தாரோ என்னவோ? யாருக்குத் தெரியும். பாதள்ளியின் மக்கள் எல்லோரும் சேர்ந்து அரசாங்கத்துக்குப் பஞ்ச நிவாரணத்துக்காக விண்ணப்பம் போட்டிருந்தார்கள். இந்தச் சமயத்தில் சர்க்கார் பாதள்ளி மக்களுக்கெல்லாம் பஞ்ச நிவாரணக் கடனுக ரூ. 5000 உதவியிருந்தார்கள். அதுவும் இதே சமயத்துக்கு வந்தது. 'சுவாமியின் அருள்; பாளாச்சாரின்

ஜோசியத்தின் பலன்' என்று ஜனங்கள் நம்பினார்கள். கையில் பணம் வந்துவிட்டதால் வழக்கம்போல் திருவிழாவின் அங்கமாக விளையாட்டு, குஸ்தி எல்லாம் நடத்தவேண்டும் என்று ஜனங்கள் திட்டமிட்டார்கள். 'மஞ்சள்நீர் உத்ஸவம் முடியாமல் ஊருக்குப் போகக் கூடாது' என்று ஜனங்கள் யசவந்தராவை வேண்டிக் கொண்டார்கள்.

எப்படியோ ஆஞ்சனேயர் உத்ஸவம் வழக்கம்போல் விமரிசையாக நடந்தது. சுவாமி தாமாகவே ஏற்பாடு செய்து கொண்ட உத்ஸவம் என்றால் கேட்க வேண்டுமா? பாபு சாஹேப் வழக்கம்போல் பிராம்மண போஜனத்துக்கு ஏற்பாடு செய்தான். அநுமார் கோயிலுக்கு முன் இருந்த இரண்டாள் ஆழம் உள்ள பள்ளத்தில், புலிவேட்டைக்காரர்கள், தண்ணீரைக் கொண்டு வந்து நிரப்பினார்கள். இதற்குமேல் ஜலயுத்தம் (நீர்ப் போராட்டம்) தொடங்கவேண்டும் மற்போட்டிக்காரர்கள் லங்கோடு அணிந்து தண்ணீரில் விழச் சித்தமானார்கள். அதற்குள் பறைச்சேரியிலிருந்து தாளம் தப்பட்டைகளுடன் விலைமாதர்களை அழைத்துக்கொண்டு வந்தார்கள். மல்லர்கள் பள்ளத்தில் நிரப்பிய நீரைத் தம் வேஷ்டியில் மூட்டைபோல் நிரப்பிக் கொண்டு வேசிப் பெண்கள்மேல் வீசிக் கொட்டினார்கள். அந்தத் தண்ணீரின் அடியிலிருந்து விலகிக்கொள்ளச் சேரிப் பெண்கள் மீன் மிலாறுகளை உபயோகித்தனர். முள் நிறைந்த கொம்புகளைச் சேரி வேசிகள் விசிறி அடிக்கும்போது அது மல்லர்களின் உடம்பைக் கீறிப் பீறிட்ட இரத்தத்தால் பள்ளத்தின் தண்ணீர் அங்கங்கே சிவப்பாயிற்று. ஆனால் மல்லர்கள் அதை உணரவே யில்லை. மேலும் ஆவேசம் கொண்டு தண்ணீரை வேஷ்டியில் நிரப்பிக்கொண்டு வேகமாக அடி படும்படி அவர்கள்மீது வீசினார்கள். கோட்டையின் முன்புறம் நடந்த இந்த வேடிக்கையைப் பார்க்கப் பள்ளத்தைச் சுற்றிலும் பாதள்ளி மக்கள் எல்லோரும் கூடியிருந்தார்கள், எல்லோருக்கும் வீராவேசம் நிறைந்திருந்தது. எங்கே பார்த்தாலும் ஒரே கூச்சல். பள்ளமும் அதைச் சூழ்ந்த இடமும் கிடுகிடுத்தன. கிட்டத்தட்ட அது ஒரு போர்க்களம்போல் இருந்தது. புடைவையும் உடம்பும் நனைந்து தெப்பமாகிவிட்டபோதிலும் பெண்கள் தண்ணீரால் அடிவாங்கத் தயங்கவில்லை. மல்லர்களோ ஒவ்வொருதரம் முள்ளால் அடிவாங்கும்போதும் குதித்துக் கும்மாளம் இட்டு மேன்மேலும் தண்ணீரால் அடித்துக்கொண்டிருந்தார்கள்.

கோட்டைக்கு முன் உள்ள மைதானம், சுற்றிலும் உள்ள வீட்டுத் திண்ணைகள், மாடிகள் எங்கே பார்த்தாலும் ஒரே கூட்டம். எல்லோரும் பள்ளத்தையே பார்த்துக்கொண்டிருந்

தார்கள். புதுச் சேலேகளே உடுத்திய பெண்களும் புதிசு இல்லா விட்டாலும் புதிசுபோல் தோன்றும் தலேப்பாகைகளே அணிந்த ஆண்களும் வரிசையாக நீர் விளேயாட்டைப் பார்த்துக் கொண்டிருந்தனர். நீர் வீச்சின் அடியையும், முள் வீச்சின் அடியையும், அதனுல் பீரிடும் ரத்தத்தையும் பார்த்த பெண்கள் கலங்கினுலும் வேடிக்கை பார்ப்பதை விடவில்லே. ஜனங்கள் எல்லோரும் இந்தக் காட்சியில் மெய்மறந்திருந்தபோது, ஹெட் கான்ஸ்டபிளும் அவருடைய ஆட்களும் தாதாவைத் தேட அங்கும் இங்கும் ஓடிக்கொண்டிருந்தார்கள். ஆனுல் தாதா கிடைக்கவில்லே. உத்ஸவ நேரத்தில் பாதள்ளியின் எல்லா வீடுகளும் பூட்டப்பட்டிருந்தன. விழாவைப் பார்க்க, தாதா தவருமல் வருவான் என்று சொன்ன படதையாவின் ஊகம் பொய்யாகிவிட்டது. ஊர்க்காரர் எல்லோரும் வேண்டாம் என்று தடுத்தபோதிலும் தாதாவை வரவழைப்பதற்காகவே நீர் விளேயாட்டை ஏற்படுத்திய படதையாவுக்கு ஏமாற்றம் ஏற்பட்டது.

மறுநாள் வழுக்குமரம் ஏறல். சாவடிக்கு முன் இருந்த வெட்ட வெளியில், சுமார் நாற்பது நாற்பத்தைந்து அடி உயரம் உள்ள கம்பம் ஒன்றை நட்டார்கள். அந்தக் கம்பத்தின் உச்சியில் வண்ண வண்ணக் காகிதங்களால் அலங்கரிக்கப்பெற்ற தொட்டிலில் 'படிகேர' ராமண்ணு உட்கார்ந்து, கம்பத்தின்மேல் புளியம் விதையால் தயாரித்த கோந்தை வழியவிட்டுக் கொண்டிருந்தான். தலேயாரி மல்லன், கம்பத்தில் ஏணியைச் சார்த்தி நின்று, அந்தப் பசையைக் கம்பத்தில் ஒழுங்காகத் தடவினுன். கம்பத்தைத் தொட்டாலே கை வழுக்கியது. பிறகு புலிவேட்டைக்காரர்களுள் திறமைசாலிகளான இளேஞர்கள் லங்கோடு அணிந்து கம்பத்தைச் சுற்றிலும் கொட்டியிருந்த சேற்றைக் கடந்து கம்பத்தில் ஏற முயன்றுகொண்டிருந்தார்கள். சுற்றி நின்றவர்கள் பீச்சாங்குழலால் தண்ணீரை அடித்துக் கம்பம் அதிகமாக வழுக்கும்படி செய்தார்கள். கம்பத்தின் அடியில் நின்ற இளேஞனுடைய தோளில் ஏறி மேலே மேலே சென்று ஏழெட்டுப் பேர் நின்ருர்கள். இன்னும் இரண்டு பேர் ஏறினுல் தொட்டிலே எட்டிவிடலாம். கம்பம் ஒவ்வொரு கணமும் வழுக்கிக்கொண்டிருந்தது. சுற்றியிருந்தவர்கள் பீச்சாங்குழலால் தண்ணீரை அடித்துக்கொண்டே யிருந்தார்கள். அதோடு தொட்டிலில் இருந்த பாலும் தயிரும் ஓயாமல் வழிந்துகொண்டே இருந்தது. தரையில் நின்றவன், தன்மேல் நின்ற ஆட்களின் பாரத்தால் தத்தளித்தான். மேலே நின்றவர்கள் நிலேதடுமாறி ஞர்கள். கீழே நின்றவர்களுக்குப் பாரம் தாக்கக்கூடாது என்று

மேலே இருப்பவர்கள் கம்பத்தைப் பிடித்தார்கள். கம்பம் வழுக்கவே மறுபடியும் எல்லோரும் நிலைதடுமாறித் தொடர்பு அறுந்து தரைச் சேற்றில் விழுந்தார்கள். தூரத்தில் இருந்து பார்ப்பவர்களுக்குக் கம்பமே விழுவதுபோல் தோன்றியது. விழுந்தவர்கள் மறுபடியும் ஏறினார்கள்; மறுபடி விழுந்தார்கள். இப்படி ஐந்தாறு தடவை விழுந்து எழுந்த பிறகு கடைசியாகத் தொட்டில் கைக்கெட்டியது. தாரை முழங்கியது. ஜனங்கள் எல்லோரும் உத்ஸாகத்தால் கத்தினார்கள்.

நீர் விளையாட்டுக்கு வந்ததுபோல் வழுக்கு மரத்துக்கும் ஊர் ஜனங்கள் எல்லோரும் வந்திருந்தார்கள். ஆனால் தாதா மட்டும் ஹெட் கான்ஸ்டபிளின் கண்ணில் படவில்லை. 'வழுக்குமரத்துக்கு வராவிட்டாலும் குஸ்தியைப் பார்க்கத் தாதா, கோதாவுக்கு வந்தே தீருவான்' என்று படையாட்சி சவால் விடுத்தார். அது பொய்க்கவில்லை.

கௌடர் வீட்டில் தாதா ஒளிந்திருந்தான். 'குஸ்தியில் தன் நண்பர்கள் எதிரிகளைத் தோற்கடிக்க, தான் பக்கத்திலிருந்து உத்ஸாகம் கொடுக்க வேண்டும்' என்று தாதா தீர்மானித்தான். இதைக் கேட்ட பார்வதி, 'மறக்காதேடாப்பா மகாராஜா! உன்னைப் பிடிக்கப் போலீஸார் பதுங்கிக் காத்திருக்காங்க' என்று எச்சரித்தாள்.

''அம்மா! இத்தினி நாளும் இருட்டறையிலே இருந்து 'போதும் போதும்' என்று ஆகிவிட்டது. இதைவிட ஜெயிலே மேல். 'ஒங்க பேச்சை மீறக்கூடாது' என்று நீர் விளையாட்டுக்குப் போகவில்லை. குஸ்தியைப் பார்க்க நான் போகத்தான் வேணும்'' என்று பிடிவாதமாகச் சொன்னான். பார்வதி எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். தாதாவின் மனத்தைத் திருப்ப முடியவில்லை. வேறு வழியில்லாமல் அனுப்பவேண்டியதாயிற்று.

தாதா பெரிய கம்பளி ஒன்றைப் போர்த்துக்கொண்டு அடையாளம் தெரியாதபடி கும்பலில் வந்து உட்கார்ந்து கொண்டான். தலையில் சுற்றிய கிழிந்த தலைப்பாகை, பக்கப் பை வைத்த தொளதொளத்த அங்கி, செயற்கையான புஸ்தி மீசை. இந்த அலங்காரத்தில் பக்கத்தில் உட்கார்ந்திருந்த அவன் நண்பர்களுக்கே தாதாவைத் தெரியவில்லை.

குஸ்தி தொடங்கியது. முதல் போட்டியில் பாதள்ளியின் மூன்று மல்லர்களுடன் படகுத் துறையைச் சேர்ந்த ஒருவன், கொல்லாபுரத்தான் ஒருவன், பக்கத்துக் கிராமத்தான் ஒருவன் ஆக மூன்று போட்டியாளர்கள் கோதாவில் இறங்கினார்கள். குஸ்தி நடந்தது. இரண்டு பாதள்ளி மல்லர்கள் தோற்றார்கள்.

பொழுது சாயும்போது ஏழெட்டுச் சுற்று முடிந்துவிட்டது. கடைசியாக ஒரு மல்லன் எழுந்து வந்தான். அவன் பாதள்ளிக் கோதாவில் மூன்று மல்லர்களை வீழ்த்தியிருந்தான். அவனோடு வேறொருவன் வந்து நின்று அந்த மல்லனைக் காண்பித்து ஜனங்களிடம், ''இந்த மல்லனுக்கு ஜோடியாகக் குஸ்திபோடத் தைரியம் உள்ளவங்க முன்னே வாங்கப்பா! இல்லாட்டி இவன் 'பாதள்ளியை ஜயித்தவன்' என்று கொம்பை ஊதுவோம்'' என்று சவால் விட்டான்.

களத்தில் முணுமுணுப்புத் தொடங்கியது. பாதள்ளி மல்லர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள். அவர்கள் எல்லோருடைய மனத்திலும் ஒரே யோசனைதான். 'தாதா இருந்திருந்தால் இந்த நிலை வருமா?' என்பதுதான் அது. 'இப்பொழுது சவால்விட்ட மல்லனைத் தோற்கடிக்க நமக்குத் திறமை போதாது. வீணாகப் போட்டியிட்டுத் தோற்றுப் போவதில் அர்த்தமில்லை' என்று நினைத்தார்கள்.

சூரியன் மலைவாயில் விழத் தயங்கிக்கொண்டிருந்தான். ஜனங்களும் மல்லர்களும் உத்ஸாகம் இன்றி இருந்தார்கள். நீண்டு கவிந்த நிழல்களில் ஜனங்கள் ஒருவரை ஒருவர் பார்த்த வண்ணம் கவலையில் ஆழ்ந்திருந்தார்கள். கோதாவில் நின்ற மல்லன் சிறிது நேரம் காத்திருந்துவிட்டு 'யாரும் வரவில்லை. பாதள்ளியை வெற்றிகொண்ட வீரனுக்கு' என்று சொல்லித் தாரை ஊதுபவனுக்கு ஜாடை காட்டினான். அவன் தாரையை வாயில் வைத்துக்கொண்டு ஆகாயத்தை நோக்கினான். திடீரென்று அவன் பின்னால் யாரோ வந்து அவன் கையில் அடித்துத் தாரையைப் பிடுங்கி எறிந்தார்கள். முன்னேறிவந்த அந்த ஆள் தோளைத்தட்டி நின்றான். சவால்விட்ட மல்லனும் தோள்தட்டி முன்வந்தான்.

ஜனங்களுடைய பார்வையெல்லாம் புதிதாக வந்த ஆளின் மேல் விழுந்தது. அவன் தலையிலிருந்த கூடைபோன்ற தலைப் பாகையையும் தொளதொளத்த சட்டையையும் மீசையையும் எடுத்து எறிந்துவிட்டான். அரைக் கணத்தில் ஜனங்கள் எல்லோரும், 'தாதா, தாதா!' என்று கத்தினார்கள். பின்னால் நின்றவர்கள் முன்னால் தள்ளிக்கொண்டுவந்து குஸ்தியைப் பார்க்க ஆவல் கொண்டார்கள். இப்படி முண்டியடித்துக் கொண்டு வந்தவர்களைத் தன் கைத்தடியால் அடித்து விலக்கி ஹெட் கான்ஸ்டபிள் கோதாவுக்குப் பக்கத்தில் வந்தார். அவர் பார்த்துக்கொண்டிருக்கும்போதே, தாதா, கண்மூடித் திறப் பதற்குள் அந்த மல்லனைத் தூக்கி நிலத்தில் அடித்தான். மல்லாந்து விழுந்த அவன் சமாளித்து எழுந்திருப்பதற்குள் தாதா

கோதாவில் இருந்து எகிறிக் குதித்துக் கூட்டத்தில் புகுந்து மாயமாக மறைந்தான். ஹெட் கான்ஸ்டபிள், 'தாதாவைப் பிடியுங்கடா!' என்று கத்தினர். தாதாவின் நண்பர்கள், அவனைப் பார்த்துப் பேச விரும்பினர்கள். ஆனல் மாலையின் மங்கிய ஒளி, ஜனங்களின் சந்தடி, பரபரத்த நடமாட்டம் இவற்றுக்கு நடுவில், பார்த்துக்கொண்டிருக்கும்போதே தாதா மறைந்துவிட்டான். 'தாதா எங்கே? தாதா எங்கே?' என்று எல்லோரும் கேட்பதுதான் காதில் விழுந்தது. அங்கும் இங்குமாகத் துள்ளிய மீன் சந்தடிக்குப் பயந்து நடு நீருக்குப்போய் விடுவதுபோல் தாதா யார் கையிலும் அகப்படாமல் மறைந்து விட்டான்.

'தாதா போர்த்திருந்த கம்பளியும் போட்டிருந்த சட்டையும் இறந்துபோன சங்கரப்ப கௌடருடையவை' என்று உளவறிந்தார்கள். 'தாதா கௌடரின் வீட்டில் இருந்துதான் குஸ்திக் களத்துக்கு வந்திருப்பான்' என்று தீர்மானித்து ஹெட் கான்ஸ்டபிள் கௌடர் வீட்டை நோக்கி வேகமாக நடந்தார்.

கௌடர் வீட்டு அறைகள், களஞ்சியம், மாடி, மாட்டுக் கொட்டகை, சந்து, பொந்து ஒன்றுவிடாமல் எல்லா இடங்களையும் தீவட்டி வைத்துக்கொண்டு தேடினர்கள்; தாதா அகப்படவில்லை. ஹெட் கான்ஸ்டபிளைத் திகில் பிடித்துக் கொண்டது. பித்துப் பிடித்தவர்போல் ஆனர். மாட்டுக் கொட்டகையிலிருந்த மாடு மேய்க்கும் பையன் ஒருவனின் கன்னத்தில் அறைந்து, 'தாதா எங்கேடா இருக்கான்?' என்று கர்ஜித்தார். காதை 'நொய்'யென்று அடைத்த அந்த அடிக்குத் தடுமாறிய பையன் பயந்து, 'இங்கே இல்லீங்க ஐயா!' என்று பதில் சொல்லிவிட்டு, 'அப்பா, செத்தேன்!' என்று பெருங்குரல் எடுத்து அழத் தொடங்கினன். ஹெட் கான்ஸ்டபிள் அவனை அதட்டி வாயை மூடவைத்தார். சிறுவன் விக்கி விக்கி அழுதான். அவர் மேலும் அவனுக்கு ஓர் அடி கொடுத்து, 'அப்படியானு அவன் எங்கடா போனன்?' என்று மறுபடியும் கேட்டார். ''அடிக்காதீங்க சாமி! உண்மையைச் சொல்றேன். நான் குஸ்திப் பாத்தூட்டு வந்து மாட்டுக்குத் தண்ணி காட்றபோது தாதா வாசலுக்கு வந்தானுங்க. தெருவாசலெப் பூட்டிகிட்டுக் குஸ்தி பாக்கப்போன வீட்டு ஆள்கள்ளாம் அப்ப வல்லீங்க. அவன் கொல்லைக் கதவுப்பக்கம் வறத்துக்கும் நான் மாட்டை ஓட்டிகிட்டுக் கதவைப் பூட்றத்துக்கும் சரியா இருந்திச்சுங்க. 'கதவைத் தெறன்னு' அவன் சொன்னன். 'வாணு, வூட்லே யாரும் இல்லாதப்பொ உன்னை உள்ளே விடமாட்டேன்'னு நான் சொல்லிட்டேனுங்க. அவன் என்னை

அவசரமா தாண்டிகிட்டு ஆச்சாரையா வீட்டுச் சந்துப்பக்கமாப் போனுனுங்க'' இப்படி விக்கல், அழுகை, முனகல் இவைகளுக்கு இடையே நிறுத்தி நிறுத்திச் சிறுவன் விஷயத்தைச் சொன்னுன். பயத்தால் வெடவெடவென்று நடுங்கிக்கொண்டிருந்தான்.

ஆச்சார் வீட்டுச் சந்துப் பக்கமாக ஹெட் கான்ஸ்டபிள் தீவட்டிகளைத் திருப்பினர். அந்தச் சந்தில் ஆச்சார் ஒருவருடைய வீடுதான்; வேறு வீடுகள் இல்லை.

'பாளாச்சாரின் வீட்டில்தான் தாதா ஒளிந்துகொண்டிருப்பான்' என்று ஹெட் கான்ஸ்டபிள் சந்தேகித்தார். பாளாச்சாரைப்பற்றியும் படைதயா வேண்டியமட்டும் விஷத்தைக் கலந்து ஹெட் கான்ஸ்டபிளிடம் கோள்மூட்டியிருந்தார். 'பாளாச்சார் என்ருல் தாதாவுக்கு ஆதரவு கொடுப்பவர். மதத்தின் பெயரில் பாவத்தை மறைத்துவிடும் புண்ணியவான்' என்று ஹெட் கான்ஸ்டபிள் நிச்சயமாக நம்பினர். 'அங்கேதான் தாதா இருப்பான்' என்று நினைத்துக் கதவைத் தட்டினர்.

ஆச்சார் சந்தியாவந்தனத்தில் உட்கார்ந்திருந்தார். அவருடைய மனைவி வந்து கதவைத் திறந்தாள். வீட்டில் எங்கும் அமைதி நிறைந்திருந்தது. கதவைத் திறந்த ஆச்சார் மனைவி திரும்புவதற்குமுன் ஹெட் கான்ஸ்டபிள் 'தாதா உங்க வூட்லே ஒளிஞ்சிருக்கான்னு சந்தேகமா இருக்கு. அதனுலே வீட்டைச் சோதனை போட வந்தேன்' என்று சொன்னுர். அந்த அம்மாள் பதில் சொல்லவில்லை. பேசாமல் உள்ளே போய்விட்டாள். உள்ளே சந்தியாவந்தனம் செய்துகொண்டிருந்த ஆச்சாரின் காதில் ஹெட் கான்ஸ்டபிளின் பேச்சு விழுந்தது. இருந்த இடத்திலிருந்தே 'பேஷாச் சோதனை போடலாம்' என்று பதில் சொல்லிவிட்டுப் 'புரணவஸ்ய பரப்பிரம்ம ரிஷி:' என்று மறுபடியும் சந்தியாவந்தனத்தைத் தொடர்ந்தார். மூக்கைப் பிடித்துக்கொண்டு பிராணுயாமத்தில் ஆழ்ந்துவிட்டார்.

தீவட்டி வெளிச்சத்தில் ஆட்கள் வீட்டின் சந்து பொந்துகளெல்லாம் ஆராய்ந்துவிட்டார்கள். தாதாவின் சுவடே இல்லை. 'வீட்டு வாசலில் அவனுடைய செருப்பு இல்லை' என்பதை ஹெட் கான்ஸ்டபிள் கவனித்திருந்தார். ''இந்த வைதிகப் பிராம்மணன் மராட்டா ஜாதி தாதாவுக்கு வீட்டில் ஒருவேளை இடம் கொடுக்கலாம். ஆனுல் செருப்புக் காலோடு உள்ளே விடவேமாட்டார். 'பிராம்மணனுக்குத் தன்னுடைய தர்மம் முதலில்; பிறகுதான் உபகாரம்' என்னும் சொல் பிரசித்தி அல்லவா? ஹெட்

கான்ஸ்டபிள் 'அந்தச் சொல் சத்தியம்' என்று நம்பினார். அவர் பாளாச்சாரைக் கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டார். 'போலீஸ் அதிகாரி வீட்டைச் சோதனை இட வந்தபோது சந்தியாவந்தனத்துக்கு உட்கார்ந்த பிராம்மணன் இடத்தை விட்டு அசையவில்லையே! பிராணாயாமத்தையும் விடவில்லை. தெளிவா மந்திரம் சொன்னான். இவனுக்குப் பயம் என்பதே தெரியாதோ? தாதா இங்கே வந்திருக்கமாட்டான். வந்திருந்தால் ஓடிப்போவதற்கு இந்த வீட்டில் பின்புற வழிகூட இல்லை. தெருவாசல் வழியாக ஓடவே முடியாது. அங்கே படையாவின் ஆட்கள் காவல் நிற்கிறார்கள். முடிந்துவிட்டது; இன்னும் ஓர் அறை பாக்கி இருக்கிறது' என்று யோசித்து, 'ஆச்சாரையா, இந்த அறைக் கதவைத் தெறந்து காமிக்கிறீங்களா?' என்று அடக்கமாகவே கேட்டார்.

அதற்குப் பதில் சொல்வதுபோல் பாளாச்சார் 'அஸ்திராயபட்' என்று உரக்கவே சிட்டிகை போட்டார். 'இந்த வீடே உங்களுடையது' என்று சொன்னேன். உண்மை தான். ஆனால் அது சுவாமி அறை. நினைத்தபோது யாரும் அங்கே போவதில்லை. நான்கூட ஸ்நானம் செய்யாமல் உள்ளே போகமாட்டேன். 'அங்கேயும் போகத்தான் போவேன்' என்று நீங்கள் பிடிவாதம் பிடிக்கக் கூடாது. 'இல்லை, பார்த்தே தீருவேன்' என்றால், அதற்கு ஒரு நிபந்தனை இருக்கிறது. தாதா உள்ளே இல்லாவிட்டால் ''அகாரணமாக உள்ளே புகுந்து சுவாமி அறையை அசுத்தம் செய்ததற்கு 'நான் பொறுப்பாளி' என்று எழுதித் தரவேண்டும்'' என்று சொல்லிய ஆச்சார் தொடர்ந்து சந்தியாவந்தனத்தில் ஈடுபட்டார்.

''கதவுக்கு முன்னாலே நெய் விளக்கைப் பாத்தூட்டுச் சந்தேகம் வந்துதுங்க. அதனாலேதான் 'கதவைத் தெறந்து காமீங்க'ன்னு ஒங்களைக் கேட்டேன். நீங்க சொன்னது சரியான பேச்சு. அகாரணமாக உங்க கடவுள் இருக்கிற அறைக்குள்ளே போய்த் தீட்டுப்படுத்த எனக்கும் இஷ்டம் இல்லை'' என்று சொன்னார் ஹெட் கான்ஸ்டபிள். சற்று நேரம் ஏதோ யோசனை யுடன் நின்றுகொண்டிருந்தார். 'தாதாவை எப்படிப் பிடிப்பது? பாதள்ளியில் இருந்துகொண்டே ஏமாற்றுகிறான் அல்லவா?' என்று கோபம் வந்தது. என்ன யோசித்தும் ஒன்றும் புரியவில்லை. சற்று நேரம் அப்படியே பேசாமல் நின்றுவிட்டு, 'சரி, போய்ட்டு வறேன். நமஸ்காரம்' என்று ஆச்சாரிடம் சொல்லிவிட்டுப் புறப்பட்டார் ஹெட் கான்ஸ்டபிள்.

'ஹெட் கான்ஸ்டபிளும் அவருடைய ஆட்களும் போய் விட்டார்கள். ஒருவழியாக ஆச்சாரின் சந்தியாவந்தனமும்

முடிந்தது. சிறிது நேரம் இப்படியே கழிந்தது. சுவாமி அறைக் கதவைத் திறந்துகொண்டு தாதா வெளியே வந்தான். அவன் முகத்தில் ஏக்கமும் நன்றியும் நிரம்பியிருந்தன. வெளியே வந்தவுடன் ஆச்சாரின் காலில் விழுந்து, 'சுவாமி அறையிலே என்னை ஒக்காத்திவச்சு, அந்தப் பாவத்தை என் தலேலே ஏன் கட்டினீங்க, பெரியப்பா!' என்று தேம்பித் தேம்பி அழத் தொடங்கினன். ஆச்சார் சிரித்துக்கொண்டே, ''நீ ஒரு பைத்தியக்காரப் பிள்ளையடா, தாதா! ஹெட் கான்ஸ்டபிளிடம் அப்படிச் சொன்னேனே, அதையே நெஜம்னு நெனச்சூட்டியா, அப்பா! போதும் நிறுத்து; இப்ப அழ என்ன வந்தூட்டுது. 'சுவாமி இல்லாத இடம் எங்கிருக்குதூன்னு காட்டு!' வா, வா, சாப்பிடு முதல்லே'' என்று ஆறுதல் சொன்னர்.

தாதா சாப்பிட்டுவிட்டு, 'வீட்டுக்குப் போகிறேன்' என்று சொன்னபோது, ஆச்சார், 'எங்கேயும் போகவேண்டாம். நாளைக்கு ஹெட் கான்ஸ்டபிள் போய்விட்டால் ஊரே உன்னுடையதுதான்! விடியற்காலம் வருவதாக யசவந்தராவ் சொல்லி அனுப்பியிருக்கிருர். உன்னோட ஏதோ பேசணுமாம். சுலபமாகச் சந்தித்துவிடலாம். இங்கேயே படுத்துக்கொள்' என்று சொன்னர்.

## 22

பொழுது விடியும்போதே யசவந்தராவ் பாளாச்சாரின் வீட்டுக்குவந்தார். அங்கே தாதா தன் காலில் வந்து விழுந்ததைக் கண்டு அவருக்கு ஒரே ஆச்சரியம்! 'ஹெட் கான்ஸ்டபிள் இவனை ஊர் உலகம் எல்லாம் தேடிக்கொண்டிருக்கும்போது இவன் பாதள்ளியிலேயே இருந்துகொண்டு அவரை ஏமாற்றிவிட்டான் அல்லவா?' என்று சிரிப்பு வந்தது. 'எப்பொழுதுமே தாதா, இதுபோன்ற துணிகரச் செயல்களில் தேர்ந்தவன்' என்பது அவருக்குத் தெரிந்ததுதான். காலைக்கடன்களை முடிக்க ஆச்சார் வெளியே போயிருந்ததால் அவர் வரும் வரைக்கும் இருவரும் அந்தரங்கமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

'நீ அஜராணிக்கு வராததே நல்லதாப் போச்சு, தாதா. வந்திருந்தா, ஹெட் கான்ஸ்டபிள் அங்கேயே உன்னைப் பிடிச்சு ஜெயில்லே போட்டிருப்பான்.'

'காப்பாத்தற தெய்வம் ரொம்பப் பெரிசு, தாத்தா! எங்கே போனாலும் அவன் கூடவே இருக்கிறபோது நூறு ஹெட் கான்ஸ்டபிள் வந்தாத்தான் என்ன செய்யமுடியும்?' என்றான் தாதா.

''அதுவும் சரிதான்! 'நாமெல்லாரும் காப்பத்தறோம்'ங்கறது பொய். 'இதுவரைக்கும் அவன்தான் நம்பளைக் காப்பாத்தறான்'ங் கறதை மறந்தூடறோம். அநாதைப் பிணமாகப் போய்விடாமல் சிமணாவையும் அவன்தான் காப்பாத்தினான்'' என்ற யசவந்தராவ் பெருமூச்சு விட்டார். அந்த எழுபது வயதுக் கிழவரிடம் குழந்தை மனம் இருந்தது. சிமணாவின் சோகக் கதை அவருடைய உள்ளத்தைக் கலக்கிவிட்டது. 'பதம்கெட்ட அவளுடைய வாழ்வை எப்படிச் சீராக்குவது?' என்ற கவலை இரவும் பகலும் அவரைத் துளைத்தது.

தாதாவின் ஆவல் விழித்துக்கொண்டது. 'சிமணா அநாதைப் பிணம் ஆகும் நிலையில் இருந்தாளா? நானாப் பெரியப்பா இறந்தது முதல் இந்தக் குடும்பத்தைத் துரதிருஷ்டம் துரத்துகிறது. என்னைப் போன்ற அண்ணன் இருந்தும் பயனில்லை. சிமணாவுக்கு என்ன நேர்ந்தது?' தாதாவுக்கு இது ஒன்றும் தெரியாததால் சிமணாவின் கதையைக் கேட்க விரும்பினான்.

யசவந்தராவ் ஆதியோடந்தமாகச் சொல்லத் தொடங்கினார். சிமணா, படதையாவைப் பிரிந்தது; அவளுடைய தற்கொலை முயற்சி; சந்திரம்மா தெய்வம்போல் வந்து காப்பாற்றியது; சிமணாவின் பிரசவ வேதனை; ஹெட் கான்ஸ்டபிளின் வரவு; அதனால் அவர் தம்மிடம் அவளை அழைத்து வந்தது; ஆண் குழந்தை பெற்றது — எல்லாவற்றையும் அநுதாபத்துடன் சொன்னபோது அவருடைய குரல் கம்மியது. அதையே உன்னிப் பாய்க் கேட்டுக்கொண்டிருந்த தாதா வாய் திறவாமல் கண்ணீர் உகுத்தான். சிமணாவின் வாழ்வில் சுகமும் துக்கமும், ஊடும் பாவும்போல் இழைந்து சோகக் கதையை நெய்துகொண் டிருந்தன. 'ஊர்விட்டு ஊர் அலையும் தலைவிதி அவளுக்கு ஏன் வந்தது? ஒரு ஜீவன் நிலை இல்லாமல் அலையும்படி எந்தத் தெய்வம் சாபம் கொடுத்தது?' என்று நினைத்த தாதாவால் பொறுக்கவே முடியவில்லை. சிறிது நேரம் பேசாமல் அழுதுகொண்டிருந்தான்.

கடைசியில் லௌகிகப் பிரச்சினை முன் நின்றது. அதைப் பற்றித்தான் யசவந்தராவ் தாதாவிடம் பேசவேண்டியிருந்தது. 'குழந்தையின் தகப்பன் யார் என்று எழுதுவது?' 'இதில் சிமணாவின் அபிப்பிராயம் என்ன?' என்று தாதா கேட்டான். குழந்தையின் தகப்பன் பெயரைத் தாதாவிடம் சொல்லியிருப்ப

தாகச் சிமஞ சொன்னதை யசவந்தராவ் ஞாபகப்படுத்தினர். தாதாவும் அப்படிச் செய்வதையே விரும்பினன்.

'நீ சொல்றதெல்லாம் சரிதான் தாதா! ஆனல் படதையா வின் பெயரை எழுதினேம்னு வச்சுக்க. பின்னல் அந்தக் குழந்தை யின் கதி என்ன? படதையா சம்ஸாரம் இல்லாத சந்நியாசி. அவன் இந்தப் பையனை முன்னுக்குக் கொண்டு வருவாங்கற நம்பிக்கை இல்லே. அதுக்குத்தான் சிமஞவிடம் சொன்னேன்! அவள் சம்மதித்தால் பாபு சாஹேபின் பெயரை எழுதலாம் என்று. என் ஆசை இது' என்று யசவந்தராவ் தம் உள்ளக்கிடக் கையைத் தெளிவுபடுத்தினர். இந்தப் பேச்சைக் கேட்ட தாதா, கோபத்தால் கொதித்தெழுந்தான். ''நீங்களா இப்படிச் சொல்வது? வேறு யாராவது சொல்லியிருந்தா ஒரு கை பார்த் திருப்பேன் தாத்தா! நாங்க ஏழைங்கறது நிஜந்தான். உங்களைப் போல எங்களுக்குச் சொத்து இல்லே. ஆனல் மானத்தை வித்துப் பொழைக்கிறது எனக்கு இஷ்டமே இல்லே. 'கொழந்தையின் தந்தை படதையாங்'கற விஷயம் நாலுபேருக்குத் தெரிஞ்சது தான். இல்லாட்டிக் கடவுளுக்காவது தெரிஞ்சிருக்கும். 'அதை மறந்து வாழணும்'னு எப்படிச் சொல்வீங்க தாத்தா! படதை யாவே அவளைக் கல்யாணம் கட்டிக்க வழி தேடணும்.''

''ஆமாம், தாதா! ஆன 'படதையா அவளைக் கல்யாணம் செஞ்சுப்பான்'னு நெனக்கறது பைத்தியக்காரத்தனம். அவளை அநாதையாக்கிக் கை விட்டதனல்தானே குளத்தில் விழப் போனள். சந்திரி அவளைக் காப்பாத்தின. எம் பேச்சைக் கேளு. பாபுவின் பெயரை எழுதினப் பின்னலே அந்தக் கொழந்தெ பிதிரார்ஜித சொத்துக்கு வாரிசா வருவான்'' என்ருர் யசவந்தராவ்.

'''சொத்தைப் பற்றியே சொல்றீங்க, தாத்தா. சிமஞவின் கௌரவம் என்ன ஆகும்'ங்கற கவலே என்னை அரிக்குது. பாபு சாஹேப் கெட்டவராக இருந்தாலும் சரி; குற்றம் செய்யா தவர்மேலே இந்தப் பழியை வைக்க உயிர் போனலும் என்னலே முடியாது. எங்கிட்ட அந்தப் பேச்சையே எடுக்காதீங்க'' என்று தாதா கண்டிப்பாகச் சொல்லிவிட்டான்.

யசவந்தராவ் ஸ்தம்பித்துவிட்டார். உள்ளம் கனிந்த அன்பாலும் சிமஞவின்பால் ஏற்பட்ட அநுதாபத்தாலும் அவர் இதைச் சொன்னர். அதில் எந்தக் கெட்ட எண்ணமும் இல்லே. சிமஞ, அவள் குழந்தை இருவருடைய வருங்காலமும் 'நேர்மை என்ற பெயரில் பாழாகக் கூடாது' என்பதுதான் அவருடைய அபிப்பிராயம். ஆனல் தாதா அதற்குச் சம்மதிக்காததால் அவர்

செயலிழந்து நின்ருர். என்ன இருந்தாலும் தாதா அவளுடைய அண்ணன். அவளுடைய வருங்காலத்தின் பொறுப்பு அவனுக்குத் தானே.

இவர்கள் இருவரும் பேசிக்கொண்டிருக்கும்போதே பாளாச் சார் வந்துவிட்டார். யசவந்தராவ் அவருக்கு வணக்கம் செய்தார்.

'யசவந்தராவ், தாதாவிடம் முக்கிய விஷயம் குறித்துப் பேசியிருப்பீர்கள். இனி, வேருெரு முக்கியமான சங்கதிபற்றி உங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும்' என்று சொல்லிய ஆச்சார், தாம் வழக்கமாக உட்காரும் மான்தோலில் உட்கார்ந்தார்.

யசவந்தராவ் இந்தக் கேள்வியை எதிர்பார்க்கவில்லை. 'விஷயம் என்னவென்று சொன்ஞல் என் அபிப்பிராயத்தைச் சொல்லத் தயாராக இருக்கிறேன்' என்ருர் அவர்.

'ஒன்றும் இல்லே. உங்களுக்கும் எனக்கும் இந்த ஊருக்கும் தொடர்புள்ள விஷயந்தான். இப்பொழுது கௌடர் குடும்ப வாரிசு விவகாரத்தையே எடுத்துக்கொள்ளுங்கள். படதையா, அது யாரோ — உங்கள் ஊர்க்காரன்தான் — அந்த லிங்கப்பனே அழைத்துக்கொண்டு வந்து என்ன என்னவோ அக்கிரமங்கள் செய்கிருன். அவனுடன் உங்கள் பாபு சாஹேபும் சேர்ந்து கொண்டு தன் பெயரைக் கெடுத்துக்கொண்டிருக்கிருன். அதஞல் பாபு சாஹேப் இந்த ஊரைவிட்டுத் தன் ஊருக்குப் போக வேண்டும் என்பது என் அபிப்பிராயம்.'

யசவந்தராவுடைய அபிப்பிராயமும் அதுவேதான். ஆனுல் பாபு சாஹேபிடம் நேராக எப்படிச் சொல்வது? 'லக்ஷ்மிபாய் திரும்பவும் தன் மாளிகைக்கு வந்து குடியேறிஞல், பாபு சாஹேப், தாஞகவே ஊரைவிட்டுப் போய்விடுவான்' என்று பாளாச்சார் யோசனே சொன்ஞர். ஆஞல், லக்ஷ்மிபாயை அழைத்துவரச் செய்த முயற்சியெல்லாம் வீணுகிவிட்டன. இனிமேல் யசவந்த ராவே நேராகச் சென்று லக்ஷ்மிபாயை அழைத்துவர வேண்டும்; அதுதான் வழி. யசவந்தராவ் அப்படிச் செய்யலாம். ஆஞல், ''லக்ஷ்மிபாய், தம்மைப் 'பாபு சாஹேபின் கட்சி ஆள்' என்று நினேப்பாளோ!'' என்று சந்தேகித்தார். 'பாளாச்சாரே இந்த வேலேயைச் செய்யலாம் அல்லவா?' என்றும் நினேத்தார்.

கடைசியில் இப்படி முடிவாயிற்று. யசவந்தராவ் இந்துபுரிக்குச் சென்று மகாராஜாவைக் கண்டு அவர்மூலம் லக்ஷ்மிபாய்க்கு விஷயத்தைத் தெரிவிக்க வேண்டும். 'பாளாச் சாரும் அவளே வந்து காண்பார்' என்று சொல்ல வேண்டும்.

ஜாகீர்தார் குடும்பம் முன்னுக்கு வரவேண்டும். பாபு சாஹேப், தன் ஊருக்குப் போகவேண்டும்.

சற்று நேரத்துக்குப்பின் பாளாச்சார் வேறொரு சங்கதியைச் சொன்னார்: 'இப்பப் பாருங்க யசவந்தராவ்! பாபு சாஹேபும் படதையாவும் சேர்ந்துகொண்டு ஹாவனூர் ஆட்களை விட்டுத் தாதாவின்மேல் புகார் கொடுத்து வாரன்ட் பிறப்பித் திருக்கிறார்கள். நீங்கள் ஹாவனூர் மணியக்காரரிடம் சொல்லி அந்த வாரன்ட்டை ரத்துச் செய்விக்கவேண்டும்' என்றார்.

'ஆமாம், தாத்தா! அந்த வாரன்ட் ரத்தாகட்டும். அப்புறம் இந்த அயோக்கியர்களை எல்லாம் ஒரு கை பார்த்து விடுகிறேன். படதையாவை ஊரைவிட்டே ஓட்டிவிடுகிறேன்' என்று தாதா சொன்னான்.

'ஏதாவது அசட்டுப் பிசட்டுனு உளறாதே, தாதா! படதையா உள்ளூர் மடாதிபதி. ஊர்க்காரர் பலமெல்லாம் அவனுக்கு இருக்கிறது. அவனை என்ன செய்யமுடியும்? பாபு சாஹேப், பயிரில் உட்கார்ந்திருக்கும் பறவை. அவனைத்தான் ஊரைவிட்டுப் போகச் செய்யவேண்டும்' என்றார் பாளாச்சார்.

'ஆச்சாரய்யா சொல்வதுதான் சரி, தாதா! கண்டபடி ஏதாவது செய்துவிடாதே! சிமணு, குழந்தையுடன் ஊருக்கு வந்த பிறகு அவன் வேறு எங்கே போவான்? அது கிடக்கட்டும். ஹாவனூர் மணியக்காரன் என் பேச்சைத் தட்டமாட்டான். நான் எல்லாவற்றையும் அவனிடம் சொல்கிறேன்' என்றார் யசவந்தராவ்.

அன்று பொழுது சாயும்போது ஹாவனூருக்குப் போவ தாகச் சொல்லி அங்கிருந்து அவர் புறப்பட்டார். அப்புறம் சிறிது நேரத்துக்குப் பிறகு மறுநாள் வரும் ஹநும ஜயந்திக்காக ஆச்சாரை அழைக்கச் சேஷப்பா அங்கே வந்தான். தாதா எழுந்து நின்று சேஷப்பாவுக்கு, 'ராம் ராம்' செய்தவுடன் சேஷப்பா ஆச்சரியப்பட்டான்.

'என்ன தாதா, ராத்திரி ஹெட் கான்ஸ்டபிள் ஊரை விட்டுப் போன செய்தி தெரிந்தவுடன் பொழுது விடிவதற்குள் ஊருக்கு வந்துவிட்டாய் போலிருக்கே?' என்று சேஷப்பா கிண்டலாகவே கேட்டான்.

'ஹெட் கான்ஸ்டபிள் ஊரை விட்டுப் போனாலும் சர்க்கார் அதிகாரி நீங்க இல்லையா. நீங்க மனசு வெச்சா ஜெயிலுக்கு அனுப்பிவிடலாமே' என்று சிரித்துக்கொண்டே தாதா பதில் சொன்னான்.

'உட்கார்ந்து பேசு தாதா' என்று சொல்லி, சேஷப்பா ஆச்சார் பக்கம் திரும்பினான்.

'இந்த வருஷம் பஞ்சத்தால் ஹநும ஜயந்தியை ரொம்பப் பெரிசாப் பண்ணாமல் வைதிகப் பிராம்மண போஜனத்தோட மட்டும் நடத்திடலாம்னு பார்க்கிறேன் ஆச்சார்' என்று சேஷப்பா பேச்சைத் தொடங்கினான்.

'மொத்தத்திலே ஹநுமார் மழையைக் கொடுக்கலேன்னு அவர்மேலேயே பஞ்சத்தின் வறட்சியைத் திருப்பிவிட்டது நல்லதாப் போச்சு. கௌடர் செத்துப் போயிட்டார்னு அவர்கள் செய்யற சமாராதனை நின்னுபோச்சு. பஞ்சத்தாலே கணக்குப்பிள்ளை வீட்டுச் சமாராதனையும் சுருங்கிப் போச்சு. பாபு சாஹேபின் புண்ணியத்தால் ஆஞ்சநேயர் மஞ்சள் நீர் உத்ஸவத்தையாவது கண்ணால் பார்த்தார்' என்று சொல்லிச் சிரித்தார் பாளாச்சார்.

சேஷப்பனுக்கு இந்தக் கிண்டல் புரியாதா? 'கொளத்துத் தண்ணியை எடுத்துக் கிணத்திலே விட்டு வரம் வாங்க முடிஞ்சா, நானும் பிரமாதமாகச் செய்வேன் ஆச்சார். அவன் மஞ்சள் நீர் உத்ஸவத்தை நடத்தியதைப் பக்தீன்னு புகழ்கிறீர்கள். எனக்குச் சிரிப்பு வறது. அப்படிப் பக்தி இருந்தால் அடுத்த வருஷம் நடத்திக் காட்டட்டும் பார்ப்போம்' என்றான் சேஷப்பா.

'பல நூறு வருஷங்களுக்குமேல ஜாகிர்தார் குடும்பம் நடத்தி வரும் உத்ஸவம்தானேப்பா இது? அடுத்த வருஷம் நடக்காதுன்னு எப்படிச் சொல்லமுடியும்?' என்று பாளாச்சார் ஆசனத்தில் நிமிர்ந்து உட்கார்ந்து சிறிது ஆவலுடனேயே கேட்டார்.

சேஷப்பா ஒரு சிட்டிகைப் பொடியை உறிஞ்சினான். ஆச்சாரிடமும் பொடியை நீட்டியபடி, ''இந்த உத்ஸவத்தைப் பற்றிய ஒரு விஷயம் உங்களுக்குத் தெரியாதல்லவா ஆச்சார்? இப்போ மாளிகையின் எஜமானி லக்ஷ்மிபாய், இங்கதான் இந்துபுரியில் தங்கி இருக்கிறாள். அப்படி இருக்க, 'நீங்கள் நடத்தும் உத்ஸவம். நீங்கள் வரணும்'னு பாபு சாஹேப் ஒரு கடிதமாவது எழுதியிருக்க வேண்டாமா? அதன் பலன் என்னன்னு கேட்டா, லக்ஷ்மிபாய்க்குக் கோபம் வந்துவிட்டது. இன்று வரையில் பன்னிரண்டு வருஷ வரவு செலவுக் கணக்கை இந்துபுரிக்கு அனுப்பச் சொல்லி, சமஸ்தானத்திலிருந்து குதிரைச் சேவகன்மூலம் கடிதம் வந்திருக்கு'' என்றான் சேஷப்பா.

ஆச்சாருக்கு இந்தச் செய்தி தெரியாது. ஆனால் திடீரென்று ஒரு சந்தேகம் வந்தது. 'உத்ஸவம் முடியறத்துக்குள்ளே இப்படிப்

பட்ட கடுதாசு வரணும்னு, சட்டமும் இந்த ஊர் நடவடிக்கைகளும் தெரிஞ்சவாதான் லக்ஷ்மிபாய்க்கு எழுதியிருக்கணும்னு தோன்றது' என்று பாளாச்சார் வெளிப்படையாகவே சொல்லி விட்டார்.

''தெரிவிக்காட்டா எப்படி? நானும் இந்தப் பாபு சாஹேபின் தர்பாரைப் பார்த்துப் பார்த்து அலுத்துப்போய் இந்துபுரத்துக்குக் கடுதாசு எழுதிவிட்டேன். முதலிலேயே 'லக்ஷ்மி பாய்க்கு அழைப்பு அனுப்பு'ன்னு கிளிக்குச் சொல்லறாப்ல சொன்னேன். அவன் படதையாவின் பேச்சைக் கேட்டுகிட்டு அழைப்பு அனுப்பாமல் இருந்துவிட்டான். இனிமேல் படதையாவே இந்த வம்பிலிருந்து அவனைத் தப்ப வைக்கட்டும்'' என்றான் சேஷப்பா.

படதையாவிடமும் பாபு சாஹேபிடமும் மட்டற்ற மதிப்பும் நட்பும் கொண்ட சேஷப்பாவா இப்படிப் பேசுவது? இந்தக் குயுக்தியைப்பற்றி முதலிலேயே பாளாச்சார் ஊகித்துவிட்டார். ஆனாலும் தெரியாததுபோல் போக்குக்காட்டித் தூண்டில் போட வேண்டும் என்று நினைத்தார். 'அது சரி, சேஷப்பா! பஞ்ச நிவாரணக் கடன் வாங்கிக் கொடுத்ததால் கிடைத்த லஞ்சத்தில் படதையா அஞ்சு சதவீதம் பங்கு கேட்டானாமே, நிஜமா?' என்று கேட்டார் பாளாச்சார்.

''கேட்காமல் இருப்பானா? அந்த நாடோடி லிங்கப்பா இந்த ஊர் மணியக்காரனும். 'அவன் பங்கைக் கொடுக்கவேண்டும்' என்றும் கேட்டான். அவனுடைய மணியக்கார வாரிசு விவகாரமாவது முடியட்டும். பார்வதியம்மாவின் புகார் விண்ணப்பத்துக்குத் தாசில்தார் மட்டும் உத்தரவு போட்டால் போதாது. கலெக்டர், வாரிசு ரிஜிஸ்டரில், லிங்கப்பாவின் பெயரைச் சேர்க்கணும். அதுபோல் வாரிசு நோட்டீசும் வரவேண்டும். அதற்கப்புறம் நியமனம் ஆகணும். அதுவரையிலும் 'மணியக்காரர் யார்?' என்று பயமுறுத்திவிட்டேன். அன்று முதல் படதையா குறுக்குக்கட்டை போடுகிறான். இதோ பாருங்க ஆச்சார், இப்ப வந்திருக்கும் தாசில்தாரின் உத்தரவை மறுத்து, நியாயம் செய்யக் கலெக்டருக்கு அப்பீல் செய்யும்படி பார்வதியம்மாவிடம் சொல்லுங்க. அவள் காலையில் விண்ணப்பத்தாளில் கையெழுத்துப் போட்டுத் தந்தால் போதும். அதுக்குமேல் செய்யவேண்டிய வேலையெல்லாம் என்னைச் சேர்ந்தது. ஒரு கை பார்த்துடறேன்'' என்று மற்றொரு தந்திர வலையை வீசினான் சேஷப்பா.

ஆச்சாருக்கும் இதனுல் பயன் உண்டு. அதனுல் நயமாகவே, 'அதெல்லாம் சரிதான் சேஷப்பா! நீங்கள் எல்லோரும் சேர்ந்து தாதாவின்மேல் வாரன்ட்டைக் கிளப்பி விட்டுவிட்டீர்கள். அதிலிருந்து தப்ப என்ன வழி?' என்ருர் ஆச்சார்.

''வாரன்ட்டைக் கொண்டு உடைப்பில் போடுங்கள். '323' ஆக்ட்படி 'ப்பூ' என்று ஊதிவிடுகிற விண்ணப்பம் அது. அவன் மாஜிஸ்டிரேட் முன் ஆஜராகி ஜாமீன் கொடுத்துவிட்டு வரட்டும். அந்தக் கேஸ் நம்ப தாசில்தார் முன்னிலையில் நடக்கிறது. இந்த வாரிசுத் தகராறு விண்ணப்பத்திற்கு விரோதமாக அப்பீல் செய்தால், தாசில்தார் வாங்கிக்கொண்ட லஞ்சம் அவருக்குத் தக்காது. தாதாவை விடுதலை செய்து அதைத் தக்கவைத்துக் கொள்வதில் அவனுக்கு ஒண்ணும் நஷ்டம் இல்லை'' என்று சேஷப்பா உபாயம் சொன்னுன்.

'சரி, பார்ப்போம். ஆனுல் மாஜிஸ்டிரேட் முன் ஆஜராவதற்குத் தாதா சம்மதிக்க வேண்டுமே' என்று பாளாச்சார் ஒரு சந்தேகத்தைக் கிளப்பினுர்.

'ஏண்டா தாதா, ஜாமீன் கொடுத்து உன்னை விடுவித்துக் கொண்டு வரும் காரியம் என்னுல் முடியுமா, முடியாதா, சொல்லு?' என்று கேட்டான் சேஷப்பா.

'எப்படிச் சொல்றதுங்க கணக்கப்பிள்ளை. நேத்து வரைக்கும் நீங்க படதையாவுக்கும் பாபு சாஹேபுக்கும் நிழல் போல நடமாடினீங்க. இப்போ திடீர்னு எப்படீங்க நம்பிக்கை வரும்?' என்று கேட்டான் தாதா.

''தம்பி, உனக்கு உலக அனுபவம் இல்லை. 'இன்னிக்கு ஒனக்கு ஆகாதவங்க, என்னிக்குமே ஆகாதவங்க'ன்னு நெனைக்காதே. 'இன்னிக்கி ஒனக்கு வேண்டியவங்க, என்னிக்குமே வேண்டியவங்களா இருப்பாங்க'ன்னும் நெனைக்க வேண்டாம். சிநேகமும் பகையும் ஏதோ ஒரு விஷயம் காரணமா உண்டாகுது. அந்த விஷயத்துக்கு மாத்திரம் அதிலேருந்து லாபத்தை அடையணும்'' என்று சேஷப்பா, தன் வாழ்க்கை அநுபவத்தின் சாரத்தையே சொல்லித் தற்பெருமையுடன் ஒரு சிட்டிகைப் பொடியை உறிஞ்சியபடி ஆச்சாரின் முகத்தைப் பார்த்தான்.

'அதைப்பத்தி என்ன விடு. வாரிசுத் தகராறு விண்ணப்ப முடிவுக்கு விரோதமாக அப்பீல் செய்தால் லாபம் இருக்கும்னு நெனக்கிறயா?' என்று கேட்டார் ஆச்சார்.

''லிங்கப்பனுக்கு வாரிசு உரிமை முக்காலத்திலும் கிடைக்காது. லஞ்சம் வாங்கினதுக்காகத் தாசில்தார் என்ன

என்னவோ செய்தார். அப்பீல் செய்தால் அவனுடைய வாரிசு விண்ணப்பம் காற்றில் பட்டம் பறப்பதுபோல் பறந்துவிடும். ஜனன ரிஜிஸ்தரில், சங்கரப்பா, 'ஜாதியில் குறும்பன்' என்று தெளிவாகக் கண்டிருக்கிறது. அதை ஆஜர்ப்படுத்தவில்லை. அப்பீலுக்கு அந்த ஒரு காரணம் போதும்.''

சேஷப்பாவின் பேச்சால் ஆச்சாருக்கு உத்ஸாகம் பிறந்து விட்டது. ஊரின்மேல் அபிமானத்தாலோ பணத்தின் ஆசையாலோ, சேஷப்பா, தன் சட்ட ஞானத்தை உதவினான். சேஷப்பாவுக்கு எப்போதும் சுயநலம்தான் குறி. 'படதையாவுக்கும் அவனுக்கும் ஏதோ தகராறு நேர்ந்ததாலேயே இப்பொழுது இந்தப் பக்கம் சாய்ந்திருக்கிறான்' என்று தெளிவாகத் தெரிந்தது. ஆனால் அவனுடைய சுயநலத்தை ஒட்டியே மற்றொரு நல்ல விஷயமும் இருந்தது. தமது நீண்டகால வாழ்க்கை அநுபவத்தால் ஆச்சார் கற்ற பாடம் துக்கம் நிறைந்ததாகவே இருந்தது. 'சேஷப்பாவைப் போன்றவர்களும் உலகத்துக்குத் தேவையானவர்கள்' என்பது அவருக்குப் புதிய அநுபவம் அன்று.

தாதா, ஆச்சாரின் வீட்டிலிருந்து நேராக மணியக்காரர் வீட்டுக்குப் போய்ப் பார்வதி அம்மாளிடம் நடந்தவற்றைச் சொன்னான். அவள், சேஷப்பாவும் தன் கணவரும் சிநேகமாக இருந்தபோது நடந்த அரிய பெரும் செயல்களை ஒவ்வொன்றாக நினைத்துப் பார்த்தாள். இப்பொழுது சேஷப்பாவுக்குத் தன்னுடைய குழந்தைகளுக்கு நன்மை செய்யும் புத்தி தோன்றியதை நினைத்தபோது நெஞ்சை அடைத்தது.

அன்று சாயங்காலம் யசவந்தராவ் ஹாவனூருக்குப் போவதற்காகக் குதிரைக்குச் சேணமிட்டுத் தயாரிப்பதைப் பார்த்த பாபு சாஹேப், 'அங்கென்ன வேலை, மாமா! உங்களுக்கு வேண்டியவர்களை இங்கேயே வரவழைக்கிறேன். சித்திரை மாசம்; பொழுது சாய்வதற்கு முன்னால் பெரிய மழையில் அகப்பட்டுக்கொள்வீர்கள்' என்று சொன்னான். யசவந்தராவ், தம் மனத்தில் இருந்ததைத் தெளிவாக அவனிடம் சொல்வதற்கு அது நல்ல சந்தர்ப்பம் ஆயிற்று.

''கிழவன்மேல் இவ்வளவு அக்கறை இருந்தால் நான் சொல்லும் ஒரு வார்த்தையைக் கேள். 'எனக்கு வருத்தம் உண்டாகக் கூடாது' என்று நினைத்தால், என் பேச்சைக் கேட்க வேண்டும்'' என்றார் யசவந்தராவ்.

பாபு சாஹேபுக்கு, 'யசவந்தராவ் என்ன சொல்லப் போகிறார்' என்பது தெரியும். அவர் ஹாவனூருக்குப் புறப்

படுவதன் நோக்கமும் தெரியும். 'தாதாவின்மேல் கொடுத்த பிராதை வாபஸ் வாங்கிக்கொள்ளும்படி, ஹாவனூர்க்காரர் களைக் கேட்டுக்கொள்வது' அவனுக்குப் பிடிக்கவில்லை. அதை அவரிடமே சொல்லியும் பார்த்தான். யசவந்தராவிடம் இருந்து அதற்குப் பதிலும் உபதேசமும்கூடக் கிடைத்தன.

'' 'மொத்தத்தில் நீ இப்படிப்பட்டவர்களுடைய சிநேகத்தை எல்லாம் விட்டுவிடு' என்றுதான் நான் சொல்வேன். நாளைக்கு லக்ஷ்மிபாய் இங்கே வந்தால் 'நானே உன்னை எதிர்த்து நிற்பேன்' என்பதை மறக்காதே'' என்று எச்சரிக்கை செய்தார்.

ஆனால், பாபு சாஹேப் வழக்கம்போல் தர்க்கம் செய்தான், படதையாவுக்குப் பரிந்து பேசினான். பேச்சுக்கு நடுவில், 'ஊரில் கட்சிப் பிரதி கட்சிகள் இருக்கக்கூடாது' என்று சொன்னபோது, பாபு சாஹேப், அந்தக் குற்றம் எல்லாவற்றையும் பாளாச்சார் தலையில் சுமத்தினான். 'அவராகவே குற்றத்தை ஒப்புக் கொண்டால் ஊரில் கட்சிகள் தலைதூக்க வாய்ப்பில்லை' என்று ஜோஸ்யம் சொன்னான். லிங்கப்பாவைப்பற்றிக் கேட்டபோது, 'அதெல்லாம் படதையாவுக்குத்தான் தெரியும்' என்று சொல்லி விட்டான். கடைசியில், 'என்ன செய்தாலும் படதையாவைக் கேட்டுத்தான் செய்வேன்' என்று உறுதியாகச் சொல்லி விட்டான்.

யசவந்தராவும் பாளாச்சாரைக் கேட்டுவிட்டே தம் அபிப்பிராயத்தைச் சொல்வதாகச் சொன்னார். அங்கிருந்து நேராக ஆச்சார் வீட்டுக்குப் போனார். பாபு சாஹேப், படதையா வுடன் ஆலோசனை நடத்தினான்.

சேஷப்பாவுடன் விரோதம் ஏற்பட்டதால் படதையாவுக்குப் பயம் உண்டாயிற்று. 'சேஷப்பா, அந்தக் கட்சியில் சேர்ந்து விட்டால் என்ன செய்வது?' அவர், தம் கட்சியில் இருந்தமட்டும் ஏராளமாக உதவி செய்தார். லக்ஷ்மிபாய் திரும்பவும் ஊருக்கு வந்தால் நிலங்களை எல்லாம் பாபு சாஹேப் 'குடியானவர்கள் பேரில் எழுதிவைக்கலாம்' என்று சொன்னான். லிங்கப்பாவின் வாரிசு விவகாரத்திலும் அவனுடைய சட்டத்தின் உதவி தேவைப் பட்டது. இப்பொழுது அவனை எந்த உதவியும் கேட்கமுடியாது. அதனால் படதையா வேறொரு வழியைக் கண்டுபிடித்தார். எப்படியும் யசவந்தராவ் சமாதான முயற்சியில் இறங்கி யிருக்கிறார். இப்பொழுது சில நிபந்தனைகள் போட்டு நட்புக்குச் சமாதானத்தை ஏற்றுக்கொண்டுவிடவேண்டும். இப்பொழுதே யசவந்தராவிடம் நமது நிபந்தனைகளைச் சொல்லிவிடவேண்டும். முதலாவதாக, லிங்கப்பாவுக்கு மணியக்காரர் வாரிசு உரிமை

கிடைக்கவேண்டும். அவன் ஊர் மணியக்காரன் ஆகவேண்டும். இரண்டாவதாகத் தாதாவின்மேல் கொடுத்த பிராது சர்க்காரிடத்தில் இருக்கிறது. அந்தக் கேஸ் நடக்கவேண்டும். ஹாவனூரரார் கொடுத்த பிராதை அவர்களே வாபஸ் வாங்கிக் கொண்டால் நல்லது; இல்லாவிட்டால் தாதா அவர்களிடம் மன்னிப்புக் கேட்கவேண்டும். இந்த நிபந்தனைகளுக்குப் பாளாச்சார் ஒப்புக்கொண்டால் கட்சிப் பிரதி கட்சிகளுக்கு இடமே இருக்காது.

அன்றிரவு சாப்பிட்ட பின் பாபு சாஹேப் யசவந்தராவிடம் இந்த நிபந்தனைகளைச் சொன்னான். பேசாமல் அதையெல்லாம் கேட்ட பின் யசவந்தராவ், '''நான் சொன்னவைகளை ஒப்புக் கொள்ளவில்லை' என்று ஒரே பேச்சில் சொல்லியிருக்கலாமே. இப்படியெல்லாம் சுற்றிவளைத்துப் பேச வேண்டியதில்லை'' என்று வெட்டொன்று துண்டு இரண்டாகப் பேசிவிட்டு மேலே பேச்சுக்கு இடம் வைத்துக்கொள்ளாமல் படுத்துக்கொண்டார்.

'அவர் இருட்டோடு எழுந்திருந்து குதிரையேறி இந்துபுரிக்குப் போய்விட்டார்' என்பது பொழுது விடிந்த பின் பாபு சாஹேபுக்குத் தெரிந்தது. மாமா கோபித்துக்கொள்வார் என்பது அவனுக்குத் தெரியும். இருந்தாலும் இந்தச் செய்தி தெரிந்த பின் மிகவும் துக்கமாக இருந்தது. தான் செய்வது 'சரியா, தப்பா?' என்பது பாபு சாஹேபுக்குத் தெரியவில்லை. 'மாமா, திடீரென்று கோபித்துக்கொண்டுவிட்டார் அல்லவா?' என்று வேதனை பட்டுக்கொண்டிருக்கும்போதே அவனுக்கு மற்றொரு சங்கதி தெரியவந்தது. ஹெட் கான்ஸ்டபிள் அன்று இரவு வந்து தாதாவைப் பிடிக்கக் கௌடர் வீட்டுக்குப் போன போது, கணக்கப்பிள்ளை சேஷப்பா, 'தாதாவைத் தாலூகா மாஜிஸ்டிரேட் முன் ஆஜர்ப்படுத்த அழைத்துச் சென்றிருக்கிறான்' என்பது பாபு சாஹேபுக்குத் தெரியவந்தது.

## 23

பார்வதியம்மா, பாளாச்சார் இவர்களுடைய பேச்சை மதித்து ஜயின் ஜின்னப்பா, தாதாவின்மேல் இருந்த பிராதில் ஜாமீனாக இருந்து அவனை விடுவித்துக் கொண்டுவர அவனோடு தாலூகாவுக்குப் பிரயாணமானான். விடிந்து ஒரு ஜாமம் ஆகியிருந்தது. 'மூன்று பேர் போவது அசுபம்! என்று, தாதா,

சேஷப்பா, ஜின்னப்பா இந்தத் திரிமூர்த்திகளுடன் அஞ்சல் மல்லப்பனும் போனான். சித்திரை மாதத்துக் கடும் வெயில் ஏறு முன் தாலூகாவுக்குப் போய்ச் சேரும்படி ஏற்பாடு செய்திருந் தார்கள்.

வாரிசுத் தகராறு விண்ணப்பத்தைக் கிழித்துப் போட்ட தாசில்தாரின் தீர்ப்புக்கு எதிராகக் கலெக்டர் ஆபீசுக்குப் பார்வதி அம்மாள் அப்பீல் செய்வதாக முடிவாயிற்று. 'இந்த அப்பீலுக் காகவும், தாதாவை ஜாமீனில் விடுதலை செய்வதற்காகவும் ஆகும் செலவைப் பார்வதியம்மாளின் சார்பில் ஜின்னப்பா செய்ய வேண்டும்' என்று தீர்மானித்தார்கள். சேஷப்பாவின் யோசனைப்படி ஜின்னப்பா இருநூறு ரூபா முடிச்சை இடுப்பில் செருகிக்கொண்டிருந்தான்.

ஜின்னப்பா என்றும் இல்லாத உத்ஸாகமும் பரபரப்பும் அடைந்திருந்தான். அவனுக்கு நினைவு தெரிந்தது முதல் ஐம்பது மழைக் காலத்தை அவன் பார்த்திருந்ததாகச் சொல்வான். 'எந்த வருஷம் அளவுக்கு மீறி மழை பெய்தது, எந்த வருஷம் மிகவும் குறைவாகப் பெய்தது' என்று சொல்லும் அளவுக்கு அவனுடைய ஞாபகச் சக்தி, துல்லியமாக இருந்தது. தான் வேலை செய்யும் நிலபுலங்களில் ஒரு மண்ணாங்கட்டி அந்தப்பக்கம் இந்தப்பக்கம் அசைந்தாலும் அவனுக்குத் தெரியும். ஆனால் தன் ஆயுள் காலத்தில் அவன் தாலூகாவைப் பார்த்ததில்லை. முதல் தடவையாகத் தாலூகாவுக்குப் போவதால் அவனுடைய மனம் விசித்திரக் கற்பனைகள் செய்து குழம்பியிருந்தது. இதைக் கேட்ட சேஷப்பா, 'இதுவும் நல்லதுக்குத்தான்' என்று நினைத்தான்.

தாலூகாக் கச்சேரியின் காம்பவுண்டுக்குள் ஜின்னப் பாவையும் தாதாவையும் விட்டுவிட்டுச் சேஷப்பா கச்சேரியின் ஓர் அறைக்குப் போய் உட்கார்ந்தான். காக்கிச் சீர் உடை அணிந்த போலீஸார் குறுக்கும் நெடுக்கும் போவதைக் கண்டு ஜின்னப்பாவுக்கு உயிரே போய்விடும்போல் இருந்தது.

'தாதா! வெளியே அந்த மைதானத்துலேயே போய் உக்காந்தா என்ன? மல்லன் இங்கேயே இருப்பான். கணக்கப் பிள்ளை வெளியே வந்து நம்மளைக் கூப்பிடச் சொன்னா அப்ப நம்ம கிட்ட வந்து சொல்லுவான்' என்று கச்சேரிக்கு வெளியே போக வேண்டும் என்பதைச் சூசனையாகத் தெரிவித்தான் ஜின்னப்பன்.

தாதா, அதற்குச் சம்மதிக்கவில்லை. 'கச்சேரிக் கட்டடத் திலேயே ஜனங்கள் கூட்டம் கூட்டமாக் குந்திகிட்டு அரட்டை யடிச்சிகிட்டிருக்கறபோது நாம ஏன் வெளியே போகணும். இருக்கட்டும் விடு, சித்தப்பா! இங்கேயே நிழல் இருக்குது,

தரையும் சுத்தமா இருக்குது. இந்தக் கொளுத்தற வெயில்லே வேற எங்கே போய்க் குந்தறது?' என்று சொல்லிய தாதா, ஜின்னப்பனுடைய பேச்சை லட்சியமே செய்யவில்லை.

ஜின்னப்பனுடைய கால்கள் நின்ற இடத்திலேயே நடுங்கிக் கொண்டிருந்தன; புருவம் வேர்த்தது. 'போலீஸார் வந்து தாதா மேலே வாரன்ட் ஜாரி செய்து அவனை ஜெயிலில் போட்டுட்டா என்ன கதி' என்ற பயமே அவன் உள்ளத்தைக் குடைந்தது. தாதாவைப் போலீஸாரிடம் ஒப்பித்துவிட்டுத் திரும்பிப் போனால் ஊருக்குள் முகத்தையே காண்பிக்க முடியாது. 'பார்வதி அம்மா ளிடம் ஆணையிட்டு ஜாமீன் கொடுத்துத் தாதாவின்மேல் உள்ள வாரன்டை ரத்துச் செய்துகொண்டு வருவதாகச் சொல்லிவந்த நாம் அந்த வாக்கைக் காப்பாற்றாவிட்டால் எப்படி?' என்று எண்ணினான். ஒருபுறம் சேஷப்பாவிடம் அவனுக்கு நம்பிக்கை இல்லை. 'கச்சேரிக்குப் போனவுடன் பாக்குக் கடிக்கும் நேரத்தில் தாதாவின் வாரன்ட் ரத்தாவதாக நினை' என்று சொல்லிய மக ராஜன் ஒரு மணி நேரமாகியும் வெளியே வரவில்லையே? ஜின்னப்ப னுக்கு என்றைக்குமே கணக்குப்பிள்ளைகளைக் கண்டாலே பயம். அவன் மனத்தில் என்ன என்னவோ சந்தேகங்கள் தோன்றிக் குழப்பின. ''சேஷப்பா படையாவின் கட்சியைச் சேர்ந்தவன் என்பது தெரிந்ததுதான். வெகு எளிதாகத் தாதாவைக் கச்சேரிக்குக் கூட்டிவந்து ஜெயிலுக்குக் அனுப்பிவிட்டு, 'மாஜிஸ் டிரேட் ஜாமீன்மேலே விடறதா இல்லேன்னு சொல்றார் அப்பா' என்று சேஷப்பா மூக்கால் அழுதானானால் என்ன செய்வது? சேஷப்பாவின் வாழ்க்கை வரலாறு பூராவும் இது போன்ற விவகாரங்களாலேயே சித்திரிக்கப்பட்டிருந்தது. இந்தக் கவலை களால் ஜின்னப்பாவுக்கு அங்கே இருப்பது முள்மேல் இருப்பது போல் இருந்தது. அதை எல்லாம் வெளியில் சொல்லித் தாதாவின் நிச்சிந்தையான மனத்தைக் குழப்பிவிடவும் அவன் தயாராக இல்லை. நின்ற இடத்திலேயே நடுங்கிக்கொண்டு பட படப்புடன் சேஷப்பாவின் வரவையே எதிர்பார்த்துக்கொண் டிருந்தான் ஜின்னப்பா.

ஜின்னப்பாவுக்கு ஒரு நிமிஷம் ஒரு யுகமாகக் கழிந்தது. தாதா ஆவலுடன் ஆனால் கவலையே இல்லாமல் அங்கும் இங்கும் பார்த்துக்கொண்டிருந்தான். ஜின்னப்பா நரைத்த மீசையைத் தடவிக்கொண்டும், தலைப்பாகையைச் சரி செய்துகொண்டும், வேர்வையைத் துடைத்துக்கொண்டும் சேஷப்பா நுழைந்த அறையையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டு நின்றிருந்தான். சேஷப்பா வேறோர் அறையிலிருந்து ஜின்னப்பா நின்றிருந்த இடத்துக்குப் பின்புறமாக வந்து 'ஜின்னப்பா, தாதா

இருக்கான் அல்லவா?' என்று கேட்டான். தூக்கிவாரிப்போடத் தடுமாறிக்கொண்டே ஜின்னப்பா, 'இ...ங்...கே...யே இருக் கானுங்களே' என்ருன் சேஷப்பா. 'அப்படியானு நல்லதாப் போச்சு, சீக்கிரம் ஒரு ரூபாய் எடு' என்று கேட்டவுடன் ஜின்னப் பாவை வேறொரு கவலை பிடித்துக்கொண்டது.

சுத்தி ஜனங்க இருக்காங்க. போலீஸார் நடமாடருங்க. போயும் போயும் கச்சேரி. இப்படிப்பட்ட எடத்திலே எல்லா ருக்கும் தெரியும்படி முடிச்சை அவிழ்த்து ஒரு ரூபாய் எடுப்பது ஜின்னப்பாவுக்கு இஷ்டமில்லை. ஆனுல், 'பணம் இல்லை' என்று சொல்லவும் தைரியம் இல்லை. ஏதோ யோசிப்பதுபோல் நடித்து 'ரூபாயா? இப்ப வேலையை நடத்துங்க' என்று விட்டேத்தியாகச் சொன்னுன்.

சேஷப்பாவுக்குக் கோபம் வந்தது. ஜின்னப்பாவைச் சுட்டு விடுவதுபோல் பார்த்து இடை இடையே கையை கையை வீசிக் கொண்டு, ''ஜாமீனில் விடுவதற்கு விண்ணப்பம் எழுதியாயிற்று. அதற்கு எட்டணு ஸ்டாம்ப் ஒட்டணும்; 'நடத்துங்க'ன்னு சொன்னு, என்னத்தை நடத்தறது, ஒன் தலை'' என்று ஆத்திரத் தோடு கேட்டான். கையிலிருந்த காகிதத் துண்டு ஒன்றைக் கசக்கி எறிந்தான்.

ஜின்னப்பாவின் முகத்தில் அசட்டுக் களை வழியத் தொடங் கியது. வசவு வாங்கிய சிறுவனைப்போல் முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு வாய்க்குள்ளேயே ஏதோ முணுமுணுத்தான். தலையில் கந்தலாகி இருந்த தலைப்பாவை எடுத்து அதன் ஒரு நுனியில் முடிஞ்சிருந்த மூன்று அணுக்களைச் சேஷப்பன் கையில் போட்டு, 'இப்ப இவ்வளவு ரொக்கந்தான் வந்தது, நடத்துங்க' என்று சொல்லி அசட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

சேஷப்பாவுக்குப் பிரமாதமான கோபம் வந்தது. ஆனுலும் அடக்கிக்கொண்டான். 'குடியானவர்களுடைய பணத்தைக் கழட்டுவது அவனுடைய சாமர்த்தியங்களுள் ஒன்று' என்று அவன் பெருமையாகச் சொல்லிக்கொள்வது வழக்கம். இப்போது அதற்குச் சரியான சோதனைக் காலம். குடியானவன் நிலத்தில் விளைந்த தானியங்கள் விஷயத்தில் தாராளமாக இருப்பதுபோல் பண விஷயத்தில் இருக்கமாட்டான். ஜின்னப்பா, தன் தோட் டத்து விளைச்சலையெல்லாம் கேட்டிருந்தாலும் சந்தோஷமாகக் கொடுத்திருப்பான். ஆனுல், பணம் கொடுப்பதுமட்டும் உயிரையே கொடுப்பதுபோல் இருந்தது. அதனுல் சேஷப்பா, ஒரு தவசியின் பொறுமையோடு, 'இப்போ உங்கிட்ட இவ்வளவு தான் இருக்கா?' என்று தூண்டில் போட்டான்.

பொய் சொல்வது ஜின்னப்பாவுக்கு இஷ்டமில்லை. ''இவ்வளவுதான்னு நெனச்சிக்கிட்டிருக்கேனுங்க. என் பொஞ்சாதி 'குழந்தைகளுக்குத் திங்கறதுக்கு ஏதாவது வாங்கிகிட்டு வா'ன்னு, 'சொக்காப் பையிலே பணம் போடறேன்'னு சொன்னா. அதுலே எதாவது இருக்கான்னு பாக்கறேன்'' என்று சட்டைப் பையில் கை விட்டுப் புகைக்குழாய், புகையிலை, ஒரு கறுப்புத் துணிப்பட்டை, ஒரு சிறிய சக்கிமுக்கிக் கல், இவைகளை எல்லாம் ஒன்றொன்றாக எடுத்து மடியில் வைத்தான். ஜின்னப்பா 'நேரம் தள்ளின மட்டும் தள்ளட்டும், வேலை நடக்கட்டும்' என்று பொழுதை ஓட்டுபவன். ஆனால் சேஷப்பாவுக்கோ ஒரே அவசரம். அந்தச் சாமான்களைப் பார்ப்பதே 'ஒரு வீண் பொழுது போக்கு' என்று அவனுக்குத் தோன்றியது. கடைசியில் இந்தச் சமுத்திரத்தைக் கடைந்ததில் கிடைத்த ரத்தினங்கள் என்னவென்றால் இரண்டணா நாணயங்கள் இரண்டு.

வந்த கோபத்தை அடக்கிக்கொண்டு சேஷப்பா, ''இன்னும் ஒரு துட்டுக் கம்மியாறது ஜின்னப்பா, ஸ்டாம்பைக் கடனாகக் கொடுப்பாங்கன்னு நெனச்சயா? விண்ணப்பம் எழுதியவனுக்கு வேறே எட்டணாத் தரணும். 'ஜாமீன் பத்திரம் எழுதி ஆஜர் செய்வது, ஜாமீனில் விடுவதற்கு உத்தரவு எழுதுவது இதல்லாம் குமாஸ்தாவின் வேலை'. அவனும் சாமானியப்பட்டவன் அல்ல. 'கொறஞ்சபட்சம் நூறு ரூபா கொடு' என்று வீம்பு பிடித்தான். ஏழை என்று கெஞ்சிக் கூத்தாடி ஐம்பதுக்கு முடித்துக் கொண்டு வந்திருக்கிறேன்.

அதை உடனே எண்ணிக் கொடுக்கவேண்டும். நீ ரெண்டணாவும் நாலணாவும் எடுத்தால் வேலை நடக்காது. உனக்குச் சொல்லிவைக்கிறேன் ஜின்னப்பா. தாலூகாக் கச்சேரியில் குமாஸ்தாக்கள் நாலணா என்று சொன்னால் 25 ரூபாய்! எட்டணா என்று சொன்னால் 50 ரூபாய்! ஒரு ரூபாய் என்றால் 100 என்று புரிந்துகொள்ளவேண்டும். நான் ஒரு ரூபாய் என்று சொன்னபோதே, நீ 100 ரூபாய் என்று தெரிந்துகொண்டிருக்க வேண்டும். உன்னிடம் அவ்வளவு பணம் இல்லையென்றால் ஊருக்குப் போய் ஏற்பாடு செய்துகொண்டு வா. நீ வரும் வரையில் அதோ பார், அங்கே துப்பாக்கியும் கையுமா நிற்கும் போலீஸ்காரர்களிடம் தாதாவை விட்டுப் போகவேண்டிருக்கும்'' என்று ஒரு பெரிய பிரசங்கம் செய்து, அதன் பலனை ஜின்னப்பனின் முகபாவத்திலிருந்து பிடிக்க முயன்றான்.

இனிமேல் முடிச்சை அவிழ்க்காமல் முடியாது என்று ஜின்னப்பா தெரிந்துகொண்ட பின், ஏக்கத்தோடு அதை அவிழ்த்து 50 ரூபாயை எண்ணிச் சேஷப்பாவிடம் கொடுத்து

'கணக்கப்பிள்ளே, நீ சொன்னபடி பணத்தைக் கொடுத்துட்டேன். பையனே ஜாமீனில் சீக்கிரமாகவே விடுதலே செய்கிற வழியைப் பார்' என்று சொன்னதையே திருப்பித் திருப்பி பத்து தரம் சொன்ஞன். எண்ணிய ரூபாய்களேயே திரும்பவும் எண்ணிஞன்.

''அதைப்பற்றிக் கவலேயே இல்லே. ஜின்னப்பா, இப்ப நான் உள்ள போய் விண்ணப்பத்தில் ஷரா எழுதச் சொன்னபின் போலீஸ்காரர்கள் வருவார்கள். தாதா அவர்களோடு போய் மாஜிஸ்டிரேட் முன் நிற்கவேண்டும். நீயும் அவன்கூடப் போக வேண்டும். 'ஜாமீன் நிற்கிருயா?' என்று கேட்பார்கள். நீ 'ஆம்' என்று சொன்ஞல் போதும்'' என்று சொல்லிய சேஷப்பா கச்சேரி அறை ஒன்றில் புகுந்தான்.

அவன் சொன்னபடியே போலீஸ் ஹெட் கான்ஸ்டபிள் வந்து தாதாவை அழைத்துக்கொண்டு போய் மாஜிஸ்டிரேட் முன் நிறுத்திஞன். தாதாவை ஜாமீனில் விடும்படி உத்தரவு கிடைத்து விட்டது. சேஷப்பா, போலீஸ் ஹெட் கான்ஸ்டபிளுக்குப் 'பாக்கு வெற்றிலே' கொடுக்க, 'நாலஞ்சு எடு' என்றவுடன் ஜின்னப்பா தயங்காமல் முடிச்சை அவிழ்த்தான். தேடுவது போல் பாவனே செய்துவிட்டு சில்லறை இல்லீங்க கணக்கப்பிள்ளே' என்ற வண்ணம் சேஷப்பாவின் முகத்தைப் பார்த்தான்.

'நாலஞ்ஞன்னு சொன்ஞல் 25 ரூபாயப்பா! மேதாவி, நான் அப்ப சொன்னதை இப்பவே மறந்துட்டியா?' என்று சொல்லிச் சிரித்தான் சேஷப்பா.

பணம் குறைந்துவருவதைப் பார்த்த ஜின்னப்பாவிற்குத் தேள் கொட்டியதைப்போல் இருந்தது. தாலூகாக் கச்சேரிக்கு வந்த முதல் அநுபவமே அவனுக்குக் கசந்தது. சுற்றிலும் பழக்கம் இல்லாத ஜனங்கள், யமதூதர்கள்போல் நிற்கும் போலீஸார், அன்பின் வாசனேயே இல்லாத அரசாங்கக் கட்டடம் இவைகளிலிருந்து விடுதலே அடைந்து ஊர் போய்ச் சேர்ந்தால் போதும் என்று ஆகிவிட்டது. 'இனிமேல் கச்சேரிப் பக்கமே கால் வைப்பதில்லே' என்று மனத்துக்குள்ளேயே சத்தியம் செய்து கொண்டான். பண முடிச்சிலிருந்து 25 ரூபாயை எடுத்துச் சேஷப்பாவிடம் கொடுத்தான்.

தாலூகாக் கச்சேரியிலிருந்து புறப்படும்போது ஜின்னப்பாவின் முகம் மகிழ்ச்சியால் மலர்ந்தது. 'என்ன ஆஞலும் தாதாவின் மேல் இருந்த வாரன்ட்டை ரத்துச் செய்துவிட்டோமல்லவா!' என்ற உற்சாகம் பணம் கரைந்த ஏக்கத்தைக்கூடப் பாதி குறைத்துவிட்டது.

லிங்கப்பாவின் வாரிசு விஷயத்தில் தாசில்தார் போட்ட உத்தரவுக்கு விரோதமாக அப்பீல் செய்யும் வேலை ஒன்று பாக்கியிருந்தது. அதையும் முடித்துக்கொண்டு ஊருக்குத் திரும்பி விட்டால் கரை ஏறினாற்போலத்தான் என்ற உற்சாகத்துடன் ஜின்னப்பா, வழியில் சேஷப்பாவிற்கு விஷயத்தை ஞாபகப் படுத்தினான்.

'ஆமப்பா, அந்த வேலையை நான் மறந்தேவிட்டேன். நல்ல வேளை நீ நினைவுபடுத்தினாய். வக்கீல் வீட்டுக்குப் போவோம் வா. ஒரு மணி நேரத்தில் அந்த வேலையை முடித்துக்கொண்டு கடைக்குப் போவோம்' என்று சேஷப்பா அந்த மூவரையும் அழைத்துக்கொண்டு பழக்கமான ஒரு வக்கீலிடம் போனான்.

சேஷப்பா காண்பித்த பத்திரங்கள் எல்லாவற்றையும் தம் தொழிலுக்கு ஏற்ற நிதானத்துடன் வக்கீல் படித்துப் பார்த்தார். சேஷப்பாவை ஏதேதோ கேட்டுச் சிற்சில விஷயங்களைக் குறித்துக் கொண்டார். பிறகு மூக்குக்கண்ணாடியை எடுத்து மேஜைமேல் வைத்தவண்ணம், 'அப்பீல் செய்தால் தாசில்தார் போட்ட ஆர்டர் கட்டாயம் ரத்தாகிவிடும். கேஸ் அசைக்க முடியாமல் இருக்கிறது' என்று நம்பிக்கையூட்டும் பேச்சுகளைச் சொன்னார்.

'அப்படியானால் அப்பீல் தாக்கல் செய்யுங்கள். பார்வதியம்மாவிடமிருந்து வக்காலத்தில் கையெழுத்து வாங்கி வந்திருக்கிறேன். அப்பீல் விண்ணப்பம் நீங்கள் எழுதிக் கொடுத்தால், அந்த அம்மாவின் கையெழுத்து வாங்கி அனுப்புகிறேன்' என்று சேஷப்பா சொன்னான்.

'வக்காலத்தைக் கொண்டுவந்திருக்கிறீர்களா, அதற்கு ஃபீஸ் எங்கே?' என்று நயமாகவே கேட்டு வக்கீல் பெரிதாகக் கொட்டாவி விட்டார்.

'அடேடே, ஆமாம்! வக்கீலுக்கு ஃபீஸ் கொடுக்கணுமே ஜின்னப்பா' என்று சேஷப்பா ஜின்னப்பாவின் முகத்தைப் பார்த்தான்.

வேறொரு சமயத்தில் என்றால் ஜின்னப்பா என்ன சொல்லி இருப்பானோ, இப்பொழுது அவன் லிங்கப்பாவின் வாரிசு உரிமையை ரத்துச் செய்வதில் மும்முரமாக இருந்தான். சட்டென்று முடிச்சை அவிழ்த்து 'எவ்வளவு கொடுக்கணுங்க?' என்று கேட்டான். சேஷப்பா ஒரு விரலைக் காட்டி 100 ரூபாய் என்று ஜாடை செய்தான். ஜின்னப்பாவின் மனம் 'திக்'கென்று இருந்தாலும் அதைக் காண்பிக்காமல் ரூபாயை எண்ணத் தொடங்கினான். சேஷப்பா வக்கீலுக்கு அதைக் கொடுத்து,

இந்தத் தொகைக்குள்ளேயே வேலையை முடித்துக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டான்.

அவருக்கும் இந்த 'விட்டுப் பிடித்தல்' எல்லாம் தெரியும். அதனுல் இப்போ இவ்வளவுதான் கொடுக்கணும்னு தோன்றினுல் கொடுங்க. மேலே விவகாரத்தை நடத்துவதற்கு முன்னுல் இன்னும் கொடுக்கவேண்டும் அல்லவா? என்று ஜாடை காட்டும் தோரணையில் சொல்லிவிட்டு எழுந்தார்.

இந்தச் சந்தர்ப்பத்தை உபயோகப்படுத்திக்கொண்டு சேஷப்பா, 'இதோ நிற்கிருனே, நம்ம பையன், இவன்மேல் ஒரு கிரிமினல் கேஸ் வந்திருக்கிறது. விரோதத்தால் போட்ட பொய்க் கேஸ்தான். இப்பொழுது ஜாமீன் கொடுத்து வாரன்டை ரத்துச் செய்திருக்கிருேம். நாளைக்கு ஒரு வேளை கேஸ் நடந்தால் நீங்கள்தாம் முன்னின்று கேஸை நடத்திக் கொடுக்கவேண்டும். இவன் பரம ஏழை. தருமத்துக்காகத்தான் நீங்கள் வேலை செய்யவேண்டும்' என்று ஒரு பொய்ச் சிரிப்புடன் சொன்னுன் சேஷப்பா.

வக்கீலின் முகத்தில் சிரிப்பு மாறிவிட்டது. புருவங்கள் சுருங்கின. பார்வை தீட்சண்ணியமாயிற்று. மேகம் கவிந்தபின் இடி இடிப்பதுபோல் கர்ஜித்தார். 'கிரிமினல் கேஸ் என்கிறீர்கள்! ஓசியில் கேஸை நடத்தச் சொல்லுகிறீர்கள்! உங்களுக்குத் தெரியாதா? இந்த மாதிரிப் பேச்செல்லாம் வேண்டாம். இந்த ஜன்மத்தில் நான் நூறு ரூபாய் ஃபீசுக்குக் குறைந்து போலீஸ் கேஸை எடுத்து நடத்தியதில்லை. கோர்ட்டில் எனக்கும் மதிப்பு வேண்டாமா?' என்று சொல்லி எரித்துவிடுவதுபோல் பார்த்தார்.

ஆனுல் சேஷப்பா விடவில்லை. 'இது ஊருக்குப் பொதுவான விஷயம். ஹோலிப் பண்டிகை வேட்டையில் ஊரின் கௌரவத்தைக் காப்பாற்றுவதற்காக இவன் சண்டையிட்டு வந்தான். இப்பொழுது ரொக்கம் கொடுக்க வேண்டும் என்றுல் ஊரார் சேர்ந்துதான் கொடுக்கவேண்டும். அதற்காகத்தான் உங்களிடம் சொன்னேன்' என்றுன்.

'கேஸ் ஹியரிங் வரைக்கும் வரட்டும். ஏழை, ஊர்ப் பொது விஷயம் என்பதால் ஒரு பத்து இருபது ரூபாய் குறைக்கலாம். இலவசமாகத் தர்பார் செய்ய முடியாது' என்று சொல்லி வக்கீல் தம் கேலிப் பேச்சுக்குத் தாமே உரக்கச் சிரித்துக்கொண்டார்.

கடைக்கு வரும்பொழுது ஜின்னப்பனிடம் மிஞ்சியிருந்தது இருபத்தைந்தே ரூபாய். சேஷப்பா ஒரு ஜோடி வேஷ்டி, வெல்லக்கட்டி, செருப்பு ஒரு ஜோடி, இப்படி ஏதேதோ

சாமான்கள் வாங்கத் திட்டம் இட்டிருந்தது ஜின்னப்பனுக்குத் தெரியாது. 'கணக்கப்பிள்ளை, என்னிடம் இருக்கும் பத்து இருபது ரூபாயில் நான் சாமான் வாங்கணும். உங்களிடம் ரொக்கம் இருந்தால் நீங்கள் சாமான் வாங்கிக்கொள்ளலாம்' என்று நயமாகவே சொன்னான்.

சேஷப்பா இந்தப் பேச்சைக் கேட்டவுடனே புதிய வேஷம் போட்டான். அடக்கமுடியாமல் அவனுக்குக் கோபம் வந்தது. 'தெரியாமல்தான் கேட்கிறேன் ஜின்னப்பா, கச்சேரி குமாஸ்தாக் களுக்கு, போலீஸாருக்கு, வக்கீலுக்கு எல்லாம் கொடுக்கும்போது உன்னிடம் பணம் இருந்தது. அதற்கெல்லாம் கொடுத்து உன் பை காலியாகலாம்! ஆனால் என் வீட்டுச் சோற்றைத் தின்று விட்டு, நான் உன்னைப் போன்றவர்களுக்காக அலைந்து திரிந்து விட்டு, வெறுங்கையோடு திரும்ப வேண்டுமா? நான் சாமான் வாங்கித் தீரணும்; இதற்கு வழியென்ன?' என்று கேட்டான்.

'வேறு வழி ஏதுங்க? ஊரைப் பார்க்க வண்டியை ஓட்டுவது தான் வழி. கோடை மழை வந்துவிடுவேன் என்று பயமுறுத்து கிறது. ஒரு மணி நேரம் மழை பெய்தால் வெள்ளம் வந்துவிடும். அப்புறம் பட்டணத்திலேயே பழி கிடக்கவேண்டியதுதான். அடுத்தவாட்டி வரும்பொழுது சாமான் வாங்கிக்குங்க' என்று சொன்னான் ஜின்னப்பா.

'அதெல்லாம் முடியாதப்பா, நான் இப்பப் போய் வக்கீல் கிட்டேயிருந்து 50 ரூபாய் வாங்கிட்டு வரேன். நாளைக்கு வக்கீலுக்கு இன்னும் 100 ரூபாய் கொடுப்பாயல்லவா? அதோடு இந்த 50 ரூபாயையும் சேர்த்து அனுப்பிச்சிடு' என்று சேஷப்பா கண்டிப்பாகச் சொன்னான். மளிகைச் சாமான்களையும் துணிமணி களையும் பேரம் பேசிவிட்டுப் பணம் கொண்டுவருவதாகச் சொல்லி, வக்கீல் வீட்டுக்குப் போனான்.

ஜின்னப்பா 'தன் தந்திரம் தன்னையே ஏமாத்திவிட்டதே' என்று புலம்பிக்கொண்டு உட்கார்ந்திருந்தான். மூன்றும் மனிதனாக இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டு நின்ற தாதா 'என்ன ஜின்னச் சித்தப்பா, ரொம்பக் கவலைப்படறீங்களே! எடுத்த வேலையை முடிக்கிறதுக்குள்ளே இன்னும் எத்தனை பேர் கையையும் வாயையும் நிரப்பணுமோ' என்று ஆறுதல் சொல்ல முயன்றான். ஜின்னப்பா தலைதலையாய் அடித்துக்கொண்டான். 'என்ன சொல்லட்டும் தம்பி! அழுகிற பசங்களுக்கு ஒரு காலணாக் கொடுக்க முடியறதில்லை. பாத்துகிட்டு இருக்கிறச்சேயே இந்தக் கணக்கப்பிள்ள 50 ரூபாயைக் கழட்டிக்கிட்டானே' என்று பெருமூச்சு விட்டான் ஜின்னப்பா.

'காலேச் சுத்தின பாம்பு கடிக்காமல் போகுமா?ன்னு கௌடர் சொல்லுவாராம். அப்படியே நடத்திட்டான் இந்தக் கணக்கப் பிள்ளே. வேலே ஆகனுமாஞ இப்படிப்பட்டவங்க காலிலேதான் விழவேண்டியிருக்கு சித்தப்பா' என்முன் தாதா.

'அரசாங்கக் கச்சேரித் திண்ணே பகாசுரன் வயிறுதான்!' இந்தச் சங்கதி பெரியவங்களுக்குத் தெரியும். அதனுலேதான் ஊர் விவகாரங்களே ஊரிலேயே தீர்ப்புச் செய்தாங்க. கச்சேரிக்கு வந்ததிலே இருந்து நான் பார்த்துட்டேயிருக்கேன் பணத்தைப் புளியங்கொட்டையாப் பண்ணிட்டான் மகாராஜன். மூணு மணி நேரத்திலே பண முடிச்சைக் காலியாக்கிக் கடனேயும் சுமத் திட்டான். ஒரே நாளிலே ஒரு வருஷத்து விளேச்சலேயும் செலவு செய்துட்டா என்னேப் போல ஏழைங்க பிழைப்பு எப்படி நடக்குங்கற கவலே அவனக்கு இருக்கா?' என்று தனக்குள்ளேயே பேசிக்கொண்டான் ஜின்னப்பா.

போகப் போக பேச்சு ஊரைப்பற்றித் திரும்பியது. பாபு சாஹேபின் கோழைத்தனம், கௌடரின் சாவு, படதையாவின் தில்லுமுல்லுகள் ஆகிய எல்லாம் அவர்களுடைய அரட்டையில் இடம் பெற்றன. ஜின்னப்பா, பழைய சாமியாருடைய உயர்ந்த குணங்களேக் கதையாகச் சொன்னுன். 'அவருடைய புண்ணிய பலத்தால்தான் இந்தப் படதையாவின் பொட்டை அதிகாரம் இன்னும் நடந்துகொண்டிருக்கிறது' என்பது அவனுடைய அபிப்பிராயம். பாபக்குடம் நிறைந்துதான் ஆகவேண்டும். நிறைந்த பிறகுதான் அதற்கு வீழ்ச்சி. 'ஊர்ப் பெரியவர்கள் எல்லாம் சேர்ந்து ஏன் வேறு சாமியாரைத் தேர்ந்தெடுக்கக் கூடாது?' என்முன் தாதா.

வக்கீலின் வீட்டில் இருந்து சேஷப்பா வந்துவிட்டதை அவர்கள் கவனிக்கவில்லே. 'என்ன ஜின்னப்பா! புதுசா யாரைத் தேர்ந்தெடுக்கணும்னு சொல்றே?' என்று கேட்டான். ஜின்னப்பாவுக்கு நேராகப் பதில் சொல்ல இஷ்டம் இல்லே. அதனுல், 'என்னங்க, அப்பறம். வக்கீல்கிட்ட இருந்து பணம் கொணுந்து சாமானெல்லாம் வாங்கீட்டீங்களா?' என்று சிரித்துக்கொண்டே கேட்டான்.

சேஷப்பாவுக்கும் பேச்சை வளர்க்க இஷ்டம் இல்லே. இருட்டுவதற்குள் சாமானே வாங்கிக்கொண்டு ஊருக்குத் திரும்ப விரும்பினுன். இரண்டொரு நாட்களில் மாஜிஸ்ட்ரேட் பாதள்ளிக்கு வரப்போவதாக, வழியில் பார்த்த குமாஸ்தா, புதிய செய்தியைச் சொன்னுன். அதனுல் சேஷப்பாவின் சாமான் பட்டியலில் பெரிய மாறுதல் ஏற்பட்டது. வெல்லத்தோடு

சர்க்கரை, வேர்க்கடலையோடு வாதுமை, மஞ்சளோடு கேசரி முதலிய சாமான்கள் சேர்ந்தன.

வியாபாரத்தை முடித்துக்கொண்டு சாமான்களை வண்டியில் ஏற்றியபோது இருட்ட ஒரு மணி நேரம் இருந்தது. பாதள்ளிப் பக்கத்தில் மேகங்கள் நிறைந்து, 'கன்று போட்ட எருமையின் மடியைப் போல் இறங்கிநின்றன. பகலின் வெளிச்சத்திலும் மின்னல் கொடி ஒன்று வளைந்து வளைந்து மின்னிக் கண்ணைப் பறித்தது. இடியும் உறுமிக்கொண்டிருந்தது. மழைக்கு ஏற்பாடான ஆர்ப்பாட்டத்தைக் கண்ட ஜின்னப்பா, 'விடிய ஜாமத்துக்குக் கிளம்பினால் நல்லது' என்று சொன்னான். சேஷப்பா கேட்கவில்லை. 'சே, சே! தாசில்தார் வரப்போகிறார் மகராஜா! பொழுது விடிவதற்குள் ஊர்போய்ச் சேர்ந்துவிட வேண்டும்' என்று சொல்லிவிட்டான். புறப்பட்டே தீரவேண்டி இருந்தது. அது வரையிலும் தாலூகாக் கச்சேரியில் தங்கியிருந்த அஞ்சல் மல்லப்பன், 'தாசில்தார் ஊருக்கு வருவார்' என்ற உத்தரவை எடுத்துக்கொண்டு இவர்களோடு வந்து சேர்ந்துகொண்டான்.

சாவகாசமாகப் புறப்பட்ட வண்டி, பாதி வழிகூடத் தாண்ட வில்லை. அதற்குள் காற்றின் ஆர்ப்பாட்டம் அதிகமாகித் தரையிலிருந்து புழுதிமேகம் எழுந்து வானத்தைக் கவிந்து கொண்டது. 'இயற்கைக்குச் சித்திரை வெயில் காய்ந்து காய்ந்து பைத்தியம் பிடித்துவிட்டதோ?' என்று தோன்றியது அந்தக் காட்சி. பரிசத்தால் மட்டுமே உணரமுடியும் காற்று, அப்போது கண்ணுக்கே தெரிந்தது. வழியில் இருந்த மரம், செடிகள் எல்லாம் பேயாட்டம் ஆடி 'ஹோ' வென்று கூச்சல் இட்டன. விரிந்த வயல் வெளியில், இப்பொழுது வெறும் கரும் கோடாகத் தெரிந்த தொடுவானத்திலிருந்து ஓடோடிவரும் சூறைக்காற்று நிலத்தையே விழுங்கிவிடும்போல் இருந்தது.

சூரியன் மறையாவிட்டாலும் நள்ளிரவைப்போல் காரிருள் பரவியது. சூறைக் காற்றின் 'உய் உய்' என்ற சத்தம் வானத்தில் எதிரொலிப்பதுபோல் இந்தக் கோடியிலிருந்து அந்தக் கோடி வரையிலும் வானம் குமுறியது. மின்னல்கள் சமிக்ஞை செய்தன. அந்த ஒளியைக் கண்டு எருதுகள் மிரண்டன. மழை வந்தேவிட்டது! வண்டியை ஒரு மரத்தின் அடியில் நிறுத்தினார்கள். நல்ல வேளையாகப் பக்கத்திலேயே ஒரு தோட்டம் இருந்தது. தாதா, ஜின்னப்பா, மல்லப்பன் இம் மூவரும் வரிசைப் பிரகாரம் சாமானைச் சுமந்துகொண்டு போய்த் தோட்டத்துக் குடிசையில் சேர்த்தார்கள். எருதுகளை அவிழ்த்துத் தோட்டத்துக்குக் கொண்டுபோனார்கள்.

அன்று மழைக்கு என்னதான் பலம் வந்ததோ? ஓயாமல் பெய்துகொண்டே இருந்தது. சூறைக் காற்று மனம் போனபடி வீசி நிலத்திலும் வானத்திலும் பேரிரைச்சலை உண்டாக்கியது. அத்துடன் போட்டி இடுவதுபோல் மழையும் ஜோராகப் பெய்யத் தொடங்கியது. பூதாகாரமான அரக்கன் ஒருவன் போர் முழக்கம் செய்வதுபோல் இடி இடித்தது. காற்றை ஏமாற்ற நினைத்ததுபோல் மின்னல்கள் அற்புதமாக மின்னி மறைந்தன. திசைகளெல்லாம் இருளோடு கலந்துவிட்டன. மழையின் கடுமையான நிலையில் வானம், பூமி எல்லாமே ஒன்றாக இருந்தது.

நள்ளிரவு வரையில் ஒரே சீராக அதிகமாகப் பெய்த மழை, திடீரென்று குறைந்துவிட்டது. மெதுவாக எங்கும் மௌனம் நிலவியது. இதுவரையிலும் பட்ட துக்கம், தாபம், எல்லா வற்றையும் ஒரேயடியாக மறந்து விண்ணும் மண்ணும் பழையபடி இனிய மௌனத்தில் லயித்துவிட்டன. மழையால் ஏற்பட்ட சிறு வாய்க்கால்கள் செய்த சலசலப்பு மாத்திரம் கேட்டுக் கொண்டிருந்தது. ஜின்னப்பாவின் வண்டி திரும்பவும் பயணத் துக்குத் தயாராயிற்று. அப்பொழுது பாதள்ளி வரைக்கும் நேரான வழி இருந்ததால் முன்னேறத் தடை இல்லை. வண்டி மெதுவாகச் சென்றது.

தற்செயலாக வந்த மழையால் வண்டியில் இருந்தவர்கள் யாரும் பயந்துபோய்விடவில்லை. இது அவர்களுடைய தினசரி அநுபவம். ஜின்னப்பா, ஒரு காலத்தில் தனக்கு நேர்ந்த மழையின் அநுபவங்களை எல்லாம் சொல்லத் தொடங்கினான். அஞ்சல் மல்லப்பன் சமயோசிதமாக அங்கங்கே திருத்தங்களைச் சொன்னான். ஜின்னப்பா புகைக் குழாயைப் பற்றவைத்துக் கொண்டு சுகமாகப் புகைத்துக்கொண்டிருந்தான். ஒரு தடவை சக்கிமுக்கியைத் தட்டியபோது, பேச்சுவாக்கில் கவனிக்காத தால் நெருப்புப் பொறி ஒன்று சேஷப்பாவின் வேஷ்டியின்மேல் விழுந்தது. 'கொஞ்சம் பார்த்துப் பத்தவை அப்பனே! வண்டியே பத்திக்கொள்ளப் போவுது' என்று சேஷப்பா கேலி செய்தான்.

வண்டி, அப்படியும் இப்படியும் தடுமாறிக்கொண்டும் வாய்க்கால்களைத் தாண்டிக்கொண்டும் முன்னேறியது. மையிருட்டாக இருந்ததால் வண்டி 'எவ்வளவு தூரம் வந்திருக்கும்?' என்பதை அறியச் சாத்தியப்படவில்லை ஆனால் ஜின்னப்பாவுக்கு இந்த விஷயங்களில் சூட்சுமமான அறிவு இருந்தது. கணக்குப்பிள்ளை, வண்டியின் நடுவில் தெப்பமாக நனைந்து உட்கார்ந்துகொண்டு களைப்பினாலோ சலிப்பினாலோ கொட்டாவிவிட்டான். 'அலுப்புத்தட்டிவிட்டதா? சேஷப்பா

அவங்களே! ஆயிடுச்சு; இன்னும் ஒரு கல் தாண்டிவிட்டால் ஊருக்குள்ளே போய்விடுவோம்' என்று சேஷப்பாவுக்கு ஜின்னப்பா ஆறுதல் சொன்னான். அவன் சொன்னபடியே வண்டி பாதள்ளிக்குப் பக்கத்தில் வந்தபோது ஊர்ப்பகுதியில் எழுந்த தீ ஆகாயத்தை அளாவி எரிந்துகொண்டிருந்தது. அதன் ஒளியில் இதுவரையில் தெரியாமல் இருந்த பாதள்ளிப் பகுதி மரம், செடிகள் எல்லாம் நன்றாகத் தெரிந்தன. மேகங்க ளெல்லாம் சூரியோதயத்தின் செந்நிறம் நிரம்பியதுபோல் சிவந் திருந்தன. இந்தக் காட்சியைக் கண்ட ஜின்னப்பன் திடுக் கிட்டான். ஒரே சமயத்தில் அவன் கண்ணெதிரில் தன் தோட்டம், அங்கிருந்த வைக்கோல் போர், ருத்திர தாண்டவம் செய்யும் நெருப்பு எல்லாம் தோன்றின. தன் சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்ள எண்ணி அவன் அஞ்சல் மல்லப்பனைப் பார்த்து, 'அந்தத் தீ நம்ம தோட்டத்திலேதானா, பாரப்பா?' என்று சொன்னான்.

மல்லப்பனும் பயந்துவிட்டான். 'ஆமாம், சித்தப்பா! ஜாகீர்தாருடைய தோட்டத்து வழியாக அந்தப் பெரிய ஆலமரம் இந்த வெளிச்சத்திலே தெரியுது. அப்படீன்னாக்க, உங்க தோட்டப்பக்கந்தான் நெருப்புப் பிடிச்சிருக்குதூன்னு தெரியுது' என்று மல்லப்பன் அவன் சந்தேகத்தை உறுதிப்படுத்தினான். 'ஜாகீர்தார் தோட்டத்தில் இப்படி இவ்வளவு தீப்பற்றும் படியாக வைக்கோல் போரே இல்லே, மல்லப்பா! பெரிய குடிசைகளும் இல்லே. இந்தப் பக்கத்திலேயே என் தோட்டம் ஒண்ணிலேதான் வைக்கோல் போர் இருக்கு. அதுக்குத்தான் தீப் பத்தியிருக்காப்பலே இருக்குது' என்று நெஞ்சு வெடிக்கக் கம்மிய குரலில் சொன்னான் ஜின்னப்பா.

வண்டியின் நடுவில் தூங்கி வழிந்துகொண்டு உட்கார்ந் திருந்த சேஷப்பாவுக்கு இந்தத் தீ விஷயம் தெரியவில்லே. அவனுக்குப் பின்னால் உட்கார்ந்திருந்த தாதாவுக்கும் வண்டிக் கூடு மறைத்திருந்ததால் இது தெரியவில்லே. அவன் காதில் இந்தச் செய்தி விழுந்தவுடன், அவன் டக்கென்று வண்டியி லிருந்து குதித்துத் தீயைப் பார்த்தான். 'அந்தத் தீ ஜின்னப் பாவின் வைக்கோல் போரிலிருந்துதான் வருகிறது' என்பது உடனே அவனுக்குத் தெரிந்துவிட்டது. அவன் வண்டியின் முன் பக்கம் ஓடிவந்து 'பயப்படவேண்டாம் சித்தப்பா, ஓடிப்போய் அந்த இடத்தைப் பார்த்துவிட்டு ஊருக்குள் வருகிறேன். வண்டி போய்க்கொண்டிருக்கட்டும்' என்ற தாதா, பதிலேக்கூட எதிர்பாராமல் மான் ஓடுவதுபோல் தீயை நோக்கி ஓடினான்.

'அடே, இன்னும் யாரோடேயானு சண்டை கிண்டை வச்சுக்காதே!' என்று ஜின்னப்பன் உரக்கக் கத்தியது அவன் காதில் விழவில்லை.

வேறு வழியில்லாமல் வண்டி நகர்ந்தது. வயிற்றுச் சங்கடத்தைத் தாங்கமுடியாமல் ஜின்னப்பா சாட்டையால் எருதுகளை இரண்டு வாங்கினன். அடிக்குப் பயந்து அவை ஓடின. 'கோடைக்காலம். காய்ந்த வைக்கோல் போர். நெருப்புப் பத்திகிட்டா மிஞ்சுமா?' என்று சொல்லி, மல்லப்பன் அத்தனை வைக்கோலும் போயிருக்குமே என்று மறுகினன். ஜின்னப் பாவோ கவலையால் தன்னையே மறந்துவிட்டான். வண்டி மாடுகள் அடிக்குத் தப்பவேண்டும் என்று ஓடியதில் வழி தவறி விட்டன. அவைகளின் நெற்றிக் கயிற்றைப் பிடித்து நிறுத்த வேண்டும் என்றுகூட அவனுக்குத் தோன்றவில்லை. நரைத்த மீசையால் எடுப்பாகத் தெரிந்த அவனுடைய முகத்தில் கோபமும் பயங்கர அமைதியும் குடிகொண்டிருந்தன. 'ஜின்னப்பா! நெருப்புத் தானகப் பற்றிக்கொள்ளவில்லை. நீ தாதாவை ஜாமீனில் விடுதலை செய்துகொண்டு வந்ததற்காக உனக்குப் பாடம் கற்பிக்கவேண்டும் என்று, படையா செய்த அயோக்கியத்தனம் இது. எனக்கு என்னமோ அப்படித்தான் தோணுதப்பா' என்று, இன்னும் கொஞ்சம் தூண்டிவிட்டான் சேஷப்பா.

இதைக் கேட்ட ஜின்னப்பனின் ரத்தம் ஆத்திரத்தால் கொதித்தது. அதுவரையிலும் அவனுடைய சந்தேகம் யார் மேலேயும் நிலைக்கவில்லை. சேஷப்பாவின் பேச்சால் சந்தேகம் உறுதி பெற்றது. 'என்னுடை வைக்கோல் போரைச் சுட்டு என் அதிர்ஷ்டத்தையே சுட்டுவிட்டதாகப் படையா நினைச்சிட் டிருந்தால், அவனுக்கு மூளை இல்லேன்னு காட்டிக் கொடுக் கிறேனுங்க' என்று சொல்லிக் கோபம் தாங்கமுடியாமல் மாட்டுக்கு மற்ருெரு அடி கொடுத்தான் ஜின்னப்பா.

'அது சரி, சித்தப்பா, பஞ்ச காலத்திலே மனுஷன் எங்கிருந்தாவது தானியம் கொணர்ந்து சாப்பிட்டுப் பொழச் சிப்பான். வாயில்லாப் பிராணிகள், வைக்கோல் இல்லாமல் பட்டினி கிடந்து சாகும், பாவம். ராவிலே இருந்த ஐந்தாறு வைக்கோல் போர்களையும் சுட்டுட்டானு, அவன் மிருகமா? மனுஷனு?' என்ற மல்லப்பன், கோபத்தால் உதட்டைக் கடித்துக்கொண்டான். ஜின்னப்பனுக்கு வைக்கோல் போர் எரிந்ததைவிட, 'ஊருக்குக் கொள்ளிவைக்கும் அயோக்கியர்கள் மலிந்துவிட்டார்கள் அல்லவா?' என்ற துக்கமே மேலோங்கி

நின்றது. 'மல்லா! கடவுள் தோட்டத்துக் கெணத்திலே கடல் போலத் தண்ணியைக் கொடுத்திருக்கான். உழைச்சுப் பயிர் பண்ணக் கையிலே நல்ல பலத்தைக் கொடுத்திருக்கான். பூமாதேவி மனசு வெச்சா இதப்போலப் பத்துமடங்கு விளைச்சலைக் காண்பிப்பேன். ஒரு மாசத்துக்குள்ளாற, மக்காச் சோளக் கதிரைப் பயிராக்கி மாடுகளுக்கு வந்த தீனிப் பஞ்சத்தை வெரட்டிடுவேன். ஆனல் ஏழைங்க கவலை இல்லாமல் வாழ முடியாம போயிடுச்சே. இந்தக் கொள்ளி வைக்கிறவங்க தொல்லையை எப்படிப் போக்கறது? இதுதான் எனக்கு ரொம்பக் கவலையா இருக்கு' என்று மற்ருெரு முறை தனக்குள்ளேயே பிரசங்கம் செய்துகொண்டான் ஜின்னப்பா.

இதுவரையிலும் பேசாமல் இருந்த சேஷப்பா 'ஜின்னப்பா, நீ மனசுவச்சால் வழி இருக்கு. ஊர்ப் போக்கிரிகளுக்கெல்லாம் படையாவின் மடந்தான் குடியிருப்பு. கொஞ்ச நாளாக அவனுடைய பேரே கெட்டுப்போச்சு. அதனலே நீ ஊர்ல இல்லாத சமயம் பார்த்து உன் வைக்கப்போருக்குத் தீ வைச்சு, தான் ரொம்பப் பெரிய மனுஷன்னு பெயர் வாங்க அவன் இப்படிச் செஞ்சிருக்கான். அவனை ஊரெவிட்டு ஓட்டிஞல் இந்தச் சோம்பேறிகள் கொட்டமெல்லாம் அடங்கிப்போகும். அவனை வெரட்டறதும் அப்படி ஒண்ணும் கஷ்டமில்லை. உன் வைக்கப் போருக்குத் தீ வச்சுட்டான்னு நாளைக்கு அவன்மேலே ஒரு பிராது கொடு; எதிர்பாராமல் தாசில்தார் நம் ஊருக்கு வரப் போருர். அவர் கால்லே விழுந்து சொல்லிக்கோ. பாக்கி எல்லாத்தையும் என்கிட்டே விட்டிடு' என்று யோசனை சொல்லிப் பொடியை உறிஞ்சினன்.

வேறு சமயங்களில் என்ருல் ஜின்னப்பா இந்த யோசனையைச் சரியென்று ஒப்புக்கொண்டிருப்பான். ஆனல் கோர்ட் ஏறுவ தென்ருல் வீடு வாசல் எல்லாவற்றையும் விற்றுச் சுட்டு வக்கீலுக்கும் சாட்சிகளுக்கும் பணத்தைக் கொண்டுபோய்க் கொட்ட வேண்டும் என்று அவனுடைய புதிய அனுபவம், அவனுக்குத் தெரிவித்தது. அதனல் நேராகப் பதில் சொல் லாமல், 'ஆச்சாரய்யா நமக்கெல்லாம் பெரியவர். அவர் சொல்றபடி செய்வோம்' என்று பட்டுக்கொள்ளாமல் பதில் சொன்னன்.

வண்டி, மேட்டிலிருந்து பள்ளத்தில் இறங்கிச் சென்றது. மேட்டில் இருந்தபோது 'தக தக' வென்று சுடர்விட்டு எரிந்த தீக் கொழுந்துகள் தெரிந்தன. பள்ளத்துக்கு வந்ததும் ஆகாயத்தில் பரவிய சிவந்த ஒளி மட்டும் தெரிந்தது. கிழக்கு வெளுக்க மூன்று மணி நேரம் இருந்தபோதிலும் ஜின்னப்பனின் தோட்டத்தில் அருணேதயம் ஆகிவிட்டதுபோல் தெரிந்தது.

ஜின்னப்பனுடைய வண்டி ஊருக்குள் நுழைந்தபோது ஊரே தூக்கத்தில் ஆழ்ந்திருந்தது. வண்டி ஓசையைக் கேட்டு நாய்கள் குரைந்ததைத் தவிர எங்கும் அமைதியே குடிகொண்டிருந்தது. யாருக்கும் ஜின்னப்பனுடைய தோட்டத்தில் தீப் பற்றிய செய்தி தெரியவில்லை. அவனுடைய மனைவி மக்களும்கூடக் கவலை யற்றுத் தூங்கிக்கொண்டிருந்தார்கள். முதல் நாள் இரவு கல்லால் அடித்ததுபோல் பெய்த மழையைப் போலவே நெருப்புப் பிடித்ததும் இயற்கையின் விளையாட்டில் ஒன்றாயிற்று. ஆபத்தின் சொரூபம் அநேகமாக மனிதனின் கண்ணுக்குத் தெரிவதேயில்லை. அதன் பின்விளைவுதான் நம் கண்ணுக்குத் தெரிகிறது. நடுக் காட்டில் யாருக்கும் தெரியாமல் இடி விழுந்ததுபோல், ஜின்னப் பனின் தோட்டத்து நெருப்புத் தன் பராக்கிரமத்தையெல்லாம் விளம்பரம் செய்துவிட்டு அடங்கிவிட்டது.

ஜின்னப்பன் நேராக வீட்டுக்குப் போகாமல் வண்டியைக் கோட்டையிலிருந்து தோட்டத்துப் பக்கம் ஓட்டினான். ஆனால் தோட்டத்துக்குப் போய் வைக்கோல் போர் எல்லாம் சாம்பலாய்ப் பொசுங்கிவிட்ட காட்சியைக் காணச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. அவனுடைய தோட்டம் ஊரிலிருந்து இரண்டு மைல் தொலைவில் இருந்தது. ஒரு மைல் தூரத்தில் உள்ள பள்ளத்தைத் தாண்டும்போதே எதிர்ப்புறத்தில் இருந்து, தாதா ஒருவனைக் கையைப் பின்கட்டாகக் கட்டி உதைத்தே முன்பக்க மாகத் தள்ளிக்கொண்டு வந்தான்.

'என்ன சேதி தாதா' என்று கேட்டான் ஜின்னப்பா.

'சித்தப்பா எல்லாம் நல்லாத்தான் நடந்திருக்கு. தலையாரி கல்லனைப் பிடிச்சிட்டு வந்திருக்கேன். இவன்தான் போருக்குத் தீ வெச்சவன். இவன் கையை வெட்டிப்போட்டு இனிமே ஊர்ல இந்த மாதிரி வேலையெல்லாம் நடக்காம செய்யணும்னு பாத்தேன். ஆனா இந்தப் பிச்சைக்காரத் தேவடியா மகன், கையை வெட்டினா, இனிமேல் பிச்சை கேட்டுப் பிழைத்து ஊருக்குச் சுமையாப் போயிடுவானேன்னு அப்படியே கூட்டியாந் துட்டேன். உன் இஷ்டப்படி செய்' என்றான் தாதா.

'அவனை முதலில் வண்டியில் தூக்கிப் போடு' என்று ஜின்னப்பா வண்டியைத் திருப்பினான்.

'வண்டியில் ஏறு' என்று கல்லனைப் பார்த்துச் சொல்லி, ஒரு குத்துக் குத்தினன் தாதா. கல்லன் தள்ளாடிக்கொண்டே, வண்டிக்குப் பக்கத்தில் வந்து நின்ருன். கைகளைக் கட்டியிருந்த தால் அவனல் வண்டியில் ஏற முடியவில்லை. தாதா அவனை வண்டியில் தூக்கிப் போட்டான்.

வண்டி ஊரைப் பார்க்க ஓடியது. வண்டியின் ஆட்டத்தி னலோ, குடிபோதையாலோ, பயத்தினலோ கல்லன் வண்டியி லேயே வாந்தி எடுத்தான். சாராய நாற்றம் வண்டியில் சூழ்ந்து கொண்டது. சேஷப்பா மூக்கைப் பிடித்துக்கொண்டான்.

வாந்தியானபின் போதை தெளிந்துவிட்டதால் கல்லனுக்குத் தான் எங்கு இருக்கிருேம் என்பது தெரிந்தது. ஜின்னப்பனின் காலைப் பிடித்துக்கொண்டு அழுதுகொண்டே 'என் தப்ப மன்னிச்சிடு சித்தப்பா' என்று சொல்லிக் கும்பிட நினைத்தான். கையைத் தூக்க முடியாதது நினைவுக்கு வந்தது. சிறுபிள்ளையைப் போல் அழுது புலம்பினன்.

'வாயை மூடு, தேவடியா மவனே' என்று தாதா மறுபடியும் ஒரு குத்து விட்டான். அதன் பயனகக் கல்லன் மறுபடியும் வாந்தி எடுத்தான். போதை நன்ருகத் தெளிந்துவிட்டது.

'போருக்குத் தீ வைச்சது தப்புதான் சித்தப்பா. உன் மகனு நினைச்சிகிட்டு என்னை மன்னிச்சிடு சித்தப்பா. உனக்கான நஷ்டத்தைப் படதையாகிட்டே வாங்கிக் கொடுத்திடறேன். தண்ணி போட்டதாலே சுயபுத்தி இல்லை' என்று முறையிட்டுக் கெஞ்சினன் கல்லன். அவனுடைய அழுகையோடும் புலம்ப லோடும் வண்டி ஊருக்குள் புகுந்தது. அஞ்சல் மல்லப்பன் முன்னமேயே ஊருக்குள் போய்விட்டதால், தீப் பற்றிய செய்தியை ஊரெங்கும் பரப்பிவிட்டான். ஜனங்கள் கும்பல் கும்பலாக வண்டியை நோக்கி ஓடி வந்துகொண்டிருந்ததைப் பார்த்த ஜின்னப்பன், 'தாதா! கல்லனை விடுவித்துகிட்டுப் போகப் படதையாவினுடைய ஆளுங்க வருப்பலே இருக்கு' என்ருன்.

'படதையா அவ்வளவு தாராள மனம் படச்சவன்னு நினைக்கறயா, சித்தப்பா! கல்லனை விடுவிச்சுகிட்டுப் போகக் கூடிய வீரன் யாருமே அவன் படைலே இல்லே! பயப்படாதே! நேரா வண்டியைச் சாவடிக்கு ஓட்டு' என்று தாதா தைரியம் சொன்னன்.

எதிரில் வந்தவர்கள், படதையாவின் ஆட்களாக இராமல் தனக்கு வேண்டியவர்களாகவே இருந்ததைக் கண்டு ஜின்னப்பன் தைரியம் அடைந்தான்.

சாவடிக் கம்பத்தில் கல்லனைக் கட்டிப்போட்டார்கள். ஊர் மக்கள் எல்லோரும் சாவடியில் கூடிவிட்டார்கள். வந்தவர்கள் எல்லோரும் கல்லனுடைய கன்னத்தில் ஓர் அறை கொடுத்து, 'வாயில்லா ஜீவன்களின் தீவனத்துக்கு நெருப்பு வைக்கும்படி அதுக உனக்கு என்ன செய்தன?' என்று காறித் துப்பினார்கள்.

இருட்டோடு எழுந்திருந்து பாளாச்சார், ஸ்நானத்துக்காக ஆற்றுக்குப் புறப்பட்டபோது, அவரிடம் அஞ்சல் மல்லப்பன் செய்தியைச் சொன்னான். 'அவர் உடனே சாவடிக்கு வர வேண்டும்' என்று கணக்கப்பிள்ளை சேஷப்பா சொன்னதாகவும் தெரிவித்தான். பாளாச்சார் அதைக் கேட்டுவிட்டு, 'நான் வந்து ஒன்னும் செய்யப்போறதில்லே, மல்லா! நீ முதல்லே போய்த் தலையாரி கல்லன்மேல் யாரும் கைவைக்காமல் பார்த்துக்கொள்' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். பூஜை சந்தியாவந்தனம் எல்லாம் முடிந்தபின் விடிந்து ஒரு மணி நேரத்துக்குமேல் சாவடிக்கு வந்தார். அதற்குள் ஊர் ஜனங்கள் எல்லோருமே சாவடிக்கு முன் கூடிவிட்டார்கள்.

ஊர்ப் பஞ்சாயத்தும் சாவடியில் கூடியது. தாற்காலிக மணியக்காரர் உத்தியோகம் பார்க்கும் லிங்கப்பனும் ஜனங்களின் அழைப்புக்கு இணங்க மடத்திலிருந்து சாவடிக்கு வந்தான். படதையா மட்டும் 'தம்மால் வரமுடியாது' என்று சொல்லி விட்டார். பாபு சாஹேபும் 'தனக்கு ஜுரம்' என்று சொல்லி நழுவிக்கொண்டான். ஜனங்கள் எல்லோரும் பாளாச்சாரின் வரவுக்காகக் காத்துக்கொண்டிருந்தார்கள்.

'பாளாச்சார் வந்தபின் ஜின்னப்பனுடைய வைக்கோல் போருக்குத் தலையாரி கல்லன் தீ வைத்தது விஷயமாக மேற் கொண்டு முடிவு சொல்லவேண்டும்' என்று தீர்மானம் ஆயிற்று.

தலையாரி கல்லன் ஜின்னப்பனுடைய போருக்குத் தீ வைத்த போது குடிபோதையினால் தன் தலைப்பாகையை அங்கேயே போட்டுவிட்டுப் போயிருந்தான். தீயின் ஒளியில் தலைப்பாகை யையும் அங்கே தெரிந்த காலடிச் சுவடிகளையும் பார்த்துக் கொண்டே போன தாதாவுக்குத் தோட்டத்து வரப்பின்மேல் கல்லன் படுத்திருந்தது தெரிந்தது. அவனுக்குத் தன் நினைவே இல்லை. குடியால் மயங்கி விழுந்து கிடந்தான். அவன் கைகளைப் பின்கட்டாகக் கட்டி உதை கொடுத்து எழுப்பியபின் ஒன்றும் புரியாமல் அவன் தாதாவின் பின் சென்றான். அப்பொழுது எதிரே ஜின்னப்பனின் வண்டி வந்தது. அவனை வண்டியில் உட்கார வைத்துச் சாவடிக்குக் கொண்டுவந்தார்கள். இதுதான் தாதா கொடுத்த வாக்குமூலத்தின் சாரம்.

''குடிபோதையில் கல்லன் அங்கே விழுந்திருக்கலாம். அதனால் 'அவன் தான் போருக்குத் தீ வச்சிருப்பான்'னு சொல்ல முடியுமா?'' என்று லிங்கப்பா கல்லனுக்குப் பரிந்து முதலிலேயே கேட்டுவிட்டான்.

சபைக்கு வெளியில் சற்று எட்ட உட்கார்ந்திருந்த துடுக்கான ஒருவனுக்கு இது பொறுக்கவில்லை. தன் முன்னால் உட்கார்ந்திருந்த ஒருவனுக்குப் பின் மறைந்துகொண்டு, 'சும்மாக் குந்திகிட்டுப் பஞ்சாயத்தாருங்க சொல்றதைக் கேக்கறதுக்கு, என்ன கொடுக்கணுமாம்; கேளுங்கடா!' என்று கத்தினன்.

லிங்கப்பாவுக்கும் கோபம் வந்தது. 'நானும் பஞ்சாயத்துலே ஒத்தந்தான். ஊருக்கு மணியக்காரன். யார் தப்புச் செஞ்சாங்க. யார் செய்யலேன்னு விசாரிக்க எனக்கும் அதிகாரம் உண்டு' என்று அடித்துச் சொன்னன்.

''நீ ஏன் கஷ்டபட்டுக்கறே லிங்கப்பா! கல்லன் சொல்றதை முதல்லே கேட்டுப்போம். அவன் 'நான் தப்புச் செய்யலே'ன்னு வாதம் செய்தால், அப்பறம் ஒன்னோட வக்காலத்தை நடத்து வியாம்'' என்று பாளாச்சார் நயமாகவே லிங்கப்பாவின் வாய்க்குப் பூட்டுப்போட்டார்.

கல்லன், தாதாவிடமும் ஊராரிடமும் அடிபட்டு நொந்து விட்டான். தன்னுடைய குற்றத்தை இதற்கு முன்பே பலரிடம் ஒப்புக்கொண்டிருந்தான். அவனுக்கு இப்பொழுது லிங்கப்பாவின் உதவியால் லாபம் ஒன்றும் இல்லை. தன் வாழ்க்கையிலேயே அவன் செய்த முதல் குற்றம் இது. பஞ்சாயத்தாருக்குக் கைகூப்பிக் கண்ணீர் விட்டுக்கொண்டே இப்படிச் சொன்னன் :

''ஐயா, தகப்பன்மார்களே! நான் ஊர்த் தலையாரி. எல்லாருடைய எச்சிலையும் தின்று வளர்ந்தது இந்த ஒடம்பு. சோறு போட்டு வளர்த்த பஞ்சாயத்தார் முன்னலே பொய் சொன்னா, இந்த நாக்கை அறுத்திடுங்க. மடத்துலே இருந்த பழைய பெரிய சாமியார் அவங்ககிட்டப் போய்ச் சேவை செய்வேனுங்க. அப்பறம் அந்தப் பீடத்துக்குவந்த படதையா சாமியாருக்கும் சேவை செய்யப் போவேன். சந்தோசமா இருக்கறத்துக்காக அடிக்கடி தண்ணி கொடுப்பாரு. எனக்கும் பழக்கம் ஆயிடுச்சு. வர வர அது இல்லாமெ முடியலீங்க. படதையா சாமியாருன்னு தெய்வமாகவே நெனேப்பேனுங்க! அவர் சொல்றதைச் செய்யறது தான் கடமைன்னு அவர் என்ன சொன்னலும் செய்துகிட்டு வந்திருக்கேனுங்க. நேத்துப் பேசிட்டிருந்தபோது, 'ஜின்னப்பன் கொழுப்பை அடக்கத்தான் வேணும்'ன்னு சொன்னருங்க. 'அட மகனே! போய் ஜின்னப்பன் தோட்டத்து வைக்கப்

போருக்குத் தீ வச்சுட்டு வா' என்று உத்தரவு கொடுத்தாருங்க. நான், 'ஏன்? முடியாதுங்க'ன்னு எழுந்திருச்சேனுங்க. சாராயம் நெறஞ்ச ரெண்டு புட்டியை எங்கிட்டக் குடுத்தாருங்க. வாங்கிக் கிட்டு நேராத் தோட்டத்துக்குப் போனேன். தோட்டத்து நாய் குலேச்சுது. வரப்புமேலே புட்டியோட குந்திட்டேனுங்க. அப்படியே தூக்கம் வந்திச்சு. குளுந்த காத்து மேலே பட்டுது. முளுச்சுக்கிட்டேன். தூக்கக் கலக்கத்தோடயே எழுந்திருச்சுப் போயித் தலைப்பாத்துணி ஓரத்தைக் கிழிச்சு, சாராயத்திலே நனைச்சுப் போருக்குத் தீ வச்சுட்டேனுங்க. குபீல்னு பத்திகிட்டு வெளிச்சம் தெரிஞ்சுது. பயந்துபோய் கையில் புட்டியில் மிச்சம் இருந்த சாராயத்தை எல்லாம் குடிச்சுபிட்டு வரப்புமேலே வந்து குந்திகிட்டேன். ஆகாசம் வரைக்கும் தீ ஓங்குச்சுங்க. அந்த வெளிச்சத்தைக் கண்டு இன்னும் பயம் ஆயிட்டுது. இரண்டாவது புட்டியையும் குடிச்சிட்டேனுங்க. கீழே விழுந்தது தான் தெரியும். தாதா கையிலே ஆப்படறவரைக்கும் நெனவே இல்லீங்க'' என்று கல்லன் வருத்தத்துடன் சொல்லி முடித்தான்.

கூடியிருந்த ஜனங்கள் எல்லோரும் அவன் சொன்னதைக் கேட்டார்கள். ஒவ்வொருவருக்கும் ஒவ்வோர் அபிப்பிராயம் தோன்றினாலும் தைரியமாக யாரும் அபிப்பிராயம் சொல்ல வில்லை.

'போருக்குத் தீ வச்சதைக் கல்லன், தானே ஒப்புக்கொண்டு விட்டபின், அவனுக்குத் தக்க தண்டனை குடுக்கத்தான் வேணும். பஞ்சாயத்தார் கூடித் தீர்மானிக்கட்டும்' என்று சேஷப்பா அடியெடுத்துக் கொடுத்தான்.

'''கல்லன் சொன்னது உண்மை' என்று பஞ்சாயத்தார் நம்பினால், 'தப்பு அவனுடையதல்ல' என்பேன் நான். இதைச் செய்யும்படி ஏவிய படையாச்சிதான் உண்மையான குற்றவாளி. இந்தக் குற்றத்திற்கு அவரைத்தான் தண்டிக்க வேண்டும்'' என்று பாளாச்சார் சற்று நிஷ்டூரமாகவே சொன்னார்.

'இது என்ன நியாயம்? கல்லன் குற்றத்தை ஒப்புக் கொண்டிருக்கிறான். இதில் ஆழ்ந்து சிந்திக்க என்ன இருக்கிறது. படையாச்சி சொன்னபடியெல்லாம் கல்லன் ஏன் ஆட வேண்டும்? விவேகம் இருக்க வேண்டாமா?' என்று பஞ்சாயத்தாருக்குள் சர்ச்சை எழுந்தது.

'' 'கல்லன் குற்றம் செய்தது உண்மை' என்று ஒப்புக்கொண் டிருக்கிறான். ஆனால் படையாச்சி அவங்க இவனைச் செய்யச் சொல்லி ஏவியதற்குச் சாட்சியும் இல்லை, ஆதாரமும் இல்லை'' என்று லிங்கப்பா தன் சட்ட ஞானத்தை வெளியிட்டான்.

'நம்புவதானால் கல்லனுடைய பேச்சு முழுவதையும் நம்ப வேண்டும். பாதி நம்பிப் பாதியை நம்பாமல் இருப்பது கோர்ட்டில் நடக்கலாம். இந்தப் பஞ்சாயத்து நியாயம் சொல்லும் முறையே வேறு கௌடரே. நமக்கு இன்னும் மனிதன்மேல் நம்பிக்கை போகவில்லை. படதையா என்ன? பஞ்சாயத்தார்களே, நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?' என்று பாளாச்சார் கூடியிருந்த ஜனங்களைக் கேட்டார். அவருடைய வாதத்தை மறுக்க யாராலும் இயலவில்லை. படதையா இதுபோன்ற அக்கிரமங்களைச் செய்வது மட்டுமல்ல; 'ஒழுங்கான சம்சாரியும் அல்லர்' என்பது எல்லோருக்கும் புரிந்தது.

படதையாவை அழைக்கப்போன அஞ்சல் மல்லப்பன் 'அவர் வர முடியாது' என்று சொன்னதாகத் திரும்பிவந்து செய்தி சொன்னான். மறுபடியும் சேஷப்பாவே, 'இப்ப பஞ்சாயத்தாரே கூப்பிடறாங்கன்னு, சொல்லுடா. கையோடு வரணும்னு சொல்லு' என்று சொல்லி, அவனை மறுபடியும் மடத்துக்கு விரட்டினான்.

அப்பொழுது ஜின்னப்பன் எழுந்திருந்து பஞ்சாயத்தாருக்குக் கை கூப்பினான். 'இந்தச் சமயத்திலே நானும் சில பேச்சுச் சொல்லணுங்க. என் வைக்கோல்போர் போனது போயிடுச்சு. ஆனால் தீ வைச்சவனுடைய கையை வெட்டிப் போட்டால் என் பொருள் திரும்பி வருமா? நான் அப்படிச் செய்யச் சம்மதிக்கலே. ஆனால், சாமி படதையா அவுங்க, இந்த ஊருக்கு சாமியா வந்தாலும் வந்தாரு, ஒரு விதத்தில் இல்லாட்டி ஒரு விதத்திலே ஊர் கெட்டுப்போவுது. கௌடருடைய குடும்பத்தின் உரிமையையே அழிச்சிட்டாரு. முந்தி, பயிர் நிறைந்த வயலைக் கொள்ளையடிக்கத் தந்திரம் செய்தாரு. இப்படிப்பட்டவர் ஊர்ல இருந்தா, தெனம் தெனம் தீப் பிடிச்சிட்டுத்தான் இருக்கும். இவர் ஊரை விட்டு போகாட்டி ஊர் நிம்மதியா இருக்க முடியாதுங்க. ஆனால் மடம் தெய்வத்துக்குச் சொந்தம். பஞ்சாயத்தாரே அதன் கௌரவத்தைக் காப்பாத்த வேண்டும். படதையாவை வெளியே போகச் சொன்னா, மடம் பூட்டிக் கிடக்கும். தலைமுறை தலைமுறையாத் தருமப்படி நடந்துகிட்டு வந்த மடத்தில இன்னிக்கிக் குடிகாரக் கூட்டமே நிறைஞ்சிருக்கு. அதனாலே மடத்துக்கு நல்ல குணமும் பழக்கமும் உள்ள சாமி யாரை பட்டம் கட்டி வச்சு மடத்தை அவருகிட்ட ஒப்பிச்சிட்டுப் படதையா ஊரைவிட்டுப் போகணும். பஞ்சாயத்தாருக்கு இதுதான் என்னுடைய விண்ணப்பம். படதையா இதுக்குச் சம்மதிக்காட்டி இந்தக் கல்லனையே சாட்சியாக வச்சு அவரை ஜெயிலுக்கு அனுப்பணும். பஞ்சாயத்தாருக்குச் சரீன்னு தோணி

யதைச் செய்யட்டும்' என்று நீண்ட பிரசங்கம் செய்தான். ஜின்னப்பன் தன் வாழ்நாட்களிலேயே இத்தனை பெரிய கூட்டத்தில் இத்தனை நேரம் நின்று முதல் முதலாகப் பேசினது இதுதான். அவனுடைய கைகால்கள் வெடவெடவென்று நடுங்கின. முகம் வேர்த்து நரைத்த பெரிய மீசை நனைந்துவிட்டது. ஆனால் அவன் முகத்தில் இருந்த கம்பீரத் தோற்றத்தாலும் பேச்சிலிருந்த நேர்மையாலும் ஜனங்களெல்லாம் உருகிப் போய்விட்டார்கள். மாடுகளோடு உழைத்து உழைத்து ஊமைபோல் இருந்த ஜின்னப்பனே இவ்வளவு தூரம் பேசவேண்டும் என்றால் நிலைமை எவ்வளவு முற்றிப்போயிருக்கவேண்டும். 'சங்கரப்ப கௌடர்தான் வந்து பேசியிருக்க வேண்டும்' என்று சிலர் தங்களுக்குள்ளேயே சொல்லிக்கொண்டார்கள்.

மறுநாளே தாசில்தார் வர இருந்ததால் சபையின் பொறுப்பை அன்றே முடித்துவிட வேண்டும் என்று சேஷப்பா அவசரப்பட்டான். 'இல்லாவிட்டால் விவகாரம் நீண்டுவிடும்' என்ற பயம். அதனால் மௌனத்தைக் கலைத்து, 'பஞ்சாயத்தார் சொல்வதை ஜின்னப்பா கேட்டான். படதையா அவர்களும் வந்து அதே மாதிரி சொல்லிவிட்டால் தீர்ப்புக் கொடுக்க நமக்கு வசதியாக இருக்கும்' என்று சொன்னான்.

சபையில் கிசுகிசுப்பு ஏற்பட்டது. இத்தனை நாளும் படதையா திரை மறைவில் செய்த அக்கிரமங்களைக் கண்டிருந்தாலும் அவரை எதிர்க்க யாரும் துணியவில்லை. 'பெரியவர்கள் விவகாரம் நமக்கு எதற்கு?' என்று எல்லோரும் ஒதுங்கியிருந்தார்கள். ஆனால் இப்போது கானை விழுந்துவிட்டது. காலின் கீழேயே கற்களும் கிடந்தன. 'ஊருக்கே சுமையாக இருக்கும் படதையாவை ஊரில் தங்க விடக்கூடாது. அவரை ஜெயிலுக்கு அனுப்புவதுதான் சரி என்று தோன்றுகிறது' என்று முணுமுணுப்பிலேயே தங்கள் அபிப்பிராயத்தை ஜனங்கள் வெளியிட்டார்கள்.

சூழ்நிலை காத்திருந்தது. ஜனங்கள் எல்லோரும் காத்திருந்தார்கள். லிங்கப்பனால் பொறுக்க முடியவில்லை. சாவடியிலிருந்து எழுந்திருந்து மடத்துக்குப் போய்ப் படதையாவிடம் எல்லாச் செய்திகளையும் சொன்னான். லிங்கப்பாவின் கவலையைக் கண்டு முதல் முதலில் அவருக்குச் சிரிப்பு வந்தது. மேலே கேட்க தன்னம்பிக்கை குறைந்தது. 'ஊரார் எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்துவிட்டார்கள்' என்ற செய்தி அவரை வேரோடு அசைத்துவிட்டது! இப்பொழுது மிஞ்சியிருப்பன இரண்டே வழிகள்தாம். வாய் பேசாமல் மடத்து அதிகாரத்தை விட்டுக் கொடுப்பது ஒன்று; ஜெயிலுக்குப்போவது இரண்டு. ஜின்னப்பா ஜெயிலுக்கு அனுப்பாமல் விடமாட்டான்போல் இருக்கிறது. தலையாரி

கல்லன் நல்ல சமயத்தில் கை விட்டுவிட்டான். படைதயா ஆழ்ந்து யோசித்துக் கடைசியில் 'முதல் வழியே நல்லது' என்று முடிவு செய்து சாவடிக்கு வந்தார்.

சாவடியில் ஜனங்கள் அவரை எதிர்பார்த்துக் காத்திருந் தார்கள். அலுத்துப்போய் வீட்டுக்குப் போக வேண்டும் என்று யாரும் நினைக்கவே இல்லை. மணி பதினொன்று ஆயிற்று. ஆனால் அப்போதே தீர்ப்பு முடிந்துவிட வேண்டும் என்று சேஷப்பா துடி துடித்தான். கடைசியில் படைதயா வந்தார். வழக்கம் போன்ற கௌரவமும் தோரணையும் இன்று அவரிடம் காணப்படவில்லை. ஜனங்கள் அவரைப் பார்த்த பார்வையே வேறு. அவர் சாவடிக்கு வந்தபோது முன்போல் யாரும் எழுந்து நிற்கவில்லை. எல்லோருடைய பார்வையிலும் இகழ்ச்சிக்குறிப்புத் தோன்றியது. சூழ்நிலை அநுகூலமாக இல்லை. பழிவாங்கும் எண்ணம் தீவிர மாக இருந்தது. இந்த நிலையில் 'எந்த மாதிரி வேஷம் போட வேண்டும்' என்பதை அவர் ஊகித்துத் தீர்மானித்துவிட்டது போல் இருந்தது.

பாளாச்சாரே அவரை அழைத்துப் பக்கத்தில் உட்கார வைத்துக்கொண்டார். வேறொரு சந்தர்ப்பத்தில் என்றால் பாளாச்சார் காட்டிய பரிவைப் படைதயா கிண்டல் செய்திருப் பார். இப்பொழுது கௌரவமும் கை நழுவிப் போய்விட்டது. அதனால் கம்பீரமாக ஜனங்களைப் பார்த்து இப்படிப் பேசத் தொடங்கினார் :

''மொத்தத்தில் நான் பொறந்த வேளையே கெட்டது. 'யாரோ செய்த பாவம் என் தலைக்கு வரவேண்டும்' என்றால் அது தெய்வ லீலையாகத்தான் இருக்கவேண்டும். இல்லாட்டி நல்லது கெட்டதைத் தெரிஞ்சுக்கற பகுத்தறிவே ஜனங்ககிட்ட இல்லாமே போயிடுத்துன்னு சொல்லணும். அன்னிக்குத் தாதா, சிமறுவை கொணுந்து மடத்துலே வச்சான். என் தலைலே பழியைச் சுமத் தினன். 'நடக்கட்டும் அப்பா சிவலீலை' என்று சொன்னேன். இப்ப 'போரைச் சுட்டுட்டு வா'ன்னு நான் சொன்னதாக இந்தக் கல்லன் சொல்றான். சீடனோட குற்றத்தைக் குருசுவாமி சொமக்கத்தானே வேணும்' இல்லீங்களா? 'சேவை மாத்திரம் செய்துக்கணும். இது வேண்டாம்னு' முடியுமா? வந்ததை வேண்டான்னு சொன்னா சிவன் மெச்ச மாட்டான். சிவன் காலகூட வெஷத்தை முழுங்கினன். இப்ப நானும் வந்த அப வாதங்களை எல்லாம் முழுங்க வேண்டாமா? பஞ்சாயத்தார் சொன்னதை நான் ஒப்புக்கறேன்'' என்று சொல்லி மௌனமாக இருந்தார்.

படதையாவின் பேச்சு, கூடிய மட்டும் நடிப்பாகத்தான் இருந்தது. குரலில் இருந்த மிடுக்கு இந்தச் சமயத்துக்கு ஏற்ப நயமாக மாறிவிட்டது; நெஞ்சைத் தொட்டது. கடைசிச் சொற்கள் நெட்டுயிர்ப்பிலும் கண்ணீரின் வெதுவெதுப்பிலும் தோய்ந்து வந்தன. கண் ஓரத்தில் இரண்டு நீர்த் துளிகள் உருண்டன. அதைச் சால்வையால் துடைத்துக்கொள்ளக்கூட அவருக்கு உணர்வு இல்லை.

லிங்கப்பா ஆவேசத்துடன் திடீரென்று எழுந்தான். ''இதோ நான் ஒரு பேச்சு, சொல்லணும்னு இருக்கேன். ஒரு காலத்துலே 'வண்ணான் பேச்சைக் கேட்டுகிட்டு ராமர் சீதாதேவியை வன வாசத்துக்கு அனுப்பிச்சார்'னு கதை கேட்டிருப்பீங்க. அதைப் போலயே கல்லன் பேச்சைக் கேட்டுகிட்டு ஊருக்கு தகப்பனைப் போல இருக்கற படதையாவை எழந்துரடாதீங்க. 'இது சில பேரோட சூழ்ச்சி'ன்னு எனக்குத் தோணுது. அதனாலே இன்னும் கொஞ்சம் யோசியுங்க. இல்லாட்டி பின்னாலே ரொம்பத் தொந்தரவு வரும். படதையா அவங்களை வெளியே போகச் சொல்றது அநியாயம். அப்பறம் வான்னு கூப்பிட்டாலும் வர மாட்டார். ஆசைப்பட்டுத் தேடினாலும் படதையா இன்னொரு தடவை கெடைக்கமாட்டாரு''ன்னு உணர்ச்சிவசப்பட்டு பேசினான் லிங்கப்பா.

பாளாச்சாருக்கு 'இந்த வேலைக்குத் தலை முழுகிவிட வேண்டும்' என்று தோன்றியது. ''இங்கே பாருங்க. பஞ்சாயத் தாருக்கு ஆடம்பரப் பேச்சு வேண்டாம். 'படதையாவின்மேல் கல்லன் பொய்க் குற்றம் சுமத்துகிறான்' என்று உங்களுக் கெல்லாம் தோன்றினால் அதைத் தெளிவாகச் சொல்லிவிடுங்கள். கல்லன் சொல்வது உண்மை என்று தோன்றினால், 'படதையா அவர்களுக்கு என்ன தண்டனை கொடுக்கவேண்டும்' என் பதையும் சொல்லிவிடுங்கள்'' என்று முடிவாகச் சொல்லி விட்டார்.

'சரியான பேச்சு, சபாஷ்!' என்று சபையிலிருந்து பாராட்டுக் குரல்கள் எழுந்தன. படதையாவைத் தண்டிக்கும் விஷயத்தில் மட்டும் இரண்டு வகையான யோசனைகள் இருந்தன. 'அவரை ஜெயிலுக்கு அனுப்பவேண்டும்' என்று சிலர் சொன் னார்கள். வேறு சிலர் 'அவர் ஊரைவிட்டுப் போய்விட வேண்டும்' என்று கேட்டுக்கொண்டார்கள். சபையில் குழப்பம் உண்டாயிற்று. பாளாச்சாரே எழுந்திருந்து எல்லோரையும் அமைதியாக இருக்கச் சொல்லித் தம் அபிப்பிராயத்தையும் சொன்னார்.

''பஞ்சாயத்தார் அபிப்பிராயப்படி இப்பொழுது படதையா தான் குற்றவாளி. ஆனால் அவர் விஷயத்தில் தீர்ப்புச் சொல்வது சங்கடமான விஷயம். அவர் உங்களையும் என்னையும்போல் சாமனிய மனிதர் அல்ல. சதானந்தச் சிவயோகியாரின் பீடத்துக்கு வந்த புண்ணியாத்மா! 'பீடம் ஏறியவர்களை அவமதிப்பது பாதள்ளியில் நடக்கக்கூடாது' என்று நான் நினைக்கிறேன். அவர் ஜெயிலுக்குப் போவது என்றால் அது அவரைவிட ஊருக்குத்தான் அதிக அவமானம். அதனால் அவர் இன்று சாயங்காலத்துக்குள்ளேயே பீடத்திலிருந்து விலகி ஊரை விட்டுப் போய்விட வேண்டும்'' என்றார்.

பாளாச்சாரின் குரலில் இருந்த அழுத்தமே முடிவைத் தெரிவித்தது. 'மடத்துக்கு ஒரு சாமியாரைப் பஞ்சாயத்தாரே குறிப்பிடவேண்டும்' என்று ஜின்னப்பா சொன்னதை லிங்கப்பா எதிர்த்தான். 'அது படதையாவின் தனிப்பட்ட அதிகாரம். ஆகையால், அதில் மற்றொருவர் தலையிடக்கூடாது' என்பது அவனுடைய வாதம். தண்ணீரில் முழுகிக்கொண்டிருப்பவன் துரும்பைப் பிடித்துக்கொண்டு நீந்த முயன்றதுபோல் இருந்தது அவனுடைய தர்க்கம். அது யாரும் ஒப்புக்கொள்ளும்படியாக இல்லை.

'படதையா அவர்கள் ஜெயிலுக்குப் போன பின்பும் அவருக்கு அதிகாரம் இருந்தால், அவரே பட்டத்துக்கு ஆளைக் குறிப்பிடட்டும்' என்று சேஷப்பா கேலியாகச் சொன்னாலும், அது சட்ட ரீதியாக இருந்தது.

'முன்பு சுவாமிகளாக இருந்த சதானந்தச் சிவயோகியாரின் தம்பியின் மகன் பட்டத்துக்கு வரவேண்டும்' என்பதை ஏக மனதாக எல்லோரும் ஒப்புக்கொண்டார்கள். ஆனால் அவனுக்கு வயது மிகவும் குறைவு. அதனால் 'அவன் அதிகாரம் ஏற்கும் வரையில் அவனுடைய தகப்பனாராகிய கங்காதர சுவாமிகள் மடத்தில் இருந்து மடத்தை நல்ல முறையில் நடத்திக்கொண்டு போகவேண்டும்' என்ற தீர்ப்பு எல்லோருக்கும் பிடித்திருந்தது. 'கங்காதர சுவாமிகள் வாழ்க!' என்று கோஷம் எழுந்தது. அந்த உத்ஸாகத்திலேயே ஜனங்கள் கங்காதர சுவாமிகளை மடத்துக்கு அழைத்துக்கொண்டுவந்து 'அவருடைய மகனே பட்டத்துக்கு உரியவன்' என்று விளம்பரப்படுத்தினார்கள். கங்காதர சுவாமிகளுக்கு இதனாலெல்லாம் பயம் உண்டாயிற்று. பாளாச்சார் எல்லா விஷயங்களையும் அவருக்கு விவரித்துச் சொன்னார். அவர் மடத்துக்குச் சென்றவுடன் படதையாவே எழுந்திருந்து வந்து அவரை வரவேற்றார். தம் அதிகாரத்தை அவரிடம் ஒப்படைத்தார். அவர் உள்ளத்தில் அப்பொழுது என்ன எண்ணங்கள் தோன்றினவோ என்ன குழப்பம் எழுந்ததோ யாருக்குத் தெரியும்? அவருடைய முகபாவம் மட்டும் கம்பீரமாக

இருந்தது. ஒருகணம்கூட மூடாத வாய் இப்பொழுது மௌனமாக இருந்தது. பேசாமல் அதிகாரத்தைக் கொடுத்து விட்டு உடுத்த உடையுடன் வெளியே வந்தார். போகும்போது மக்களுக்கெல்லாம் வணங்கவேண்டும் என்று கைகளைத் தூக்கிய போது கைகள் நடுங்கின. கண்ணீர் நிறைந்தது. 'போய் வருகிறேன் பெரியவங்களே, நினைவிருக்கட்டும். சிவன் அழைக் கிறபோது திரும்பி வாரேன்' என்று சொல்வதற்குள் திணறிப் போய்விட்டார்.

கூடியிருந்த ஜனங்களுக்கு அவர்மேல் இருந்த வெறுப்பு இன்னும் மறையாததால் இதுவும் நாடகம் என்று நினைத்தார்கள். ஆனால், படதையாவுக்கு உண்மையில் ஏக்கம் பிடித்துக்கொண்டு விட்டது. பாதள்ளியில் அது வரையிலும் அவருக்கு ராஜ மரியாதை கிடைத்துவந்தது. அவருடைய பேச்சுக்குப் பீடம் வேதவாக்குப் போன்ற புனிதத் தன்மையைக் கொடுத்தது. ஜனங்களின் பலம் தெய்வ பலமாக இருந்தது. போர்த்திருந்த சால்வை அவருடைய செயல்களுக்கு எல்லாம் ரட்சையாக இருந்தது. இப்பொழுது அவர் அவற்றையெல்லாம் விட்டு விட்டு அசல் சந்நியாசி ஆனார். போகும்போது அவர் மனம் சங்கடப்பட்டால் அதில் ஆச்சரியமென்ன?

சூரியன் அப்போதே தலைக்குமேல் நெருப்பைக் கக்கிக் கொண்டிருந்தான். படதையாவுக்கு அது பிக்ஷை நேரம். சிவ பூஜையை முடித்தபின் கச்சாயம் என்ற தித்திப்புப் பொருளைக் கொண்டுவரும்—சிறுவர்கள் கொண்டுவரும்—விருந்தைச் சாப் பிட்டிருப்பார். ஆனால் இன்று ஏனென்று கேட்பார் இல்லை. எதிரே விரிந்துகிடந்த வெட்டவெளியைத் தவிர வேறு ஆதரவே இல்லை. கீழே தரை சுட்டது. மேலே வெயில் தகித்தது. அந்த வெயிலில் நடந்த படதையாவை வழியனுப்பக்கூட யாரும் வரவில்லை.

அதை உணர்ந்தவர்போல் படதையா பாதள்ளி நிலத்தில் ஒரு கணம்கூட இருக்கக்கூடாது என்று காலை எட்டிப்போட்டு நடந்தார்.

## 25

இந்துபுரத்துக்குச் சென்றிருந்த யசவந்தராவ் பாதள்ளிக்குத் திரும்பி வந்தார். படதையாவைப் பட்டத்திலிருந்து நீக்கிய செய்தியைக் கேள்விப்பட்டார். உடனே அவர் பாளாச்சாரின்

வீட்டுக்கு ஓடினுர். ஆச்சார் அவரை வரவேற்று நடந்தவற்றை யெல்லாம் ஒன்று விடாமல் சொன்ஞர். 'தாம் இந்துபுரிக்குப் போகும் முன்பே இந்தச் சம்பவம் நிகழ்ந்திருந்தால் லக்ஷ்மி பாயைப் பாதள்ளிக்கு அழைத்து வந்திருக்கலாம்' என்பது யசவந்தராவின் அபிப்பிராயம். 'லட்சுமணனை இந்துபுரிக்கு அனுப்பி நடந்த சங்கதிகளைத் தெரிவித்திருக்கலாம் அல்லவா?' என்ருர் யசவந்தராவ். ''எனக்கும் அப்படித்தான் தோன்றியது, மணியக்காரரே! ஆனுல் 'அந்த அசட்டு லட்சுமணனை அனுப் பாதீர்கள்' என்று ஜின்னப்பன் முதலியவர்கள் தடுத்துச் சொன்னதால் அனுப்பவில்லை. அது கிடக்கட்டும். தாங்கள் போன வேலை நினைத்தபடி ஆகவில்லைபோலிருக்கிறதே?'' என்று பாளாச்சார் கேட்டார். அதில் கேள்வியும் பதிலும் அடங்கி இருந்தன.

'உம் அப்படியே சொல்லலாம்' என்று யசவந்தராவ் சுருக்க மாகவே பதிலளித்தார்.

'அப்படியானுல் தம் சொத்தையே யார் யாருக்கோ விட்டுக் கொடுப்பதாக அந்த அம்மாள் தீர்மானித்துவிட்டார்களோ' என்று கேட்டார் பாளாச்சார்.

'என்ன செய்யறது ஆச்சார் சுவாமி, அந்த அம்மாள் இங்கே வந்தால் மாளிகையில் நுழைய முடியாத நிலை. சொந்தக் குடியானவர்களே ஆதரவாக இல்லை. படதையாவின் மயக் கத்தில் விழுந்த பாபு சாஹேப், அவங்க நிலம், மாளிகை எதையும் கொடுக்கமாட்டேங்கருன். அந்தப் பெண்பிள்ளை என்ன செய்ய முடியும்? நான் மகாராஜாவையும் பார்த்துப் பேசினேன். அவரே அதற்கு ஒரு வழி சொன்ஞர். இப்பொழுது லக்ஷ்மிபாய் பெயரில் இருக்கும் நிலங்களையெல்லாம் அந்த அம்மாள் ராஜினுமா செய்து மகாராஜாவின் பெயரில் எழுதவேண்டும். மகாராஜாவால் நிலங்களைச் சுலபமாக வசப்படுத்திக்கொள்ள முடியும். அவர் பெயரில் வந்தபின் அவர் நிலங்களைக் குத்த கைக்கு விட்டு வரும் பணத்தை லக்ஷ்மிபாய்க்குக் கொடுக்க வேண்டும் என்பதே அது. லக்ஷ்மிபாயிடமிருந்து ராஜினுமாக் குத்தகை ஒப்பந்தத்தை வாங்கிக் கலெக்டருக்கு அனுப்பிவிட்டு நான் இங்கே வந்தேன்' என்று யசவந்தராவ் தாம் செய்த ஏற்பாட்டைப்பற்றி விவரித்தார்.

'அடாடா! இந்த ஏற்பாட்டினுல் லக்ஷ்மிபாய் இந்த ஊருக்கே வரமுடியாமல் போய்விட்டது. ஜாகீர்தார் மாளிகை மகாராஜாவுக்குச் சொந்தமாகிவிடுகிறது. ஜாகீர்தாரின் கௌரவம், உரிமை, நிலம், நீச்சு எல்லாம் இனிமேல்

மகாராஜாவைச் சேர்ந்துவிட்டது. ஒரு விதத்தில் இதுவும் நல்லதுதான். ஆனால் தலைமுறை தலைமுறையாக வாழ்ந்துவந்த குடும்பம் மட்டும் வெறும் பெயருடன் நின்றுவிட்டது. அதுதான் வருத்தமாக இருக்கிறது' என்று ஏக்கத்துடன் சொன்னார் பாளாச்சார்.

'ஏன் அப்படி நினைக்கணும்? லக்ஷ்மிபாய்க்கு ரெண்டு பெண்கள் இருக்கா. அவா யாருக்காவது ஆண் கொழந்தை பிறந்தால், லக்ஷ்மிபாய் தத்து எடுத்துக்கலாம். அப்போ இந்த நிலம், வீடு, வாசல் எல்லாம் மறுபடியும் அந்த அம்மாளுக்குச் சேரணும்னு சத்தியம் வாங்கிக்கொண்டுதான் மகாராஜாவுக்கு ஒப்பந்தம் எழுதிக் கொடுத்திருக்கேன். ஒரு வேளை ஊரில் நிலைமை சரியானால் லக்ஷ்மிபாய் இங்கே வந்து தங்கினாலும் தங்கலாம். வேறுவிதமாக ஏற்பாடு செய்ய முடியவில்லை. என்ன செய்வது? படதையா ஊரைவிட்டுப் போன செய்தி முதலிலேயே தெரிஞ்சிருந்தா இந்த விவகாரம் வந்திருக்காது. படதையாவின் துணையில்லாத பாபு சாஹேப் துணிஞ்சு எதையும் செய்ய மாட்டான். இனிமேல் தானாகவே ஊரைவிட்டுப் போயிடுவான் பாருங்க' என்று யசவந்தராவ் தம் பேச்சிலேயே நிலைமையைச் சமாளித்துப் பேசினார்.

அதுவும் உண்மைதான். ஆனால், பாளாச்சார் வேறொரு வழியில் ஆபத்தை எதிர்பார்த்தார். மணியக்காரர் வாரிசு உரிமை விவகாரத்தில் லிங்கப்பா ஜயித்துவிட்டால், பாபு சாஹேப் அவனுக்குத் துணை நிற்கலாம். படதையாவும் லேசுப் பட்ட கிராக்கியில்லை. சமயம் பார்த்து ஊருக்குத் திரும்பி வந்து, மடம் தன்னுடையதென்று வம்பு செய்யவும் இடம் இருக்கிறது. ஆனால், பாபு சாஹேப் மகாராஜாவுடன் போராடும் நிலைமை வந்திருக்கு. அதற்கு அஞ்சி அவன் ஊரைவிட்டுப் போனால் போகலாம்.

யசவந்தராவ் தொடர்ந்து, 'மகாராஜா. பூமியைத் தன்னிடமே குத்தகைக்கு விடவேண்டும்' என்று, எங்கள் பாபு கேட்கலாம். படதையா இருந்தால் நிச்சயமாக இவனுக்கு அந்த உபாயத்தைச் சொல்லிக் கொடுப்பான். அதற்கு இடம் இல்லாமல் நான் மற்றோர் ஏற்பாடு செய்திருக்கிறேன். இந்துபுர் ஸம்ஸ்தானத்தில் 'யோளு' என்ற கிராமத்தில் உங்கள் ஊர்க் காரர் ஒருவர் கணக்கப்பிள்ளையாக இருக்கிறார் அல்லவா? அவர் பெயர் என்ன? உம்......... சாமராவ். அவரையே பூமியை மேற்பார்வை பார்த்துக்கொள்ள அனுப்பச் சொல்லியிருக் கிறேன். உள்ளூர்க்காரர், யோக்கியதை உள்ள மனிதர். அவர் வந்தால் சேஷப்பாவின் ஆட்டமும் அடங்கிவிடும்.

நேரம் ஆகிவிட்டதால் யசவந்தராவ் புறப்பட்டுவிட்டார். பாளாச்சாருக்கு 'மேலே என்ன நடக்கப்போகிறதோ?' என்ற கவலை உண்டாயிற்று. 'விரைவிலேயே சாமராவ் ஊருக்கு வருவான்' என்பதைக் கேட்டு, அவருக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. உள்ளூர்க்காரனான சாமராவ், ஆச்சாருக்குப் புதிய மனிதன் அல்ல. கணக்கப்பிள்ளைத் தெருவில் அவர்கள் வீடு இன்றும் இருக்கிறது. சாமராவின் தந்தையான ராமராயரும் ஆச்சாரும் சம வயதுக் காரர்கள்; பால்ய நண்பர்கள். ஆச்சாருக்குப் பழைய நினைவுகளெல்லாம் கிளர்ந்து எழுந்தன. ஆண்டுதோறும் நவராத்திரியின்போது பாளாச்சார், ராமராயரின் இருப்பிடத்துக்குப் போய் வருவது வழக்கம். ஐப்பசி மாதம் முடிந்த பிறகே அவர் ஊருக்குத் திரும்புவார். அவ்வளவு பாசம், அன்பு, நட்பு. இவற்றை ஆச்சார் வேறு எங்கும் காணவில்லை. ராமராயர் இறந்த பின், சாமராவ், அழைப்பு அனுப்பியபோதிலும் ஏதோ ஒரு காரணத்தைச் சொல்லி, ஆச்சார் தாம் போவதை நிறுத்தி விட்டார். பாசம், ஆதரவு இவற்றுள் எது குறைந்தாலும் அது ஆச்சாருக்குக் கௌரவக் குறைவாகவே தோன்றும். அதை அவர் விரும்பவில்லை. ராமராயருக்குப் பின் தம் மனத்தில் இருந்த அன்பு, பாசம் எல்லாவற்றையும் அவர் தம் மனத்துக் குள்ளேயே புதைத்துவிட்டார்.

சாமராவ் திரும்பிப் பாதள்ளிக்கு வரப்போகும் செய்தியைக் கேட்டு, மறைந்திருந்த ஆசைகள் எல்லாம் தலைதூக்கின. சாமராவ் ஆச்சாரின் அன்புக்கு உரியவன். தகப்பனாரிடமிருந்து நேராக வந்த நற்குணங்களே அவனுடைய சொத்து. வெளியிலிருந்து ஊருக்குள் வரும் பாதள்ளியின் புண்ணியத்தின் மிச்சமே இப்பொழுது பாதள்ளியைக் கைதூக்கிவிடவேண்டும். சாமராவ் வரப்போகும் செய்தி, ஆச்சாரின் கவலைச் சுமையை இறக்கியது. ஆச்சார் சுபாவத்தில் கனவு காண்பவர் அல்ல. ஆனால், இந்த நல்ல செய்தியைக் கேட்டவுடன் 'பாதள்ளி தலைதூக்கி நிற்கலாம்' என்ற பகற்கனவை அவர் காணத் தொடங்கினார். 'சட்ட ஞானத்தில் சாமராவ், சேஷப்பாவை விட ஒரு படி உயர்ந்தவன்' என்றே சொல்ல வேண்டும். இனிமேல் சேஷப்பாவின் தகடுதத்தங்களுக்கெல்லாம் இடம் இல்லாமல் போகலாம். பாபு சாஹேப் ஊரைவிட்டுப் போவது உறுதி. படதையாவும் ஊரைவிட்டுப் போய்விட்டார். இவ்விருவருடைய துணை இல்லாத லிங்கப்பா சொல்லாமல் கொள்ளாமல் அஜராணிக்கு ஓடிவிடுவான். கண்மூடித் திறப்பதற்குள் பிரச்சினைகள் எல்லாம் தீர்ந்துவிடும். பல யுகங்களாகக் கவர்ந்திருக்கும் இருள் ஓர் ஒளிக் கிரணத்தால் நீங்கிவிடுவதில்லையா?

'சாமராவ் ஊருக்கு வரப்போகிறுன்' என்ற செய்தியை ஆச்சார் ஊரெங்கும் பரப்பினுர். ஓராண்டுக் காலமாக ஊராரின் மூளையை அரிக்கும் பிரச்சினைகளுக்கெல்லாம் சுகமான ஒரு வழியைக் கண்டதுபோல் இருந்ததால் எல்லோரும் அதைப் பற்றியே பேசலானுர்கள். செய்தி முதலில் சேஷப்பாவின் காதில்தான் விழுந்தது. 'கௌடர் வாரிசு விவகாரத்தில் அரசியல் சதுரங்கம் ஆடித் தடையில்லாமல் தன் அதிகாரத்தை நிலைநாட்ட வேண்டும்' என்று இருந்த சேஷப்பா, இடியோசை கேட்டதுபோல் அதிர்ந்துவிட்டான். எதிர்காலம் அவனுக்கு இருள்மயமாகத் தோன்றியது. அவன் பேச்சுக்கே ஜனங்கள் பயப்பட்ட காலம் ஒன்று இருந்தது. சங்கரப்ப கௌடர் இறந்த பின்போ, சேஷப்பா ஊருக்கு ஒரே தெய்வமாக விளங்கினுன். அவனுக்குச் சாமராவ் புதியவன் அல்ல. பாதள்ளியின் பெருமைக் குரிய வஸ்துகளில் 'சாமராவின் யோக்கியதை'யும் ஒன்ருக இருந்தது. 'அப்படிப்பட்டவன் ஊருக்கு வந்தால் நம் கதி என்ன ஆகும்?' என்பதே சேஷப்பாவின் கவலை.

சேஷப்பாவின் மூளை மின்சார சக்தியைவிட வேகமாக ஓடக்கூடியது. தன்னுடைய அதிகாரத்தை நிலைநாட்டிக் கொள்ள அவன் பல விதத்தில் யோசித்தான். சுயநலமியின் இச்சாசக்திக்குக் கட்டாயம் வழி தெரிந்துதானே ஆக வேண்டும்? தாதாவை ஜாமீனில் சேஷப்பா விடுவித்த உபகாரம் ஒன்று பாளாச்சாரின் தலையில் பெரும் சுமையாக இருந்தது. அதை இந்த நல்ல சமயத்தில் உபயோகித்துக்கொள்ளா விட்டால் என்ன பயன்? 'சாமராவ் தன் முறைக்கு வரும் கணக்குப்பிள்ளை நியமனத்தைத் தனக்கே மாற்றிக் கொடுக்க வேண்டும்' என்று ஆச்சாரிடம் கேட்க வேண்டும் என்று நினைத்தான். இல்லாவிட்டால் நிலமும் வீடும் இல்லாமல், சட்ட ஞானமும் பயன்படாமல் சேஷப்பா பாதள்ளியில் வாழ்வது எப்படி?

சேஷப்பா 'குடுகுடு'வென்று ஆச்சார் வீட்டுக்கு ஓடினுன். ஆச்சார் புராணச் சுவடியை அவிழ்த்து, மறுநாள் புராணப் பிரவசனத்துக்குத் தயார் செய்துகொண்டிருந்தார். சேஷப்பா பரக்க பரக்க ஓடி வருவதைக் கண்டதுமே அவருக்கு விஷயம் விளங்கிவிட்டது. சேஷப்பா ஒரு நிமிஷம் மௌனமாக உட்கார்ந்திருந்தான். இடுப்பிலிருந்து பொடிக் குடுக்கையை எடுத்து உள்ளங்கையில் வைத்துத் தேய்த்தான். ஆச்சார் இதையெல்லாம் பார்த்துக்கொண்டே எல்லையில்லாத பொறுமை யுடன் உட்கார்ந்திருந்தார். 'சேஷப்பா முதலில் பேசட்டும்'

என்பது அவருடைய நினைப்பு. வேறு வழி இல்லாததால் சேஷப்பா பேச்சைத் தொடங்கினான். தடுமாறிக்கொண்டே தன் விருப்பத்தை ஆச்சாரிடம் சொன்னான். ஆச்சார் அவன் சொன்னதையெல்லாம் சிரத்தையாகக் கேட்டார். சிறிது நேரம் யோசித்தபின் இப்படிச் சொன்னார் :

''இதோ பார், சேஷப்பா! இது எனக்குச் சம்பந்தம் இல்லாத விஷயம். இருந்தாலும் நீ கேட்டதால் ஒரு வார்த்தை சொல்ல வேண்டி இருக்கிறது. சாமராவ் தன் முறை வேலையைத் தான் ஏற்றுக்கொண்டால் உன் சொத்துப் பறிபோய்விடுமா? தவிர, கணக்கப்பிள்ளை வேலை என்ன சிரஞ்சீவிப் பட்டமா! 'இன்று நீ, நாளைக்கு வேறொருவர்.' நாற்பது வருஷ காலமாகக் கண் காணாமல் எங்கோ இருந்த குடும்பம் அது. அவர்கள் சொந்த ஊருக்கு வருவதை நான் தடுக்க முடியாது'' என்று நயமாகப் பேசியே சேஷப்பாவை வழிக்குக் கொண்டுவரப் பார்த்தார் ஆச்சார்.

'''அவர் ஊருக்கு வருவதைப்பற்றி எனக்கு ஆட்சேபம் இல்லை' ஆச்சார். ஆனால் ஊரின் நிலைமை உங்களுக்குத் தெரியாதது அன்று; 'கால் பட்டால் குற்றம், கை பட்டால் குற்றம்.' இந்தச் சமயத்தில் 'சர்க்கார் தஸ்தாவேஜுகள் என் கையில் இருப்பது நல்லது' என்று நான் நினைக்கிறேன். இப்பப் பாருங்க, பார்வதி அம்மாவின் வாரிசு அப்பீல் விவகாரமே இருக்கிற தல்லவா? நான் கணக்கப்பிள்ளையா இருந்தால் கலெக்டர் ஆபீஸில் என் தாட்சண்ணியத்துக்குக் கட்டுப்பட்டு, தாசில்தாரின் உத்தரவை மாற்றிவிடுவார்கள். சாமராவ் வந்தபின் அந்த அப்பீல் தோற்றுப்போனால் அந்தத் தவறு என்னுடையது ஆகாது. 'படதையா திரும்பவும் ஊருக்கு வரமாட்டான்'னு நெனைக்காதீர்கள். இன்னும் இரண்டொரு மாசம் போகட்டும். 'போரைச் சுட்டதற்காகக் கேஸ் போடவில்லை' என்று தெரிந்த பின் வந்தே தீருவான். அவன் எழுதிக் கொடுத்த பத்திரங்கள் எல்லாம் என்னிடம்தான் இருக்கின்றன. என் கையில் தஸ்தாவேஜுகள் இருக்கும்போது 'மடத்து நிலங்களின் உரிமை கிடைக்காது' என்று அவன் வரமாட்டான். அதற்காகதான் 'சாமராவ் கணக்கப்பிள்ளையாக வர வேண்டாம்' என்று நான் சொல்கிறேன். நிலைமை ஒழுங்காகட்டும். ராஜினமா எழுதிக் கொடுத்து அவனை நியமிக்கிறேன். இது வெறும் பேச்சல்ல ஆச்சார்; சத்தியம்னு நெனைச்சுக்கங்க'' என்று சேஷப்பா தன் உட்கருத்தை மறைத்துப் பேச்சு வலையை வீசிச் சுயநலத்தைச் சாதிக்க முயன்றான். ஆச்சார் அதிகமாகப் பேசவில்லை. சேஷப்பாவின் பேச்சிலேயே கவனமாக இருந்தார். சாமராவுக்கு

வருங்காலத்தில் தொல்லைகள் ஏற்பட்டால் அதில் சேஷப்பா வுக்கும் பங்கு இருந்தது என்றால் ஆச்சரியம் இல்லை. என்னதான் அநுபவமும் திறமையும் இருந்தாலும் சாமராவ் பாதள்ளிக்குப் புதியவன். இப்பொழுது சேஷப்பாவின் பேச்சை முழுதும் மறுத்தால் தம்மோடு சாமராவும் துன்பத்தை அநுபவிக்க வேண்டியிருக்கும். சாமராவிடம் இருப்பது வெறும் கெட்டிக் காரத்தனம். ஆனால் சேஷப்பாவின் தில்லுமுல்லுகள் அவனிடம் இல்லை. எல்லாவற்றையும் யோசித்த ஆச்சார், 'ஆகட்டும், அவன் வருகிறபடி வரட்டும். அப்பறம் பார்க்கலாம்' என்று மட்டும் சொல்லிச் சேஷப்பாவைத் தாஜா செய்தார். சேஷப் பாவுக்கு அதுவே போதுமானதாக இருந்தது. 'இடத்தைக் கொடுத்தால் மடத்தைப் பிடுங்கிவிடுவான்.' பேச்சை விதைத்துத் தந்திரத்தை வளர்க்கும் பயிர்த்தொழில் அவனோடு கூடவே பிறந்திருந்தது.

இது நடந்து ஒரு வாரம்கூட ஆகவில்லை. சாமராவ் குடும்பத்துடன் பாதள்ளிக்கு வந்துவிட்டான். அவன் பங்குக்கு வந்திருந்த வீட்டுக்கு வெள்ளை அடித்து வர்ணம் பூசவில்லை. தாற்காலிகமாக ஆச்சார் வீட்டிலேயே தங்கியிருந்தான். அவனைக் கண்டதும் ஆச்சாருக்கு இறந்துபோன பிள்ளைகள் எல்லோரும் மனைவி மக்களுடன் வந்துவிட்டது போன்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. வந்த அன்று முழுவதும் அந்தரங்க ஆலோசனை யிலேயே கழிந்தது. மறுநாள் சாமராவ் மாளிகைக்குப் போய் பாபு சாஹேபைச் சந்தித்தான்.

மாளிகைத் திண்ணையில் உட்கார்ந்து பாபு சாஹேப் ஏதோ சில கடிதங்களைப் பார்த்துக்கொண்டிருந்தான். பாபு சாஹேபுக்கு சாமராவைத் தெரியாவிட்டாலும், சாமராவுக்கு மட்டும் மாளிகையைப்பற்றிய எல்லா விவரங்களும் தெரிந் திருந்தன. மரியாதைக்காக, பாபு சாஹேபை வணங்கித் தான் இன்னார் என்று சொல்லிக்கொண்டான். 'புத்லாபாய் இறந்ததில் லக்ஷ்மிபாய்க்கு மிகவும் துக்கம். விசாரிப்பதற்காக அனுப் பினார்கள்' என்று பேச்சைத் தொடங்கினான்.

'ஒரு விஷயம். இப்பொழுது லக்ஷ்மிபாயின் சொத்தெல்லாம் மகாராஜாவின் பெயருக்கு வந்திருக்கின்றன. மகாராஜாவின் பெயர் தாக்கலான உத்தரவு வந்தவுடன் அவரே இவ்வூருக்கு வருவார். அவரை வரவேற்க ஏற்பாடுகள் செய்யச்சொல்லி லக்ஷ்மிபாயே என்னை அனுப்பினார்' என்று சாமராவ் நயமாக அடக்கத்துடன் எல்லாச் செய்திகளையும் தெரிவித்தான். பாபு சாஹேபுக்கு என்ன பேசுவதென்று தெரியவில்லை. 'ஊம்' கொட்டிவிட்டுப் பேசாமல் இருந்தான்.

அடுத்த இரண்டு தினங்களில் சாமராவ் குடியானவர்களைப் பார்த்துப் பேசினான். அவர்கள் வீட்டுக்குப்போய் அவர்களுடைய சுகதுக்கங்களைப்பற்றி விசாரித்தான். மகாராஜா பாதள்ளிக்கு வந்த சமயத்தில் அவரிடம் சொல்லிப் பழைய கடன்களை வஜா செய்வதாகச் சொன்னான். விதைத் தானியமும் வைக்கோலும் வாங்கக் கடன் வேண்டும் என்று கேட்டுக்கொள்ளலாம் என்றும் சொன்னான். பாதள்ளி எங்கும் பரபரப்பு உண்டாயிற்று. இந்துபுரத்து மகாராஜா வரப்போகும் செய்தி எல்லோரையும் தட்டி எழுப்பியது. 'மகாராஜாவே ஊர் ஜாகீருக்குத் தலைவர். அதனால் நமக்கு நல்லகாலம்' என்று எல்லோரும் மகிழ்ந்தார்கள். விரைவில் பாபு சாஹேபின் காதுக்கும் இச் செய்தி எட்டியது.

மாளிகையில் உழைத்துச் சம்பளத்துக்குப் பதிலாகத் தானியத்தைப் பெற்றுக்கொள்ளும் ஹரிஜனங்களிடையில் இந்தச் செய்தி பெரும் மாறுதலை உண்டு பண்ணியது. மகாராஜா வந்தபின் சாப்பாட்டுக்குச் சம்பளமும் கிடைக்கும் என்று அவர்களிடம் யாரோ சொன்னார்கள். 'அப்படியானால் ஒன்றும் கொடுக்காமல் வேலை வாங்கிக்கொள்ளும் பாபு சாஹேப் சீக்கிரம் ஊரைவிட்டுப் போகவேண்டுமானால் தங்களுள் யாரும் மாளிகை முற்றத்தைப் பெருக்குவதற்கோ விறகு வெட்டுவதற்கோ போகக் கூடாது' என்று அவர்கள் முடிவு செய்தார்கள்.

சமயம் வந்தபோது ஊரார் எல்லாம் தன்னைக் கைவிட்டாலும் சேரிக்காரர்கள் கைவிடமாட்டார்கள் என்று நினைத்திருந்த பாபு சாஹேபுக்கு இது ஒரு பெரிய அடியாக விழுந்தது. அதோடு மற்றொரு ஏமாற்றமும் காத்திருந்தது. நிலங்களைத் தன்னிடமிருந்து குத்தகைக்குப் பெற்றுக்கொண்டிருப்பதாக ஒப்பந்தம் எழுதிக் கொடுக்கவேண்டும் என்று குடியானவர்களுக்கு ஆள் அனுப்பினான். அவர்கள் மாளிகைக்கு வராமல் ஏமாற்றிவந்தார்கள். அதோடு மரியாதைக்காகவாவது அவனை ஒரு வார்த்தை கேட்காமல் வயல்களில் இருக்கும் மரங்களையெல்லாம் வெட்டி மகாராஜாவைப் பாராட்டுவதற்காகப் பந்தல் போடத் தொடங்கினார்கள். இதனால் எல்லாம் திக்குத் திசை தெரியாமல், யோசனை கேட்பதற்காக யசவந்தராவுக்கு ஆள் அனுப்பி இருந்தான். அவன் கொண்டு வந்த செய்தியும் அவனுக்கு எரிச்சலை ஊட்டுவதாய் இருந்தது. ''கௌரவம் உள்ளவர்கள் போல் நடந்துகொள்வதானால் 'கனகேரி'க்குப் போகச் சொல்லு'' என்று அவர் சொல்லி அனுப்பி இருந்தார். இவை எல்லாவற்றிற்கும் சிகரம் வைத்தது போல் மற்றோர் இடியும் விழுந்தது. லிங்கப்பாவின் அப்பீல் விசாரணையை ஒத்திப்போட்ட நோட்டீஸ் கைக்கு வந்தது.

பாபு சாஹேப் தவித்துப்போய்விட்டான். படையாவின் ஆதரவு விட்டுப்போயிற்று. சேஷப்பாவும் இப்பொழுது எதிர்க்கட்சியில் சேர்ந்துவிட்டான். பாபு சாஹேபுக்கு ஆப்த நண்பர்கள் யாரும் பாதள்ளியில் இல்லை. நடந்தது நடக்கட்டும் என்று சேஷப்பாவின் வீட்டுக்குப் போனான். தனக்கு வந்த கஷ்டங்களைச் சொல்லிக்கொண்டான்.

சேஷப்பா அவனை வெறுத்து ஒதுக்கவில்லை. நிலைமையை அவனும் நன்றாகப் புரிந்துகொண்டிருந்தான். 'ராஜினாமா ஒப்பந்தத்தை கலெக்டர் ஏற்றுக்கொண்டபின் நிலங்களெல்லாம் மகாராஜாவின் பெயரில் தாக்கலாகவேண்டும். இன்னும் உத்தரவு வரவில்லை என்றால் கவலைப்படவேண்டாம். உத்தரவு வராமல் மகாராஜா பாதள்ளிக்கு வரமாட்டார். உத்தரவு வராமலேயே செய்துவிடலாம் அல்லவா. அப்பொழுதுதான் குடியானவர்களுக்கெல்லாம் தாம் மோசம் போய்விட்டோம் என்பது தெரியும். சாமராவ் சரடுவிட்டிருக்கிறான் என்பது உண்மையாகிவிடும். இப்பொழுது நீங்கள் செய்யவேண்டியது ஒன்றுதான். பெல்காமுக்குப் போய்க் கலெக்டரைக் கண்டு உத்தரவு போகாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். அதற்காகப் பணத்தை வாரி இறைக்கவேண்டும். வேறு வழியில்லை' இதுதான் சேஷப்பா பாபு சாஹேபுக்குச் சொன்ன யோசனை.

பாபு சாஹேபுக்கு இந்த யோசனை புதிய தெம்பைக் கொடுத்தது. பாதள்ளியில் நிலைக்கவேண்டும் என்றால் தைரியமாக இருக்கவேண்டும். குடியானவர்களுள் சிலரை ஆள் அனுப்பிப் பலவந்தமாகத் தருவித்தான். தன் அனுமதியில்லாமல் ஜாகீர் நிலத்து மரங்களையெல்லாம் வெட்டியதற்காகக் கேஸ் போடுவதாகப் பயமுறுத்தினான். இதுவரையில் நிலக் குத்தகை ஒப்பந்தங்களெல்லாம் தன் பெயரிலேயே இருப்பதால் தான் என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்று அவர்களிடம் சொன்னான். தன் பெயரில் குத்தகை ஒப்பந்தம் எழுதாவிட்டால் நிலங்களை வேறு யாருக்காவது சாகுபடிக்குக் கொடுத்துவிடுவேன் என்று பயமுறுத்தினான். அதைக்கேட்ட குடியானவர்களுக்கு மறுபடியும் கிலி பிடித்துக்கொண்டது. சிலர் சேஷப்பாவை யோசனை கேட்க ஓடினார்கள். அவன் சொன்னதைக் கேட்டபோது தாம் போன வழி தவறு என்று அவர்களுக்குத் தோன்றியது. எதையுமே நம்பமுடியவில்லை. மாளிகை அரசியல் விவகாரங்களையே அவர்களுடைய பிடி சோற்றுப் பிரச்சினை சார்ந்திருந்தது.

இவை எல்லாவற்றின் தீய விளைவுகளும் பாதள்ளி நிலங்களையே பாதித்தன. ஊர் நிலங்களுள் மூன்றில் ஒருபங்கு ஜாகீர்

நிலம். மற்றொரு பங்கு மணியக்காரருடையது. மூன்றுவது பங்கு கணக்குப்பிள்ளை, குடியானவர்கள் ஆகியவர்களைச் சேர்ந்தது. லிங்கப்பாவின் வாரிசுத் தகராறு காரணமாக மணியக்காரருடைய நிலங்களில் கலப்பை ஓடவில்லை. குடியான வர்கள் 'யாருக்குக் குத்தகை ஒப்பந்தம் கொடுப்பது' என்ற சந்தேகத்தில் மூழ்கி இருந்ததால் ஜாகீர் நிலமும் உழுவார் இல்லாமல் கிடந்தது. பாதள்ளிச் சுற்றுப்புறத்து நிலங்கள் எல்லாம் வெயிலில் காய்ந்துகொண்டு கேட்பாரின்றிக் கிடந்தன. ரோகிணி, மிருகசீர்ஷ கர்ப்போட்டம் கூடியது. லேசான மேகங்கள் வானத்தில் வந்து சேர்ந்தன. அடைமழை தொடங்கியது. மேல் காற்றின் குளிர்ந்த நீர்த்துளிகள் மேலே பட்டதால் பூமியின் கன்னத்தில் புளகம் எழுந்தது. கண்ட இடங்களி லெல்லாம் நிலத்தில் பசுமை காணத் தொடங்கியது. கார்ப் பௌர்ணமி வந்தது. 'இதுதான் தகுந்த காலம்' என்று வானம் பூமியிடம் ரகசியம் சொல்லியது. நிலம் சோம்பல் முறித்துக் கொட்டாவிவிட்டது; கண்ணைத் திறந்தது. ஆனல் மனித னுடைய சண்டை காரணமாக நிலம் சிறைப்பட்டது. மேகம் குரல் கொடுத்தாலும் பூமி விடுதலை பெறவில்லை. பண்படுத்தப் படவேண்டிய பூமி தரிசாகக் கிடந்து தவித்தது. இந்தச் சமயத்தில் மகாராஜாவின் பெயரில் ஜாகீர் நிலங்களெல்லாம் தாக்கல் ஆகிவிட்டதாகக் கலெக்டரிடமிருந்து உத்தரவு வந்தது. அந்தச் செய்தியைக் கேட்ட சாமராவ் குடியானவர்களை வரவழைத்து விஷயத்தைத் தெரிவித்தான். 'லக்ஷ்மிபாய் அவர்கள் ராஜீனமா ஒப்பந்தம் கொடுத்துவிட்டதால், ஜாகீர் மாளிகை மகாராஜாவைச் சேர்ந்துவிட்டது. நாளைக்குக் கார்ப் பௌர்ணமி அன்று காளைகளுக்குத் திருஷ்டி கழிப்பது ஜாகீர் தாரின் உரிமை. மாளிகையிலிருந்து காளைகளைக் கொண்டு போய்க் கோட்டையில் பாய்ந்தோடச் செய்தபின் மறுபடியும் அவை மாளிகைக்குவந்து நிற்கவேண்டும். அதனல் மாளிகையை வசப்படுத்திக்கொள்ள வேண்டியது அவசியம்' என்று சொன்னன் சாமராவ்.

சாமராவ் சொன்னதைக் கேட்டுக் குடியானவர்கள் எல்லாம் உத்ஸாகம் அடைந்தார்கள். தங்களுக்கு விடுதலைக் காலம் வந்து விட்டதாக நினைத்தார்கள். குடியானவக் கூட்டம் மாளிகையை வசப்படுத்திக்கொள்ளப் போயிற்று. இந்தச் செய்தியைக் கேட்ட சேரிக்காரர்களும் அவர்களைத் தொடர்ந்தார்கள். 'மாடுகளின் தீவனத் தொட்டிகளை மெழுகி இனும் பெறும் சந்தர்ப்பம் வந்திருக்கும்பொழுது நாம் மட்டும் ஏன் பின் தங்கவேண்டும்' என்ற எண்ணம் அவர்களை இழுத்துக்கொண்டு வந்தது.

ஜாகீரின் பெரிய பண்ணையாளான இமாம் சாயபு, ஆறடி உயரம் உள்ள ஆஜானுபாகு. காலில் இருக்கும் கிறுக்குச் சடாக்களை வேண்டுமென்றே ஓசைப்படுத்திக்கொண்டு தொப்பியின் குஞ்சத்தைப் பின்புறம் இருந்து முன்புறமாகத் தள்ளி அசைத்துக்கொண்டு மாளிகையில் கால் வைத்தான். மாட்டுக் கொட்டகையில் கட்டியிருந்த எருமைகள், பசுக்கள் எல்லாவற்றையும் ஒன்றொன்ருக அவிழ்த்து வெளியே ஓட்டினுன். தன் கூட வந்திருந்தவர்களைப் பார்த்து, 'அடேய்! கொட்டகையைச் சுத்தம் செய்யச் சீக்கிரம் வாங்க. பறையரைக் கூப்பிட்டு உள்சுவர், வெளிச்சுவர் எல்லாம் வழிக்கச் சொல்லுங்க' என்று பாதள்ளி முழுவதும் கேட்கும்படி உரக்கக் கத்தினுன்.

உள்ளே இருந்து பாபு சாஹேப் அந்த இடிக் குரலைக் கேட்டுத் திகிலுடன் கூடத்துக்கு வந்தான். கொட்டகையிலிருந்து மாடுகள் எல்லாம் வெளியே போய்க்கொண்டிருப்பதைக் கண்டு கோபம் அடைந்தான்.

'யாரடா அது. மாட்டையெல்லாம் ஏன் வெளியே தொரத்தறீங்க?' என்று அதிகாரக் குரலில் கேட்டான். இமாம் சாயபு அவன் முன் வந்து நின்று குனிந்து சலாம் செய்து, ''எஜமானே! மாடெல்லாம் ஒங்களைச் சேர்ந்ததுதான். அதையெல்லாம் ஒங்க வூட்டுக்குக் கொண்டுபோய்க் கட்டிக்குங்க. மாளிகை இன்னமே மகாராஜாவுக்குச் சொந்தம். நாங்க அவருடைய குடியானவங்க. 'வெளி மனுஷாளோட மாடுகள்ளாம் இங்கே இருக்கக் கூடாது'ன்னு அவுத்து வெளியே விட்டோம்'' என்ருன்.

'' 'மாளிகை மகாராஜாவுக்குச் சொந்தம்'னு யார் சொல்ருங்க?''

'கலெக்டர் தொரையின் உத்தரவு வந்திருக்குதுங்க. லக்ஷ்மிபாய் சாஹேபின் சொத்தெல்லாம் மகாராஜாவுக்குச் சேந்துபோச்சாம்.'

'யாரது உங்களுக்குச் சொன்னவங்க. லக்ஷ்மிபாய்க்கு ஆஸ்தியை மாத்த அதிகாரமே இல்லை.'

'உண்டோ, இல்லையோ? கலெக்டர் சாஹேப்புக்குதான் தெரியும். இல்லாட்டி உத்தரவு எப்படி எழுதுவாங்க?'—இமாம் மரியாதை மீறியே பதில் சொன்னுன். அதோடு நிற்கவில்லை. படியேறிக் கூடத்துக்கே போனுன்.

'கபர்தார்! உள்ளே வந்தாயானுல் தெரியும்!' என்று பாபு சாஹேப் எதிர்த்தான். சுற்றி நிற்கும் தன் ஆட்களைப்

பார்த்து, 'என்னடா பாக்கறீங்க? கழுத்தைப் பிடித்து அவனை வெளியே தள்ளுங்க' என்று உத்தரவு போட்டான். ஆனால் யாரும் மூச்சுக்கூட விடவில்லை. பாபு சாஹேபின் கோபம் அரைக் கணத்தில் பயமாக மாறிவிட்டது. கோபத்தாலோ பயத்தாலோ முழங்கால்கள் தந்தி அடித்தன. இமாமுக்கு இதொன்றும் தெரியாது. தன்னம்பிக்கையுடன் கூடத்துக்கு வந்து நின்று ஆட்களுக்கு ஜாடை செய்தான். நிலைமை மோசமாகப் போய் விடும் என்று அஞ்சிய பாபு சாஹேப் கொல்லைவாயில் வழியாக வெளியே ஓடிவிட்டான்.

நல்ல காலம்! ரத்னு, யசவந்தராவுடன் பிறந்த வீட்டுக்குப் போனவள் திரும்பி வரவில்லை. வேலை ஆட்கள் எல்லோரும் வெகு நேரத்துக்கு முன்பே ஜனங்களைக் கூட்டிவிட்டார்கள். மாளிகை முழுவதும் கைவசம் ஆயிற்று. ஜனங்களின் ஆவேசம் படிப்படி யாக அதிகரித்துக்கொண்டே வந்தது. மாளிகையின் ஒவ்வோர் அறையிலும் அவர்கள் புகுந்தார்கள். கைக்குக் கிடைத்த சாமான் களை எடுத்து வெளியில் கொண்டு வந்து வைத்தார்கள். சிறிது நேரத்திலேயே மாளிகை முற்றம் விலை மதிப்புமிக்க பொருள் களால் நிரம்பிவிட்டது. வீடு காலியாயிற்று. 'கலெக்டரின் உத்தரவு வந்த செய்தியை யசவந்தராவுக்குத் தெரிவிக்க வேண்டும்' என்று தாதா, அஜராணிக்குப் போயிருந்தான். 'இல்லாவிட்டால் இந்தப் பகற்கொள்ளையில் அவனும் பங்கு கொண்டிருப்பான்' என்று பேசிக்கொண்ட சிலர், அந்தப் பொருள்களை எல்லாம் ஆசைப் பொங்கப் பார்த்துக்கொண்டு நின்றார்கள்.

'ஜாகீரைச் சேர்ந்த குடியானவர்கள் மாளிகையில் புகுந்து பாபு சாஹேபை விரட்டிவிட்டார்கள்' என்று அஞ்சல் மல்லப்பன் வந்து சொன்னபோது, சாமராவ் சாப்பிட உட்கார்ந்திருந்தான். செய்தியைக் கேட்டவுடன் இலையை விட்டு எழுந்திருந்து ஓடி வந்தான். மாளிகையின் முற்றத்தில் குவிந்துகிடந்த சாமான் களைப் பார்த்து அவன் மனம் வருந்தியது. 'இங்கே இருப்பவர் களெல்லாம் ஆளுக்கு ஒன்றாகத் தூக்கிக்கொண்டு போனால் என்ன ஆகும்' என்று கவலைப்பட்டான். அந்தப் பொருள்கள் எல்லாம் களவு போய்விட்டால் அந்தக் குற்றத்திற்கு அவன்தான் பொறுப்பாளி. சாமராவின் வரவைக்கண்டு வெளியே நின்றிருந்த இமாம், கேலியும் பெருமையும் தொனிக்க, 'மாளிகை கைக்கு வந்திடுச்சில்ல, கணக்கப்பிள்ளை!' என்று தற்புகழ்ச்சிக்கு இறங்கினான்.

சாமராவின் புருவங்கள் உயர்ந்தன 'நல்ல வேலே செய்தீங்க! சாமானெல்லாம் வெளியே வைக்கச்சொல்லி உங்களிடம் யார் சொன்னார்கள்? அவை யாருடையவை என்று நினைத்தீர்கள்? லக்ஷ்மி சாஹேபினுடையவை. மாளிகை மகாராஜாவுக்குச் சொந்தமானல் உங்களுக்குப் பெரியதனம் வந்துவிட்டதா? இவைகளையெல்லாம் கொண்டுபோய் ஓர் அறையில் வையுங்கள். இவைகளில் பாபு சாஹேபின் சாமான்களும் இருக்கின்றன. விசாரித்து அவைகளை அவரிடம் கொடுக்கவேண்டும் அல்லது வண்டியில் அவருக்கு அனுப்பவேண்டும். பாபு சாஹேப் நம்ம பாய் சாஹேபுக்குத் தம்பியாக வேண்டும். அவருக்கு அவமானம் நேரும்படி செய்ய நான் விடமாட்டேன். தெரிஞ்சுதா?' என்று அவர்கள் எல்லோரையும் அதட்டித் தாறுமாருகக் கிடந்த சாமான்களை எல்லாம் ஜாக்கிரதையாக உள்ளே வைக்கச் சொன்னன்.

இதை வேடிக்கை பார்த்துக்கொண்டு நின்ற சிறுவர்கள் தெருவெல்லாம் நிரம்பிவிட்டனர். திண்ணையில் உட்கார்ந்திருந்த கிழவன் ஒருவன் அவர்களை மிரட்டி அனுப்பிக்கொண்டிருந்தான். அந்தச் சங்கதியைக் கேட்டு ஜனங்கள் ஒவ்வொருவராக வந்து கூடிவிட்டார்கள். கூட்டம் பெரிதாகியதால், தெருவே கொள்ள வில்லே. முதல் முதலாக ஜாகீர் குடும்பத்துச் சாமான்கள் வெயிலேக் கண்டதால் சாதாரண மனிதர்களும் அவைகளைப் பார்க்க முடிந்தது.

## 26

மறுநாள் கார்ப்பௌர்ணமி. உள்நாட்டைச் சேர்ந்த மற்றக் கிராமங்களைப் போலவே பாதள்ளியிலும் இந்தப் பண்டிகைக்கு ஏகப்பட்ட உற்சாகம் இருந்தது. உண்மையில் பார்க்கப்போனல் இந்த வருஷம் நிலங்கள் சாகுபடி செய்யாமல் கிடந்தன. ஊரில் சூழ்நிலே சரியாக இல்லே. ஆனல் ஜனங்களின் திருவிழா ஆசையும் அதற்கும் மீறிய போட்டியும் கார்ப்பௌர்ணமிக் கொண்டாட்டத்துக்குக் களையைக் கொடுத்தன. சங்கரப்ப கௌடர் இருந்த போது அவருடைய காளைகளைப் பார்க்கவும் ஊர்வலத்துக்குச் செல்லவும் ஊரே திரண்டு வரும். இந்த வருஷமும் அந்தச் சம்பிரதாயத்தை விடக்கூடாது என்று நினைத்தாள் கௌடரின் மனைவி. ஊருக்குள்ளேயே மிகப் பெரிதான காளை ஊர்வலத்தை

நடத்துவது கௌடர் குடும்பத்தின் பரம்பரை உரிமை. அதனால் இந்த வருஷமும் மணியக்காரர் வீட்டில் ஊர்வல ஏற்பாடு பிரம் மாண்டமாக இருந்தது. ஜாகீர்க் குடியானவர்கள் தமது காளைகளை யெல்லாம் ஒன்று சேர்த்து, அவை ஜாகீர்தாரின் —ஏன் மகாராஜா வின்—காளைகளுக்கு ஏற்றபடி ஊர்வலம் நடத்துவதற்குத் திட்ட மிட்டார்கள். நார்க்கயிறு திரித்துத் திரித்து குடியானவர்கள் வீட்டுப் பெண்களின் கைகள் காய்த்துப்போய்விட்டன. தம் பிறவியிலேயே என்றும் காணாத வெள்ளி – தங்கங்களாலான கொம்புப் பூண்களையும் சரிகைக் குஞ்சங்களையும் குடியானவர் களின் காளைகள் அணிந்துகொண்டன. இந்த ஏற்பாட்டைக் கண்ட கௌடருடைய ஆட்கள் தங்களுடைய காளை ஊர்வலம் இதைத் தூக்கி அடிக்க வேண்டும் என்று உறுதிக்கொண்டார்கள்.

மணியக்காரர் குடும்பத்தில் ஊர்வலம் ஒவ்வொரு வருஷமும் விமரிசையாக நடந்துகொண்டிருந்ததால் பாதள்ளியிலேயே பெயர்பெற்ற கொட்டு மேளக்காரர்கள் அதற்கு வருவது மாமூல் ஆகிவிட்டது. ஜாகீர்க் குடியானவர்களின் ஊர்வலத்துக்கு அந்த மேளக்காரர்கள் போகாதபடி அவர்களுக்கு இரண்டு வருஷச் சம்பாவனை கொடுப்பதாகச் சொல்லிக் கட்டுப்படுத்தி யிருந்தார்கள் கௌடரின் பரிவாரங்கள். உரிய நேரத்தில் ஜாகீர்க் குடியானவர்கள் என்ன, மகாராஜாவே வந்து கேட்டிருந் தாலும் மேளம் கிடைத்திருக்காது. அதனால் தங்கள் ஊர்வலம் கௌடர் ஊர்வலத்தைவிட மட்டமாகிவிட்டால் என்ன செய்வ தென்று குடியானவர்கள் கவலைப்பட்டார்கள். அதனால் அவர்கள் ஊர்வலம் கிளம்பும் யோசனையையே விட்டுவிட்டார்கள். ஊர்வலத்தின் முன்பு, பூமியே அதிரும்படி, கூத்தாடத் தயாராக இருந்த இளைஞர் கூட்டம் ஏமாற்றமடைந்து, கௌடருடைய காளைகளுக்கு முன் கூத்தாடித் தம் ஆசையைத் தீர்த்துக்கொள்ள வேண்டியிருந்தது.

கௌடர் வீட்டு ஊர்வலம் இந்த வருஷம் மிக உயர்வாக இருக்கும் என்று ஜனங்கள் சொல்லிக்கொண்டார்கள். வெள்ளி யாலும் தங்கத்தாலும் ஆன கொம்புப் பூண்களை மாட்டிக் கொண்டு வண்ணவண்ணப் பீதாம்பரங்களைப் போர்த்துக் கொண்டு வரிசையாக ஜோடிக் காளைகள் திமிருடன் நடந்தது; கல்யாண ஊர்வலத்தை நினைவூட்டியது. வழி நெடுகிலும் இறை பட்டிருந்த பொரிகள், தெருக்களில் ஆங்காங்கே குவிந்து கிடந்தன.

கொட்டு மேளத்துக்கு ஏற்றபடி பெருந்தன்மையாக அடியெடுத்து வைத்து எருதுகள் நடப்பதையும் அவற்றின் அபூர்வ வைபவத்தையும் கண்டு பெருமைகொண்ட கௌட

ருடைய கூட்டத்தாருக்கு மற்ருேர் ஆசை எழுந்தது. இந்த வருஷம் தங்களுடைய எருதுகளேயே அசுபத்தை நீக்க உபயோகிக்க வேண்டும் என்று ரகசியமாகத் தீர்மானித்தார்கள். இதனுல் ஊர்வலத்தில் சேர்ந்த ஜனங்களுக்கெல்லாம் புத்துணர்ச்சி பிறந்தது. டமாரத்தின் சப்தம் 'டமடம' என்று தொடர்வது போல் அவர்களுடைய எண்ணத்துக்கும் ஒரு தீவிரம் வந்தது.

அதற்கும் ஒரு காரணம் இருந்தது. உள்நாட்டுக் கிராமங்கள் எல்லாவற்றிலும் அசுபத்தை நீக்கக் கௌடர்களுடைய எருதுகளேயே உபயோகிப்பார்கள். ஆனுல் பாதள்ளி முதலில் சம்ஸ்தானமாக இருந்து, இப்பொழுது ஜாகீர் கிராமமாக மாறி இருந்ததால் ஜாகீர் எருதுகளே அதற்கு உரிமை பெற்றிருந்தன. அது பரம்பரை வழக்கமாகிவிட்டது. ராஜேஜி ராவ் இறந்தபின் இந்தக் கௌரவத்தைத் தங்கள் குடும்பத்திற்கு மாற்றிக்கொள்ளக் கௌடர் திட்டமிட்டார். ஆனுல் பேச்சு வாக்கில் லக்ஷ்மிபாய், 'மாளிகைக்கு உரிய கௌரவங்கள் மாறக் கூடாது' என்று குடியானவர்களேத் தூண்டிவிட்டதால் கோட்டையின் முன்பு பெரிய சண்டை நடந்தது. மணியக் காரருடைய திட்டம் தோல்வியுற்றது.

இந்த ஆண்டு மாளிகை வெறிச்சோடிக் கிடந்தது. அதைக் காவல் காக்கப் போட்டியிடுபவர்கூட இல்லே. 'ஒருவகையில் ஜாகீர்தார் குடும்பம் அழிந்துவிட்டது' என்றே சொன்னுலும் தகும். அப்படியிருக்க 'வளர்ந்துவரும் கௌடர் குடும்பத்துக்குப் பாதள்ளியில் இந்தக் கௌரவம் கிடைத்தால் என்ன தப்பு?' ஊரில் இருந்த உத்ஸாகம் மிக்க இளேஞர்கள் எல்லோரும் இந்த ஊர்வலத்தில் பங்கெடுத்துக்கொண்டார்கள். நெஞ்சு முட்டக் குடித்திருந்ததால் களேப்புக்கூடத் தெரியாமல் கூத்தாடிக் கொண்டிருந்தார்கள். உத்ஸாகத்தோடு இந்த யோசனேயும் சேர்ந்துகொண்டது.

என்றைக்குமே போட்டி இருந்தது. இப்போது அது வெடிப்பதற்கு ஒரு பொறி வேண்டியிருந்தது, அவ்வளவுதான். இன்னும் பொழுது சாயவில்லே. தப்பட்டைக்காரர்கள் சேர்ந்து, ஜாகீர்தார், தேஷ்பாண்டே, மணியக்காரர், கணக்கப்பிள்ளே முதலிய பிரமுகர்கள் வீட்டுக்கு வணக்கம் செய்து அசுபத்தை நீக்குவதைச் சொல்லி எல்லோரையும் சாவடிக்கு அழைத்து வந்தார்கள். சடங்கை நடத்தக் குடியானவர்களுடைய செவலே, வெள்ளே ஆகிய இரண்டு காளேகள் வேப்பிலே மாலே அணிந்து கொண்டு கம்பீரமாக நின்றன. இந்த இரண்டும், இரண்டு குடியானவர்களுடையவை. இந்தக் குடியானவர்களுள் ஒருவன்,

ஜாகீர்தாரின் நிலத்தைச் சாகுபடி செய்பவன். மற்ருெருவன் மணியக்காரர், கணக்குப்பிள்ளை இருவர்களுடைய நிலத்தையும் உழுபவன். வழக்கம்போல 'ஜாகீர்தாருடைய காளையையே சடங்குக்கு உபயோகிப்பது' என்னும் எண்ணத்தை உண்டு பண்ணுவதற்கு இப்படித் திட்டமிட்டிருந்தார்கள். ஆண்டு தோறும் காளைகளைப் பிடிப்பவர்களே இந்த வருஷமும் பிடித்துக் கொண்டு நின்ருர்கள். ஆனுல் மனத்தில் போட்டிருந்த திட்டம் வேறு. 'சடங்கு முடிந்தபின் காளைகளை மாளிகைக்குக் கொண்டு போகாமல் கௌடர் வீட்டுக்குக் கொண்டுபோக வேண்டும்' என்று ரகசியமாகச் சொல்லி வைத்திருந்தார்கள். யாருக்கும் இந்த ரகசியத்தின் வாடைகூட அடிக்காமல் ஜாக்கிரதையாக இருந்தார்கள். வன்மம் உள்ளே குமுறிக்கொண்டு இருந்தது.

கார்ப் பௌர்ணமியின் செவ்வானம் தோன்ருமல் மாலே மேற்கில் மங்கியது. அசுபத்தை நீக்கும் எருதுகளைக் கோட்டையி லிருந்து சுமார் இரண்டு பர்லாங்கு தூரத்தில் குறிப்பிட்ட இடத்தில் நிறுத்தியிருந்தார்கள். அசுபத்தை நீக்கிய காளை திமிறிக்கொண்டு போனுல் 'ஊருக்குத் தீமையெல்லாம் போய் நன்மைவரும்' என்ற ஐதிகத்தால் காளை ஓடிவரும் வழியில் இரு புறமும் ஜனங்கள் வரிசையாக நின்றிருந்தார்கள். கூச்சல் அதிகரித்தது. 'குழப்பம் ஒன்றும் நேராமல் அடிதடி சண்டை வராமல் சடங்கு முடிந்தால் போதும்' என்று ஊர்ப் பிரமுகர்கள் எல்லோரும் பரபரப்புடன் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அதே சமயத்தில் அஜராணிக்குப் போன தாதா திரும்பிவந்து சாவடியில் உட்கார்ந்திருந்த சாமராவுக்கும் பாளாச்சாருக்கும் 'ராம் ராம்' செய்து காளைகள் வருவதைப் பார்த்துக்கொண்டு நின்ருன்.

'ஹை! ஹை!! ஹோ! ஹோ!!' என்று உத்ஸாகத்தோடு அவர்கள் போடும் கூச்சல், உடம்பில் விழும் தடியின் ஓசை இவற்ருல் தூண்டப்பட்ட காளைகள் உடம்பின் நினைவே இல்லாமல் ஓடின. அவற்றின் குளம்புகளால் எழுந்த புழுதிப் படலத்திலும் மங்கிய வெளிச்சத்திலும் அவைகளின் உருவமே தெரியவில்லை. மானைப்போல் துள்ளி ஓடிய வேகத்தை மட்டும் பார்க்க முடிந்தது. ஜனங்களின் கூச்சல் ஓயாமல் கேட்டுக் கொண்டே இருந்தது. கோட்டை வாயிலில் இருபுறமும் இரண்டுபேர் பிடித்துக்கொண்டு நின்ற வேப்பிலைத் தோரணத்தை அறுத்துக்கொண்டு காளைகள் உள்ளே புகுந்தன. ஜனங்கள் உடம்பெல்லாம் கண்ணுகப் பார்த்துக்கொண்டே இருந்தார்கள். தூரத்தில் இருந்து பார்ப்பவர்களுக்குப் புழுதிப் படலத்தைத் தவிர வேருென்றும் தெரியவில்லை. புழுதிப்படலம் நகர்ந்து

நகர்ந்து ஜாகீர்தார் மாளிகைக்குத் திரும்பாமல் கௌடர் வீட்டுப்பக்கமாகத் திரும்பியதைக் கண்டு எல்லோரும் வியப்பினால் கல்லாகச் சமைந்தார்கள்.

சாமராவ், சாவடித் திண்ணையில் நின்றுகொண்டு அத்தனை கூச்சலையும் தாண்டி எல்லோருக்கும் கேட்கும்படி, 'மாளிகைக்குத் திருப்புங்களடா' என்று கத்தினார். ஒரு கணத்தில், 'ஹா ஹா' என்ற கூச்சல் ஜனங்களிடையே எழுந்தது. 'ஏதோ மோசம் நடந்திருக்கிறது' என்று தோன்றியது. 'சண்டைக்கு விஷயம் அகப்பட்டுவிட்டது' என்று ஊர்ப்பிரமுகர்கள் கவலையுற்றார்கள். 'இது தற்செயலாக நடந்ததா? முன்னேற்பாட்டின்பேரில் நடந்ததா?' என்று தெரிந்துகொள்ள வேண்டும். கண்டவர்கள் எல்லாம் கத்தினார்கள். சாவடித் திண்ணையில் நின்றுகொண்டிருந்த தாதா ஜிவ்வென்று கீழே பாய்ந்து சாவடியின் பின்புறம் ஓடிக் கௌடர் வீட்டுக்குப் போகும் வழியை மறித்து நின்று கொண்டான். காளைகளைப் பிடித்திருந்தவன் கையிலிருந்த கயிற்றைப் பிடுங்கக் கையை நீட்டினான். அவன் கையின்மேல் வீச்சாக ஒரு மூங்கில் அடி வீழ்ந்தது. அதற்குள் தாதாவின் பின்னாலேயே ஓடிவந்த ஜனங்கள் கூட்டமாக நின்று கொண்டார்கள். அதனால் போக வழியில்லாமல் காளைகள் 'புஸ் புஸ்' என்று மூச்சு இறைக்க நின்றுவிட்டன.

கூட்டத்துக்கு ஆவேசம் வந்தது. நடப்பவை எல்லாம் தூக்க மயக்கத்தில் நடப்பதுபோல் இருந்தது. மணிக்கட்டு ஒடிந்துவிடுவதுபோல் அடி விழுந்தாலும் தாதா தயங்கவில்லை. மற்றொரு கையால் உடம்பிலிருக்கும் பலத்தையெல்லாம் திரட்டிக்கொண்டு கயிறு பிடித்திருந்தவனுடைய கன்னத்தில் ஓங்கி அறைந்தான். அவன் நிலைதடுமாறிக் காதைப் பிடித்துக் கொண்டு தள்ளாடிக் கீழே விழுந்தான். அப்பொழுது தாதா அவன் கையிலிருந்து கயிற்றைப் பிடுங்கிக்கொண்டு அந்தக் கயிற்று நுனியால் மற்றொருவனை ஓங்கி அடித்தான். அவன் கயிற்றை விட்டுவிட்டுத் தாதாவின்மேல் பாய்ந்தான். தாதா, அவன் மார்பில் கைகொடுத்துத் தள்ளவே அவனும் கீழே விழுந்தான். இரண்டு காளைகளின் கயிறுகளும் தாதாவின் கைக்கு வந்து விட்டன. 'நெஞ்சிலே தைரியம் உள்ளவங்க மாட்டுக்குப் பக்கத்திலே வாங்கடா' என்று கர்ஜித்தவண்ணம் தாதா காளைகளை மறுபடியும் சாவடியை நோக்கி ஓட்டினான்.

ஆனால் அங்கேயும் ஒரு தடங்கல். தாதாவின் தாலீம்கானா நண்பர்கள், இந்த விஷயத்தில் ஆசையுடன் பங்கெடுத்துக் கொண்டிருந்தார்கள். திரும்பிவரும் காளைகளைக் கௌடர் வீட்டில் சேர்க்கும் பொறுப்பை அவர்கள் ஏற்றுக்கொண்டிருந்

தார்கள். ஆனால் அவர்களுக்குத் தாதாவை எதிர்த்துச் சண்டையிடத் தைரியமும் இல்லை, இஷ்டமும் இல்லை. தாதா, காளைகளைத் திருப்பியவுடன் கூட இருந்த ஜனங்கள் ஓடிவந்து அவன் முதுகைத் தட்டிக்கொடுத்தார்கள். கௌடர் வீட்டார் செய்திருந்த சூழ்ச்சி இவர்கள் யாருக்கும் தெரியாது.

தாதா, காளைகளைத் திருப்பியதைக் கண்டு கௌடரைச் சேர்ந்தவர்களெல்லாம் ஏமாற்றம் அடைந்தார்கள். 'கௌடர் வீட்டிலே சாப்பிட்டு, எப்போதும் அவர்கள் வீட்டுக்கு ஆதரவாக இருக்கும் தாதா, இன்று எதிரியாகிவிட்டான் அல்லவா?' என்று பல்லைக்கடித்தார்கள். ஆனால் தாதாவுக்கு ஜனங்களுடைய ஆதரவு இருந்தது. அவனை எதிர்த்து மீண்டுவரும் திறமை யாருக்கும் இருக்கவில்லை. 'இதற்கு வேறு என்ன வழி செய்வது' என்று அவர்கள் தடுமாறிக்கொண்டிருக்கும்போதே காளைகள் வேகமாக ஓடி மாளிகைக்குள் புகுந்துவிட்டன. 'கௌடர் வீட்டுக்கே மாடுகளைக் கொண்டுபோக வேண்டும்' என்று ரகசியமாகத் திட்டம் இட்டவர்களின் முகம் கறுத்துவிட்டது. அவர்கள் அவரவர் வீட்டுக்குப் போய்விட்டார்கள். சாமராவ் முன்னதாகவே மாளிகைக்குப் போய்க் காளைகள் வந்தவுடன் தன் மனைவியை ஆரத்தி எடுக்கச் சொன்னான். மாளிகை திரும்பவும் ஜாகீர்தாருடைய வைபவத்தால் நிறைவு பெற்றதுபோல் அவன் மகிழ்ச்சியடைந்தான். 'தொன்றுதொட்டு வரும் பழக்கம் நல்லபடியாக முடிந்ததல்லவா?' என்று எல்லோரும் திருப்தி அடைந்தார்கள். உடனே தாதா கௌடர் வீட்டுக்குப் போனான்.

கௌடர் வீட்டுத் தலைவாயிலை வெறுமை சூழ்ந்திருந்தது. திண்ணையில் யாரும் இல்லை. சடங்கை முடித்து வந்த காளைகள் தங்கள் வீட்டுக்கு வருவதைத் தடுத்த தாதாவின்மேல் பார்வதியம்மாளுக்கு எல்லைமீறிய கோபம் வந்துவிட்டது. ஆரத்தி எடுக்க வைத்திருந்த பூர்ண கும்பமும் வீணாகிவிட்டபடியால் அவளுக்குச் சங்கடமும் சேர்ந்துகொண்டது. கண்ணெதிரே தாதா வந்து நின்றதும் அவள் அவன் முகத்தில் விழிக்க விரும்பவில்லை. பேச்சுக்கு இடமே இல்லை. தாதா வந்து சிறிது நேரம் கற்சிலைபோல் நின்றான்.

'கார்ப்பௌர்ணமிப் பண்டிகைச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு மறுநாள் போகலாம்' என்று யசவந்தராவ் வற்புறுத்தினார். ஆனால் தாதாவைப் பாதள்ளிக் காளை விழா ஒரே அடியாகக் கவர்ந்துவிட்டதால் அவன் அங்கே தங்கவில்லை. அன்று காலையிலேயே அஜராணியை விட்டுப் புறப்பட்டுக் காளைகள் கோட்டை வாயிலில் புகுவதற்குள் பாதள்ளிக்கு

வந்து சேர்ந்தான். நாற்பது மைல் நடந்துவந்திருந்ததால் அவனுக்குக் களைப்புத் தோன்றியது. காலையிலிருந்து சாப்பாடு இல்லை. காளைகளைத் திருப்பிய அசாதாரண சாகசத்தில் பசியை மறந்திருந்தான். இப்போது அது அவனைப் பழிவாங்கத் தொடங்கியது. ஹோலிப் பண்டிகையிலிருந்து கௌடருடைய வீட்டு மனிதர்களுள் ஒருவனாகி அங்கேயே சாப்பிட்டுவிட்டு அங்கேயே படுத்துக்கொண்டிருந்தான். இப்பொழுது பார்வதியம்மாவின் எதிரில் வந்து நின்றபோது அவள் காட்டிய வெறுப்பைக் கண்ட தாதாவுக்கு அவமானத்தால் பாதி உயிர் போய்விட்டது.

தாதா, அஜராணிக்குப் போய் யசவந்தராவைப் பார்த்து வந்த செய்தியைச் சொல்ல விரும்பினான். தன்னிடம் ஒப்பித்த வேலைகளைப்பற்றி அவளிடம் சொல்ல நினைத்தான். அந்த உற்சாகத்தில்தான் தாதா அங்கே வந்து நின்றான். ஆனால் அவள் ஒரேயடியாக அலட்சியம் செய்தாள். 'என்ன தவறு செய்தோம்?' என்பதே அவனுக்குப் புரியவில்லை. ஒன்றும் செய்யத் தோன்றாமல் ஏமாற்றத்துடன் நின்றான். பார்வதியம்மாவின் வீட்டில் இருந்துகொண்டே, அவள் செய்யும் அலட்சியத்தை அவனால் பொறுக்க முடியவில்லை.

தாதா மெதுவாக எழுந்திருந்து 'அப்படியானா போய் வரேனம்மா' என்று சொன்னான். அப்போதும் அவள் 'இரு' என்றோ, 'சாப்பிட்டுவிட்டுப் போ' என்றோ சொல்லும் அளவுக்குச் சுமுகமாக இல்லை. அவனைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் வெறுமனே தலையை ஆட்டினாள். இனிய நினைவுகளெல்லாம் சுக்குநூறாக உடைந்தன. நிறுத்தி வைத்துக் கன்னத்தில் அடித்ததுபோல் இருந்தது அவனுக்கு. 'இனிமேல் கௌடர் வீடு என்றைக்குமே தனக்கு ஆகாமல் போய்விட்டது அல்லவா?' என்ற ஏக்கம் அவன் மனத்தைக் கலக்கியது. வெளியே வந்தான். பல எண்ணங்கள் அவன் மூளையைக் குழப்பின. குழப்பம் தெளியவில்லை. உள்ளத்தில் விழுந்த அடி உடம்பில் விழுந்ததுபோலவே அவனைத் துன்புறுத்தியது.

தாதாவுக்கு, எங்கே போவதென்று உடனே விளங்கவில்லை. ஆச்சார் வீட்டுக்குப் போய் அவரை வணங்கினான். இரவு எட்டு மணி இருக்கும். சாவடி வேடிக்கைகளையெல்லாம் பார்த்துவிட்டுப் பாளாச்சார் அப்பொழுதுதான் உள்ளே நுழைந்தார். தாதாவைப் பார்த்தார். இருட்டில் சட்டென்று புரியவில்லை. யாரு தாதாவா? வா, மேலே வா, என்று அன்புடன் அழைத்தார். ஊர்வலத்துக்குப் பின் திரும்பிய காளைகளைத் தாதா பிரம்மப்

பிரயத்தனம் செய்து மாளிகையில் கொண்டுபோய்ச் சேர்த்ததில் தமக்கு மிகவும் திருப்தி என்று அவர் சொன்னார். 'இதுபோலவே நீ எப்பொழுதும் பாதள்ளியின் கௌரவத்தைக் காப்பதில் உற்சாகம் குன்றாதிருக்கவேண்டும் தாதா' என்று ஊக்க மூட்டினார்.

உடனே தாதாவின் உள்ளம் உருகியது. நெஞ்சு விம்மியது. மேல் வேஷ்டியின் நுனியால் கண்ணைத் துடைத்துக்கொண்டு துக்கம் தோய்ந்த குரலில், 'உங்களுக்கு அது சம்மதமா இருக்குப் பெரியப்பா. ஆனால் கௌடர் வீட்டு அம்மாவுக்கு என்மேல் கோபம் போலிருக்கு, என்ன செய்வது?' என்று சொல்லிப் பெருமூச்சு எறிந்தான்.

ஆச்சாருக்கு இந்தச் செய்தி புதியது. 'அதையெல்லாம் மனசில் வெச்சிண்டு என்ன செய்வது தாதா. என்ன ஆனாலும் அவள் ஒரு பெண்பிள்ளை. நாலுபேர் சேர்ந்து அவள் மனசைக் கெடுத்துவிட்டார்கள். ஏற்கெனவே வாரிசு விவகாரத்தினால் அவளுக்கு யார்மேலேயும் நம்பிக்கையில்லை. இப்பொழுது அசுபம் நீக்கிய காலைகளைத் தன் வீட்டுக்குக் கொண்டுவர ஆசைப்பட்டாள்போல் இருக்கிறது. உன்னால் அதுவும் தவறிப் போய்விட்டது. சுபாவத்திலேயே கொஞ்சம் தலைக்கிறுக்கு. போதாததற்கு இவையெல்லாம் சேர்ந்து அதிகக் கோவத்தைக் கிளப்பிவிட்டிருக்கலாம். இதையெல்லாம் மனத்தில் போட்டுக் கொள்ளக்கூடாதப்பா. உன் அம்மா உன்னைக் கோபித்துக் கொண்டால் என்ன செய்வாய்?' என்று கேட்டார் ஆச்சார்.

ஆச்சார் வேண்டுமென்றே அவன் உள்ளத்தைத் தொடும்படி உருக்கமாகப் பேசினார். கௌடர் மனைவி என்னவானாலும் ஒரு பெண். ஊரார் அவளை வயிற்றில் வைத்துக் காப்பாத்த வேண்டுமே தவிர, எதிர்த்துப் போராடக்கூடாது என்பது அவருடைய கருத்து. இப்பொழுது பாளாச்சாருக்குப் பாதள்ளி யைப்பற்றிய கவலையே பெரிதாகிவிட்டது.

ஆச்சாரின் பேச்சு, தாதாவின் உள்ளத்தைப் பதமாக்கியது. நெஞ்சில் நிறைந்திருந்த கோபமெல்லாம் சூரியனைக் கண்ட பனியைப்போலக் கரைந்து கண்ணீராக உருகிவந்தது. நடந்து வந்ததால் அவனுக்குப் பசியும் களைப்பும் மிகுந்திருந்தன. அலட்சியம், இகழ்ச்சி இவையெல்லாம் ஒவ்வொன்றாகப் படை யெடுத்ததால் அவனுக்குக் கோபம் வந்தது. ஆச்சாருடைய ஆதரவான பேச்சால் அவையெல்லாம் மாயமாக மறைந்தன. இன்பமோ, துன்பமோ என்று தெரியாத உணர்ச்சி மனத்தில் நிரம்பிக் கண்ணீர் வடிந்தது.

''இப்படிப் பித்தன்போல் அழுதுகொண்டிருப்பதால் என்ன லாபம் தாதா? உன் தாயை இனிமேல் நீ பார்க்க முடியுமா? புண்ணியவதி, நீ சிறு பையனுக இருக்கும்பொழுதே கண்ணை மூடிவிட்டாள். பெற்ற தாய் உனக்கு ஒரு கவளம் சோறு போடவில்லை. ஆனால், மணியக்காரர் மனைவி உன்னைத் தாயாரைவிட அதிகமாகக் கவனித்துக்கொள்ளவில்லையா? என்னையே பார்த்துக்கொள். குழந்தைகள் இல்லை. தம்பிமார் அவர்களுடைய குடும்பங்களையும் என் காலில் கட்டிவிட்டுப் போய்விட்டார்கள். கோபாலன் என்ன கதியானுன் என்பது உனக்குத் தெரியும். படதையாவுடன் சிநேகம் செய்துகொண்டு கெட்ட பழக்கங்களுக்கு அடிமையாகிக் கடைசியில் காலராவில் போய்விட்டான். 'குழந்தை குட்டிகள் இல்லையே' என்று எனக்குக் கவலையில்லை. வளரும் பிள்ளைகள் நீங்களெல்லோரும் இல்லையா? உங்களையெல்லாம் என் குழந்தைகளாகவே நினைக்கிறேன். நீங்கள் எல்லோரும் என்மேல் அன்போடு இருக்கிற வரையில் நான் அனுதையல்ல. சொந்தக்காரர்கள் இருப்பதாகவே நினைத்துக்கொண்டிருக்கிறேன்.'' இப்படி ஆச்சாரின் மனத்தின் ஆழத்திலிருந்து அதிகமாகவே சொற்கள் வெளி வந்தன. தாதா, தன் தாயை நினைத்துத்தான் அழுகிருன் என்று அவர் எண்ணினுர். அவருடைய வாழ்க்கையில் இது போல் மனதாரப் பேசும் சந்தர்ப்பம் வந்ததேயில்லை. சமீபத்தில் ஆச்சாருக்கு அடிக்கடி இந்தத் தனிமை ஏக்கம் உண்டாகி விடுகிறது. அந்த நினைவுகள் பொங்கி வரும்பொழுது அவர் இப்படிப் பேசுவார்.

இருவரும் உணர்ச்சிமேலீட்டால் சிறிது நேரம் பேசாமல் இருந்தார்கள். நொந்த புண்ணை இதமாகத் தடவுவதுபோல் இடையிடையே ஆச்சார் ஏதாவது பேசிவிட்டு நிறுத்தினுர். அப்பொழுது உள்ளேயிருந்து 'ராத்திரிப் பலகாரத்துக்கு வரவில்லையா?' என்று ஆச்சாருடைய மனைவி மெதுவாகவே கேட்டாள்.

'ஆ!' என்று திடுக்கிட்டு ஆச்சார் அவளைப் பார்த்தார். வாசற்படியில் வைத்த விளக்கின் ஒளியில், நாற்பது வருஷ காலமாக அவருடைய வாழ்க்கையில் துணை வந்துகொண்டு இருக்கும் அவருடைய தர்மபத்தினி எதிரே நின்றிருந்தாள். கலங்கிய மனம் உடனே தெளிவடைந்தது. 'நான் ஒன்றும் தனியில்லை' என்று அவர் திருப்தி அடைந்தார்.

'தாதா ஊரிலிருந்து களைத்து வந்திருக்கிருன்பார், அவனுக்கு முதலில் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்யணுமே' என்று மனைவியிடம் சொன்னுர் ஆச்சார்.

தாதாவுக்கு அதற்குமேல் தாங்க முடியவில்லை. சூழ்நிலை, அன்பாகிய ஈரத்தால் நனைந்திருந்தது. பழைய நினைவுகள் வந்தன. 'பெரியப்பா! செத்துப்போன நானுப் பெரியப்பாவே உங்களுக்குள் புகுந்து பேசுவதாக எனக்குத் தோன்றுகிறது?' என்று தாதா வாய்குழறக் கூறிவிட்டுக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டான்.

ஆச்சாருடைய பலகாரத்தோடு தாதாவின் சாப்பாடும் முடிந்தது. அவர் கை கழுவிக்கொண்டு மறுபடியும் கூடத்துக்கு வந்தார்.

'லிங்கப்பாவின் ஜனன ரிஜிஸ்டரின் குறிப்பை அனுப்பு வதைப்பற்றி யசவந்தராவ் என்ன சொன்னார் தாதா?' என்று ஆச்சார் கேட்டார். அஜராணிக்குப் போன காரியம் என்ன ஆயிற்று என்று தெரிந்துகொள்ள அவர் விரும்பினார்.

''தாலூகாவிலிருந்து குறிப்பு எடுத்து அனுப்புவதாக அவர் சொன்னாருங்க. ஆனால் அதுக்கு அவசியம் வராது என்று யசவந்தராவ் சொன்னார். லிங்கப்பாவின் தகப்பன் சங்கரப்பா இருக்கானே, அவனுக்கு ஏதோ உடம்பு சரியில்லையாம். சாமியிடம் குறி கேட்டாங்களாம். அதுக்கு, 'லிங்கப்பன் உன் மகனாக இருந்துகிட்டு வேறு ஒருத்தருடைய ஆஸ்தியை விழுங்கப் போயிருக்கான். அவனைத் திரும்பக் கூப்பிட்டுக்கோ. அவன் முன்போல் உன் மகனாக இருந்தால் உன்னுடைய நோய், நட்ட வேரைப் பிடுங்கி எறிவதுபோல் ஓடிப்போயிடும். நிலம், வீடுன்னு ஆசைப்பட்டு அவனை அங்கே விட்டாயானால் அவனைப் பெத்த உனக்கு ஆபத்து' என்று தெய்வவாக்கு வந்ததாம். இப்ப, சங்கரப்பனின் பொண்டாட்டி பிள்ளைகளெல்லாம், 'லிங்கப்பாவைப் பாதள்ளியிலிருந்து வராப்பல ஏற்பாடு செய்யுங்க'ன்னு யசவந்தராவைத் தொந்தரவு செய்றாங்களாம். 'பாபு சாஹேபே போய்விட்ட பிறகு லிங்கப்பா அங்க இருக்க மாட்டான். வந்துடுவான்'னு இவர் தைரியம் சொன்னாராம். 'பாபு சாஹேப் கட்டின வேஷ்டியோட மாளிகையை விட்டுப் போனது, பாதள்ளி மணியக்காரருக்கு நாங்கள் கொடுத்த வாக்கை நடத்திக்கொடுத்தாற்போல ஆச்சு, தாதா' என்று அவர் சொல்லிப் பூரித்துப்போய்விட்டார். 'லிங்கப்பாவைக் கூட்டிகிட்டுப் போக, அஜராணிப் பெரிய மனுஷங்களெல்லாம் வருவாங்களாம்' '' என்று தாதா ஒரே மூச்சில் எல்லா விவரங் களையும் மனம்விட்டுச் சொன்னான்.

இந்தச் செய்தியைக் கேட்ட ஆச்சாருக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாயிற்று.

சந்தோஷம் மிகுந்த அந்த நிலையில், மற்றொரு சந்தோஷச் செய்தியை அவர் தாதாவிடம் சொன்னார்.

'யசவந்தராவ் மூலமாகத் தமக்குத் தெரிந்த செய்தியையெல்லாம் மகாராஜா, கலெக்டரிடம் சொன்னாராம் தாதா. இந்தப் பத்திரத்தின் ஆதாரத்தின்மேல் மாஜிஸ்டிரேட்டுக்குக் கலெக்டர் கடிதம் எழுதியிருக்காராம். உன்மேல் போட்ட பிராது படையாவின் தூண்டுதலால் நடந்தது என்றும், உடனே பாதள்ளியில் விசாரணை செய்து அதற்குத் தீர்ப்புச் சொல்ல வேண்டும் என்றும் தெரிவித்திருக்கிறாராம். மாஜிஸ்டிரேட் இன்னும் இரண்டொரு நாளிலேயே இங்கே வந்து விசாரணை செய்து கேஸை முடித்துவிடுவாராம். இன்னிக்குச் சேஷப்பாவுக்கு அவரிடமிருந்து உத்தரவு கொண்டு வந்த முல்கி சிப்பாய் இதையெல்லாம் சொன்னான்' என்று நிறைந்த மனத்தோடு ஆச்சார் சொன்னார்.

இருவருடைய மனமும் லேசாயிற்று. தாதா புறப்படத் தயாரானான். பாளாச்சார் அவனை நிறுத்தி 'கௌடர் வீட்டுக்குத்தானே போகிறாய்?' என்று கேட்டார்.

'இல்லை, எங்க வீட்டுக்குப் போறேங்க. அப்பாவைப் பாக்கவே இல்லை' என்று தாதா, கௌடர் வீட்டுக்குப் போகாததற்குக் காரணம் சொன்னான்.

'நாளைக் காலேலே லக்ஷ்மணனைப் பார்த்துக்கொள்ளலாம். இப்பொழுது ராத்திரிவேளை. கௌடர் வீட்டுக் காவல் பொறுப்பு உன்னிடம் இருக்கிறது. இப்ப அங்கேயே போ' என்று ஆச்சார் உத்தரவு போட்டார்.

தாதாவுக்கு ஆச்சாரின் பேச்சை மீற மனம் வரவில்லை. அவன் அங்கிருந்து புறப்பட்டபோது இரவு வெகு நேரம் ஆகியிருந்தது. மழைக்காலம் ஆனதால் வானத்தில் மேகங்கள் கவிந்திருந்தன. நக்ஷத்திரங்கள் தெரியவில்லை. லேசாக மழை தூறிக்கொண்டிருந்தது. அடிக்கடி வீசும் மேல்காற்று முதுகில் சாட்டைபோல் பட்டு உடம்பையே நடுங்கவைத்தது. வழியில் ஓர் ஈ, காக்கைகூடக் காணப்படவில்லை. தாதா, கௌடர் வீட்டை அடைந்தபோது வெளிக் கதவு தாழிட்டிருந்தது. 'அப்படியே திரும்பிப் போய்விடலாமா?' என்று நினைத்தான். ஆனாலும் மனத்தை உறுதிப்படுத்திக்கொண்டு கதவைத் தட்டினான். வேலையாள் வந்து கதவைத் திறந்தான். தாதா உள்ளே போனான். உள்ளே ஒரு பெரிய கூட்டம் கூடியிருந்தது. பார்வதியம்மாள் அவர்களுடன் ஏதேதோ பேசிக்கொண்டிருந்தாள். தாதா, அவள் உட்கார்ந்திருந்த இடத்தைப்

பார்த்தான். 'உன்னுடைய தாயார் கோபித்துக்கொண் டிருந்தால் என்ன செய்வாய்?' என்று பாளாச்சார் கேட்டது நினைவுக்கு வந்தது. மெதுவாகக் கூடத்துப் படிகளில் ஏறினன். செருப்பை வெளியே விட்டிருந்ததால் காலடிச் சத்தம் கேட்க வில்லை. யாரும் அவனைத் திரும்பிப் பார்க்கவில்லை. தாதா, 'என்ன செய்வது?' என்று தெரியாமல் உணர்ச்சிவசப்பட்டவ ஞகப் பார்வதியம்மாவின் முன் விழுந்து வணங்கி, 'அம்மா, உன் மகன் என்ன தப்பு செய்திருந்தாலும் மன்னித்துவிடு' என்று வேண்டிக்கொண்டான்.

உட்கார்ந்திருந்த ஜனங்களெல்லாம் கொல்லென்று சிரித் தார்கள். அவர்களுள் ஒருவன், 'கௌடர் வீட்டு மானம், மரியாதை எல்லாத்தையும் கெடுத்துட்டு, இப்பக் காலிலே விழுந்து வேஷம் போடறுன்னு சொல்லக்கூடாதா?' என்று குத்தலாகச் சொன்ஞன். சாதாரண நிலைமை இருந்திருந்தால் நூறு பேர் இருந்திருந்தாலும் லட்சியம் செய்யாமல் தாதா அப்படிச் சொன்னவன் பல்லை உடைத்துக் கையில் கொடுத் திருப்பான். இப்போது அவன் மனத்தில் இரக்கம் இருந்தது; அவன் மனம் நொந்து கிடந்தது. கவலையின் சுமை அவனுடைய கோபத்தைக் குறைத்திருந்தது. அதஞல் தாதா ஒன்றும் சொல்லவில்லை.

பார்வதி வாயையே திறக்கவில்லை. அவளுடைய வெறுப்பு அதிகரித்ததே ஒழியக் குறையவில்லை. கோபத்தோடு துக்கமும் சேர்ந்துகொண்டது. முகத்தை முந்தானையால் மூடிக்கொண்டு அங்கிருந்து எழுந்து உட்புற அறைக்குப் போய்விட்டாள். ஜனங்கள் எல்லோரும் தங்களுக்குத் தோன்றியபடி பேசிக் கொண்டு வீடுகளுக்குத் திரும்பிஞர்கள். அதுவரையிலும் தூற்றலாக விழுந்த மழை பலத்து 'ஜோ'வென்று கொட்டத் தொடங்கியது. தாதா, அங்கேயே சற்று நேரம் நின்றிருந்து விட்டு ஒன்றும் தோன்றுமல் மாட்டுக் கொட்டகைக்குப் போய்த் திண்ணையில் படுத்துக்கொண்டான்.

உடம்பு களைத்துவிட்டது. மனம் புண்ணுகிவிட்டது. உடம்புக்குத் தூக்கம் வேண்டியிருந்தது. ஆஞல் மனம் தூங்க விடவில்லை. 'வலி எங்கே?' என்று தெரியாமல் தவிக்கும் குழந்தையின் நிலையில் இருந்தது தாதாவின் மனம். திடீரென்று பழைய சங்கதி ஒன்று நினைவுக்கு வந்தது. அன்று தானியக் கொள்ளை நடந்தபோது ஜனங்களைத் தான் விரட்டிவிட்டதைக் கேட்ட இதே பார்வதி அம்மாள் அன்போடும் பாசத்தோடும் வரவேற்கவில்லையா? ஹெட் கான்ஸ்டபிள் தன்னைப் பிடிக்க

வந்தபோது, 'நீ என் மூன்றுவது மகன் என்று நினை, தாதா' என்று சொல்லித் தன்னை வீட்டிலேயே ஒளித்துவைத்துக் கொண்டாள். பெரிய குடும்பத்தைச் சேர்ந்த அவள் அப்பொழு தெல்லாம் தாராள மனத்துடனே நடந்துகொண்டாள். ஆனுல் இப்போது எவ்வளவு மாறுதல்! தாதாவின் முகத்தில் விழிக்கவே அவள் விரும்பவில்லை. படையா, பாபு சாஹேப் இருவரும் ஊரைவிட்டுப் போய்விட்டார்கள். லிங்கப்பாவின் அட்டஹாஸம் குறைந்திருக்கிறது. இப்பொழுது பாதள்ளிக் கௌடரின் குடும்பம் ஸ்திரப்படும் நிலையில் இருக்கிறது. அவளுடைய அபிமானத்தைப் பெற்று வேலை செய்த தன் போன்றவர்க ளெல்லாம் தைரியமாக ஊரில் நடமாட முடிகிறது. திருட்டு, பயிர்க்கொள்ளை இவற்றின் பயம் எட்டிப் போய்விட்டது. இப்போது தாதா அவசியமில்லைபோலும்! அப்படியானுல் தன்னுடைய தகுதிதான் என்ன? அடிதடிச் சண்டையில் வேருெருவர் கை ஆயுதமாக இருந்தேதான் தாதா வாழ வேண்டுமா? எப்படிப்பட்ட கேடுகெட்ட நிலை! 'அவன் சாப்பிட்டானு பட்டினி கிடக்கிருனு?' என்றுகூடக் கௌடர் மனைவி கேட்கவில்லை. தான் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக்கொண்ட பிறகும் உம்மென்று முகத்தைத் தூக்கி வைத்துக்கொண்டு உள்ளே போய்விட்டாள். அவன் மன்னிப்புக் கேட்டதுதான் தவறு.

ஓடும் காளைகளை அநாயாசமாகப் பிடித்து நிறுத்தும் தாதா, இந்த எண்ண ஓட்டங்களால் சோர்ந்து போய்விட்டான். கவலை அதிகமாகிவிட்டதால் அவன் மனம் கலங்கியது. கோபமாக வந்தது. 'தாலீம்கானுவுக்காவது போய்ப் படுத்துக்கொள்ளலாம்' என்று முணுமுணுத்துக்கொண்டே எழுந்து உட்கார்ந்தான். கம்பளியை உதறி, கண்ணைத் தேய்த்துக்கொண்டு, ஒரு பெரிய கொட்டாவிவிட்டான். புறப்பட நினைத்தான். அப்பொழுது வேலையாட்கள் சரியாகக் கட்டாததாலோ கார்ப் பௌர்ணமியின் போது கட்டிய புதிய கயிற்றின் முடிச்சுக் கட்டுத்தறியிலிருந்து நழுவியதாலோ பசு ஒன்று தாதா உட்கார்ந்திருந்த இடத்துக்கு ஓடிவந்து அவன் காலை நக்கிக்கொண்டு இருந்தது.

படுத்துக்கொள்வதற்கு முன்பு மாடுகளுக்கெல்லாம் தீனி போடுவது தாதாவின் தினசரி வேலை. 'இந்தப் பசுவின் பால், தாதாவுக்கு மட்டுமே' என்று பார்வதியம்மா கண்டிப்பாக உத்தரவு போட்டிருந்ததால் தாதா அதிகச் சிரத்தையுடன் அந்த மாட்டை மேய்த்துவந்தான். தாதாவின் மனம் வேதனை உற்றது. யாராரிடமோ அன்பை வேண்டி வேண்டி மனம் ஓய்ந்துவிட்டது. இந்தப் பசு பக்கத்தில் வந்தவுடன் அவன்

மனத்தில் விசித்திரக் கற்பனைகள் தோன்றின. 'தனக்குத் தூக்கம் பிடிக்காததால் ஆறுதல் சொல்லுவதற்காக இது வந்திருக்கலாம்' என்று நினைத்தான். அவனை அறியாமல் கண்ணீர் பெருகியது. அதன் கழுத்தை நீவினான். கொம்புகளைத் தடவிக் கொடுத்தான். கடைசியில் அதன் கழுத்தைக் கட்டிக் கொண்டு அழுதான். அவன் கன்னத்தின் வழியும் கண்ணீரைப் பசு தன் நாக்கால் நக்கத் தொடங்கியது.

வெகு நேரம் இப்படிக் கழிந்தது. கடைசியில் அந்தப் பசு அங்கும் இங்கும் நகர்ந்தது. விடுவித்துக்கொள்ள முயன்றது. அப்பொழுதுதான் தாதாவுக்குச் சுய நினைவு வந்தது. உடனே எழுந்திருந்து பசுவை மறுபடியும் தறியில் இறுகக்கட்டி ஒரு கூடையில் தவிட்டையும் வைத்தான். பிறகு திண்ணையில் வந்து உட்கார்ந்தான்.

மனத்தை உருக்கக்கூடிய இந்த ஒரு சம்பவம் தாதாவுக்குப் பல விஷயங்களை நினைவூட்டியது. அன்று சப் இன்ஸ்பெக்டர் ஃபக்ருதீன் காவலில் வைத்து மறுநாள் கௌடர் வீட்டுக்கு அனுப்பியபோது, தாதா இதே திண்ணையில்தான் படுத்துக் கொண்டிருந்தான். பாபு சாஹேபுடன் ஸ்நேகம் செய்து கொண்டிருந்தால் பெரியப்பாவின் கொலைக் குற்றத்தைச் சுமந்து தூக்கில் ஏறவேண்டியிருந்திருக்கும். சங்கரப்ப கௌடர் அதற்கு இடம் கொடுக்கவில்லை. அவருடைய உபகாரம் ஆயிரம் உருவம் எடுத்து அவனைக் காப்பாற்றியது. பார்வதியம்மாவின் இந்த அலட்சியம்கூட அதனுள் முழுகிவிட்டது. இந்த யோசனைகளால் தாதா சற்றுச் சமாதானம் அடைந்தான். அவனையும் அறியாமல் கண்ணை மூடினான்.

## 27

'கலெக்டர் பாதள்ளிக்கு வரப்போகிறார்' என்ற நெஞ்சைப் பிளக்கும் செய்தி, நேராக மாஜிஸ்டிரேட்டின் உத்தரவால் வந்திருக்கிறது என்று சேஷப்பா நம்பவேண்டியிருந்தது. வருஷத்துக்கு ஒரு தடவை மாஜிஸ்டிரேட் ஒரு மணி நேரமோ, இரண்டு மணி நேரமோ ஊரில் முகாம் போடுவார். பெரிய அதிகாரிகள் யாரும் பாதள்ளிக்குப் பேட்டி கொடுத்ததில்லை. அவனுடைய பதினைந்து வருஷக் கணக்குப்பிள்ளை உத்தியோகத்தில் என்றும் நடக்காத நிகழ்ச்சி அன்று நடக்கவிருந்தது. அதைக் கேட்டதும்

சேஷப்பாவுக்கு வயிற்றில் புளியைக் கரைத்தது. அவனுக்குக் காலம் சரியாக இல்லை. விஷயமோ மிக நுட்பமாகக் கவனிக்க வேண்டியது. தன் முறை தீர்ந்து, சாமராவின் முறை வந்து, நியமனம் உத்தரவு வந்திருக்கும் சமயத்திலேயா அவரும் வரவேண்டும். சாமராவின் நியமனம் தலைகீழாக மாறித் தன்னுடைய பதவி ஸ்திரமாக வேண்டும் என்று செய்த முயற்சி களெல்லாம் வீணாயின. அதனால் சேஷப்பாவின் கூரிய புத்தியும் மழுங்கிவிட்டது.

சேஷப்பாவின் கற்பனைத்திறன் ஒரு கணத்தில் வருங்காலம் எப்படி இருக்கும் என்று ஊகித்துப்பார்த்தது. கலெக்டருக்குச் சப்ளை செய்வது ஒரு தலைவலி. அதற்காக இப்பொழுதே முன் ஜாக்கிரதை எடுத்துக்கொள்வது நல்லதல்லவா? என்று மாஜிஸ்டிரேட்டையே யோசனை கேட்டான். அவர் புன்சிரிப்புடன் 'என்ன கணக்கப்பிள்ளை, அதைப்பற்றி என்னையே கேட்கிறாயா? இவரைப்போன்ற பெரிய உத்தியோகஸ்தர்கள் எவ்வளவு பேரை உன் பையில் போட்டுக்கொண்டிருக்கிறாயோ? கலெக்டருடன் பட்லர் வருகிறானே, அவனையே கேள். பட்லரைத் திருப்தி செய்வதிலேயே கலெக்டரைத் திருப்தி செய்யும் ரகசியம் அடங்கி இருக்கிறது' என்று வழி சொல்லிக் கொடுத்தார்.

'ஓ! அதைப்பற்றிய கவலையே வேண்டாம் சாஹேப். வழி வசமாகக் கன்னியில் குரு வந்திருக்கிறார். கிருஷ்ணைவுக்குப் புஷ்கர மல்லவா? தாங்களும் குடும்பத்துடன் வந்துவிட வேண்டும். நம்மூர்ப் புட்டப்பனும் ஓய்வாக இருப்பான். ஸ்வீட்டுக்கு மண்டிகை (ஒரு பட்சணம்) போட்டு ஜமாய்த்துவிடலாம்' என்று அவருக்கு அழைப்பே கொடுத்துவிட்டான் சேஷப்பா.

மாஜிஸ்டிரேட்டுக்கும் குடும்பத்தோடு 'கேம்ப்' போவ தென்றால் பிடித்த விஷயம்தான். அவருடைய கேம்ப் என்றால் தாராளமாக விருந்து கொடுக்கும் உற்சாகம் மிகுந்த கிராமக் காரர்களுக்கு, தாராள மனமும் குஷியும் பிறந்துவிடும். சப்ளைச் செலவு கிராமத்தார்மேல் விழாமல் பார்த்துக்கொள்வார் என்ற புகழ் மாஜிஸ்டிரேட்டுக்கு இருந்தது. அவர் கையை விட்டுப் பணம் கொடுக்கமாட்டார். விசாரணை நடக்கும்போது பஞ்சாயத்துத் தீர்ப்புகள் கிராமத்தாருக்கு அனுகூலமாகும்படி பார்த்துக்கொள்வார். அவர்கள் சொல்லும் குறிப்பிலிருந்தே புரிந்துகொண்டு தீர்ப்பு எழுதுவார். அப்படியானால் அந்தப் பொருள் பொதிந்த உபகாரத்துக்கு முன் அவருக்குச் சப்ளை செய்வது பெரிய விஷயமா? நன்றிக்கடன்தானே! சேஷப்பாவின் மனக் கண்முன் இந்த உபாயங்கள் எல்லாம் படம்போல் வந்து

போயின. தாதாவின்மேல் வந்த போலீஸ் கேஸில் கலெக்டர் தனக்கு அனுகூலமான தீர்ப்பையே எழுதுவார் என்ற தன்னம்பிக்கை சேஷப்பாவுக்கு இருந்தது. ஆனால் குற்றவாளி தாதா ஏழை. அவனிடமிருந்து எந்தவிதமான லாபமும் பெற வழி இல்லை. இந்தக் கேஸால் பணம் வர வேண்டும் என்றால் ஊரார் எல்லாம் சந்தா போட்டுக் கொடுக்கவேண்டும். இந்தச் செய்தி மாஜிஸ்டிரேட்டின் காதில் விழுந்தால் சேஷப்பாவின் சாயம் வெளுத்து விடும். ஆனால் வெறும் கையோடு வேலை செய்வது சேஷப்பாவின் கணக்கப்பிள்ளை 'மனச்சாட்சி'க்கு ஒவ்வாத செய்கை. அது கணக்கப்பிள்ளைகளின் மரபுக்கு அவமரியாதை. தவிர உத்தியோகஸ்தர்களுக்குச் சப்ளை செய்யும் செலவு ஒன்று தலைமேல் உட்கார்ந்திருக்கிறதே.

சப்ளைச் செலவு என்றவுடனே நினைவுக்கு வந்தது. இந்தச் செலவில் பாதியை மணியக்காரர் ஏற்றுக்கொள்வது வழக்கம். சங்கரப்ப கௌடர் இறந்தபின் மணியக்காரரைச் சேர்ந்த தஸ்தாவேஜுகளும் சேஷப்பாவிடமே இருந்தன. புதிய மணியக்காரர் நியமனம் ஆகும் வரையில் அவனிடமே இருக்கும். கௌடருடைய பங்குக்குச் சேரும் லஞ்சப் பணமும் சேஷப்பாவுக்கே சேர்ந்துவந்தது உண்மைதான். ஆனாலும் அதற்காகச் சப்ளைச் செலவு முழுவதையும் அவன் மட்டும் ஏற்க முடியுமா? இந்த விஷயத்தில் பார்வதியம்மாவைக் கேட்பதும் கௌரவக் குறைவுதான். ஆனால் 'கேட்டால் கொடுத்திருப்பேனே' என்று பின்னால் அவள் சொல்லலாம். இந்த விஷயத்தில் 'கேட்டு விடுவதே நல்லது' என்று சேஷப்பாவுக்குத் தோன்றியது. அதனால் ஐயின் ஜின்னப்பாவைத் துணை கூட்டிக்கொண்டு, கௌடர் வீட்டுக்குப் போனான்.

பார்வதி சமையல் அறையில் இருந்தாள். சேஷப்பா வந்த செய்தியைக் கேட்டு அவள் மனத்திலும் ஏதேதோ எண்ணங்கள் சுழன்றன. சங்கரப்ப கௌடர் இறந்தபின் முதல்முறையாகச் சேஷப்பா தன் வீட்டுக்கு வந்திருக்கிறார். பழைய விவகாரங்கள் மனத்துக்குப் பிடிக்காதவை எவ்வளவோ இருந்திருக்கும். இப்பொழுது அவற்றையெல்லாம் மறந்துவிட்டு வந்திருக்கிறார் என்ற நினைவு அவளுக்கு ஆறுதலைக் கொடுத்தது.

சேஷப்பா தான் வந்ததற்குக் காரணத்தை நேரிடையாகச் சொல்லவில்லை. 'மாஜிஸ்டிரேட் இந்த ஊருக்கு வரப்போகிறார். முந்தா நாள் தாலூகாக் கச்சேரிக்குப் போனபோது செய்தி தெரிந்தது. அதை உங்களுக்குத் தெரிவித்துவிட்டுப் போகலாம் என்று வந்தேன்' என்று பேச்சைத் தொடங்கினான். 'அப்புறம்

மாஜிஸ்டிரேட்டு இங்கே வந்தபின் தாதாவின் பேரில் உள்ள கேஸை விசாரித்து முடிவு சொல்லப் போகிறார்' என்று சொன்னான். இந்தச் செய்தியால் பார்வதி உற்சாகமடைந்து தாதாவின் விடுதலைக்காக முயல்வாள் என்று அவனுக்கு நைப்பாசை இருந்தது.

ஆனால் அவனுடைய ஆசைக்கு உடனே அடி விழுந்தது. பார்வதி 'நடந்தா நடக்கட்டும்' என்று சுரத்தில்லாமல் பதில் சொன்னாள்.

சேஷப்பா ஆச்சரியம் அடைந்தான். 'என்ன பார்வதியம்மா, என்னைக் கேலி செய்கிறீர்களா? தாதாவை ஜாமீனில் விடுவிக்க ஏற்பாடு செய்த நீங்களா இப்படிப் பேசுவது?' என்று கேட்டான்.

இந்தப் பேச்சு நடந்தபோது சின்னப்பா அங்கே இருக்க வில்லை. ஆடி விதைப்பு விஷயமாக ஆட்களோடு பேசுவதற்காகக் கொட்டகைக்குப் போயிருந்தான். கௌடர் மனைவிக்குத் தன் ஆத்திரத்தை எல்லாம் கொட்ட நல்ல சந்தர்ப்பம் கிடைத்தது. குடும்பப் பெருமை, திடீரென்று தன்மேல் விழுந்த பொறுப்பு இரண்டும் சேர்ந்து, அவளுடைய பெண் புத்திக்குத் துணையாகி அவள் மனத்தைக் குழப்பிக்கொண்டிருந்தன.

'இல்லீங்க, கார்ப் பௌர்ணமி அன்னிக்கு எங்கக் காலைகாலை வீட்டுக்கு வராம, தாதா ஏன் தடுக்கணும்? எங்க உப்பைச் சாப்பிட்டத மறந்துட்டான். எங்க ஜனங்க நடுவிலே தலைதூக்கி நடக்க முடியாதெ ஆயிடுச்சே. கௌடர் குடும்பத்துக்கு வர வேண்டிய கௌரவத்தைக் கெடுத்துட்டானே. ஜாகீர்தார் வீட்டு எச்சிலுக்குக் காத்துக்கிடக்கும் குடும்பம் அது; எங்களோட சேருமா? ஒரே ஜாதி. இவனுடைய பெரியப்பன், இவங்க அப்பன் எல்லாம் உசிரை விட்டுண்டு அங்கதானே உழைக்கிறாங்க. ஜாதி அபிமானம் சுட்டாலும் போகாதுங்க. நான் செஞ்சதுதான் தப்பு. வயத்தில பிறந்த பிள்ளைகளுக்குக்கூட அவ்வளவு செய்ய வில்லை. அவனுக்கு அவ்வளவு செய்தேன். கடைசியில் எனக்கே முழங்கையைக் காட்டிவிட்டான். இனிமேல் அவன் ஜெயிலுக்குப் போனாலும் ஒண்ணுதான்; பாழுங்கிணத்துலே விழுந்தாலும் ஒண்ணுதான்.'

கௌடர் மனைவியின் துவேஷம், அக்கிரமமாகச் சம்பந்தம் இல்லாத பேச்சுகளையே அவள் பேசும்படி செய்தது. சேஷப்பா தன் தில்லுமுல்லுக்கு விதை விதைக்க இது பதமான பூமி என்று நினைத்தான். அவனுக்குத் தாதாவிடம் பகைமை இல்லை. ஆனால் சேஷப்பா, எந்தக் காரியத்திலும் 'லாபம் எங்கிருந்து வரும்?' என்றுதான் பார்ப்பான். இருந்தாலும் 'இன்னும் ஒரு தடவை கேட்டுவிடுவோம்' என்று நினைத்தான்.

'இதோ பாருங்க பார்வதியம்மா! தாதாவை ஜெயிலுக்கு அனுப்புவது சுலபம். ஆனால் விடுவித்துக் கொண்டுவருவது கஷ்டம். அதுக்குத்தான் கொஞ்சம் யோசிக்க வேண்டியிருக்கு' என்றான்.

'சுலபமா இருக்கிறதையே செய்யுங்க. என்னை எதுக்குக் கேக்கணும்' என்று மறுபடியும் பட்டென்று பதில் சொன்னாள்.

சேஷப்பாவுக்கு ஒரு சந்தேகம். 'அது சரி; பாளாச்சார் உங்களுடைய அபிப்பிராயத்தை ஒப்புக்கொள்ளணுமே? தாதா மேலே அவருக்கு ரொம்ப அன்பு இருக்கும்போலெ இருக்கு. அவன்மேல் வாரன்ட் இருந்தபோது அவனைத் தங்க வீட்டிலேயே மறைத்து வச்சிருந்ததை நானே பார்த்தேன். அதனாலே சொல்றேன்' என்றான் சேஷப்பா.

பேச்சு இப்பொழுது பாளாச்சாரைப்பற்றியே நடந்தது. இரண்டு பேரும் ஜாக்கிரதையாகவே பேசினார்கள். சேஷப்பா, 'தன் கணக்கப்பிள்ளை உத்தியோகம் போய்விடும்' என்பதையும் சொன்னான். நாற்பது வருஷம் ஊரைவிட்டுப் போயிருந்த சாமராவின் புதிய நியமனத்துக்குப் பாளாச்சாருடைய முழு ஆதரவும் இருப்பதைத் தெரிவித்தான். ஆனால் மணியக்காரர் வாரிசுச் சிக்கல்களை விடுவிப்பதில் எவ்வளவு சிரமம் இருக்கிறது என்பதுபற்றிச் சாமராவுக்கு என்ன தெரியும்? தன்னை இன்னும் சிறிது காலம் கணக்கப்பிள்ளையாக இருக்கவிட்டால் தொந்தரவுகளெல்லாம் தீர்ந்துவிடும் அல்லவா? இதற்குப் பாளாச்சார் ஏன் குறுக்கே வரணும். சேஷப்பாவின் குற்றச்சாட்டெல்லாம் பாளாச்சார் மேலேதான் இருந்தது. சாமராவின் நியமனத்துக்கு அவர்தான் காரணம் என்று அவனுடைய கணக்குப்பிள்ளை மனச்சாட்சி சொல்லியது. இதையே கௌடர் மனைவியின் முன் விவரித்துச் சொல்லி, பாளாச்சார் வாரிசு விவகாரத்தின் வேரையே வெட்ட இருக்கிறார் என்பதுபோல் சொன்னான்.

ஆட்களோடு பேசச் சென்ற ஜின்னப்பன் விதைப்புக்காகக் கலப்பை முதலிய கருவிகளைத் தயார் செய்துவிட்டு வந்தான். அப்பொழுதும் சேஷப்பாவின் அரட்டை முடியவில்லை. சேஷப்பாவின்மேல் அவனுக்கு நல்ல அபிப்பிராயம். தாதாவை ஜாமீனில் விடுவித்தது, படதையாவை விரட்டியது, லிங்கப்பாவின் வாரிசை ரத்துச் செய்ய அப்பீல் செய்தது எல்லாவற்றையும் அவன் கண்ணால் பார்த்திருந்தான். பணத்தைச் சாப்பிட்டாலும் சொன்னபடி வேலையைச் செய்துவிட்டான். இப்படி இருக்க அவனை 'மோசக்காரன்' என்று எப்படிச் சொல்ல முடியும்? அதனால் நடுவில் அவனும் தலையிட்டுப் பேசினான்.

''கணக்கப்பிள்ளே, உங்க எதிரில் சொல்லப்படாதுங்க. 'சொன்னபடி செய்து காட்டும் வீரன் நீங்க ஒருத்தர்தான்'னு அம்மாவிடம் நான் சொல்லிக்கொண்டே இருந்திருக்கேன். வேணுமாணு அம்மாவையே கேளுங்கள்'' என்றார் ஜின்னப்பன்.

சேஷப்பாவின் திட்டத்துக்கு இன்னோர் ஆதாரம் கிடைத்தது. 'இல்லே ஜின்னப்பா, நீயே சொல்லு. சாமராவ் கணக்கப் பிள்ளேயாக வந்தா அவனலே லிங்கப்பாவின் வாரிசு உரிமையைத் தவிர்க்க முடியுமா?' என்று கேட்டான்.

'சே, சே! நடக்குமா? அவர் படிச்சவராணு நம்ம ஊருக்குப் பெரிய மனிசராகலாம். கோர்ட்டுக் கச்சேரி விஷயத்திலே தெறமை இருக்கறதாத் தெரியலேங்க' என்று ஜின்னப்பா முகத்தைப் பார்த்து சாமுத்திரிகா லக்ஷணம் சொல்வதுபோல் சாமராவை மதிப்பிட்டுவிட்டான்.

'எனக்குத்தான் கணக்கப்பிள்ளே வேலே கிடைக்கணும்னு எனக்கு ஆசையில்லே. அதாலே லாபமும் இல்லே; நஷ்டமும் இல்லே. ஆனல் பெரிய வேலேயிலே எறங்கியிருக்கோம். என்னப்பா? அதைச் சாதிக்கக் கையில் தஸ்தாவேஜு இருக்கணும். நாளேக்குக் கலெக்டர் வந்தால் சாமராவின் நியமனம் முடிந்து விடலாம். அப்புறம் எனக்கும் கலெக்டர் ஆபீஸுக்கும் சம்பந்தம் இருக்காது. வாரிசு அப்பீல் தோல்வி அடைந்தால் நான் ஜவாப் தாரியல்ல' என்ருன் சேஷப்பா. மீன் தூண்டிலில் சிக்கியது.

சேஷப்பா இருவரிடமும் உதவி கேட்டான். அவர்கள் இல்லேயென்று சொல்லமாட்டார்கள். ஆனல் அவர்கள் இருவர் களாலும் ஆகவேண்டியது என்ன? அதற்கும் சேஷப்பா வழி சொல்லிக் கொடுக்கவேண்டியதாயிற்று. சில நாட்களுக்காவது சேஷப்பாவே கணக்கப்பிள்ளேயாக இருக்கவேண்டும். அதற்காகப் பாளாச்சாரை எதிர்த்து நிற்க நேர்ந்தாலும் நேரலாம். அதற்கும் சிறந்த வழி ஒன்று இருக்கிறது. கலெக்டரின் பெயருக்கு ஒரு விண்ணப்பம் எழுத வேண்டும். 'சேஷப்பாவே சில நாட்கள் வரையில் கணக்கப்பிள்ளேயாக இருப்பது ஊருக்கு நல்லது. அவசியமும்கூட' என்று அதில் குறிப்பிட வேண்டும். இன்று சாயங்காலத்துக்குள்ளே அது தயாராகணும். பார்வதி யம்மாளே அதில் முதல் கையெழுத்துப் போடவேண்டும். இதுதான் சேஷப்பா சொன்ன வழி.

பார்வதியம்மாவும் ஜின்னப்பனும் இந்த யோசனேயை ஒப்புக்கொண்டார்கள். ஆனல் சேஷப்பா இன்னும் எச்சரிக்கை எடுத்துக்கொண்டான். விண்ணப்பத்துக்கு ஊரில் எல்லோ ருடைய ஆதரவும் இருக்கவேண்டும். ஆனல் சேஷப்பாவின்

வேலைக்காக எழுதியதென்று யாரிடமும் சொல்லக்கூடாது. இது தனிப்பட்ட விஷயம். அற்பமானது. பாளாச்சார் இதை மறுத்துப் பேசலாம். அதனால் அவருக்கும் விஷயம் தெரியக் கூடாது. ஆனால் பாளாச்சார் உள்பட எல்லோருடைய ஆதரவும் விண்ணப்பத்துக்கு இருக்கவேண்டும்.

சேஷப்பாவுக்கா வழி தெரியாது? சமீபத்தில் பஞ்சமும் காலராவும் பாதள்ளியைப் புரட்டி எடுத்துவிட்டன. சர்க்காரிட மிருந்து உதவி கேட்கவேண்டி இருந்தது. இப்பொழுது கொடுத் திருக்கும் கடன் போதவே போதாது. சர்க்கார் உதவி செய்ய வேண்டும். விண்ணப்பம் எழுதுவதே அதற்காகத்தான் என்று சொல்லி ஊரார் சம்மதம் பெற்றுக் கைநாட்டு வாங்கவேண்டும். ஊராரெல்லாம் தற்குறிகள் என்று சேஷப்பனுக்குத் தெரியாதா! தான் ஒருவன், திண்ணைப் பள்ளிக்கூடத்து வெங்கண்ண வாத்தியார் இருவரையும் விட்டால் மற்ற எல்லோரும் எழுத்தைக் கண்டாலே பிசாசைக் கண்டதுபோல் நடுங்கு வார்கள். பாளாச்சாருக்குக் கன்னட எழுத்துத் தெரியாது. அவர் படிப்பதும் எழுதுவதும் தேவநாகரி எழுத்தில்தான். விண்ணப்பத்தில் எழுதும் விஷயத்தை அவரும் தெரிந்துகொள்ள முடியாது.

பார்வதியம்மாள், ஜின்னப்பன் இருவரும் அவனுடைய வலையில் எளிதாக விழுந்தார்கள். சேஷப்பா தன் திறமையைக் கண்டு தானே வியந்தான். சிறிது பயமும் உண்டாயிற்று. ஆனால் அதையெல்லாம் வெளிக்காட்டிக்கொள்ளவில்லை. 'சரி நான் இப்பொழுதே போய் நம்ம வெங்கண்ண வாத்தியாரை இரண்டு விண்ணப்பங்கள் எழுதச் சொல்லி வாங்கி அனுப்பறேன். எழுதுவதெல்லாம் அவரே எழுதுவார். அவர் இங்கே வந்து உட்கார்ந்ததும் ஒவ்வொருவராக அழைத்துக் கைநாட்டுப் போடச்சொல்லணும். சுமார் இருபது கைநாட்டு முடிந்து காகிதத்தில் இடமில்லாவிட்டால் ஊரில் வீடு வீடாகச் சென்று வெற்றுக் காகிதத்தில் கைநாட்டு வாங்கவேண்டும். அப்பொழுது மட்டும் நான் எழுதிக்கொடுத்த கடன் விண்ணப்பத்தைக் கையில் வச்சிண்டிருக்கணும். வெத்துக் காகிதத்திலே கைநாட்டு வாங்கி, அதை விண்ணப்பத்தோடு சேர்த்து அனுப்பணும். நான் எழுதின பஞ்சநிவாரண விண்ணப்பத்திலும் சில கையெழுத் துகள் வாங்கி இதோடு சேர்த்து அனுப்பிடறேன். ஜனங்களை ஏமாற்றினேன் என்ற பெயர் வேண்டாம்' என்று சொல்லிச் சேஷப்பா கௌடர் வீட்டிலிருந்து வெளியேறினான்.

கோபாலகிருஷ்ணன் கோயில், வழியில்தான் இருந்தது. சேஷப்பா கோயில் கிட்டப் போனதும் பக்தர்கள் யாரோ

அடித்த மணியோசை காதில் விழுந்தது. நிமிர்ந்து பார்த்தான். பாளாச்சார் அங்கே இருந்தார். அவரைப் பார்த்துச் சேஷப்பா கைகூப்பி வணங்கினுன்.

'வா சேஷப்பா, சற்று உட்கார்ந்துவிட்டுப் போ' என்று ஆச்சார் கூப்பிட்டதைத் தட்டமுடியாமல் சேஷப்பா கோயில் படி ஏறினுன்.

'என்னப்பா, ரொம்ப அவசரமாப் போறே போலிருக்கே. இந்தப் பக்கம் கௌடர் வீட்டுக்குப் போனுயா என்ன?' என்று ஆச்சார் பேச்சைத் தொடங்கினுர். விஷயத்தைத் தெரிந்து கொள்ள அவருக்கும் ஆவல் இருந்தது. பொடிக் குடுக்கைக் காகச் சேஷப்பாவிடம் கையை நீட்டினுர்.

'தன்னுடைய குட்டு இவ்வளவு விரைவில் எப்படி வெளி யாயிற்று?' என்று சேஷப்பா திகில் கொண்டான். அவனே அறியாமலேயே புருவங்கள் நெரிந்தன. வழக்கம்போல் பொய்ச் சிரிப்புச் சிரித்து, ''வேலை இருக்கே ஆச்சார்! ஜனங்கள் பஞ்சத்தால் சாப்பாடு இல்லாமல் சாவதைக் கண்ணுல் பார்க்க முடியவில்லையே. அதனுலே பார்வதியம்மாவைப் பார்த்து அது விஷயமா 'சர்க்காருக்கு ஒரு விண்ணப்பம் கொடுக்கலாம்'னு தோணித்து. கௌடர் வீட்டுக்குப் போயிருந்தேன்'' என்று சொன்னுன் சேஷப்பா.

'இந்த மாதிரி பொதுநலத்துக்காக விண்ணப்பம் போடறதா இருந்தால், பாவம்! பார்வதியம்மாவுக்கு ஏன் தொந்தரவு கொடுக்கணும்? நாங்கள்ளாம் இல்லையா? இந்த மாதிரி வேலைக்கு என்னிக்காவது குறுக்கே வந்தமா? நீ ஒரு விண்ணப்பம் எழுதிக் குடுத்திட்டா, ஜனங்ககிட்டக் கையெழுத்து வாங்க, வேண்டிய பேர் இருக்காங்க. அது சரி; வாரிசு உரிமைபத்தி ஏதோ பேசினியாமே? கௌடர், தம்மிடம் இருந்த சோளத்தை எல்லாம் ஊருக்கு மொதல்லேயே பங்கிட்டுக் கொடுத்துட்டுச் செத்துப்போய்ட்டார். இப்போ நீ அப்பீல் கிப்பீல், அது இதுன்னு சொல்லி அந்தப் பொம்மனுட்டியைப் பயப்படுத்திப் பணம் கிணம் கறக்காதே அப்பா!' என்று பாளாச்சார், தன்னையும் அறியாமல் தாட்சணியம் இல்லாமல் சொல்லி விட்டார்.

''சே, சே! என்னமாப் பேசிட்டீங்க ஆச்சார்! நான் என் சொந்த வேலையாக நெனச்சிண்டு செய்யறேன். நாளைக்கு அந்த விவகாரத்தை விசாரிக்கக் கலெக்டர் வருவார். சப்ளைக்கு ஏற்பாடு செய்யணும். அந்தச் செலவைக் கௌடர் மனைவி கொடுக்கட்டும்னு கேக்கறது அநியாயமா? நமக்குச் சரியான

பதில் கிடைத்த பிறகு தாசீல்தார் உத்தரவை ரத்துச் செய்வ தற்குக் குறிப்பு எழுதுபவர் சிரஸ்தேதார். அவருக்குக் கொஞ் சத்துலே கொஞ்சம் வெத்தலெ பாக்குக்கு வேணும்னு கேக்கறது அநியாயமா? 'அதையும் நீயே செய்'னு சொன்ன என்னுலே முடியாது'' என்று சேஷப்பா ஆத்திரத்துடன் எல்லாவற்றையும் சொன்னான்.

'நேத்திக்கு அஜராணியிலேருந்து மரியாதைப்பட்ட மனுஷங்க நாலுபேர் வந்தார்கள். லிங்கப்பாவின் தகப்பனுருக்கு உடம்பு சரியாக இல்லையாம். அவனை அழைச்சிண்டு போக வந்தாங்க. பழைய நிலைமை இப்போது இல்லை. இப்பொழுது லிங்கப்பா தானகவே வாரிசு உரிமையை விட்டுவிட்டுப் போகும் யோசனையில் இருக்கிறன். அப்பீல் அவனுக்கு விரோதமாக ஆனுலும் அவனுக்குச் சந்தோஷம்தான். அதனுலே அப்பீலை ஜயிக்கறதுலே ஒன்னும் பெருமை இல்லை சேஷப்பா!' என்று பாளாச்சார் நயமாகவே சொல்லிச் சேஷப்பாவின் திட்டங்களை முறியடிக்கப் பார்த்தார்.

'குருடன் வேண்டுவது கண்தான் ஆச்சார்; ரெண்டுகண்ணு. படதையா போயிட்டான். இனிமேல் லிங்கப்பாவும் போயிட்டாக் கவலையில்லாமெ இருக்கலாம். கலெக்டர், சிரஸ்தேதார் இவங்களுக்கு எண்ணெய் தடவி உருவற வேலை எனக்கு மிச்ச மாகும். அது இருக்கட்டும். முக்கிய விஷயம் என்னன்ன? பஞ்சத் தால் நேர்ந்த கஷ்டத்தைப்பற்றிச் சர்க்காருக்கு விண்ணப்பம் அனுப்பவேண்டியிருக்கு. நான் விண்ணப்பம் எழுதி அனுப்பறேன். நீங்களே கையெழுத்துப் போடுங்க. அந்த விண்ணப்பத்தை ஏற்றுக்கொள்ளும் விஷயமாகச் சிரஸ்தேதாரிடம் பேசவேண்டிய அவசியம் இருக்குன்னு தோண்றது. நீங்க என்ன சொல்றீங்க?' என்று சேஷப்பா கசப்பையெல்லாம் வயிற்றிலே அடக்கிக் கொண்டே கேட்டான்.

''அதை யார் வேண்டாங்கறுங்க, சேஷப்பா! நீயும் சிரஸ்தேதார்கிட்ட விளக்கமாகச் சொல்லு. கலெக்டர் இங்கே வரும் சமயத்துக்கு இந்துபுர மகாராஜாவும் வருவாராம். அவருடைய காரியஸ்தரிடமிருந்து சாமராவுக்குக் கடுதாசி வந்திருக்கு. பஞ்ச உதவியைப்பற்றி மகாராஜா மூலமாகவே சொல்லமுடியும். 'ஓங்க சிரஸ்தேதாரின் சங்கிலிருந்தே தண்ணீர் விழணும்'ங்கற சட்டம் ஒண்ணும் இல்லியே? அவர் சொன்னுச் சொல்லட்டும். ஆனு அதுக்கும் 'பணம், காசு'ன்னு பேச்செடுக்க வேண்டாம்'' என்ருர் பாளாச்சார்.

பிறகு சற்றுநேரம் இருவரும் பேசவில்லை. பொடி விநியோகம் நடந்தது. சேஷப்பாவுக்கு இன்னும் ஒரு பெரிய விஷயத்தைப் பற்றியும் ஆச்சாரிடம் உடைத்துச் சொல்லவேண்டியிருந்தது. கொஞ்ச நேரம் பேசாமல் இருந்துவிட்டுச் சேஷப்பா இப்படிச் சொன்னான்: ''அதெல்லாம் சரி, ஆச்சார், ஒரு விஷயம், 'தாதாவை ஜெயிலுக்கு அனுப்பியே தீரணும்'னு பார்வதியம்மா பிடிவாதமாக இருக்கா. என்னமோ கார்ப் பௌர்ணமியிலே நடந்த சமாசாரமாம். அன்னிக்கு நானும் ஊர்லே இல்லை. ஜமாபந்திக்குப் போயிருந்தேன்.''

ஆச்சாருக்குச் சேஷப்பாவின் பேச்சுக் கர்ணகடூரமாக இருந்தது. தாதாவைப் பொறுத்தமட்டும் பார்வதியம்மாளின் மனம் கெட்டுவிட்டது. ஆனால் 'அவனைத் தண்டித்தே தீரணும்'ங்கற பிடிவாதம் இருக்க முடியுமா? சேஷப்பா அதற்கு ஊக்கம் கொடுத்திருப்பானோ? கார்ப் பௌர்ணமியன்று இவன் ஊரில் இல்லாதிருந்ததே நல்லதாகப் போயிற்று. இருந்திருந்தால் அன்று கோட்டை வாசலிலேயே ரத்த ஆறு ஓடியிருக்கும். சேஷப்பா வீசும் வலையே பெரியது. அதில் தாதா சிக்குண்டிருக்கிறான். அவனை ஜெயிலுக்கு அனுப்பும்படி செய்து கௌடர் மனைவியிடமிருந்து பணம் பறிக்கும் யோசனையில் இருக்கிறான் என்று நினைத்தார் பாளாச்சார்.

''ஏன் சேஷப்பா, 'அந்தப் பையன் ஜெயிலுக்குப் போகணும்'னு மனசார உனக்குத் தோணறதா?''ன்னு நெஞ்சுருகக் கேட்டார் பாளாச்சார்.

''நல்ல கேள்வி இது ஆச்சார். அப்படி நெனச்சிருந்தா அவனை ஜாமீன்லே விடுவிக்கறதுக்காகக் கைச்செலவு செய்து கோர்ட்டுக்கு அலைந்திருப்பேனா? நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கிறது. கௌடர் மனைவி பாவம் ஒரு பெண்பிள்ளை! குழந்தைகளுக்கு வயசு ஆகவில்லை. ஏகப்பட்ட சொத்து! இப்படிப்பட்ட நெலையிலே தாதாவைப்போல தைரியசாலியான பையன் அவளுக்குப் பக்கபலமாக இருக்கணும். ஆனால் ஏனோ பார்வதியம்மாள் அடம்பிடிக்கிறாள். அவன் 'கௌடர் குடும்பத்துக் கௌரவத்தையே குலைத்துவிட்டான்' என்ற தவறான எண்ணத்தை மனத்தில் நிரப்பிக்கொண்டிருக்கிறாள். நான் என்ன செய்யட்டும்?'' என்று சேஷப்பா பேச்சுக்குச் சாயம் பூசிப் பேசினான்.

''இந்தப் பிடிவாதம் 'சரியில்லை'ன்னு பார்வதியம்மாளுக்கு எடுத்துச் சொல்லணும் சேஷப்பா! அதையும் மீறிப் பிடிவாதம் செய்தால் இந்தக் கேஸ்லேயிருந்து தாதா மீளும்படி நீ பாத்துக்

கணும். 'தாதாவைக் காப்பாத்தறேன்'னு நீ எனக்கு வாக்குக் கொடுத்திருக்கே, நெனேவிருக்கா இல்லேயா?'' என்று கேட்டார் பாளாச்சார்.

சேஷப்பாவுக்கு அது நினேவிருந்தது. பதினேந்து வருஷம் கணக்கப்பிள்ளே உத்தியோகத்தில் ஒரு சிறிய நிகழ்ச்சியைக்கூட அவன் மறக்கவில்லே. அவனுடைய தஸ்தாவேஜைப் போலவே அவனுடைய மூளேயும் பலவிதமான சங்கதிகளேச் சேமித்து வைத்துக்கொண்டிருந்தது. பாதள்ளியில் ஒவ்வொரு வீட்டி லும் உள்ள கஷ்ட நஷ்டங்கள், அனர்த்தங்கள் எல்லாமே அவனுக்குத் தெரியும். பத்து வருஷங்களுக்கு முன்ஞல் 'எந்த நிலம் யார் பெயரில் பொய்யாகத் தாக்கல் செய்யப்பட்டிருக் கிறது' என்று கேட்டால், வாயாலேயே பெயர், தேதி, வாரம், திதி எல்லாவற்றையும் சொல்லுவான். அப்படிப்பட்டவன் தான் கொடுத்த வாக்கை மறப்பாஞ?

சேஷப்பா மறக்கவில்லே. அத்துடன் மற்ருெரு சங்கதியையும் மறக்கவில்லே. சாமராவின் முறைக்கு வரும் வேலேயில் தன்னேயே நியமிக்கும்படி ஆச்சாரிடம் கேட்டபோது, 'அவன் வந்தா வரட்டும் பார்க்கலாம்' என்று அவர் சொல்லியிருந்தார். சாமராவ் வந்திருக்கிருன். 'அவன் பெயருக்கு வேலே உத்தரவு புறப்பட்டிருக்கிறது' என்ற செய்தியும் வந்திருக்கிறது. நாளேக்குக் கலெக்டர் வந்த சமயத்தில் அவனே நியமித்தாலும் நியமிக்கலாம். அப்படி நடந்தால் அதற்கு இப்போது ஆச்சார் என்ன சொல்வார்? சேஷப்பா அவருடைய விரலாலேயே அவருடைய கண்ணேக் குத்திஞன்.

'' 'பார்ப்போம்'னு சொல்லியிருந்தேன் சேஷப்பா. ஆஞல் 'உனக்கே அந்த வேலேயைச் செய்துவைக்கிறேன்' என்று அர்த்தம் அல்ல. சாமராவையும் ஒரு வார்த்தை கேட்கவேண்டும் அல்லவா? கேட்டேன். 'நானே பாதள்ளிக்கு நியமனம் பெறுகிறேன்' என்று அவன் சொன்ஞன். அதை உன்னிடம் சொன்னேன். இதற்குமேல் நான் என்ன செய்யமுடியும்?'' என்று ஆச்சார் சமாளித்துப் பேசிஞர்.

''பேச்சை மாற்றுவதில் நான் உங்களேவிடக் குறைந்தவன் அல்ல ஆச்சார். 'ஜாமீன் கொடுத்து வாரன்ட் பயத்திலிருந்து தாதாவைத் தப்பவைக்கிறேன்' என்று நான் வாக்குக் கொடுத் திருந்தேன். சொன்னபடி நடந்துகொண்டேன். இனிமேல் அவனே விடுவிப்பது மாஜிஸ்திரேட்டின் வேலே. இதற்குமேல் நான் என்ன செய்யமுடியும்?'' என்ருன் சேஷப்பா.

பாளாச்சாரை இந்தப் பேச்சு நேராகத் தாக்கியது. பாபு சாஹேபையும் படதையாவையும் ஊரைவிட்டு ஓட்ட முடிந்தது. ஆனால் சேஷப்பா ஊரில் பூமி நிலங்களோடு பரம்பரையாக வசிப்பவன். பாதள்ளிக்கும் அவனுக்கும் முற்பிறவித் தொடர்பு இருக்கிறது. கடைசியில் பிரச்சினை தீர்ந்தபாடில்லை. நிலைமை மிகச் சங்கடமாக இருந்தது. ஆச்சார் மௌனமாக இருந்தார்.

''இதோ பாருங்க ஆச்சார்! சாமராவ், பாபு சாஹேபை மாளிகையை விட்டு ஓட்டினான். பௌர்ணமியன்று சடங்கு முடித்த காளைகளை மாளிகைக்குக் கொண்டுவந்து கட்டினான். அதனால் 'அவன் யோக்கியன்' என்று நீங்கள் நினைத்திருக் கலாம். ஆனால் நான் அவன் வேலைக்குக் குறுக்கே வராததனால் தான் அதெல்லாம் அவனால் முடிந்தது. இதை நீங்கள் மறக்கக் கூடாது. இதை அவனிடமும் சொல்லுங்கள். அவன் கேட்கா விட்டால் அவனுக்குப் பரிந்துகொண்டு உங்களைப் போன்றவர்கள் முன்வரக் கூடாது'' என்றான் சேஷப்பா.

இந்தப் பேச்சுக்கு ஆச்சார் மிகவும் நொந்துகொண்டார். சேஷப்பா, ஆச்சாரைவிடப் பந்துப் பதினைந்து வயது சிறியவன். அவருக்கு அவனிடம் புத்திமதி கேட்கும்படி வந்துவிட்டது. குரலில் வருத்தம் தொனிக்க இப்படிச் சொன்னார் :

''இதோ பார் சேஷப்பா! நீயும் பரம்பரை உரிமை பெற்றவன்; அவனும் அப்படியே. இரண்டு பேரும் அதிரதன், மகாரதனாக இருக்கிறீர்கள். நான் ஒரு வம்புக்கும் வருவதில்லை. நீங்களே என்னைக் கூப்பிட்டு இல்லாத வம்பில் மாட்டி விடுகிறீர்கள். நீ சொல்வது 'கூப்பிட்டாலும் வராதே' என்பதுபோல் இருக்கிறது. பேஷாப்போச்சு! எனக்கு இது முதலிலேயே தெரிந்திருக்கணும். புத்தி மழுங்கிப்போச்சு. மொத்தத்தில் பாதள்ளி ஜனங்கள் கட்சிப் பிரதி கட்சிகளைச் சுமந்துகொண்டே பிறக்கிறார்களோ என்னவோ? அவர்கள் குடிக்கும் தண்ணீரிலும் சாப்பிடும் சோற்றிலும் இந்தக் குணம் இருந்து ரத்தத்தில் கலந்துவிடுகிறதோ? எனக்குத் தெரியவில்லை. இதனாலேயே ஊரெல்லாம் எரிஞ்சுபோச்சு. இன்னும் என்ன என்ன புதிய தொல்லைகள் வரப்போகின்றனவோ? பார்க்கணும். சரி; ஸ்ரீஹரியின் இஷ்டப்படி நடக்கிறது'' என்று சொல்லிப் பெருமூச்சு விட்டார்.

'ஆகா! அதுதான் சரி, ஆச்சார். இதையெல்லாம் மனசில் போட்டுக்கொண்டு என்ன செய்யப்போகிறீர்கள்? பிடியுங்கள் பொடியை. எனக்கும் நாழி ஆச்சு. போகணும்' என்று சொல்லிய சேஷப்பா, பொடியை நீட்டினான். ஆச்சார் யந்திரம்

போல் அதைப் பெற்றுக்கொண்டார். சேஷப்பா, 'தன் மருந்து வேலை செய்துவிட்டது' என்று நினைத்தான். 'எப்படியோ ஆச்சாரை ஒதுக்கிவைக்கவேண்டும். அதைச் சாதித்தாயிற்று' என்று நினைத்தான்.

அப்பொழுதே நாலு மணி. பொழுது ஏறிவிட்டது. ஆனி மாதம்; ஆடிப்பட்டம் வீணாகாமல் மழை ஜோசியம் பலித்தது. மேகங்கள் சூழ்ந்துகொண்டிருந்ததால் சூரிய வெளிச்சம் வர இடம் இல்லை. அடிக்கடி லேசாக மழை பெய்வதும் நிற்பதுமாக இருந்தது. ஆச்சாரின் உள்ளமும் உடலும் சோர்ந்துவிட்டன. 'சிறிது வெயில் வந்தால் வீட்டுக்குப் போகலாம்' என்று அவர் காத்திருந்தார். விண்ணப்பம் எழுதவேண்டிய கெடுபிடி இருந்ததால் சேஷப்பா புறப்பட்டுவிட்டான். பெய்யும் மழையையோ மேகமூட்டம் நிறைந்த வானத்தையோ அவன் லட்சியம் செய்யவில்லை. அவன் மனக்கண்ணில் தோன்றியது ஒன்றே ஒன்றுதான். 'சாமராவ் ஊருக்குப் புதியவன். அதனால் கணக்கப்பிள்ளை வேலைக்கு லாயக்கற்றவன்! ஜனங்கள் அவனுக்கு விரோதமாக இருக்கும்போது அவனுக்கு வேலை கிடைப்பது சாத்தியமில்லை' என்று எழுதிய தாசில்தாரின் உத்தரவு அவன் கண்ணெதிரில் படபடத்துக்கொண்டிருந்தது. கூடிய விரைவில் அந்தக் கனவு நனவாகும் நாளை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான்.

இந்த உத்ஸாகத்தோடு வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான். பார்வதி அம்மாளுடன் சொன்னதுபோல் நடுப்பகல் நேரத்துக்குள் விண்ணப்பங்கள் இரண்டையும் எழுதி அவள் வீட்டுக்கு அனுப்பிவைத்தான்.

## 28

'புஷ்கரத்துக்காகக் கிருஷ்ணா நதிக்கரையில் உள்ள பாதள்ளிக்குப் போகும்போது சிரமம் இல்லாமல் தீர்த்தக்கரைச் சிரார்த்தம், கங்கா சமாராதனை இரண்டையும் முடித்துக்கொண்டு வந்துவிடலாம்' என்று மாஜிஸ்திரேட் கிருஷ்ணராவ் மனைவியை அழைத்துக்கொண்டு பாதள்ளிக்குப் போனார். சேஷப்பா அதற்கு முன்பே அழைப்புவிட்டிருந்தான். சர்க்கார் வேலையும் இருந்தது. சில கேஸ்களை விசாரிக்க வேண்டியிருந்தது. அதனால் அவர் குடும்பத்தோடு சாவடி வாசலில் வந்து இறங்கியபோது அவருக்கு எந்தவிதமான அசௌகரியமும் இருக்கவில்லை. அவ

ருடைய சமையல்காரன் முன்னதாகவே வந்து பள்ளிக்கூடத்தை ஒட்டிய தர்ம சத்திரத்து அறை ஒன்றைச் சமையல் அறையாக மாற்றிவிட்டான். பள்ளிக்கூடத்தில் தாற்காலிகமாகப் பெரிய திரைகளைக் கட்டி, ஒரு பகுதியில் மாஜிஸ்திரேட்டின் ஆபீஸ், மற்றொரு பகுதியில் அவருடைய மனைவிக்கு அறை, இன்னொரு பகுதியில் விசாரணை கிளார்க்கின் ஆபீஸ் அறை என்று பிரித்து ஏற்பாடு செய்திருந்தார்கள். அதைப் பார்த்தவுடன் மாஜிஸ் திரேட்டுக்குத் தம் அதிகாரத்தின் பெருமை இன்னும் நன்றாகப் புரிந்தது.

சர்க்கார் வேலை தன் போக்கில் நடந்துவிடும். ஆனால் புஷ்கர ஸ்நானம் போன்ற மதச் சடங்குகளைப்பற்றி மாஜிஸ்திரேட் யோசிக்கவேண்டும் அல்லவா? தீர்த்த சிரார்த்தத்தை நடத்தி வைப்பதற்கு ராஜ புரோகிதரான பாளாச்சாருக்கு மாஜிஸ்திரேட் அழைப்பு அனுப்பினார். மற்றப் பெரிய உத்தியோகஸ்தர்களைப் போலவே மாஜிஸ்திரேட்டும் மதப்பற்றுள்ள ஆசார சீலராக இருந்தார். மனிதர்களுக்கு அது இயற்கை. 'இன்றைக்குக் கடவுள் இல்லை என்றால் நாளைக்குக் கலெக்டரே இல்லை' என்று சொல்லவேண்டியிருக்கும். மாஜிஸ்திரேட் பகிரங்கமாகத் தாமே பேச விரும்பாத இந்தத் தர்க்கம், அவர் மனத்தில் சுழன்று கொண்டிருந்தது. பாளாச்சார் பள்ளிக்கூடத்தில் நுழைந்தவுடன் மாஜிஸ்திரேட் பயபக்தியுடன் அவருக்கு நமஸ்காரம் செய்தார். பாளாச்சார் ஆசீர்வாதச் சுலோகத்தைச் சொல்லவே வேண்டி யிருந்தது. தீர்த்த சிரார்த்த விதிகளைப்பற்றிக் கேள்வி எழுந்தது. அதற்குப் பதிலும் யந்திரம்போல் வந்தது. சிரார்த்தத்துக்கு முதல் நாளன்று ஒருபொழுது இருக்கவேண்டும். நதிக்கரையில் க்ஷவரம் செய்துகொள்ளவேண்டும். மறுநாள் முறைப்படி சிரார்த்தம் செய்யவேண்டும். மூன்றாம் நாள் கங்கா சமாராதனை செய்யவேண்டும். இது சாஸ்திரம் விதித்த முறை. ஆனால் மாஜிஸ்திரேட் சர்க்கார் உத்தியோகஸ்தர். காலத்தை மணிக் கணக்கால் நிறுப்பவர். மூன்று நாள் முகாம்போட முடியுமா? ஆகையால் 'சிரார்த்தத்தை அன்றே முடித்துக்கொண்டு மறுநாள் கங்கா சமாராதனை செய்யலாம்' என்று ஆச்சார் பேச்சை முடித்துக்கொண்டார். இரண்டு முறைகளையும் அவரிடம் சொல்லி 'எப்படி வேண்டுமானாலும் செய்யட்டும்' என்று பட்டுக் கொள்ளாமல் சொன்னார்.

மாஜிஸ்திரேட் சிறிது நேரம் யோசித்துவிட்டுத் திரை மறைவில் இருக்கும் அந்தப்புரத்துக்குப் போய்ப் பிரச்சினையைச் சர்ச்சை செய்தார். பதிலும் உரத்த குரலில் அங்கிருந்தே வந்தது.

'அப்படியானுல் ஆச்சாரே! ஒன்று செய்வோம். இப்பச் சமையல் தயார் ஆயிடுத்தாம். ஆற்றுக்குப்போய் ஸ்நானம் செய்து வருவோம். நீங்க சொன்னது போலவே நாளைக்குச் சிரார்த்தம் செய்துவிடலாம்' என்ருர். ஆச்சார் 'சரி' என்று தலையை ஆட்டிவிட்டு வீட்டுக்குப் போனுர்.

மாஜிஸ்திரேட் மனைவியுடன் நதிக்குச் செல்லப் புறப் பட்டார். ஆனுல் உடம்பிலிருந்த புடவை, நகைகள் இவற்றின் பாரத்தால் மெள்ள மெள்ள நடந்த மனைவிக்குச் சரியாக அவரும் மெதுவாகவே நடக்கவேண்டியதாயிற்று. எப்படியோ ஆற்றங் கரைக்கு வந்து சேர்ந்தார்கள். மலைநாட்டில் நிறைய மழை பெய்திருந்ததால் கிருஷ்ணுவில் வெள்ளம் வந்திருந்தது. ஏற்கெனவே இழுப்பு அதிகம். இப்பொழுது திமிர்பிடித்து ஓடியது. மழைக்காலம் ஆனதால் தண்ணீர் செந்நிறமாக இருந்தது. நீர்ப்பரப்பின்மேல் படிந்துவரும் குளிர்ந்த காற்றில் உடம்பு நடுங்க ஒரு சாண் சேற்றில் நின்று ஸ்நானம் செய்ய மாஜிஸ்திரேட்டுக்கு இஷ்டம் இல்லை. ஆனுல் அப்படி ஏதாவது வாயைத் திறந்து சொல்லியிருந்தால் யஜமானி அம்மாள் கண் பார்வையாலேயே எரித்திருப்பாள். ஆற்றங்கரையில் சங்கல்பம் சொல்லிய பாளாச்சார், இவர் வாயால் 'மம' என்று சொல்ல வைத்துவிட்டார். 'ஸர்வபாப ஹரோம் ஹர' என்று அவர் சொன்னதைக் கேட்டு ஆற்றில் முழுக்குப் போடும்படி ஆயிற்று. மாஜிஸ்திரேட்டையே அடித்துக்கொண்டு போகக்கூடிய வெள்ளத் துக்கு அவருடைய பாபங்கள் எந்த மூலை! ஆனுல் பாவம் மிஞ்சினுலும் கவலை இல்லை. 'இப்படிப் பனிக்கட்டிபோல் நடுங்க வைக்கும் புண்ணியம் வேண்டாம்' என்று தோன்றியிருக்க வேண்டும். மாஜிஸ்திரேட் தம் மனைவியின் தலைப்புக்கும் தம் வேஷ்டிக்கும் முடிபோட்டிருப்பதை மறந்து தரைக்குத் தாவினுர். தண்ணீரில் இருந்த மனைவி தடுமாறினுள். 'சங்கல்பம் முடிஞ்ச உடனே ஒரு முழுக்குப் போட்டுட்டு எழுந்தூட்டிங்களே? கங்கையில் காசு போடாமல் போகும்படி என்ன வந்தூடுத்து? எனக்குத் தெரியும், பாக்கறவா மெச்சறத்துக்காகத்தான் எல்லாம் பண்ணறது' என்று அலையோசைகளுக்கு இடையே அவர் மனைவி முணுமுணுத்தாள்.

'அங்கவஸ்திரம் தோள்மேலே இல்லாமெ ஸ்நானம் பண்ணக் கூடாதுன்னு அதை எடுத்துக்க வந்தேன்' என்று அதட்டினுற் போல் சொல்லிவிட்டு, டவாலி மத்வாச்சாரியிடமிருந்து அங்கவஸ்திரத்தை இழுத்துக்கொண்டு மறுபடியும் தண்ணீரில் இறங்கவேண்டியிருந்தது அவருக்கு. வெள்ளி இரண்டணு

நாணயம் ஒன்றை நதியில் வீசிவிட்டு 'கங்காபாகீரதி, பாபாத்மா, பாபசம்பவஹ, த்ராஹிமாம் கிருபயா கிருஷ்ணே!' என்று மூக்கைப் பிடித்துக்கொண்டு மறுபடி ஒரு தரம் முழுகினர்.

மாஜிஸ்திரேட் தம்பதிகள் ஸ்நானத்தை முடித்துக்கொண்டு வந்தபோது பன்னிரண்டு மணி ஆகிவிட்டது. சமையல் தயாராக இருந்தது. சமையல்காரன், 'சாப்பிடலாம்' என்று சொல்லி விட்டுப் போனன். மனைவியும் சொல்லிவிட்டாள். பந்தியில் சாப்பிட வேண்டுமென்று மாஜிஸ்திரேட் ஆச்சாரைக் கேட்டுக் கொண்டார். ஆச்சார் அடக்கமாகவே 'இந்த ஒரு விஷயத்தில் நீங்கள் என்னை மன்னிக்கவேண்டும். நான் பரான்னம் சாப்பிடுவ தில்லை. உங்களுக்கு வேண்டுமானல் வேறொரு பிராம்மணனை அனுப்புகிறேன்' என்று சொன்னர்.

மாஜிஸ்திரேட் புருவத்தை நெறித்துக்கொண்டார். 'எவ்வளவு அவமானம்! போயும் போயும் ஒரு வைதிகப் பிராம் மணன் மாஜிஸ்திரேட்டின் விருந்தை நிராகரிப்பதா? தன் பேச்சுக்கு இந்தப் பிராம்மணன் ஒரு செல்லாக் காசு மதிப்புக் கூடத் தரவில்லையே!' ஆச்சார் புறப்பட்டுப் போனபின்பும் இந்த அதிருப்தி மாஜிஸ்திரேட்டின் மனத்தை முள்ளாக உறுத்தியது. 'இதற்கு என்ன காரணம் இருக்கும்?' உடனே கணக்கப்பிள்ளை சேஷப்பாவுக்கு அழைப்புப் போயிற்று. மாஜிஸ்திரேட் அவனிடம் தம் அவமானக் கதையைச் சொன்னர்.

சேஷப்பாவுக்கு நல்ல சந்தர்ப்பம் கிடைத்தது. 'பரான்னம் கிரான்னம் என்பதெல்லாம் வெறும் வேஷம் சார். இந்துபுரத்து ராஜபுரோகிதர் குடும்பத்தைச் சேர்ந்தவர் என்ற கர்வம் அது. நாளைக்குக் கலெக்டரோடு மகாராஜாவும் வரப்போகிருர். இது போன்ற சமயத்தில் உங்களோடு சாப்பிட உட்காருவதால் அவருடைய கௌரவம் குறைந்துபோய்விடும்' என்று சொன்னன் சேஷப்பா.

'சமையற்காரனுடைய சமையல் அவ்வளவு விசேஷமாக இருக்காதுன்னு விட்டிருப்பாரோ?' என்று சந்தேகத்துடனே கேட்டார் மாஜிஸ்திரேட்.

'அப்படி ஒண்ணும் சிஷ்டாச்சாரம் இல்லை சார். இவருடைய மடி எவ்வளவுங்கறது எனக்குத் தெரியும். இங்கே தாதான்னு ஒரு மராட்டி ஜாதிப் பையன் இருக்கான். அவன்மேலே வாரன்ட் இருந்தபோது அவனைச் சுவாமி அறையிலே ஒளிச்சுவச்சிருந்ததை நானே கண்ணலே பாத்தேன். எல்லாம் உங்கள் போன்றவர்களை ஏமாத்தற பேச்சு' என்ருன் சேஷப்பா.

தாதாவைப்பற்றிய எல்லா விவரங்களையும் சேஷப்பா சொல்லாமல் விடவில்லை. ஹாவனூர் கேஸை மாஜிஸ்திரேட் தான் விசாரிப்பார். இதற்கு முன்பே படதையா, மாஜிஸ்திரேட்டைக் கண்டு தாதாவைப்பற்றிச் சொன்னாராம். மாஜிஸ்திரேட்டுக்கு எல்லாம் விளங்கியது. அவருக்கு இன்னும் ஒரு விஷயம் வேண்டியிருந்தது. 'தாதா வீட்டில் எப்படி இருக்கிறான்?' இந்த ஒரு கேள்வியைக் கொண்டுதான் தீர்ப்புச் செய்யவேண்டும். சேஷப்பா அதற்கும் சரியான பதில் சொல்லிவிட்டான். தாதா ஏழையாக இருந்தாலும் அவனைத் தண்டித்தால் கௌடர் மனைவிக்கு மகிழ்ச்சி ஏற்படும். பணந்தை அவிழ்ப்பாள். மற்றொரு லாபம் என்னவென்றால் மாஜிஸ்திரேட் வீட்டில் சாப்பிட மறுத்த திமிருக்காகப் பாளாச்சாருக்குப் பாடம் கற்பித்ததுபோல் ஆகும்.

'சாப்பாட்டுக்கு நேரமாகிவிட்டது' என்று மறுபடி அழைப்பு வந்தது. மாஜிஸ்திரேட் அவசரமாக எழுந்திருந்தார். 'கணக்கப்பிள்ளை, சாப்பாடு இங்கேயே ஆகலாமே?' என்று ஒரு நல்ல கிருகஸ்தனைப்போல் சொன்னார். 'எங்கே சாப்பிட்டாலும் அது ஒங்க சாப்பாடுதானே ஸார்!' என்று சேஷப்பா விருந்தாளிக்கு ஏற்ற அடக்கத்தோடும் நன்றியோடும் சொன்னான்.

அதிகமாகப் பேசாமல் மாஜிஸ்திரேட் மனைவியோடு உட்கார்ந்து சாப்பிட்டுவிட்டு எழுந்திருந்தார். சேஷப்பா, குமாஸ்தாவுடன் இரண்டாம் பந்தியில் உட்கார்ந்து சாப்பிட்டான்.

மாஜிஸ்திரேட் மலஜலங் கழிக்கப் போயிருந்தபடியால் சேஷப்பா பார்வதியம்மாள் வீட்டுக்கு நடந்தான். அவள் அப்போதுதான் சாப்பிட்டுவிட்டுப் படுத்திருந்தாள். சேஷப்பாவைக் கண்டதும் எழுந்திருந்தாள். சேஷப்பா நின்றுகொண்டே எல்லா விஷயங்களையும் சொன்னான். 'இருநூறு ரூபா கையை விட்டுக் கொடுத்தால் தாதாவுக்குத் தண்டனை கிடைப்பது நிச்சயம்' என்றும் மாஜிஸ்திரேட்டுடன் தான் பேசியிருப்பதாகவும் சொன்னான்.

தாதாவை ஜெயிலுக்கு அனுப்புவதற்காக இருநூறு ரூபாய் கொடுப்பது பார்வதிக்கு இஷ்டம் இல்லை. 'பணம் இல்லாமல் தங்களுக்குத் தோன்றியபடி ஏதாவது செய்யட்டும்' என்று அவள் வாதித்தாள். ஆனால் பணத்தைக் கறக்கும் கலையில் கைதேர்ந்த சேஷப்பாவுக்கு யாராவது சொல்லியா கொடுக்க வேண்டும்? தாதாவைப்பற்றி ஏதேதோ சொல்லிப் பயத்தைத் தோற்றுவித்தான். 'அவனைக் கிளப்பிவிட்டாயிற்று. இப்போது விட்டுவிட்டால் நமக்குத்தான் தொந்தரவு' என்றான். அதோடு

லிங்கப்பாவின் வாரிசு விஷயத்தை அவள் மனம் நடுங்கும்படி சொல்லத் தொடங்கினான். லிங்கப்பா, படதையாவின் உதவியைப் பெறலாம். 'அதனால் என்ன நடக்கும் என்பது பார்வதிக்குத் தெரியாதா? மூன்றில் ஒரு பங்கு நிலத்தின் உரிமையை விட்டுக் கொடுக்கவேண்டும்' என்றான் சேஷப்பா.

பார்வதிக்குத் திகில் பிடித்துக்கொண்டது. சாமராவுக்கு விரோதமாகக் கொடுத்த விண்ணப்பத்துக்குப் பார்வதியின் சம்மதம் இருக்கிறது என்பது எப்படியோ பாளாச்சாருக்குத் தெரிந்துவிட்டது. உடனே அவர் கௌடர் வீட்டுக்கு வந்து பார்வதிக்கு உபதேசம் செய்தார். 'நாளைக்குக் கலெக்டர் முன் விசாரணை நடக்கும்போதாவது உண்மையைச் சொல்ல வேண்டும்' என்று முன்னமே பாளாச்சார் வேறு பயமுறுத்தி விட்டுப் போயிருந்தார்.

இந்தக் கவலை கௌடர் பனிவியை வாட்டியது. அவளால் பேசவும் முடியவில்லை. சேஷப்பா நின்றுகொண்டேயிருந்தான்.

'இதோ பாருங்கள், மாஜிஸ்திரேட் வருவதற்குள் நான் சாவடிக்குப் போகணும். நீங்கள் வேண்டுமானால் ஜின்னப்பனைக் கூப்பிட்டு யோசித்து அப்புறம் சொல்லியனுப்புங்கள். ஏதோ வாக்குக் கொடுத்தீர்கள். அதை நினைவூட்ட வந்தேன்' என்று சொல்லிப் புறப்பட இருந்தான்.

'கணக்கப்பிள்ளை, உங்ககிட்ட ஒண்ணு சொல்லணும். சித்தெ உக்காந்திங்கன்னா சாவகாசமாச் சொல்லுவேன்' என்று கெஞ்சுவதுபோல் பார்வதியம்மாள் சொன்னபோது சேஷப்பாவால் மறுக்க முடியவில்லை. உட்கார்ந்தான்.

''வேறே ஒண்ணும் இல்லை. முந்தாநா நீங்க கையெழுத்து வாங்கிய விண்ணப்பத்தின் விவரத்தை ஆச்சாரய்யாவிடம் யாரோ சொல்லியிருக்காங்க. 'அப்படிச் செஞ்சது சரி இல்லை'ன்னு அவர் வீடுவரைக்கும் வந்து சத்தம் போட்டுட்டுப் போனாரு. 'எனக்கு ஒண்ணும் தெரியாது. எனக்கு எழுதப் படிக்கவா தெரியும்? கணக்கப்பிள்ளை சொன்னபடி செய்தேன்'னு சொல்லி ஒங்க மேலேயே பாரத்தைப் போட்டுட்டுத் தப்பிச்சுகிட்டேன்''னு பயந்துகொண்டே சொன்னாள்.

சேஷப்பாவுக்குக் கோபம் வந்தாலும் அதை அடக்கிக் கொண்டான். '' 'அஞ்சல்கார மல்லப்பன் அந்த விண்ணப்பத்தின் விவரங்களை வெளிப்படுத்தி இருக்கிறான்'னு எனக்குச் செய்தி கிடைத்தது. நீங்க ஒண்ணும் பயப்படாமெ உள்ள சங்கதியைச் சொல்லியிருக்கணும். அப்பச் சொல்லாவிட்டாலும் இப்ப நீங்க

சொல்லியே ஆகணும். சொல்லிடுங்க'' என்று வற்புறுத்திச் சேஷப்பா கௌடர் மனைவியைச் சம்மதிக்க வைத்தான்.

கடைசியில் சப்ளையைப்பற்றிய பேச்சு வந்தது. அப்பொழுதும் இதே தந்திர வலையை வீசினான் சேஷப்பா. 'கௌடர் இருந்த போது இந்தத் தொந்தரவு இருக்கவில்லை. எனக்குப் பாரம் வைக்காமல் அவரே எல்லாவற்றையும் கவனித்துக்கொள்வார். இப்பொழுது மணியக்காரர் தஸ்தாவேஜுகளும் என்னிடம்தான் இருக்கின்றன. ஆனால் ஊர் இருக்கும் நிலைமையில் ஒரு காசுகூட லாபம் இல்லை. இந்தச் சமயத்தில் மாஜிஸ்திரேட்டின் புஷ்கரச் செலவு வேறே காத்திருக்கு. அது ஆன பின்பு கலெக்டர் துரை வரப்போகிறார். சப்ளைச் செலவு என்றால் பெண்ணின் பிள்ளைப் பேற்றுச் செலவைவிட அதிகமாகத் தொந்தரவு கொடுப்பது. தவிர, கேஸ் எல்லாம் உங்களுடையது. தாதாவுக்குத் தண்டனை கிடைக்கணும். லிங்கப்பாவின் வாரிசுத் தகராறு ஒழியணும். இப்பவே மீனமேஷம் பார்த்தால் நாளைக்கு ஆஸ்தியே போய் விட்டால் என்ன செய்வது?' என்றெல்லாம் சேஷப்பா பார்வதி யம்மாளைப் பயமுறுத்தினான்.

இவற்றையெல்லாம் கேட்ட கௌடர் மனைவிக்குச் 'செலவை ஏற்பதைத் தவிர வேறு வழி இல்லை' என்று தோன்றியது. பணம் தருவதாக ஒப்புக்கொண்டாள். அது மட்டுமா? சேஷப்பாவின் விஷயத்தில் ஏற்கெனவே இருந்த ஆதரவும் கௌரவமும் அதிகமாயின.

சேஷப்பா அவசரமாகச் சாவடிக்குப் போய்க்கொண்டிருக்கும் போதே எதிரே அஞ்சல் மல்லப்பன் ஓடிவந்துகொண்டிருந்தான். சேஷப்பாவைக் கண்டவுடன் கும்பிடு போட்டு, 'வாரிசு ரிஜிஸ்தரை விசாரணை செய்யப்போறாங்களாம். உங்களை உடனே கூட்டிகிட்டு வரச்சொல்லி அனுப்பிச்சிருக்காங்க'ன்னு இறைக்க இறைக்கச் சொன்னான்.

சேஷப்பாவுக்குக் கொஞ்சம் பயம் உண்டாயிற்று. சமீபத்தில் வந்த காலரா, பலரை விழுங்கி ஏப்பம்விட்டதால் வாரிசு ரிஜிஸ்தரில் சேஷப்பாவின் ஒப்பில்லாத தில்லுமுல்லுகள் நடந்திருந்தன. குமாஸ்தா எல்லாவற்றையும் விட்டுவிட்டு இந்த ரிஜிஸ்தர் விசாரணைக்கே உட்கார்ந்தான் என்றால், 'இந்த மல்லப்பன்தான் அவன் காதில் ஓதியிருக்கவேண்டும்' என்று சேஷப்பா சந்தேகப்பட்டான். ஆனால் அவனை மிரட்டக்கூட அவகாசம் இல்லை. 'வாரிசு பண்ணின ஆசாமி அவன். அதோ பார், அவனைச் சாவடிக்குப் பிடிச்சுகிட்டு வா' என்று மல்லப்ப னிடம் சொல்லிவிட்டுச் சாவடிக்குப் போனான்.

சாவடித் திண்ணையில் ஏறிக் குமாஸ்தாவுக்கு வணக்கம் செய்து, 'என்ன, வாரிசு ரிஜிஸ்தரை எடுத்துக் குடுக்கணுமோ?' என்று கிண்டலாகவே கேட்டான். குமாஸ்தாவும் இதே தொழிலில் பழமும் தின்று கொட்டையும் போட்டவன். 'பின்னே மாஜிஸ்திரேட் செய்யும் சிரார்த்தச் செலவுக்குப் பணம் வரணும்னு வாரிசு ரிஜிஸ்தரைத் தவிர வேறு என்ன இருக்கு, கணக்கப்பிள்ளை!' என்று சொல்லிச் சிரித்தான்.

வாரிசு ரிஜிஸ்தர் கைக்கு வந்தது. குமாஸ்தா அவற்றை ஒன்றொன்றாக ஆராய்ந்தான். அஞ்சல் மல்லப்பன் ஒவ்வொருவராக அழைத்துவந்தான். குமாஸ்தா கேட்ட கேள்விகளுக்ு அவர்கள் தனித்தனியாகப் பதில் சொன்னார்கள். 'வாரிசு எழுதியது சரியா இல்லையா?' என்பதைப் பரீட்சித்துவிட்டுக் குமாஸ்தா ஷரா எழுதிக்கொண்டிருந்தான். யந்திரம்போல் சுரத்தில்லாமல் இந்த வேலை சாயந்திரம் வரையில் நடந்து கொண்டிருந்தது. இடை இடையில் குமாஸ்தா 'சரியா' என்று கேட்கக் கணக்குப்பிள்ளை முகத்தைப் பார்த்தான். அவன் மிக முன்ஜாக்கிரதையுடன் பதில் சொல்லிக்கொண்டிருந்தான். 'தவறு ஒன்றும் வரவில்லையே?' என்று குமாஸ்தாவுக்கு ஒரே சலிப்பு.

கடைசியில் தவறும் வந்தது. நாணுவின் சொத்துக்கு வாரிசாகத் தாதாவின் பெயர் இருந்ததைப் பார்த்த குமாஸ்தா புருவத்தைச் சுளுக்கினான். 'ஏன் இந்த நாணுவுக்குக் குழந்தைகள் யாரும் இல்லையா?' என்று கேட்டான். கணக்கப்பிள்ளை, பொடியை உறிஞ்சும் மும்முரத்தில் இருந்ததால் பதில் சொல்ல வில்லை. கூடியிருந்த ஜனங்கள் யாரும் மூச்சுவிடவில்லை! குமாஸ்தா மறுபடி ஒருமுறை எல்லோருடைய முகத்தையும் பார்த்தான். லக்ஷ்மணன் எழுந்து நின்று பயத்தால் குரல்கம்ம, 'நாணுவுக்கு ஒரு பெண் இருக்குதுங்க' என்று சொல்லிவிட்டு உட்கார்ந்தான்.

'பெண் இருந்தும் தாதாவை ஏன் வாரிசாக்கினீர்கள்?' என்று குமாஸ்தா சிரித்துக்கொண்டே கேட்டான். கடைசியாக வேட்டை கிடைத்துவிட்டது.

'ஒரு பெண் இருக்காங்கறது எனக்கும் தெரியும். ஆனால் அவ பெயரை எழுத முடியாது. மாஜிஸ்திரேட்டிடம் அது விஷயமாக எல்லா விவரங்களையும் சொல்லிவிட்டு அதற்குப்பின் தான் நான் எழுதினேன்' என்றான் சேஷப்பா. 'விஷயத்தின் ரகசியம் உங்களுக்குத் தெரியக் கூடியதன்று; தெரியவேண்டியதும் இல்லை' என்ற பொருள் அவன் குரலில் தொனித்தது.

'விவரங்களை எல்லாம் கொடுக்கறதும் விடுவதும் அப்படி ஒன்றும் பெரிசில்லை, கணக்கப்பிள்ளை. ஆனால் வாரிசுக்கு யார் உரிமையோ அவர் பெயரைத்தான் எழுதணும். இஷ்டப்படி எழுத, இது என்ன உங்கள் வீட்டுக் கணக்குப் புத்தகமா?' என்று குமாஸ்தா கோபத்துடன் கேட்டான். சேஷப்பா இதை ஒரு பெரிய வேடிக்கைபோல மாற்றுவதற்காகக் கலகலவென்று சிரித்துப் பொடியை உறிஞ்சினான். குமாஸ்தாவின் கோபம் இன்னும் அதிகமாயிற்று. 'இந்த விவகாரத்தில் முழுப் பையும் நிரம்பியிருக்கணும்' என்று பல்லைக் கடித்தான்.

கணக்கப்பிள்ளையால் இந்தப் பேச்சைப் பொறுக்க முடியவில்லை. 'ராயரே! வந்த மேகமெல்லாம் மழையைக் கொட்டறதில்லை. நான் ஒவ்வொரு வாரிசு எழுதும்போதும் பணம் கெடைச்சிருந்தால் தங்கத்தால் வீடுகட்டியிருப்பேன்!' என்று சரியான பதில் கொடுத்தான் சேஷப்பா.

குமாஸ்தா கோபால்ராவுக்குக் கோபமிகுதியால் சற்று நேரம் 'என்ன செய்வது?' என்றே தெரியவில்லை. பிறகு 'இந்தக் கணக்கப்பிள்ளையிடம் இப்பொழுது தர்க்கம் செய்து பயனில்லை' என்பதைத் தெரிந்துகொண்டான். பிறகு லக்ஷ்மணன் பக்கம் திரும்பி, 'நாணுவின் சொத்து அவன் மகளுக்கே போவதில் உனக்கு ஆட்சேபம் உண்டா, என்னப்பா?' என்று கேட்டான்.

லக்ஷ்மணன் எழுந்து நின்றான். 'அப்பனோடெ சொத்தைப் பொண்ணுக்குக் குடுத்தா நான் எதுக்குத் தகராறு செய்யறேன் சாமி! எப்படியும் அவள் என் பெண் அல்லவா? இருக்கற கொஞ்ச நெலம் அவளுக்குச் சொந்தமானா எனக்குச் சந்தோஷம் இல்லீங்களா?' என்று சொல்லிவிட்டு உட்கார்ந்துகொண்டான்.

கோபால்ராவ் மறுபடியும் கணக்குப்பிள்ளையின் பக்கம் திரும்பி, 'என்னையா, அவளை வாரிசாக்குவதில் யாரும் தகராறு செய்யாதபோது நீங்கள் ஏன் விட்டுவிட்டீர்கள்?' என்று கேட்டான்.

''இங்கே பாருங்க, ராயரே! இந்த லக்ஷ்மணனுக்கு மூளையே சரியாக இல்லை. அவன் பேச்சால் என்ன பிரயோஜனம்? 'நாணுவின் வாரிசு தாதா' என்று நான் எழுதியது எல்லோருக்கும் சம்மதம். யாரை வேண்டுமானாலும் கேட்டுப் பாருங்கள். 'இந்து லா'வைப் படித்துவிட்டு, 'அப்பாவின் சொத்துப் பெண்ணுக்குத்தான்' என்று நீங்கள் சொல்வது சரிதான். ஆனால் 'எந்தச் சந்தர்ப்பத்தில் அது சரி?' என்பதை நீங்கள் கொஞ்சம் யோசித்துப் பார்க்கவேண்டும். கலியாணம் ஆகாத பெண், தன் ஜாதியைவிட்டு வேறு ஜாதி ஒருவனோடு

சேர்ந்துகொண்டு ஒரு குழந்தையையும் பெற்றுக்கொண்டு விட்டால், சொத்து அவளை எப்படிச் சேரும்? நான் இதையெல்லாம் மாஜிஸ்திரேட்டுக்குச் சொன்னபோது அவர் 'தாதாவையே வாரிசாகச் செய்துவிடு' என்று எனக்குச் சம்மதம் கொடுத்திருக்கிறார். 'நாலுபேர் நடுவில் பழங் குப்பையைக் கிளற வேண்டாம்' என்று நான் பேசாமல் இருந்தேன். நீங்கள் கிளறிக் கிளறி அதையே பேசும்படி செய்து விட்டீர்கள்'' என்று, சேஷப்பா, மிகவும் உணர்ச்சிவசப் பட்டவனாகக் கையையும் காலையும் ஆட்டிக்கொண்டு பேசினான். 'எனக்கொன்றும் சட்ட ஞானம் குறைவில்லை. நல்ல வழியில் போவதையே லட்சியமாகக் கொண்டிருக்கிறேன்' என்று சொல்லும் அரசியல் நிபுணரின் பிரசங்கம்போல் இருந்தது அவன் பேச்சு.

லக்ஷ்மணன் இந்தப் பேச்சைக் கேட்டு வெட்கித் தலை குனிந்தான். கூடியிருந்த ஜனங்கள் எல்லாம் சேஷப்பாவுக்கு ஆதரவு தந்தார்கள். 'கணக்கப்பிள்ளை அவர்கள் சொன்னது ரொம்ப சரி. அந்தப் பெண், ஜாதிவிட்டுப் போனது உண்மை' என்று தங்களுக்குள்ளேயே ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். தூஷணைக்கு உத்ஸாகம் கிடைத்ததுபோல் பலர், தங்களுக் குள்ளேயே பேசக் கூடாததையெல்லாம் 'கிசு கிசு'வென்று பேசினார்கள். லக்ஷ்மணன் அங்கே நிற்க விரும்பாமல் தலையைக் குனிந்து கொண்டு வீட்டுக்குப் போனான்.

வாரிசு விஷயங்களைச் சுருக்கமாகக் குறிப்பு எடுத்துக்கொண்டு குமாஸ்தா கோபால்ராவ் பேனா முனையைக் காதில் செருகிக் கொண்டு வாரிசு ரிஜிஸ்தரின் பக்கங்களைப் புரட்டத் தொடங் கினார். ஜனங்கள் எல்லோரும் பரபரப்புடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். மறதி என்ற திரைக்குப்பின் நடந்த பயங்கர நாடகங்கள் நினைவுக்கு வந்ததால் எல்லோரும் மன அமைதியை இழந்தார்கள். சியுணாவின் விவகாரம் நினைவுக்கு வந்தபோது வாய்க்கு வந்தபடி விமரிசித்தாலும் மனத்தில் எல்லோருக்கும் அருவருப்பு உண்டாயிற்று. எல்லோருடைய பார்வையும் கோபால்ராவின் பக்கமே இருந்தது. 'ரிஜிஸ்தரின் எந்தப் பக்கத்தில் இன்னும் என்ன கொடிய விவகாரம் அடங்கி யிருக்கிறதோ?' என்று பயந்துகொண்டிருந்தார்கள். குமாஸ்தா கோபால்ராவ் மறுபடியும் அதே ஆச்சரியம் நிறைந்த முகபாவத்தோடு கணக்கப்பிள்ளையின் முகத்தைப் பார்த்தான்.

பாதள்ளியில் இருந்த தேஷ்பாண்டே (பாளையக்காரர்) பீம ராவ் என்பவர் குழந்தைகளே இல்லாமல் இறந்ததால் அவர்

மனைவியான கங்காபாயின் பெயரை வாரிசாக எழுதியிருந்ததைப் பார்த்துக் கோபால்ராவ் ஸ்தம்பித்துவிட்டான். ''என்ன கணக்குப்பிள்ளை இது? தேஷ்பாண்டே பீமராவ் பல கிராமங்களின் உரிமையாளர். அவர் தத்து எடுத்துக்கொண்டதாகத் தாக்கல் இருக்கிறது. 'தத்துப்பிள்ளையினுடைய வாக்குமூலம் பெற்று, அவன் பெயரை வாரிசாக எழுதவேண்டும்' என்று மாஜிஸ்திரேட் அவர்களே உத்தரவு போட்டார். இந்தத் தாலூக்காவைச் சேர்ந்த பத்துப் பதினைந்து கிராமங்களில் இருக்கும் நிலங்களெல்லாம் தத்துப்பிள்ளையின் பெயராலேயே தாக்கலாகி இருக்கின்றன. அப்படியிருக்க நீங்கள் அந்தத் தத்துப்பிள்ளையை வாரிசாக்கவில்லையே? உங்களைப்பற்றி என்ன சொல்வது?'' கோபால்ராவ் கோபத்துடன் ரிஜிஸ்தரை மூடித் தொப்பென்று வீசி எறிந்தார்.

சேஷப்பா சற்றும் அசைந்து கொடுக்கவில்லை. ''பாருங்கள் ராயரே! இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றும் இல்லை. எங்கள் ஊர்த் தேஷ்பாண்டேயின் செய்தி எனக்கும் மட்டும் அல்ல; இங்கே உட்கார்ந்திருப்பவர்கள் எல்லோருக்கும் தெரியும். இப்பத் 'தத்துப்பிள்ளை'ன்னு சொல்லிக்கற ரெங்கராவை முறைப்படி தத்து எடுத்துக்கொள்ளவில்லை. அவன் தாய் தகப்பனுக்கு ஒரே பிள்ளை. ஏகபுத்திரன் விஷயமானதால் தத்து எடுத்துக்கொள்ள முடியாது. ரெங்கராவின் தகப்பனான காந்தராவ், மாஜிஸ்திரேட்டுக்குச் சிநேகிதன். அதனால் அவன் அவரிடம் சொல்லி உத்தரவு வாங்கியிருக்கலாம். இங்கே கங்காபாய், நாலு பேரைக் கேட்டுத் தன் அண்ணன் தம்பிகளுக்குள் கிருஷ்ணராவ் என்னும் சிறுவனைத் தத்து எடுத்துக் கொண்டிருக்கிறாள். இது கோர்ட்டுக்குப் போகாமல் முடியும் விவகாரம் அன்று. முடிவாகும் வரையில் தகராறு வேண்டாம் என்று நானே கங்காபாயின் பெயரை வாரிசாக எழுதினேன். கணவன், பிள்ளைகள் இல்லாமல் இறந்துவிட்டால் மனைவியின் பெயரையே வாரிசாக்குவது 'சட்டத்துக்கு உட்பட்ட விஷயம்' என்று செய்தேன்'' என்று சேஷப்பா ஒரு நீண்ட விளக்கம் கொடுத்தான்.

சேஷப்பாவின் நெஞ்சுரத்தைக் கண்டு கோபால்ராவ் பயந்து போய்விட்டான். தேஷ்பாண்டே குடும்பத்துத் தத்து விவகாரம் கோபால்ராவுக்குப் புதிதன்று. மாஜிஸ்திரேட்டே உத்தரவு போட்டது அவனுக்குத் தெரியும். ஆனால் நடந்த தத்து 'முறைப்படி ஆனதல்ல' என்று சந்தேகத்தைக் கிளப்பி இரண்டு தத்துகளுக்கு விதையிட்டு விவகாரத்துக்கு வழியை உண்டாக்கியிருந்தான், சேஷப்பா. கங்காபாய் ஊரில் இல்லை. வெகு

நாட்களுக்கு முன்பே தேஷ்பாண்டேயின் மாளிகை காலி ஆகிவிட்டது. அவர்களுடைய நிலங்கள் பல கிராமங்களில் சிதறிக் கிடந்தன. சேஷப்பா, 'இந்த நிலைமையைத் தவருக உபயோகித்துக்கொண்டு இஷ்டப்படி விளையாடியிருக்கிருன்' என்பது தெளிவாகத் தெரிந்தது. அவன் சொன்ன புதிய தத்து விவகார விஷயம் நிஜமோ பொய்யோ? கடவுளுக்குத்தான் தெரியும். விஷயம் சேஷப்பாவின் தகிடுதத்தத்தால் கோர்ட்டுக்குப் போகத் தயாராக இருந்தது. கோர்ட்டில் தீர்ப்புக் கிடைக்க எவ்வளவு வருஷம் இழுத்தடிக்குமோ? சொல்ல முடியாது. வாரிசு மாற்றும் விதிப்படி சொத்தெல்லாம் யாருக்கோ போக இருந்தது. லக்ஷக்கணக்கான மதிப்புள்ள சொத்தின்மேல் கண்ணுக இருந்த சேஷப்பா, தகுந்த ஏற்பாடு செய்திருந்தான்.

கோபால்ராவுக்குத் திருப்தி ஆகவில்லை. 'தாலூகாக் கச்சேரியில் இருந்து வந்த அந்த உத்தரவை நீங்கள் மதிக்கவில்லை. உங்கள் இஷ்டப்படி வாரிசை மாற்றி இருக்கிறீர்கள். நாளைக்குக் கோர்ட்டுக்குப் போனுல் உங்கள் கதி என்ன ஆகும் என்று யோசித்துப் பார்த்தீர்களா?' என்று கோபத்தால் பல்லைக் கடித்த வண்ணம் கேட்டான் கோபால்ராவ்.

சேஷப்பா அந்தக் கோபத்துக்கும் அஞ்சவில்லை. பொடியை உறிஞ்சிக் கையை உதறிவிட்டு இப்படிச் சொன்னுன்: ''ராயரே! ரெவின்யூ இலாகாவினரின் வேலைக்கு எது எல்லை? கண்கூடாக யாருக்குச் சொந்தம் என்று படுகிறதோ அவர்கள் பெயரை எழுதுவதுதான். இதுவரையில் நிலம், வீடு எல்லாம் கங்காபாயின் வசத்திலேயே இருக்கின்றன. எனவே, அவள் பெயரை எழுதினேன். உரிமையை விசாரணை செய்து தீர்ப்புச் சொல்லுங்கள். உரிமையாக்க உத்தரவு கொடுப்பது கோர்ட்டின் வேலை. 'தாலூகா கச்சேரி உத்தரவை ஏன் மதிக்கவில்லை?' என்று நீங்கள் கேட்டீர்கள்; சொல்லுகிறேன். பீமராவ் இறந்தது 13—9—1898-க்கு உள்ளாக. நீங்கள் ரெங்கராவை வாரிசாக்க உத்தரவு போட்டது 31—3—1900-க்குள். பீமராவ் இறந்த மூன்று மாதங்களுக்குள் கங்காபாயின் கட்சியும் அவளுடைய தத்துப்பிள்ளையின் கார்டியனும் கொடுத்த விவரங்களின்படி வாரிசுப் பெயரை எழுதினேன். அதை விசாரணை செய்து மாஜிஸ்திரேட் ஏற்றுக்கொண்டு கையெழுத்துப் போட்டது இந்த ஷரா அட்டவணையில் இருக்கிறது பாருங்கள்'' என்று தன் கணக்கப்பிள்ளை பாஷையில் சொல்லி வெற்றிப் பெருமிதத்தால் கால்மேல் கால் போட்டுக்கொண்டு உட்கார்ந்தான்.

அப்பொழுது சாவடித் திண்ணை ஏறித் தாதா வருவதைச் சேஷப்பா பார்த்தான். ஒரு பொய்ச் சிரிப்புடன் என்றும் இல்லாத போலி அன்புடன், ''வாடா அப்பா, தாதா! நீயே வந்தது நல்லதாப் போச்சு. 'நானே உன்னை வரச்சொல்ல வேண்டும்' என்று இருந்தேன். உங்க பெரியப்பா நாணுவின் பெயரில் இருந்த மேட்டு நிலத்தை, மணியக்காரர் சொன்னபடி உன் பேருக்கு மாற்றினேன். இப்பொ உங்கப்பா 'அந்த நிலத்தைச் சிமணுவின் பெயருக்கே மாற்றிவிடுங்கள்' என்று சொல்லிவிட்டுப் போனான். நீ என்ன சொல்றே?'' என்று கேட்டான்.

''சொல்றத்துக்கு எனக்கு என்ன தெரியுங்க? 'சிமணு, ஜாதி கெட்டுப் போய்விட்டதால் அவ பெயரைப் போட முடியாதுன்'னு சொன்னீங்களாம். அது நெஜந்தானா?'' என்று கோபத்துடன் கேட்டான்.

தாதாவின் அனல் கக்கும் முகத்தைப் பார்த்ததும் சேஷப்பாவுக்கு அவன் பஹ்ருதீனைத் தாக்கியது நினைவுக்கு வந்தது. அதனால் அசட்டுச் சிரிப்புடன், ''சே! சே!! அப்படிச் சொன்னவங்க நாக்குப் புழுத்துப்போகும். சங்கரப்ப கௌடர் 'அந்த நிலம் உனக்கே சொந்தமாகட்டும்' என்று சொன்னதால் நான் உன் பேரில் எழுதினேன். வேண்டாம் என்றால் இப்பொ சிமணுவின் பெயரிலேயே மாற்றி எழுதி, மாஜிஸ்திரேட்டின் சம்மதம் வாங்கறேன். யோசித்துச் சொல்'' என்று தனக்கு ஒன்றும் சம்பந்தமே இல்லாததுபோல் பேசினான்.

'இதிலே யோசிக்கறதுக்கு என்ன இருக்குங்க. அப்பா சொன்னபடி எழுதிடுங்க' என்று சொல்லிவிட்டு உடனே தாதா சாவடியை விட்டுப் புறப்பட்டுவிட்டான்.

கூடியிருந்த ஜனங்கள் தாதா 'அநாவசியமாகத் தன் பங்கு நிலத்தை இழந்துவிட்டான்' என்று நினைத்தார்கள். சிலர் வாயால் புலம்பினார்கள். ஐயின் ஜின்னப்பன் எழுந்திருந்து, 'அடே, தாதா! அசட்டுப் பையா, வா இங்கே' என்று கத்தினான்.

அவசரமாகப் புறப்பட்ட தாதா நின்று, 'சித்தப்பா, எனக்குப் பொழுதில்லை. சாமராவிடம் இந்துபுரத்துக் குதிரை ஆள் வந்திருக்கிறான். சீக்கிரம் வரச்சொல்லி அனுப்பியிருக்காங்க. அங்கேதான் போயிட்டிருக்கேன்' என்று சொல்லிக்கொண்டே 'விருவிரு' என்று மாளிகையை நோக்கி நடந்தான்.

பொழுது சாய்ந்துவிட்டதால் சாவடியின் முன் இருந்த கூட்டம் கலைந்துவிட்டது. அஞ்சல்காரர்கள் ஏற்றிய விளக்கு

களால் சாவடியில் சிறிதாவது வெளிச்சம் இருந்தது. இந்தச் சமயத்தில் கோபால்ராவ் உள்ளே போய், மாஜிஸ்திரேட்டிடம் சேஷப்பாவின் சங்கதிகளைச் சொல்லிக்கொண்டிருந்தான். சேஷப்பா எழுந்திருந்து வீட்டுக்குப் போக நினைத்தான். அதற்குள் சிவப்புத் தலைப்பாவும் டவாலியும் அணிந்த உஸ்மான், 'மாஜிஸ்திரேட் கூப்பிடுகிருர்' என்று வந்து சொன்னுன். சேஷப்பா திரும்பி உள்ளே போனுன்.

சேஷப்பா இவை எல்லாவற்றையும் முதலிலேயே எதிர் பார்த்திருந்தான். மாஜிஸ்திரேட்டிடமும் முன்போலவே தர்க்கம் செய்தான். மாஜிஸ்திரேட்டும் இப்படி ஒரு கணக்கப்பிள்ளை வந்து வாய்த்ததற்காக ஆச்சரியப்பட்டார். அவரும் சொல்ல வேண்டியதை எல்லாம் சொல்லிவிட்டுப் பேசாமல் இருந்தார். தாதாவின் வாரிசை ரத்துச் செய்ததைத் தானும் ஒப்புக்கொண்டதாகச் சேஷப்பா சொன்னுன். ஆனுல் தேஷ்பாண்டேயின் விவகாரம் 'கோர்ட்டுக்குப் போய்த்தான் தீர்ப்பாக வேண்டும்' என்று சொல்லிவிட்டான்.

## 29

தேஷ்பாண்டே பீமராவின் தத்துப்பிள்ளையான ரெங்கராவை வாரிசாக்காமல் கங்காபாயை வாரிசாக்கிய செய்தி வெகு விரைவில் ஊரெங்கும் பரவிவிட்டது. மறந்துபோன விவகாரம் ஒன்று மறுபடியும் வெளிவந்துவிட்டது. பாதள்ளியின் இளைஞர் களுக்கெல்லாம் தேஷ்பாண்டே குடும்பத்தைப்பற்றி ஒன்றும் தெரியாது. பூட்டிக்கிடந்த அவர்களது மாளிகையைத் 'தேஷ்பாண்டேயின் வீடு' என்று சொல்லுவார்கள். ஆனுல் கோபால்ராவ் வாரிசு ரிஜிஸ்தர் பரிசோதனை செய்தபோது செய்த ஆட்சேபத்தால் ஊரெங்கும் அதே பேச்சாக இருந்தது.

சேஷப்பா சொன்னதுபோல் கங்காபாய் யாரையும் தத்து எடுத்துக்கொண்டிருக்கவில்லை. 'கிருஷ்ணராவின் மகனைத் தத்து எடுத்துக்கொண்டிருக்கிருள்' என்று சொன்னது வெறும் புளுகு மூட்டை. கிருஷ்ணராவ் சேஷப்பனுக்கு ஷட்டகன் ஆகவேண்டும். அவனுடைய மகனைக் 'கங்காபாயின் தத்துப்பிள்ளை' என்று சொல்லித் தவறுன செய்தியைப் பரப்பி, அதையே உண்மைச் செய்தியாக மாற்றிவிடச் சேஷப்பா நினைத்தான். அதையே

பிற்காலத்தில் 'கங்காபாய் ஒப்புக்கொண்டால் சமரசமாகவே காரியத்தை முடித்துவிடலாம். ஒப்புக்கொள்ளாவிட்டால் கோர்ட்டில் டிக்ரி வாங்கி தேஷ்பாண்டே குடும்பத்தின் பரம்பரை நிலங்களை எடுத்துவிடலாம்' என்று சேஷப்பா தந்திரம் செய்தான். பாளாச்சாருக்கு இந்தத் தந்திரம் விரைவிலேயே தெரிந்துவிட்டது. 'கங்காபாய் அப்போதும் காந்தராவ் வீட்டிலேயே இருக்கிறாள்' என்பது அவருக்குத் தெரியும். 'தேஷ்பாண்டே குடும்பத்துச் சொத்து விஷயமாக அநியாயமாகக் கலகம் எழுந்து கோர்ட்டுக்கு அலைந்து ஊரில் கட்சி இரண்டாகி விடும்' என்று அவர் பயந்தார்.

'மாஜிஸ்திரேட் தீர்த்தக்கரை சிரார்த்தத்துக்காகத் தம்மை அழைக்கும்போது இந்தக் குயுக்திகளை எல்லாம் வெளியே இழுத்து விடலாம்' என்று அவர் நினைத்தார். ஆனால் மறுநாள் மாஜிஸ்தி ரேட்டிடம் இருந்து அவருக்கு அழைப்பு வரவில்லை. நாராய ணாச்சார் சேஷப்பாவுடன் சொல்லிவிட்டு மாஜிஸ்திரேட்டின் புரோகிதத்தைப் பிடித்துக்கொண்டான். அவனுடைய மனைவி பள்ளிக்கூடத்திலிருந்து முறவாயன தானம் வாங்கிக்கொண்டு வீட்டுக்குப் போனபோது பாளாச்சார் பார்த்தார். அப்பொழுதே அவர் தமக்கு வர இருந்த புரோகிதம் நாராயணாச்சாருக்குப் போயிருக்கும் என்பதைத் தெரிந்துகொண்டார். அதற்காக அவர் வருத்தப்படவில்லை. 'பஞ்சத்தில் பட்டினியும் அரைப் பட்டினியும் கிடந்து வாடிக்கொண்டிருந்த ஒரு குடும்பம் பிழைத்தது' என்று மகிழ்ச்சி அடைந்தார். ஆனால் மாஜிஸ்திரேட் டைக் கண்டு பேசும் சந்தர்ப்பம் நழுவிவிட்டது. அழைக்காமல் தாமாகவே மாஜிஸ்திரேட்டிடம் போவது அவருடைய கௌரவத் துக்கு ஏற்காத செயல். இந்தக் கவலையோடு அவர் சாவடியைத் தாண்டிப் போய்க்கொண்டிருந்தார்.

சாவடியின் முன் சுற்றுப்புறத்துக் கிராம மக்கள் எல்லாம் கூடியிருந்தார்கள். மாஜிஸ்திரேட்டின் முன்பு நடக்கப்போகும் வழக்குகளில் சாட்சி சொல்ல அவர்கள் வந்திருந்தார்கள். பல ருடைய வருங்காலம் அங்கே தீர்ப்பாகவேண்டியிருந்தது. ஒரு கணம் 'உள்ளே போய் மாஜிஸ்திரேட்டைப் பார்க்கலாமா?' என்று ஆச்சார் நினைத்தார். ஆனால் அப்படிச் செய்யாமல் சாவடியைத் தாண்டி ஜாகீர் மாளிகைக்குப் போனார்.

அங்கேயும் ஜனத்திரள் நிறைந்திருந்தது. சாமராவ் யாருடைய வரவையோ எதிர்பார்த்துக் காத்திருந்ததாகத் தெரிந்தது. அவனுக்கு எதிரில் தாதா, லக்ஷ்மணன், ஜாகீர்க் குடியானவர்கள் எல்லோரும் உட்கார்ந்திருந்தார்கள். பாளாச் சார் போனவுடன் நமஸ்கார, ஆசீர்வாதங்கள் நடந்தன.

'என்னப்பா, சாமராவ்! ஊரில் எங்கே பார்த்தாலும் கூட்டம் கூட்டமாக உட்கார்ந்திருக்கிறார்களே! சாவடிக்கு முன்னும் கூட்டம் இருக்கிறது. இங்கேயும் கூட்டம் இருக்கிறது. பாதள்ளியில் என்னதான் விசேஷம் இருக்கிறது?' என்று ஆச்சார் கேட்டார். சாமராவ் அதற்குப் பதில் ஒன்றும் சொல்லாமல் இந்துபுரத்து மகாராஜாவிடம் இருந்து குதிரை ஆள் கொண்டு வந்திருந்த கடிதத்தை அவரிடம் நீட்டினான். 'இதென்ன கோணல் மாணல் எழுத்து! எனக்குப் படிக்க வராது. நீ விஷயத்தைச் சொல்லிவிடு' என்றார் ஆச்சார்.

சாமராவ் எல்லாச் செய்திகளையும் சொன்னான்: 'இன்னும் நாலு நாள்களில் இந்துபுரத்து மகாராஜா பாதள்ளிக்கு வரப் போகிறார். பாபு சாஹேப் இந்துபுரத்துக்குப் போய் லக்ஷ்மி பாயின் காலைப் பிடித்துக்கொண்டு மன்னிப்புக் கேட்டுக்கொண்டாரும். மகாராஜா இங்கே வரும்போது யசவந்தராவும் அவருடன் வரப் போகிறார். அஸிஸ்டென்ட் கலெக்டரும் அதே சமயத்தில் காம்ப் வருகிறார்.

தவிர மகாராஜா, என்னை இந்துபுரத்துக்குக் கையோடு வரச் சொல்லியிருக்கிறார். பஞ்சகாலத்தில் பட்டினி கிடக்கும் ஜனங்களுக்கு உதவியாக இருநூறு மூட்டை சோளம் அனுப்புகிறாராம். அதைக் கொண்டுவர வண்டிகளுடன் குடியானவர்களை வரச் சொல்லியிருக்கிறார். இதைச் சொல்லத்தான் குடியானவர்களை வரவழைத்தேன். சமயத்துக்கு நீங்களும் வந்துவிட்டீர்கள். நல்லதாயிற்று' என்று சாமராவ் எல்லா விவரங்களையும் சொன்னான்.

சோளத்தைக் கொண்டுவரச் சுமார் நாற்பது வண்டிகளாவது வேண்டும். அதைப்பற்றிக் குடியானவர்களிடம் கலந்து யோசிக்க வேண்டியிருந்தது. பாளாச்சார் எதிரே நின்றிருந்த காசிம் சாயபுவை அதைப்பற்றிக் கேட்டார். காசீம் சாயபு ஜாகீர்தார் நிலங்களைப் பல தலைமுறைகளாகச் சாகுபடி செய்துவரும் பெருந்தலை. மாளிகையின்மீது அவனுக்கு எப்போதும் தனிப் பற்று உண்டு.

'மகாராஜா ஏழைகளுக்குத் தானியம் கொடுக்கும்போதே அதை ஊருக்குக் கொண்டுவந்து சேர்ப்பதுதான் சரீங்க. ஆனால் பெரிய மழை பேஞ்சு தரை சேறு இருக்குங்க. முதல் மழை பேஞ்சதும் நிலத்தில் விதை போடாட்டி பூமித் தாய்க்குத் துரோகம் செஞ்சது ஆகாதுங்களா? செம்மண் பூமி இருக்கறவங்க விதை நடற வேலையைப் பாக்கட்டும். கரிசல் நிலம் இருக்கறவங்க வண்டியை ஓட்டிகிட்டுப் போய்ச் சோளம் கொண்டாரட்டும்' என்றான் காசீம் சாயபு.

கூடியிருந்த குடியானவர்களுள் சிலருக்கு இது சரியாகப் படவில்லை. காசீம் சாயபுவினுடையது செம்மண் பூமி. அவன் விதை விதைப்பதற்காக ஊரிலேயே தங்கிவிட்டால் இந்துபுரத்துக்கு யாரும் போக முடியாது. உண்மையில் பார்க்கப் போனால் யாருக்குமே போக அவகாசம் இல்லை. யாருக்குத்தான் நிலத்தில் வேலை இல்லை? பொதுவாகச் சிலர் இப்படி அபிப்பிராயம் சொன்னார்கள்.

குடியானவர்கள் சொன்ன தடைகளைக் கேட்டபின் சாமராவுக்கு அவர்களை வற்புறுத்த மனம் வரவில்லை. இருந்தாலும் 'ஊருக்குப் பொதுவான வேலைகளில் உதவி செய்யாவிட்டால் மகாராஜா என்ன நினைப்பார்?' என்பது அவனுடைய கவலை. 'குடியானவர்கள் சொல்வதில் பொருள் இல்லை' என்பதன்று. ஆனால், மகாராஜா 'தர்மமாகக் கொடுக்கிறேன்' என்று சொல்லும் தானியங்களைக் கொண்டுவரும் ஒத்துழைப்பும் நற்பண்பும் இல்லாவிட்டால் எப்படி? பாளாச்சாரும் இந்தப் பிரச்சினைக்கு வழி காண முயன்றார். அவருடைய அபிப்பிராயம் இது : 'தானியங்களைக் கொண்டுவரும் வேலை ஜாகீர்க் குடியானவர்களை மட்டுமே சேர்ந்ததன்று. ஊர்க் குடியானவர்கள் எல்லோரும் சேர்ந்து செய்யவேண்டிய வேலை. நிலத்தில் வேலை இருப்பவர்கள் போக வேண்டாம். மற்றவர்கள் புறப்படட்டும். அவர்களுக்கு வண்டி வாடகையாக அந்தச் சோளத்திலேயே கொடுத்து விடலாம்.' பாளாச்சாரின் அபிப்பிராயம் எல்லோருக்கும் சம்மதமாயிற்று. 'பொழுது விடிவதற்குள் வண்டிகள் தயாராக வேண்டும்' என்று சாமராவ் உத்தரவிட்டான். 'காசீம் சாயபுவே அந்தப் பொறுப்பை ஏற்கவேண்டும்' என்று முடிவாயிற்று. மகாராஜாவை வரவேற்கும் ஏற்பாட்டையும் அவர் தங்குவதற்காகச் செய்ய வேண்டிய ஏற்பாட்டையும்பற்றிச் சர்ச்சை நடந்தது. எல்லோரும் அவரவர் வீட்டுக்குப் போனார்கள்.

சாவடியைத் தாண்டிப் பாளாச்சார் வீட்டுக்குப் போய்க்கொண்டிருந்தார். அதற்குள் சிலர், இவரை நோக்கியே வந்தார்கள். வணங்கியவர்களுள் ஹாவனூரர் கல்லன கௌடனை அவர் தெரிந்துகொண்டார். 'என்ன கௌடரே! எங்களூர்ப் பையனை ஜெயிலுக்கு அனுப்ப இவ்வளவு தூரம் வரணுமா?' என்று பாளாச்சார் கேட்டேவிட்டார்.

கல்லன கௌடன் சிரித்து, 'பெரியவங்க நீங்களெல்லாம் தாதாவுக்குப் பக்கத் துணை இருக்கையிலே எங்களாலே என்ன செய்ய முடியும்? எங்க அப்பா, நீங்க போட்ட கோட்டைத் தாண்டியதில்லை. நான் அவருடைய மகன் அல்லவா? உங்க பேச்சை மீறுவேனா?' என்று பதில் சொல்லிய கௌடன் ஆச்சாரின்

பின்னுலேயே அவர் வீட்டுக்கு நடந்தான். 'அவர்கள் சமாதானத் துக்காக வந்திருக்கலாம்' என்று ஆச்சார் ஊகித்தார். சாம ராவையும் வற்புறுத்தி அழைத்துக்கொண்டு எல்லோருடனும் தம் வீட்டுக்குப் போனுர். கல்லன கௌடனே மறுபடி பேச்சை எடுத்தான். 'எங்களுக்குக் கேஸ் போடும் எண்ணமே இல்லே. உங்கள் படதையாதான் வந்து இவ்வளவு குழப்பத்தையும் செய்துவைத்தார். இப்ப அவரே பாதள்ளியை விட்டுப் போயிட்டாரு. கேஸ் எதற்காக நடத்தணும்? அதனுலே விண் ணப்பத்தை வாபஸ் வாங்கிட்டுப் போகலாம்னு வந்தோம்' என்று சொன்னுன்.

'நீ முத்தைப்போல பேசிட்டே கௌடா! விண்ணப்பத்தை வாபஸ் வாங்க உங்க ஊர்க்காரர் ஒப்புக்கொண்டாங்களா?' என்று கேட்டார் பாளாச்சார்.

''எங்க ஊர்லே யாருக்கு இந்தக் கேஸ் வேண்டியிருக்குது? உங்க ஊர்க்காரருதான் வந்து பிராது கொடுக்கச் சொன்னுங்க. இப்போ பிராதை வாபஸ் வாங்கறதுக்கும் உங்க ஊர்க்காரர்தான் குறுக்கே நிக்கருங்க. 'தாதா ஊருக்கு ஆகாதவன் ஆயிட்டான். கேஸை நடத்தியே தீரணும்'னு பிடிவாதம் பண்ணருங்க. இப்ப என்ன செய்யறதுங்க?'' என்று கல்லன கௌடன் புதிய பிரச்சினே ஒன்றை எழுப்பினுன்.

'எங்க ஊர்க்காரங்களா சொல்ருங்க? யாரப்பா அவங்க?' ஆச்சார் கவலேயுடன் கேட்டார்.

''நாங்க வர வழியிலே வாய்க்காலுக்குப் பக்கத்திலே 'பிராதார' கௌடரோடு நாலேந்து பேர் வந்து 'கேஸ் நடத்தினு ஊர் முழுக்கச் சாட்சி சொல்லவைக்கிறேம்'னு சொன்னுங்க'' என்ருன் கல்லன கௌடன்.

'கார்ப்பௌர்ணமி அன்று நடந்த சங்கதிக்காகப் பழி வாங்க எண்ணிக் கௌடர் மனேவியே இப்படிச் சதி செய்திருப்பாள்' என்று ஆச்சாருக்குச் சந்தேகம் வந்தது. அதைச் சொல்லியும் விட்டார். உடனே கல்லன கௌடர், பார்வதி அம்மாள் தன்னே அழைத்து, 'தொடர்ந்து கேஸை நடத்தும்படி கேட்டுக்கொண் டாள்' என்று சொல்லியேவிட்டான். ஆச்சார் திடுக்கிட்டார்.

'கௌடா! நீ வயதில் சின்னவன் ஆனுலும் பெருந்தன்மை உள்ள குடும்பத்தில் பிறந்தவன். என் யோசனேயைக் கேட்டு அதன்படி நடக்க இஷ்டம் இருந்தாச் சொல்லு. சும்மா ஊரிலே இருக்கறவங்க பேச்சையெல்லாம் கேட்டுகிட்டு மனசுக்குத் தோணினபடி செய்யறதா இருந்தா நான் சொல்லலே. அவங்க பேச்சையெல்லாம் கேக்கறது ஒங்களுக்கும் நல்லதல்ல' என்ருர்.

'நீங்க போட்ட கோட்டை அவங்கப்பாவும் தாண்டலே, அவரும் தாண்டமாட்டாருன்னு கெளடர் முன்னுலேயே சொல்லி விட்டார் அல்லவா ஆச்சார்' என்று சாமராவ் குறுக்கிட்டுச் சொன்னுன்.

கல்லன கெளடனும் அதை ஒப்புக்கொண்டான். கெளடர் மனைவி சொன்னது முதல் அவன் மனத்தில் சஞ்சலம் ஏற்பட்டது. இப்போது அவன் என்ன செய்யவேண்டும் என்பதைத் தெரிந்து கொள்ள விரும்பினுன். அதற்குச் சாமராவே வழி சொன்னுன்.

'இதோ பாருங்க கெளடரே! இப்ப நீங்க பிராதை வாபஸ் வாங்க விண்ணப்பம் கொடுத்தது தெரிஞ்சா, கெளடர் மனைவிக்கும் அவங்க கட்சிக்கும் ரொம்பக் கோபம் வரும். அதனுல் நீங்க விண்ணப்பம் கொடுக்க வேண்டாம். பிராது விண்ணப்பம் விசாரணைக்கு வரும்போது நீங்கள் ஆஜராக வேண்டாம். அதோட தீந்து போச்சு. அவங்களே பிராது விண்ணப்பத்தைக் கிழிச்சுப் போட்டுருவாங்க. அப்புறம் உங்க மேலே யாரும் தப்புச் சொல்லமாட்டாங்க' என்ருன் சாமராவ்.

கல்லன கெளடன் ஆச்சார் முகத்தைப் பார்த்தான். அவர் அபிப்பிராயத்தையும் தெரிந்துகொள்ளவேண்டும் அல்லவா? உடனே ஆச்சார், 'இந்தச் சட்ட விவகாரம் எல்லாம் எனக் கொன்னும் தெரியாது கெளடா! சாமராவ் பத்துக் கிராமங் களில் கணக்கப்பிள்ளை வேலை பார்த்தவன். அவனுக்குத்தான் அதெல்லாம் தெரியும். எனக்கு நியாயம் என்ன சொல்றதோ அதான் தெரியும். அவன் சொல்றது நியாயத்துக்கும் சரியா இருந்தா அப்படியே செய்யறதுலே எனக்கும் தடை இல்லை' என்ருர் ஆச்சார்.

'அப்படியானு நாங்க இப்படியே ஊருக்குப் போயிடறம். பிராது கொடுத்தவங்க ஆஜராகலேன்னு விண்ணப்பத்தைக் கிழிச்சுப் போட்டுட்டாப் பீடை தொலைஞ்சுது' என்ருன் கல்லன கெளடன்.

அதைக் கேட்ட ஆச்சார் மிக மகிழ்ச்சி அடைந்தார். 'ஒவ்வொரு ஊருக்கும் ஒன்னைப்போல ஒரு கெளடன் இருக்கணும். அப்ப அடிதடி சண்டையே வராது' என்ருர் பாளாச்சார்.

'அடிதடி சண்டை யாருக்குங்க வேணும்? பொழுது விடிஞ்சா எங்க ஊர்ச் சனங்க பாதள்ளிக்குப் பால் மோர் விக்க வர்ருங்க. ஆற்றைத் தாண்டப் படகுக்கு வராங்க. எங்கள் மாடுகளை மேயவிட்டா வாய்க்காலைத் தாண்டி உங்க ஊர் நெலத்திலேதான்

வந்து நிக்கும். சண்டை போட்டுகிட்டிருந்தா தெனசரி விவகாரம் எப்படீங்க நடக்கும்?' என்று சொல்லிவிட்டுக் கல்லன கௌடன் புறப்பட்டான்.

பகல் பதினொரு மணி ஆயிற்று. 'மாஜிஸ்திரேட்டின் தீர்த்த சிரார்த்தத்தை நடத்தி வைக்கவேண்டும்' என்று ஆச்சார் அன்று விடியற்காலையில் ஸ்நானம் செய்யவில்லை. அவர் கிருஷ்ணா நதிக்குப் போனார். 'சாப்பிட்டுவிட்டு இந்துபுரத்துக்குப் போக வேண்டும்' என்று சாமராவும் புறப்பட்டான்.

ஆற்றங்கரைக்குப் போகும்போது ஆச்சாருக்குக் கல்லன கௌடன் பேச்சுகளெல்லாம் ஒன்றொன்றாக நினைவுக்கு வந்தன. ஆற்றங்கரையில் ஏகப்பட்ட கூட்டம். படகுக்காரர்கள் சுவாமி யின் பல்லக்கைச் சுமந்துகொண்டு தீர்த்தவாரிக்காக வந்திருந் தனர். ஜயகோஷம் வெட்டவெளி எல்லாம் நிறைந்து ஒலித்தது. ஆற்றங்கரையில் கூடியிருந்த ஜனங்களைப் பார்த்ததுமே ஆச்சாரின் மனம் பூரித்தது. ஹாவனூர்க் கல்லன கௌடன் சகஜமாகத்தான் செய்தியைச் சொன்னான். ஆச்சாருடைய காதில் அது இன்னும் ஒலித்துக்கொண்டிருந்தது. பிராது விண்ணப்பத்தை வாபசு வாங்கிக்கொள்வதற்குச் சாதாரண மான ஒரு வழி அது. ஆனாலும் அது அவருக்கு மறந்துவிட்டது. அவருடைய மனம் ஏனோ பிற்காலத்தை நோக்கி வெகுதூரம் ஓடியது. திரும்பத்திரும்ப அவர் மனத்தில் அந்த எண்ணமே ஊசலாடிக்கொண்டிருந்தது. சுகமான வாழ்க்கையைக் கெடுக்கத் தூண்டும் தீய சக்தி எது?

ஹாவனூர்க்காரர்களின் பகைப் பொறி, தற்செயலாக மூண்டதன்று. அதன் பின்னணியில் பகையின் வரலாறு விரிந் திருந்தது. படதையா, தாதா, பாபு சாஹேப், கௌடர், சேஷப்பா, தாம் ஆகிய எல்லோரையும் கண்ணுக்குத் தெரியாத துவேஷச் சங்கிலி ஒன்று கட்டியிருந்தது. அந்த நெருப்புப் பொறி காட்டுத் தீயாய் மாற ஏதோ ஒரு சக்தி, செயலையும் எதிர்ப்புச் செயலையும் மாற்றிமாற்றிக் கிளப்பிவிட்டுக்கொண்டே இருந்தது. அதில் எல்லோரும் பங்குக்கொண்டிருந்தார்கள். இப்பொழுது அது அடுத்த ஊருக்கும் பரவப் பார்க்கிறது. வாழ்க்கை இந்த வழியில்தானா வளரவேண்டும்! துவேஷத்தின் சக்தி இவ்வளவு பலம் உள்ளதாக இருந்தால் அன்பின் சக்திக்கும் அவ்வளவு பலம் இருக்கவேண்டாமா? பாளாச்சாரின் நீண்ட அநுபவம் 'அப்படி இல்லை' என்றே சொல்லியது. பகைமை என்பது தொட்ட உடனே சுடும் நெருப்பு. அன்பு என்பது பிறந்து, வளர்ந்து வாழவேண்டிய வாழ்க்கை. அதனால் அது உருவாக நீண்ட நாள் வேண்டியிருக்கிறது.

வாழ்க்கையில் தற்செயலாக நேரும் விபத்துகளுக்கெல்லாம் காரணம் வெகு தூரத்திலேயே இருக்குமோ என்னவோ? மழைக் காலத்தில் எங்கேயோ மழை பெய்தால் பாதள்ளியை ஒட்டிய ஆற்றில் வெள்ளம் நிறைந்துவிடுவதை ஆச்சார் கண்டிருக்கிறார். கவனித்துப் பார்த்தால் பாதள்ளியின் வாழ்க்கை நிலையும் அப்படித்தான் இருக்கிறது. யாரோ செய்த பாவம் ஒன்று அலை அலையாக வந்து மோதி ஊரின் வாழ்க்கையையே கலக்கிவிட்டது. இதிலிருந்து விடுதலை உண்டா?

ஆச்சார் யோசித்துக்கொண்டே இருந்தார். நதிக்கரையில் இருந்த ஜனங்கள்மேலும் அவர் பார்வை நிலைக்கவில்லை. அவர் மனம் முழுவதும் கிருஷ்ணா நதியின்மேலேயே லயித்துவிட்டது. ஓடும் நதியின் ஏற்றமும் இறக்கமும் பரப்பும் சுருக்கமும் அவர் மனத்தில் ஏதேதோ கற்பனைகளைக் கிளறிவிட்டன. பாளாச்சார் யோசனையில் ஆழ்ந்தவராக அசையாமல் நின்றுவிட்டார். நதியில் ஸ்நானத்துக்காக இறங்கிய படகுத்துறை ஆட்கள் இடுப்பளவு நீரில் நின்று ஆச்சார் சங்கல்பம் சொல்வதற்காகக் காத்திருந்தார்கள். 'அவர் இதோ வந்துவிடுவார்' என்று எதிர் பார்த்தார்கள். அவர்கள் நினைத்தது வீணாயிற்று. ஆச்சார் நின்ற இடத்திலிருந்து அசையவில்லை. அவர் மனம் இந்த உலகத்திலேயே இல்லை. சிலைபோல் நின்ற ஆச்சாரைக் கண்டு நதியில் இறங்கிய ஜனங்கள் பயந்துவிட்டார்கள்.

அப்போது நாராயணாச்சார் ஆற்றங்கரைக்கு வந்தான். முதலில் அவன் கண்களில் பட்டது பாளாச்சார்தான். 'கிழவர் ஆகிவிட்டாலும் தன் பெரியப்பா நாலணா, எட்டணாப் பிச்சைக் காசுக்கு ஆசைப்பட்டு தனக்கு முன்பே வந்திருக்கிறார்' என்பதை நினைத்தவுடன் அவனுக்குப் பொறுமை போய்விட்டது. நாராயணாச்சார் குடும்பச் சண்டை காரணமாகச் சில வருஷ காலமாகப் பாளாச்சாருடன் பேசுவதையே விட்டுவிட்டான். ஆனால் இப்போது கோபம் அளவுக்கு மீறிவிட்டது. 'இந்தக் கிழவன் சாகும்வரையில் எனக்குக் குறுக்கேதான் வந்து கொண்டிருப்பான்' என்று, தொழில் போட்டி, அவனுக்கு ஆத்திரத்தை உண்டாக்கியது. அதனால் அடக்கம் இல்லாமல் ''இந்தக் கொட்டுகிற மழையிலேயும் காற்றிலேயும் 'அஷ்ட ஐஸ்வரியத்தையும் சம்பாதித்துவிடலாம்' என்று பொழுது விடியறத்துக்குள்ளே வந்து நின்னுண்டிருக்கயா?'' என்று இகழ்ச்சியும் பகையும் நிறைந்த குரலில் கத்தினான்.

ஆச்சார் அவன் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டார். கண்ணைத் திறந்து பார்த்தால் சாக்ஷாத் தம்முடைய புத்திர ரத்னம்

கோபத்தாலோ குளிரினாலோ நடுங்கிக்கொண்டு நின்றிருக்கிறான். அவன் பேச்சும் அவர் காதில் விழுந்தது. அவற்றுள் அடங்கியிருந்த ஆத்திரமும் புரிந்தது. ஆனால் அதே முறையில் பதில் சொல்லும் மனநிலை அவருக்கு இல்லை. 'கங்கா பாகீரதி நம்மைக் கரை ஏற்ற வந்திருக்கும்போது அவளுடைய தரிசனம் கிடைத்தால் போதும். அதைவிட அஷ்டைஸ்வரியம் அதிகமா?' என்று பாதி தனக்குச் சொல்லிக்கொள்வதுபோலவே சொன்னார்.

நாராயணாச்சாரின் கோபம் இன்னும் அதிகமாயிற்று. ''எங்க பெரியப்பா கிட்டத்தான் பேசக் கத்துக்கணும்! யாக்ஞவல்க்யர், ஜனகர் எல்லோரும் இவரிடந்தான் பிச்சை வாங்கணும். படகுத்துறை ஜனங்கள் ஸ்நானத்துக்காக வந்திருக்கும் செய்தி கேட்டு விழுந்தடித்துக்கொண்டு ஓடிவந்திருக்கிறார். அப்புறம் தேனொழுகப் பேசுகிறார். கங்கா பாகீரதியிலே ஸ்நானத்துக்கு வந்தாராம், ஸ்நானத்துக்கு! 'சங்கல்ப தக்ஷிணைக்கு ஆசைப்பட்டு வந்தேன்'னு சொன்னா மரியாதை கொறஞ்சுடுமோ? தான் வைதிகப் பிராம்மணனாக இருந்தாலும் தேஷ்பாண்டேபோல் நோரணைக்குக் கொறச்சல் இல்லை'' என்று கத்தினான். நாராயணாச்சாரின் அவிவேகத்துக்கு எல்லையே இல்லை. ஸ்நானத்துக்கு வந்த ஜனங்கள் தண்ணீரில் முழுகி எழுந்தார்கள். அதைக் கண்ட நாராயணாச்சாரின் வைதிகத்தொழில் சட்டென்று விழித்துக்கொண்டது. நதியில் நின்ற ஜனங்களைப் பார்த்து, 'உம், கையில் தண்ணீரை எடுத்துக்கொள்ளுங்கள்...... கேசவ, நாராயண...... பிரணவஸ்ய...... பாபாத்மா, பாபசம்பவா...... மூக்கைப் பிடிச்சுக்குங்க...... நதியிலேருந்து ஒரு சொட்டுத் தண்ணியை எடுத்துத் தலையைச் சுற்றி வட்டமாகச் சுழற்றுங்கள் ...... உம். ஸ்நானம் செய்யுங்கள்' என்று படபடப்புடன் ஒரே மூச்சில் சங்கல்பத்தைச் சொல்லி முடித்தான்.

நதியில் மூழ்கி எழுந்த ஜனங்கள் ஒவ்வொருவராகக் கரைக்கு வந்தார்கள். நாராயணாச்சாரின் கையில் ஒவ்வொரு துட்டு* வீதம் சங்கல்ப தக்ஷிணை கொடுத்தார்கள். 'பன்னிரண்டு வருஷத்துக்கு ஒரு தரம் பாகீரதி வரா. ஒரே துட்டா தக்ஷிணை கொடுப்பது?' என்று அதட்டினான் நாராயணாச்சார்.

'ஒரொரு துட்டு என்னங்க? உங்களுக்கு ஒரு துட்டு; அதோ அங்கே இருக்காறே அவருக்கு ஒரு துட்டு. மொத்தத்தில் இரண்டு துட்டுக் குடுக்கறோம் இல்லையா?' என்று கேட்டார்கள் அவர்கள்.

'சங்கல்பம் சொன்னவன் நான். அவர் சங்கல்பத்துக்கு வல்லைன்னு சொன்னதை நீங்களே கேட்டீங்களா இல்லையா?

---

* துட்டு—அந்தக்கால நாலுகாசு.

இங்கேயே ரெண்டு துட்டையும் குடுத்துடுங்க' என்று நாராயணுச்சார் தன்னுடைய அதிருப்தியைத் தொழில் என்னும் கௌரவத்தில் மறைத்து உத்தரவு போட்டான். ஆனல் ஜனங்கள் கேட்கவில்லே. 'அது எப்படீங்க முடியும்? உங்களேச் சேரவேண்டிய துட்டு உங்களுக்கு. அவரைச் சேரவேண்டியது அவருக்கு' என்று கணக்குச் சொல்லி நாராயணுச்சாரிடம் ஒரு துட்டுக் கொடுத்தார்கள். பிறகு வேஷ்டியைத் தோய்த்துக் கொண்டிருந்த பாளாச்சாரிடம் சென்று, 'இதோ உங்க தக்ஷிணே, வாங்கிக்கங்க' என்று சொன்னுர்கள்.

'நான் ஒன்றும் சங்கல்பம் சொல்லி வைக்கவில்லேயே அப்பா! எனக்கு ஒன்றும் வேண்டாம்' என்று பாளாச்சார் வேஷ்டியைத் தோய்த்தவண்ணம் சொன்னுர்.

'இப்பவாவது நான் சொன்னது புரிஞ்சுதா? சங்கல்பம் சொன்னவங்களுக்குத்தான் ரெண்டு துட்டையும் கொடுக்கணும்' என்று நாராயணுச்சாரின் கீழ்த்தரமான ஆசை பேசவைத்தது.

கூடிய ஜனங்களில் ஒருவன், 'அவர் சொல்லி வச்சிருப்பார். நீங்கதான் குறுக்கே வந்து தடுத்திட்டீங்க' என்று சொல்லிக் கையில் இருந்த துட்டை நட்டாற்றில் வீசி எறிந்தான். மற்றவர்களும் அவனேயே பின்பற்றினுர்கள்.

நாராயணுச்சாருக்குக் கோபம் உச்சந்தலேக்கு ஏறியது. அவனுடைய விவேகத்தையே கெடுத்தது. 'நட்டாற்றில் காசை வீசி எறியும்படி பாளாச்சார்தான் ஜாடை செய்திருப்பார்' என்று அவன் சந்தேகப்பட்டான். 'வயசிலே பெரியவங்களுக்கு இவ்வளவு கெட்டபுத்தி இருக்கக்கூடாது. நேத்து மாஜிஸ்திரேட் பின்னுலே சங்கல்பம் சொல்றத்துக்காகப் போனுய். நான் உன் தக்ஷிணேலே பங்கு கேட்கவல்லே. நீ இன்னிக்கு எனக்கு வரவேண்டிய தக்ஷிணேயை ஆற்றிலே எறியச் சொல்லி ஜனங் களுக்குச் சொல்லிக் குடுத்தூட்டே. நினேவிருக்கட்டும். இன்னி முதலாக நதிக்கு வந்தவர்களுக்குச் சங்கல்பம் சொல்லி ஒரு செல்லாக் காசு உன்னே வாங்கவிட்டால் என் பெயரை மாற்றிவை' என்று கத்தத் தொடங்கினுன்.

பாளாச்சாருக்கு இதைக் கேட்டு மிகவும் வருத்தமாக இருந்தது. 'தன்னேக் கண்டாலே நெருப்பைக் கக்கும் இந்தப் பிள்ளேயின் அவிவேகத்துக்கு என்ன செய்வது?' என்றே தெரிய வில்லே.

'நாராயணு, ஜனங்கள் அன்போடு கொடுக்க வரும்போது யார் தடுத்தாலும் அவர்கள் கேட்கமாட்டார்கள். இதோ இன்று

முதல் ஆத்தங்கரைச் சங்கல்பம் எல்லாம் உனக்குத்தான் குத்தகை; சரிதானே. இனிமேல் நான் யாருக்கும் சங்கல்பம் சொல்றதில்லே' என்று அவனுக்குச் சமாதானமாகச் சொன்னார்.

ஆனால் நாராயணாச்சாருக்குத் திருப்தியாக இல்லை. 'சங்கல்பம் சொல்றதில்லே'ன்னு ரொம்ப தாராள மனசோடே சொல்லிட்டே. ரெண்டு துட்டு வரும் சங்கல்பத்தை விடறது பெரிசில்லே. தீர்த்தக்கரை சிரார்த்தம் செய்ய வந்தவர்களைத் துரத்திப் பிடித்து வீட்டுக்குக் கூட்டிண்டுபோய்ப் பணம் பிடுங்கறே. அதைமட்டும் விடாதே' என்று மட்டம் தட்டிப் பேசினான்.

பாளாச்சாருக்கும் அசாத்தியக் கோபம் வந்தது. ஆனால் பெருமுயற்சியுடன் அதை அடக்கிக்கொண்டு, ''இன்னி முதல் அதுவும் உனக்கே சேர்ந்தது'ன்னு இந்தக் கங்கா பாகீரதியைக் கையில் வைத்துக்கொண்டு சொல்றேன். திருப்திதானே?'' என்றார் பாளாச்சார்.

இப்படிச் சொல்லிவிட்டு அவர், 'தாயே, கங்காமாதா!' என்றவண்ணம் ஆற்றில் நீந்தத் தொடங்கினார். வெள்ளத்தில் இழுப்பு அதிகமாக இருந்தது. வேகமாகப் பெருகிவந்த வெள்ளம் ஆச்சாரின் உடம்பு தனக்குக் குறுக்கே வந்ததைக் கண்டு அவரைச் சுற்றிச் சுழன்றது. பெரிய பெரிய அலைகள் மேலே எழும்பின. ஆச்சார் கை மாற்றிப் போட்டுக்கொண்டு நீந்தினார். இழுப்பைப் பற்றி அவர் பயப்படவில்லை. அவர் மனத்தில் தோன்றிய எண்ணங்களின் இழுப்பில் சிக்கியதுபோல் தடுமாறி அவர் முன்னேறினார். தண்ணீரிலேயே முக்தியைத் தேடுவதுபோல் போய்க்கொண்டிருந்தார். வெள்ளம் அவரை அடித்துக்கொண்டு போயிற்று. வரவரச் சுழலோடு சுழலானார். மேலே வீசும் அலையோடு அலையானார். வெள்ளத்தின் வேகத்தோடு வேகமானார். அப்படி அவர் வெள்ளத்தோடு இழுபட்டு வெகுதூரம் போவதைக் கண்டு ஸ்நானத்துக்கு வந்த தோணிக்காரர்கள் பயந்து, 'ஆச்சாரய்யா வெள்ளத்தோடு போறாரு! நீஞ்சத் தெரிஞ்சவங்க காப்பாத்துங்க' என்று கூக்குரலிட்டார்கள். ஆனால் உள்ளூர்க்காரர்களுக்கு ஆச்சார் இப்படி நீந்துவது புதிய விஷயம் அன்று. 'ஏனப்பா கத்தறீங்க! இப்ப பாருங்க, ஆச்சார்! எப்படிப் புரண்டு நீஞ்சிக் கரைக்கு வரார்னு பாருங்க' என்று அவர்களுக்குச் சமாதானம் சொன்னார்கள்.

ஆச்சார், நதியில் சிறிது தூரம் வரையில் வெள்ளத்தோடு போனார். ஆனால் அந்த வெள்ளத்தின் மற்றொரு பெரிய அலை அவரைக் கரைக்குக் கொண்டுவந்து சேர்த்தது. 'பாதள்ளியின்

கடன், தம்மை இன்னும் விடவில்லை' என்று பாளாச்சார் நினைத்தார். கிருஷ்ணா நதிக்குக் கைகூப்பினார். சற்று நேரம் ஈரத் துணியுடனே கரையில் நின்றார். குளிரைக்கூட அவர் உணரவில்லை. பிறகு அவர் நடத்தையே அவருக்கு விசித்திரமாகத் தோன்றியது. தோய்த்து உலர்த்திய வேஷ்டியை உடுத்துக்கொண்டார். கிருஷ்ணாவை மற்றொரு முறை கைகூப்பி வணங்கிவிட்டு வீட்டை நோக்கி நடந்தார்.

வழக்கம்போலவே அவருடைய வாய், ராகவேந்திர ஸ்தோத்திரத்தைச் சொல்லிக்கொண்டிருந்தது. ஆனால் மனமோ கவலையென்னும் பிரளயத்துக்கு மையமாக இருந்தது. வாயால் முணுமுணுக்கும் ஸ்துதியில் அவர் லட்சியம் இல்லை. அவருடைய இலக்கு இப்பொழுது விடுதலையை நோக்கியே நின்றது. வாழ்க்கை என்னும் சக்கர வியூகம் அவருடைய யோசிக்கும் சக்தியையே மழுங்க வைத்துவிட்டது. 'இன்று தம் மகன் நாராயணன் தம்மிடம் இப்படிப் பேசியதற்குக் காரணம் வாழ்க்கையின் தீய சக்தியின் ஓர் அம்சந்தான். வாழ்க்கை, வெள்ளம் பெருகும் ஆற்றைப்போல் எல்லையை மீறுவதாக இருந்தது. அதைத் தடுக்க முயல்வது வெறும் பைத்தியக்காரத்தனம். தடுக்கவும் முடியாது. நிலைமை கைம்மீறிப் போய் விட்டது. வெறிபிடித்த ஆற்றுக்கு அடங்கித்தான் போக வேண்டும். புண்ணியம் இருந்தால்தான் இன்றுபோல் பிழைத்து வர முடியும். மனத்தின் தாபத்தைப் போக்கடித்துக் கொள்ளவோ தம்முடைய பலத்தைச் சோதித்துக்கொள்ளவோ இன்று அவர் ஆற்றில் விழுந்தார். நீச்சல் தெரியும் என்றாலும் மூழ்கிப்போகவே நினைத்தார். ஆனால் வெள்ளம் அவரை மூழ்க விடவில்லை. மீண்டு வந்தது அவருக்குப் பிடிக்கவில்லை. சாவதற்கும் தீவிரமான ஆசை இருக்கவேண்டும்போல் இருக்கிறது. அப்படியானால் பிழைத்து வந்ததால் என் உத்தேசம் ஏதாவது பூர்த்தி பெறுமோ? யாருக்குத் தெரியும்? அவரால் கவலைப்படாமல் இருக்க முடியவில்லை. மனிதனுடைய பலவீனந்தான் எவ்வளவு? ஆச்சாருடைய மனம் மிகவும் தவித்தது. 'திடீரென்று விடுதலை கிடைக்கவேண்டும் பகவானே!' என்று வேண்டிக்கொண்டார். யோசித்துக்கொண்டே வீட்டை அடைந்தார்.

சுவாமி பூஜை செய்தார். ஆனால் மனத்தில் அமைதி இல்லை. மகிழ்ச்சி, காத தூரம் ஓடிவிட்டது. சாப்பாட்டுக் கடனை முடித்தார். மனத்துக்கு நிம்மதியே இல்லை. புகைபோக்கி இல்லாத ஓர் அறையில் புகை சூழ்வதுபோல் கவலை மூச்சுத் திணறச் செய்தது. மான்தோலில் படுத்தார். கண்ணை மூடினாலும் தூக்கம் வரவில்லை.

பாளாச்சார் எங்கோ நினைவாகவே படுத்திருந்தார். கலக்கம் இன்னும் அதிகரித்ததே தவிரக் குறையவில்லை. 'பாகவதத்தைப் படித்தால் மனத்துக்குச் சமாதானம் கிடைக்கலாம்' என்று எழுந்திருந்து சுவடியை அவிழ்த்தார். படிக்கப் படிக்க மனம் அதிலேயே ஊன்றியது. ப்ருது ராஜா, பிருத்விதோஹன் இவர்களுடைய கதைகள், கண்முன் ரசமாக விரிந்தன. சாயங்காலம் வரையில் படித்துக்கொண்டே இருந்தார். பொழுது சாய இன்னும் ஒருமணி நேரம் இருந்தது. அப்பொழுது காசிம் சாயபு வந்து கதவைத் தட்டினான். ஆச்சார் யார் என்று பார்க்கும் போதே உள்ளே வந்தான்.

'ஆச்சாரய்யா! ஆபத்து வந்திடுச்சுங்க! தாதாவை மாஜிஸ்திரேட் ஜெயிலுக்கு அனுப்பும்படி உத்தரவு போட்டுட்டாருங்க! என்று பயந்த குரலில் சொன்னான்.

'ஏனப்பா, ஹாவனூர்க்காரர்கள் கேஸ் நடத்தச் சாட்சி கொண்டாந்தாங்களா, என்ன?' என்று கேட்டார் ஆச்சார். அவர் இதை எதிர்பார்க்காததால் பயப்பட்டார்.

''இல்லீங்க. புகார் விசாரணைக்கு வந்தபோது அவங்க யாரும் சாவடிப் பக்கமே வரல்லீங்க. தாதாவும் ஜின்னப்பனும் மட்டும் ஆஜரா இருந்தாங்க. மாஜிஸ்திரேட் என்னமோ கேட்டாராம். ஜின்னப்பன், 'தான் தாதாவுக்கு ஜாமீன் நின்றதை ரத்துச் செய்யுங்க'ன்னு சொன்னானும். 'ஜாமீன் ரத்தாயிடுத்து. குற்றவாளியை ஜெயிலுக்கு அனுப்புங்க' என்று சொல்லி மாஜிஸ்திரேட் தாதாவைப் போலீஸ் வசம் ஒப்பிச்சிட்டாராம்.''

'உனக்கு இதையெல்லாம் யார் சொன்னாங்க?' என்று ஆச்சார் கேட்டார்.

அதற்குக் காசிம் சாயபு, ''ஜின்னப்பனே சொன்னானுங்க. தாதா, 'இன்னிக்கு ராத்திரி சோளம் கொண்டுவர இந்துபுரத்துக்குப் போறேன், சித்தப்பா' என்று ஜின்னப்பனிடம் சொன்னானும். 'நீ ஊருக்குப் போறதானா நான் ஜாமீனை ரத்துச் செய்திடறேன்னு' சொல்லி அவன் மாஜிஸ்திரேட்டுக்கு விண்ணப்பம் கொடுத்து ஜாமீனை ரத்துச் செய்திட்டானும்'' என்று நடந்ததைச் சொன்னான்.

'அவ்வளவுதானே? எல்லாத்துக்கும் நான் போய் மாஜிஸ் திரேட்டைப் பார்க்கறேன். நீ போ' என்று சொல்லிவிட்டு ஆச்சார் எழுந்திருந்தார்.

'பிராது கொடுத்தவர்கள் விசாரணைக்கு ஆஜராகாவிட்டால் பிராது விண்ணப்பத்தைக் கிழித்துப் போட்டுவிடுவார்கள்' என்று சாமராவ் சொல்லியிருந்தான். கல்லன கௌடனும் சொன்ன படியே விசாரணை நேரத்தில் ஆஜராகவில்லை. ஆனாலும் புகார் விண்ணப்பத்தைக் கிழித்துப் போடவில்லை என்றால் தாதாவை எந்த வழியில் விடுவிப்பது?' என்ற கவலையுடன் ஆச்சார் சாவடிக்கு வந்தார்.

சாவடியில் ஜனக்கூட்டம் நெரியும் என்று ஆச்சார் நினைத் திருந்தார். ஆனால் அங்கே போய்ப் பார்த்தால் கூட்டம் இல்லை. முல்கி சிப்பாய், சேஷப்பா, குமாஸ்தா கோபால்ராவ் இவர்களைத் தவிர வேறு யாரும் இல்லை. ஆச்சாரைக் கண்டவுடன் சேஷப்பா அவரை வணங்கி, 'எனக்குச் சொல்லியனுப்பி இருந்தா நானே வருவேனே, ஆச்சார்! நீங்க ஏன் சிரமப்பட்டு இங்கே வரணும்?' என்று போலி உபசாரம் செய்தான்.

'உன்னிடம் வேலை இருந்தா உனக்குச் சொல்லி அனுப்பி யிருப்பேன். எனக்கு வேலை மாஜிஸ்திரேட் இடந்தான். அதனால் இங்கே வரவேண்டி இருந்தது' என்று சொன்னார்.

'சொந்த வேலையா இருந்தா மாஜிஸ்திரேட் அவர்களைப் பள்ளிக்கூடத்திலே சந்திக்கலாம்' என்று குமாஸ்தா கோபால் ராவ் வாயிலிருந்து புகையிலையைத் துப்பிவிட்டுச் சொன்னான்.

'எனக்கென்ன சர்க்கார் வேலையா இருக்கப்போகிறது? போயும் போயும் வைதிகப் பிராமணன்' என்று முணுமுணுத்த வண்ணம் ஆச்சார் சாவடியிலிருந்து இறங்கிப் பள்ளிக்கூடத் துக்குப் போனார்.

பள்ளிக்கூடத்தில் மாஜிஸ்திரேட்டின் ஆபீசுக்காக ஒரு திரையைக் கட்டியிருந்தார்கள். உள்ளே மாஜிஸ்திரேட் திண்டில் சாய்ந்துகொண்டு உட்கார்ந்திருந்தார். காவல் போலீஸ்காரன் கொண்டுவந்த தபாலைப் பார்த்துக்கொண்டிருந்தார். இதனால் அவர் பார்வை ஆச்சார்மேல் விழவில்லை. ஆச்சார் சற்று நேரம் காத்திருந்தார். பள்ளிக்கூடத்தில் மற்றொரு பக்கத்தில் திரை யிட்டு அவர் குடும்பம் தங்க ஏற்பாடு செய்திருந்தார்கள். உள்ளே இருந்த ருக்மணிபாய், ஆச்சார் நிற்பதைப் பார்த்தாள். அவள் எழுந்து வந்து ஆச்சாரைக் கூப்பிட்டதால் ஆச்சார் உள்ளே போனார். அவர் உள்ளே போனதும் மாஜிஸ்திரேட் ஏதோ

வேலையாக வெளியே போனர். ருக்மணிபாய் சற்று இரட்டை நாடி. புடவையின் கனத்தால் இன்னும் உடம்பு வெடித்துவிடும் போல் பருத்துத் தோன்றியது. வாய்கொள்ளாமல் வெற்றிலே பாக்கை அசைபோட்டுக்கொண்டு, 'என்ன ஆச்சார்! நேற்றுத் தலேகாட்டியவர் அப்புறம் எட்டிக்கூடப் பாக்கலேயே? நேற்று அவர் சாப்பிடக் கூப்பிட்டும் நீங்கள் வரவில்லேயாம். அதைக் கேட்டு எனக்கு ரொம்ப வருத்தமாப்போச்சு. இப்படிப்பட்ட க்ஷேத்திரத்துக்கு வந்தும் பிராம்மணனுக்குச் சாதம் போடாமெ சாப்பிடும்படி ஆயிடுத்து' என்று ரொம்பக் குறையுடன் கேட்டாள்.

'நான் வராவிட்டால் என்ன? இன்னிக்கி உங்க மனசுக்குத் திருப்தியா எல்லாம் நடந்துதா இல்லியா?' என்று ஆச்சார் சமாதானமாகவே கேட்டார்.

ருக்மணிபாய்க்குத் திருப்தி ஆகவில்லே. அவள் சுற்று முற்றும் பார்த்துவிட்டுக் கடைசியில், ''நீங்கள் நகர்ந்துகொண்டு பணம் பிடுங்குவதற்காக அந்த நாராயணுச்சாரை அனுப்பிய தாகத் தோணுகிறது. அவர் என்னமோ உங்க பிள்ளேயாமே? ஒரே நாளிலே போரும் போரும்னு செய்தூட்டாரப்பா! ஆற்றிலே ஸ்நானம் பண்றத்துக்கு முன்னலே கட்டியிருந்த புடவை அவரைச் சேரணுமாம். கடைசியில் இவருக்குக் கோபம் வந்து 'இவள் உடுத்திருக்கிற சரிகைக் கரைப் புடவை வேணுமானல் கிடைக்காது. ஒரு புதுப் புடவை வாங்கித் தறேன்' என்ற பின், வாயை மூடிக்கொண்டார். முறவாயனத்தில் எண்ணே யோடு கொடுத்த வெள்ளிக் கிண்ணமும் அவருக்குச் சொந்தமாம். முன்னலேயே தெரிஞ்சிருந்தா தொன்னேலே எண்ணெய் கொடுத் திருப்பேன். எனக்கு வெறுத்துப்போச்சு. நாளேக்கு உங்களேக் கூப்பிட்டுக் கங்கா சமாராதனே செய்தால் செய்யலாம். இல்லாட்ட செய்யவே வேண்டாம்னு இவர்கிட்டக் கண்டிப்பாச் சொல்லிவிட்டேன்'' என்று ஒரு பிரசங்கமே செய்துவிட்டாள் ருக்மணிபாய்.

ஆச்சாருக்கு இந்தப் பேச்சைக் கேட்டு வெறுப்பு உண்டா யிற்று. பேச்சை மாற்ற எண்ணி, 'எஜமானரைக் கொஞ்சம் பார்க்கணுமே' என்று இடையில் பேசி, அவருடைய பேச்சை நிறுத்தினர்.

ஆனல் ருக்மணிபாயின் பேச்சு முடியவில்லே. '' 'கங்கா சமாராதனேயைச் செய்ய உங்களிடமே சொல்லவேண்டும்' என்று ஆளே அனுப்பும்படி நானே சொன்னேன். அப்பொழுதே உஸ்மான் உங்களே அழைச்சிண்டு வந்திருந்தா நீங்க அவரைப்

பாத்துப் பேசியிருக்கலாம். கௌடர் பெண்டாட்டி ரொம்ப தூரம் சொல்லி வீட்டுக்கு வரும்படி கேட்டுண்டாளாம். இவர் அங்கே போயிருக்கார். இப்ப வந்துடுவார். உக்காருங்க'' என்று சொன்னாள். மாஜிஸ்திரேட் கௌடர் வீட்டுக்குப் போயிருந்த தால் ஆச்சார் ருக்மணிபாயின் பேச்சைக் கேட்டுக்கொண் டிருந்தார்.

இப்பொழுது ஆச்சார் ருக்மணிபாயிடம் பேசத்தான் வேண்டியிருந்தது. 'கங்காராதனை ஏற்பாட்டைச் சேஷப்பா நாராயணனிடமே ஒப்பித்திருக்கிறேன். அதில் நான் தலையிடக் கூடாது. ஓர் உயிரைக் காப்பாற்றுவதற்காக நான் இங்கே வந்தேன்' என்று தாம் வந்த காரணத்தைத் தெரிவித்தார்.

'அந்த நாராயணாச்சார் முகத்தில் விழிக்கக்கூடாது! என்று நான் ஆணையிட்டிருக்கேன். நீங்கள் இந்தக் கங்காராதனைப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். உங்களுடைய காரியம் எதுவானாலும் நான் செய்யச் சொல்றேன்' என்று தைரியம் கொடுத்தாள்.

ஆச்சாருக்கு அதுவும் சரி என்று தோன்றியது. 'எப்படியோ தாதாவை இந்த அக்கிரமத்திலிருந்து காப்பாற்ற வேண்டும். அந்தப் புண்ணியம் யாருக்குக் கிடைத்தாலும் சரிதான்' என்று நினைத்தார் பாளாச்சார்.

'நீங்க மனசுவச்சா எதுதான் நடக்காதம்மா? பரோபகார மாக ஒரு விஷயத்தைப்பத்திக் கேட்கணும். பெரிய விஷயம் ஒன்றும் இல்லை. தாதான்னு ஒரு பையன் இருக்கான். அவன் தகப்பனுக்கு ஒரே பிள்ளை. நன்னா வாழைமரம் மாதிரி வளர்ந் திருக்கான். அவன் வேட்டைக்குப் போனபோது ஹாவனூர்க் காரர்களோடு ஏதோ சண்டை போட்டானாம். அதனாலே அவா, தங்களை அடிச்சதாகப் பிராது கொடுத்திருக்கா. அவன் ஜாமீனில் விடுதலையாகியிருந்தான். ஹாவனூர்க்காரர்களும் கேஸை வாபஸ் வாங்க ஒப்புக்கொண்டார்கள். ஆனா இப்போ இங்கே இருக்கற சில ஜனங்களோடெ குயுத்தியாலே அவன் ஜெயிலுக்குப் போகும் நெலைமை வந்திருக்கு. அவனைத் தப்பவைக்கணும்' என்று சொல்லிவிட்டு ஆச்சார் பேசாமல் இருந்தார்.

ஆச்சாரின் குரலில் இருந்த உருக்கம் ருக்மணிபாயின் மனத்தைத் தொட்டது. இருந்த ஒரு மகனும் இறந்ததால் குழந்தைகள் இல்லாத அவளுடைய மனத்துக்கு ஆச்சாருடைய பேச்சு, சூடு போட்டாற்போல் இருந்தது. ஆச்சாரின் தோற்றம் பயபக்தியையும் நம்பிக்கையையும் உண்டாக்கியது. அவர் சொன்ன கதை, மனசுக்கு வேதனை தருவதாக இருந்தது. அவள்

பயத்தால் நடுங்கினாள். ஏதேதோ நினைவில் கண்ணீர் பெருகியது. உணர்ச்சி வசப்பட்டாள். தலைப்பால் கண்ணைத் துடைத்துக் கொண்டு, 'ஆச்சார் சுவாமி, அவர் வரட்டும். நீங்கள் சொன்ன பையனை இப்பவே விடுதலை செய்யச்சொல்றேன்' என்று அபயம் கொடுத்தாள்.

''நீங்க சொல்கிறீர்கள் அம்மா! ஆனால், 'யஜமானர் சம்மதிப்பாரோ இல்லையோ?' என்று எனக்குச் சந்தேகம். தாதாவை ஜெயிலுக்கு அனுப்ப, சேஷப்பாவும் பார்வதி யம்மாளும் முனைந்திருக்கிறார்கள். அவளிடமிருந்து தட்சிணை வாங்கித் தருவதாகச் சேஷப்பா யஜமானரிடம் சொல்லி யிருப்பான். இந்த நிலையில் காரியம் நடப்பது கஷ்டம் அல்லவா?'' என்று ஆச்சார் சந்தேகத்தைத் தெரிவித்தார்.

'தன்னால் ஆனதைச் செய்தே தீருவேன்' என்று ருக்மணிபாய் மறுபடியும் தைரியம் சொன்னாள். ஆச்சாரின் எதிரில் இருந்த அந்த ஒரு நாழிகை நேரத்தில் அவளுடைய மனம் முழுக்க முழுக்க மாறிவிட்டது. குழந்தைகள் இல்லாததால் இயற்கையாகவே அவளுக்கு ஆஸ்திக மனப்பான்மை வளர்ந்தது. 'குழந்தைகள் பிறக்க என்ன வழி தேடுவது?' என்று ஆச்சாரைக் கேட்க விரும்பினாள். அதனால், 'ஆச்சாருடைய வேலை எதுவாக இருந் தாலும் முடித்துக் கொடுத்துவிடவேண்டும்' என்று முடிவு செய்தாள்.

அப்போது கௌடர் வீட்டுக்குப் போயிருந்த மாஜிஸ்திரேட் திரும்பிவந்தார். டவாலிச் சேவகனாகிய உஸ்மான் அவர் எதிரிலேயே இருந்தான். அவனைக் கண்ட உடனே ருக்மணிபாய் திரை கட்டின தன் அறைக்குப் போனாள். ஆச்சார் உட்கார்ந் திருந்த இடத்திலேயே எழுந்து நின்றார். மாஜிஸ்திரேட் வந்த வுடன் ஆச்சாரைக் கோபத்துடன் பார்த்துவிட்டு அவரிடம் பேசாமலேயே தம் அறைக்குப் போனார்.

அதற்குள் சாவடியிலிருந்து கணக்கப்பிள்ளை சேஷப்பாவும் கோபால்ராவும் பள்ளிக்கூடத்துக்கு வந்து மாஜிஸ்திரேட்டைப் பார்க்கத் திரையை விலக்கிப் புகுந்தார்கள். அந்த அவசரத்தில் ருக்மணிபாயின் அறைக்குப் பக்கத்தில் நின்றிருந்த பாளாச்சாரை அவர்கள் பார்க்கவே இல்லை. உள்ளே வந்த கோபால்ராவ், கேஸ் தஸ்தாவேஜுகளை மாஜிஸ்திரேட்டின் முன் வைத்து அவருடைய கையெழுத்துக்காகக் காத்திருந்தான். சேஷப்பாவின் அதிகப்பிரசங்கித்தனம், அவனைச் சும்மா இருக்க விடவில்லை. 'கௌடர் மனைவியைப் பாத்தூட்டு வந்தீங்களா?' என்று பல்லை இளித்துக்கொண்டே கேட்டான்.

மாஜிஸ்திரேட்டின் முகம் திடீரென்று கடுகடுத்ததைக் கண்டு சேஷப்பா பயந்துவிட்டான். அவருடைய முகம் மறுபடி மலர என்ன செய்வது என்று தெரியாமல் கையைப் பிசைந்துகொண்டு நின்றான். மாஜிஸ்திரேட் உஸ்மானைக் கூப்பிட்டு 'ஆச்சார் எதற்கு வந்தார் என்று கேள்' என்று அதிகாரத்தோடு உத்தர விட்டார்.

உஸ்மான் வெளியே போகச் சந்தர்ப்பமே நேரவில்லை. ''உஸ்மான், 'நான்தான் கூப்பிட்டேன்' என்று சொல்லு'' என்று ருக்மணிபாய் திரைக்குப் பின்னிருந்து பதில் சொன்னாள்.

மாஜிஸ்திரேட் பேசாமல் இருந்தார். மாறுபாடாக எதுவும் செய்யச் சந்தர்ப்பம் இல்லாததால் அவருக்குக் கோபம் வந்தது. 'கோபால்ராவ், தஸ்தாவேஜுகளை வைத்துவிட்டுப் போங்கள். அப்புறம் கையெழுத்துப்போட்டு அனுப்புகிறேன். சேஷப்பா, உங்களுக்கு ஏதாவது வேலை இருக்கிறதா?' என்று வேறு பேச்சுக்கு இடமில்லாமல் கேட்டுவிட்டு வெளியே வந்துவிட்டார்.

சேஷப்பா இன்னும் பல்லை இளித்தபடி கையைப் பிசைந்து கொண்டிருந்தான். மாஜிஸ்திரேட்டைத் தொடர்ந்து வெளியே வந்து, 'ஒன்னும் இல்லை .. அந்தத் தாதாவின் ஜாமீனை ரத்துச் செய்து ஜெயிலுக்கு அனுப்ப உத்தரவு போட்டதை ...' என்று பேச்சை எடுத்தான்.

'சட்டப்படி, என்ன உத்தரவு போடவேண்டுமோ அதைச் செய்வோம். நீங்கள் எல்லாம் இப்படிச் சர்க்கார் விவகாரத்தில் உபதேசம் செய்ய வரக்கூடாது' என்று அதட்டினார். மாஜிஸ்தி ரேட்டின் கோபம் அதிகரித்ததைக் கண்டு சேஷப்பா ஆச்சரியப் பட்டான். ''கௌடர் வீட்டுக்குப் போனபோது தக்க முறையில் மரியாதை கிடைத்திருக்காது. இல்லாவிட்டால் முக்கால்பங்கு வேலை முடிந்தபின் கடைசி நேரத்தில் ஏன் இப்படிக் கோபம் வருகிறது? கையில் பணம் விழுந்தாலொழிய மாஜிஸ்திரேட் கையெழுத்துப் போடமாட்டார். 'கௌடர் வீட்டில் என்ன நடந்தது?' என்பதைத் தெரிந்துகொள்ளவேண்டும். நல்ல சமயத்தில் வேலை கெட்டுப்போய்விட்டதே'' என்று சேஷப்பா வுக்குக் கோபம் வந்தது. இந்தக் கவலையுடனே சேஷப்பா, பள்ளிக்கூடத்திலிருந்து வெளியே வந்தான்.

பள்ளிக்கூடத்தில் மாஜிஸ்திரேட் தம்மைக் கண்டும் காணாததுபோல் அலட்சியத்துடன் உள்ளே போனதை, ஆச்சார், தமக்கு நேர்ந்த அவமானமாக நினைத்தார். முதல்நாள் அவர் வீட்டில் சாப்பிட மறுத்ததால் அவருக்குத் தம்மேல் கோபம் என்று தெரிந்துகொண்டார். 'இனிமேல் அங்கே உட்காருவதில்

பயனில்லை' என்று நினைத்து உடனே அங்கிருந்து புறப்பட்டு விட்டார். ஏற்கெனவே கலங்கிய அவர் மனம் இப்போது நிலை தவறியது. 'அவர் தாதாவுக்காக ஜாமீன் கொடுத்துவிட்டு வருவார்' என்று காசீம் சாயபு முதலியவர்கள் அவருக்காக வெளியே காத்துக்கொண்டிருந்தார்கள். ஆச்சார் வெளியே வந்தவுடன் விஷயத்தைக் கேட்டுத் தெரிந்துகொள்ளத் துடித் தார்கள். ஆச்சாருடைய எண்ணமெல்லாம் கௌடர் மனைவியைப் பார்த்து, நடந்த செயலைப்பற்றித் தெரிந்துகொள்வதிலேயே இருந்தது. அதற்குள் காசீம் சாயபு அவரிடம் வந்து 'ஆச்சாரையா! வண்டிகள் இந்துபுரத்துக்குப் போகத் தயாராகி விட்டன. வண்டியோட்ட அனுப்பத் தாதாவை விடுவிச்சுகிட்டு வந்தீங்களா?' என்று மறைமுகமாகத் தன் பரபரப்பை வெளியிட்டான்.

ஆச்சாரால் உடனே பேச முடியவில்லை. சேஷப்பாவும் கௌடர் மனைவியும் சேர்ந்து செய்த சூழ்ச்சி அவர் மனத்தை அறுத்தது. 'ஜின்னப்பன் தம்மிடம் ஒரு வார்த்தைகூடச் சொல்லாமல் கௌடர் வீட்டில் ஒருமணி நேரம் நடத்திய ரகசிய ஆலோசனை என்னவாகத்தான் இருக்கும்? இத்தனை கவலைகள் அவர் மனத்தில் குமைந்துகொண்டிருந்ததால் காசீம் சாயபு வுக்குப் பதில் சொல்ல முடியவில்லை. 'எல்லாம் கடவுள் இச்சைப்படி நடக்கும் அப்பா!' என்று சொல்லி நீண்ட பெரு மூச்சு ஒன்று விட்டார்.

'இப்படிப் புதிர் போட்டாப்பலெ பேசினா எங்களுக்கு எப்படீங்க தெரியும்? மாஜிஸ்திரேட் சாஹேப் என்ன சொன்னார்?' என்று காசீம் நேராகவே கேட்டுவிட்டான்.

அதற்கு ஆச்சார், 'இப்ப மாஜிஸ்திரேட்டின் கையில் ஒன்றும் இல்லை. எல்லாவற்றுக்கும் சூத்திரம் கௌடர் மனைவியின் கையில் இருக்கிறது. அவளைத்தான் பார்க்கப்போறேன்' என்று சொல்லிவிட்டு ஆச்சார் நடக்கத் தொடங்கினார்.

ஆச்சாருடைய பதிலால் காசீம் திருப்தி அடையவில்லை. ஆனால் மறுபடி அவரைக் கேள்வி கேட்கத் தைரியமும் இல்லை. பேசாமல் அவர் பின்னாலேயே நடந்தான். சேஷப்பா இதை யெல்லாம் பார்த்துக்கொண்டே இருந்தான். 'கௌடர் மனைவி ஆச்சாரைப் பார்த்தபின் தைரியத்தை இழந்து தாங்கள் போட்ட திட்டத்தை அவரிடம் சொல்லிவிடுவாளோ?' என்று பயந்தான். அதனால் 'தானும் கௌடர் வீட்டுக்குப் போய்விடவேண்டும்' என்று முடிவு செய்தான்; புறப்பட்டும் விட்டான். ஆனால்

அதே சமயத்தில் உஸ்மான் வந்து மாஜிஸ்திரேட் கூப்பிடுவதாகச் சொன்னதால் வேறு வழியில்லாமல் அவரிடம் போகத் திரும்பினன்.

உள்ளே மாஜிஸ்திரேட் தம் மனைவியுடன் தர்க்கம் செய்து கொண்டிருந்தார். 'இந்த ஆச்சார் ரொம்பக் கர்வம் பிடித்தவனுக இருக்கிறுன். அவனைக் கூப்பிட்டனுப்பி என் கௌரவத்தைக் கெடுக்கவேண்டிய அவசியம் என்ன?' என்ற சொற்கள் சேஷப்பாவின் காதில் விழுந்தன. உஸ்மான், சேஷப்பா வந்திருப்பதைத் தெரிவித்ததால் மாஜிஸ்திரேட் தர்க்கத்தை நிறுத்திவிட்டுத் தமது இடத்தில் வந்து உட்கார்ந்துகொண்டு சேஷப்பாவைப் பார்த்தார். ''என்ன, சேஷப்பா இது? இந்த ஆச்சார் இங்கே வந்து நின்றுகொண்டிருந்தபோது தாதாவின் ஜாமீனை ரத்துச் செய்யும்படி கேட்டீர்கள். உங்களுக்கு எப்படித் தான் சொல்றது? 'அந்தக் காரியத்துக்காகவே அவனும் வந்திருப்பான்' என்று, அதனுலேதான் அவன்கிட்டப் பேச்சுக் குடுக்கலே. இப்பொழுது பார்த்தால் சொல்லாமல் கொள்ளாமல் போய்விட்டான். ரொம்பத் தலைக்கர்வம் பிடித்த பிராம்மணன் போல் இருக்கிறது?'' என்று பேச்சை ஆரம்பித்தார். சேஷப்பாவுக்கும் இந்தப் பேச்சுத்தான் வேண்டியிருந்தது. பாளாச்சாரைப்பற்றித் தன் மனத்திலிருந்த துவேஷத்தையெல்லாம் கொட்டித் தீர்த்தான். சங்கரப்ப கௌடர் காலத்திலிருந்து, ஆச்சார் நடத்திய அதிகாரங்களை ஒன்றுவிடாமல் விவரித்தான். இப்பொழுது இந்துபுரத்து ராஜ புரோகிதர் ஆகிவிட்ட பெருமை வேறு தலையெல்லாம் நிறைந்திருக்கிறது. 'அவருடைய கர்வத்தை அடக்க ஒரே வழிதான் இருக்கிறது. தாதாவை ஜெயிலுக்கு அனுப்பினுல் அவருடைய கொழுப்புத் தானுகவே அடங்கிவிடும்' என்று தன் அபிப்பிராயத்தையும் சொன்னுன்.

'ஹாவனூர்க்காரர்கள் இன்றைக்கு வந்து பதில் சொல்லியிருந்தார்களானுல் அவனை ஜெயிலுக்கு அனுப்பியிருக்கலாம். அவர்கள் ஆஜராகவில்லை. கேஸை நடத்தும் எண்ணம் அவர்களுக்கு இருப்பதாகத் தெரியவில்லை. அதனுல் தாதாவை ஜெயிலுக்கு அனுப்புவது கஷ்டமாகத்தான் இருக்கும்' என்ருர் மாஜிஸ்திரேட்.

'இப்போதைக்கு ஜாமீனை ரத்துச் செய்து ஜெயிலுக்கு அனுப்பிவிடுங்கள். அப்புறம் ஒருமாத காலத்தில் ஹாவனூர்க்காரர்கள் மனத்தை மாற்றிக் கேஸை நடத்திவிடலாம்' என்று சேஷப்பா எடுத்துக்கொடுத்தான். ஆத்திரமடைந்த அவனுடைய மனம் எந்தக் கீழ்த்தரமான செயலுக்கும் தயாராக இருந்தது.

ஆனால் மாஜிஸ்திரேட் அதற்குச் சம்மதிப்பதாக இல்லை. 'ஜின்னப்பனுடைய ஜாமீனை ரத்துச் செய்துவிடலாம். ஆனால் வேறு யாராவது ஜாமீன் கொடுத்தால் மறுக்க முடியாது' என்றார் மாஜிஸ்திரேட்.

சேஷப்பா நெஞ்சு வெடித்துவிடுவதுபோல் புலம்பி மறுபடியும் கெஞ்சினான். 'தனக்கும் கௌடருடைய மனைவிக்கும் கௌரவம் குறையாமல் பார்த்துக்கொள்ளவேண்டும்' என்றான். மாஜிஸ்திரேட்டுக்குச் சலிப்பு வந்துவிட்டது. ''ஆகட்டும், பார்க்கலாம். இன்று கேஸைக் கூப்பிட்டபோது 'பிராது கொடுத்தவர்கள் ஆஜராகவில்லை' என்று வழக்கு ரிஜிஸ்தரில் எழுதியிருக்கிறானா? என்று கோபாலராவைக் கேளு. இந்தக் கேஸின் விசாரணை டயரியை என்னைக் கேட்டு எழுதச் சொல்லு. அப்புறம் நாளைக்குக் கங்காராதனை செய்து வைக்க நாராயணாச்சாருக்குப் பதிலாக வேறு யாரையாவது ஏற்பாடு செய்'' என்று சொல்லி மாஜிஸ்திரேட் சேஷப்பாவை அனுப்பிவிட்டார்.

ருக்மணிபாய் உள்ளே நின்றுகொண்டே இவர்களுடைய சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டிருந்தாள். பாளாச்சார் வந்துவிட்டுப் போனபின் அவளுடைய மனநிலை குழம்பியிருந்தது. 'தாதா, தன் தகப்பனுக்கு ஒரே மகன்' என்று அவர் சொல்லிய பேச்சு அவளுடைய தாய் உள்ளத்தைக் கலக்கிவிட்டது. சேஷப்பா வெளியே புறப்படும்போதே அவள், தம் கணவர் முன் வந்து நின்றாள். 'இப்படிப்பட்டவர்களுடைய பேச்சைக் கேட்டுக்கொண்டு தகப்பனையும் மகனையும் பிரிக்கிறீர்கள். அந்தப் பாவம் தொடர்ந்து வந்து நம்மைச் சூழ்ந்துகொள்ளும். இருந்த ஒரு குழந்தையைச் சுவாமி அழைத்துக்கொண்டுவிட்டார். நீங்க பண்ற காரியத்தைப் பார்த்தபின் குழந்தைகளைக் கொடுப்பதற்குத் தெய்வம் ஒன்றும் குருடில்லை' என்று பெண்மைக்கு இயற்கையான ஆற்றாமையுடன் அவள் சொன்னாள்.

மாஜிஸ்திரேட் கிருஷ்ணராவுக்கு மனைவியின் பேச்சு, மர்மத்தைத் தாக்கியதுபோல் இருந்தது. அவருக்குக் கண்டிப்பான மாஜிஸ்திரேட் என்ற புகழ் இருந்தது. அவரை எதிர்த்து நின்று பேசும் தைரியம் யாருக்குமே இருக்காது. ஆஜாநுபாகுவான உருவம், அகன்ற நெற்றி, கோரை மீசை இவற்றைப் பார்த்தபின் தேஷ்பாண்டே போன்றவர்கள்கூடப் பேசத் துணியமாட்டார்கள். மற்றவர்களிடம் அப்படியிருந்தாலும் கிருஷ்ணராவ், மனைவிக்குப் பயந்தவர்தான். அதற்கு ஒரு காரணம் உண்டு. சிறு வயதில் வறுமையால் வாரம் சாப்பிட்டுப் படித்தவர் அவர். ருக்மணிபாயின் தகப்பனார் சிறுவனுடைய கல்வி அறிவைப்

பாராட்டி அவரை மாப்பிள்ளையாக ஏற்றுக்கொள்ளும் உதார குணம் படைத்திருந்தார். அன்று முதல் கிருஷ்ணராவ், தம் மனைவியையே பாக்யலக்ஷ்மி என்று நினைத்து ஆராதித்தால் அதில் ஆச்சரியம் என்ன? ருக்மணிபாயின் பெருமை அளவில்லாத தாக இருந்தது. குழந்தைகள் இல்லாத ஒரே குறைதான்! இருந்த ஒரு குழந்தையும் ஓராண்டுக்குள் இறந்துவிட்டதால் அவளுடைய சிடுசிடுப்பு அதிகமாகிவிட்டது. இன்று பாளாச்சார் செய்த உபதேசம் அவள் 'கணவருடைய அக்கிரமமான நடத்தையால்தான் தனக்குக் குழந்தைகள் பிறக்கவில்லை' என்ற அவளுடைய சித்தாந்தம் இன்னும் உறுதிப்பட்டது. அதனால் 'உடனுக்குடனே தாதாவை அழைத்து விடுதலை செய்துவிட வேண்டும்' என்று உத்தரவே போட்டுவிட்டாள். மாஜிஸ்திரேட் வேறு வழி இல்லாமல் முகத்தைத் தொங்கப்போட்டுக்கொண்டு ஒப்புக்கொண்டார்.

தாதாவைக் கூப்பிட உஸ்மானை அனுப்பினார். அவனை மத்தியான்னம் முதல் கோபால்ராவ் சாவடியில் உட்கார வைத்துக்கொண்டிருந்தான். 'மாஜிஸ்திரேட்டின் உத்தரவு வரும் வரையில் குற்றவாளி தாதா, சாவடியை விட்டுப் போகக்கூடாது' என்று போலீஸ்காரர்களுக்கு உத்தரவு போட்டிருந்தான். உஸ்மான் வந்து கூப்பிட்டவுடன், 'விதியே' என்று தாதாவை விட்டான். கோபால்ராவும் அவன் பின்னாலேயே மாஜிஸ்திரேட் தங்கியிருக்கும் பள்ளிக்கூடத்துக்குப் போனான். கூடவே ஜின்னப்பனுடைய ஜாமீனை ரத்துச் செய்யும் பத்திரங்களை மாஜிஸ்திரேட்டின் கையெழுத்துக்காகக் கொண்டுவந்திருந்தான்.

கோபால்ராவ் பயந்துகொண்டே பத்திரங்களைக் கையெழுத்துக்காக மாஜிஸ்திரேட்டின் முன் நீட்டினான். அவைகளைப் பார்க்கும்போதே மாஜிஸ்திரேட்டின் முகபாவம் மாறியது. புருவங்கள் உயர்ந்தன. மீசை நுனிகள் துடித்தன. ''பென்ஷன் வாங்கற வயசானாலும் உனக்கு மாஜிஸ்திரேட்டின் தஸ்தா வேஜைத் தயாரிக்கத் தெரியவில்லை. பிராது கொடுத்தவன் ஆஜராகாமல் இருக்கும்போது புகாரைக் கிழித்து எறிய வேண்டும். இதுகூட உனக்குத் தெரியாதா? புகாரைக் கிழித்து எறிந்த பின் குற்றவாளி விடுதலை அடைகிறான். 'ஜாமீன் ரத்தாகி இருப்பதனால் போலீஸ்வசம் ஒப்பிக்கவேண்டும்' என்று எப்படி நோட் எழுதிக் கொண்டுவந்திருக்கிறாய்?'' என்று கர்ஜித்தார்.

''நீங்க என்னமோ... அந்தச் சேஷப்பனிடம் சங்கதி சொல்லி அனுப்பினீர்களாம்... 'மறுபடியும் நோட்டீஸ் பிராது கொடுத்தவர்களுக்கு ஜாரி ஆகவில்லை. கேஸைத் தள்ளிப்போட்டிருக்கிறது'

என்று டயரி எழுதினால் எல்லாம் சரியாகிவிடும் என்று'' கோபால் ராவ் எதையோ நினைவூட்டுவதுபோல் மறைமுகமாக யோசனை சொன்னான்.

''இன்னும் மூன்றே நாள்களில் அஸிஸ்டென்ட் கலெக்டர் இங்கே முகாம் போடப்போகிறார். 'பிராது கொடுத்தவர்கள் ஆஜராகாதபோதும் புகாரைக் கிழித்தெறியவில்லை' என்று அந்தத் தாதா ஒரு விண்ணப்பம் கொடுத்தால் சரியான பூஜை நமக்குக் கிடைக்கும்! பொய்ப் பத்திரம் தாக்கல் செய்தால் உன் கதி என்ன ஆகும்? என்று பார்! சேஷப்பா சொன்னானாம்! இவன் பொய் டயரி எழுத யோசனை சொல்றானாம்! இருக்கட்டும் போ! 'கேஸ் ஃபைலைக் கிழித்தாகிவிட்டது' என்று ஷரா எழுதிக் கொண்டுவா. தாதாவுக்கு ஆள் அனுப்பியிருந்தேனே? அவன் ஏன் இன்னும் வரவில்லை?'' என்று கேட்டார் மாஜிஸ்திரேட்.

ஒரு நிமிஷத்துக்குள் முகபாவம் பலவிதமாக மாறி மறுபடியும் பழைய நிலைக்கு வந்தது.

'வெளியே குற்றவாளி ஆஜராகிவிட்டான், ராவ்ஸாப்!' என்று உஸ்மான் குரல் கொடுத்தான்.

'கிருஷ்ணராவ் எழுந்திருந்து வெளியேவந்து நின்று போலீஸ் காவலில் இருந்த தாதாவைப் பார்த்து, 'ஹாவனூர்க்காரர்களை அடித்த குற்றவாளி நீதானா?' என்று கேட்டார்.

'ஆமாங்க' என்று, தாதா, தலையை ஆட்டினான். மாஜிஸ்திரேட், 'இன்னிக்கிப் புகார் கொடுத்தவங்க ஆஜர் ஆகாததால் உன் கேஸ் தள்ளுபடி ஆயிடுத்து. நீ வீட்டுக்குப் போ' என்று விடுதலை உத்தரவு கொடுத்தார்.

தாதாவின் கண்களில் நன்றி பொங்கியது. என்ன செய்வது என்று புரியவில்லை. ஒரு கணம் பேசாமல் இருந்தான். பிறகு மாஜிஸ்திரேட்டுக்கு ராம்ராம் செய்துவிட்டு அங்கிருந்து நேராகப் பாளாச்சார் வீட்டுக்குப் புறப்பட்டான். வீட்டை நெருங்கியதும் அஞ்சல் மல்லப்பன் அவனைக் கண்டு, 'தம்பி ஒனக்காகக் கௌடர் வூட்டுலே ஆச்சாரையாவும் கணக்கப்பிள்ளையும் படுசண்டை போட்டுகிட்டிருக்காங்க. நீ சாவடீலேருந்து எப்படி இங்கே வந்தே?' என்று கேட்டான்.

'புகாரைக் கிழிச்சுப்போட்டுட்டு ராவ் சாஹேபே என்னை விடுதலை செய்துட்டாரு' என்று சொல்லிக்கொண்டே கௌடர் வீட்டை நோக்கி நடந்தான். அஞ்சல் மல்லப்பனும் அவன் பின்னே நடந்தான்.

இவன் போகும்போதே பாளாச்சார், சிலருடன் கௌடரின் வீட்டிலிருந்து வெளியே வந்தார். தாதா அவர் காலில் விழுந்து, 'உங்க புண்ணியத்தாலே விடுதலே ஆகி வந்துட்டேனுங்க' என்று சொன்னுன்.

ஆச்சாருக்கு மகிழ்ச்சி உண்டாயிற்ருே? துக்கம் உண்டாயிற்ருே? தெரியவில்லே. 'எல்லாம் ஸ்ரீ ஹரியின் இச்சை' என்று தொண்டை கம்மக் கூறினுர். அஞ்சல் மல்லப்பன் இச் செய்தியைத் தான் கண்டவர்களிடமெல்லாம் சொல்லிவிட்டான். காசீம் சாயபு, 'தாதாதான் வண்டியை ஓட்டப்போகிருன்' என்று உத்ஸாகத்துடன் சொன்னுன்.

'தாதா, வண்டியோடு கட்டாயம் போகவேண்டும்' என்று மேலும் தூண்டுகோல் போட்டான்.

இந்தச் செய்தி வேருெரு வகையான உருவம் பெற்றுக் கௌடர் வீட்டில் வேலே செய்தது. கணக்கப்பிள்ளே சேஷப்பா அப்பொழுதும் அங்கேயே இருந்தான். இந்தச் செய்தியைக் கேட்ட கௌடர் மனேவி, கண்களில் பயம் தோன்ற விரிந்த கண்களோடு, ''கணக்கப்பிள்ளே! இருநூறு ரூபா கோவிந்தா ஆயிடுச்சே! அது போகட்டும். 'இதுக்காகக் கட்சி கட்டிண்டு நின்னவ'ன்னு கெட்ட பேர் வேறே வந்திடுச்சே!'' என்று சொல்லிப் பெருமூச்சு விட்டாள். சேஷப்பாவும் மென்று விழுங்கிக் கொண்டே, 'பயப்படாதீங்க. மாஜிஸ்திரேட் இதற்குள் வேறு தந்திரம் செய்திருப்பார்' என்று சொன்னுன். பார்வதி அம்மாள் அவன் பக்கம் திரும்பியே பார்க்கவில்லே. தான் பெரிய குற்றம் செய்துவிட்டதாக அவளுக்குத் தோன்றியது. தலேயில் கை வைத்துக்கொண்டு கவலேயுடன் உட்கார்ந்துவிட்டாள்.

இருட்டிவிட்டது. வேலேயாள் வந்து விளக்கேற்றியதும் ஒளி பரவியது. பார்வதியம்மாள் விளக்குக்குக் கை குவித்து 'சேஷப்பாவையும் வணங்கவேண்டும்' என்று திரும்பினுள். அவன் அங்கே இல்லே. வெகு நேரத்துக்கு முன்பே அங்கிருந்து நழுவிவிட்டான். பார்வதிக்குத் திடீரென்று உடம்பு, மனம் எல்லாம் சோர்ந்துபோனதால் எழுந்திருக்கக்கூட முடியவில்லே. என்றும் கண்டிராத தோல்வி அவளேச் செயலற்றவள் ஆக்கி விட்டது. தான் ஒரு பெண்பிள்ளே. 'இந்த வம்புக்கெல்லாம் போயிருக்கக்கூடாது' என்று வருந்தினுள். சங்கரப்ப கௌடர் இறந்தபின் 'மணியக்காரரின் மனேவி' என்ற ஹோதாவில் 'தன் குடும்ப கௌரவத்தைக் காக்கவேண்டும்' என்ற நல்ல எண்ணமே தன்னே இந்தத் துக்கத்துக்கு ஆளாக்கியது. 'மேலே என்ன செய்வது?' என்ற கேள்வி அவள் மனத்தில் எழுந்தது.

இனிமேலும் சேஷப்பாவின் யோசனைப்படி நடப்பது முடியாது. பாளாச்சாரின் பேச்சுப்படி நடக்க முகம் இல்லை. தன் ஊரிலேயே தனக்கு ஆதரவானவர்கள் இல்லை. தன் உயிரைவிட அதிகமாகக் கௌடருடைய வீட்டையும் நிலங்களையும் பாதுகாத்துவந்த தாதாவையும் இழந்தாகிவிட்டது.

பார்வதிக்குப் பயம் பிடித்துக்கொண்டது. இதுவரையிலும் தன்னம்பிக்கை, தைரியத்தை ஊட்டிவந்தது. ஒரு கணத்தில் அந்தத் தன்னம்பிக்கை மறைந்துபோய்விட்டது. அவளுடைய நிலைமை, பாதள்ளி முழுதுமே கை நீட்டிக் குற்றம் சாட்டும் அளவுக்கு வந்துவிட்டது. இனிமேல் யாரை நம்புவது? யாரைக் கேட்டு வாழ்க்கை நடத்துவது? திடீரென்று அவளும் குழந்தைகளும் அநாதைகள் ஆகிவிட்டார்கள் அல்லவா? வீடு கொள்ளாமல் மாடும் கன்றும் ஆளும் அம்பும் ஊரைச் சுற்றி இருக்கும் நிலங்களும் கௌரவத்தைக் காப்பாற்ற முடியவில்லை.

பார்வதிக்குத் திடீர் என்று தன் அண்ணனின் நினைவு வந்தது. 'தன் மகளைப் பிள்ளைக்குக் கல்யாணம் செய்துகொள்ளச் சங்கரப்ப கௌடர் சம்மதிக்கவில்லை' என்று குருலிங்கப்பா கோபித்துக்கொண்டு போனவன் திரும்பக் கௌடர் வீட்டு வாசற்படி ஏறவில்லை. இப்பொழுது அவனிடமே அடைக்கலம் புகவேண்டும். கௌடர் இறந்தபோதுகூடத் தன்னை விசாரிக்க வராத அண்ணன் காலைப் பிடிக்க மனம் தயங்கியது. ஆனால் அதைத் தவிர வேறு வழி இல்லை. இதே கவலையால் பார்வதி அன்றிரவெல்லாம் தூங்கவில்லை.

அன்றிரவு தூங்காமல் புரண்ட மற்றொரு பெண் மகள் ருக்மணிபாய். அவள் அன்றைக்குச் சாயங்காலம் மாஜிஸ்திரேட்டிடம் 'பாளாச்சாரை வரவழைத்துக் கங்கா சமாராதனை செய்யவேண்டும்' என்று கேட்டுக்கொண்டிருந்தாள். ருக்மணிபாய் தம் வார்த்தையை நிறைவேற்றிக் கொடுக்கவேண்டும் என்று பாளாச்சாரை வற்புறுத்தினாள். அது பாளாச்சாருக்குத் தர்ம சங்கடமாக இருந்தது. புஷ்கர ஸ்நானத்தில் சங்கல்பம் சொல்வதையும் தீர்த்த சிராத்தம் செய்து வைப்பதையும் விட்டுவிட்டதாகக் கங்கையைத் தொட்டுச் சபதம் செய்திருந்தார். 'இந்த விஷயத்துக்கு மட்டும் என்னை வற்புறுத்தாதீர்கள். நாராயணன்தான் செய்யணும். அவனிடமே ஒப்பித்துவிடுங்கள்' என்று வேறு வழியில்லாமல் அவர் சொன்னார். ருக்மணிபாய்க்கு அடக்க முடியாமல் கோபம் வந்தது. 'தாதாவை விடுதலை செய்தது தப்பாகிவிட்டது, போங்கள்' என்று வெடுக்கென்று பதில் சொன்னாள்.

பாளாச்சாரின் செயல் இந்த இரண்டு பேருக்கும் (பார்வதிக்கும் ருக்மணிபாய்க்கும்) வேறு வேறு வகையில் துன்பத்தைக் கொடுத்தது. பார்வதி அழுதுகொண்டே இரவைக் கழித்தாள். தன் கௌரவம் குறைந்துவிட்டது என்று ருக்மணி பாய் தூக்கமில்லாமல் புரண்டாள்.

## 31

மறுநாள் பொழுது விடிந்ததும் மாஜிஸ்திரேட் கோபால் ராவைக் கூப்பிட்டனுப்பினர். அஸிஸ்டென்ட் கலெக்டரிடம் இருந்து வந்த கடிதத்தை அவனிடம் காட்டிப் பாதள்ளிக்கு மகாராஜா வரப்போவதால் அவரை வரவேற்க ஏற்பாடுகள் செய்யும்படி சேஷப்பாவிடம் தெரிவிக்கச் சொன்னர். கோபால் ராவுக்கு அந்தச் செய்தி இடிவிழுந்ததுபோல் ஆயிற்று. ஊர் ஊராகப் படையெடுத்து ஊரார் செய்யும் சப்ளையால் சுகபோகம் பெறும் ரெவின்யூ இலாக்காவினர் இப்பொழுது வேறு ஒரு வருக்குச் சப்ளை செய்யவேண்டும் என்பது எவ்வளவு அவமானம்! ஆனல் மாஜிஸ்திரேட்டை எதிர்த்துப் பேச முடியாது. அவர் மட்டும் என்ன செய்வார்? அஸிஸ்டென்ட் கலெக்டரே மகாராஜா வுக்குச் சேவை செய்ய வரிந்து கட்டிக்கொண்டிருக்கும்போது மற்றவர்களும் செய்யத்தானே வேண்டும்? தலை அசைந்தால் வாலும் அசைய வேண்டும் என்பது அதிகாரத்தின் நியமங்களுள் ஒன்று.

கோபால்ராவ், சேஷப்பாவிடம் இந்தச் செய்தியைச் சொல்லிவிட்டுக் கிண்டலாகப் பேசினன். 'நாமெல்லாம் இனி மேல் பென்ஷன் வாங்கிக்கொண்டுவிடவேண்டும் அப்பா! இன்னும் வேலை செய்வதில் அர்த்தம் இல்லை. அந்த மகாராஜா வுக்கு நூறு நம்பராவது இருக்கிறதோ இல்லையோ? நம்ம அஸிஸ்டென்ட் கலெக்டர் ஏன் அவன் காலைப் பிடிக்கவேண்டும்? என்ன அதிர்ஷ்டம் அப்பா!' என்று கோபால் ராவ் முடிவில்லாமல் கேலிசெய்துகொண்டே இருந்தான்.

சேஷப்பாவுக்கு இதனல் திருப்தியே உண்டாயிற்று. நேற்றைய விவகாரம் தோல்வியைக் கொடுத்தது. தவிர மாஜிஸ்திரேட்டுக்கு அவனிடம் வெகுவாக மதிப்புக் குறைந்து விட்டது. இன்று சப்ளை செய்யும் பரபரப்பில் அவர் தன்னைச் சரணகதி அடையாமல் வேறு வழி இல்லை. அப்போது 'பழைய

தோல்விகளை எல்லாம் சரிப்படுத்திக் கொள்ளவேண்டும்' என்று அவன் தீர்மானம் செய்துகொண்டான். அஸிஸ்டென்ட் கலெக்டரின் வரவைக் கேட்டு அவனுக்கு வேறு பல ஆசைகள் தோன்றின. சாமராவின் நியமனம் நடக்காமல் பார்த்துக்கொள்வது அவற்றுள் முக்கியமான ஒன்று.

மகாராஜா வரப்போகிறார் என்னும் செய்தி, சாமராவின் மூலமாகப் பாளாச்சாருக்கும் ஜாகீர்க் குடியானவர்களுக்கும் தெரிந்தது. ஜாகீர் மாளிகைக்குப் பக்கத்திலேயே அழகிய பந்தல் போடவேண்டும் என்று முடிவு செய்தார்கள். ஹாவனூர் மணியக்காரர், இருபது கூடாரங்களைச் சாயங்காலத்துக்குள் அனுப்புவதாகச் சொல்லி அனுப்பியிருந்தார். ஜாகீர் மாளிகையின் தர்பார் ஹாலில் அரங்க மேடை ஏற்பாடு செய்யவேண்டும் என்று திட்டமிட்டார்கள். ஜாகீர் விவசாயிகளுள் சிலர், அப்பொழுதே வண்டிகளை ஓட்டிக்கொண்டு அக்கம் பக்கத்துக் கிராமங்களுக்கு மூங்கில் தட்டிகளைக் கொண்டுவரப் போயிருந்தார்கள். மகாராஜாவின் நண்பரான யசவந்தராவ் அஜராணியிலிருந்து வருவதாக இருந்தது. பந்தல் அமைக்கும் ஏற்பாடெல்லாம் அவர் மேற்பார்வையிலேயே நடக்கவேண்டியிருந்தது. பாதள்ளியின் விருந்துபசாரம் செய்யும் ஆசைக்குத் திடீரென்று ஒரு நல்ல சந்தர்ப்பம் வாய்த்தது.

தம் கடமை என்ற முறையில் மாஜிஸ்திரேட் மாளிகைக் பக்கம் போய் ஏற்பாடுகளை எல்லாம் கவனித்தார். அங்கேதான் அவர் பாளாச்சாரைச் சந்தித்தார். இவரைப் போலவே பாளாச்சாரும் வேலைகளைப் பார்வையிட வந்தவர்தான். அவர் மாஜிஸ்திரேட்டிடம் ஏற்பாடுகளைப்பற்றி விவரித்தார். சில விஷயங்களில் இருவருக்கும் அபிப்பிராய பேதம் வந்தது. மாஜிஸ்திரேட்டுக்கு உள்ளூரக் கோபம் கனிந்துகொண்டே இருந்தது. அந்தக் கோபம் அதிகமாவதற்கு இன்னொரு நிகழ்ச்சியும் காரணம் ஆயிற்று.

ருக்மணிபாய் இன்னும் பிடித்த பிடியை விடவில்லை. பாளாச்சார்தான் தங்களுக்குச் சங்கல்பம் சொல்லவேண்டும் என்று மறுபடியும் வற்புறுத்தினாள்.

'அவன் எங்கேயடி சங்கல்பம் சொல்லிவைக்கப்போகிறான். இப்பொழுது மகாராஜாவை வரவேற்கும் முடிவில் இருக்கிறான்' என்று மாஜிஸ்திரேட் சொல்லியும் கேட்கவில்லை. உஸ்மான் மறுபடியும் ஆச்சாரைக் கூப்பிட அனுப்பினார்கள். அவர் வந்தவுடன் மாஜிஸ்திரேட் கடுகடுத்த முகத்துடனேயே, 'சங்கல்பம் சொல்லி வைக்கவேண்டும்' என்று மற்றொரு முறை கேட்டுக்

கொண்டார். ஆச்சார் பழைய பதிலையேதான் சொன்னார். 'அதென்ன சபதம் அது! நாங்க இவ்வளவு தூரம் கூப்பிடறது பெரிசா! நீங்க வருவது பெரிசா? சுத்தமான மனசோடே உள்ளதைச் சொல்லிடுங்கோ. எங்களுக்குச் சங்கல்பம் சொல்ல மனசில்லை என்று சொல்லிவிடுங்களேன்' என்று ருக்மணிபாய் நிஷ்டூரமாகப் பேசினாள்.

ஆச்சார் சற்று நேரம் கவலைக்கு உள்ளானார். 'ஏதோ ஒரு மனநிலையில் குழம்பிச் செய்த சபதம், தம்மை இவ்வளவு தூரம் சோதனைக்கு உள்ளாக்கும்' என்று அவர் நினைக்கவில்லை. சமீபத்தில் நடந்த நிகழ்ச்சிகள் அவருடைய மன உறுதியை வேரோடு அசைத்துப் பார்த்தன. அதன் பயனாக ஒரு வகையான வெறுப்பு அவரைச் சூழ்ந்துகொண்டது.

'நான் நேற்றே சொல்லவில்லையா, சுவாமி! சபதத்தைக் கைவிட எனக்கு இஷ்டம் இல்லை. நாராயணனிடம்தான் நீங்கள் சங்கல்பம் செய்துகொள்ளவேண்டும். இதனால் கோபித்துக் கொள்ளாதீர்கள்' என்று சொன்னார்.

மாஜிஸ்திரேட்டின் கௌரவம் பங்கமடைந்தது. மனம் கொதித்தது. ''அது சரி, ஆச்சார்! 'எங்களுக்குத்தான் நீங்க சங்கல்பம் சொல்லக்கூடாது' என்று பிடிவாதம் பிடிக்கிறீர்கள் என்று தோன்றுகிறது. இந்துபுரத்து ராஜ புரோகிதர் அல்லவா, நீங்கள்? நாளைக்கு மகாராஜா வந்து சங்கல்பம் சொல்லச் சொன்னால் என்ன செய்வீர்கள்?''

'வேறு வழி இல்லை. அவருக்கும் இதே பதிலைத்தான் சொல்லவேண்டியிருக்கும்' என்று ஆச்சார் அடக்கமாகவே பதில் சொன்னார்.

'இது நிஜந்தானா? நீங்கள் கேட்டுக்கொண்டபடி தாதாவை விடுதலை செய்திருக்கிறோம். நீங்கள் சபதத்தின்படி நடந்து கொண்டால்...... தாதாவை எப்படிக் காப்பாற்றுவீர்களோ பார்த்துவிடுகிறேன்' என்று எதிர்பாராமல் அதிகாரத்தோடு முழங்கினார் மாஜிஸ்திரேட்.

பாளாச்சார் ஒன்றும் பதில் சொல்லவில்லை. ஆனால் உள்ளூர மறுகினார். தம்முடைய சபதத்துக்கும், மாஜிஸ்திரேட்டின் கோபத்துக்கும், தாதாவின் விடுதலைக்கும் என்ன சம்பந்தம்! விடுவிக்க விடுவிக்கச் சிக்கல் ஆவதுதான் வாழ்க்கையின் ரகசியமோ? நடப்பது நடக்கட்டும். 'சரி' என்றே சொல்லியிருக்க வேண்டும். ஆனால் இந்தத் திடம் இல்லாவிட்டால் வாழ்க்கையை எதிர்க்கவே முடியாது. உறுதி இல்லாத எவனும் வாழ்க்கைக்

கத்தியை உருவி வெற்றி பெறவில்லை! ஆனாலும் மனத்தில் ஒரு புறத்தில் ஒரு குடைச்சல் இருந்துகொண்டே இருக்கிறது. உயிரோடு வாழ்வதற்குத் துன்பங்களாகிய அபராதத்தைச் செலுத்தத்தான் வேண்டுமோ? ஆச்சாருக்கு இளமை முதலே துன்பந்தான் நண்பனாக இருக்கிறது. அதனுடனேயே நட்பை வளர்த்துக்கொண்டு கவலையற்று இருக்கலாம். ஆனால் துன்பத்தின் முகம் கணத்துக்கு ஒரு முறை மாறுதல் அடைகிறது.

கவலைகள் ஒன்றன்பின் ஒன்றாகப் படையெடுத்தன. ஆச்சாருடைய நடை தடுமாறவில்லை. முகத் தோற்றத்தில் எந்த மாறுதலும் இல்லை. மேல்பார்வைக்கு அமைதியாகத்தான் இருந்தார். ஆனால் துன்பம் உள்ளூர நெஞ்சைக் குடைந்து கொண்டிருந்தது. மெதுவாக நடந்து வீட்டை அடைந்தார். ஆச்சாரின் மனைவி ஆற்றுக்குப்போய் ஸ்நானம் செய்துவிட்டு மடியாகத் தண்ணீர் எடுத்துக்கொண்டு அப்பொழுதுதான் வீட்டுக்கு வந்திருந்தாள். ஆச்சார் ஒன்றும் பேசவில்லை. அவர் பேசவேண்டும் என்று அவர் மனைவியும் விரும்பவில்லை. 'நீனு யாக்கோ? நின்ன ஹங்கு யாக்கோ? நின்ன நாமத பல ஒந்தித்தர சாக்கோ' (நீ எதற்கு? உன் ஆடம்பரம் எதற்கு? உன் பெயரின் பலம் ஒன்று மட்டும் இருந்தால் போதும்) என்னும் புரந்தரதாசருடைய பதத்தைப் பாடியவண்ணம் சமையல் செய்யத் தொடங்கினாள். அந்தக் குரல், பாட்டு, அந்தப் பரவசம், பாட்டின் பின்னணியில் அடங்கிய உள்ளத்தின் நம்பிக்கை இவையெல்லாம் அளவற்ற கருணை மழையாகப் பெருகிவந்து ஆச்சாருடைய நொந்த மனத்துக்குக் குளிர்ச்சியைக் கொடுத்தன. மறுபடியும் உத்ஸாகம் பெற்றார். தோளில் துண்டைப் போட்டுக்கொண்டு ஸ்நானத்துக்காக நதியை நோக்கி நடந்தார்.

இந்துபுரத்து மகாராஜா சனிக்கிழமை பாதள்ளிக்கு வருவதாக இருந்தது. அதற்குள் திருவிழாவுக்கு வருவதுபோல் அக்கம் பக்கத்து ஊரில் இருந்து பாதள்ளிக்கு ஜனங்கள் வரத் தொடங்கிவிட்டனர். ஒவ்வொரு வீட்டிலும் நண்பர்களும் சுற்றத்தார்களும் நிறைந்துவிட்டனர். சொந்தக்காரர் அல்லாத யாத்திரிகர்கள் கோயில்களிலும் பாழ் மண்டபங்களிலும் தங்கினார்கள். மகாராஜா ஜனங்களுக்காக அனுப்பிய தானிய வண்டிகள் ஒவ்வொன்றாக வந்து சுற்றுப்புறத்து ஊர்களுக்கெல்லாம் மகாராஜா வரும் செய்தியைப் பரப்பின. பாதள்ளி மக்களின் வாழ்க்கை புத்துயிர் பெற்றது. மகாராஜாவைத் தரிசிப்பதில் உத்ஸாகம் கொண்டிருந்தார்கள். பாதள்ளியின் பொதுவாழ்வில் மறக்கமுடியாத இதுபோன்ற வரலாற்று

நிகழ்ச்சி எதுவும் சமீபத்தில் நடக்கவே இல்லை. ஒவ்வொரு வீட்டாரும் மகாராஜாவை எதிர்கொண்டு வரவேற்க ஏற்பாடுகள் செய்துகொண்டிருந்தனர்.

இந்துபுரத்திலிருந்து மகாராஜா வரும்போது கிருஷ்ணு நதியைத் தாண்டித்தான் பாதள்ளிக்கு வரவேண்டும். ஆற்றில் வெள்ளம் வந்திருந்ததால் ஜாக்கிரதையாக அவரை இக்கரை கொண்டுவந்து சேர்க்கும் பொறுப்பு, படகுத்துறைக்காரர்களைச் சார்ந்திருந்தது. அதனால் சனிக்கிழமையன்று காலையில் அவர்கள் அழகாக உடை அணிந்திருந்தார்கள். வண்ணவண்ணமான புதிய ஆடைகளை அணிந்து நெற்றியில் கோபி சந்தனம் இட்டு விடியற்காலையிலிருந்தே ஆற்றங்கரையைச் சுற்றிச் சுற்றி வந்தார்கள். அவர்களுடைய கூப்பாடு, தடபுடல், உத்ஸாகம், பரபரப்பு எல்லாவற்றையும் பார்த்தவர்களுக்கு அவர்கள் தினந் தோறும் பாதள்ளியில் நடமாடும் படகுத்துறைக்காரர்களாகத் தோன்றாமல், வேற்று உலகில் இருந்து இறங்கிவந்தவர்கள்போல் காணப்பட்டார்கள்.

அரண்மனைக் காரியக்காரன் சாமராவ், மணியக்கார யசவந்தராவ், தாதா ஆகியோர் படகில் ஏறி உட்கார்ந்து முன்பாகவே அக்கரைக்குப் போய் மகாராஜாவின் வருகையை எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருந்தார்கள். மகாராஜாவை ஏற்றிக்கொள்ளும் படகு, அலங்காரத்துடன் கரையோரத்தில் புதுமணப் பெண்ணைப்போல் ஆவலுடன் மகாராஜாவின் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தது. ஆற்றங்கரை முழுவதும் ஜன சந்தடியால் ஒரே கோலாகலமாக இருந்தது.

அஸிஸ்டென்ட் கலெக்டர் அன்று காலையிலேயே வந்து விட்டார். அவருடைய வசதியைக் கவனிப்பதில் ஈடுபட்டிருந்த தால் மாஜிஸ்திரேட் இந்தக் குழுவினருடன் வரமுடியவில்லை. மகாராஜா படகேறிப் பாதள்ளிக் கரைக்கு வந்தபோது, அஸிஸ்டென்ட் கலெக்டர், மாஜிஸ்திரேட், சேஷப்பா முதலிய வர்கள் அவரை வரவேற்கக் கரையில் நிற்கவேண்டும் என்று ஏற்பாடாகி இருந்தது.

எங்கே பார்த்தாலும் எல்லோரும் எதிர்பார்த்துக்கொண் டிருந்தார்கள். அப்பொழுது உயர்ந்த காட்டேவாடிக் குதிரை களில் இருந்து எட்டு வீரர்கள் ஆற்றங்கரையில் இறங்கினார்கள். அங்கே இருந்த ஜனங்கள் எல்லோரும் 'மகாராஜாவே வந்துவிட்டார்' என்று நினைத்துப் பரபரப்புடன் எதிர்கொள்ள ஓடிவந்து ஏமாந்தார்கள். 'இன்னும் அரைமணி நேரத்துக்குள் மகாராஜா வந்துவிடுவார்' என்ற செய்தி தெரிந்தது.

தூரத்தில் இருந்தே குதிரையில் ஆட்கள் வருவதைக் கண்ட பாதள்ளி மக்கள், மகாராஜாவைக் 'கண்குளிரப் பார்க்க வேண்டும்' என்று கூட்டம் கூட்டமாகப் புறப்பட்டார்கள். வழக்கமாகப் படகு வந்து நிற்கும் துறையை விட்டுவிட்டுச் சேறு இல்லாத உப்பளத்துக்குப் பக்கமாக மகாராஜாவை இறக்க ஏற்பாடு செய்திருந்தார்கள். ராஜ்யத்தின் அதிகாரிகளும் மற்ற உத்தியோகஸ்தர்களும் அங்கேயே குழுமியிருந்தார்கள். மற்றவர்களுக்கு இந்த விஷயம் தெரியாததால் அவர்கள் எல்லோரும் வழக்கமாகப் படகு வரும் துறைக்கு அவசரமாக ஓடினார்கள்.

மகாராஜாவின் குதிரை வண்டி அக்கரையில் வந்து நின்றது. தம்மை வரவேற்கக்கூடிய ஜனங்களைக் கண்டு அவர் செய்த புன்னகை வெகு தூரத்தில் இருந்தவர்களுக்கும் தெரிந்தது. எதிர்பார்க்கும் ஆவலின் வேகத்தால் கண்கள் எல்லாவற்றையும் காணும் திறமை பெற்றிருந்தன. மகாராஜா, வரவேற்பை ஏற்றுக்கொண்டு படகை நெருங்கினார். பெரிய மனிதர்களைத் தோளில் சுமந்து கொண்டுவந்து ஏற்றுவது அங்கே பழக்கத்தில் இருந்தது. படகுத்துறை ஆட்கள் அவரைச் சுமக்க முன் வந்தார்கள். ஆனால் மகாராஜா அதற்கு ஒப்பவில்லை. படகு ஏறுவதற்காகப் போட்டிருக்கும் பலகைமேல் நடந்துவந்து படகில் ஏறி நின்றார்.

நதியின் பரப்பு அவ்வளவு அதிகமாக இல்லாததால் படகோட்டிகள் துடுப்புப் போடவேண்டிய அவசியம் இருக்கவில்லை. போதிய அளவு புதுத்தண்ணீர் வந்திருந்தது. இழுப்பும் இருந்தது. படகோட்டிகள் சும்மா நின்றிருந்தாலும் படகு அலைகளின்மேல் அசைந்து ஆடிக்கொண்டு வெள்ளத்தோடு மிதந்து சென்றது. காற்றும் வாட்டமாக வீசி வெள்ளத்தின் வேகத்தை அதிகரிக்கச் செய்தது. படகு உப்பளத்தின் ஓரமாகச் சென்றது. மகாராஜாவைக் காண்பதற்காகப் படகுத்துறையில் காத்திருந்த ஜனங்களுக்கு இது ஏமாற்றமாக இருந்தது.

படகு உப்பளத்துக்கு அருகே வந்தவுடன் படகோட்டி பரமன், தன்னுடைய சமயோசித புத்தியையும் கை லாகவத்தையும் உபயோகித்து வெள்ளத்தின் இழுப்பில் சிக்கிய படகைச் சர்ரென்று கரைக்குத் திருப்பினான். கரையில் இருந்தவர்களுடைய ஜயகோஷம் அலைகளோடு போட்டியிட்டது. தாரை ஊதுபவன் விடாமல் ஊதி, மகாராஜாவின் வரவைப் பத்துத் திசைகளுக்கும் எட்டவிட்டான். மேளமும் பாண்டும் முழங்கின. அஸிஸ்டென்ட் கலெக்டர், கைக்குட்டையை வீசி மகாராஜாவை வரவேற்றார்.

உப்பளத்தை ஒட்டிய நிலப்பகுதி ஈரம் இல்லாமல் இருக்கும் என்று படகை அங்கே ஒதுக்கினார்கள். ஆனால் வெள்ளம் பரவியதால் அங்கும் சேறாகவே இருந்தது. 'மகாராஜாவை எங்கே இறக்குவது?' என்று எல்லோருக்கும் கவலை உண்டாயிற்று. படகோட்டி பசப்பா, முன்வந்து 'மகாராஜாவைத் தோளில் தூக்கிக்கொண்டு போகலாம்' என்று காரியக்காரரிடம் சொன்னான். ஆனால் மகாராஜா அதற்கு ஒப்பவில்லை. குதிரை வீரர்கள் ஏறியிருந்த குதிரைகளுள் ஒன்றைக் கொண்டுவரும்படி அவரே உத்தரவு இட்டதும் எல்லோருக்கும் கவலை நீங்கியது.

உடனே ஒரு குதிரையைத் தட்டிக்கொடுத்து ஜேணம் போட்டுப் படகுக்கு அருகே கொண்டுவந்தார்கள். மகாராஜா, படகிலிருந்து இறங்கி அதன்மேல் ஏறிக்கொண்டார். குதிரை இரண்டடி முன் சென்றிருக்கவேண்டும். அதற்குள் வெள்ளத்தில் மிதந்துவந்த முள்புதர் ஒன்று அதன் கால்களில் மாட்டிக் கொண்டது. குதிரை மிரண்டு, திசை தெரியாமல் முழங்காலைத் தூக்கிக்கொண்டு நின்றது. மகாராஜா திடுக்கிட்டு லகானை இழுத்துப் பிடித்தார். வெள்ளத்தின் இழுப்பு, ஜனங்கள் போடும் கூச்சல், தாரையின் முழக்கம் இவைகளால் மிகவும் பயந்த குதிரை, வெள்ளத்தில் பாய்ந்தது. மகாராஜாவிலிருந்து எல்லோருமே திகைத்தார்கள்.

அப்போது தாதா, படகிலிருந்து மகாராஜாவின் சாமான் களைப் படகிலிருந்து இறக்கிக்கொண்டிருந்தான். அவருடைய குதிரை தறிகெட்டுத் திரும்பியதை அவன் பார்த்தான். 'ஜிங்' என்று படகிலிருந்து குதித்துக் குதிரைக்கு முன் வந்து நின்று கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டான். குதிரை வெள்ளத்தில் குதித்துவிட்டதால் நிற்கமுடியாமல் நீந்தும் நிலையில் இருந்தது. தாதா நீந்தும் நிலையிலேயே அதைப் பிடித்துக்கொண்டு கரைக்குத் திருப்பினான். மகாராஜாவும் குதிரை ஏற்றத்தில் தேர்ந்தவர் ஆதலால் நீந்தும் குதிரையை விட்டு நகரவில்லை. எப்படியோ தாதாவின் சமயோசித புத்தியால் குதிரை கரையேறியது. 'மகாராஜா, பெரிய ஆபத்து ஒன்றிலிருந்து தப்பினார்' என்று ஜனங்கள், தாதாவைப் பாராட்டினார்கள்.

படகிலேயே இக்கரைக்கு வந்த குதிரை வண்டியை மறுபடியும் மகாராஜாவிடம் கொண்டுவந்தார்கள். மகாராஜா அதில் ஏற மறுத்துவிட்டார். 'கால் நடையாகவே தம் முன்னோர் மாளிகையை அடையவேண்டும்' என்று அவர் ஆசைப் பட்டார். 'ராஜ்ய வைபவங்களுடன் மகாராஜாவை அழைத்து வரவேண்டும்' என்று இருந்த பாதாள்ளி மகா ஜனங்களுக்கு இது சற்று வருத்தத்தைக் கொடுத்தது. மகாராஜாவின் கூடவே

அஸிஸ்டென்ட் கலெக்டர், மாஜிஸ்திரேட், பாளாச்சார் ஆகியோர் நடந்து சென்றார்கள். போகும்போது வழியில் ஏதோ நினைத்துக்கொண்ட வராக மகாராஜா, தம் கூடவே வந்த பாளாச்சாரிடம் 'நம் குதிரையின் லகானைப் பற்றிக் காப்பாற்றிய அந்தப் பையன் யார்?' என்று கேட்டார்.

''அவனா? அவன் உங்கள் சிலேதார், மகாராஜா! அவனுக்கு வைத்த பேர் பீமசேனன் ஆனால் தாலிம்கானாவைச் சேர்ந்தவர்கள் அவனைக் 'தாதா' என்று கூப்பிடுகிறார்கள். அதுவே அவன் பெயராக நிலைத்துவிட்டது'' என்றார் பாளாச்சார்.

'அவன் குஸ்திபோடுவானா என்ன?' என்று மறுபடியும் கேள்வி வந்தது.

'ஆம், இந்தப் பகுதியிலேயே அவன் ஒரு சிறந்த மல்லன், மகாராஜா!' என்றார் ஆச்சார்

'அப்படியானால் பாகள்ளியிலும் ஒரு ரத்னம் இருக்கிறது' என்று சொல்லுங்கள்! என்று திருப்தியாகச் சிரித்துக்கொண்டே சொன்னார். அப்பொழுது அவர்கள் கோட்டை அகழிக்குப் பக்கத்தில் வந்திருந்தார்கள். நிறைகுடங்களைச் சுமந்து நின்ற சுமங்கலிகள், மகாராஜாவின் பாதங்களுக்கு அபிஷேகம் செய்து அகழியையே தண்ணீரால் நிரப்பிவிட்டார்கள். முதல் முதலில் மகாராஜாவுக்கு இந்த வரவேற்புப் பிடிக்கவில்லை. ஆனால் ஊர்ப் பெண்கள் எல்லோரும் வந்து ஒவ்வொருவராகக் குங்குமம் இட்டு ஆரத்தி எடுத்தபோது மட்டும் அவர் உள்ளத்தில் ஏதோ ஓர் உணர்ச்சி அலைபொங்கிவந்து கண்களைப் பனிக்க வைத்தது.

கோபாலகிருஷ்ணன் கோயில் வழியாக வரும்போது சுவாமி தரிசனத்துக்கு உள்ளே போகவேண்டியிருந்தது. பத்து ரூபாய் காணிக்கை கொடுத்துவிட்டு மகாராஜா திரும்பினார். தீர்த்தக் கரைச் சிரார்த்தத்துக்கு என்று ஜனங்களை அழைத்துக்கொண்டு நதிக்குப் போயிருந்த நாராயணாச்சாருக்கு இதைக் கேட்டதும் ஆத்திரமாக வந்தது. 'கோவில் அர்ச்சகனாகிய தான் கோயிலில் இருந்திருந்தால் தனக்கும் பத்து ரூபாய் தட்சிணை கிடைத்திருக்குமே' என்று ஏங்கினான். அதிலும் அதிகமான சங்கடம் என்னவென்றால் அவன் இல்லாதபோது கோயிலில் பாளாச்சார் இருந்தார் என்பதுதான். பிறகு பல நாட்கள் வரையில் அவன் இதையே நினைத்து நினைத்து மறுகினான்.

மகாராஜா அங்கிருந்து மாளிகையை ஒட்டிய விசாலமான மைதானத்துக்கு வந்தார். அங்கிருந்தபடியே பள்ளிக்கூடம், சாவடி முதலியவற்றைப் பார்க்கலாம். பள்ளிக்கூடத்தில் கட்டி

யிருந்த திரைகளைப் பார்த்து மகாராஜா, 'அவை என்ன?' என்று கேட்டார்.

'மாஜிஸ்திரேட் ஊரில் தங்கியிருக்கிறார் மகாராஜா!' என்று பாளாச்சார் குறிப்பாகப் பதில் சொன்னார்.

'மாஜிஸ்திரேட் பள்ளிக்கூடத்தில் இறங்கினால் படிக்கும் சிறுவர்கள் எங்கே போவார்கள்?' என்று மகாராஜா சிரித்துக் கொண்டு, சகஜமாகக் கேலி செய்தார். ஆனால் அதைக் கேட்டுக் கொண்டு பக்கத்தில் வந்துகொண்டிருந்த மாஜிஸ்திரேட்டின் முகம் அடையாளம் தெரியாமல் கறுத்துவிட்டது.

மாஜிஸ்திரேட்டின் மனைவி ருக்மிணிபாய், பள்ளிக்கூடத்து ஜன்னல் வழியாக மகாராஜாவைப் பார்த்துக்கொண்டு நின்று கொண்டிருந்தாள். சரிகை போட்ட பட்டுக்கரைத் தலைப்பாகை, வெள்ளையான நீண்ட அங்கி, காலில் ஜரிகை வேலைப்பாடு செய்த சடா, ஆஜானுபாகுவான தோற்றம் இவற்றையெல்லாம் பார்த்து, அவள், 'இதனால்தான் இவர் ராஜாவாக இருக்கிறார்' என்று நினைத்துக்கொண்டாள். ஆனால் பக்கத்தில் வந்து கொண்டிருந்த தன் கணவர் மட்டும் களையிழந்து தோன்றுவதைக் கண்டாள். எந்த அம்சத்திலும் மாஜிஸ்திரேட்டின் கம்பீரமே அவரிடம் காணப்படவில்லை. கூட்டத்தில் அநாமதேயப் பேர்வழிபோல் தன் கணவர் நின்றிருந்ததைக் கண்டு அவளுக்கு வருத்தமாக இருந்தது. 'மகாராணியும் வந்தால் தனக்கு அவளை அறிமுகப்படுத்துவதாக ஜம்பம் பேசியவர், ஊர்பேர் இல்லாத விருந்தாளியைப் போல் முகம் வாடி நிற்பதேன்?' என்று நினைத்தாள்.

அஸிஸ்டென்ட் கலெக்டர் மகாராஜாவை மாளிகை வரையில் கொண்டுவந்து விட்டுவிட்டு விடைபெற்றுக்கொண்டு காம்ப்புக்குப் போனார்.

சேஷப்பாவும் அங்கேயே காம்ப் போட்டிருந்தான். இன்று அவனுக்கு அஸிஸ்டென்ட் கலெக்டரின் கேம்ப் கிளார்க்கோடு விருந்து இருந்தது. சிரஸ்தேதார் ஜக்கப்பா, விசாரணை கிளார்க்காக இருந்தபோது சேஷப்பாவுக்கும் அவருக்கும் நல்ல நட்பு ஏற்பட்டிருந்தது. பக்கத்து ஊர்களில் எங்கே காம்ப் வந்தாலும் சேஷப்பாவுக்கு அழைப்பு வரும். இப்பொழுது சேஷப்பாவே சப்ளையை ஏற்றுக்கொண்டிருக்கும்போது அவன் இல்லாமல் நடக்குமா?

சேஷப்பா அவசரமாக ஜக்கப்பாவைச் சந்தித்தான். அவர் சாப்பாட்டுக் கெடுபிடியில் இருந்தாலும் விடவில்லை. 'மணியக் காரர் வாரிசு விசாரணையை இந்தக் கேம்பிலேயே முடித்துவிட

வேண்டும்' என்பது அவன் திட்டம். சமையல்காரச் சுப்பராயர் மிகவும் அவசரப்படுத்தியதால், ஜக்கப்பா, ஒன்றும் பதில் சொல்லாமல் சாப்பிடப் போனார்.

சாப்பாட்டை முடித்துக்கொண்டு ரிக்கார்டுகளைக் கொண்டு வரும்படி தவாலியிடம் சொல்லிவிட்டு ஜக்கப்பா திண்டில் சாய்ந்துகொண்ட பிறகு பேசச் சந்தர்ப்பம் கிடைத்தது.

'ஜக்கப்பா அவர்களே! கணக்கப்பிள்ளை நியமனம் சாமராவுக்கு ஆகக்கூடாது என்று ஊர் ஜனங்கள் விண்ணப்பம் கொடுத்தார்களே? அதை விசாரணைக்குக் கொண்டு வருவீர்கள் அல்லவா?' என்று சேஷப்பா பரபரப்புடன் கேட்டான்.

'அந்த விண்ணப்பத்தை அஸிஸ்டென்ட் கலெக்டர் துரை, தம் பெர்சனல் பைலில் வைத்துக்கொண்டிருக்கிறார் சேஷப்பா. நெனச்சபடி செய்யறத்துக்கு இவர் நம்நாட்டுத் துரை என்று நெனச்சிட்டியா? என்ன? ஏற்கெனவே ஆள் புதியவர். அதோடு சட்டப்படியே நடப்பவர். மொட்டை விண்ணப்பத்தைக்கூடத் தாமே விசாரிப்பராம். சர்க்கார் தரப்பு நியமனம் ஆகவேண்டும் என்றால் துரை ஷரா எழுதினார் என்றால் தீர்ந்துவிட்டது. உடனே குறிப்பு எழுதி உனக்கே நியமனம் கிடைக்கும்படி செய்கிறேன், சரிதானே!' என்று அபயம் கொடுத்தார் ஜக்கப்பா. 'ஆனால் விண்ணப்பத்தில் கை எழுத்துப் போட்டவர்கள் பதில் சொல்லும்படி தயார்செய்து வை. அதையும் துரையவர்கள் விசாரணைக்கு எடுத்துக்கொண்டாலும் எடுத்துக்கொள்ளலாம்' என்று அவசியமான யோசனையையும் சொல்லத் தவறவில்லை.

சேஷப்பாவுக்கு உத்ஸாகம் பிடிபடவில்லை. அங்கிருந்து எழுந்திருந்து பார்வதி அம்மாவின் வீட்டுக்கே போனான். 'வாரிசு அப்பீலின் விசாரணையை இந்தக் காம்ப்பிலேயே முடிக்குவிடுகிறார்களாம். ஆனால் ஒரு விஷயம் சாமராவின் நியமன விசாரணையும் நடக்கப்போகிறது. அப்போது நீங்கள் குடியானவர்களை வெட்டொன்று துண்டு இரண்டாகப் பதில் சொல்லச் செய்ய வேண்டும். இன்னிக்கு ராத்திரியே அவர்களைக் கூப்பிட்டுச் சொல்லி வையுங்கள்' என்று சொல்லிவிட்டு அங்கிருந்து சாவடிக்கு வந்தான் சேஷப்பா சாவடியில் மற்றொரு சங்கதியும் தெரிந்தது. 'பஞ்சகாலத்தில் பஞ்ச நிவாரணக் கடன் பெற்றவர்களை அன்று மாலையே சாவடியில் ஆஜர்ப்படுத்தவேண்டும்' என்று உத்தரவு வந்திருந்தது. அன்று மாலையே அஸிஸ்டென்ட் கலெக்டர், அந்தக் கடன்பற்றிய விசாரணையை நடத்த இருந்தார். சேஷப்பாவுக்கு நடுக்கம் பிறந்துவிட்டது. பஞ்ச நிவாரணக் கடன் கொடுத்ததற்குக் கணக்குக் கேட்டால் என்ன செய்வது என்று தெரியவில்லை.

அன்று சாயங்காலம் விசாரணையில் சேஷப்பாவின் கைவரிசை எல்லாம் அம்பலம் ஆயிற்று. அஸிஸ்டெண்ட் கலெக்டர் குடியான வர்களை ஒவ்வொருவராகக் கேள்வி கேட்டு, அவர்கள் வாக்கு மூலத்தை எழுதி வைத்துக்கொண்டார். 'அவர்கள் சொன்ன ரொக்கக் கணக்கு, சர்க்கார் கணக்கில் காண்பித்ததைவிட நூற்றுக்கு இருபது குறைவாக இருப்பது தெரிந்தது. சேஷப்பா, அதற்கு ஒரு கதை கட்டிச் சொன்னான். பஞ்ச நிவாரணக் கடனுக் காக ஜாமீன் கொடுக்கக் கதி இல்லாத ஏழைகளுக்கு இந்த ரொக் கத்திலிருந்து 100-க்கு 20 வீதம் பணம் எடுத்துக் கடனுகக் கொடுக் கும்படி ஊர்ப்பிரமுகர்கள் எல்லாம் சொன்னார்கள். அப்படிக் கொடுத்ததால்தான் இந்தக் குடியானவர்களுக்கு அவ்வளவு பணம் குறைவாக வந்திருக்கிறது' என்று சொல்லிவிட்டான்.

இதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த மூலைவீட்டு ஜம்பண்ணு எழுந்திருந்து நின்று, 'கணக்குப்பிள்ளை சொல்ற தெல்லாம் பொய்யுங்க. பாளாச்சாரை வேணும்னு கேளுங்க. பஞ்ச நிவாரணக் கடன் பணத்திலே சப்பை செலவுக்காகப் பிடிச்சு கிட்டு எங்களுக்குப் பணம் குடுத்தாருங்க' என்று சேஷப்பாவின் வண்டவாளத்தை அம்பலப்படுத்தினான்.

போகப்போக விசாரணை மேலும் நுட்பமாயிற்று. 'பஞ்ச நிவாரண வேலையைத் தொடங்குவதற்காகக் கொடுத்த விண்ணப் பத்தில் யார் யார் கையெழுத்து இட்டிருக்கிறார்கள்' என்பது தெரியவேண்டியிருந்தது. 'அவர்கள் எல்லாம் எழுந்து நிற்க வேண்டும்' என்று உத்தரவாயிற்று. கையெழுத்துப் போடாத குடியானவன் ஒருவனும் எழுந்து நின்றான். துரை, 'நீ ஏன் எழுந்த நின்றாய்!' என்று கேட்டார்.

'ஏனுங்க, நானும் கை நாட்டு வச்சிருக்கேனுங்க' என்று அவன் சொன்னான்.

'' 'சாமராவை வேலைக்கு வைக்கக் கூடாது'ன்னு கொடுத்த விண்ணப்பத்துக்கா நீ கை நாட்டு வைத்தாய?'' என்று துரை கேட்டார்.

அந்தக் குடியானவன் திடுக்கிட்டான். ''சே சே! இல்லீங்க. சாமராவ் சித்தப்பா எனக்கு என்ன கெடுதல் செஞ்சார்னு அவர் மேலே புகார் கொடுப்போம்? 'பஞ்ச காலத்துலே ஜனங்களுக்கு வேலை வாங்கிக் கொடுக்கிற விண்ணப்பம் இது'ன்னு சொன்னாரு. கை நாட்டு வச்சேனுங்க'' என்று அந்தக் குடியானவன் உண்மையைச் சொல்லிவிட்டான்.

அப்பொழுது 'சாமராவுக்கு விரோதமாகக் கொடுத்த விண்ணப்பத்தில் யார் கையெழுத்து இட்டிருக்கிறார்கள்' என்று கவனித்தபோது, பத்துப் பெயர்கள் கிடைத்தன. அதில் கௌடரின் மனைவி பார்வதியின் பெயரும் இருந்தது. 'அவளை விசாரணைக்கு அழைக்கவேண்டும்' என்று துரை சொன்னார். பாளாச்சார், 'அப்படிச் செய்யவேண்டாம்' என்றார். கலெக்டர் துரையே கௌடர் வீட்டுக்குப் போய் விசாரிக்க ஒப்புக் கொண்டார்.

துரை, தன் வீட்டுக்கே வந்ததைக் கண்டு பார்வதி மிக மகிழ்ச்சி அடைந்தாள். சேஷப்பாவின் உபகாரத்துக்கு மனசுக் குள்ளேயே வணக்கம் செலுத்தினாள். ஆனால் அந்த மகிழ்ச்சி வெகு நேரம் நீடித்திருக்கவில்லை. துரை, திண்டில் சாய்ந்துகொண்டு, 'சாமராவுக்கு வேலை கொடுத்தால் ஊருக்கே கேடு. ஜனங்கள் வம்பளக்க இடங் கொடுத்ததுபோல் ஆகும்' என்ற செய்தி கொண்ட விண்ணப்பத்துக்கு நீங்க கையெழுத்துப் போட் டீங்களா?' என்று கேட்டார்.

இந்தக் கேள்விக்கு என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் கௌடர் மனைவி பேசாமல் இருந்தாள். 'பயப்பட வேண்டிய அவசியம் இல்லை. உங்களுக்குத் தெரிந்ததைச் சொல்லலாம்' என்று துரை அமைதியாகவே சொன்னார்.

கௌடர் மனைவி பதில் சொல்லித்தானே ஆகவேண்டும். 'நான் ஒண்ணும் விண்ணப்பம், கிண்ணப்பம் எழுதினவள் அல்ல. பஞ்சாயத்தாருக்கெல்லாம் அந்த நியமனம் ஆகக்கூடாதுன்னு தோணிச்சாம். அவங்களைக் கைவிடக்கூடாதுன்னு அந்த விண்ணப்பத்திலே நான் கை நாட்டு வச்சது நெஜம். எங்கள் பிராதார் ஆட்களும் கை நாட்டு வச்சிருக்கறது நெஜம்' என்று சொன்னாள்.

துரையின் முகம் கோபத்தால் சிவந்தது. இந்த விவ காரத்தின் பின்னால் நடந்திருக்கும் கபட நாடகத்தை அவர் ஊகித்து அறிந்துகொண்டார். ஆனால் இன்னும் நன்றாக அறிந்துகொள்ள விரும்பினார். விண்ணப்பம் எழுதிய வெங்கண்ண வாத்தியாரை ஆஜர்ப்படுத்தும்படி சொல்லிவிட்டுத் தாம் இறங்கியிருந்த இடத்துக்குப் போனார்.

வெங்கண்ண வாத்தியார் நடுங்கிக்கொண்டே துரையின் முன் வந்து நின்றான். கண்ணீர் பெருகிக்கொண்டே இருந்தது. அவன் இந்த மாதிரி விசாரணைக்கு உட்பட்டதில்லை. இந்த அநுபவம் புதிதானதால் மிகவும் பயந்துவிட்டான்.

'இந்த விண்ணப்பத்தை எழுதும்படி யார் உன்னிடம் சொன்னார்கள்?' என்று துரை கர்ஜித்தார்.

இடிபோன்ற குரலையும் கேள்வியையும் கேட்டு வெங்கண்ண வாத்தியார் பெருங்குரல் எடுத்து அழவே தொடங்கிவிட்டான். 'துரையே! நெஜத்தைச் சொல்றேனுங்க. என் கொழந்தக ஆணையா நெஜத்தைச் சொல்றேனுங்க. நான் ஏழை. நெஜத்தைச் சொல்லாட்டா என் நாக்கெ அறுத்திடுங்க! நெஜத்தையே சொல்றேனுங்க. கொழந்தெ குட்டிக்காரன். வயித்துக் கொடுமை இந்த வேலை செய்யச் சொல்லிச்சு. நெஜத்தைச் சொல்றேனுங்க' என்று முதுகில் விழும் சாட்டையடிக்குத் தப்பச் சொல்பவன் போல் வெங்கண்ண வாத்தியார் சொன்னதையே திரும்பத் திரும்ப சொல்லிக்கொண்டிருந்தான்.

'அதுதான் விண்ணப்பம் எழுதும்படி யார் உனக்குச் சொன்னார்கள்?' என்று மறுபடியும் கேள்வி வந்தது.

'சொல்றேனுங்க தொரையே! சொல்றேன். சேஷப்பா சொன்னார்; நான் எழுதினேன். அவர் சொன்னபடியே நான் விண்ணப்பம் எழுதினேன். ஒன்று: சாமராவுக்கு விரோதமாக எழுதினது. அதில் கையெழுத்திட்டேன். இன்னொரு வெள்ளைக் காயிதத்துக்கும் கையெழுத்துப் போட்டேன். முதலிலேயே கைநாட்டு வைத்திருந்த வெள்ளைக் காகிதத்தைச் சாமராவுக்கு விரோதமாக எழுதியிருந்த விண்ணப்பத்தோடு சேஷப்பா ஜோடித்தார்' என்று சொல்லிவிட்டு மறுபடி அழத்தொடங்கினான்.

கிப்ஸன் துரைக்கு வெங்கண்ண வாத்தியாரிடம் இரக்கம் தோன்றியது. அவன் தவிப்பதைப் பார்த்துச் சிரிப்பும் வந்தது. அவனைச் சமாதானப்படுத்துவதற்காகவே, 'உன் உத்தியோகம் என்ன?' என்று கேட்டார்.

'உத்தியோகமா? திண்ணைப் பள்ளிக்கூடம் நடத்தறேனுங்க. மாசத்துக்கு அஞ்சாறு ரூவா சம்பளம் கெடைக்கும். அறுவடைக் காலத்துலே வயலுக்குப் போய்ச் சிந்திக்கிடக்கும் சோளம் நாலு மூட்டை பொறுக்கிக்கொண்டு வருவேன். சேஷப்பாவின் சிபார்சு இல்லாவிட்டால் குடியானவர்கள் வயலில் கால்வைக்க விடமாட்டார்கள். அதனால் அவர் சொன்னபடி விண்ணப்பம் எழுதினேனுங்க. இப்படி அவர்கள், இவர்கள் சொன்னதை யெல்லாம் செய்து, அலைந்து, வயிற்றை நிரப்பிக்கிறதுதான் என் உத்தியோகமுங்க' என்று சொல்லிக் கண்ணைத் துடைத்துக் கொண்டான்.

துரை அவனை விடுதலை செய்துவிட்டார். அவருக்கும் வருத்தமாக இருந்தது. உடனே எந்தத் தீர்ப்பும் சொல்ல முடியாத நிலைமை. சபையை முடித்துக்கொண்டு எழுந்திருந்த போது ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார்.

# 32

மகாராஜா, தம் முன்னோர்களின் ஊரை ஆசை தீரப் பார்க்க விரும்பினார் 'அவருடைய வமிசம், பிறந்து வளர்ந்ததெல்லாம் பாதள்ளி மண்ணில்தான்' என்பதை அவர் மறக்கவில்லை. அவருடைய முன்னோர்கள் நடமாடிய நிலம் அது. லக்ஷ்மிபாயின் பேரில் இருந்த நிலங்கள் எல்லாம் இப்போது மகாராஜாவின் கைக்கு வந்துவிட்டன. இந்தச் சங்கதி வரலாற்றுப் பெருமை வாய்ந்ததாக அவருக்குத் தோன்றியது. பிறந்த நிலமாகிய பாதள்ளியைப் பார்த்தபோது அவர் உள்ளத்தில் இனம் புரியாத பல எண்ணங்கள் பொங்கிவந்தன. 'தம்வசமான நிலங்களில் நடமாடித் திருப்தி அடையவேண்டும்' என்று அவருக்கு ஆசை உண்டாயிற்று.

'தம்முடன் கிப்ஸன் துரையும் வரவேண்டும்' என்று அவர் மிகவும் ஆசைப்பட்டார். மறுநாள் ஞாயிற்றுக்கிழமை ஆதலால் கிப்ஸன் துரைக்கு ஆபீஸ் தொல்லை இல்லை. 'பார்க்கும் இடங்களைப் பார்த்துவிட்டு அப்படியே வேட்டையாடி இரண்டொரு மான்களும் சுட்டுக்கொண்டு வரலாம்' என்று மகாராஜா சொன்னபோது, கிப்ஸன் துரை சந்தோஷமாக ஒப்புக் கொண்டார். கிப்ஸன் துரைக்கு இந்த நாடு புதியது. இவ்விடத்துப் பழக்க வழக்கங்களையும் நாட்டின் விசித்திர அழகையும் பார்க்கவேண்டும் என்று அவருக்கும் உள்ளூர ஆவல் இருந்தது.

மறுநாள் காலையில் சிற்றுண்டியை முடித்துக்கொண்டு எட்டு மணி சுமாருக்கு இருவரும் தம் தம் குதிரைகளில் ஏறித் தயாரானார்கள். 'மகாராஜா தாமாகவே வேட்டைக்குப் போகத் தீர்மானித்துவிட்டார்' என்ற செய்தி கேட்டுப் புலிவேட்டைக் கூட்டத்தார் எல்லோரும் அவரைப் பின் தொடர்ந்தார்கள். மகாராஜாவுக்கு மத்தியான்னச் சாப்பாட்டைத் தயாரிப்பதற்காகப் பொழுதுவிடிவதற்கு முன்பே மணியக்காரர் யசவந்தராவ் ஜாகீரின் தோட்டத்துக்குப் புறப்பட்டுப் போய்விட்டார்.

சிலேதார் லக்ஷ்மணன், காசீம் சாயபு முதலியவர்கள் மகாராஜாவின் சமையல்காரனோடு முன்னதாகவே போய்த் தோட்டத்தில் தங்கியிருந்தார்கள்.

'தாதா, மகாராஜாவின் குதிரையோடு வேட்டைக்குப் போவது' என்று முடிவாயிற்று. அவன் உற்சாகத்துடன் மகாராஜாவின் குதிரையைப் பிடித்துக்கொண்டு முன்னே நடந்தான். மகாராஜா, மாளிகையை விட்டுச் சிறிது தூரம் சென்றபின் எதிரில் காவி உடை அணிந்த எட்டு அல்லது பத்து வயதுள்ள சிறுவன் ஒருவன் வருவதைக் கண்டார். ஜனங்கள் எல்லோரும் அவன் காலைத் தொட்டுக் கும்பிட்டுவிட்டுப் போனார்கள். கிப்ஸன் துரைக்கு இந்த நிகழ்ச்சி ஆவலைத் தூண்டியது. 'பாரத நாட்டின் அநேக ரகசியங்களில் இதுவும் ஒன்றாக இருக்கலாம்' என்று நினைத்து, 'என்ன இது?' என்று சாமராவைக் கேட்டார். 'இவர் எங்கள் ஊர் ஹிரே மடத்தின் குருபீடத்துக்கு வந்துள்ள கட்டளைத் தம்பிரான். படதையா ஊரைவிட்டுப் போனபின் ஊர்ப் பிரமுகர்கள் எல்லாம் சேர்ந்து இவரைப் பீடத்தில் அமர்த்தினார்கள்' என்று சுருக்கமாகச் சாமராவ் சொன்னான். கிப்ஸன் துரையின் ஆச்சரியம் அதிகமாயிற்று. அவர் மகாராஜாவின் முகத்தைப் பார்த்தார். மகாராஜா தந்த பதில் புன் சிரிப்புதான். கிப்ஸன் துரையின் ஆச்சரியம் ஆச்சரியமாகவே நின்றுவிட்டது.

மகாராஜா முதலில் நதிக்கரையில் இருக்கும் ஜாகீர் நிலத்துக்குப் போனார். பாதி நிலம் தண்ணீரில் முழுகியிருந்தது. மறுபாதியில் அவரை, துவரை முதலிய வேறு வேறு செடிகள் வளர்ந்திருந்தன. ஊர் மாடுகள் எல்லாம் அவற்றை மேய்ந்துவிட்டு அசைபோட்டுக்கொண்டிருந்தன. 'நதி வந்து புல் தரை பூராவும் முழுகிவிட்டுதுங்க. அதனாலேதான் ஊர் மாடுகள் எல்லாம் இங்கே திரும்பிடுச்சுங்க' என்று அவ்விடத்துக் குடியான வனாகிய கன்ட்டூர் எல்லன் சாமராவிடம் சொன்னான்.

கரையோரம் இருந்த ஜாகீரின் பத்து நம்பர் பூமி கோடையில் பண்படுத்தலோ உழுதலோ இன்றிக் குப்பை மேடாக இருந்தது மகாராஜாவின் கண்ணில் பட்டது. 'நிலம் இப்படித் தரிசாகக் கிடப்பதன் காரணம் என்ன?' என்று அவர் சாமராவையே கேட்டார். 'மாளிகையின் சொந்தச் சாகுபடிக்கு என்று ஒதுக்கிய நிலங்கள் இவை. பாபு சாஹேப் இருந்தபோது அவர் நிலங்களைப்பற்றி அக்கறையே எடுத்துக்கொள்ளவில்லை. அவர் கார்ப் பௌர்ணமிக்கு முதல் நாள் இங்கிருந்து போய்விட்டார். மகாராஜாவிடமிருந்து உத்தரவு பெறாததால் நாங்கள் இன்னும் வேலை தொடங்கவில்லை' என்று சாமராவ் சொன்னான்.

நிலத்தின் நிலைமையைக் கண்ட மகாராஜாவுக்கு வருத்தம் உண்டாயிற்று அதன் ஒவ்வோர் அங்குலமும் கேட்பார் அற்று அநாதையாகக் கிடந்தது. அந்த நிலத்தைச் சுற்றியிருந்த ஜாகீர் நிலங்களும் தரிசாகவே கிடந்தன. குப்பை, கூளம், செடி செத்தைகளைக்கூட அகற்றவில்லை மகாராஜா வேறொரு நிலத்தைச் சுட்டிக்காட்டி, 'அது யாருடையது?' என்று கேட்டார். வெயில்காலத்தில் கதிர் அறுத்தபின் நின்ற கட்டைத் தட்டைகளைக்கூடப் பிடுங்கி எறியவில்லை. புலிவேட்டைக் கூட்டத்தின் தளவாய், ''ஐயா, அது தேஷ்பாண்டேயின் நிலமுங்க. போன வருசம் பஞ்சத்திலேகூட இது நல்லா வெளைஞ்சுதுங்க. 'இந்த வருஷம் வேர்க்கடலை வைக்கணும்னு சொல்லியனுப்பிச்சிருக்காங்க'ன்னு சொல்லி, 'கணக்கப்பிள்ளை, குடியானவங்களுக்குக் கொடுக்க வேண்டாம்னு சொல்லிட்டாருங்க. அவங்க இன்னம் வரலீங்க; பூமியும் இன்னும் சாகுபடி ஆகலே' என்று சொன்னான். எங்கே பார்த்தாலும நிலத்தில் மனிதனுடைய கதையின் துக்க நிழல் படிந்ததுபோல் இருந்தது. யாரோ போட்டி இடுவதால் நிலம் மலடாகிவிட்டது. அதிகாரம் நிலத்தைத் தொடாதபடி தடை போட்டுவிட்டது. கபடமும் சூழ்ச்சியும் சேர்ந்து தானிய முளை கிளம்பாமல் செய்துவிட்டன.

குதிரைகள் அப்படியே மேட்டை நோக்கிச் சென்றன. பாதள்ளிக் குன்றைத் தாண்டிப் போனதும் மான்கூட்டம் வசிக்கும் இடம் வந்தது அங்கே வேட்டைக்கு வாட்டமான இடமும் இருந்தது. வேட்டை விஷயத்தில் வழி காட்டிகளாகப் புலிவேட்டைக் கூட்டத்தார் உற்சாகத்துடன் முன்னேறினார்கள். குன்றின் மேல் ஏறி ஆயிற்று. அந்த உயரத்திலிருந்து திரும்பிப் பார்த்தால் பாதள்ளியும், அதன் முன் வெள்ளிக் கோடுபோல் ஓடும் ஆறும் அசையாமல் சித்திரத்தில் எழுதியதுபோல் ரம்மியமாகத் தெரிந்தன. குன்றின் எதிரில் இருந்த பள்ளத்தில் புகைபோல் மூடிய மரக்கூட்டங்களின் இடையில் ஹாவனூர் கண்ணுக்குத் தெரிந்தது. அந்தத் திசையில் இருந்து மாடுகள் கூட்டம் கூட்டமாக வந்துகொண்டே இருந்தன. ஹாவனூரில் மாடுகள் மேயக் காடு இல்லை. அந்த ஊர் நிலங்கள் செழிப்பானவை. ஓர் அங்குலம்கூட விடாமல் சாகுபடி செய்திருந்தார்கள். அதனால் பாதள்ளியின் பயிர் செய்யாத குன்றுகளிலும் தரிசு நிலங்களிலும் அலைந்து மேய்வது பழக்கமாகிவிட்டது. மகாராஜா அந்த மாட்டு மந்தையை நோக்கிக் குதிரையை ஓட்டினார். அவை தூரத்தில் இருந்தே இதைப் பார்த்துவிட்டு வாலைத் தூக்கிக்கொண்டு ஓடின. திருட்டுத்தனமாக மேயும் மாடுகள், திருடர்களைவிட

அதிகமாகப் பயந்து ஓடும் காட்சி வேடிக்கையாக இருந்தது. புலிவேட்டைக்காரரின் கூச்சலாலும் சிரிப்பாலும் குன்றெல்லாம் எதிரொலித்தது.

'திருடர்களைப் பிடிப்பதைவிட இந்தத் திருட்டு மாடுகளைப் பிடிக்கிறது ரொம்பத் தொல்லையாய் போச்சுங்க' என்று தளவாய் ஹாவனூர் மாடுகளாலேயே பாதள்ளி விளைச்சல் பாழாகிவிட்டதைப்போல முறையிட்டான்.

'இது விஷயமாகச் சர்க்காருக்கு ஒன்றும் விண்ணப்பம் வரவில்லையே?' என்று கலெக்டர் கேட்டார்.

தளவாயின் முகத்தில் அசடு வழிந்தது. ஆனால் அவன் பதில் சொல்லச் சந்தர்ப்பமே ஏற்படவில்லை. களிமண் பூமியில் மின்னல் கொத்துப் பளிச்சிட்டதைப்போல் ஒரு மான் கூட்டம் ஓடியது. தளவாய் எல்லாவற்றையும் மறந்துவிட்டு, 'மான் கூட்டம் துரையே... ஏய், நாய்களை விடுங்கடா!' என்று கூச்சல் இட்டான். மின்னல் மின்னியதுபோல் எல்லோருக்கும் வேட்டையில் சுருசுருப்பு வந்தது. நாய்களின் சங்கிலியை அவிழ்த்து விட்டார்கள். அவை சில நிமிஷங்களிலேயே மான் கூட்டத்தைச் சூழ்ந்துகொண்டு, அவை குன்றிலிருந்து களிமண் பூமியில் இறங்கும்படி செய்தன.

ஆடி மாதம் நல்ல மழை பெய்திருந்தபடியால் களிமண் நிலம் சேறாக இருந்தது. மான்கள் பாய்ந்தபோது அவற்றின் கால்கள் சதக்கென்று சேற்றில் புதைந்துவிடும். அவை நடக்க முடியாமல் களைத்துத் தாமாகவே நாய்களிடம் சிக்கிவிடும். இந்தப் பகுதியில் இப்படித்தான் வேட்டையாடுவது வழக்கம். வேட்டையில் தேர்ந்த நாய்கள் மான்களைத் துரத்திக்கொண்டு போய்க் களிமண் பூமியில் ஓடும்படி செய்தால் போதும். மான்கள் நடக்கமுடியாமல் தடுமாறும்போது நாய்களே அவைகளை வேட்டைக்காரர்களிடம் பிடித்துக் கொடுத்துவிடும்.

மான்களை இப்படி 'உயிருடனேயே பிடித்துவிடலாம்' என்பது கிப்ஸன் துரைக்குத் தெரியாது. தம் குறிக்கு நேராக இருந்த ஓர் ஆண்மானைச் சுடத் தயாரானார். மகாராஜாவுக்கு இந்த வேட்டையைப்பற்றி வெகு நன்றாகத் தெரியும். ஆதலால் அவர் குண்டுபோடும் ஜோலிக்குப் போகவில்லை. மான்களின் பின்னால் குதிரையை ஓடவிட்டார். நாய்கள் பயங்கரமாகக் குரைப்பதைக் கேட்டுப் பயந்த மான்கள் பின்னால் திரும்பிப் பார்த்துக்கொண்டே ஓடியபோது சேற்றில் கால் புதைந்து கீழே விழுந்துகொண்டிருந்தன. கிப்ஸன் துரை சுட்ட குண்டு மானின் மேல் பாயாமல் ஓடிக்கொண்டிருந்த மகாராஜாவின் நாயின்மேல்

பட்டது. நாய் பெரிய குரலில் குரைத்துக்கொண்டு கீழே விழுந்தது. வேட்டை மும்முரத்தில் இருந்த யாருமே அதைக் கவனிக்கவில்லை. மற்ற நாய்கள், குரைத்துக்கொண்டே மான்களைத் துரத்தின வேட்டைக்காரர்கள் காடு நடுங்கும்படி கூச்சல் எழுப்பி மறைவில் மான்களைப் பிடிக்க உட்கார்ந்து கொண்டனர்.

சேற்றில் விழுந்த மான்கள் தவித்தன. சில ஓடமுடியாமல் தடுமாறின. மான்கள் மறைவிடத்துக்கு அருகில் வந்தபோது நாய்கள் ரௌத்ராவேசமாகக் குரைத்தன. வேட்டைக்காரர்கள் வீசி எறிந்த தடி ஒன்று தாக்கியதால் ஓர் ஆண் மான் தரையில் சாய்ந்தது. தலையாரி மல்லன் ஓடிப்போய் அதைக் கொண்டுவந்து மகாராஜாவின் குதிரையின் முன் போட்டான். இன்னும் உயிர் போகவில்லை. தடியடி மர்மத்தில் பட்டதால் அது ஆராட்டத்துடன் புரண்டுகொண்டிருந்தது. உயிர் முழுவதும் கண்ணுக்கே வந்துவிட்டதுபோல் ஏக்கம் தெரிந்தது. அந்தப் பார்வையில் அசாதாரணமான மனிதத்தன்மை நிறைந்து ததும்பியது. மகாராஜா, வேட்டையிலேயே கவனமாக இருந்தபடியால் மானைத் தோட்டத்துக்குக் கொண்டு போகும்படி ஜாடை செய்தார்.

மகாராஜாவின் நாயைச் சுட்டுவிட்டதால் கிப்ஸன் துரை வருத்தம் அடைந்தார். அவருக்கு வேட்டையில் மனம் செல்லவில்லை. 'தம்மை மன்னிக்கவேண்டும்' என்று ஒருதரம் அன்று நூறுதரம் மகாராஜாவைக் கேட்டுக்கொண்டார். மகாராஜா நிலைமையைப் புரிந்துகொண்டார். 'அதைப்பற்றிக் கவலைப் படக்கூடாது' என்று கிப்ஸன் துரையை அவரே சமாதானப் படுத்தவேண்டியிருந்தது. ஆனால் தன் அன்புக்குரிய நாயை இழந்தது—எல்லா வேட்டைக்காரர்களையும் போலவே—அவர் மனத்திலும் துக்கத்தைப் பொங்கவைத்தது.

வேட்டை முடிந்து இருவரும் தோட்டத்துக்குத் திரும்பிய போது சூரியன் தலைக்கு நேராக வந்திருந்தான். வெயில் சுள்ளென்று உறைத்தது. ஆனால் மேற்குத் திசையில் பெரிய மேகங்கள் நிறைந்திருந்தன. உயரத்திலிருந்து பார்க்கும்போது மேகங்கள் அழகாகவே காட்சி அளித்தன. சிறிது நேரத்துக்குள் மேகங்கள் பரவி வானம் முழுவதையும் மூடிக்கொண்டன. வெயில் மங்கியது. மேல் காற்றுக்கு யௌவனப்பிராயம் வந்து விட்டதுபோல் முரட்டுத்தனமாக வீசியது. சில சமயம் காற்றின் வேகத்தால் முன்னேக்கிப் போவது மிகவும் கஷ்டமாக இருந்தது. வெட்டவெளி, காற்றுக்கு உடம்பைத் திறந்துகொண்டு, 'உனக்காயிற்று, எனக்காயிற்று' என்று சவால் விடுவதுபோல்

தோன்றிற்று. மரம் செடிகள் எல்லாம் தம் நீண்ட கிளைகளால் ஓங்கி அடித்தாலும் முரட்டுக் காளைபோல் பாய்ந்துவரும் காற்றைத் தடுக்கமுடியவில்லை.

பலத்த மழை பிடித்துக்கொண்டு கொட்டத் தொடங்கியது. காற்று வெறியாட்டம் போட்டதால் ஜாகீர்த் தோட்டத்துக் குடிசையின் புல்வேய்ந்த கூரை அலக்காகப் பறந்து போய் விட்டது. அவசரமாக அதைச் சரிப்படுத்தியும் பயனில்லை. சமையலுக்கு என்று ஒதுக்கிய பழைய குடிசை மட்டும் நன்ருக இருந்தது. பதினாறு காளைகளைக் கட்டுவதற்கு ஏற்றபடி இந்தக் குடிசையைக் கட்டியிருந்தார்கள். வெளியே மழையாக இருந்த தால் மகாராஜாவும் கிப்ஸன் துரையும் இந்தக் குடிசையிலேயே ஒதுங்கவேண்டியதாயிற்று. மகாராஜாவின் பரிவாரத்தில் சிலர் மாட்டுவண்டிக்குக் கூடுபோட்டு மறைத்து அதன் மறைவில் உட்கார்ந்திருந்தார்கள்.

மகாராஜாவுக்குத் தனியாகக் குடிசையில் உட்கார்ந்திருப்பது கஷ்டமாக இருந்தது வண்டியில் இருந்தவர்களையும் குடிசைக்குள் அழைத்துக்கொண்டார்கள் விரித்த ஒரே கூடார செட்டின்மேல் எல்லோரும் சமாளித்துக்கொண்டு உட்கார்ந்தார்கள். அந்த நேரத்தில் சமையலும் ஆகவில்லை. யசவந்தராவ் சர்க்கரை வெள்ளிக்கிழங்குச் சோமாசி, வாழைப்பழம் இவற்றைச் சிற்றுண்டியாகக் கொண்டுவந்து வைத்தார். மகாராஜாவும் துரையும் தம் கௌரவத்தை எல்லாம் பார்க்காமல் பசியை விரட்டுவதில் ஈடுபட்டார்கள். ரசமாக அரட்டை அடிக்கத் தொடங்கினர்கள். பால், வெல்லம், மக்காச்சோள மணி இவை களை விநியோகித்துக்கொண்டு அலைந்துகொண்டிருந்த தாதா மறுபடி மகாராஜாவின் கண்ணில் பட்டான். அவனுடைய வாட்டசாட்டமான உடம்பு அவரை வசீகரித்தது. யசவந்த ராவிடம் தாதாவைப்பற்றிய விவரங்களை எல்லாம் கேட்டுத் தெரிந்துகொண்டார்.

முதலில் அடைமழையாகப் பிடித்தது. பிறகு வேகமாகப் பெய்துவிட்டுக் கடைசியில் நின்றுவிட்டது. அந்தச் சமயத்தில் ஜாகீர்த் தோட்டத்துக் கிணற்றில் மழைக்காக ஒதுங்கியிருந்த ஆசாமிகள் நாலு பேர், கிணற்றுப் படியேறி மேலே வந்தார்கள். அவர்களைப் பார்த்துவிட்டு, மக்காச்சோளக் கதிரைக் கடித்துக் கொண்டிருந்த பறையன் ருத்திரன், 'சலாமுங்க, கௌடரே!' என்று பெரிய குரலில் கூறி வணக்கம் செய்தான். தலையாரி மல்லன் அவர்களை மகாராஜா இருந்த குடிசைக்கு அழைத்துக் கொண்டு வந்தான்.

குடிசை வாயிலுக்கு வந்த லிங்கப்பாவைப் பார்த்து யசவந்த ராவ், 'வாங்க, வாங்க, கௌடரே!' என்று அழைத்தார். லிங்கப்பா உள்ளே இருந்த ராஜாவையும் பரிவாரங்களையும் பார்த்துத் திக்பிரமை அடைந்தாலும் அதைக் காட்டிக்கொள்ள வில்லை. லிங்கப்பாவின் பின்னாலேயே படதையா, அவருடைய அண்ணன் சங்கரப்பா, லிங்கப்பனுடைய தாய் மாமன் ஆகிய எல்லோரும் குடிசைக்குள் நுழைந்து விரிப்பின் ஓரத்தில் உட் கார்ந்துகொண்டார்கள். புதிதாக வந்தவர்களைப் பார்த்ததும் அறிமுகம் இல்லாதவர்களுக்குக் கூச்சமாக இருந்தது. சிலருக்குப் பழைய நினைவுகள் தலைதூக்கின. சிலருக்கு வேடிக்கையாக இருந்தது. வேறு சிலரை ஆவல் தூண்டியது. லிங்கப்பா இப்பொழுது முன்போல் பருமனாக இல்லை. படதையாவின் சந்நியாசி வேஷம் மாயமாகிவிட்டது. முகத்தில் பைத்தியக் காரக் களை கூத்தாடியது.

சற்று நேரம் எல்லோரும் பேசாமல் இருந்தார்கள். கடைசியில் யசவந்தராவ், 'தாதா, விருந்தாளிகளுக்குப் பலகார தினுசு வரட்டும்' என்று உத்தரவிட்டார். அவர் முகம் பொறு மையால் கம்பீரமாக இருந்தது. தாதாவின் முகத்தில் இந்தப் பேச்சைக் கேட்டுக் கசப்பு வழிந்ததுபோல் தோன்றியது. புரு வங்கள் சுருங்கின. ஆனால் எதையும் வெளிக் காட்டிக்கொள்ள முடியவில்லை. வேறு வழி இல்லாமல் பலகாரத் தினுசுகளை லிங்கப்பன் முன்னால் கொண்டுவந்து வைத்துவிட்டு எட்டப்போய் விட்டான். லிங்கப்பா ஒன்றும் பேசாமல் உட்கார்ந்திருந்தான். யசவந்தராவ், உபசாரமாக, 'ஊரில் எல்லோரும் சௌக்கியந் தானே?' என்று லிங்கப்பாவைக் கேட்டார். அவர் அஜராணியை விட்டு இரண்டு வாரங்களுக்குமேல் ஆயிற்று. தம் ஊர் விஷயங் களைத் தெரிந்துகொள்ள ஆவலோடு இருந்தார். ஆனால் லிங்கப்பா அவர் இப்படிக் கேட்டவுடன் கண்ணீர்விட்டான். புதிய மனிதர் கள் எதிரில் இல்லாதிருந்தால் விக்கி விக்கி அழுதிருப்பான். துக்கம் நெஞ்சை அடைத்ததால் அவனால் பதில்கூடச் சொல்ல முடியவில்லை.

அப்பொழுது சங்கரப்பாதான் பதில் சொன்னான். 'மணியக் காரரே, லிங்கப்பாவின் தகப்பனார் கைலாசம் சேர்ந்துவிட்டார் என்பது உங்களுக்குத் தெரியாதுபோல் இருக்கிறதே' என்று பதில் சொன்னான்.

யசவந்தராவ் இதைக் கேட்டதும் வருந்தினார். ஒரு கணம் பேசாமல் இருந்துவிட்டு 'சாவைத் தடுக்க முடியுமா? நடந்தது நடந்துவிட்டது. அவருக்கும் வயசாகிவிட்டது. அழுதுகொண்டே

இருப்பதால் என்ன பிரயோஜனம்? பசித்து வந்திருப்பதாகத் தெரிகிறது. பலகாரம் சாப்பிடுங்கள்' என்று சமாதானப் படுத்தினர்.

அவர்கள் எல்லோரும் முதல் நாளே அஜராணியில் இருந்து புறப்பட்டார்கள். வழியில் வெள்ளம் குறுக்கிட்டதால் வண்டியை விட்டுவிட்டு நடந்தே வந்திருக்கிறார்கள். காலையிலிருந்து வயிற்றில் ஒன்றும் விழவில்லை. வழி நடந்து வந்த களைப்பால் இன்னும் சோர்ந்திருந்தார்கள். யாரும் பேசும் நிலைமையில் இல்லை பதில் சொல்லாமல் எதிரில் இருந்த சோமாசியையும் வாழைப்பழத்தையும் சாப்பிடத் தொடங்கினர்கள்.

யசவந்தராவ் வந்தவர்களுக்குச் செய்த விருந்துபசாரத்தைப் பார்த்து மகாராஜா, 'அவர்கள் யார்?' என்று தெரிந்துகொள்ள விரும்பினர். அதைக் குறிப்பாக உணர்ந்துகொண்ட யசவந்தராவ் விருந்தாளிகளை அறிமுகம் செய்துவைத்தார். 'இவர் இந்த ஊர் மணியக்காரர். காலம்சென்ற சங்கரப்ப கௌடரின் மகன் லிங்கப்ப கௌடர். இவர் பாதள்ளி ஹிரே மடத்தின் சாமியார் படதையா. மற்றைய இருவரும் அவர்களுக்கு வேண்டியவர்கள்' என்று சொன்னர்.

மகாராஜாவுக்கு இவர்களுடைய வரலாறு வேண்டியமட்டும் தெரிந்திருந்தது. யசவந்தராவே அந்தக் கதைகளை எல்லாம் சொல்லியிருந்தார். ஆனல் 'விருந்தாளியாக வந்தவர்களைப் பண்பாட்டுக் குறைவில்லாமல் இவர் உபசரிக்கிறார்' என்பதை மகாராஜா புரிந்துகொண்டார். அதனல் அவர் மேலே ஒன்றும் கேட்கவில்லை. லிங்கப்பாவுக்குக் கிடைத்த உபசாரத்தைக் கண்டு இவனும் மகாராஜாவுக்கு வேண்டியவனக இருப்பான்' என்று துரை நினைத்தார். அப்போது மழை நன்ருக நின்றுவிட்டதால் தாம் கேம்ப்புக்குப் போவதாகச் சொல்லி, கிப்சன் துரை புறப்பட்டார். லிங்கப்பா விழுந்து வணங்கியபோது அவனுடைய நீர் நிறைந்த கண்களைப் பார்த்தார். கிப்சன் துரைக்கு அதைக் கண்டு இயற்கைக்கு மீறிய இரக்கம் உண்டாயிற்று.

துரை காம்ப்பிற்குப் போய்ச் சேர்ந்தார். சிற்றுண்டியைச் சாப்பிட்டபின் புலிவேட்டைக்காரர்கள் அவருடைய குதிரையின் முன்னல் ஊர் எல்லைவரைக்கும் ஓடினர்கள். லிங்கப்பாவும் படதையாவும் மகாராஜாவை வணங்கி, யசவந்தராவிடம் சொல்லிக்கொண்டு பாதள்ளியை விட்டுப் புறப்பட்டார்கள். லிங்கப்பாவும் சங்கரப்பாவும் கொஞ்சமாவது பேசினர்கள். வாயைத் திறக்காமல் போனவர் படதையாதான். அவர்கள் போன பின்பும் சூழ்நிலையில் சுரத்து ஏற்படவில்லை. வேட்டை

நிகழ்ச்சி எதிர்பார்த்தபடி உத்ஸாகமாக முடியவில்லை. வேட்டையில் மகாராஜாவின் நாய் குண்டுபட்டு இறந்ததால் அவருக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. உத்ஸாகத்தோடு வந்த கிப்ஸன் துரைக்கும் மனம் குழம்பியதால் எதிலும் நாட்டம் கொள்ளவில்லை. திடீரென்று வந்த மழை வெயிலை விழுங்கியது போல் உத்ஸாகத்தையும் விழுங்கிவிட்டது. காற்று வீசிக் குடிசையின் மேல் கூரை பறந்துபோய்விட்டபடியால் சமையலுக்கு நேரம் ஆகியது. யசவந்தராவின் மனம் அலை பாய்ந்தது. இருந்தாலும் பண்பாட்டுக்குக் கட்டுப்பட்டு யாரும் சிடுசிடுக்காமல் உள்ளதைக் கொண்டு திருப்தி அடைந்தார்கள். மேகங்கள் சூழ்ந்து இருண்டபோதே எதிர்பாராத இந்த விருந்தாளிகள் வந்தார்கள். பூர்வஜன்ம வினையின் நீதி ஒன்று தீராத் துன்பமாகிக் காரணம் இல்லாமல் மனத்தைக் கலக்குவதுபோல் யாருக்கும் வேண்டாத விருந்தாளிகள் உள்ளே நுழைந்து விட்டார்கள். யசவந்தராவ் கிருகஸ்த தர்மத்தைக் காப்பாற்ற வேண்டியிருந்தது. பிறந்தது முதல் கூடவே வளர்ந்த நற்பண்பு கற்பித்த பாடம் அது. வந்த விருந்தாளிகளுக்கும் இவ்விடத்துச் சூழ்நிலை இதமாக இல்லை. மகாராஜாவின் சமூகம் பயத்தைக் கொடுத்தது. யசவந்தராவ், தாதா இவர்களுடைய இருப்பு, சங்கோசத்தையும் வெறுப்பையும் உண்டாக்கியது. லிங்கப்பாவோ அமங்கலமான துக்கச் சுமையை வேறு சுமந்து கொண்டு வந்திருந்தான். யசவந்தராவ் அஜராணியின் நலனைப் பற்றி விசாரித்தபோது அவருக்குத் துக்கமயமான செய்தி கிடைத்தது.

'இப்படிப்பட்ட சண்டாளர்களுக்குச் சேவை செய்யும் காலம் வந்ததே, தாத்தா!' என்று பல்லைக் கடித்துக்கொண்டு முணுமுணுத்தான் தாதா. அவன் இதுவரையில் பேசாமல் பொறுத்திருந்ததே அதிகம். படதையாவைப் பார்த்ததுமே அவன் ரத்தம் கொதித்தது. மகாராஜா எதிரில் இருந்ததாலும் யசவந்தராவின் மரியாதைக்குக் கட்டுப்பட்டதாலும் இதுவரையில் சும்மா இருந்தான். இப்போது பொறுக்க முடியாமல் சொல்லிவிட்டான்.

'அப்படி இல்லை, தம்பி! என்னவானாலும் அவர்கள் சர்க்கார் விருந்தாளிகள். அப்படியெல்லாம சொல்லக்கூடாது?' என்று யசவந்தராவ் ஆறுதல் சொன்னார்.

தாதா சும்மா உட்கார்ந்திருந்தான். ஆனால் அவன் உள்ளத்தில் கோபமும் துக்கமும் பொங்கிப் போராடத் தொடங்கின. படதையாவின் நிழலைப் பார்க்கக்கூட அவனுக்குப் பிடிக்கவில்லை. அவனைப் பார்ப்பதே இவனுடைய கோபத்தைக்

கொழுந்துவிட்டு எரியச்செய்தது. கூடவே சிமணுவின் நினைப்பும் ஓடிவந்து அவன் நெஞ்சின் எரிச்சலை அதிகமாக்கியது. அவளுடைய நாதன் அற்ற வாழ்க்கை, அண்ணலின் ஆதரவுக்காக ஏங்குவது போல் தோன்றியது. தன் கையால் ஆகாத்தனத்துக்காக வெட்கப்பட்டான். துக்கத்தை அடக்க முடியாமல் கண்ணைத் துடைத்துக்கொண்டு, தாதா, வேறு இடத்துக்குப் போய் விட்டான்.

யசவந்தராவின் மனமும் கலவரம் அடைந்தது. மரியாதைக்குக் கட்டுப்பட்டுத்தான் அவர் கௌரவமாக நடந்து கொண்டார். நிகழ்ந்த சம்பவங்கள் அவருக்கும் பிடிக்கவில்லை. லிங்கப்பாவின் தந்தை இறந்த செய்தியைக் கேட்டபோது அபசகுனம் நேர்ந்ததுபோலவே அவர் பயப்பட்டார். மகாராஜாவுக்குச் 'சாப்பாடு விஷயத்தில் திருப்தியாக ஏற்பாடு செய்ய முடியவில்லையே' என்ற குறை வேறு அவர் மனத்தை அரித்துக்கொண்டிருந்தது. ஏக்கத்துடன் பெருமூச்செறிந்தார்.

மகாராஜாவின் உத்ஸாகம் எல்லாம் நாய் இறந்தபோதே குறைந்துவிட்டது. கிப்ஸன் துரையின் எதிரில் தம்முடைய துக்கத்தைக் காட்டிக்கொள்ளவில்லை. தம் முன்னோருடைய நாட்டைப் பார்க்க வந்தவர் என்னத்தைக் கண்டார்? தரிசு நிலம், உப்புச்சப்பில்லாத வேட்டை, திடீர் என்று வந்த மழை, முன்பின் தெரியாத விருந்தினர்கள், நாயின் சாவு எல்லாமாகச் சேர்ந்தே அவருடைய மனத்தைக் கலக்கிவிட்டன. 'தோட்டத்திலிருந்து பாதள்ளிக்குப் போய்ச் சேர்ந்தால் போதும்' என்று ஆகிவிட்டது.

வெளியே மழை நின்றுவிட்ட போதிலும் வெளிச்சம் இல்லை. ஒரு மணி நேரத்துக்கு முன் பேயாட்டம் ஆடிய காற்று நின்று விட்டது. நடுப்பகல் நேரம் ஆனாலும் மாலை நேரம்போல் மேகங்களால் ஒளிமங்கிக் கிடந்தது. மேகம் கவிந்ததாலோ மழையில் நனைந்ததாலோ மரம், செடிகள் எல்லாம் சோர்ந்து தொய்ந்து கிடந்தன. ஓயாமல் மழை பெய்ததால் மேகங்கள்கூடச் சக்தியற்றுக் காணப்பட்டன.

சமையல்கார லட்சுமணன், சாப்பிட அழைத்தபோது யாருக்குமே எழுந்திருக்க மனம் வரவில்லை. யசவந்தராவே எல்லோரையும் வற்புறுத்திச் சாப்பிடச் செய்தார். விருந்தாளிகளை அழைப்பது போலவே இதுவும் அவசியம் செய்ய வேண்டிய கடமைகளுள் ஒன்றாயிற்று. எல்லோரும் யந்திரம் போல எழுந்து சென்றார்கள்.

சேஷப்பா, கிப்ஸன் துரையின் பெயரை நினைத்ததுமே நடுங்கினன். 'சாமராவின் நியமனம் நடக்கக்கூடாது' என்று விண்ணப்பம் எழுதிய விஷயம் வெங்கண்ண வாத்தியாரால் அம்பலம் ஆகிவிட்டது. தான் விரித்த வலையில் தானே விழுந்துவிட்டான். வெங்கண்ண வாத்தியாரை விசாரித்தபோது சேஷப்பா அங்கே இருக்கவில்லை. நடந்தவற்றைச் சிரஸ்தேதார் மூலமாகத் தெரிந்துகொண்டான். 'மேலே என்ன நடக்குமோ?' என்ற கிலி பிடித்துக்கொண்டது. கிப்ஸன் துரை தீர்ப்புச் சொல்லவில்லை. சேஷப்பா, சிரஸ்தேதார் ஜக்கண்ணுவுடன் ஆலோசனை செய்தான். ஜக்கண்ணனுக்கும் 'சேஷப்பாவின் விவாதத்தில் பலம் இல்லை' என்று தோன்றியது. இருந்தாலும் சப்ளைக் கடன் அவன் வாயைக் கட்டிவிட்டது. 'சாமராவின் நியமனத்தின் காலாவதி நாளை வரையில் இருக்கிறது. முடிந்தால் தள்ளிப் போடலாமா? என்று பார்ப்போம்' என்று ஆறுதல் சொன்னார் ஜக்கண்ணு.

சேஷப்பா, மாஜிஸ்திரேட் கிருஷ்ணராவைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டான். 'அஸிஸ்டென்ட் கலெக்டர் என்ன இருந்தாலும் அசல் மனிதன். தங்கள் இருவருக்கும் இருப்பது இன்றியமையாத தொடர்பல்லவா?' என்று நினைத்தான். 'என்னங்க? அந்தத் துரை சிறுபிள்ளைத்தனமாகத் தன் மனம் போனபடி எல்லாம் செய்யலாமா? தன்னுடைய பதவிக்குத் தகுந்தாற்போல் நடந்துகொள்ளவேண்டும். அதை விட்டுவிட்டுக் கௌடர் வீட்டு வரைக்கும் போய் வருவதாவது! சிரஸ்தேதாரிடம் விஷயத்தைக் கேட்டுத் தெரிந்துகொண்டு தஸ்தாவேஜிகளைத் தருவிக்கச் சொல்வதை விட்டு எல்லாவற்றையும் தானே செய்துவிடுவதா?' என்று முறையிட்டுக்கொண்டான்.

மாஜிஸ்திரேட்டுக்குக் கலெக்டர் துரையைத் தூஷிப்பதில் விருப்பம் இல்லை.

'இங்கிலீஷ் துரை அநுபவம் இல்லாத இளைஞன். புதிதாக அதிகாரத்துக்கு வந்திருக்கிறன். நாட்டு ஆபீஸர்களைப்போல் அதிகாரம் நடத்த அவனுக்குத் தெரிந்திருக்க நியாயம் இல்லை!' என்று சொல்லிவிட்டு, 'துரை, வாரிசு ரிஜிஸ்டரை மறுபடி சோதனை செய்யப் போகிறுை, என்ன? தேஷ்பாண்டே வாரிசு

கி—25

விஷயத்தில் நீ செய்த அக்கிரமம் அவன் கண்ணில் பட்டால் வேறு வினையே வேண்டாம்' என்று மாஜிஸ்திரேட், சேஷப்பாவை எச்சரித்தார்.

சேஷப்பாவுக்கு எரிகிற புண்ணில் வேல் பாய்ந்ததுபோல் இருந்தது. எவ்வளவு கஷ்டமான நிலைமை இருந்தாலும் வழிகாணும் அவனுக்கு இப்பொழுது எல்லா வழிகளும் அடைபட்டுவிட்டன. தன்னிடம் வந்தவர்களை எல்லாம் சூத்திரப் பாவைபோல் ஆட்டிவைத்த அவனுடைய புத்தி சாதுரியத்துக்கு இப்போது மதிப்பே இல்லை. அவன் படைத்த பாத்திரங்களே அவனை எதிர்த்துப் புரட்சி செய்தன. கௌடர் மனைவியும் வெங்கண்ணு வாத்தியாரும் அவனைக் காட்டிக் கொடுத்து விட்டார்கள். சிரஸ்தேதாரும் மாஜிஸ்திரேட்டும் அவனுக்கு உதவ முடியாத நிலையில் இருந்தார்கள். 'இனிமேல் தஸ்தாவேஜு அவன் வசம் இருக்காது. சாமராவிடம் சார்ஜை ஒப்பிப்பதைத் தடுக்க முடியாது' என்பதை நினைத்ததும் சேஷப்பாவுக்குத் துக்கம் பொங்கிவந்தது. வருத்தத்துடனே வீட்டுக்குப் புறப் பட்டான். லேசாக மழை தூறிக்கொண்டு இருந்தது. அவன் அதை லட்சியம் செய்யவே இல்லை. யந்திரம்போல் நடந்து வீட்டை அடைந்தான். தஸ்தாவேஜில் தான் பாதி பாதி செய்துவிட்டிருந்த வேலையை முடிக்க நினைத்துக் கட்டை அவிழ்த் தான்.

கணக்கப்பிள்ளையின் தஸ்தாவேஜ் சாமராவுக்குப் போனாலும், மணியக்காரரின் தஸ்தாவேஜ் தன்னிடமே இருக்கும் என்று ஆறுதல் கொண்டான். மணியக்காரரின் தஸ்தாவேஜை அழுத்திக் கட்டி வைத்துவிட்டுக் கணக்கப்பிள்ளை தஸ்தாவேஜை அவிழ்த்தான்.

'சாப்பிடும் நேரம் ஆயிற்று' என்று அவன் மனைவி வந்து கூப்பிட்டாள். சேஷப்பா திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. அவன் நோக்கில் உலகமே பறிபோய்விட்டது. தன் தஸ்தா வேஜோடு ஐக்கியம் ஆகிவிட்டான். மரணத் தறுவாயில் உயில் எழுதி முடிக்கும் தீர்மானத்தோடு உட்கார்ந்ததுபோல் அவன் எழுதுவதில் முனைந்திருந்தான். தஸ்தாவேஜ் அவன் கொள் கைப்படி கூடவே பிறந்துவந்த சொத்தாக இருந்தது. கர்ண னுடைய கவச குண்டலங்களைப்போல் அது அவனுடைய செயல் திறமையின் வெளி உருவமாக இருந்தது. தஸ்தாவேஜை வேறொருவர் கையில் கொடுப்பது பாதள்ளிக் கிராமத்தின் அதிகாரத்தையே வேறொருவரிடம் இழந்துவிடுவதுபோல் அவனுக்குத் தோன்றியது. வாழ்க்கையையே தியாகம் செய்வது

போன்ற துக்கம் உண்டாயிற்று. எல்லா முயற்சிகளும் வீணான பின் இந்த ரிஜிஸ்தரை இழந்துவிடுவது தவிர்க்க முடியாத தானபின்—பலியாக இருக்கும் ஆட்டின் அநுபவம் போன்ற அநுபவம் சேஷப்பாவுக்கு உண்டாயிற்று. மன உறுதியுடன் இந்தத் துன்பத்தை அநுபவித்தே தீரவேண்டியிருந்தது.

சேஷப்பாவின் முகத்தில் என்றும் இல்லாத கம்பீரத் தோற்றம் இருந்தது. சோக நாடகம் ஒன்றின் கடைசிக் கட்டம் போல், காலம் அவனைப் பொறுத்தமட்டில் பொய்ப் பெருமை யோடு கூடியிருந்தது. இந்த உலக நினைவே இல்லாமல் எழுதிக் கொண்டேதான் இருந்தான். எழுதி முடித்தபோது மழை நின்றிருந்தது. குளித்தேன் என்று பெயர் பண்ணிவிட்டுச் சாப்பிட்டுவிட்டுத் துக்கமே உருவாகக் கூடத்துக்கு வந்தான். மனம் சோர்ந்துவிட்டதால் சற்றுப் படுக்க நினைத்தான். அதற்குள் லிங்கப்பாவும் படதையாவும் உள்ளே வந்து அடைக் கலம் புகுந்தார்கள். அதைக் கண்ட சேஷப்பாவுக்குக் காலின் கீழ் இருந்த நிலம் சரிந்ததுபோல் ஆச்சரியம் உண்டாயிற்று.

இனிமேல் லிங்கப்பா, பாதள்ளிக்கு வரமுடியாது. மணியக் காரர் தஸ்தாவேஜ் தன்னைச் சேர்ந்ததுதான் என்று ஆறுதல் அடைந்திருந்த சேஷப்பாவின் மனம் அவர்கள் இருவரையும் கண்டதும் கவலைக்கு உள்ளாகியது. 'விதி தன் ஒருவனையே துரத்தி வேட்டை ஆடுகிறதோ?' என்று அவன் நினைத்தான். லிங்கப்பாவைக் கண்ட அதிர்ச்சியிலிருந்து விடுபடாததால் வந்தவர்களை, 'எப்பொழுது வந்தீர்கள்?' என்னும் நற்பண்புகூட அவனிடம் காணப்படவில்லை. வைத்த கண் வாங்காமல் அவர் களையே பார்த்துக்கொண்டு நின்றான்.

படதையாவே பேச்சை ஆரம்பித்தார். 'கணக்கப்பிள்ளை! நான் ஆயிரம் தப்புச் செய்திருந்தாலும் அதை நீங்க மன்னிக் கணும். நீங்கதான் எங்களுக்குப் பெரியவங்க. உங்களை நம்பித் தான் லிங்கப்பாவைக் கூட்டியாந்தேன். நீங்க வாண்டாம்னு சொன்னா அவன் இன்னிக்கே போயிடுவான். நாளைக்கு வாரிசு பற்றிய அப்பீலை விசாரணை செய்யப்போறாங்களாம். இப்போ ஒங்க யோசனையைக் கேக்க வந்திருக்கோம்' என்று பெருந் தோரணையுடன் சொல்லிவிட்டு உட்கார்ந்துகொண்டார். லிங்கப்பாவின் மௌனம் படதையாவின் கருத்தை ஆமோதிப்பது போல் இருந்தது.

அதற்குள் சேஷப்பா, சமாளித்துக்கொண்டு, 'பாருங்க, சாமியார்! அப்பீல் விசாரணை நடத்துபவன் கிப்ஸன் தொரை. அப்படியிருக்க நான் செய்ய என்ன இருக்கிறது? லிங்கப்பாவின்

வாரிசு, காயமாஞல் அவர் மணியக்காரராவார். நான் வாண்டாம்னு சொன்ஞலும் அவர் இந்த ஊரில் இருப்பார். சும்மா எனக்குப் பெரிய தனம் கொடுத்து எதற்காகப் பேச றீங்க?' என்று பிடி கொடுக்காமல் பேசிஞன் சேஷப்பா.

தாஞம் ஏதாவது சொல்லவேண்டும் என்று லிங்கப்பாவும் பேச்சைத் தொடங்கிஞன். 'கணக்கப்பிள்ளே, என்னே வாரிசாக எழுதியவர் நீங்கதான். நாங்க வேண்டாம்னு சொன்னபோதும் அப்பீல் செய்யச் சொன்னது நீங்கதான். இப்ப அப்பீல் விசாரணேக்கு ஆஜராகச் சொன்ஞல் ஆஜராகிறேன். வாண் டாம்னு சொன்ஞ விட்டுடறேன். உங்க மனசுக்குத் தோணினதைச் சொல்லுங்க' என்று கெஞ்சிஞன்.

'இதோ பார், லிங்கப்பா! சர்க்கார் விவகாரத்துலே என் யோசனேயை எதுக்காகக் கேக்கணும்? இந்தப் படதையா உனக்கு ஆதரவா இருக்காரு. அவரே உன்னே அழைச்சிட்டு வந்திருக்காரு. இனிமேல் நீ அவர் சொல்வதைக் கேட்கத்தான் வேணும். அப்படிச் செய்வதாஞல் அப்பீலுக்கு ஆஜராகலாம். அப்பீல் சாதகமாஞல் உனக்கு வெற்றி, எனக்குத் தோல்வி. நீ நான் சொன்னபடி கேட்க வேண்டியதில்லே. இதைப்பற்றி எனக்கு ஒன்றும் சொல்லவும் தெரியாது' என்று சேஷப்பா அதே தந்தியை மீட்டிஞன்.

ஆஞல் படதையாவின் பிடி, உடும்புப் பிடி. சேஷப்பாவை மயக்கும் ஜாலவித்தை அவருக்குத்தான் தெரியும். 'கணக்கப் பிள்ளே, உங்க கையிலே தஸ்தாவேஜு இருக்கு. நீங்க மனசுவச்சா லிங்கப்பாவை ஒதச்சுத் தள்ளீடலாம். இல்லாவிட்டால் இந்த ஊருக்கு ராஜாவாக்கலாம். ராஜாவாக்கிஞல் ஊரில் வந்து வாழலாம். இல்லாவிட்டால் என்னேப்போல் ஊரை விட்டுப் போய் அறுந்த பட்டமாகப் பறக்கவேண்டும். அவன் உங்களுக்கு வேண்டியவன் ஆஞக்கா உங்க பின்ஞலே நாலுபேர் இருப்பாங்க. அவனுக்கும் நாலுபேர் வேண்டியவங்களா இருப்பாங்க. நீங்க அடைக்கலம் கொடுக்காட்டி என்ன செய்ய முடியும்? பிறந்து வளர்ந்த வீடு இருக்கவே இருக்கு. ஆட்டு மந்தையை மேய்ச்சு கிட்டு அலேவான். அவ்வளவுதான்!' என்று ஒரு பிரசங்கம் செய்துவிட்டு நீண்ட பெருமூச்சு ஒன்றை விட்டார்.

இந்தச் சொற்கள் சேஷப்பாவுக்கு மண்டையில் அடித்தது போல் இருந்தன. அவனுடைய புண்பட்ட உள்ளம், படதை யாவின் பேச்சில் லிங்கப்பாவின் இரங்கத்தக்க நிலேயைக் காண வில்லே. தன்னுடைய வீழ்ச்சியை எடுத்துச் சொல்வதுபோல் தோன்றியது. 'கணக்கப்பிள்ளே தஸ்தாவேஜு நாளேக்குக் கையை விட்டுப் போஞல் தன் பின்ஞல் நாலுபேர் வரமாட்டார்கள்'

என்னும் கசப்பான உண்மை அவனுக்குத் தெரிந்தது. அந்த நிலையில் தான் 'லிங்கப்பாவுக்கு உதவிசெய்தால் அவனோடிருக்கும் நாலு பேராவது தன் சொற்படி கேட்பார்கள் அல்லவா?' என்று அவன் நினைத்தான். சர்வநாசம் தன்னை நெருங்கியபோதும் சேஷப்பாவின் நம்பிக்கை அடியோடு குறைந்துவிடவில்லை. எந்த விவகாரம் தனக்கு நன்மையைத் தருமோ! யாருக்குத் தெரியும்? சுயநலத்தை நிலைநிறுத்திக்கொள்பவனும் 'தன்னுடைய வாழ்க்கையின் அடித்தளம் பத்திரமாக இருக்க வேண்டும்' என்று ஆசைப் படுபவனும் அஜாத சத்துருவாகத்தான் இருக்கவேண்டும்.

சேஷப்பாவின் பேச்சுத் திடீரென்று திசை மாறியது. 'லிங்கப்பா, நம் பேச்சைக் கேட்டுக்கொண்டிருப்பான் என்று தான் நான் வாரிசு விவகாரத்தில் தலையிட்டேன். உதவி செய்தேன். ஆனால் என்னையே எதிர்த்துச் சமபங்கு கேட்டான். புத்தி கற்பிக்கணும்னுதான் கௌடர் மனைவிமூலம் எதிர்த்து அப்பீல் செய்யவேண்டி வந்தது. இப்ப அம்பு கையை விட்டுப் போய்விட்டது' என்ற சேஷப்பா லிங்கப்பாவின் முகத்தைப் பார்த்தான்.

'கணக்கப்பிள்ளை, உங்கள் ஆசீர்வாதம் ஒண்ணுதான் வேணும். நீங்க மனசுவச்சா நீங்க விட்ட அம்பு ஒங்க அம்பறாத் தூணிக்கே வந்து சேரும். அதற்கு எவ்வளவு நேரம் ஆகும்? அப்படி நடக்காட்டி எம் பேரை மாத்தி வையுங்க!' என்று குறிப்பாகச் சொல்லி, படதையா, என்ன செய்ய வேண்டும் என்பதையும் உணர்த்திவிட்டார்.

சேஷப்பா, படதையா இருவரும் உட்புறத்து அறையில் உட்கார்ந்து ரகசிய ஆலோசனை நடத்தினார்கள். அறையிலிருந்து வெளியே வந்த படதையாவின் முகம் சந்தோஷத்தால் மலர்ந்திருந்தது. 'லிங்கப்ப கௌடரே! எழுந்திருங்க. மேலே செய்ய வேண்டிய வேலை ரொம்ப இருக்கு' என்று லிங்கப்பாவைக் கிளப்பினார். லிங்கப்பா என்ன நடந்திருக்கும் என்பதை அறிய விரும்பினான். ஆனால் அங்கே பேச முடியுமா? 'நடப்பது நடக்கட்டும்' என்று படதையாவின் பின்னால் நடந்தான். சேஷப்பாவுக்கு வணக்கம் சொல்லிவிட்டு இருவரும் மடத்துக்குப் போனார்கள்.

படதையாவும் லிங்கப்பாவும் ஊருக்கு வந்த செய்தி ரகசியமாக இருக்கவில்லை. அவர்கள் கோட்டையில் கால் வைத்ததுமே பார்வதியம்மாவிடம் யாரோ சொல்லிவிட்டார்கள். 'அப்பீல் நடத்துவதற்கு லிங்கப்பா வந்திருப்பான்' என்று அவள் கவலைப் பட்டாள். சில காலமாக அவள் ஒவ்வொரு நிமிஷமும் பயந்து கொண்டே இருந்தாள். தோல்விமேல் தோல்வி வந்துகொண்டே

இருந்ததால் அவளுடைய பெண் மனம் அஞ்சியது. சேஷப்பாவுக்குச் சொல்லியனுப்பினுள். ஆனுல் அவன் 'ஏதோ ஒரு முக்கியமான வேலையில் ஈடுபட்டிருப்பதால் வர இயலாது' என்று சொல்லி அனுப்பிவிட்டான். பார்வதியின் கவலை விச்வரூபம் எடுத்தது. அவள் படும் துன்பத்தைக் காணச் சகிக்காதவனுய் ஜின்னப்பாவே போய்ச் சேஷப்பாவை அழைத்து வந்தான். சேஷப்பா முணுமுணுத்துக்கொண்டே வந்தான்.

'என்னங்க, லிங்கப்பா வந்துட்டானுமே?' என்று பார்வதி பரபரப்புடன் கேட்டாள்.

''அவன் எப்படி வராத இருப்பான். 'பாளாச்சார் அவனுேடே சேந்துகிட்டுச் சூழ்ச்சி செய்யருர்'ன்னு சொன்னேன். நீங்க நம்பல்லே. பாத்தீங்களா இல்லையா? லிங்கப்பா முன்னுலேயே ஜாகீர்த் தோட்டத்துக்குப் போய் யசவந்தராவைப் பார்த்துப் பேசிட்டு வந்திருக்கான். நேத்து நீங்க என் உயிருக்கு ஒலை வைக்கருப்பலே எனக்கு எதிராப் பதில் சொல்லிட்டீங்க. எனக்கு இந்தப் பாழும் ஜோலி போதும் போதும்னு ஆயிட்டுது. நீங்களாச்சு, உங்க அப்பீலாச்சு. எனக்கு ஒண்ணும் வேண்டியிருக்கலே' என்று சிடுசிடுப்போடு சொல்லித் தனக்கு ஒன்றும் அக்கறை இல்லாததுபோல் நாடகம் ஆடினுன்.

பார்வதியம்மாள் கண்ணீர்விட்டாள். 'தனக்கு ஒன்றும் தெரியவில்லை. சேஷப்பா வந்து சொல்லிக் கொடுத்திருந்தால் அப்படியே சொல்லியிருக்கலாம்' என்பது அவளுடைய வாதம். 'துரை வீட்டுக்கு வந்து கேள்வி கேட்டான். கைகால் ஓடவில்லை. தெரிந்த உண்மையைச் சொல்வற்குள் வேர்த்துக் கொட்டி விட்டது' என்று தப்பை ஒப்புக்கொண்டாள் பார்வதி.

'உங்களுக்கு வேர்த்துக் கொட்டிவிட்டது. எனக்கு உயிருக்கே வந்துவிட்டது. இப்ப நான் ஒன்றும் செய்யருப்பலே இல்லை. என் கைமீறிப் போயிட்டுது' என்று விட்டேத்தியாகப் பேசினுலும் கடைசியில் ஓர் உபாயம் சொன்னுன்: ''துரை பெல்காமில் இருந்தபோது காலாவதி கொடுக்கும்படி சிரஸ்தேதாரிடம் சொல்லி இருந்தேன். என்ன நடக்கிறதோ நடக்கட்டும். மகாராஜா வந்திருக்கும் தடபுடலில் 'துரையின் சப்ளை ஏற்பாடு சரியாக இல்லை' என்று அவர் உறுமுகிருர்'' என்று தன்னுடைய சங்கடத்தைத் தானே முறையிட்டுக்கொண்டான்.

பார்வதியம்மா, 'கேஸ் விசாரணைக்கு வந்தால் வக்கீலை வைத்து நல்லா நடத்தலாம். கால அவதி கொடுக்கச் சொல்லுங்க. சப்ளைச் செலவைப்பத்தி நீங்க கவலைப்பட வேண்டாம்' என்று ஆறுதல் சொன்னுள்.

சேஷப்பா, கால அவதி கொடுக்கச் சொல்வதாகச் சொல்லி, சப்ளைச் செலவைக் கொடுப்பதாகப் பார்வதியிடம் உறுதிமொழி வாங்கியபின் அங்கிருந்து வெளியேறினன். புதிய தந்திரத்துக்கு ஒரு சூத்திரம் கிடைத்ததுபோல் அவனுக்கு ஆறுதலாக இருந்தது. தன்னுல் ஆகவேண்டிய வேலைகள் இன்னும் இருப்பதாகத் தெய்வம் சங்கல்பித்திருக்கிறது போலும்! இல்லாவிட்டால் எல்லா வற்றையும் இழந்து நிராதரவாக வெட்ட வெளியில் நின்றிருக்கும் போது, சொல்லியனுப்பியதுபோல் லிங்கப்பாவும் படதையாவும் வந்திருப்பார்களா? சேஷப்பாவுக்கு மறுபடியும் தன்னம்பிக்கை துளிர்விட்டது. கால்கள் புதிய பலத்தைப் பெற்றன. 'கடவுள் கொடுத்த இந்தச் சந்தர்ப்பத்தை உபயோகித்துக்கொண்டால் தன்னுடைய அதிகாரம் மறுபடியும் நிலைத்துவிடலாம்' என்று எண்ணி உத்ஸாகமாக நடைபோட்டான்.

சேஷப்பா, சாவடிப்பக்கம் வந்தபோது ஜனங்கள் கும்பலாக மாளிகையை நோக்கி ஓடுவதைக் கண்டு, 'என்ன நடக்கிறதோ, பார்க்க வேண்டும்' என்ற ஆவலுடன் ஒரு கணம் நின்றுன். சற்று நேரத்தில் மாளிகையிலிருந்து தாதா, படதையாவைச் சுமந்து கொண்டு சாவடிப்பக்கம் வருவது தெரிந்தது. இந்தக் காட்சி, சேஷப்பாவுக்குப் பயத்தையும் ஆச்சரியத்தையும் உண்டாக்கியது. தாதா, நேராகச் சாவடியின் முன்னுல் இருந்த சதுக்கத்தைக் கடந்து மசூதிப்படிகளில் ஏறி, படதையாவை அங்கே உட்கார்த்தி விட்டு இறங்கி வந்தான். மாளிகைப்பக்கம் ஜனங்கள் ஓடியது; தாதாவின் விபரீதமான துணிகரச்செயல்; இரண்டையும் தொலை விலிருந்தே பார்த்த சேஷப்பா, விஷயத்தை ஊகித்துவிட்டான். ''படதையா, மடத்துக்குப் போயிருக்க வேண்டும். ஜனங்கள் அவரை எதிர்த்து மடத்திலிருந்து வெளியேற்றிக் 'குரு லிங்கையா வுக்குச் சேர்ந்த மடம் அவர் வசத்திலேயே இருக்க வேண்டும்' என்று செய்த தந்திரம் இது'' என்று தெரிந்துகொண்டான். 'மசூதிக்குப் போய்ப் படதையாவைத் தன் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போகலாம்' என்ற யோசனை வந்தது. ஆனுல் அதற்குச் சந்தர்ப்பமே கிடைக்கவில்லை. மாஜிஸ்திரேட்டின் டவாலியான உஸ்மான் வந்து சலாம் செய்து, மாஜிஸ்திரேட் கூப்பிடுவதாகத் தெரிவித்தான். சேஷப்பா, தன் உத்தேசத்தை மாற்றிக்கொண்டு பள்ளிக்கூடத்தில் நுழைந்தான்.

ஊரில் இவ்வளவு போலீஸ்காரர்கள், மாஜிஸ்திரேட், மடத்துக்கு அடுத்த மாளிகையில் மகாராஜா, இவ்வளவு பேர் இருக்கும்போது, தாதா, படதையாவைச் சுமந்துவந்து மசூதியில் இறக்கியிருக்கிறுனே! அக்கிரமத்துக்கு இதைத் தவிர வேறு சாட்சி வேணுமா? 'இந்தச் செய்தியை மாஜிஸ்திரேட்டிடம் சொல்லிப்

புதிய விவகாரம் ஒன்றைச் சிருஷ்டிக்கலாம்' என்று சேஷப்பா மகிழ்ச்சி அடைந்தான். அந்த வெறியுடனே உள்ளே கால் வைத்தான். ஏதோ வேலையில் ஆழ்ந்திருந்த மாஜிஸ்திரேட் நிமிர்ந்து பார்த்தார். எதிரே சேஷப்பா இருந்தான். அவர் முகம் திடீரென்று கறுத்தது. புருவங்கள் சுருங்கின. கடைக் கண்கள் சிவந்தன. வழக்கம்போல் மீசை துடித்தது.

அதிகாரிகளின் இந்த முகபாவத்தைப் படித்துப் புரிந்து கொள்வதில் சேஷப்பா நிபுணன். 'ஏதோ ஆபத்துக் காத்திருக் கிறது' என்பது அவனுக்குத் தெரிந்தது. அதற்கு ஏற்றபடி முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டான். கையைப் பிசைந்தான். முகத்தில் அசட்டுச் சிரிப்புக் குடியேறியது. 'எந்த உபாயத்தால் மாஜிஸ்திரேட்டின் கோபத்தைத் தணிக்கலாம்' என்று யோசனையில் ஆழ்ந்த சேஷப்பா, அவருடைய உத்தரவுக் காகக் காத்திருந்தான்.

மாஜிஸ்திரேட் கிருஷ்ணராவ் அவனை உறுத்துப் பார்த்தார். மேஜையில் இருந்த ஒரு காகிதத்தை முன்னால் நகர்த்தி, ''சேஷப்பா! உன்னை வேலையிலிருந்து 'சஸ்பெண்டு' செய்யச் சொல்லிக் கலெக்டர் உத்தரவிட்டிருக்கிறார். 'பஞ்ச நிவாரணக் கடனை ஜனங்களுக்குச் சரியாகக் கொடுக்கவில்லை.' பஞ்சகால உதவிக்கு என்று விண்ணப்பம் எழுதி, ஊர் ஜனங்களிடம் அதில் கையெழுத்து வாங்கி, அதில், 'சாமராவுக்கு வேலை கொடுக்கக் கூடாது' என்று எழுதியிருக்கிறாய்—என்று உன்மேல் குற்றம் சாட்டியிருக்கிறார். 'கேஸ் போடவேண்டும்' என்று உத்தரவு போட்டிருக்கிறார். 'உன்னிடமிருந்து தஸ்தாவேஜுகளைத் தருவித்து உடனே சாமராவிடம் சார்ஜைக் கொடுக்கவேண்டும்' என்று எனக்குத் தெரிவித்திருக்கிறார். அதனால் இப்பொழுதே தஸ்தாவேஜுகள் எல்லாம் வரவேண்டும்'' என்று கடுமையான குரலில் சேஷப்பாவின் இதயம் வெடிக்கும்படி செய்தி சொன்னார்.

சேஷப்பா இந்தச் சொற்களைச் சாபத்தை ஏற்றுக்கொள்வது போல் கேட்டுக்கொண்டான். சற்று நேரம் சிலைபோல் அசையாமல் நின்றான். 'தன் வாழ்க்கையே முடிந்துவிட்டது' என்று நினைத்தான். மாஜிஸ்திரேட் நாகாஸ்திரம் விட்டது போன்ற செய்தியைச் சொல்லி, அவனுடைய உயிரையே உறிஞ்சிவிட்டார். மேலே பேச இடம் இல்லை. ஆனால் சாப விமோசனம் இருக்கும் அல்லவா?

'ஸார், இந்த ஒரு தடவை என்னை மன்னித்துவிடுங்கள்' என்று ஏக்கமே உருவாக இருந்த சேஷப்பா, கெஞ்சிக் கேட்டான்.

மாஜிஸ்திரேட் இரக்கப்படவில்லை. 'இது என்னுடைய உத்தரவு அன்று; தெரிந்ததா? கலெக்டர் துரை போட்டிருக்கிறன். வேணுமானல் அவனிடமே போய்ச் சொல்லிக்கொள். என் வேலையைத்தான் நான் செய்யமுடியும். உடனே தஸ்தாவேஜ்கள் வரவேண்டுமே' என்று கர்ஜித்தார். 'இரண்டு நாள்களுக்கு முன் அவர் காட்டிய இரக்கத்துக்கும் இன்று காட்டும் கோபத்துக்கும் எவ்வளவு வேற்றுமை! அதிகாரிகளுக்கு இதயமே இருக்காதோ!' என்று சேஷப்பா ஆச்சரியப்பட்டான். அந்தக் குரலின் கடுமையைக் கேட்ட அவனுடைய ஆசைகள் எல்லாம் அற்றுப் போயின.

'இருட்டி ஒரு மணி நேரம் ஆகிவிட்டதே. நாளைக் காலையில் தஸ்தாவேஜுகளைக் கொண்டுவந்து சார்ஜ் கொடுத்தால் போதாதா?' என்று கேட்ட சேஷப்பாவின் குரல், கிணற்றிலிருந்து வருவதுபோல் கேட்டது. அதிகாரியின் இரும்பு நெஞ்சத்தைப் பிளக்கும் கடைசி அஸ்திரம் அது.

''கலெக்டர், 'ஐந்து மணிக்கே ஆர்டர் ஜாரி செய்ய வேண்டும்' என்று உத்தரவு போட்டிருக்கிறர். ஊரில் சல்லடை போட்டுச் சலித்தாலும் உன்னைக் காணவில்லை. சாயங்காலத்துக்குள் உத்தரவை ஜாரி செய்துவிட்டதாக ரிப்போர்ட் கொடுக்க வேண்டும். தஸ்தாவேஜு வந்தாக வேண்டும். இப்போது உன் கூடவே போலீசார் வருவார்கள். அவர்களிடம் கொடு. இதோ இப்ப இந்த உத்தரவு கெடைச்சதுக்குக் கையெழுத்துப் போடு'' என்றர் மாஜிஸ்திரேட், அவனை மேலே பேச விடாமல்.

சேஷப்பா அவருடைய ஒவ்வொரு சொல்லையும் விவரமாகக் கேட்டுக்கொண்டிருந்தான். யமனே தன் முன் நின்று பேசுவது போல் அவனுக்குத் தோன்றியது. மந்திரத்தால் கட்டுண்ட பாம்பைப்போல் இருந்தது அவன் நிலை. நாக்கு வறண்டு விட்டதால் பேச்சு எழவில்லை. கண்கள் இருண்டன. மாஜிஸ்திரேட் முன்னே தள்ளிய காகிதத்தில் கையெழுத்திட நீட்டிய கை, பயத்தால் நடுங்கியது. எழுதவே முடியவில்லை.

செத்துக்கொண்டிருக்கிற நோயாளியின் அசைவைக் கவனிக்கும் டாக்டரைப்போல் மாஜிஸ்திரேட், சேஷப்பாவை மனத்தில் சலனம் இல்லாமல் பார்த்துக்கொண்டிருந்தார்.

போகும்போது ஏக்கம் மிகுந்த பார்வை ஒன்றை மாஜிஸ்திரேட்டின் பக்கம் செலுத்திஞன் சேஷப்பா. அது பயன் அளிக்கவில்லை. அவர் அவனை நிமிர்ந்தே பார்க்கவில்லை.

ஈமச்சடங்குகளை முடித்து விலகும் புரோகிதனைப்போல், அவர் தம் கடமையைச் செய்து முடித்தார்.

சேஷப்பாவின் வீட்டிலிருந்து போலீசார் கணக்குப்பிள்ளையின் தஸ்தாவேஜுகளைச் சாவடிக்குக் கொண்டுவந்தார்கள். அவனும் அவர்களுடன் சாவடிக்கு வரவேண்டியதாயிற்று. அங்கே வந்ததும் சார்ஜ் மாற்றக் காகிதத்தைத் தயாரித்துக் கொடுத்தான். இந்தச் சடங்குகள் எல்லாம் நடக்கும்போது முதலில் சிநேகத்தோடு பழகியவர்கள் எல்லோரும் அலட்சியமாகப் பார்க்கத் தொடங்கினார்கள். அன்று இரவு அவன் வீட்டுக்குத் திரும்பிப் போகவில்லை. 'அங்கேயே கோபால்ராவுடன் படுத்துக் கொள்கிறேன்' என்று சொல்லியும், போலீஸார் கேட்கவில்லை. 'தர்ம சத்திரத்தின் அறை ஒன்றிலேயே அவன் படுத்திருக்க வேண்டும் என்று உத்தரவாகி இருக்கிறது' என்றார்கள். 'தப்புவோம்' என்ற எண்ணம் சேஷப்பாவுக்கும் இல்லை. வேறு வழி இல்லாமல் சம்மதித்தான்.

அன்று நடுப்பகலில் பிடித்த மழை நிற்கவில்லை. விட்டுவிட்டுப் பெய்தது. மேகங்கள் நிறைந்து இருந்ததால் நட்சத்திரங்கள் கூட ஒளி வீசவில்லை. மேல்காற்று வீசிக் குளிரை அதிகமாக்கியது.

சேஷப்பா, தர்ம சத்திரத்தில் ஒரு கம்பளியில் படுத்துக் கொண்டிருந்தான். அவனுக்கு இது முதல் அநுபவம். கம்பளியின் மேல் குளிர் நடுக்கும்போது இந்த மனநிலையில் தூக்கம் வருவதற்கு இடமே இல்லை. அவனுடைய இருபது வருஷ வாழ்க்கை அநுபவம் விதம் விதமாகக் கண்முன் தோன்றி மறைந்தது. இது போன்ற பல குற்றங்களை அவன் செய்திருந்தான். ஒவ்வொரு குற்றத்துக்கும் அவனுக்கு ஏழேழு வருஷ தண்டனை கிடைத்திருக்க வேண்டும். ஆனால் ஒரு தடவையும் அவன் தண்டனைக்கு உள்ளாகவில்லை. என்ன புண்ணியமோ? அவைகளிலிருந்து நழுவிக் கொண்டிருந்தான். சட்ட ஞானம் அவனுக்கு விலைமதிப்பற்ற சொத்தாக இருந்தது. சட்டத்திலிருந்து புதிய வழியைக் கண்டுபிடிக்கும் அவனுடைய புத்திசாலித்தனத்தை மெச்சிக் கை நிறையப் பணம் சம்பாதித்துக் கொடுத்த அவனுடைய செயல்களின் முன்பு இன்று கிப்ஸன் துரை காட்டிய குற்றங்கள் மிக அற்பமானவை. ஆனால் அந்தச் செயல்களே இன்று பாதள்ளியில் அவனுடைய கௌரவத்தைச் செல்லாக் காசுகூடப் பொறாததாகத் தாழ்த்திவிட்டன. சாட்சிகளை உடைத்துப் பெயர்களை மாற்றிச் செத்தவர்களைப் பிழைப்பித்துக் கேஸ்களை ஜெயிக்கும் தன்னைப் போன்ற செயல்வீரனுக்குக் கேஸ் என்றால் என்ன பயம்?

ஆனால் மாந்திரிகனுடைய மந்திரக்கோல் தொலைந்துபோய் விட்டது. நியமம் தவறினால் எழுந்துவந்த பூதம் தன்னை ஏவினவனையே விழுங்கிவிடுமாம். அதுபோல் ஆயிற்று, சேஷப்பன் கதி. அவனுடைய தஸ்தாவேஜுகள் அவன் கையில் இல்லை. அது அவனது குலத்தொழிலின் திறமையைக் காட்டும் நாடக மேடையாக இருந்தது; மதிநுட்பத்தைக் காட்டும் குஸ்தி அரங்கமாக இருந்தது. பாம்பைப்போல் வஞ்சம் வைத்துக்கொள்ளும் ஜனங்களையும் ஆட்டிவைக்கும் கருடரேகை அதிலேதான் இருந்தது. பல அநாதைகள், பல கர்விகள் ஆகியோருடைய தலை எழுத்து அதிலே அடங்கியிருந்தது. சேஷப்பா அவர்களின் விதியையே தீர்மானித்துக்கொண்டிருந்தான். ஊர் ஜனங்களின் சொத்து முழுவதும் அவன் நினைத்ததுபோல் தங்குவதும் அழிவதுமாக இருந்தது. வயலின் எல்லைகள் ஓரிரவு விடிவதற்குள் இடம் மாறிக் கொண்டிருந்தன.

ஆனால் இப்பொழுது அந்த இந்திரஜாலம் எல்லாம் கவைக்கு உதவாதவையாக ஆகிவிட்டன. சேஷப்பா பல்போன புலி ஆகிவிட்டான். அவன் கண்ணுக்கு வருங்காலம் துன்பமயமாகத் தெரிந்தது. அதிகாரம் கையில் இருக்கும்போது ஜனங்கள் அவன் சொன்னபடி கேட்டார்கள். ஆனால் கால் கீழே விழுந்துவிட்டது. விழுந்ததால் பட்ட அடியே பொறுக்க முடியவில்லை. ஆளுக்கு ஒரு கல்லாக வீசுவதைத் தடுத்துக்கொள்ளவும் வேண்டி இருந்தது. பலவீனம் சாவைவிடக் கொடியதாக இருந்தது.

'வெகு எளிதாக வலையில் விழுந்துவிட்டோம் அல்லவா?' என்று அவனுக்குத் துக்கமாக இருந்தது. கொடிய குற்றத்துக்காகத் தண்டனையை அநுபவிப்பது என்றால் அதன் பெருமையே வேறு. கொலை, கொள்ளை, திருட்டு முதலிய கொடிய குற்றங்களையே மண்ணில் புதைத்துவிட்ட வீரன் அவன். அப்படிப்பட்டவன் இந்த அற்பமான தவற்றுக்காகத் தண்டனை அடைவதா? ஆயிரக்கணக்காக லஞ்சம் வாங்கிச் சஸ்பெண்டு ஆனால் அது விஷயம் வேறு. பொதுவாக 'இந்த மாதிரி வேலையில் இறங்கியிருக்கக் கூடாது' என்று அவனுக்குத் தோன்றியது.

'கேஸ் போட்டால் மேலே என்ன செய்வது' என்று சேஷப்பா கவலைப்பட்டான். இனிமேல் கணக்கப்பிள்ளை வேலை கிடைப்பது அரிது. ஊர் முழுவதும் சப்பாத்திக்கள்ளிபோல் கணக்கப்பிள்ளை குடும்பம் பரவியிருக்கும்போது ஜன்மத்தில் ஒருதடவை கணக்கப்பிள்ளை முறை வந்தால் அதிகம். அந்த நிலையில் அவன் எதிர்ப்பில்லாமல் கணக்கப்பிள்ளையாக இருந்தவன். கேஸ் வந்தால் வேலையின் ஆசையை விட்டுவிட வேண்டியதுதான். 'கேஸ்

போட்டால் சாட்சிகளை உடைக்க முடியுமா?' என்ற கவலை வர வில்லை. எல்லாம் ஆசையைத் தூண்டிவிடும் கவலைகளே.

சுயநலத்தைச் சாதிக்கும் திறமை, சேஷப்பாவுக்கு ரத்தத்தில் ஊறி வந்த குணம். அதன் பலத்தாலேயே அவன், பாதள்ளி நிலத்தில் வேர்விட்டு வளரத் திறமை பெற்று இருந்தான். எந்த விஷயத்திலும் அவனுடைய புத்தி சொந்த லாபத்தையே கணக்குப்போடும். அதுபோலவே காற்றுக்கு ஏற்றபடி அவனுடைய குணம் மாறிக்கொண்டிருந்தது. அதில் இருக்கும் ஆபத்துகளை அவன் கவனிக்கவில்லை. வெளிப்புறத்தை மட்டுமே நோக்கி வளர்ந்து வந்த அவனுடைய தனித்தன்மை உட்புறம் திரும்பவே இல்லை. இப்பொழுது வானத்திலிருந்து பாய்ந்த இடிபோல் சர்வநாசம் தலைக்குமேலே தொங்கிக் கொண்டிருந்தது. அது பயங்கரமாக விரிந்து வந்ததால் உலகமே அதில் மறைந்துவிட்டது. எங்கேயும் நிற்பதற்கு ஓர் அடிகூட இடம் கிடைக்காதபோதுதான் மனிதன் தன்னைத் திரும்பிப் பார்த்துக்கொள்வான். சேஷப்பாவைப் போன்ற சுயநலமி இப்போது தன்னைப் பார்த்துக்கொண்டான். ஆனால் அங்கே அவனுக்குத் தன்னுடைய தனித்தன்மையின் அடையாளமே தெரியவில்லை. கணத்துக்குக் கணம் உருமாறி அது கரைந்தே போய்விட்டது! கந்தல் கந்தல் ஆகிவிட்டது. உருவமே அற்றதாக இருந்தது.

இரவு நேரம் செல்லச் செல்ல இருள் ஆழ்ந்து கவிந்து கொண்டது. சேஷப்பா, பயத்தாலோ குளிரினாலோ கம்பளியின் மேல் புரண்டுகொண்டிருந்தான். போலீஸ்காரர்களின் பூட்ஸ் ஒலிக்கு அஞ்சித் தூக்கம் காததூரத்துக்கு அப்பால் ஓடிவிட்டது. 'தன்மேல் சாற்றிய குற்றங்கள் ருசுவாகித் தண்டனை கிடைத்தால் ஜெயில் வாசம்தான் கதி' என்ற முடிவு, அவன் தைரியத்தைக் குலைத்தது. அந்தக் குளிரிலும் வேர்வை ஆறாகப் பெருகியது. 'ஜெயில்! ஜெயில்!' என்று தனக்குத்தானே சொல்லிக்கொள்வது போல் உளறினான்.

தர்ம சத்திரத்தின் வெளியில் படுத்துக்கொண்டிருந்த போலீஸ்காரனுக்கும் தூக்கம் பிடிக்கவில்லை. சேஷப்பாவின் புலம்பல் அவன் காதில் விழுந்தது. படுத்த இடத்திலேயே 'இது ஜெயில் அல்லங்க, கணக்கப்பிள்ளை! நாளைக்குத் துரை, ஜாமீனில் விடச் சொல்லி உத்தரவு கொடுத்தால் வீட்டுக்குப் போய் விடலாம். இப்போ சும்மாப் படுத்திருங்க' என்று அதட்டிவிட்டுத் திரும்பிப் படுத்துக்கொண்டான்.

கிப்ஸன் துரை காலையில் எழுந்திருந்து உலாவிவிட்டு வருவது வழக்கம். தம் பங்களாவில் இருந்தாலும் சரி; காம்ப்பில் இருந்தாலும் சரி. இந்த வழக்கத்தை விடமாட்டார். அரைக்கால் நிஜார், அரைக்கைச் சட்டை, பூட்ஸ், ஸ்டாக்கிங், கையில் முழநீளப் பிரம்பு இவைகளோடு புறப்பட்டால் அவருடைய நாயும் கூடவே புறப்பட்டுவிடும். இன்று பாதள்ளிக் கேம்ப்பிலும் துரையின் இந்த வழக்கம் மாறவில்லை.

இன்னும் நன்ருக விடியவில்லை. மேகங்கள் இல்லாவிட்டாலும் மழைக்காலம் ஆனதால் சந்திகாலச் செவ்வானம் தோன்றவில்லை. சாம்பல் நிறமான இருட்டுச் சுற்றிலும் பரவியதுபோல் இருந்தது. சூரியன் வெகு சிரமப்பட்டு உதயமாஞன். வானம் எங்கும் தெளிவில்லா நிறம் காணப்பட்டது. காற்று, மெதுவாக வீசிஞலும், குளிர், உடம்பைக் குடையும் அளவுக்குத் தீவிரமாக இருந்தது. சூழ்நிலையில் எந்தவிதமான உத்ஸாகமும் இருக்க வில்லை.

இருந்தாலும் கிப்ஸன் துரை இயற்கைக்கே சவால் விடுவது போல் உத்ஸாமாகக் கிருஷ்ண நதிக்கரை ஓரமாக நடந்தார். அவர் கூட வந்த நாய், அடிக்கடி நின்று நின்று வந்ததால் அவருடைய நடைக்குத் தடை ஏற்பட்டது. செடி, கொடி, கல், முள் எல்லாவற்றிலும் அதிகப்பிரசங்கமாக ஆவல் காட்டிய நாய், சில சமயம் துரையின் கோபத்தைக் கிளப்பிவிட்டுக் கொண்டிருந்தது. ஆஞல் அவருடைய உத்ஸாகம் மட்டும் குறையவில்லை. இந் நாட்டின் கணக்கற்ற விசித்திரங்களே அவருடைய ஆவலை எப்பொழுதும் விழிப்புடன் இருக்கச் செய்தன. நதியின் கரை ஓரமாகவே நடந்து வந்தாலும், ஓர் ஈ, காக்கை கூட எதிர்ப்படாததால் அவர் மனம் திருப்தி அடையவில்லை. சுற்றுப்புறம் எல்லாம் மனிதர்களே இல்லை. தூரத்தில் இருந்து பார்க்கும்போது பாதள்ளி தூங்குவதுபோல் இருந்தது. உயிர்ப் பின் சுவடே காணப்படவில்லை.

துரையின் கவனம் திரும்பவும் இயற்கையின் மேலேயே திரும்பியது. கிழக்குத் திசை யந்திர கதியிலேயே சாவகாசமாக ஒளியைப் பரப்பியது. நதியின் பரப்பு, பனித்திரையை மெல்ல ஒதுக்கிவிட்டு மெதுவாகவே ஓடிக்கொண்டிருந்தது. இரவுக்

குளிராலோ தூக்கம் இல்லாததாலோ வெள்ளத்தின் வேகம் குளிர்ந்திருந்தது. வெளிச்சம் முழுதாக விழாததால் தொலைவில் தெரிந்த குன்று வெறும் கோடாகத் தென்பட்டது.

துரை இப்பொழுது ஆற்றை மிகவும் நெருங்கி வந்திருந்தார். இரண்டு நாள்களுக்கு முன்பு அவர், மகாராஜாவை வரவேற் பதற்காக நின்றிருந்த இடம் இப்போது வெள்ளத்தின் நடுவில் இருந்தது. கணத்துக்குக்கணம் மாறிக்கொண்டிருந்த நதியின் பரப்பு, இரண்டு கரைகளையும் விழுங்கிவிட்டது. இரண்டே நாள்களில் அவ்வளவு வெள்ளம் வந்திருக்கிறது. ஊர் நிலத்தின் பெரும்பகுதி நதியின் ஆக்கிரமிப்பில் முழுகியிருக்கவேண்டும். மழைக்காலம் ஆனதால் ஆற்றின் வெள்ளம் இளமைத் திமிர் நிறைந்ததாக இருந்தது. அதனுடைய வெறிகொண்ட நிலையைத் தடுப்பது சாத்தியமாக இல்லை. அடுத்திருந்த களிமண் பூமி, பலத்தை இழந்து வெள்ளத்தின் கோபத்துக்கு ஆளாகியது. இந்த நிலப்பகுதியின் தலைமேல் ஓங்கி அடித்து, அந்த வெற்றிப் பெருமிதத்தோடு வெள்ளம் முன்னேறிக்கொண்டு இருந்தது. துரைக்கு பின்வரும் யோசனை வந்தது: 'நாளைக்கு இந்த ஊரில் தங்கினால் நதியின் இந்த ஆக்கிரமிப்புத் தண்ணீர் ஆழ்ந்த ஏரிபோலத் ததும்பிக்கொண்டிருப்பதை அவசியம் பார்க்க வேண்டும்.' நீர், நிலம் இவற்றின் இந்த உறவில் இயற்கையின் எந்த ரகசியம் அடங்கியிருக்கிறதோ? பூமி தோன்றிய நாள் முதல் இந்தத் தண்ணீரும் இப்படியே நிலத்தின் உடலைக் கிழித்துக் கொண்டு முடிவில்லாமல் ஓடிக்கொண்டே இருக்கிறது. அத்தனை தண்ணீரும் வீணாகப் பெருகிச் சமுத்திரத்தில் சங்கமிப்பதைக் கண்டு, துரையின் மேல்நாட்டு மனம் வருத்தம் கொண்டது. 'மழையின்மை, பஞ்சம், பஞ்ச நிவாரணக் கடன், வறுமை, பட்டினி இப்படிக் கணக்கில்லாமல் கஷ்டங்களைச் சொல்லிச் சர்க்காருக்கு மக்கள் விண்ணப்பிக்கிறார்கள். அப்படி முறையிடு வதற்குப் படும் சிரமத்தையே இந்தத் தண்ணீரை உபயோகப் படுவதில் செலவழிப்பார்களானால்......' என்று அவர் மனம் நினைத்தது. 'ஊரை ஒட்டி ஓடும் இவ்வளவு பெரிய ஆறு இவர்களுக்குத் தங்கச் சுரங்கமாக அல்லவா இருக்கவேண்டும்? ஆனால் நிலைமை எவ்வளவு மோசமாக இருக்கிறது?' என்று நினைத்தார்.

ஆறு, கிழக்கு நோக்கியே ஓடிக்கொண்டிருந்தது. அதிகாலையில் உஷ்ணம் குறைந்த சூரிய கிரணங்கள், அலைகளின் மேல் பிரதிபலித்தன. ஆறு உயிர் பெற்றதுபோல் இருந்தது. துரை, ஆற்றையே உன்னிப்பாகக் கவனித்துக்கொண்டிருந்தார். அப்பொழுது ஆற்றின் நடு வெள்ளத்தில் ஒரு மனிதன் மிதந்து

போவதைக் கண்டு அவருடைய உள்ளம் நடுங்கியது. 'பாவம், அவன் இழுப்பில் அகப்பட்டுக்கொண்டு போகிறான்' என்று கலவரம் அடைந்தார். அந்த மனிதன் தூரத்தில் இருந்ததாலும் மூழ்கிமூழ்கி எழுந்ததாலும் யாரென்று அடையாளம் தெரியவில்லை. அவருடைய உள்ளம் தவித்தது. 'அவனைக் காப்பாற்ற வேண்டும்' என்று விரும்பினார். ஆனால் அவரால் அது முடியாத காரியம். அவருக்குக் கடலில் நீந்திப் பழக்கம் உண்டு. ஆனால் 'இழுக்கும் இந்த ஆறுகளில் நீந்துவது அபாயமானது' என்று கேள்விப்பட்டிருந்தார். அதிலும் தென்னாட்டின் ஆறுகளில் இழுப்பு மிகவும் அதிகம். அதனால் பார்த்துக்கொண்டிருப்பதைத் தவிர வேறு ஒன்றும் செய்யமுடியாமல் நின்றுகொண்டிருந்தார்.

சிறிது நேரம் இப்படியே பயனின்றிப் பார்த்துக்கொண்டிருந்தார். பிறகு ஆற்றில் மிதந்து போய்க்கொண்டிருந்த அந்த உருவம், எளிதாகச் சிறிது தூரத்தில் தண்ணீரின் திருப்பத்தைப் பார்த்து நீந்திக் கரை சேர்ந்தது. முன்பே கரையில் வைத்திருந்த வேஷ்டியை உடுத்துக்கொண்டு, நதிக்கும் சூரியனுக்கும் வணக்கம் செய்து, அந்த உருவம் மந்திரங்களைச் சொல்லிக்கொண்டே வீட்டை நோக்கிப் புறப்படும் வரையில் துரை ஆச்சரியத்தால் சிலைபோல் நின்று பார்த்துக்கொண்டிருந்தார். 'அந்த ஆசாமி வெள்ளத்தோடு போயிருக்கமாட்டார்; தினந்தோறும் நட்டாறு வரையில் நீந்திச் சென்று குறிப்பிட்ட ஓர் இடத்தை எட்டியபின் திரும்பி வரும் வழக்கத்தை மேற்கொண்டிருக்க வேண்டும்' என்று தோன்றியது. 'அந்த உருவம் வீட்டுக்குப் புறப்படும் போது கண்டு பேச வேண்டும்' என்ற ஆவல் மிகுந்தது.

அவசரமாக நடந்து துரை, அந்த உருவத்தைத் தொடர்ந்தார். நாயும் அவர் பின்னாலேயே ஓடி வந்தது. பக்கத்தில் நெருங்கியவுடன் 'மந்திரம் சொல்லிக்கொண்டு நடந்த உருவம் முன்பின் தெரியாத ஆசாமி அன்று; ராஜபுரோகிதரான பாளாச்சார்தான்' என்பது தெரிந்தது. காலை நேரத்தில் தாம் செய்த ஆராய்ச்சியை நினைத்துத் துரைக்குப் பெருஞ் சிரிப்பு வந்தது. 'ஏதாவது ஒரு தீரச்செயலை ஸ்தாபிக்கக்கூடிய நீச்சல்காரன் ஒருவனைக் கண்டுபிடிக்க வேண்டும்' என்று இருந்த அவர் ஆச்சாரின் திறமையைக் கண்டதும் ஏமாற்றத்துக்கு உள்ளானார்.

'என்ன ராஜபுரோகிதரே! நல்ல இருட்டிலேயே ஸ்நானத்துக்கு வந்துவிட்டாற்போல் இருக்கிறதே?' என்று துரை பேச்சைத் தொடங்கினார்.

ஆச்சார், முதலில் வியப்பால் சற்றுத் தடுமாறினார். 'நாள் தவறாமல் விடியற்காலம் எழுந்திருந்து கிருஷ்ணாவில் ஸ்நானம்

செய்வதை விரதமாகக் கொண்டிருக்கிறேன் துரையே! ஐம்பது வருஷமாக இது நடந்துகொண்டிருக்கிறது!' என்று அடக்க மாகவே ஆச்சார் பதில் சொன்னார்.

தம்முடைய விடியற்கால ஸ்நானப் பழக்கம் துரையின் கண்ணில் பட்டுவிட்டது; ஆச்சாருக்குக் கூச்சமாக இருந்தது. துரைக்கு 'ஆச்சாரைப் பற்றி இன்னும் தெரிந்துகொள்ள வேண்டும்' என்ற ஆவல் மேலிட்டது. 'காலையில் இவ்வளவு கடுங்குளிரில் வெள்ளம் மிக்க ஆற்றின் நடுவரைக்கும் நீந்திப் போய்வரும் இந்தப் பிராமணன் பெரிய ஆளாகத்தான் இருக்க வேண்டும்' என்று அவர் நம்பினார். இந்தப் பிராமணனைப்பற்றிய ரகசியங்களைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று ஆசைப் பட்டார்.

'நீங்கள் வெள்ளத்தில் சிக்கிப் போய்விடுவீர்கள்! என்று நான் பயந்தேன். நான் கூப்பிடும் முன்பே நீங்கள் லாகவமாகக் கரைக்கு வந்துவிட்டீர்கள்' என்று புன்னகையுடன் சொன்னார் துரை.

பாளாச்சாரும் அது போலவே சிரித்துக்கொண்டு 'துரைவாள், கடவுளின் இச்சை எப்படி இருக்கிறதோ அப்படி நடக்கும். நான் முழுகிப் போகம்னுன்னு இருந்தா ஒங்களாலே காப்பாத்த முடியுமா? அதெல்லாம் நடக்காது. நம்ம அதிர்ஷ்டப்படி நடக்கும்' என்று பதில் சொன்னார்.

துரைக்குத் தெய்வம், அதிர்ஷ்டம் என்னும் தர்க்கத்தைத் தூண்டிவிட்டுப் பார்க்கத் தோன்றியது.

''பேச்சுக்குப் பேச்சு, 'தெய்வச் செயல், அதிர்ஷ்டம்' என்று சொல்லிக்கொண்டிருந்தால், மனிதனுடைய முயற்சிக்கு என்ன வேலை? முயற்சியில் நமக்கு அக்கறை இருக்க வேண்டாமா?'' என்று கேட்டு, ஆச்சாருடைய வாழ்க்கையின் ரகசியத்தையே கிளறிவிட்டார்.

இந்தக் கேள்வியால் ஆச்சார் தயங்கவில்லை. 'எனக்கு அது ஒன்றும் தெரியாது துரை. இந்த உலகம் நடப்பது கடவுளின் சங்கல்பத்தால். நான் படித்தது இதுதான். நான் அதைத்தான் நம்பியிருக்கிறேன்' என்று சொன்னார். ஆச்சாரின் தெய்வ விசுவாசம் ஆழம்காண முடியாததாக இருந்தது. அதைப்பற்றித் தர்க்கம் செய்ய அவருக்கு இஷ்டம் இல்லை. அவரிடம் இருந்த பண்பாடு, கற்ற வித்தை, அவர் வாழ்ந்த சூழ்நிலை எல்லாம் இந்தத் தெய்வ விசுவாசத்தையே உறுதியாக்கின.

ஆச்சார் வேறு ஒன்றும் பேசாமல் வீட்டை நோக்கி நடந்தார். துரையும் ஏமாற்றத்துடன் காம்ப்புக்குப் போனார். அவருடைய நாய் மட்டும் ஆச்சாருக்குப் பின்புறமாகச் சென்று அவரைக் குறுக்கிட்டுவிட்டுத் திரும்பித் துரையின் பக்கத்தில் வந்தது. ஆச்சார், சட்டென்று திரும்பிக் கையில் இருந்த செம்பிலும் கிண்டியிலும் இருந்த தண்ணீரைத் தரையில் கொட்டிவிட்டு மறுபடி ஆற்றைப் பார்க்க நடந்தார். துரைக்கு மற்றொரு ஆச்சரியமும் அதிர்ச்சியும் ஏற்பட்டது. 'ஏன் மறுபடியும் ஆற்றுக்குப் போகிறீர்கள்? வழி தவறிவிட்டதா?' என்று கேட்டார்.

'இல்லை; உங்கள் நாய் தொட்டதால் தீட்டாகிவிட்டது. அதனால் இன்னொரு முறை ஸ்நானம் செய்யவேண்டும் துரையே' என்று சொல்லிவிட்டு ஆச்சார் ஆற்றுப்பக்கம் நடந்தார்.

துரை ஆச்சரியத்தால் பிரமித்தவராய் மௌனமாகக் கேம்ப்பை நோக்கி நடந்தார். காலையில் நடந்த இந்த நிகழ்ச்சியால் அவர் யோசனையில் மூழ்கிவிட்டார். 'கறுப்பு மனிதனுடைய சுமை, வெறும் சுமையாக இல்லை; புரிந்துகொள்ள முடியாததாக இருந்தது. இவர்களுடைய வாழ்க்கைச் சித்தாந்தத்தில் எளிமையே இல்லை. ஆயிரக்கணக்கான முரண்பாடுகள் ஒன்று சேர்ந்து புதிராக இருந்தது இப்படிப்பட்ட விபரீதமான எண்ணங்களின் கட்டுப்பாட்டில் மனிதன் எப்படி வாழ்வது?'

துரை, யோசனையில் ஆழ்ந்தபடி நடந்துகொண்டிருக்கும் போதே மற்றொரு நிகழ்ச்சி அவரை நனவுலகுக்கு இழுத்து வந்தது. காவியுடை உடுத்து, பளிச்சென்று விபூதிக் கோடுகளால் அலங்கரிக்கப்பட்ட நெற்றியோடும் மழுங்கச் சிரைத்த தலையோடும் ருத்திராட்ச மாலைகளை அணிந்த இரட்டை நாடி உருவம் ஒன்று. துரைக்கு முன் வந்து, மேல் வேட்டியை விரித்து நெடுஞ்சாண்கிடையாக விழுந்தது.

துரையின் உள்ளம் நடுங்கியது. 'என்ன இது? ஏன் இப்படி!' என்று தம்மையே கேட்டுக்கொண்டதுபோல் துரை கேட்டார். அதற்குள் அவருடைய மெய்காப்பாளன்போல் இருந்த நாய், கீழே விழுந்து வணங்கிய உருவத்தின் காவிநிற அங்கியைப் பிடித்து இழுத்தது. கடிக்கவென்று நீட்டிய அதன் வாய்க்குத் தடியான குடைத்துணிச் சட்டையே அகப்பட்டது. என்ன புண்ணியமோ? சதை வாய்க்கு அகப்படவில்லை. இல்லாவிட்டால் கீழே விழுந்திருந்த படைதயாவின் முதுகுத்தோல், சட்டைத் துணியைப் போலவே பிய்ந்து வந்திருக்கும்.

சற்று முன்னால் பாளாச்சாரை இரண்டாம் தடவை ஆற்றுக்குத் துரத்த நேர்ந்ததால் துரைக்கு வருத்தமாக இருந்தது. மறுபடியும் அதே சம்பவம் நடந்தால் என்ன செய்வ தென்று கிப்ஸன் துரை கையிலிருந்த தடியால் நாயின் தலையில் ஓர் அடி கொடுத்தார். ஜாடையை அறிந்துகொண்ட நாய், சட்டையை விட்டுவிட்டு, வாலை ஆட்டிக்கொண்டு அவருடைய கால்களைச் சுற்றிவந்தது.

படதையா எழுந்திருந்தார். கை கூப்பினார். 'துரையே! இந்த அநாதையின் விண்ணப்பத்தைக் கேட்டுக்கொண்டு எனக்கு நீதி வழங்கவேண்டும்' என்று நாடக நடிகன்போல் பேசினார்.

துரைக்கு அவரைக் கண்டு திகில் உண்டாயிற்று. 'முதல் நாள் தோட்டத்தில் மகாராஜாவுக்குச் சரிசமானமாக அவர் எதிரில் உட்கார்ந்து விருந்து சாப்பிட்ட இந்த ஆசாமி, பொழுது விடிந்தவுடன் வந்து என்ன கேட்பான்?' என்று யோசித்தார்.

'உங்க விண்ணப்பம் என்ன?' என்று கேட்டார்.

''சொல்றேனுங்க. சாவதானமாகக் கேட்டுக்கொள்ளணும். துரையே! இந்த ஊரில் இருக்கும் பெரிய மடத்துப் பட்டத்துக்கு வந்த சாமி நான். மடத்துச் சொத்து நாலு நம்பர் பூமி இருக்குங்க. நான் பட்டத்துக்கு வந்ததிலே இருந்து மடமும் என் வசத்தில்தான் இருந்தது. ஆனால் தாதா, ரொம்ப அக்கிரமம் செய்து, காரணம் இல்லாமலே என்மேலே பகை பாராட்டறான். கணக்கப்பிள்ளை சேஷப்பா, தன்னோடெ லஞ்சத்துக்குக் குறுக்கே வரேன்னு நெனச்சுட்டாரு. நான் மடத்துலே இருந்தபோது என்னை 'அடிக்கிறேன்; ஒதைக்கறேன்'னு ஆரம்பிச்சுட்டாங்க. நெசத்தைச் சொல்லணுமானால் இந்த மணியக்காரர் குடும் பத்துக்கு நான் குரு ஆகணுங்க. 'சங்கரப்ப கௌடன் செத்துப் போனப்பறம் அவனுடைய பெரிய மகன் லிங்கப்பனே மணியக் காரனாக வரவேண்டும்' என்று நான் சொன்னேன். சில பேருக்கு அது பிடிக்கலேங்க. எல்லாரும் சேந்திண்டு என்மேலே பாஞ்சாங்க. நான் உயிருக்குப் பயந்து அஜராணிக்கு ஓடிட் டேனுங்க. நீங்க இங்கே வந்த செய்தி கேட்டுச் சொல்லிக்க லாம்னு வந்தேனுங்க'' என்று சொல்லி, தமது பேச்சினால் ஏற்பட்ட விளைவை அறிந்துகொள்ளத் துரையின் முகத்தைப் பார்த்தார்.

துரைக்கு அவர் சொன்னதில் எவ்வளவு புரிந்ததோ, கடவுளுக்குத்தான் வெளிச்சம்! இந்த ஊரின் அக்கிரமத்தின் வரலாறு ஓரளவுதான் தெரிந்தது. 'இன்னும் சொல்லட்டும்'

என்று அவர் பேசாமல் இருந்தார். படதையா மேலும் தொடர்ந்தார் :

''ஊருக்கு வந்தபின் என்னுடைய மடத்துக்குப் போனேன். யாரோ ஒரு பையன் பட்டத்துலே உக்காந்திருக்கான். 'அவன் இங்கே எப்படி வந்து உக்கார்ந்தான்?' என்று கேட்க நினைத்தேன். அதனால் சாயங்காலம் வரையில் சும்மாக் குந்திகிட்டிருந்தேன். இருட்டி ஒருமணி நேரம் ஆச்சு. மாளிகையில் மகாராஜா ஏழைகளுக்குச் சோளம் பங்கிட்டுக் கொடுத்துகிட்டு இருந்தாரு. அப்போ மாளிகையிலிருந்து தாதா, நூத்துக்கணக்கான ஜனங்களைக் கூட்டியாந்து என்னை அலக்காகத் தூக்கி மசூதியிலே கொண்டுவந்து எறக்கலாமா? 'மடத்தில் கால் வைத்தால் காலை ஒடித்துவிடுவேன்!' என்று மிரட்டிவிட்டும் போனான். சாவடிலே போலீஸ்காரங்க இருந்தாங்க. பள்ளிக்கூடத்திலே மாஜிஸ்திரேட் காம்ப் எறங்கியிருக்காரு. இப்படியெல்லாம் இருக்கறப்பவே யாரிடமும் பயம் இல்லாமே என்னைச் சொமந்துகிட்டுப்போய் மசூதீலே எறக்கணும்னு, இந்தத் தாதாவின் அக்கிரமம் எவ்வளவு இருக்கணும்னு நெனச்சுப் பாருங்க'' என்று சொல்லி முடித்தார். பேச்சுக்குத் தக்கபடி அவருடைய முகபாவம், அபிநயம், பேசும் மாதிரி, குரலின் ஏற்ற இறக்கங்கள் எல்லாம் மாறிக்கொண்டிருந்தன.

துரை சற்று நேரம் ஒன்றும் பேசவில்லை. பிறகு, 'நேற்று நீங்க தோட்டத்தில் மகாராஜாவைச் சந்தித்தீர்கள் அல்லவா?' என்று கேட்டார்.

'ஆமாங்க, என் கூடவே என்னைப் போலவே ஊரைவிட்டு ஓடிப்போன லிங்கப்ப கௌடரும் இருந்தாருங்களே' என்று படதையா மறைமுகமாக லிங்கப்பாவையும் அறிமுகம் செய்து வைத்தார்.

துரை, சற்றுநேரம் யோசிக்கவேண்டி இருந்தது. படதையா சொல்லிய விஷயங்களை விவரமாகப் புரிந்துகொள்ளவேண்டியிருந்தது; விஷயம் சிக்கலானது. தாதா, சட்டத்துக்கு விரோதமாக நடந்துகொண்டிருக்கிறான். படதையா நியாயமாகத் தமக்குச் சொந்தமான மடத்தை இழந்திருந்தார். அவர் சொன்ன விஷயங்கள் உண்மையாக இருந்தால், 'அவருக்கு அநியாயம் நடந்திருக்கிறது' என்று நினைத்தார். படதையாவின் கதையில் அக்கிரமத்தின் ஆட்சியே அதிகமாக இருந்தது. அதோடு லிங்கப்ப கௌடரின் வாரிசு விவகாரமும் தொடர்பு கொண்டிருந்தது. வாரிசு அப்பீல் விண்ணப்பம் ஏற்கெனவே துரையிடம் வந்துவிட்டது.

'நீங்கள் சொல்லும் புகார்களை எல்லாம் எழுத்தால் எழுதிக் கொடுக்கவேண்டும். விசாரணைக்கு அது வசதியாக இருக்கும்' என்று துரை சொன்னார்.

படதையா மற்றொரு முறை விழுந்து வணங்கினார். இந்த அதிவிநயத்தின் விளம்பரம், துரைக்கு வெறுப்பைக் கொடுத்தாலும் பொறுத்துக்கொள்ளாமல் வேறு வழி இல்லை. அதிகாரத்தை அநுபவிக்கும்போது இந்தத் துன்பமும் இருக்கத்தான் இருக்கும்.

'நீங்க சொன்னபடியே செய்யறேன் துரையே. எப்படியோ ஏழைமேலே தயவு வைக்கணும். எனக்கு நியாயம் கிடைக்கும்படி செய்யணும்' என்றார் படதையா.

'உம், ஆகட்டும்!' என்றவண்ணம் துரை மேலே நடந்தார். படதையா, மற்றொரு முறை வணக்கம் செலுத்திவிட்டுப் போனார். அப்பொழுது காலை ஏழு மணி. துரை, விடுதலை பெற்றவர்போல் ஒரு பெருமூச்சுடன் தம் இருப்பிடத்தை அடைந்தார். வழக்கம்போல் காலைச் சிற்றுண்டிக்கு உட்கார்ந்தார். அவருடைய பட்லர் எல்லாவற்றையும் ஒழுங்காக வைத்திருந்தான். மேஜைக்குத் தட்டுகள் வந்தன. துரையின் மனம் மட்டும் அங்கே இல்லை. தினந்தோறும் உத்ஸாகமாகப் பட்லருடன் கேலியாகப் பேசிக்கொண்டே சாப்பிடுகிறவர், அன்று 'உம்'மென்றிருந்தார். கொண்டுவந்து வைத்த பதார்த்தங்களை யந்திரம்போல் சாப்பிடத் தொடங்கினார்.

பாதள்ளியில் நடந்த அக்கிரமம், அவர் மனத்தைவிட்டு அகலுவதாக இல்லை. சேஷப்பா, சர்க்கார் உத்தியோகஸ்தனாக இருந்தும் முறைகேடான செயல்களில் ஈடுபட்டிருக்கிறான். லிங்கப்பாவின் வாரிசு உரிமைக்குத் தடை ஏன் வரவேண்டும்? படதையா, தம்முடைய மடத்தில் சுகமாக இருக்க முடியாமல், தாதா, ஏன் முறை தவறி நடந்துகொண்டான்? நடந்த நிகழ்ச்சிகள் ஒன்றிரண்டல்ல. மனிதத் தன்மை எங்கோ கொஞ்சம் ஒட்டிக்கொண்டிருக்கிறது. இந்த விவரங்களை எல்லாம் நன்றாக விசாரித்துத் தெரிந்துகொள்ள உறுதி பூண்டார் துரை. இன்று கேட்ட விஷயங்கள் எல்லாம் நிசமாக இருந்தால் அவை பெரும் குற்றங்கள்தாம். அவற்றை விசாரித்துத் தீரவேண்டும்.

'முதலில் மடத்துத் தலைமைபற்றி விசாரிக்கவேண்டும்' என்ற கவலை துரையின் தலையில் சூறாவளியாகச் சுழன்றது. அவசரம் அவசரமாகவே சிற்றுண்டியை முடித்துக்கொண்டார். யாரோடும் பேசவில்லை. அவசரம் அவசரமாக உடை மாற்றிக்

கொண்டு நேராகச் சாவடிக்குப் போனுர். மாஜிஸ்திரேட் ஏதோ வேலையில் ஈடுபட்டிருந்தவர் துரையைக் கண்டதும் எழுந்திருந்து வரவேற்ருர். துரை அவரையும் அழைத்துக் கொண்டு மடத்துக்குப் போனுர்.

மடத்தில் காவி உடை அணிந்த எட்டு வயதுச் சிறுவன் ஒருவன் இருந்தான். அவன்தான் மடத்தின் அடுத்த அதிகாரி என்பதால் ஊர்ப் பிரமுகர்கள் அவனை மடத்துப் பீடத்தில் உட்காரவைத்தார்கள் என்பது தெரியவந்தது. மடத்தின் பட்டத்துச் சாமியார் யார்? அதன் அடுத்த அதிகாரியை நியமிக்கும் பொறுப்பு யாருடையது? மடத்தின் நிலைமை எப்படி இருக்கிறது? படதையாவை, தாதா, மடத்திலிருந்து வெளி யேற்றியது நிஜந்தாஞ? என்பது போன்ற கேள்விகளுக்கு அங்கு இருந்தவர்கள் வாயிலாக விடைபெற்றுத் துரை அங்கிருந்து வெளியே வந்தார். அப்பொழுதே அவருக்குப் படதையாவின் புகார் உண்மை என்பது மனத்தில் பட்டுவிட்டது. வழியில் மாளிகையைத் தாண்டிப் போனபோது, துரைக்கு 'மகா ராஜாவைப் பார்த்துவிட்டுப் போகவேண்டும்' என்று தோன்றியது.

மகாராஜா அப்பொழுது தூங்கி எழுந்திருந்தார். துரையை ஆதரவோடு வரவேற்ருர். சற்று நேரம் பொதுவாக ஏதோ பேசிக்கொண்டிருந்தார்கள். பேச்சுவாக்கில் சொல்வதுபோலத் தாதா படதையாவை வெளியேற்றிய செய்தியைச் சொன்னுர். அச் செய்தியை முதலில் மகாராஜா நம்பவே இல்லை. 'படதையாவைப் போன்ற குண்டனைத் தாதா சுமந்துகொண்டு போவதாவது?' என்று நினைத்தார். அவருக்கு அடக்க முடியாமல் சிரிப்பு வந்தது. ஆனுல் துரையின் 'உம்' என்ற முகத்தைப் பார்த்து, 'அது விளையாட்டல்ல' என்று நம்பினுர்.

தாதா அங்கேயே நடமாடிக்கொண்டிருநதான். துரையின் பார்வை அவன்மேல் விழுந்தது. 'நடந்த செய்தி நிஜந்தாஞ?' என்று அவனையே கேட்டார். தாதா, 'ஆம்' என்று ஒப்புக் கொண்டான். 'சட்ட விரோதமாக ஏன் நடந்துகொண்டாய்?' என்று துரை கேட்டார். தாதா பேசாமல் இருந்தான். அங்கேயே உட்கார்ந்திருந்த யசவந்தராவ் இப்படிச் சொன்னுர்: 'இந்தப் படதையா ஊருக்கே ஆகாதவன். அவன் இருக்கிற இடத்தில் மரியாதைப்பட்டவர்கள் வாழ்க்கை நடத்தவே முடியாதுங்க. அவனை அப்படி நடத்துவதுதான் சரி. அவன் அப்படிப்பட்ட வேலையைச் செய்தான் என்றே ஊர் ஜனங்கள் கொதித்து எழுந் தார்கள். மக்களுக்கு அஞ்சி ஊரைவிட்டு ஓடினுன். அன்று

முதலே மடத்தின் அதிகாரத்தை இழந்துவிட்டான். தாதா செயலில் ஒன்றும் தவறில்லை, விடுங்கள்' என்று சொன்னார்.

'என்ன இருந்தாலும் தாதா சட்டத்தின் பார்வையில் குற்றம் செய்தவன்தான்' என்பது துரையின் அபிப்பிராயம். படதையா மடத்தின் அதிகாரத்தை இழந்திருந்தால் அவனை வெளியேற்றும் அதிகாரத்தைக் கோர்ட் மூலமாகப் பெறவேண்டும். அதை விட்டு நேரில் அவனைத் துன்புறுத்தியது அயோக்கியத்தனம். அதற்குத் தக்க தண்டனை கொடுக்கவே வேண்டும்' என்று நிஷ்டுரமாகவே கிப்ஸன் துரை தர்க்கம் செய்தார்.

'சட்டத்தின்படி ஆராய்ந்தும் சாட்சி தேடியும் தண்டிக்க வேண்டிய பேச்சு இப்போது எதற்கு?' என்று சொல்லி மகாராஜா அந்தத் தர்க்கத்தை அதோடு நிறுத்தினார். சற்று நேரம் எல்லோரும் பேசாமல் இருந்தார்கள். மகாராஜாவே மறுபடியும் பேச்சுக்கொடுத்து முதல் நாள் வேட்டையைப்பற்றி மனம் விட்டுப் பேசி அரட்டை அடித்தார். சற்று நேரத்துக்குப் பின் துரையும் பழைய உத்ஸாகத்தைப் பெற்றார். அன்று மாலை மகாராஜாவின் பாராட்டுச் சபை கூடுவதாக இருந்தது. பாதள்ளிக் குடியானவர்கள் தமது புதிய அதிகாரியைக் கௌரவிக்க இந்தச் சபையை ஏற்பாடு செய்திருந்தார்கள். 'இந்தக் கூட்டத்துக்கு வரவேண்டும்' என்று யசவந்தராவ், துரைக்கு அழைப்புக் கொடுத்தார். துரை அதை நன்றியுடன் ஏற்றுக்கொண்டார். மகாராஜாவுக்கு வணக்கம் சொல்லிவிட்டுப் புறப்பட்டார். காலையில் இருந்து கவலைப்பட்டுக் கவலைப்பட்டு அவர் மனம் நொந்துபோயிருந்தது. அதற்கு விடுதலையே கிடைக்கவில்லை.

அன்று மத்தியானம் தாதா, குற்றவாளியாக மறுபடியும் துரையின் முன் நின்றான். கூடியமட்டும் தீவிரமாகவே அவர் விசாரணையை நடத்தினார். தாதா தான் சொல்ல வேண்டியவற்றை எல்லாம் சொன்னான். ஆனால் படதையாவின் புகாருக்கு பரிந்துகொண்டு சாட்சி சொல்லப் பாதள்ளியில் யாருமே முன் வரவில்லை. படதையாவுக்கு ஆதரவாகப் பாதள்ளியில் யாருமே இல்லாததைக் கண்டு துரை ஆச்சரியப்பட்டார். படதையாவின் புகாரில் கண்ட செய்திக்குத் தாதாவின் ஒப்புதலைத் தவிர வேறே சாட்சிகள் இல்லாதபோது துரைக்குத் தாதாவைத் தண்டிக்க வழி தெரியவில்லை.

ஆனால் கடமையை நடத்தியே ஆகவேண்டும். விசாரணை நடந்தபின் தீர்ப்புச் சொல்லி ஆகவேண்டும். 'படதையா பெரிய பட்டத்து அதிகாரி. அதனால் அவருக்கு மடத்தில் முழு அதக்திகாரமும் இருக்கவேண்டும். அவரை யாரும் துன்புறுத்

கூடாது' என்று துரை உத்தரவு போட்டார். தாதா குற்ற மற்றவன் அல்ல. சட்ட விரோதமான நடத்தையைத் தானே ஒப்புக்கொண்டான். ஆனால், சிறுவயதினன் ஆகையால் அவனுடைய குற்றத்தை மன்னித்துவிடவேண்டும்' என்று சொன்னார். இந்த முடிவு அவருடைய மனச்சாட்சிக்கு ஒத்து வந்தது. எப்படியோ ஒரு மகத்தான கடமையைச் செய்து முடித்துவிட்டதாக அவர் திருப்தி அடைந்தார்.

துரையின் மனம் இந்த விவகாரத்தில் இருந்து விடுதலை பெறவில்லை. தாதாவை எதிர்த்து ஏன் சாட்சிகள் வரவில்லை. படையாவின் புகார் நியாயமாக இருக்கும்பொழுது அவருக்குத் துணையாக ஏன் யாரும் நிற்கவில்லை? யோசிக்க யோசிக்க 'இன்னும் ஆராயவேண்டும்' என்று அவருக்குத் தோன்றியது. இந்த விவகாரத்தின் முன் பின் விஷயங்களை ஆராயத் தொடங்கினார். லிங்கப்பாவின் வாரிசுச் சிக்கலும் இந்த விவகாரத்தில் பெரும் பங்கை ஆக்கிரமித்துக்கொண்டிருந்தது. அநேகமாகப் பார்வதியம்மாளின் கட்சியினரே 'படையாவுக்குச் சாட்சி சொல்லக்கூடாது' என்று பயமுறுத்தி இருக்கவேண்டும் என்று துரை முடிவுசெய்தார். பாதரசம் போன்ற அவருடைய புத்தி, செயலில் இறங்கியது.

லிங்கப்பாவின் வாரிசு அப்பீல் விசாரணை நடந்தது. முன்பு, பார்வதி, சாமராவுக்கு விரோதமாகக் கொடுத்த விண்ணப் பத்துக்குக் கையெழுத்து இட்ட குற்றத்தைத் துரை மறக்க வில்லை. லிங்கப்பாவின் விவகாரத்திலும் அதேபோல் மோசம் நடந்திருக்காது என்று எப்படிச் சொல்ல முடியும்? அவளுக்குச் சாதகமாகத் தீர்ப்புச் சொன்னால் அக்கிரமத்துக்கு அதிகமாகச் சந்தர்ப்பம் கொடுத்ததுபோல் ஆகாதா? அதனால் கிப்ஸன் துரை, 'சங்கரப்ப கௌடரின் வாரிசு உரிமை அவருடைய முதல் மனைவியின் வயிற்றில் பிறந்த மூத்த மகனுக்கே சேரவேண்டும்' என்று மாஜிஸ்திரேட் கொடுத்த தீர்ப்பையே ஆமோதித்தார்.

அப்பீல் விண்ணப்பத்தோடு லிங்கப்பாவின் ஜனனக் குறிப்பும் ஆஜராகி இருந்தது. அதன்படி லிங்கப்பாவின் தந்தையின் பெயர், சங்கரபபா என்று இருந்தாலும், ஜாதியில் 'குறும்பர்' என்று கண்டிருந்தது. அதனால் அவன் 'அஜராணிக் குறும்பன் சங்கரப்பனுடைய மகன் என்பது தெளிவாகிறது' என்ற ஆட்சேபத்தைத் துரை லட்சியமே செய்யவில்லை. 'அது அவசியம் இல்லை' என்றே அவருக்குத் தோன்றியது. 'சங்கரப்ப கௌடர், தம் முதல் மனைவி கிரியம்மாவுக்கு விவாகரத்துக் கொடுப்பதற்கு முன்பே லிங்கப்பா பிறந்திருக்கவேண்டும்' என்று

அவர் கருதினர். அவருடைய மனம் யாருடைய வாத விவாதங் களையும் ஏற்றுக்கொள்ளும் நிலையில் இல்லை. பார்வதியின் அப்பீல் கிழிந்துபோயிற்று. 'லிங்கப்பாவுக்கு வாரிசு உரிமை கிடைப்பதுதான் நியாயம்' என்று சொல்லிவிட்டார்.

இந்த இரண்டு தீர்ப்புகளும் பாதள்ளியின் வாழ்க்கையையே திசை திருப்பிவிட்டன. மடத்தில் படதையா இருப்பது யாருக்கும் வேண்டியிருக்கவில்லை. ஆனல் தெய்வச் செயலை யார் தவிர்க்க முடியும்? அவரே மறுபடியும் மட அதிகாரி ஆகிவிட்டார். மடம் காலியாகக் கிடந்தாலும் ஜனங்கள் அதைப் பொறுத்துக் கொண்டிருந்திருப்பார்கள். படதையா ஊரைவிட்டுப் போன போது, 'பீடை ஒழிந்தது!' என்று இருந்தார்கள். 'திரும்பி வந்துவிட்ட படதையா என்ன என்ன தொல்லைகள் கொடுப் பானே?' என்று ஜனங்கள் பயந்து நடுங்கினர்கள்.

'பாதள்ளி மணியக்காரரின் குடும்பத்துக்கும் அஜராணி லிங்கப்பாவுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை' என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெரிந்தது. ஆனல் சட்டம் அவனையே மணியக்காரன் ஆக்கியது. சங்கரப்ப கௌடர் இறக்கும்போது ஊரார் எல்லோரும் அவருடைய குடும்ப கௌரவத்தையும் நலனையும் காக்கும் பொறுப்பை ஏற்றிருந் தார்கள். ஆனல் நடந்த சங்கதி விபரீதமாக இருந்தது.

இந்த இரண்டு தீர்ப்புகளும் மக்களின் புனித எண்ணத்தையே கெடுத்துவிட்டன. வாழ்க்கையே கை மீறிப் போவதுபோல் தோன்றியது. ஏதோ துரதிருஷ்டம் ஒன்று மழைக்காலத்தில் வெள்ளம் வந்த ஆற்றைப்போல் மூர்க்கத்தனமாகப் பெருகி வந்தது. எந்தச் சக்தியும் அதை எதிர்த்து நிற்கமுடியவில்லை. கரையின் மண்ணைப்போல் வாழ்க்கை பொலபொலவென்று உதிர்ந்தது; கரைந்து போய்க்கொண்டிருந்தது. நிறைந்த வெள்ளத்தில் நீந்திவந்த ஆச்சார் போன்றவர்களும் ஏமாற்றம் அடைந்தார்கள்.

## 35

அன்று இரவு பாராட்டுக் கூட்டம் முடிந்து, பாளாச்சார் வீட்டுக்குத் திரும்பியபோது பத்து மணிக்குமேல் ஆயிற்று. கூட்டத்தில் நடந்த சம்பவங்களை எல்லாம் ஆச்சார் நினைவு படுத்திக்கொண்டார். குடியானவர்கள் மகாராஜாவுக்குக்

காட்டிய கௌரவம், நெஞ்சைத் தொட்டது. மகாராஜாவும் கிப்ஸன் துரையும் செய்த பிரசங்கங்கள் அவர்களுடைய பெருந் தன்மைக்கு ஏற்றபடி இருந்தன.

ஆனால் எல்லாவற்றையும்விட மகிழ்ச்சி தரும் சம்பவம் ஒன்று நடந்தது. மத்தியான்னம் நடந்த விசாரணையில் தாதா விடுதலை அடைந்திருந்தாலும், ஊராருக்கு அவன் விஷயத்தில் திருப்தி ஏற்படவில்லை. 'மேலும் அவனுடைய துடுக்குத்தனம் அதிகமாகக்கூடும்' என்ற பயமும் இருந்தது. படையாட்சி, பாதள்ளியில் சாசுவதமாகக் குடியேறிவிட்டார். அவர்கள் இருவருக்கும் இடையில் சண்டை ஓயாமல் நடந்து கொண்டிருந்தால் என்ன செய்வது? லிங்கப்பாவுக்கு வாரிசு உரிமை கிடைத்துவிட்டது. இப்படிப்பட்ட இக்கட்டான நிலை மூட்டிய தீக்குண்டத்துக்குத் தாதா பலியாகிவிடலாம். 'அவன் இதிலிருந்து எப்படியாவது தப்பினால் போதும்' என்று எல்லோரும் நினைத்தார்கள். எதிர்பாராமல் அந்த அதிருஷ்டம் கை கூடியது.

குதிரைமேல் இருந்தபோது தம்மைக் காப்பாற்றிய சமயத்திலேயே மகாராஜாவின் கடைக்கண் பார்வை, தாதாவின் மேல் விழுந்தது. அவனுடைய ஒப்பற்ற திறமையும் பலமும் அவரைக் கவர்ந்தன. மகாராஜாவுக்குக் குஸ்திபோடும் இளைஞர்கள் என்றால் உயிர். தாதா, பெயர் பெற்ற மல்லனாக இருந்தான். மகாராஜா பாதள்ளியில் தங்கியிருந்தபோது அவர் பார்வையிலேயே தாதா நடமாடிக்கொண்டிருந்ததால் அவனுடைய குணத்தைப்பற்றியும் அவர் தெரிந்துகொள்ள முடிந்தது. எப்படியாவது அவனைத் தம்முடன் அழைத்துச்செல்ல வேண்டும் என்று அவர் விரும்பினார். அது நிறைவேறுவதற்கு அவன்மேல் பழி வந்ததும் ஒரு காரணம் ஆயிற்று.

'அவன் மகாராஜாவுடன் போனால் பாதள்ளியில் இருந்து கொண்டு வம்பிலும் வழக்கிலும் அகப்படாமல் தப்பலாம்' என்று நினைத்த பாளாச்சார், மகாராஜாவின் யோசனையை ஆமோதித்தார். தாதாவும் சந்தோஷமாக ஒப்புக்கொண்டான். ஆனால் லக்ஷ்மணனைச் சம்மதிக்க வைப்பதே பெரும்பாடாயிற்று. 'ஒருத்தனே கொழந்தேங்க—அவனை விட்டுட்டு இருக்க எப்படி மனசு வருங்க? எனக்கு அவனை விட்டால் வேறே யார் இருக்காங்க?' என்று புலம்பினான். பாளாச்சார் அவனைப் பலவிதத்தில் தேற்றினார்.

'உனக்கு இங்கே இருக்க முடியாவிட்டால் எங்க ஊருக்கு வா. அங்கே நெலங்களைப் பாத்துண்டு இருக்கலாம்' என்று யசவந்தராவ் சொல்லி அவனுடைய துக்கத்தைக் குறைத்தார்.

எப்படியோ ஒரு வழியாகத் தாதாவின் பிரச்சினை தீர்ந்தது. ஆனால் பாதள்ளியின் தொல்லை தீரும் வழி மட்டும் காணப் படவில்லை. 'தாதாவைப் பாதள்ளியின் காணிக்கையாக உங்களிடம் ஒப்படைக்கிறோம்' என்று மகாராஜாவிடம் பாளாச்சார் சொல்லியிருந்தார். அதற்குப் பதிலாகப் பாதள்ளியின் வாழ்க்கை நன்றாக நடக்கும்படி மகாராஜா கவனித்துக்கொள்ள வேண்டும் என்பது அவருடைய ஆசை. மகாராஜா அதற்கும் சந்தோஷமாக ஒப்புக்கொண்டார். பாராட்டுக் கூட்டத்தில் இது விஷயமாக வாக்குக் கொடுத்தார்.

ஆனாலும் ஆச்சாருக்குப் பாதள்ளியின் துன்பம் முடிவுற்ற தாகத் தோன்றவில்லை. கடந்த ஐந்தாறு நாட்களில் நிகழ்ந்த சம்பவங்கள் சத்தியத்தையே அழித்துவிடும் அளவுக்குப் பயங்கர மாக இருந்தன. 'மடத்தின் எதிர்காலம் நல்லதாகலாம்' என்று எதிர்பார்த்தால், படதையா மறுபடியும் வந்து உட்கார்ந்து விட்டான். அவனுடைய பாபமாகிய நிழலில் பட்டு பாதள்ளியே கறுத்துவிடும். இந்த வாழ்க்கை ஆச்சாருக்கு ஓரிடத்தில் நில்லாமல் ஓடும் தண்ணீரைப்போல் தோன்றியது. இந்த நிமிஷம் தெளிவாக ஓடிக்கொண்டிருக்கும் தண்ணீர், அடுத்த நிமிஷம் சேறாகக் குழம்பி ஓடுவதை அவர் கண்டிருக்கிறார். அதுபோலவே வாழ்க்கை இப்பொழுது மறுபடியும் கெட்டுப் போய்விட்டது.

எல்லாவற்றையும்விடத் துன்பம் தருவது மணியக்காரர் குடும்பத்தின் எதிர்காலம்தான். சங்கரப்ப கௌடரின் குடும்பத்துக்கு இந்தக் களங்கம் ஏற்பட்டது யாருக்கும் பிடிக்க வில்லை. பார்வதியம்மா என்னதான் ஊராரின் விரோதத்தைச் சம்பாதித்துக்கொண்டிருந்தாலும் ஊருக்கு வேண்டாதவள் ஆகவில்லை. சங்கரப்ப கௌடர் இறப்பதற்கு முன்பே இந்தப் பயங்கர நிழல் அந்தக் குடும்பத்தின்மேல் விழுந்துவிட்டது. அதற்கும் இந்தப் படதையாதான் காரணமாக இருந்தான். நாணுவின் மரணம், சிமணுவின் அவமானம், ஊரில் நடந்த கொலை கொள்ளைகள் எல்லாம் படதையாவின் தலைமையிலேயே நடந்தன. இந்தச் செய்திகள் எவையும் ரகசியமாக இருக்க வில்லை. ஆனால் தீய சக்தியை எதிர்த்துப் போராட யாருக்கும் பலம் இல்லை. தாதா முட்டாள்தனமாகவே போராடினான்.

அதன் பயனுக அவனே ஊரைவிட்டுப் போகும்படி நேர்ந்து விட்டது. தாமும் போராடிப் பார்த்தார். ஆனுல் அதெல்லாம் நிழலுடன் குஸ்திபோட்டதுபோல் ஆயிற்று.

ஆச்சார் தம் பலவீனத்தையும் நன்ருக அறிந்திருந்தார். தம்முடைய சக்தி, பாதள்ளியின்மேல் அதிகாரம் செலுத்தக் கூடியது அன்று. சேஷப்பாவுடைய சட்ட ஞானமாவது, சங்கரப்ப கௌடரின் அதிகாரத்தோடுகூடிய கர்வமாவது அவருக்கு இல்லை. கன்னட லிபியைக்கூடப் படிக்க முடியாத அளவுக்கு மிதமான படிப்புள்ளவர். போயும் போயும் வைதிகப் பிராமணன். 'பழமையான சநாதன தர்மத்தில் அக்கறை உள்ளவர்' என்று ஜனங்கள் அவரைக் கௌரவித்தார்கள். இல்லாவிட்டால் என்ன மதிப்பு? ஊர்ப் பஞ்சாயத்தில் அவரும் ஓர் அங்கத்தினராக இருந்தார். சங்கரப்ப கௌடர் இருந்த வரையில் இவருடைய பேச்சுச் செல்லுபடி ஆயிற்று. இப்பொழுதோ இவர் யாருக்கும் வேண்டாதவர். மகாராஜா மனப்பூர்வமாகவே இவரை மதித்தார். ஆனுல் நல்லொழுக்கம் உள்ள ஒரு பிராமணன் என்பதற்காக மட்டும் அந்த மரியாதை என்று நினைத்தார் ஆச்சார்.

இவ்வளவும் தெரிந்திருந்தும் அவர் இந்த விவகாரத்தில் தலையிட்டதேன்? ஆச்சாருக்குத் தாம் செய்ததெல்லாம் அதிகப் பிரசங்கித்தனம் என்று தோன்றியது. முதன்முதலில் தாங்கள் எல்லோரும் சேர்ந்து செய்த அக்கிரமங்களுக்குக் கணக்கு உண்டா? அந்தப் பாபத்துக்கெல்லாம் பிராயச்சித்தத்தை அநுபவித்தே ஆகவேண்டும். ஆம், துக்கத்தை அநுபவித்துத்தான் ஒழிக்க வேண்டும். அப்பொழுதுதான் விடுதலை கிடைக்கும். இப்பொழுது சேஷப்பா பிராயச்சித்தத்தை அநுபவிக்கிருன் அல்லவா?

புலிவேட்டைப் பழங்குடி ஆள் ஒருவன் தீவட்டியைப் பிடித்துக்கொண்டு வழி காண்பித்துக்கொண்டு நடந்தான். இருட்டி மூன்று மணி நேரம் கடந்துவிட்டது. சடசடவென்று மழை பெய்துகொண்டிருந்தது. எலும்பையே குடைவதுபோல் காற்று வீசியது. அதனுல் தீவட்டியின் சுடர் படபடவென்று நடுங்கியது. ஆச்சார் யந்திரம்போல மாளிகையிலிருந்து தம் வீட்டுக்கு நடந்தார். பாராட்டுக் கூட்டத்தின் நிகழ்ச்சிகள் மற்ருெரு முறை அவர் மனத்திரையில் வந்து போயின. கவலை களிலிருந்து மனசுக்கு விடுதலை ஏது? எவ்வளவுதான் ஒதுக்கினுலும் யோசனைகள் படையெடுத்தன. அவைகள் எவ்வளவு குழப்பினுலும் ஆத்ம பலத்தின் ஒளி அணையாமல் இருக்கப்

பாடுபடவேண்டி யிருந்தது. ஓயாமல் எச்சரிக்கை கொடுத்துக் கொண்டே அதைப் பாதுகாக்கவேண்டி யிருந்தது. ஏதோ ஒரு தீவிர எதிர்ப்பு அல்லது ஏதோ ஒரு தீவிர மோகம் அந்த ஒளியை அணைத்துவிடலாம். 'வாழ்க்கை, மனிதனுடைய உள் ஆற்றலையே சோதிப்பதற்கு என்று சிருஷ்டிக்கப்பட்ட ஈச்வர மாயையாக இருக்கவேண்டும்' என்று ஆச்சாருக்குத் தோன்றியது.

இந்த யோசனைகளில் ஆழ்ந்தவராய் ஆச்சார் வீட்டை அடைந்தார். வீட்டில் தமது தினசரித் தெய்வீகக் கடமைகளை முடித்துக்கொண்டு திரும்பவும் மாளிகைக்குப் போகவேண்டி யிருந்தது. மகாராஜா, மறுநாளே ஊருக்குப் புறப்படுவதாக இருந்ததால் சில ஏற்பாடுகளைச் செய்யவேண்டி இருந்தது. நித்திய விதிகளைச் சீக்கிரம் முடித்துக்கொண்டு போகலாம் என்று எண்ணி வீட்டில் நுழைந்தார். வீட்டிற்குள் பெண் ஒருத்தி விக்கி விக்கி அழும் ஓசை கேட்டது. ஆச்சார் கவனித்துக் கேட்டார். குரல் அடையாளம் தெரிந்தது. 'யாரு, துளசக்காவா? அழும்படியாக என்ன வந்ததம்மா!' என்று ஆவலுடனும் ஆறுதல் சொல்லும் முறையிலும் கேட்டார்.

ஆச்சாரின் கேள்வியைக் கேட்ட சேஷப்பாவின் மனைவி துளசக்காவின் துக்கம் அதிகரித்தது. கண்ணீர் ஆறுகப் பெருகியது. பேசாமல் அதிகமாக விக்கி அழத் தொடங்கினள். பாளாச்சாரின் மனைவியே முன்வந்து, ''பாவம்! சேஷப்பாவை நேற்று ராத்திரியே சாவடிக்கு அழைச்சிண்டு போனுளாம். இன்னிக்குச் சாப்பாட்டுக்குக்கூட விடவில்லை. அதென்னவோ பெரிய உத்தியோகஸ்தன் துரையாமே? இவனை ஜெயிலுக்கு அனுப்புவதாகப் பயமுறுத்தருளும். அதைக் கேள்விப்பட்ட நம்ம துளசி, கை கால் ஓடாமல் அழுதுண்டு உக்காந்திருக்கா. 'எப்படியாவது சேஷப்பாவை விடுவிச்சுக் குடுங்கோ'ன்னு கேக்கறத்துக்கு வந்திருக்கா'' என்று உள்ள சங்கதியைச் சொல்லிப் பதிலுக்காகக் காத்துக்கொண்டிருந்தாள்.

ஆச்சாரின் முகத்தில் கவலை பாய்ந்தது. தம் மனைவிக்கு ஒன்றும் பதில் சொல்லவில்லை. ஆழ்ந்த ஒரு பெருமூச்சு விட்டார். 'எல்லாம் ஸ்ரீ ஹரியின் இச்சை' என்று தமக்குத்தாமே சொல்லிக் கொண்டார். வேறு பேச்சில்லாமல் கை கால் கழுவிக்கொண்டு மடி உடுத்தி, சந்தியாவந்தனத்துக்கு உட்கார்ந்தார்.

அப்பொழுது யாரும் பேசும் நிலைமையில் இல்லை. சேஷப்பாவின் மனைவி அழுவதை நிறுத்தியிருந்தாள். எதையோ எதிர் பார்த்துக்கொண்டிருந்த சூழ்நிலையின் அழுத்தம் தெரிந்தது. சந்தியாவந்தனம் முடியும் சமயத்தில் அவருடைய மனைவி,

பலகாரத்தட்டைக் கொண்டுவந்து அவர் முன் வைத்தாள். ஆச்சார் தட்டை நகர்த்தி, 'துளசக்கா, நீயும் கொஞ்சம் சாப்பிட்டுத் தண்ணீர் குடி' என்று சொன்னார்.

'அவர் அங்கே வேதனையால் துடித்துக்கொண்டிருக்கும் போது நான் பச்சத் தண்ணியைப் பல்லில் ஊத்த முடியுமா, ஆச்சார்? என்னால் முடியாது. காலையில் இருந்து அவர் பட்டினி' என்று துளசக்கா மறுபடியும் தேம்பினாள்.

'ஆமாம், அம்மா! சர்க்கார் உத்தியோகஸ்தர்—ஆயினும் இங்கிலீஷ் துரை. ஒருதரம் போட்ட உத்தரவை மாத்த மாட்டான். சேஷப்பா, தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக்கொண்டான். பேசாமல் தன் பாட்டைப் பார்த்துக் கொண்டு போகலாம் அல்லவா? நம்மால் என்ன செய்ய முடியும்? நீ புத்திசாலி, உன் புருஷனுக்கு அப்போ புத்தி சொல்லியிருக்கக் கூடாதா அம்மா! வினை விதைத்தவன் வினையை அறுத்துத்தான் தீரவேண்டும். அவனுடைய கர்மம் அவனைச் சூழ்ந்துகொண்டிருக் கிறது. இப்பொழுது நீ பட்டினி கிடப்பதால் அவனுக்கு விடுதலை கிடைக்கும் என்றால் குஷாலாக் கிட' என்று தேறுதல் சொன்னார். தம் மனத்தைக் கல்லாக்கிக்கொண்டு தம் சக்தியை எல்லாம் உபயோகித்து இவ்வளவு தூரம் சொன்னார். துளசக்காவுக்கு ஆச்சாரின் வேதாந்தம் தேவைப்படவில்லை. அவளுடைய கணவனுடைய விடுதலையைத் தவிர, வேறு எதுவும் அவளுக்கு ஆறுதலைத் தராது. 'நீங்க சொல்றதெல்லாம் சரி ஆச்சார்... ஆனால் எனக்கு அவருடைய முகத்தைப் பார்க்காமல் ஒரு சொட்டுத் தண்ணீர்கூட நெஞ்சில் இறங்காது. என் நெஞ்சில் சூடு போட்டுவிட்டு அவர் போய்விட்ட மாதிரி இருக்கிறது. அவர் இப்படிக் கஷ்டப்படுவதைப் பார்க்காமல் நான் போயிருக்கக் கூடாதா?' என்றாள் துளசக்கா.

'போதும், நிறுத்து! துளசக்கா. அழுதா என்ன லாபம்? சும்மாப் பலகாரத்தைச் சாப்பிடு. நீ சிறு பெண், வயிற்றை வாடப்போடக் கூடாது' என்றார் ஆச்சார்.

'என்னால் முடியாது ஆச்சார். முதலில் அவரை அழைச் சிண்டு வாருங்கள். உங்க பெண்ணால் சும்மா இப்படி உக்காந்திருப்பீங்களா?' என்று சொல்லித் துளசக்கா, ஆச்சாரின் உள்ளத்தையே கலக்கிவிட்டாள். அதுவரையிலும் பேசாமல் இருந்த ஆச்சாரின் மனைவி இப்போது தேம்பினாள். ஆச்சாருக்குப் பிராண சங்கடமாக இருந்தது. தம் மனைவியின் துக்கத்தின் ஆழம் அவர் ஒருவருக்குத்தான் தெரியும். துளசக்கா சிறுபெண். அவருடைய மகள், ஏன் அவருடைய பேத்தியாகவே இருக்கலாம்.

சோகக்கடலில் குற்றம் குறைகள் எல்லாம் முழுகிப் பாதாளத் துக்குப் போய்விட்டன. இந்தச் சேஷப்பாவும் துளசக்காவும் ஆயிரம் தடவை ஆச்சார் வீட்டுக்கு வந்திருக்கிறார்கள். ஒரே ஊரில் இருந்துகொண்டு பொழுது விடிந்தால் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்வார்கள். ஆனால் இத்தனை நாட்களாக இல்லாத பாசமும் இரக்கமும் இன்று தோன்றியிருக்கின்றன. ஆச்சாருக்கு எல்லாம் விசித்திரமாகத் தோன்றியது. இல்லாவிட்டால் 'துளசக்கா, தம்முடைய மகள் போன்றவள்' என்ற எண்ணம் இன்று தோன்றுவானேன்? மங்கிய விளக்கொளியில் ஆச்சார் தம் மனைவியின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார். முதுமை மேகம் கவிந்த கண்களில் நிறையக் கண்ணீர் துளும்பியது. 'துளசக்கா வின் இந்தப் புதிய சிநேகமாவது எனக்கு நிலைக்கட்டும்' என்று கேட்பதுபோல் இருந்தது அந்தப் பார்வை. ஆச்சார் செயலற்றவ ரானார். 'தம்முடைய வாழ்க்கைக்குச் சோதனை மிக நெருங்கி வந்திருக்கிறது' என்று அவருக்குத் தோன்றியது. மனத்தில் சங்கடம் நெருப்பாகத் தகித்தது. வெறுப்புக் குமைந்தது. கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தார். பலகாரத்தைத் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை; எழுந்திருந்தார்.

'மனசைத் தேற்றிக்கொள், துளசக்கா. பகவான்மேல் பாரத்தைப் போட்டுவிட்டு இங்கேயே படுத்துக்கொள். பட்டினியாக மட்டும் படுக்காதே. நான் இப்போ மாளிகைக்குப் போகணும். விடியற்கால ஸ்நானத்துக்காக ஆற்றுக்குப் போவதற்குமுன் வீட்டுக்கு வந்துவிட்டுப் போகிறேன். மகா ராஜாவின் காதிலும் உன் விஷயத்தைப் போட்டுவைக்கிறேன். உன் புண்ணியம் பலமாக இருந்தால் மகாராஜாவின் பேச்சு, துரையின் மனத்தைத் தொடலாம்' என்று சொல்லிவிட்டு அங்கே இருக்க முடியாமல் வெளியே வந்தார்.

பாளாச்சாரின் உள்ளம் துக்க மிகுதியால் கல்லாகிவிட்டது. 'மாளிகையில் தமக்காகக் காத்திருப்பார்கள்' என்ற நினைவு வந்தது. மகாராஜா மறுநாள் மத்தியான்னம் இந்துபுரத்துக்குப் புறப்படுவதாக இருந்தார். அவர், பாதள்ளிக்கு வந்தது இது தான் முதல் தடவை. ஆகையால், போவதற்குமுன் புலி வேட்டைப் பழங்குடிகள், குடியானவர்கள், மற்றப் பரிவாரங்கள் எல்லோருக்கும் பரிசு கொடுக்க நினைத்தார். பரிசு கொடுக்க வேண்டியவர்களின் பட்டியலைத் தயாரிக்கும்படி யசவந்தராவிடம் சொல்லியிருந்தார். சாமராவுடன் சேர்ந்து யசவந்தராவ் பட்டியலைத் தயாரித்திருந்தார். அதற்கு ஆச்சாரின் சம்மதத்தை எதிர்பார்த்தார். அதற்காகத்தான் ஆச்சார் இப்போது மாளிகைக்கு வந்தார்.

ஆச்சாரைக் கண்டதும் யசவந்தராவ் அவர் கையில் பட்டியலைக் கொடுத்தார். ஆச்சார் அதைப் படித்துப்பார்த்தார். ராஜபுரோகிதருக்கு ஒரு ஜரிகைச் சால்வையும் தட்சிணையும் என்று கண்டிருந்தது. (தேவநாகரி எழுத்தில் பட்டியல் எழுதியிருந்தது.) அது ஆச்சாருக்குச் சம்மதமாகவில்லை. 'தம்மைப் போன்ற தரித்திரப் பிராமணனுக்கு இப்படிப்பட்ட சன்மானம் வேண்டாம்' என்று அடம் பிடித்தார். யசவந்தராவ் அதற்குச் சம்மதிக்கவில்லை. பட்டியல் முழுவதையும் படித்தபின் மகாராஜாவுக்கு அதைக் காண்பித்துவிட்டு, அரண்மனைக் காரிய தரிசியிடம் அதைக் கொடுக்கவேண்டும்.

பாளாச்சார் அடம் பிடித்த சங்கதி மகாராஜாவுக்குத் தெரிந்தது. அவரே பாளாச்சாரை மறுபடியும் கண்டு பேசினார். அப்பொழுதும் ஆச்சாரிடமிருந்து அதே பதில் வந்தது. 'ராஜபுரோகிதருக்குச் சன்மானம் வழங்காமல் போகும் அளவுக்குச் சம்ஸ்தானத்துத் தரித்திரம் வந்துவிடவில்லை, ஆச்சாரே! உங்களுக்கு என்ன வேண்டும்? என்பதைச் சொல்லுங்கள். அதை நடத்திக் கொடுக்கிறோம்' என்று மகாராஜா மனப்பூர்வமாகச் சொன்னார். மகாராஜாவின் அன்புப் பிடிவாதத்திற்கு முன் பாளாச்சாரின் பிடிவாதம் தோற்றுவிட்டது.

பாளாச்சார் சற்று யோசித்தார். சேஷப்பாவின் விடுதலைப் பிரச்சினை அவரை விரட்டிக்கொண்டிருந்தது மகாராஜாவிடம் அதைப்பற்றி ஒரு வார்த்தை சொல்ல விரும்பினார். ஆனால் சங்கோசம் அவர் வாயைக் கட்டியது. சேஷப்பாவின் குற்றங்கள் சாமானியமானவை அல்ல. சட்டத்தின் நோக்கில் அவை மன்னிக்க முடியாதவை. மனித உள்ளத்துக்கு உரிய இரக்கம் ஒன்றைத் தவிர, வேறு காரணத்தைக் காட்டி அவனுடைய விடுதலைக்கு முயலும்படி இல்லை. ஆனால் சேஷப்பா மனைவியின் இரங்கத்தக்க தோற்றம் எல்லாத் தத்வங்களையும் மீறி ஆழ்ந்ததாக நின்றது; நெஞ்சைத் தொட்டது. அதன் அனல்பட்ட அநுபவம் ஆச்சாருக்கு இருந்தது. அதை இன்னொரு வருக்குப் புரியும்படி சொல்வது எப்படி? சுத்தமான கருத்தை வெளியிடும்போது சுபாவத்தின் வண்ணத்தை ஏற்றுக்கொண்டே வருகிறது. மற்றவர் அதைத் தவறாகப் புரிந்துகொண்டால்?

வெகு நேரம் வரையில் மீனமேஷம் பார்த்தபின் இதயத்தின் முறையீடே வெற்றி பெற்றது. ஆச்சார் மகாராஜாவிடம் தமக்கு நேர்ந்திருக்கும் தர்மசங்கடமான நிலையை விவரித்தார். 'எப்படி யாவது சேஷப்பாவை விடுதலை செய்வித்து, அவனுடைய

மனைவியின் துக்கத்தைப் போக்கவேண்டும்' என்று கேட்டுக் கொண்டார்.

இது மனத்துக்குச் சம்பந்தப்பட்டது. நெஞ்சில் சூடு போட்டதுபோல் இருக்கும்போது நியாயம், அநியாயம் என்ற பிரச்சினை எழாது. 'தயவு செய்து அந்தப் பெண்ணின் துக்கத்தைத் தீர்க்கவேண்டும்' என்று வேண்டிக்கொண்டார்.

மகாராஜா யோசனையில் ஆழ்ந்தார். பாளாச்சாரின் குரலில் தொனித்த நேர்மை அவர் நெஞ்சையும் தொட்டது. கடைசியில் அவர் ஆச்சார் சொன்னதைச் செய்வதாக ஒப்புக்கொண்டார். அவருக்குக் கிப்ஸன் துரையைப்பற்றித்தான் கொஞ்சம் சந்தேகம் இருந்தது. எங்கே அந்த ஆங்கிலேய துரை, 'நியாயம், அநியாயம் என்ற சர்ச்சையில் இறங்கிவிடுவானோ?' என்ற பயம் இருந்தது. இருந்தாலும் 'முயன்று பார்க்கிறேன்' என்று சமாதானம் சொன்னார். ஆச்சாரின் முகம் நன்றிப்பெருக்கால் மலர்ந்தது. போகும்போது பார்த்தால் பரிசுப் பட்டியலில் ஆச்சாரின் பெயரின் முன்பு 'ஒரு ஜரிகைச் சால்வையும் தக்ஷிணையும்' என்ற பகுதி அழியாமல் அப்படியே இருந்தது.

மகாராஜாவின் சந்தேகத்துக்கு ஆதாரம் இருந்தது. முதல் முதலில் துரை சம்மதிக்கவே இல்லை. பஞ்ச நிவாரணக் கடனைக் கையாண்ட குற்றம் மிகப் பெரியது. மகாராஜா, தம்முடைய நட்பையெல்லாம் ஈடுகட்டவேண்டியிருந்தது. கடைசியில் சேஷப்பாவை விடுதலை செய்யத் துரை ஒப்புக்கொண்டார். அவர்கள் இருவரும் சர்ச்சை செய்தபின் ஓர் உண்மை வெளிப் பட்டது. 'பஞ்ச நிவாரணக் கடனைக் கணக்கப்பிள்ளை கையாண்டதற்குக் காரணம்: சப்ளைச் செலவுதான்' என்று மகாராஜா தர்க்கம் செய்தார். அதைக் கேட்ட துரை, வாயடைத்துப் போய்விட்டார். தம்முடைய செலவை அவர் ரூபா, அணா, பைசாக் கணக்கில் பைசல் செய்துவிட்டுத்தான் கேம்ப்பைவிட்டு வெளியேறுவார். ஆனால் இங்கே நிலை விபரீதமாக இருந்தது என்பது அவருக்குத் தெரிந்தது. 'அதிகாரிகளுடைய திருப்திக்காக அநியாயமாக யார் யாரிடம் இருந்தோ பிடுங்கிய பணம் செலவாகிறது' என்பது அவருக்கு வருத்தத்தைக் கொடுத்தது.

மகாராஜாவிடம் விடை பெற்றுக்கொண்டு கிப்ஸன் துரை, நேராகச் சாவடிக்குப் போய் மாஜிஸ்திரேட்டைச் சந்தித்தார். 'சேஷப்பாவின் விவகாரம் எந்த நிலையில் இருக்கிறது?' என்று விசாரித்தார்.

'அவனைக் கண்பார்வைக் காவலில் வைத்திருக்கிறேன், துரையே! சாட்சியங்களை எல்லாம் சேர்த்தபின் சார்ஜ் ஷீட்

தயாரிக்கும்படி போலீசுக்குச் சொல்லியிருக்கிறேன்' என்று சொல்லி, மாஜிஸ்திரேட் தம் கடமை உணர்வை வெளிப்படுத்திக் கொண்டார். கிப்ஸன் துரை, அவனை உடனே விடுவிக்கும்படி உத்தரவிட்டார். 'மகாராஜாவுக்கு அவன் என்னவோ தேவைப் படுகிறுனும்' என்று மேலுக்குச் சொல்லிக்கொண்டார் துரை. பேச்சோடு பேச்சாகப் பாளாச்சார் மகாராஜாவிடம் சிபார்சு செய்திருப்பதையும் சொன்னுர்.

துரை எழுந்து போனபின், மாஜிஸ்திரேட், சேஷப்பாவை அழைத்து, 'போகலாம் மகாராஜா! உன்னை விடுதலை செய் தாயிற்று. அதைச் செய்து முடிப்பதற்குள் எங்கம்மா புகட்டிய செவ்வெண்ணெய் எல்லாம் வெளியே வந்துவிட்டது' என்று தாமே அவனை விடுவித்தது போலச் சொல்லிக்கொண்டார். சேஷப்பா அங்கிருந்து போனவுடன், கிளார்க் கோபால்ராவ், கிப்ஸன் துரையிடமிருந்து ஒரு கடிதத்தைக் கொண்டுவந்து மாஜிஸ்திரேட் எதிரில் வைத்தான். சப்ளைச் செலவின் பில்லைக் கொடுத்து ரசீதும் ஆஜர்ப்படுத்தும்படி துரை அதில் எழுதி யிருந்தார். அதைப் படித்த மாஜிஸ்திரேட்டுக்குக் கோபம் தலைக்கு ஏறியது.

'இதென்ன, இது? தன் அப்பன் வீட்டுச் சொத்துத் தொலைந்ததுபோல் அல்லவா ரசீது கேட்கிறுன். போப்பா மகாராஜா, சேஷப்பாவிடம் பில் தயார் செய்து கொடுக்கச் சொல்லு. நம்ம செலவையும் சேர்த்து பில்போடச் சொல்லு' என்று சொன்னுர் மாஜிஸ்திரேட்.

வீட்டுக்குப் புறப்பட்ட சேஷப்பா, கோபாலகிருஷ்ணன் கோயில் பக்கத்தில்தான் இருந்தான். அதற்குள் தவாலி உஸ்மான் போய், 'மாஜிஸ்திரேட் கூப்பிடுகிறுர்' என்று சொன்னுன். அதைக் கேட்டவுடன் சேஷப்பாவின் கை கால்கள் விழுந்துபோயின. 'வேறு பேரிடி ஒன்று காத்திருக்கும்' என்று நிச்சயித்துக்கொண்டான். தலைவிதியே என்று முகத்தைத் தொங்கவிட்டவண்ணம் சாவடிக்கு வந்தான். சப்ளைச் செலவுக்கு பில் கேட்டவுடன் தைரியம் வந்தது.

'என்னிடம்தான் கணக்கப்பிள்ளை தஸ்தாவேஜு இல்லையே. சாமராவிடமிருந்து பில் வாங்குவதுதானே சரி' என்று சொன்னுன். 'இந்தத் தொல்லையே வேண்டாம்' என்பதுபோல் இருந்தது அவன் பதில்.

'சப்ளைக்குச் சாமான் கொடுத்தவன் நீ. அதனால் நீதான் பில்லையும் கொடுக்கவேண்டும். கலெக்டர் துரைக்கு அதை அனுப்பவேண்டும். கூடியமட்டும் சட்டரீதியில் பில் தயாரிக்க வேண்டியதாக இருப்பதால் உன்னைக் கூப்பிட நேர்ந்தது' என்று கோபால்ராவ் சொன்னான்.

'சட்டத்துக்குப் புறம்பான முறையில் வேலை செய்வது வேண்டாம் ராவ்! சாமான் கொடுத்தவன் பலசரக்குக் கடை வீரப்பா. அவனிடம் இருக்கும் கணக்குப்படி குறிப்புக் கொடுத்தால் போதுமல்லவா?' என்று சொல்லி, அஞ்சல் மல்லனைக் கடையிலிருந்து பில் வாங்கி வரும்படி உத்தரவிட்டு விட்டு, சேஷப்பா, சாவடியிலேயே உட்கார்ந்து அரட்டை அடித்துக்கொண்டிருந்தான்.

கடையிலிருந்து வந்த சாமான் பில்லைப் பார்த்த கோபால்ராவ் திடுக்கிட்டான். 'துரை வீட்டுக் கல்யாணத்துக்காவது இவ்வளவு சாமான் வேண்டியிருக்குமா?' என்பது அவனுடைய சந்தேகம். 'மாஜிஸ்திரேட்டைக் கேட்டுவிட்டு வருகிறேன் இரு' என்று அவருடைய முகாமை நோக்கிச் சென்றான்.

அதே சமயத்தில் பாளாச்சார், மாளிகையிலிருந்து தம் வீட்டுக்குப் போய்க்கொண்டிருந்தார். சேஷப்பா விடுதலையான செய்தி அதற்குள் அவருக்குத் தெரிந்துவிட்டது. அப்பொழுது சாவடியில் அவனைக் கண்டதும் நின்றார். 'ஏன், சேஷப்பா, இன்னும் இங்கேயே இருக்கே?' என்று அநுதாபத்துடனே கேட்டார். ஆச்சாரைக் கண்டவுடன் சேஷப்பாவுக்கு அடங்கி யிருந்த கோபம் எல்லாம் பீரிட்டுக்கொண்டு வந்தது. ஆச்சாருடைய பேச்சுக்கு விபரீதமான பொருள் கொண்டான். அவனுடைய புத்திக்கு நேரான அர்த்தம் எடுத்துக்கொள்ளும் பழக்கமே இல்லை. அவர், தன்னை 'அவமானப்படுத்துவதற் காகவே கேட்டிருப்பார்' என்று நினைத்தான். 'அதற்குத் தகுந்த பதில் சொல்ல வேண்டும்' என்ற ஆத்திரத்தால், ''இங்கே உட்காராமல், 'ஜெயிலுக்குப் போவேன்' என்று நினைச்சேளா?'' என்று புருவத்தைச் சுளுக்கிக்கொண்டு கேட்டான். ஆச்சார், வேண்டும் என்றே கோபம் கொள்ளவில்லை. இந்த விவகாரத்தின் ரகசியம் எல்லாம் அவருக்கு முழுதும் தெரியும்.

'பாவம்! துளசக்கா, ரொம்பத் தவிச்சிண்டிருந்தா. விடுதலை கிடைச்சவுடனே நீ வீட்டுக்குப் போயிருக்கணும். இந்தப் பாழும் கச்சேரி ஜனங்களுடைய சகவாசத்தை இன்னும் விடலையா?' என்று கேட்டார்.

'அவா புண்ணியத்தாலேதான் நான் வீட்டுக்குப் போகும் நிலே இருக்கிறது. அப்படி இருக்க, அவா சகவாசத்தை விட்டுட்டு ஏதோதோ சூழ்ச்சி செய்து ஜனங்களே அனுப்பறவங்க பின்னுடே போகட்டுமா?' என்றுன் சேஷப்பா. அவனுடைய ஒவ்வொரு பேச்சிலும் நஞ்சு நிறைந்திருந்தது.

'உன் வினேயே உன்னேச் சுட்டது! நீ ஏன் இன்னொருத்தர் மேலே குற்றம் சாட்டறே. ஒன் பொண்டாட்டியோட புண்ணியத்தாலே தலேக்குவந்த ஆபத்திலேருந்து தப்புச்சிண்டே. யாராரோ கண்டவா புண்ணியத்தாலே விடுதலே ஆனதா நெனச்சுக்காதே' என்று சொன்னுர். சேஷப்பா வேறு ஏதேதோ பேசும் ஆவேசத்தில் இருந்தான். ஆனுல் அதைக் கேட்க ஆச்சார் அங்கே இருக்கவில்லே. அதற்குள் மாஜிஸ்திரேட்டிடம் போயிருந்த கிளார்க் கோபால்ராவ் திரும்பி வந்தான்.

கோபால்ராவ் வந்தபின் சர்ச்சை மறுபடியும் தொடங்கியது. இருவருமே பணத்தை அமுத்திக்கொள்ளவல்ல சூரர்கள்! கடைசியில் ஒரு மணி நேரத் தர்க்கத்துக்குப்பின் ஒரு முடிவுக்கு வந்தார்கள். 'சேஷப்பா ரசீதை உடனே எழுதிக் கொடுத்து விட்டு மாஜிஸ்திரேட்டிடம் பணத்தைப் பெற்றுக்கொள்வது' என்று ஏற்பாடாயிற்று. என்ன செய்தாலும் அந்தப் பணம் கைக்குத் திரும்பாது என்பது கோபால்ராவுக்குத் தெரியும்.

''சேஷப்பா, 'கன்னிகாதானம் செய்து கொடுத்த பெண்ணும் அதிகாரிகள் கையில் போன பணமும் திரும்ப வாரா' என்னும் பழமொழி உனக்குத் தெரியாதா? இப்போ ரசீது எழுதிக் குடுத்துடு. ரொக்கத்தை வசூல் செய்ய ஏதாவது செய்யலாம்'' என்று சேஷப்பாவின் முதுகைத் தட்டிக் கொடுத்தான் கோபால்ராவ்.

சேஷப்பா வீட்டுக்குள் நுழைந்தபோது, துளசக்கா, சுவாமியின் முன் விளக்கு ஏற்றிக்கொண்டிருந்தாள். அதைப் பார்த்தவுடன் சேஷப்பாவின் மனத்தில், காரணம் இல்லாமல், 'உன்னுடைய பெண்டாட்டியின் புண்ணியத்தால் நீ தலேக்கு வந்த ஆபத்திலிருந்து தப்பிச்சிண்டே' என்ற ஆச்சாரின் பேச்சு நினேவுக்கு வந்தது.

சரியாகப் பகல் ஒரு மணிக்கு, மகாராஜா, மாளிகையை விட்டுப் புறப்பட்டார். அவரை ஆற்றங்கரை வரைக்கும் மேளதாளங்களுடன் ஊர்வலமாக அழைத்துச் செல்லக் குடியான வர்கள் ஏற்பாடு செய்திருந்தார்கள். மகாராஜா, பாதள்ளியில் இருந்த வரையிலும் ஊருக்குத் திருவிழாக் களை கட்டியது. இன்று அந்தத் திருவிழாவின் கடைசி நாள். ஊர்வலத்துக்கு ஊரே திரண்டுவந்து ஆற்றங்கரையை அடைந்தது.

கடந்த நான்கு நாட்களில் ஆற்றில் ஏராளமான வெள்ளம் வந்திருந்தது. மழைக்காலத்தில் முரட்டுத்தனமாக அடங்காமல் ஓடும் ஆறு, வெள்ளத்தால் இன்றும் பொங்கி எழுந்தது. ஆற்றின் நீர் ஊரின் கீழ் மேல் திசைகளை ஆக்கிரமித்து உள்ளே புகுந்திருந்ததால் பாதள்ளி, தண்ணீரின் நடுவில் ஒரு தீபகற்பமாக இருந்தது. ஆற்றின் இந்த ஆக்கிரமிப்பு வருஷத்தின் விசேஷங் களின் ஒன்றாக இருந்தது. வெள்ளத்தின் ஆக்கிரமிப்பால் படகு மூன்று மைல் தூரம் நீர்ப்பரப்பில் செல்லவேண்டி யிருந்தது. ஆறு இவ்வளவு விரிந்திருக்கும்போது அதைக் கடந்து செல்லும் வாய்ப்பு, மகாராஜாவுக்கு எதிர்பாராமல் கிடைத்தது. மகா ராஜா, படகில் ஏறியபோது முன்பு நடந்ததுபோல் மறுபடியும் விபத்து ஏற்படாமல் படகோட்டிகள் மிகுந்த எச்சரிக்கையோடு இருந்தார்கள்.

மகாராஜா, குடியானவர்களுடைய வணக்கத்தையும் போலீஸாரின் கௌரவமான பாதுகாப்பையும் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டார். பாளாச்சாருக்கு நமஸ்காரம் செய்து அவரிடம் ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டார். கிப்ஸன் துரையின் கை குலுக்கல் வெறும் சடங்காக இல்லாமல் இரண்டு உயிர்கள் ஒன்றோடொன்று பேசிக்கொள்வதுபோல் மனப்பூர்வமானதாக இருந்தது. விடை பெறும் இந்தக் கொண்டாட்டத்தில் அசாதாரணமான மனிதத்தன்மை நிறைந்து வழிந்தது. ஒரு நோக்கில் பாதள்ளியுடன் மகாராஜாவின் தொடர்பு வெறும் வரலாறாக இருந்தது. இவருடைய முன்னோர்கள் இங்கிருந்து போனவர்கள்தாம். அவர் பாதள்ளியைப் பார்த்தது இதுதான் முதல் தடவை. முதல் தடவையாகப் பாதள்ளி மக்கள் அவரைப் பார்த்தார்கள். அவர், பாதள்ளியில் தங்கியது நான்கே நாட்கள்தாம். ஆனால் அவ்வளவு குறுகிய காலத்தில் எவ்வளவு

உறுதியான அன்புப் பிணைப்பு ஏற்பட்டுவிட்டது! வணக்கமும் உபசாரமும் முடிந்தபின், மகாராஜா படகில் ஏறி இருக்க வேண்டும். ஆனால் தயங்கினார். நடையிலும் பார்வையிலும் சந்தேகம் தோன்றியது. எதையோ தேடுவது போலும் எதையோ நினைவுபடுத்திக்கொள்வது போலும் சுற்றுமுற்றும் பார்வையை ஓட்டினார். இந்த மெய்ப்பாடுகள் எல்லாம் தாமாகவே தோன்றியவை. இனம் புரியாத உணர்வு பொங்கி வந்தபோது அதன் பகுதியாக இந்த மெய்ப்பாடுகளெல்லாம் வெளியாயின; அவ்வளவுதான்.

தாதா, மகாராஜாவின் கூடவே போகவேண்டியிருந்ததால் அவர் பின்னாலேயே இருந்தான். தலைப்பாகையிலிருந்து காலின் செருப்பு வரையில் எல்லாம் புதியவையாக இருந்தன. அலங்காரத்தின் புதுமை, பளபளப்பு எல்லாம் பிரிவுத் துக்கத்தை மறைக்கும் பூச்சாக இருந்தன. அழகிய வேஷம் உள்ளத்தின் மகிழ்ச்சிக்கு வெளிப்படையாக இருக்கவில்லை. மணப்பெண்ணின் புதுச் சேலையைப்போல் வாழ்க்கையின் திருப்பத்தில் ஏற்படும் துக்கத்தைத் தெளிவாக்குவதற்குக் காரணமாக இந்த வேஷம் இருந்தது. தாதாவின் உள்ளம் பிரிவுத் துன்பத்தால் பிழிந்தது போல் ஆயிற்று. அவனுடைய துன்பம் பேச்சுக்கு மீறி ஆழ்ந்ததாக இருந்தது. அவன் அடிக்கடி இங்கும் அங்கும் பார்த்துக்கொண்டு, நின்ற இடத்தில் நிற்காமல் அமைதியின்றி இருந்தான்.

மகாராஜா படகில் ஏறிவிட்டதால், தாதாவும் அவரைத் தொடர்ந்தான். அதற்குள் கூட்டத்திலிருந்து ஓடிவந்த லக்ஷ்மணன் மகனைப் பிடித்து இறுகத் தழுவிக்கொண்டான். தந்தையின் பாசம், தாதாவின் உடம்பையெல்லாம் தடவி, இன்பம் துன்பம் இரண்டையும் உண்டாக்கியது. பேசாமல் கண்ணீரைப் பெருக்கி மகனுடைய தலைக்கு அபிஷேகம் செய்து விட்டான். இப்படியே இருவரும் எத்தனை நேரம் இருந்தார்களோ, தெரியாது. பாசத்தோடு கூடிய உறுதியான அணைப்பில் காலத்தின் நினைவே மறந்துபோயிற்று. பக்கத்தில் இருந்த காசிம் சாயபு, லக்ஷ்மணனுடைய தோளைப் பிடித்து இழுத்தான். லக்ஷ்மணனுக்குத் தலையில் அடி விழுந்த மாதிரி இருந்தது. மகன் புதியதாக வயிற்றில் பிறந்து வந்ததுபோல் தோன்றியது. சுகமோ துக்கமோ அந்த அநுபவம் ஊசி முனையாகக் குத்தியது. இது மனம் அறிந்த உண்மை. அதனால் இந்த உலக நினைவே வேண்டாம் என்று அவனுக்குத் தோன்றியது.

'என்ன அசடா இருக்கே லக்ஷ்மணா! உனக்கு என்னிக்குதான் புத்தி வரும்? உன் மகனை மகாராஜா ஜெயிலுக்குக் கொண்டு

போறூர்னு நெனச்சுட்டியா?' என்று காசிம் சாயபு உரிமையுடன் கடிந்துகொண்டான். லக்ஷ்மணன் இன்னும் விக்கி விக்கி அழுதுகொண்டிருந்தான். காசிம் சாயபுவின் கை, அவனை அறியாமலேயே லக்ஷ்மணனுடைய முதுகைத் தடவிக்கொடுத்து, 'சின்னப் பசங்களைப்போல இப்படி ஏன் அழுவுறே, லக்ஷ்மணு? பையனுக்கு மகாராஜாவோட ஆதரவு கெடைச்சுதுன்னு சந்தோஷமா சிரிச்சுகிட்டு அனுப்பறதை விட்டுட்டு, இப்படி அழுதுகிட்டு நிக்கறயே?' என்று காசிம் சாயபு சமாதானம் சொல்லிக்கொண்டேயிருந்தான்.

தாதா பேசாமல் படகில் ஏறினன். மகாராஜா அதற்கு முன்னலேயே படகில் ஏறிவிட்டார். கட்டை அறுத்துக்கொள் பவர்கள்போல் கரையிலிருந்து பாய்ந்து, பரந்த அமைதியான நீர்ப்பரப்பில் படகு அசைந்து சென்றது. அலைகளால் முன்னும் பின்னுமாக ஆடிக்கொண்டு சென்ற படகு கரையை விட்டு நகரத் தயங்குவதுபோல் இருந்தது. மகாராஜாவின் பார்வை கரையிலேயே நிலைத்துவிட்டது. கரையில் நின்றவர்களுடைய பார்வையெல்லாம் மகாராஜாவின் பக்கமே இருந்தன. மகாராஜா, தாதா இருவரும் கைகூப்பி விடைபெறும் நிலையிலேயே நின்றிருந்தார்கள்.

தண்ணீரில் இருப்பதுபோலவே வாழ்க்கை அலைகளின் போக்கும் நெஞ்சில் மோதுவதாக இருந்தது. இறந்தகாலம், எதிர்காலம் இரண்டையும் அடக்கிக்கொண்ட பிரிவின் இந்த ஒருகண நேரம் யமனுலகத்தின் எல்லைக்கே போய்விட்டதுபோல் இருந்தது.

தாதா, வைத்த கண் வாங்காமல் பாதள்ளிப் பக்கமே பார்த்துக்கொண்டிருந்தான். கீழே தண்ணீர் அலைபாய்ந்து கொண்டிருந்தது. படகும் அதற்கு ஏற்றபடி சாய்ந்து ஆடிக் கொண்டிருந்தது. தினசரிப் பழக்கத்தினலோ என்னவோ ஒன்றை ஒன்று எதிர்த்துக்கொண்டிருந்தன. பாதள்ளிக் கரை, வட்டமாகச் சுற்றுவதுபோல் கண்ணுக்குத் தோன்றியது. தாதாவின் கண்களில் நீர் நிறைந்தது. 'ஊரைவிட்டு வெகுதூரம் போகும்படி நேர்ந்துவிட்டதல்லவா?' என்ற ஏக்கம் நெஞ்சைப் பிழிந்தது.

படகு, வேகம் எடுத்தது. படகோட்டிகள் படகில் நின்றிருந்தவர்களை எல்லாம் உட்காரும்படி கூச்சலிட்டார்கள். இப்பொழுது படகு, உள்ளே பரவிய நீர்ப்பகுதியிலிருந்து வெள்ளத்துக்குப் பக்கத்தில் வந்துவிட்டது. படகில் ஜனங்கள் நின்றுகொண்டிருந்தால், வேகமாக வீசும் காற்று, படகை

வெள்ளத்தோடு இழுத்துக்கொண்டு போய்விடலாம். ஆற்றின் நடுப் பகுதியில் வெள்ளத்தின் இழுப்புப் படகை வேகமாகக் கிழக்கே இழுத்தபொழுது, 'காற்றின் துணையால் அந்த வேகம் மேலும் அதிகரிக்கக் கூடாது' என்று முன் ஜாக்கிரதையாக மகா ராஜாவின் பரிவாரத்தினர் எல்லோரும் உட்கார்ந்திருந்தனர்.

ஆற்றின் வேகம் படகை அணைத்துக்கொள்வதுபோல் இழுத்தது. கோல்கள் வேகமாக இயங்கத் தொடங்கின. ஒரு கோலுக்கு இருவர்வீதம் உட்கார்ந்திருந்த படகோட்டிகள், தம் கை பலத்தை எல்லாம் உபயோகித்து, வெள்ளத்தை எதிர்ப்பது போல் கோலை இயக்கினார்கள். வெள்ளத்தின் இழுப்பில், படகு, கிழக்குப்புறம் மிதந்து போனாலும், கோல்களின் பலத்தால் அக்கரையைச் சேரும்படி முயன்றார்கள். எதிரில் நடுத் திட்டு இருந்தது. வெள்ளம் நிறைய வந்திருந்தபடியால் அங்கிருந்த மரங்கள் எல்லாம் முழுகிவிட்டாலும் தண்ணீரின் வேகத்தை எதிர்த்துச் சுழலும் மடுக்களை உண்டாக்கியிருந்தன. ஆற்றில் எழும்பும் சுழிகளைக்கொண்ட அந்த இடத்தை அடையாளம் கண்டுகொண்டிருந்த படகோட்டி சிவலிங்கன், சுக்கானைச் சட்டென்று திருப்பிச் சுழலும் மடுவிலிருந்து படகைத் தப்ப வைத்தான்.

இப்பொழுது படகு வெள்ளத்தின் நடுவில் சுதந்திரமாகச் சென்றது. நட்டாற்றின் இழுப்பால் வேகமும் அதிகரித்தது. பாதள்ளியின் மரம், செடிகள், வீடுகள், தோட்டங்கள் எல்லாம் கிழக்கிலிருந்து பெயர்ந்து மேற்கு நோக்கி வேகமாகத் திரும்புவது போல் தோன்றின. தாதா, வெள்ளத்தையோ படகையோ கவனிக்கவில்லை. இப்படி, நிறைந்த வெள்ளத்தில் பயணம் செய்வது அவனுக்குப் புதியதன்று. அவனுடைய லட்சியம் எல்லாம் கரையின்மேல் இருந்தது. கரையின் மண், சரிந்து விழுந்து வெள்ளத்தோடு போய்க்கொண்டிருந்தது. ஆண்டு தோறும் ஆறு இப்படியே பாதள்ளியின் மண்ணை அடித்துக் கொண்டு போனபடி இருந்தது. நாளடைவில் பாதள்ளி நிலம் இதனால் தரிசாகிவிடலாம். பெரிய பெரிய மரங்கள் ஆற்றோடு மிதந்து போய்க்கொண்டிருந்தன. அவை எங்கிருந்து வருகின்றனவோ? எங்கே போகின்றனவோ?

தாதாவின் மனமும் ஆற்று வெள்ளத்தைப்போல் குழம்பியிருந்தது. நெஞ்சின் துடிப்புக் காதில் கேட்டுக்கொண்டே இருந்தது. 'இனிமேல் பாதள்ளியை எப்போது பார்ப்பேனோ?' என்ற தெளிவற்ற ஏக்கம் மனத்தில் அலைபாய்ந்தது. அதற்குள் படகோட்டிகள் குரல் கொடுப்பது கேட்டது.

'ஜாக்கிரதை! ஜாக்கிரதை!! கரைக்குப் பக்கத்தில் நாம் வந்துவிட்டோம். தண்ணீலே இருக்கிற மரக்கிளையைச் சட்டுனு பிடுச்சுக்காதெங்க. அதிலே பாம்பு சுத்திகிட்டிருக்கும், ஜாக்கிரதை!' என்று படகில் இருப்பவர்களைப் படகோட்டிகள் எச்சரித்தார்கள்.

பாதள்ளிக் கரை தொலேவில் போய்விட்டது. கரையில் இன்னும் ஜனங்கள் கூட்டமாக நின்றிருந்தாலும் யாருடைய முகமும் அடையாளம் தெரியவில்லை. வெகு தொலேவில் இருந்ததால் ஜனக்கூட்டமும் தண்ணீரைப் போலவே பரவலாகத் தெரிந்தது. அந்த நிலேயிலும் தாதா, லக்ஷ்மணனுடைய முகத்தைத் தேடித் தேடி தோல்வியுற்ருன். யார் யாரோ எப்படி எப்படியோ தோன்றினர்கள். தாதாவுக்கு மறுபடியும் துக்கமாக இருந்தது.

படகோட்டிகளின் குரல் மறுபடியும் கேட்டது. 'கரை வந்து விட்டது. கயிற்றைப் பிடித்துக்கொள்ளுங்கள் அப்பா!' என்று எச்சரிக்கை கொடுத்தார்கள். கரையைக் கண்டதும் தாதா ஆறுதல் அடைந்தான். நிலத்தில் வாழும் ஜீவன், இந்த அரை மணிநேரத் தண்ணீர்ப் பயணத்தில் சலிப்படைந்துவிட்டது. மகாராஜாவின் குதிரைகளேப் படகோடு சேர்த்துக் கட்டியிருந்ததால் நிறைந்த ஆற்றில் 'புஸ் புஸ்' என்று பெருமூச்சு விட்டுக்கொண்டு படகோடு நீந்தி நீந்தி அவை களைத்துவிட்டன. அவைகள் கரையை அடையத் தவித்தன. படகு, களிமண் தரையை எட்டியது. அங்கே இறங்க வசதியாக இருக்கும்படி நன்ருகத் தரை ஓரமாகப் படகை நிறுத்தும்படி கயிற்றைப் பிடித்துக் கரையோடு ஒரு புல்மேடு வரைக்கும் படகோட்டிகள் இழுத்துக்கொண்டு போனர்கள். குதிரைகளின் கயிற்றைப் படகின் முனேயில் மாட்டிப் பிடித்துக்கொண்டிருந்த ராவுத்தர்கள், பிடியைத் தளர்த்தியதுதான் தாமதம்; குதிரைகள் பரபரப்புடன் ஓடிக் கரையில் தள்ளாடி விழப்போயின. தண்ணீரில் ஊறிப் போயிருந்த களிமண் நிலத்தில் முழங்கால் மட்டுச் சேற்றில் அவற்றின் கால்கள் சிக்கிக்கொண்டன. படகோட்டிகள், முதல் வேலேயாக அவற்றைச் சேற்றிலிருந்து மீட்க வேண்டியதாயிற்று.

படகு, பத்திரமாக அக்கரை சேர்ந்ததைக் கண்டு இக் கரையில் நின்றிருந்த பாதள்ளி மக்கள், 'அப்பாடா!' என்று பெருமூச்சு விட்டார்கள். அதுவரையில், 'படகோட்டிகளின் பிடியில் இருந்து நழுவி எங்கே படகு வெள்ளத்தோடு போய்விடுமோ?' என்று இவர்கள் கவலேயில் ஆழ்ந்திருந்தார்கள். இப்போது

எல்லோரும் கவலை நீங்கி, தெளிந்த மனத்துடன் அரட்டை அடித்துக்கொண்டு வீட்டை நோக்கி நடந்தனர்.

யசவந்தராவ், சாமராவ், பாளாச்சார் மூவரும் மாளிகைக்குப் போனார்கள். கடந்த மூன்று நாட்களாக மாளிகைக்குப் புத்துயிர் வந்ததுபோல் இருந்தது. அதன் பழைய பெருமை எல்லாம் திரும்பியதுபோல இருந்தது. மகாராஜா போன பின்பு இருமடங்காக வெறிச்சோடிவிட்டது.

'மகாராஜா இருந்தபோது மாளிகை எப்படிக் கலகலவென்று இருந்தது. இப்பொழுது ஒரேயடியாக வெறிச்சோடிவிட்டது!' என்று யசவந்தராவ் பெருமூச்சு விட்டார். 'மாளிகை மட்டுமா? மணியக்காரரே! ஊர் முழுவதும் சூனியம் ஆகிவிட்டதாக எனக்குத் தோன்றுகிறது. சிறு வயதிலே இருந்து நான் பாத்திருக்கேன். மாளிகை நெறஞ்சிருந்தா ஊர் நெறஞ்சிருக்கும்' என்று, பாளாச்சார் தம்முடைய பாஷ்யத்தையும் சேர்த்துக்கொண்டார்.

மூவரும் இப்படிக் கற்பனை நிறைந்த பேச்சுகளில் ஈடுபட்டனர். யசவந்தராவுக்குச் சொல்ல முடியாத சலிப்பு ஏற்பட்டது. மகாராஜா வந்த சமயத்தில், அவர், தம்முடைய முதுமையையும் மறந்துவிட்டு உழைத்துக்கொண்டிருந்தார். இப்பொழுது வேலையே இல்லை. பாளாச்சாருக்கு இரண்டொரு நாட்களுக்கு மூளையை அரிக்கும் கவலைகளில் இருந்து விடுதலை கிடைத்ததுபோல் இருந்தது. இப்பொழுது மறுபடியும் கவலைகள் படையெடுத்தன. வாழ்க்கையின் கடைசிப் படியில் நின்றிருந்ததால் அவ்விருவருக்கும் இதுபோல் சலிப்பு ஏற்படுவது இயற்கை. இளைஞனை சாமராவ் மட்டும் ஏதேதோ திட்டங்களில் ஈடுபட்டிருந்தான். ஆனால் திருவிழா முடிந்தபின் ஏற்படும் ஒரு வெறுமை அவனையும் பற்றிக்கொண்டது.

அப்பொழுது காசிம் சாயபுடன் ஜாகீர்க் குடியானவர்கள் எல்லோரும் வந்து வணக்கம் செய்து, கூடத்தின் ஒரு பகுதியில் உட்கார்ந்திருந்தார்கள். அடுத்தபடி தங்கள் வேலை என்ன என்பதைச் சாமராவைக் கேட்டு அவர்கள் தெரிந்துகொள்ள வேண்டும். மகாராஜா தங்களுக்குக் கொடுத்த உத்தரவைத் தெரிந்துகொள்ள விரும்பினார்கள். சாமராவ், அவற்றையெல்லாம் விவரிக்கத் தொடங்கினான். 'குடியானவர்கள் கொடுக்க வேண்டிய பழைய கடன் எவ்வளவு இருந்தாலும் அதையெல்லாம் ரத்துச் செய்துவிடவேண்டும். சொந்தச் சாகுபடிக்கு என்று இருந்த நம்பர்களை ஒப்பந்தம் பெற்றுக்கொண்டு குடியானவர்களுக்குக் குத்தகைக்கு விடவேண்டும்' என்ற மகாராஜாவின்

அபிப்பிராயத்தைச் சாமராவ் சொன்னான். 'ஜாகீர்தாரின் சொந்தச் சாகுபடிக்கு என்று வைத்துக்கொண்டிருந்த பூமிகளின் குடியானவன் பாபு சாஹேப்' என்று சேஷப்பா எழுதியிருப்பது சில குடியானவர்களுக்குத் தெரிந்திருந்தது. இப்போது அந்த நிலங்களையும் குத்தகைக்குக் கொடுக்க மகாராஜா முடிவு செய்திருப்பதைக் கேட்டு, சில குடியானவர்களுக்குச் சந்தோஷ மாக இருந்தது. ஆனால் மாளிகை நிலங்களை வாரத்துக்குச் சாகுபடி செய்துகொண்டிருந்த குடியானவர்களுக்கு மட்டும் 'தங்களுக்கு இனிமேல் மாளிகையின் தொடர்பு விட்டுப் போய் விடும்' என்று கவலை உண்டாயிற்று.

வாரச் சாகுபடி செய்துவந்த கரியப்பா, எழுந்து நின்றான். ''எசமான், தலைமொற தலைமொறயா நடந்துவந்த மாளிகை வாரம் நின்றுபோனா ஜாகீரின் லக்ஷ்மியே போய்விடுவா. 'குடியானவங்களுக்கு எருதும், சாகுபடிக்கு வேண்டிய சாமான் களும் கொடுத்து வேலை வாங்கிக் கூலிகொடுக்கும் முறையும் இருக்கவேண்டும். பாதிக்குப் பாதி பங்கிட்டுக்கொள்ளும் வாரமும் இருக்கவேண்டும்' என்று பாபு சாஹேப் திட்டமிட்டது இன்னும் கண்ணு முன்னாலே நிக்குது. 'அவர் கொடுத்த சோத்திலே மண்ணைப்போட்டு ஏழைகளான எங்களைத் திண்டாட விடக்கூடாது'ன்னு நான் கேட்டுக்கறேன்'' என்று சொன்னான்.

அதற்குப் பதிலாகச் சாமராவ் மறுபடியும் தான் சொன்னதையே சொன்னான். 'மகாராஜா சொன்னதைச் செய்வதே தன்னுடைய கடமை' என்றான். 'சரி, இத்தனை வருஷம் வாரச் சாகுபடி செய்து உழைச்சவங்களுக்குக் குடியா னவனாவதுலே என்ன கஷ்டம்? எருதுகள், மற்றச் சாமான்கள் எல்லாவற்றையும் மகாராஜா பெயரில் ஒரு பட்டியல் எழுதிக் கணக்கு வைத்துக்கொள்ள வேண்டும். வாரக்காரர்கள் எல்லாம் குத்தகைக்காரர்கள் ஆகவேண்டும்' என்றான் சாமராவ்.

ஆனால் கரியப்பனுக்கு இந்தத் திட்டம் பிடிக்கவில்லை. 'நிலத்தைக் கொடுத்துவிடுகிறார்கள். அதற்கு மேலே செல வில்லையா? விதை, எரு, பரம்படிக்கும் கூலி இதற்கெல்லாம் என்ன செய்வது? ஏழைகளுக்குக் குத்தகை எடுத்து உழைக்கச் சக்தி இல்லை' என்று குறுக்குக் கட்டை போட்டான். காசிம் சாயபுவுக்குக் கரியப்பன் பேச்சைக் கேட்டுக் கோபம் வந்து விட்டது. 'என்னப்பா, கரியா! கையாலாகாதவனைப்போல் பேசினா அதுக்கு என்ன சொல்லமுடியும்? எங்க அப்பா மாளிகை வாரம் செய்துதான் குத்தகைக்காரர் ஆனார். உங்களுக் கெல்லாம் அப்படிக் குத்தகைக் குடியானவனாக வாழ வேண்டாம்னு இருந்தா, விட்டுடுங்க. கை உழைக்கிறவனுக்கு

வயித்தை நெறப்பறத்துக்கு, ஊரு உலகம் எல்லாம் காத்திருக்கு. நீங்க செய்யறதா இருந்தா உங்களுக்குப் போதுமான அளவு நிலம் கொடுக்க முடியும். இல்லாட்டி மற்றக் குடியானவங் களுக்குப் பங்கிடவேண்டியிருக்கும்' என்று முடிவாகச் சொல்லி விட்டான். கரியப்பனுக்குக் கோபம் வந்துவிட்டது. ''அப்படிச் சொன்னு, நாங்கள்ளாம் 'கட்டின துணியோட வெளியே போகணும்னு' சொல்ற மாதிரி அல்லவா இருக்குது, நீ பேசற பேச்சு!'' என்று அவனை உசுப்பினுன்.

யார் எவ்வளவு சொல்லியும் கரியப்பன் தன் பேச்சை விடவில்லை. 'மாளிகை வாரத்தையே தொடர்ந்து நடத்த வேண்டும்' என்று பிடிவாதம் பிடித்தான். சாமராவ் அதைக் காதில் போட்டுக்கொள்ளவில்லை. மற்றக் குடியானவர்களும் சாமராவ் சொன்னதை ஆமோதித்தார்கள். குடியானவர்கள் என்று சொல்லிக்கொள்ளும் ஆசை அவர்களுக்குப் பலமாக இருந்தது. எதிர்பாராமல் கிடைத்த இந்த வாய்ப்பை இழக்க அவர்கள் விரும்பவில்லை.

கரியப்பனுடைய தர்க்கத்தால் உண்டான வெறுப்பிலேயே கூட்டம் கலைந்தது. பேச்சை வளர்க்க யாருக்கும் இஷ்டம் இல்லை. கூட்டம் நடந்துகொண்டிருக்கும்போதே பாளாச்சார் புறப்பட்டுவிட்டார். பிறகு சற்று நேரத்தில் சாமராவும் எழுந் திருந்துவிட்டான். அப்புறம் குடியானவர்களுக்கு அங்கே என்ன வேலை? எல்லோரும் புறப்பட்டுவிட்டார்கள்.

கரியப்பன், மாளிகையிலிருந்து தன் வீட்டுக்குப் புறப் பட்டான். மடத்தைத் தாண்டிப் போனபோது மடத்தில் கூட்டம் சேர்ந்திருந்ததைக் கண்டு தானும் உள்ளே போனுன். படதையாவும் லிங்கப்பாவும் மடத்துத் திண்ணையில் மகிழ்ச்சி யுடன் அரட்டை அடித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். கஞ்சாப் பக்தர் கூட்டம் வழக்கம்போல் பக்தியோடு அவர்களைச் சுற்றிக் கூடி அரட்டையில் இறங்கியது

முன்பு கெஞ்சன் இருந்தபோது மடத்தில் சேரும் கூட்டமே இப்பொழுதும் கூடியிருந்தது. இரண்டொருவர் காணப்பட வில்லை. வேறு சிலர் வரவில்லை. ஆனுல் இறந்தவர்களுடைய இடத்தை நிரப்பும் வீரர்களுக்கு ஒன்றும் குறைவில்லை. சூழ்நிலையில் எந்த விதமான மாறுதலும் காணப்படவில்லை. படதையா முன்பு இருந்தபோது நடக்கும் அரட்டையே நடந்து கொண்டிருந்தது. அது போலவே கேலிப்பேச்சுகள், வாயிலிருந்து வாய்க்கு மாறிச் சிரிப்பு அலைகளை எழுப்பிக்கொண்டிருந்தன. ஆனுல் கெஞ்சன் இல்லாததால் கஞ்சாவை அடைத்து சுவாரஸ்ய

மாகப் பதப்படுத்திக் குழாயைத் தயாரித்துக் கொடுக்கும் வேலை நடக்கவில்லை. அது போல் கெஞ்சன் பேசும் சுவாரஸ்யமான அரட்டையும் மறைந்துவிட்டது. அதனால் படதையாவுக்கு வலக் கையையே இழந்துவிட்டது போல் இருந்தது.

கரியப்பன் மாளிகை வாரக்காரர்களுக்குத் தலைவனாக இருந்தான். அதனால் அவனுக்கு வாரத்தை மேல் பார்க்கும் பொறுப்பு இருந்துகொண்டிருந்தது. அதனால் அவன் மடத்துக் கூட்டங்களில் தினந்தோறும் பங்கெடுத்துக்கொள்ள முடியாது. படதையா ஊருக்குப் போனபின் அவன் திரும்பவும் அன்றுதான் மடத்தில் நுழைந்திருக்கிறான்.

அவனை வாசலில் கண்டவுடனே படதையாவின் முகம் ஆவலால் மலர்ந்தது. 'வாப்பா, கரியா! வா. எடம் விடுங்கடா அவனுக்கு. மேலே வா, கரியா! கெஞ்சன் காலிபண்ணிய இடம் உன்னைக் கைகாட்டி அழைக்கிறது, வா' என்று, என்றும் இல்லாத அன்போடு அவனை வரவேற்றார். கரியப்பன் இந்த வரவேற்பால் திகைத்து அசட்டுச் சிரிப்புடன் ஆச்சரியத்தை மறைக்க முயன்றான்.

'அவனுக்கு என்னாங்க? அவன் மகாராஜாவோட வாரக் காரன். கெஞ்சனுடைய இடம் கை நீட்டி அழைத்தாலும் அங்கே குந்த அவன் சம்மதிப்பான்களா?' என்று மலைய ருத்திரப்பன் சொன்னான். 'வாரத்தை எடுத்துட்டு நிலத்தெக் குடியானவங் களுக்கெல்லாம் பங்கிட்டப்புறம் மடந்தானே எங்களுக்கெல்லாம் ஆதரவு?' என்று பெருமூச்சுடன் அதற்குப் பதில் சொல்லிவிட்டுக் கரியப்பன் படதையாவின் கால்களைத் தொட்டு வணங்கி, அவர் சுட்டிக் காட்டிய இடத்தில் போய் உட்கார்ந்துகொண்டான்.

அதைக் கேட்டவுடன் எல்லோரும் ஆவலுடன் வாயைத் திறந்தார்கள். புதிய செய்தி, புதிய கள்ளைப்போல் ருசியாக இருந்தது. கடைசியில் ஒரு நாள் அரட்டையாவது 'சுவாரஸ்ய மாக இருக்கும்' என்பதில் சந்தேகம் இல்லை. 'அது என்னங்க? வாரத்தை எடுத்திட்டு எங்க சேரி ஜனங்க வாயிலே மண்ணைப் போட முடிவு செஞ்சிட்டாங்களா, கரியப்பா அவங்களே?' என்று ருத்திரன் பொறுமையை இழந்து கேட்டான். தான் விட்ட அம்பு தன் மேலேயே திரும்பி வரும் என்று அவன் நினைக்கவில்லை. ஜாகீர்தாரின் வாரத்து நிலங்களில் சில்லறை ஆட்களாக உழைப்பது சேரிக்காரர்களுக்கு என்று ஒதுக்கிய வேலை. அவர்கள் வெட்டிவேலை செய்பவர்கள். அவர்களுக்குக் கூலி பேசி வேலை வாங்கினால் வேலை சரியாக நடக்காது என்றுதான் குடியான வர்கள் யாரும் அவர்களை வேலைக்கு வைத்துக்கொள்வதில்லை.

ஜாகீர் நிலத்தில் மட்டும் அவர்களே எஜமானர்களாக இருந்தார்கள். நிலத்தின் விளைச்சலில் எவ்வளவு தானியம் வேண்டுமானாலும் எடுத்துக்கொள்ளச் சுதந்திரம் இருந்தது. மாளிகையின் வாரம் சேரிக்காரர்களுக்கெல்லாம் ஜீவனாதாரமாக இருந்தது. அதனால் கரியப்பன் சொன்ன செய்தி அவர்களைத் திடுக்கிட வைத்தது. அதனால் ருத்திரன் கவலையுடன் அது உண்மையோ பொய்யோ என்று அறியும் ஆவலுடன் மேலே சொன்ன கேள்வியைக் கேட்டான்.

''இது விஷயமாகவே இக்தினி நேரம் மாளிகைலே குடியானவர்களோடும் சாமண்ணாவோடும் தர்க்கம் செய்துட்டு இப்படி வந்தேன். 'என்ன ஆனாலும் வாரத்தை எடுத்தே தீரணும்'னு அவங்கள்ளாம் சொல்லிட்டாங்க'' என்று வெறுப்புடன் பதில் சொன்னான் கரியப்பன்.

'அப்படியானா, ஏழைகள் வவுத்திலே அடிக்கறதுக்குதான் மகாராஜா இந்த ஊருக்கு வந்தாங்களா?' என்று, ருத்திரன் சங்கடத்துடன் தன் எண்ணத்தை வெளியிட்டான்.

'நான் சொன்னா, ஜனங்க எங்கெ கேக்கறாங்க அப்பா! ஏழைகளைக் காப்பாத்துவார்னு மகாராஜகிட்டப் போனதக்குச் சரியானபடி கெடச்சுதில்லையா!' என்று சொல்லி, படையாட்சி, கரியப்பன் பக்கம் திரும்பி, 'இப்படி ஏன் கையால் ஆகாதவன் மாதிரி குந்திகிட்டே. பேசாம கொழாயைத் தயார் பண்ணப் படாது?' என்று உத்தரவு போட்டார்.

'ஒண்ணும் இல்லீங்க. குழாய் தயாரிக்க முடியாமெ சோர்ந்துபோய் உக்காரும் பேடின்னு நெனக்காதீங்க. மரம் வச்சவன் தண்ணி ஊத்தாத போயிடுவானா?' என்று சொல்லிக் கரியப்பன் குழாயை எடுத்தான்.

படையாட்சி, லிங்கப்பாவின் பக்கம் திரும்பினார். 'பாத்தீங்களா, கௌடரே! நம்ம ஜனங்க எல்லாம் உத்ஸாகமா இருக்காங்க. அவங்களை நல்ல வழிலே திருப்பிவிடறது ஒங்க பாரந்தான். கரியா, கவலைப்படாதே! கௌடர் தன் நிலத்து வாரத்தை ஒங்கிட்டயே ஒப்பிச்சிடுவாரு. அதை ஒழுங்காப் பாத்துட்டு இரு. மகாராஜா நிலத்தை நீ இல்லாமெ எப்படி வெதைக்கப் போறாங்க பாக்கலாம்' என்று மற்றொரு பகை விதையை நட்டார்.

'கௌடர் நெலம் கௌடர் கைக்கு வந்தப்பறம் வாரத்துக்குக் குடுப்பாரு. ஆனா பார்வதியம்மா லேசில் இவர் வசம் நெலத்தை ஒப்பிப்பாளா?' என்று கரியப்பன் சந்தேகத்தோடு கேட்டான்.

'ஏழை ஜனங்க பொழைக்கறதுக்காகத்தான் அந்த நெலத்தை வசப்படுத்தணும். ஏழைகளுக்குச் சாப்பாடு போடும் தர்மவான் லிங்கப்ப கௌடர், நெலத்தை வசப்படுத்த நெனச்சார்னு எத்தனை நேரம் ஆகும்? நீங்கள்ளாம் மனசுவச்சா நாளைக்கே அந்த நெலத்திலே பரம்படிக்கலாம். ஏண்டா ருத்திரா! சேரி ஜனங்க என்ன சொல்றுங்க?' என்று சூசகமாகக் கேட்டு விட்டுப் படதையா போர் முனையைத் தயாரித்தார்.

'மகாராஜா கொடுத்த தானியம் ஒரு மாசத்துக்கு இருக்குங்க. அதுவரைக்கும் சேரி ஜனங்க எந்தக் கவலையும் படமாட்டாங்க. அது தீந்துபோனு ஏழைகளுக்கு வள்ளல் நீங்க இருக்கீங்க அல்லவா? ஏதாவது வழி செய்து பின்னுலே சாப்பாடு கொடுப்பீங்கன்னு நம்பிகிட்டு இருக்காங்க' என்று, ருத்திரன் சேரிப் பொறுப்பு முழுவதையும் படதையாவின்மேல் தள்ளினுன்.

'மணியக்காரருடைய தானியக் குழியில் இன்னும் நூறு மூட்டை தானியம் இருக்கு. அதையெல்லாம் எடுத்து லிங்கப்ப கௌடர் ஏழைகளுக்குக் கடன் குடுக்கணும்னு நேத்தே அவரிடம் சொல்லியிருக்கேன். என்ன, கௌடரே? குழியிலே இருக்கற தானியத்தெ எடுத்து ஏழைகளுக்குக் குடுக்க உங்களுக்குச் சம்மதம் இருந்தாச் சொல்லுங்க. இவங்க எது செய்யணும் னுலும் தயாராக இருக்காங்க. இவங்களுக்குச் சோறு தண்ணி கொடுக்கறது உங்களுடைய கடமை' என்று, படதையா, லிங்கப்பா செயலில் ஈடுபடச் செய்யத் திட்டமிட்டார்.

லிங்கப்பா செய்வதறியாமல் விழித்தான். தான் ஊர் மணியக்காரன் என்பது இன்னும் அவனுக்கு உறுதிப்படவில்லை. ஆனுல் படதையாவின் பேச்சை எப்படி மறுப்பது? 'எனக்கு இந்த மணியக்காரப் பட்டம் என்ன வேண்டியிருக்கு? அது வேண்டாம் என்று சொல்லிவிட்டுப் போனவனை நீங்க கூட்டியாந் தீங்க. நீங்க சொல்றதை நான் எப்படி மறுப்பேன்?' என்று லிங்கப்பா, பற்றில்லாமல் பேசினுன்.

'கேட்டீங்களா? கௌடர் ஏழைகளைக் கைவிட மாட்டார். நீங்க அவரைக் கைவிடக் கூடாது. யாருக்கு நெலம் இருக்கோ அவங்க மகாராஜாவின் குடியானவர்களாக விளங்கட்டும். பார்வதியம்மாவின் வாலைப் பிடிச்சிகிட்டு மடியை நிரப்பிக் கட்டும். ஏழைகள் லிங்கப்ப கௌடருக்குத் துணையாக நின்னு, அவரால் என்ன முடியும், என்ன முடியாது என்பதை நடத்திக் காட்டட்டும்' என்று கம்பீரமாகப் படதையா ஜோசியம் சொன்னுர்.

கூட்டத்தில் இருந்தவர்கள் உடனே செயலில் இறங்க வேண்டும் என்று குதித்தார்கள். படதையாவின் சாதுரியப் பேச்சில் லாபத்தின் ஆசை எப்படி ஒளி வீசியதோ யாருக்குத் தெரியும்? அவர்கள் எல்லோரும் உத்ஸாகம் அடைந்தார்கள்.

'சாமியார் சொல்றது சரி. நாங்க சேரிக்காரங்க எல்லாம் ஐயா அவங்க சொன்ன பேச்சை நடத்தியே தீருவோம், தெரிஞ்சுக்கங்க' என்று ருத்திரன் உத்ஸாகத்துடன் சேரிக்குப் பிரதிநிதியாகத் தன் அபிப்பிராயத்தை வெளியிட்டான். எடுத்த காரியத்தை முடிக்கும் படதையாவின் செயல் திறமைக்கு அவன் கொடுத்த பாராட்டு அது.

அது வரையில் கஞ்சாக் குழாயைத் தயாரித்துக்கொண்டிருந்த கரியப்பனுடைய வேலை முடிந்துவிட்டது. பதப்படுத்திய கஞ்சா நிரம்பிய குழாயைப் படதையாவிடம் கொடுத்த வண்ணம் 'மாளிகை வாரக்காரங்களான நாங்களும் உங்கள் கட்சிதான் என்று தெரிந்துகொள்ளுங்கள்' என்று உத்ஸாகமாகக் கூச்சலிட்டான்.

—இரண்டாம் பாகம் முடிந்தது—

## பாகம் 3

## 37

தாதா, பாதள்ளியை விட்டு இந்துபுரத்துக்குப் போன சில நாட்களுக்குள்ளேயே ஒரு சம்பவம் நடந்து அவன் புகழை அதிகரித்தது. தாதா, அங்கிருந்த தாலீம்கானாவில் பழக வேண்டும் என்று மகாராஜா விரும்பினார். குஸ்தி இளைஞர்களுக்குப் பயிற்சி கொடுக்கப் பஞ்சாபைச் சேர்ந்த 'குலாப்' என்னும் பயில்வான் ஒருவனை மகாராஜா ஏற்பாடு செய்திருந்தார். அவன் ஒரு தலைக்கிறுக்குப் பிடித்தவன். 'குஸ்தி போடக் கூடியவர்கள் பஞ்சாபிகள்தான். மற்றவர்கள் எல்லாம் அவர்களுக்குச் சீடர்களாகத்தான் இருக்கவேண்டும்' என்பது அவன் சித்தாந்தம். தன்னுடன் இருந்த பஞ்சாபிப் பயில்வான்களுக்குக் கொடுக்கும் போஷாக்கு மிக்க உணவுகளை அவன் மற்றக் குஸ்தி மாணவர்களுக்குக் கொடுப்பதில்லை. மற்றவர்கள் எல்லோரும் பஞ்சாபிப் பயில்வான்களின் உடம்பைப் பிடித்துவிட்டு அவர்களுக்குச் சேவை செய்யத்தான் லாயக்கானவர்கள் என்று அவன் உறுதியாக நம்பினான்.

தாதா, குஸ்திப் பள்ளியில் சேர்ந்தவுடன் குலாபிக்கு உடம்பைத் தேய்த்துவிடும் வேலைதான் அவனுக்குக் கிடைத்தது. தாதா உக்கிரமூர்த்தியானான். கொடுத்த வேலையைச் செய்ய மறுத்தான். 'தன் போன்ற பயில்வான்களுக்கு இது அவமானம்' என்று தர்க்கம் செய்தான். குலாபிக்கும் ஆத்திரம் வந்து விட்டது. 'தாதா, குஸ்திக் களத்தில் தன்னைத் தோற்கடித்தால் மட்டும் அவன் தன் சக தொழிலாளி ஆவான்' என்று சவால் விட்டான். புகார் மகாராஜா வரையிலும் போயிற்று. தாதாவின் மராட்டா ரத்தம் கொதித்து எழுந்தது. அவன் குலாபுடன் குஸ்தி போட ஒப்புக்கொண்டான். குலாபின் பலத்தையும் திறமையையும் நன்றாக அறிந்த சில பயில்வான்கள், 'அவசரப்பட வேண்டாம்' என்று தாதாவுக்குப் புத்தி சொன்னார்கள். இந்துபுரத்து மல்லர்களுக்கென்று வேறு ஒரு தாலீம் கானாவையே கட்டித் தருகிறேன் என்று சொல்லி, மகாராஜா தாதாவின் மனத்தை மாற்றப் பார்த்தார். தாதா எதற்கும் அசையவில்லை. உள்ளே பகை புகைந்துகொண்டிருந்ததால் இருவரும் நெருப்பாகவே இருந்தனர். தாலீம்கானாவிலேயே குஸ்தி நடக்கவேண்டும் என்று முடிவாயிற்று.

குறிப்பிட்ட தினத்தன்று தாதா, எல்லோரும் வியக்கும்படி குலாபைத் தோற்கடித்து, பஞ்சாபிகளின் கர்வத்தை அடக்கினன். மகாராஜா சந்தோஷத்தால் தாதாவைக் கட்டி அணைத்துக்கொண்டார். குலாப், தன் கூட்டாளிகளுடன் சொல் லாமல் கொள்ளாமல் ஊரை விட்டே ஓடிவிட்டான். இந்து புரத்துத் தாலீம்கானு திடீரென்று பஞ்சாபிகளின் தொல்லை களிலிருந்து விடுதலை பெற்றது. தாலீம்கானுவின் 'உஸ்தாத்' என்ற பட்டம் தாதாவுக்கே கிடைத்தது.

பஞ்சாபிப் பயில்வானைத் தாதா தோற்கடித்த செய்தி பேச்சுமூலம் சுற்றுப்புறக் கிராமங்களிலெல்லாம் பரவியது. மகாராஜா குதிரை வீரன் ஒருவன்மூலம் பாதள்ளிக்கு நேராகச் செய்தி சொல்லி அனுப்பினர். அதனல் மகாராஜாவின் தர்பாரில் அவனுக்கு நல்ல மதிப்புப் பெருகிவிட்டது என்று அவனை இந்து புரத்துக்கு அனுப்பிய பாளாச்சார் திருப்தி அடைந்தார். சாமராவும் மகிழ்ச்சியடைந்தான். ஊரெங்கும் தாதாவின் புகழ்ப் பேச்சாகவே இருந்தது. அதனல் மகிழ்ச்சி அடைந்த தாதாவின் குஸ்தி நண்பர்கள் இந்துபுரத்துக்குப் போய் அங்கேயே ஆதரவு பெற்றூர்கள்.

முன்பு தாதாவைக் கண்டாலே பிடிக்காத படதையாவுக்குக் கூட இந்தச் செய்தியைக் கேட்டதும் சந்தோஷம் உண்டாயிற்று. மடத்தில் கூடிய குடிகாரக் கூட்டத்தில் முதலில் அவரே பேச்சைத் தொடங்கினர். 'தாதா, மகாராஜாவின் தாலீம்கானுவில் உஸ்தாத் ஆகிவிட்டானும்! பாதள்ளிப் பையன் நாலுபேருக்குச் சாப்பாடு போட்டு அவர்களைத் 'தர்ப்பீது' செய்யும் யோக்கியத் தையும் அடைஞ்சிட்டான். நாமும் இந்தச் சின்னசாமி இருக்கும் போதே நம்ம ஊரில் குஸ்தி நடத்தித் தாலீம்கானுவை முன்னுக்குக் கொண்டுவரணும். என்ன சொல்றீங்க?' என்று கேட்டுவிட்டுக் கேள்விக்குறியுடன் எல்லோரையும் பார்த்தார்.

'சாமியார் சொல்றதிலே ஒரெழுத்தைக்கூட எடுக்க முடியாது. அவ்வளவு கணக்கா இருக்கும்; சேத்திலே கல்லை நட்டாப்பலெ. ஆனல் சாமி, குஸ்தி ஆட வச்சால் ஜெயிச்ச மல்லனுக்கு மரியாதை செய்யறத்துக்குப் பணக்கார பாபு சாஹேப் இருந்தான். இப்ப அதெல்லாம் இல்லாமெ வெறும் குஸ்தீன்னு அசலூர் மல்லனுக வரமாட்டாங்களே. அதுக்காக நீங்க ஏதாவது ஏற்பாடு செஞ்சீங்கன்னு நடக்கும். வெறும் பேச்சாலெ குஸ்தி நடத்தும் சமத்து, குஸ்தி கோதாவிலெ நடக்காது' என்று படகுத்துறை பசவன், தானே மல்லர்களின் தலைவன் என்ற பெருமையில் பேசினன்.

கி—28

படதையாவுக்கு இந்தப் பேச்சு அவமானமாக இருந்தது. பசவப்பாவின் பேச்சில் உண்மை இருந்தது. உண்மையைச் சொல்லப்போனல் குஸ்தி நடத்தவேண்டும் என்ற ஆசை அவருக்கு இல்லை. தாதா இந்துபுரத்தில் வெற்றி அடைந்த செய்தியைக் கேட்டபோது சந்தோஷமாகத்தான் இருந்தது. ஆனல் அது பாதள்ளியின்மேல் இருந்த அபிமானத்தினல்தான். தாதாவின் விஷயத்தில் அன்பு பொங்கி வழியவில்லை. சும்மா அரட்டைக்கு ஒரு விஷயம் வேண்டும் என்று அந்தப் பேச்சை எடுத்தார். தானே குஸ்தியை நடத்திப் பெருமை பெறவேண்டும் என்ற ஆசையும் இருந்தது. ஆனல் படகுத்துறைப் பசவப்பா அப்படிப் பேசி அவருடைய ரோஷத்தையே தூண்டிவிட்டான்.

'நிறுத்துங்கடா! அழுமூஞ்சி பாபு சாஹேப் ஊரைவிட்டுப் போனு ஊர்ப் பொது வேலைகள் எல்லாம் உடனே நின்னு போயிடுமா என்ன, பசங்களா? மணியக்காரர் வேலை கெடைச்சு நம்ம லிங்கப்பா வரட்டும். நாளைக்கு வருவான்போல இருக்கு. குஸ்திச் செலவை எல்லாம் அவன் தலேலே கட்டிடுவம். நீங்கள்ளாம் சொன்னு லிங்கப்பா குதி போட்டுண்டு இந்த வேலையை ஏத்துப்பான்' என்று படதையா தாம் வெறுங்கையுடன் குஸ்தி நடத்தப் போவதில்லை என்பதை உறுதிப்படுத்தினர்.

மடத்தின் அரட்டையில் வாலும் தலையும் இல்லாமல் பேச்சு எங்கெங்கோ போயிற்று. இரவு வெகு நேரம் ஆயிற்று. கடைசியில் எல்லோருக்கும் தீர்த்தப் பிரசாதம் கொடுத்தாயிற்று. அது எல்லோரையும் மயக்கியது. படதையா, தியானத்தில் மூழ்கினர். பக்தர்களும் தியானத்தில் மூழ்கி இருக்கலாம். ஆனல் குடிகாரர்களுக்கும் வீடு இருக்கும் அல்லவா? அதை அடியோடு மறந்துவிடாததால் அவர்களெல்லாம் ஆடி வழிந்து கொண்டே தம்தம் வீட்டுக்குச் சென்றுர்கள்.

படதையா அப்படியே தூங்கிவிட்டார். இருட்டில் திடீரென்று விழிப்புக் கொடுத்தது. மூலையில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. படதையா கண்ணைத் திறந்து பார்த்தார். கூடி இருந்த பக்தர்கள் யாருமே இருக்கவில்லை. கெஞ்சன் படுத்திருந்த இடத்திலேயே கரியப்பன் குறட்டை விட்டுக் கொண்டு முடங்கிக் கிடந்தான். மடம் வெறிச்சோடிக் கிடந்தது. சந்நியாசிக்கு யார் துணை வருவார்கள்?

படதையாவுக்கு ஏனே பயமாக இருந்தது. தாம் படுக்கப் போகுமுன் பேசிக்கொண்டிருந்ததை எல்லாம் நினைத்துப் பார்த்தார். லிங்கப்பா இன்னும் ஊரிலிருந்து வரவில்லை. குஸ்தி நடத்தியே தீரணும். ஆனல் வெறும் குஸ்தியாக இருக்கக்

கூடாது. பாதள்ளியின் பெருமைக்கு ஏற்றதாக இருக்கவேண்டும். தாதாவையே அழைக்கவேண்டும். பையன் பாதள்ளியின் புகழைச் சுற்றிலும் பரப்பியிருக்கிறான்! படையாவுக்கே ஆச்சரியமாக இருந்தது. 'தாதாவை நான் ஏன் பாராட்டினேன்?' எல்லோரையும்விட அதிகமாக அவன்மேல் அவருக்குத்தான் பகை இருந்தது. அப்படி இருக்க இந்தத் தகாத அன்பு அவனிடம் எப்படி உண்டாயிற்று? படையா மறுபுறம் புரண்டு படுத்துத் தூங்க முயன்றார். நினைவுகள் அதிகப்பிரசங்கித்தனமாக அங்கும் வந்து தொல்லை கொடுத்தன. ஆம்; தாம் ஏன் தாதாவைப் பாராட்டினார்? ஹா! சிமணு! 'அவள் இப்பொழுது மடத்தில் இருந்தால்' என்ற நினைவு மின்னல்போல் தோன்றியது. மடத்தில் தன்னந்தனியாகப் படுத்துக்கொண்டிருக்க முடியவில்லை. அவள் அழகு, கண்ணில் கட்டியதுபோல் இருந்தது. 'தம் மானத்தைக் கெடுத்த மோகினிப் பிசாசு!' என்று ஒருமுறை பல்லைக் கடித்தார். கோபத்தை அடக்க முடியாமல் எழுந்திருந்து படுக்கையில் உட்கார்ந்து கொட்டாவி விட்டார்.

சிமணுவுடன் தாம் வைத்துக்கொண்டிருந்த தொடர்பு மறுபடியும் நீடிப்பதுபோல் இருந்தது. தன் குழந்தையின் தகப்பனார் 'படையா அவர்கள்' என்று அவள் ஜனன ரிஜிஸ்தரில் எழுதி, உலகத்துக்கே விளம்பரப்படுத்திவிட்டாள். தவிர, அவர்கள் இருவருடைய தொடர்பு ரகசியமாக இருக்கவில்லை. அப்படி இருக்க, மறுபடி ஏன் துணிந்து ஒரு வேலை செய்யக் கூடாது? பட்டவர்த்தனமாக அவளை மடத்திலேயே கொண்டு வந்து வைத்துக்கொண்டால்? சந்நியாசியின் குடித்தனத்தைக் கண்டு ஜனங்கள் சிரிப்பார்கள். இப்பொழுது மட்டும் சிரிக்கவில்லையா? எத்தனை நாளைக்குச் சிரிக்கப் போகிறார்கள்? அவர்களுக்கு இது ஒன்றுதான் வேலையா?

யோசிக்க யோசிக்க இந்தத் தீர்மானம் படையாவைப் பலமாகப் பிடித்துக்கொண்டது. எத்தனை நாளைக்குச் சிமணு யசவந்தராவின் வீட்டில் இருப்பாள்? கிழவன் அவளை யாருக்காவது கொடுத்துக் கல்யாணம் செய்துவிடக்கூடிய முரடன்! அதற்கு இடம் கொடுத்தால் அப்புறம் எனக்கு மதிப்பு ஏது? 'படையா அவர்கள் அவமதிப்புக்கு இலக்காகும் பேடி அன்று' என்பதை ஜனங்கள் தெரிந்துகொள்ளவேண்டும். எதிர்பாராமல் குழந்தையின்மேல் நமக்கு உரிமை வந்திருக்கிறது. குழந்தையை எடுத்துக்கொண்டு வந்துவிட்டால் சிமணு தானாகவே இங்கே வந்துவிடுவாள்.

படையாவுக்கு யோசித்து யோசித்துத் தலைவலி எடுத்துவிட்டது. இரவின் பயங்கர அமைதியில் அவர் குழந்தையைப்

போல் பலமற்றவர் ஆனார். தனிமை, பொறுக்க முடியாதபடி கொடிய வேதனையை உண்டுபண்ணியது. ஒரு கணம் தமது சந்நியாச நிலையை ஒரு சாபம் என்று கருதினார். உடம்பெல்லாம் பற்றி எரிந்தது. அதற்கு மருந்தாக மற்றொரு குவளை சாராயத்தை உறிஞ்சிவிட்டு, தூங்கிக்கொண்டிருந்த கரியப்பனை எழுப்பினார்.

'அடே, கரியா! சீக்கிரம் எழுந்திருடா! குதிரையைத் தயார் செய்!' என்று கத்தினார். கரியன் சோம்பல் முறித்து எழுந்திருந்து சாமியாரைப் பார்த்தான். முகத்தைச் சுருக்கிக்கொண்டு கண்ணை மூடியபடி உட்கார்ந்திருந்தான். படதையா மறுபடி சொல்லவேண்டி இருந்தது. கரியன் ஆச்சரியத்துடன் வெளியே போய் வானத்தைப் பார்த்தான். மேகம் கவிந்திருந்ததால் நக்ஷத்திரங்கள் தெரியவில்லை. எத்தனை நேரமாயிற்று என்பதைத் தெரிந்துகொள்ள வழியில்லை. அப்பொழுது கோழி ஒன்று கூவி, பொழுது விடியப்போகிறது என்பதை அறிவித்தது. கரியன், குதிரைக்குச் சேணமிட்டுத் தயார் செய்தான்.

படதையா தயாராக நின்ற குதிரையில் ஏறிப் புறப்பட்டார். போகும்போது கரியனிடம் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. 'எங்கே புறப்பட்டீர்கள்?' என்று கேட்கக் கரியன் விரும்பினான். ஆனால் கேள்வி போட்டுக் குறுக்கிடக்கூடாது என்று அந்த ஆசையை அடக்கிக்கொண்டான். பேசாமல் பார்த்துக் கொண்டே மடத்தின் வாசலில் நின்றான். படதையாவும் குதிரையும் இருளில் மறைந்துவிட்டார்கள்.

பாதள்ளிக்கு வேண்டிய அளவு பஞ்ச நிவாரணக் கடனும் டோலும் கொடுப்பதாகக் கிப்ஸன் துரையிடம் வாக்குப் பெற்றுக் கொண்டே லிங்கப்பா, பாதள்ளிக்குத் திரும்பினான். முறைப்படி அவனுடைய மணியக்கார நியமனம்பற்றிய விவகாரமும் முடிந்தது. ஆனால் படதையா ஊரில் இல்லை என்பதை லிங்கப்பா மடத்தில் நுழைந்தவுடனே கரியப்பா அவனிடம் சொன்னான். லிங்கப்ப கௌடனின் கட்டுமீறிய உத்ஸாகம் குறைந்து சப்பென்று ஆகிவிட்டது. படதையா எங்கே போயிருக்கிறார் என்பதும் தெரியவில்லை. எப்பொழுது வருவார் என்பதும் தெரியாது. லிங்கப்பாவினுடைய மனத்துள் நிறைந்திருந்த பெருமை அழுகி நாற்றம் எடுத்தது. இந்த மனநிலையில் ஒரு நாளைக் கழிப்பதே முடியாது என்று தோன்றியது.

ஆனால் 'கௌடர் வந்துவிட்டார்' என்ற செய்தி உடனே பாதள்ளி முழுவதும் பரவியது. புதிய மணியக்காரரைக் காண, மக்கள் மடத்துக்கு வரத் தொடங்கினார்கள். பெரிய குறும்பன்

மாயப்பன் வந்து வணங்கிப் 'போன வேலை காயா, பழமா!' என்று கேட்டவுடன், லிங்கப்பாவுக்கு ஆப்த நண்பன் ஒருவனைக் கண்டதுபோல் மகிழ்ச்சி பொங்கியது. முகம் மலர்ந்தது. மீசை நீண்டதுபோல் தோன்றவே அவற்றை மெதுவாகத் தடவிக் கொடுத்தான். 'பழமாக்காமல் திரும்புவதற்கு இந்த லிங்கப்ப கௌடன் கையில் வளை போட்டுக்கொண்டிருக்கவில்லை. மாயப்பா! இனிமேல் பார்வதியம்மா வாயைக் கோணி, மூக்கை உயர்த்திக்கொண்டு நிமிர்ந்து நடக்கமுடியாமல் வேலையை முடித்து வந்திருக்கிறேன்' என்று சொல்லி மனதாரச் சிரித்தான்.

'அப்படியானால் கௌடரே ஊருக்கெல்லாம் சர்க்கரை கொடுக்கணுமே?' என்று, மாயப்பா, மணியக்காரப் பட்டத்தை நிலைநிறுத்திக்கொள்ள வழி சொன்னான். லிங்கப்பா மறுக்க முடியாமல் ஒப்புக்கொண்டான். உண்மை என்னவென்றால் அவன் கையில் ஒரு காசுகூட இல்லாததுதான். படையா இருந்திருந்தால் பத்தோ இருபதோ ஏற்பாடு செய்திருப்பார். அதனால் மாயப்பாவின் யோசனையை ஏற்றுக்கொண்டபோதிலும் தன்னுடைய செயலற்ற நிலைமையை மறைமுகமாகவாவது தெரிவிக்கவேண்டி இருந்தது.

'மாயப்பா, என்ன அதிசயம் நடந்துட்டுதான்னு சர்க்கரை கொடுக்கணும்? முன்னாலே மாஜிஸ்திரேட் வாரிசு உரிமையைக் காயம் செய்தபோதும் சர்க்கரை குடுத்தோம். அதற்குத்தான் பார்வதியம்மா அப்பீல் செய்தாள். சர்க்கரை கொடுப்பதே எனக்கு ஆகவில்லை' என்று லிங்கப்பா இழுத்தாற்போல் சொன்னான்.

'சீ! அது கெடக்கட்டுங்க! என்ன பேச்சுப் பேசறீங்க? சர்க்கரை குடுத்ததுனாலேதான் அப்பீலிலே ஓங்க மணியக்காரப் பட்டம் கெட்டித் தரையிலே முளை அடிச்சதுபோலே தீர்மானமாக வந்திருக்கு. ஆகிவல்லேன்னு ஏன் சொல்றீங்க, கௌடரே? உங்களுக்கு வேண்டாதிருக்கலாம். எங்க ஊர் மணியக்காரருக்கு நாங்க மரியாதை செய்ய வேண்டாமா? பாளராமன் கடைக்குப் போய் நாலு மணங்கு சர்க்கரை வாங்கிண்டு வந்து நானே குடுக்கறேன். சரிதானே' என்று மாயப்பா பிடிவாதமாகச் சொன்னான்.

'என்னிக்கும் இல்லாத ஊக்கம் இன்னிக்கி வந்திருக்கு உனக்கு மாயப்பா! இப்ப எனக்கு என்ன பெருமை வந்திடுச்சு?' என்று அவன் முயற்சியைத் தடுக்கவே பார்த்தான் லிங்கப்பா.

'இன்னும் என்ன பெருமை வரணும்? கௌடரே! ஊரிலே இருக்கற நெலத்துலே நாலுலே ஒரு பங்கு நெலத்துக்குப்

பண்ணையார் ஆயிட்டீங்க. ஊரை ஆளர மணியக்கார தஸ்தா வேஜூ கைக்கு வந்திருச்சு. அடே கரியா! பாளராமன் கடைக்குப் போயி நாலு மணு சர்க்கரை வாங்கியாடா! ஊரைச் சுத்தி யிருக்கிற கோயில்களுக்கு ஒன்ணெண்ணு வீதம் பதினறு தேங்காய், பூசாரிகளுக்குக் கொடுக்க மூணு ரூபா சில்லறை எல்லாத்தையும் கௌடர் சொன்ஞர்னு சொல்லி எழுதிக்கச் சொல்லி வாங்கியா. தாரை, தப்பட்டை, கொட்டுமேளம் எல்லாத்துக்கும் சொல்லீட்டு வா. மணியக்காரர் ஊர்கோலம் போகணும். சீக்கிரமா மடத்துக்கு வாங்கன்னு சொல்லீட்டுக் கடைக்குப்போ' என்று மாயப்பா அதிகாரத்தை ஏற்றுக்கொண்டு உத்தரவு போட்டான். அவனுடைய உத்ஸாகத்தைத் தடை செய்யாமல் லிங்கப்பா சம்மதம் கொடுத்ததுபோல் உட்கார்ந்திருந்தான்.

லிங்கப்பாவின் ஊர்வலம் மடத்திலிருந்து ஹநுமார் கோவிலுக்குப் போய் அங்கிருந்து கிராமத்தைப் பிரதக்ஷிணம் செய்துகொண்டு கோபாலகிருஷ்ணன் கோயிலுக்கு வந்தபோது சாயங்காலம் ஆகிவிட்டது. அன்று ஆடிமாத ஏகாதசி ஆனதால் பாளாச்சார் புராணம் வாசித்துவிட்டு அங்கேயே உட்கார்ந்திருந்தார். கௌடர் தெருவிலிருந்து அகழி வழியாகக் கோவிலுக்கு வந்துகொண்டிருக்கும் லிங்கப்பாவின் ஊர்வலத்தைப் பார்த்தும் பார்க்காததுபோல் உட்கார்ந்திருந்தார் அவர்.

ஊர்வலம் கோயிலுக்கு வந்தது. லிங்கப்பா சுவாமிக்கு நமஸ்காரம் செய்தான். அவன் பக்கத்திலேயே நின்றிருந்த மாயப்பா, 'சாமிக்குத் தேங்கா ஒடைக்கணும். ஆச்சாரையா, ஏன் உக்காந்திருக்கீங்க? எழுந்திருங்க!' என்று சற்று முரட்டுத்தனமாகவே சொன்ஞன்.

ஆச்சார் நிமிர்ந்து பார்த்தார். நடப்பதெல்லாம் அவருக்குத் தெரிந்தது. ஆனல் சூழ்நிலையை எதிர்த்துப் போராடுவதில் பயனில்லை என்பது அவருக்குத் தோன்றியது. 'இன்னிக்கு ஏகாதசி. சுவாமிக்குத் தேங்காய் உடைத்து நைவேத்தியம் செய்யக்கூடாது; அது தள்ளுபடி' என்று தாமே பேசிக் கொள்வதுபோல் சொன்ஞர்.

'உங்களுக்கு வேண்டாட்டி விடுங்க. தேங்காய் ஒடைச்சுக் கர்ப்பூரம் ஏத்தின, சாமி என்ன வேண்டாம்னு சொல்லிடுவாரா?' என்று லிங்கப்பா கிண்டலாகச் சொன்ஞன்.

ஆச்சார் அவன் பேச்சைக் கேட்டுச் சிரித்துவிட்டுக் கேலியாகச் சொல்வதுபோல் சொன்ஞர்: 'அது சரி, லிங்கப்பா! மாயப்பா

தான் ஜாதீலே குறும்பன். நான் சொன்னது அவனுக்குப் புரியாது. அவனுக்குத் தெரியட்டும்னுதான் சொன்னேன். ஆனால் நீயும் இப்படியே பேசி அவனைவிடப் பெரிய குறும்ப னாயிட்டியே' என்று பேச்சை ஹாஸ்யமாக முடித்துவிட்டார்.

இதற்கு முன் பலமுறை ஆச்சார் இப்படிக் கேலி செய்திருக் கிறார். அப்பொழுதெல்லாம் லிங்கப்பா சிரிப்பது வழக்கம். ஆனால் இப்பொழுது நிலைமை மாறிவிட்டது. 'கிழவன், தன் பிறப்பையே அம்பலமாக்குகிறான்' என்று கோபம் வந்தது. அதை வெளியே காண்பிக்காமல், 'உங்களைப்போலப் பெரியவங்க முன்னாலே எல்லோருமே குறும்பர்தானே' என்று சிரித்து, 'ஆச்சாரையாவுக்குச் சர்க்கரை குடுங்கடா' என்று உத்தரவு போட்டான்.

'இங்க பார் லிங்கப்பா! இன்னிக்கி ஏகாதசி. தானம் வாங்கக் கூடாது' என்று சொல்லிய ஆச்சார், கை ஜாடை யாலேயே சர்க்கரை வேண்டாம் என்று மறுத்துவிட்டார்.

'ஆச்சாரய்யா! இனிமேல் பழசை எல்லாம் மறந்துடணும். ஊர் மணியக்காரனா வந்திருக்கேன். என் பேச்சுக்கு மதிப்புக் கொடுக்கணும்' என்று லிங்கப்பா அதிகாரத்துடனே சொன்னான்.

'இந்த ஊர்வலத்தையும் சர்க்கரை கொடுப்பதையும் பார்த்தே தெரிஞ்சுண்டேன் லிங்கப்பா! அதை வாய்விட்டுச் சொல்லவேண்டிய அவசியமில்லை. அதிகாரம் கிடைத்து விட்டாலும் கொஞ்சம் தணிஞ்சு பேசணும். நேர்வழியில் நீதிக்குச் சம்மதமாக யார் பேசினாலும் மதிப்புக் கொடுத்துத்தான் ஆகணும். ஆனால் வாய்க்கு வந்தபடி எல்லாம் பேசினால் மணியக் காரனாக இருந்தாலும் நான் மதிக்கமாட்டேன். இன்னிக்கி ஏகாதசின்னு சொல்லிட்டேன். நான் மேலே பேசத் தயாராக இல்லை' என்று ஆச்சார் அழுத்தமாகவே சொன்னார்.

'ஆச்சாரையா ஏகாதசி இருக்காராண்டோய்! பசித்த பார்ப்பானைச் சீண்டக்கூடாதுன்னு சொல்வாங்க. போங்கடா!' என்று தன் படைகளை எல்லாம் திருப்பிக்கொண்டு லிங்கப்பா சென்றான்.

மடத்தில் லிங்கப்ப கௌடருக்கு மரியாதை செலுத்தத் தக்கவர் யாரும் வரவில்லை. பிராதார கௌடர், கௌடரின் பூமிகளைச் சாகுபடி செய்துகொண்டிருந்த குடியானவர்கள், ஜாகீர்க் குடியானவர்கள் இவர்கள் யாருமே வரவில்லை. நிலம் இல்லாத குறும்பர், பறையர், சக்கிலியர், உப்பாரர் முதலிய வர்கள்தான் கூடியிருந்தார்கள். லிங்கப்பாவுக்கு இது மனசில்

படாமல் போகவில்லை. ஊர்வலத்துக்கு வராதவர்கள் எல்லோரும் பார்வதியம்மாளின் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்று தீர்மானித்தான். ஊர்வலத் தடபுடல் முடிந்து சர்க்கரை வழங்கியபின் லிங்கப்பாவின் பரிவாரம் மடத்தில் வந்து கூடியது. லிங்கப்பா, அவர்களிடம் கிப்ஸன் துரை சொன்ன ஆறுதல் செய்தியைத் தெரிவித்தான். அவர்கள் மகிழ்ச்சி அடைந்தார்கள். பாதள்ளிக்கு அதிர்ஷ்டம் வந்துவிட்டதென்று லிங்கப்பாவைப் பாராட்டினார்கள்.

படதையா இல்லாததால் கஞ்சா அடைக்கும் வேலை இல்லாமல் கரியப்பா படுத்துக்கொண்டுவிட்டான். தீர்த்த ஆசைக்காகவே அங்கே கூடிய பக்தர்கள் எல்லாம் ஈயை ஓட்டிக்கொண்டும் கொட்டக் கொட்ட விழித்துக்கொண்டும் உட்கார்ந்திருந்தார்கள். யார் முகத்திலும் சுண்டினாலும் ரத்தம் வராது; அப்படி வெளுத்துக் கிடந்தன. லிங்கப்பாவின் வாய் உபசாரத்தால் கள்ளுக்காகச் சாதகப் பட்சிபோல் காத்திருப்பவர்கள் திருப்தியடைவார்களா?

அப்பொழுது ருத்திரன் பொறுமையை இழந்து கேட்டுவிட்டான். 'சாமி! பகலெல்லாம் அலைந்து அலைந்து எல்லோருக்கும் காலெல்லாம் ரத்தம் கட்டிப்போச்சு. தயவுபண்ணிக் கொஞ்சம் தீர்த்தத்துக்கு உத்தரவு போட்டீங்கன்னா குஷியாக இருக்குமுங்க' என்று நினைவூட்டினான்.

''சாமியார் இல்லாத சமயத்துலே தீர்த்தத்தை நெனச்சுத்தான் என்ன பிரயோசனம் ருத்ரா! 'ஆடி மாசத்திலே புலையன் பால் கதிருக்காக அழுதானாம்'னு கேட்டிருக்கியா இல்லையா?'' என்று மாயப்பா, படதையா இல்லாதபோது தீர்த்தத்தை நினைப்பதுகூடப் பாவம் என்று ருத்திரனை அதட்டினான்.

'தெரியாம என்னங்க? ஆனால் ஒடம்புலெ ஊறிப்போன பழக்கம் எது எதையோ பேசவைக்குது. அப்படீன்னா எல்லாரையும் வீட்டுக்குப் போங்கன்னு உத்தரவு போட்டுடுங்க' என்று ருத்திரன் ஏக்கத்துடன் மனம் நொந்து சொன்னான். அவனுடைய வெடுக்கென்ற பேச்சைக் கேட்ட லிங்கப்பாவுக்குக் கஷ்டமாக இருந்தது. தன் கையில் பணம் இல்லாததை நினைத்து வெட்கப்பட்டான். ஆனால் இத் திருவிழா போன்ற இந்தச் சந்தர்ப்பத்தில் தீர்த்தம் இல்லாமலே படுத்துவிடுவதா? சற்று முயன்று பார்க்கலாம் என்று அவனுக்குத் தோன்றியது.

'டே, கரியா! தேங்காய் (மதுப்புட்டி) ஏதாவது இருந்தா சாமிக்குக் கொணர்ந்து குடு' என்று, ஒரு கல்லை எறிந்து பார்த்தான்; பலித்தது.

'ஒரெடத்திலே இருக்குதுங்க. ஆனால் பணம் கொடுத்தாத் தான் கெடைக்கும். பணம் குடுங்க கௌடரே! டக்கென்று போய்க் கொணந்தூடறேன்' என்று மாயப்பா சொன்னதைக் கேட்ட லிங்கப்பாவின் முகம் சுண்டியது. கௌடர் கையில் பணம் இல்லை என்பதை மாயப்பன் புரிந்துகொண்டான். 'சரி, கடனாகக் கிடைக்குமான்னு பாக்கறேன்'னு சொல்லிவிட்டு மாயப்பன் எழுந்திருந்தான். ருத்திரனும் அவன் பின்னாலேயே புறப்பட்டான். 'நீ எதுக்கடா! சும்மாக் கிட' என்று லிங்கப்பா அதட்டினான். ருத்திரன் அதைக் காதில் போட்டுக்கொள்ளவே இல்லை.

மாயப்பா தன் வீட்டிலிருந்து கள் எடுத்துவரப் போனான். நாகபஞ்சமி பக்கத்தில் வருவதால் குடியர்களுக்கு நாலு பாட்டில் கள் விற்றுக் காசு சம்பாதிக்கலாம் என்று அவன் கள் இறக்கி ஆறு பாட்டில் வைத்திருந்தான். ருத்திரனுடைய அசட்டுத்தனத்தால் தன் ரகசியம் அம்பலம் ஆகிவிடும் என்ற பயத்தால், 'ருத்திரா! உனக்குத் தனியா ஒரு புட்டி குடுத்துடறேன். ஆனா என் வீட்டிலிருந்து புட்டி கொண்டுவந்ததை மூச்சுவிடப்படாது' என்று எச்சரித்தான். 'நீங்க எந்திரிச்சப்பவே நான் தெரிஞ்சி கிட்டேனுங்க. அங்கே குந்திகிட்ட ஜனங்களுக்குத் தெரியாதெ வந்தூட்டேன் பாத்தீங்களா? ஒங்க பேச்சை மீறுவேனா' என்று ஜம்பம் அடித்தவண்ணம் ருத்திரன் அவனைத் தொடர்ந்தான்.

மாயப்பா ஊருக்கு வெளியே கொட்டியிருந்த உமிக் குவியலுக்குள் கைவிட்டுக் கள் நிரம்பிய இரண்டு புட்டிகளை எடுத்து ஒன்றை ருத்திரனிடம் கொடுத்து மற்றொன்றைத் தன் மேல் வேட்டியில் மறைத்துக்கொண்டு மடத்துக்கு வந்தான். ஆனால் ருத்திரன் அவன் பின்னால் வரவே இல்லை. 'கள் புட்டியை வீட்டில் வைத்துவிட்டு வரப் போயிருப்பான்' என்று பேசாமல் இருந்துவிட்டான். ருத்திரன் வந்த வழியே திரும்பிப்போய் உமிக் குவியலில் இருந்த மற்ற நாலு புட்டிகளையும் தான் போர்த்துக்கொண்டிருந்த கம்பளியில் மறைத்துக் கொண்டுவந்து மடத்துத் தலைவாயிலுக்குப் பக்கத்தில் இருந்த கல்லின்மேல் கம்பளியோடு வைத்துவிட்டு உள்ளே போனான். அங்கே தீர்த்த விநியோகத்தில் தன்னை மறந்திருந்த மாயப்பனிடமிருந்த தன் பங்குக் கள்ளை வாங்கிக் குடித்தான். பிறகு வீட்டுக்குக் கிளம்பினான்.

அங்கேயே குடியின் மயக்கம் ருத்திரனின் தலைக்கு ஏறியது. தான் திருடிவந்த புட்டிகளைக் கம்பளியில் மூடிவைத்த நினைவே இல்லாமல் வீட்டுக்குப் போய்விட்டான். அவனுடைய மனைவி

தொரகம்மா, 'கம்பளி எங்கே' என்று கேட்ட பிறகுதான் அது நினைவுக்கு வந்தது. திரும்பவும் மடத்துக்கு ஓடிவந்து பார்த்தான். அங்கே கம்பளியைக் காணவில்லை. அதை மாயப்பன் எடுத்துக் கொண்டு போனதாகக் கரியன் சொன்னான். அதைக் கேட்ட ருத்திரன் வேறு பேச்சில்லாமல் மாயப்பாவின் வீட்டுக்கு ஓடினான். மாயப்பா அனலைக் கக்கிக்கொண்டிருந்தான். ருத்திரனுடைய கம்பளியை அவன் முகத்தில் விட்டெறிந்தான். அவனுக்கு வெட்கமாகப் போய்விட்டது. தன் திருட்டு வெளிப்பட்டு வந்து விட்டது என்று தலைவணங்கி, 'ஐயா, இதை மறந்துடுங்க' என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டு பேசாமல் கம்பளியோடு வீட்டுக்கு நடந்தான்.

ஆடி மாசக் கார்முகில், வானமெங்கும் பரவிக் கிடந்தது. நடுநடுவில் சூழ்நிலையே நடுங்குவதுபோல் குளிர்காற்று வீசி அடித்தது. சொட்டுச் சொட்டாகவும் வேகமாகவும் மழை தன் இஷ்டம்போல் மாறிமாறிப் பெய்துகொண்டிருந்தது. தடவிப் பார்த்தால் கையில் படும்படி இருட்டுக் கனமாக இருந்தது. மழைத் துளிகளால் தன் துணிமணிகள் நனையக்கூடாது என்று ருத்திரன் கம்பளியைப் போர்த்துக்கொண்டே நடந்தான். சற்றுத் தொலைவில் செருப்புச் சத்தம் கேட்டது. அதன் கூடவே, 'யாரது?' என்ற அதட்டலும் கேட்டது. ருத்திரன், தன் சூழ்நிலையைவிட ஜில்லென்று ஆகிவிட்டான். கை கால்கள் நடுங்கின. ரோந்து சுற்றிக்கொண்டிருந்த அஞ்சல் மல்லப்பன், ருத்திரனைச் சந்தேகித்துக் குரல் கொடுத்தான்.

'நானுங்க, ருத்திரன்' என்று சொல்வதற்குள் அவனுக்கு நாக்கு உலர்ந்தது; உளறிக்கொட்டினான்.

'ருத்திரனா? நடுராத்ரீலே எங்கே பொறப்பட்டே, மகனே?' என்று மல்லன் வேட்டை கிடைத்த சந்தோஷத்துடன் கேட்டான்.

'மாயாப்பா அவுக வீட்டுக்குப் போய் வந்தேனுங்க' என்றான் ருத்திரன். குரல் நடுங்கியது. ஆனால் நள்ளிரவின் இருட்டில் ஒருவரை ஒருவருக்கு அடையாளம் தெரியவில்லை. நண்பர்களும் தவறாக நினைக்கும்படி இருள் சூழ்ந்திருந்தது. 'பொய் சொல்லாதே, தம்பி! மாயப்பனிடம் என்ன வேலை இருந்திச்சுன்னு இந்த நடுராத்திரீலே போனே? சாவடிக்கு நட! காலம்பற வரைக்கும் அங்கே இரு. ராத்திரி எங்கேயும் திருட்டுப் போகலேன்னு தெரிஞ்சா ஒன்னை விடறேன்' என்று மல்லன் அதட்டினான்.

'ஊரிலே கௌடரே இல்லாததுபோல அதிகாரம் பண்ணு தீங்க' என்று லிங்கப்பாவை நினைத்துக்கொண்டு ருத்திரன் தானும் தைரியமாகவே பதில் சொன்னான்.

'அப்படியா! நட சாவடிக்கு. சாமராவ் சந்தேகத்துக்கு எடமானவங்களை எல்லாம் சாவடிக்கு இட்டாந்து குந்தவைக்கச் சொல்லியிருக்காரு' என்று உரத்த குரலில் சொன்னான் மல்லன்.

இருவரும் தர்க்கம் செய்துகொண்டே மடத்துக்கு முன் வந்தார்கள். லிங்கப்ப கௌடருக்கு அப்பொழுதும் தூக்கம் வரவில்லை. இவர்களுடைய சச்சரவு அவன் காதில் விழுந்தது. வெளியே வந்து இருவரையும் கூப்பிட்டான். மல்லனைப் பார்த்த வுடன் ஏனோ அவனுக்குக் கோபம் பொங்கி வந்தது. 'இப்படி யெல்லாம் ராத்திரி நடமாடறவங்களை பிடிக்கறது எனக்குப் பிடிக்கலெ' என்று சொல்லி அவனைத் திட்டினான்.

மல்லப்பனுடைய கடமை உணர்வுக்கு இது அவமானமாக இருந்தது. அவன் லிங்கப்பனிடம் விஷயத்தை விளக்கிச் சொன்னான். ருத்திரனுடைய பழைய வரலாறுகளை எல்லாம் தெரிவித்தான். ஆனால் அவைகள் உபயோகப்படவில்லை. ருத்திரனுக்கு வீட்டுக்குப் போக அநுமதி கிடைத்துவிட்டது. ருத்திரனுக்குக் குடிமயக்கத்தோடு தூக்க மயக்கமும் சேர்ந்து கொண்டது. லிங்கப்பனிடம் சொல்லிக்கொண்டு போகும் சக்தி கூட அவனுக்கு இல்லை. கால்கள் தள்ளாட வீட்டுக்குப் போனான்.

அஞ்சல் மல்லப்பனுக்கு இது முகத்தில் அடித்ததுபோல் இருந்தது. சங்கரப்ப கௌடர் காலத்திலிருந்தே அவன் ரோந்து சுற்றுவது வழக்கம். அமாவாசைக்கு முன் இரவுகளில் சில்லறைத் திருட்டுகள் நடக்கும் என்பதால் அவன் எச்சரிக்கையாக இருப்பான். பாதள்ளியில் உள்ள ஒவ்வொரு தனிமனிதனுடைய குற்றங்களின் வரலாறும் அவனுக்குத் தெரிந்திருந்தது. காலம் மாறிவிட்டது. பதில் ஒன்றும் சொல்லாமல் சாவடிக்குப் போய்ப் படுத்துக்கொண்டான்.

ஆனால் மல்லனுக்குத் தூக்கம் வரவில்லை. சாவடித் திண்ணை யில் புரண்டு புரண்டு ஓய்ந்துவிட்டான். 'உள்ளூர்க்காரனாகவும், பரம்பரை உத்தியோகஸ்தனாகவும் இருக்கும் தன்னைவிடப் புலைச்சேரி ருத்திரன் கௌடருக்கு வேண்டியவன் ஆகிவிட்டான் அல்லவா?' என்று வருந்தினான். அப்பொழுது கூகை வந்து 'கூக்' என்று அலறியது. மல்லன் நடுங்கினான். சாவடிக்கு முன் இருந்த மரத்திலிருந்து அந்தக் குரல் கேட்டது.

'அட சனியனே! அனிஷ்டம் பிடித்த இது, இன்னும் என்ன கஷ்ட காலம் வரும்னு சொல்லுதோ?' என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டான். முன்பு காலராவால் சங்கரப்ப கௌடர் சாவதற்கு முதல் நாள் இரவு இதே கூகை அலறிச் சோசியம் சொல்லியது. 'இந்தக் கூகைக்குச் சாவே இல்லை' என்று பாதள்ளி ஜனங்கள் சொல்லிக்கொள்வார்கள். 'பாதள்ளியின் ஞானதிருஷ்டி உள்ள ஓர் உயிர் அந்தக் கூகையின் உடலில் புகுந்து கொண்டு 'கேடுகாலம் வருவதை முன்கூட்டியே தெரிவிக்கிறது' என்று அவ்வூரார் நம்பினர்கள். 'மறுநாள் பாளாச்சாரிடம் இந்தச் செய்தியைச் சொல்லி அதன் பலனைப்பற்றிக் கேட்க வேண்டும்' என்று யோசித்துக்கொண்டே அவன் தூங்கி விட்டான்.

# 38

படதையா திரும்பி வரும்போது சிமனுவையும் தம்முடன் அழைத்துக்கொண்டு வந்துவிட்டதைக் கண்டு, லிங்கப்பாவுக்கு இடி விழுந்ததுபோல் ஆயிற்று. அவர்களுக்கு உள்ள தொடர்பைப்பற்றி அவனுக்கும் தெரியும். ஒரு சமயம் படதையாவே அதைப்பற்றி அவனிடம் ஒப்புக்கொண்டிருந்தார். ஆனால் சிமனு அவருக்குத் தேவையற்ற ஒரு சுமையாக அல்லவா இருந்தாள்! அதோடு, 'பாபு சாஹேப்தான் அவளுடைய காதலன்' என்று அவர் சாதித்தார் அல்லவா? முதலிலிருந்தே காமுகனாக இருந்த சுவாமிகள் எந்தப் பெண்ணின் பொறுப்பையும் ஏற்றுக்கொள்ள இசையவில்லை. ஜனங்களுக்கு முன் தம்முடைய புகழ் குன்றிப் போய்விடும் என்று அவரே பல தடவை சொல்லியிருந்தார். அப்படிப்பட்டவர் திடீரென்று சிமனுவை அழைத்துவரக் காரணம் என்ன? எதிர்பாராமல் அவள் இவரைவிட்டு விலகிப் போயிருந்தாள். அவளைத் திரும்ப அழைத்துக்கொள்ளும்படி யாரும் வற்புறுத்தவில்லை. அப்படியிருந்தும் படதையா தாமாக மேல்விழுந்து, சிமனுவை ஏன் அழைத்து வந்தார்?

லிங்கப்ப கௌடருக்கு இதன் ரகசியத்தைத் தெரிந்து கொள்ள ஆவல் மிகுந்தது. அந்தரங்க அறையில் படதையா தூங்கி எழுந்ததைக் கண்ட அவன், உள்ளே போய், 'இதென்ன? ஞானிகளின் மடத்தில் தொட்டில் ஆடுகிறதே!' என்று சொல்லிச் சிரித்தான்.

படைையா இதை முன்பே எதிர்பார்த்திருந்தார். மடத்தில் சிமணு இருப்பது ஜனங்களுடைய ஆவலைத் தூண்டிவிட்டுத்தான் தீரும் என்பது அவருக்குத் தெரியும். அதற்காக அவர் செய்து கொண்ட முன்னேற்பாடுகள் கொஞ்சநஞ்சம் அல்ல. ஜனங் களுக்காகவே அவருடைய கற்பனை உள்ளம் ஒரு கதையைச் சிருஷ்டித்தது. அது ஒரு சோகமயமான கதை; 'சிமணு உயிரை வெறுத்துக் கிணற்றில் விழப்போனுள். தற்செயலாகத் தாமே அங்கே போகும்படியான விதி இருந்தது. சிமணு யமன் வாயிலிருந்து தப்பினுள். அவள் தம் காலில் விழுந்து ஆதரவு கேட்டாள். தாம் மடத்தில் அந்த அநாதைக்குத் தங்க இடம் கொடுத்தது' போன்ற செய்திகளுக்குக் காது மூக்கு வைத்து அவர் சொல்லும்போது ஜனங்கள் அதை நம்பத்தான்வேண்டி யிருந்தது.

ஆனுல் நடந்த சம்பவங்களை ஆதியோடந்தமாக அறிந்த லிங்கப்பா, இந்தக் கதையை நம்பமாட்டான். அதனுல் இந்தக் கதையைச் சொல்லி அவனை வசப்படுத்துவது முடியாது என்பது தெரிந்து, 'கௌடரே! முதலிலிருந்து எல்லாச் சங்கதியும் உங்களுக்குத் தெரியும். ஆனுல் ஊர் ஜனங்கள் நான் சொன்னதை ஏத்துகிட்டாங்களா இல்லையா, சொல்லுங்கள்?' என்று சொல்லி, இந்தக் கதையையும் அவனிடம் சொன்னுர். லிங்கப்பா சுவாமிகளின் கற்பனைத் திறமையைக் கண்டு அசந்து போனுன். 'சாமியாரே! நீங்க பொய்க்கு வர்ணம் அடிச் சீங்கண்ணு உண்மைச் செய்தியைவிட உண்மையாகத் தோணறது. நீங்க சாமியாரா வராமெ வக்கீலா இருந்தீங்கன்னு பொருத்தமா இருந்திருக்கும்' என்று சொல்லித் தன்னுடைய வேடிக்கைப் பேச்சுக்குத் தானே சிரித்துக்கொண்டான்.

படைையா இந்தப் புகழ்ச்சியைக் கேட்டுப் பூரித்துப்போனுர். சிமணுவை அழைத்துக்கொண்டு வந்தது அவருடைய பெரும் வெற்றிதான். அதற்காக அவர் பாடுபட்டதும் உண்மைதான். ''மணியக்கார யசவந்தராவ் லேசுப்பட்ட மனுஷன் அல்ல. அவனைப்பத்தி உங்களுக்குத் தெரியாதா, கௌடரே? அப்படிப் பட்டவன் என் பேச்சில் ஏமாந்துவிட்டான். 'சிமணு வந்தாக் கூட்டிகிட்டுப் போ' என்று சொன்னுன். நான் அதற்கும் வம்பு செய்தேன். 'சிமணு வராட்டி நான் கட்டாயப்படுத்தலே'; ஆனு, 'குழந்தையின் தகப்பன் நான்'னு சொல்லி அரசாங்க ரிஜிஸ்தரில் என்பேர் பதிவாகி இருக்கு. குழந்தை என்னுடைய தானபின் அது மடத்துக்குச் சொந்தம். மடம் என் வசத்துலே இருக்கறதுனுலே குழந்தையும் என்னிடம்தான் இருக்கணும்னு பஞ்சாயத்தார் கட்டாயப்படுத்துவார்கள். இப்போ நான்

கொழந்தையை விட்டூட்டுப் போனல் மடத்தில் நுழைய முடியாது. இல்லாட்டி 'ரிஜிஸ்தரில் இருந்து குழந்தையின் தந்தை நான் என்பதை எடுத்துடணும்' என்று படபடவென்று சொல்லிவிட்டேன். அவன் சிமணுவைக் கேட்டூட்டு வறேன்னு சொன்னன். சிமணு, 'குழந்தை மடத்துலே தனியா எப்படி இருக்கும்? நானும் வரேன்'னு சொன்ஞ. வான்னு சொல்லிக் கூட்டியாந்தேன்'' என்று சொன்ன படதையா, பெருமையுடன் சிரித்தார்.

படதையா சொன்னதில் பொய் இல்லே. யசவந்தராவுக்குச் சிமணுவைப் படதையாவுடன் அனுப்ப இஷ்டம் இல்லே. ஒரு நாள் தாதா வந்து தங்கையை அழைத்துக்கொண்டு போகலாம் என்ற ஆசை அவருக்கு இருந்தது. ஆனல் தாதா அந்தப் பக்கமே வரவில்லே. இப்பொழுது படதையா யமன்போல் வந்து நின்றுபோன ஜன்மத்துக் கடனேக் கேட்பவன்போல் தன் உரிமையைக் கேட்கிறன். யசவந்தராவுக்கு அந்தச் சமயம் வருத்தமாகத்தான் இருந்தது. ஆனல் எவ்வளவுதான் நல்ல முறையில் கவனித்துக்கொண்டாலும் தன் வீடு சிமணுவின் வீடு ஆகாது. படதையா என்னதான் கெட்டவனுக இருந்தாலும் விதி அவர்களே ஒன்றுசேர்த்துவிட்டது. 'ஒரு ஜீவன்மேல் மற்றொரு நல்ல ஜீவன்தான் அதிகாரம் செலுத்தவேண்டும்' என்று எழுதியா வைத்திருக்கிறது? அப்படி இருந்தால் உலகத்தில் கெட்டவர்களுக்குக் கலியாணமே நடக்காது. கெட்டவர்களாஞலும் தன் குடும்பத்தைப் பொறுத்தமட்டில் நல்லவர்களாகத்தான் இருப்பார்கள். ரத்தபாசம் பாப புண்ணியங்களேயும் வென்றுவிடும். இதையெல்லாம் யோசித்தபின் யசவந்தராவ் பொறுப்பைச் சிமணுவுக்கே விட்டுவிட்டார்.

சிமணு, 'தன் வாழ்வு ஒரே நாளில் தெய்வத்தின் கொடிய விளேயாட்டுக்குப் பலியாகிவிட்டது' என்பதைத் தெரிந்து கொண்டாள். துன்பங்களேயே தலேப்பில் கட்டிக்கொண்டு பிறந்தவள் அவள். வாழ்நாள் முழுவதும் அதையே அநுபவிக்க வேண்டியிருந்தது. தாயை இழந்தபின் வேரை இழந்த நாற்ருக இருந்தாள். தந்தையின் அன்புத் தண்ணீரால் ஒருவாறு தேறினள். புண்ணியவசத்தால் வேருெரு செடியோடு ஒட்டிக் கொண்டிருந்தாள். செழிப்பாக வாழ்ந்திருக்கலாம். ஆனல் அவளுடைய அழகே அவளுக்குப் பகையாக இருந்தது. பாதள்ளிக் காமுகர்களுடைய கண்பட்டு விஷமாகி அந்த அழகை எச்சிலாக்கியது. படதையா பிரத்தியட்சமாக அவளேக் கெடுத்து விட்டான். அன்றைக்கே இறந்துபோய்விட்ட சிமணு, தன்

குழந்தைக்கு ஆதரவாக உயிரை வைத்துக்கொண்டிருந்தாள். அதிருஷ்டம் ஒரு தடவை தலையில் தூக்கி வைத்துக்கொண்டது; ஒரு தடவை கீழே தள்ளியது. சிமணு அதையும் உணரவில்லை.

ஆனால் தாதாவிடம் வைத்த அன்பு மட்டும் 'மினுக் மினுக்' கென்று ஒளிவிட்டுக்கொண்டிருந்தது. தாதாவின் உள்ளம் இன்னும் அவள் விஷயத்தில் இரங்கவில்லை. அவனுடைய ஆதரவு அவளுக்குக் கிடைக்கவேண்டும் என்று தெய்வம் விரும்ப வில்லையோ என்னவோ? யசவந்தராவின் வீட்டில் இருந்து கொண்டு அவனை எதிர்பார்த்தவண்ணமே இருந்தாள் சிமணு. படதையா மறுபடியும் தன்னை விரும்பி வந்திருந்தான். அவனிடம் தனக்கு ஒன்றும் அன்பில்லை. விதியின் அட்டஹாஸம் அவனைத் தான் மணம் செய்துகொள்ள விதித்திருந்ததுபோலும். சர்க்கார் ரிஜிஸ்தரில் குழந்தையின் தகப்பன் என்று அவன் பெயரைப் பதிவு செய்தபின் உலகத்தின் கண்ணில் அவனே கணவன். தவிர, அன்பு என்பது என்ன? அன்பு கொண்ட ஜீவன்கள் ஒன்றுபடுவது என்றால் என்ன? அந்த அநுபவம் சிறிதுகூட நெருங்காத அளவுக்குச் சிமணுவின் உள்ளம் எரிந்து போய்விட்டது. ஜாஜ்வல்யமான கோடி இன்பங்களைக் கண்டு மகிழ்ந்தாலும் நாம் தேர்ந்து எடுத்துக்கொள்வது ஒன்று தானே? இப்பொழுது சிமணு படதையாவையே கணவனாகத் தேர்ந்துகொள்ளும்படி ஆயிற்று. வேறு வழி இல்லை. தனக்குச் சொந்தம் இல்லாதது என்று தோன்றியதால் யசவந்தராவின் இரக்கம்கூட அவளுக்கு விஷமாகத் தோன்றியது. தன் தலையில் சுகம் என்பதே எழுதவில்லை. இங்கிருந்து போனாலும் ஆறுதல் இந்த அளவுக்குத்தான் என்பது அவள் அபிப்பிராயம்.

சிமணுவின் உள்ளக் கண்ணாடி அன்றைக்கே நொறுங்கி விட்டது. யசவந்தராவ், அசட்டு ஆசையினால் அந்தத் துண்டுகளை ஒன்று சேர்க்க வீணாக முயன்றார். சிமணுவுக்கு அதில் நம்பிக்கை இல்லை. எப்படி வேண்டுமானாலும் நடக்கட்டும். படதையா பழைய தொடர்பை நினைத்துக்கொண்டுதான் வந்திருக்கிறான். கலியாணம் ஆகாவிட்டாலும் தொடர்பு ஏற்பட்டது உண்மை தானே! இப்படி எல்லாம் யோசித்த சிமணு, இரண்டு கண்களையும் திறந்துகொண்டே இந்தப் பயங்கர நிலைமையை எதிர் கொண்டாள். வாழ்க்கை வெள்ளம் இழுத்த இழுப்பில் போவது தான் இப்போது அவளுடைய லட்சியமாக இருந்தது. தன் வாழ்க்கையில் பாவ புண்ணியங்களின் பொறுப்பை எல்லாம் படதையாவின்மேலேயே சுமத்திவிடவேண்டும் என்ற துணிகர மான முடிவுடன் அவள் புறப்பட்டாள். சிமணு, குழந்தையை இடுப்பில் எடுத்துக்கொண்டு முன்பின் பார்க்காமல் பற்றில்லாமல்

புறப்பட்டதைக் கண்ட யசவந்தராவுக்கு வயிற்றை என்னவோ செய்தது. கண்கள் குளமாயின. சிமஞுவின் பற்றின்மை படதையாவைப் போன்ற சந்நியாசியின் ஆசையைக் கேலி செய்வதுபோல் இருந்தது.

இந்த நிகழ்ச்சியைக் கேட்ட லிங்கப்பா பிரமைபிடித்து உட்கார்ந்திருந்தான்.

படதையா ஞானியானதாலோ என்னவோ, அவனிடம் மனிதத்தன்மைகூட மிஞ்சவில்லை. சிமஞுவை அழைத்துவந்து மடத்தில் வைத்துக்கொண்டிருக்கும் இந்தச் சந்நியாசி, 'நாளைக்கு ஜனங்கள் எதிர்த்தால் எப்படிச் சமாளிப்பார்?' என்பது அவனுடைய சந்தேகம். ஆனல் ஜனங்களின் மனப்போக்கையே அஸ்திவாரமாக வைத்துத் தம் சுயநல மடத்தை எழுப்பியிருந் தார் படதையா. எந்தப் பாவத்தையும் புண்ணியமாக மின்னச் செய்யும் பேச்சுவன்மை அவருக்கு இருந்தது. ''நான் செய்வ தெல்லாம், 'நியாயத்தையும் தர்மத்தையும் காப்பதற்குத் தான்' என்று ஜனங்களுக்குக் காமிச்சுக் குடுத்தாப் போதும் கௌடரே! ஆட்டுமந்தை மாதிரி பின்னலேயே சுத்திகிட்டு இருப்பாங்க'' என்று லிங்கப்பனுடைய வாயை மூடிவிட்டார் படதையா.

இவர்கள் இருவரும் பேசிக்கொண்டிருந்தபோதே மார்வாடி பாளாராமன் அங்கே வந்தான். அவன் ஓர் அதிசயமான வியாபாரி. பாதள்ளியில் அவன் வியாபாரத்தின் துணிச்சலைப் பற்றிக் கதை கதையாகப் பேசிக்கொள்வார்கள். தண்ணீர் குடிக்கும் லோட்டா ஒன்றுடன் தன் நாட்டிலிருந்து சோற்றுக்கு இல்லாமல் வந்த இந்த மார்வாடி, பார்த்துக்கொண்டிருக்கும் போதே கடன் கொடுக்கும் சீமானுக உயர்ந்துவிட்டான். வாழ்க்கையின் எந்தச் சங்கதியையும் வியாபாரத்துக்காக வளைத்துக்கொள்ளும் வித்தை அவன் ரத்தத்திலேயே ஊறி யிருந்தது. இப்பொழுது லிங்கப்பா மணியக்காரனுக வந்த செய்தி அவனுக்குத் தெரியும். அதோடு கிராமத்துக்குப் பஞ்சப்படி கொடுப்பதாக வாக்குத்தத்தம் பெற்றிருந்ததும் அவனுக்குத் தெரியும். லிங்கப்பாவிடம் சொல்லி நாமே அதைக் குத்தகைக்கு எடுத்துக்கொள்ளலாம் என்பது அவனுடைய திட்டம். நூற்றுக்கணக்கான சோள மூட்டைகள் அவனிடம் இருந்தன. சர்க்காரிடம் குத்தகை எடுத்துச் சோளத்தைத் தானே பங்கிட்டு லாபம் அடையலாம் என்று யோசித்துப் படதையாவின் காலில் விழுவதற்கு வந்திருந்தான். படதையா அவனுக்கு ஏதோ உறுதிமொழி சொல்லி அனுப்பிவைத்தார்.

அப்பொழுது பொழுது விடிந்து இரண்டுமணி நேரம் ஆகிவிட்டது. அஞ்சல் மல்லப்பன் உள்ளே வந்து சாமராவ் அழைப்பதாக லிங்கப்பாவிடம் சொன்னுன். சாமராவ், சேஷப்பாவிடமிருந்து மணியக்கார தஸ்தாவேஜுகளைச் சார்ஜ் எடுத்துக்கொண்டிருந்தான். அதை லிங்கப்பாவிடம் கொடுத்து அவன் அந்தப் பொறுப்பிலிருந்து விடுபடவேண்டும். மல்லப்பா, இந்தச் செய்தியைச் சொன்னவுடன் படையா, தாமே சார்ஜை வாங்கிக் கொள்பவர்போல், 'மணியக்காரர் சாப்பிட்டுவிட்டுச் சாவடிக்கு வருவாராம்' என்று சொல்லப்பா, என்று சொல்லி அவனை அனுப்பிவிட்டார். பிறகு லிங்கப்பாவைப் பார்த்து, 'பார்த்தீர்களா, கௌடரே! நல்ல காலம் வந்தா நெனச்சதெல்லாம் கிடைக்கும். மணியக்காரர் தஸ்தாவேஜு கிடைக்காது என்று வெறுத்துப்போய்க் குந்தி இருந்தீங்க. இப்போ மணியம் வேலை மட்டும் இல்லை; பஞ்ச நிவாரணக் கடன்—பஞ்சப்படி எல்லாம் சொல்லாமல்கொள்ளாமல் எப்படி வந்தன. இனிமே உங்கமேலேயே பொன்மழை பெய்யப் போவுது. அப்பறம் இந்த ஏழைச் சாமியை மறந்திடாதீங்க' என்று கேலியான தாழ்மையுடன் சொன்னுர்

லிங்கப்பாவுக்கு இதைக் கேட்க வருத்தமாக இருந்தது. முகம் அசடு வழிந்தது. 'நான் உங்களுடைய எந்தப் பேச்சைக் கேட்கலே, சொல்லுங்க' என்று ஏக்கத்துடன் கேட்டான்.

படையாவுக்கு இது பக்குவமான சமயம் என்று தோன்றியது. 'வேறெ ஒன்னும் இல்லே கௌடரே! ஒரு விஷயத்திலே என் பேச்சுப்படி நடக்கணும். என்னை மடத்தை விட்டு விரட்டின ஜனங்களுக்கெல்லாம் இப்ப பார்வதியம்மா ஆதரவா இருக்கா. அவளை மணியக்காரர் வீட்டிலிருந்து விரட்டி அந்த வீட்டை வசப்படுத்திக்கணும். உங்க தர்பார் அங்கே நடக்கறதை இந்தக் கண்ணுலே பாக்கணும்' என்று தம் கருத்தைச் சொன்னுர்.

லிங்கப்பாவுக்கும் இந்த ஆசை இருந்தது. வீட்டை வசப் படுத்திக்கொள்ளப் போனுல் வாரிசு உரிமை போய்விடுமோ என்று பயந்துகொண்டிருந்தான். 'கோர்ட்டுக்குப் போகாமல் நிலத்தையும் வீட்டையும் வசப்படுத்திக்கொள்ள முடியாது' என்று முன்பே வக்கீல் சொல்லியிருந்தார். ஊர் மக்கள் துணை நின்றுல் பலவந்தமாக வீட்டை வசப்படுத்திக்கொண்டு அவர்களே கோர்ட்டுக்குப் போகும்படி செய்வதுதான் சரி என்பது அவனுடைய யோசனை.

படதையா இதன் பொறுப்பையெல்லாம் ஏற்றுக்கொண்டார். மக்களை நிமிஷத்தில் சம்மதிக்கவைக்கும் வசிய சக்தி அவரிடம் இருந்தது. ஊர் மணியக்காரருடைய கௌரவத்தைக் காப்பது எல்லோருக்கும் கடமைதான். மணியக்காரர் சந்நியாசி போல் மடத்தில் கிடப்பது அவமானம் அல்லவா? பாதள்ளியில் கௌடரின் பெருமையும் புகழும் அசைக்க முடியாமல் நிலைக்கும் படி செய்யத் தாம் எப்பொழுதும் தயார் என்று படதையா நம்பிக்கை கொடுத்தார். அவருடைய இந்த உத்தரவாதத்தின் பின் எந்தவிதமான சூழ்ச்சி அணுகுண்டு வெடிக்கப்போகிறதோ? கடவுளுக்குத்தான் வெளிச்சம்!

மறுபடியும் அஞ்சல் மல்லப்பன் ஓடிவந்து 'சப்-இன்ஸ்பெக்டர் சாவடிக்கு வந்திருக்கிறார். வரச் சொல்கிறார்' என்று செய்தி சொன்னான். படதையாவின் மனத்தில் பழைய நினைவுகள் சுழன்றன. 'சப்-இன்ஸ்பெக்டர் ஃபக்ருதீன் சாயபு வந்திருந்தால் நிச்சயமாக ஏதாவது விசேஷம் நடந்திருக்கும்' என்று படதையா ஊகித்தார். 'வரோம்னு சொல்லுடா' என்று உரக்கக் கத்திச் சொல்லிவிட்டுப் புறப்படத் தயாரானார். புதியதாக விபூதிப் பட்டை போட்டுக்கொண்டு பாதக்குறடுகளை அணிந்து லிங்கப்பாவுடன் சாவடிக்கு நடந்தார்.

சப்-இன்ஸ்பெக்டர் ஃபக்ருதீன் சாயபு, படதையாவை உத்ஸாகமாக வரவேற்று லிங்கப்பாவைப் பார்த்துவிட்டு, 'இவர் யார்?' என்று கேட்டார். அப்பொழுது படதையா லிங்கப்பாவின் வரலாற்றை ஒன்று விடாமல் சொன்னார். சப்-இன்ஸ்பெக்டர் பழைய விவகாரம் ஒன்றை முன்வைத்து இந்த ஊருக்கு வந்திருந்தார். 'அந்த அயோக்கியன் தாதா இப்போ இந்துபுரத்து மகாராஜாவின் தாலீம்கானவில் உஸ்தாதாக இருக்கிறானமே! இங்கே அவன் இருந்தால் ஜெயிலுக்கு அனுப்பிவிடலாம் என்று ஏற்பாடு செய்துகொண்டு வந்தேன். என்ன செய்யறது? மகாராஜாவின் பின்னால் புகுந்துகொண்டு பொழைச்சிட்டான். இல்லாட்டிப் புத்லாபாயின் துர்மரணத்தின் குற்றத்தை அவன்மேல் சுமத்திப் புகார் தயார் செய்வேன்' என்று ஃபக்ருதீன் ஏமாற்றத்துடன் பெருமூச்சு விட்டபடி சொன்னார்.

'அப்படியானால் சாயபு! புத்லாபாயின் விவகாரம் இன்னுமா உசிரோடே இருக்கா?' என்று படதையா ஆவலோடு கேட்டார்.

புத்லாபாயின் விவகாரம் பல உருவெடுத்துக் கடைசியில் புழுதி படிந்துகிடந்தது. ஆனால் கிப்ஸன் துரை வந்தபின் அதற்குப் புத்துயிர் கொடுத்துத் திரும்பவும் விசாரிக்கும்படி அனுப்பியிருந்தார். ஃபக்ருதீனுக்கு இந்த விவகாரத்தில்

பாடுபட்டுப் போதும் போதும் என்று ஆகிவிட்டது. தாதா அகப்பட்டால் எளிதாக அவன்மேல் கொலைக்குற்றத்தைச் சுமத்தி விவகாரத்தை முடித்துவிடலாம் என்று இருந்தார். இப்பொழுது அதுவும் பயனற்றுப் போய்விட்டது.

படதையா மெதுவாக வேறொரு விஷயத்தை எடுத்தார். மணியக்காரர் வீட்டை வசப்படுத்திக்கொள்ளவேண்டும் என்று தமக்குத் தோன்றியவுடனே ஃபக்ருதீன் வந்தது நல்ல சகுனமாகத் தோன்றியது. அதனால் சாவகாசமாக நிலைமையை அவரிடம் விளக்கினார். லிங்கப்பாவும் இடையிடையே பேசித் தங்களுக்கு உதவ வேண்டும் என்று கேட்டுக்கொண்டான். ஆனால் சாயபு அதை ஏற்க மறுத்தார். 'இந்தப் பொம்பளைகளின் விவகாரம் நம்பளுக்கு வேண்டாம். மன்னிச்சுடுங்க' என்று சொன்னார். சில நாட்களுக்கு முன்னால் ஒரு காம்ப்பில் ஒரு பெண் காரணமாக அவர் பெருந் தொல்லைக்கு உள்ளானார். அவளுடைய மகன் கொலைக் குற்றவாளி. அவர் ரொக்கப் பணத்தை ஜப்தி செய்யப்போனபோது அவளைச் சாவடிக்கு அழைக்க நேர்ந்தது. போலீஸாரின் பின்னாலே வந்த அவள் அவர்களை ஏமாற்றிவிட்டுப் பாழும் கிணற்றில் விழுந்துவிட்டாள். அதனால் சாயபுவுக்கு உயிரே போய்விடும்போல் இருந்தது. அந்த விவகாரத்தில் கையைச் சுட்டுக்கொண்ட அவர் மறுபடியும் பெண்பிள்ளைகளின் ஜோலிக்குப் போவதில்லை என்று குதாவின் பெயரால் ஆணை இட்டிருக்கிறார்.

சாயபுவால் காரியம் நடக்காது என்று அறிந்த அவ்விருவரும் ஏமாற்றம் அடைந்தார்கள். சிவபூஜை என்று சொல்லிவிட்டுப் படதையா அங்கிருந்து திரும்பினார். லிங்கப்பாவும் நிழல்போல் தொடர்ந்தான். சாப்பிட்டபின் லிங்கப்பா சாமராவிடம் இருந்து தஸ்தாவேஜுகளைச் சார்ஜ் பெற்று அன்று முதல் பட்டம் கட்டாத ராஜா ஆனான். அன்று இரவு மடத்தில் கூடிய பக்தர் கூட்டம் எல்லாம் அவனை மனமார வாழ்த்தினர்.

படதையாவுக்கு இது நல்ல சந்தர்ப்பம் என்று தோன்றியது. ''மகா ஜனங்களே! சும்மா மணியக்காரரைப் புகழ்ந்து ஆகாசத்துலே ஏத்தினாப் போதாது. உங்களுக்காக அவர் வேண்டிய மட்டும் உழைக்கக் காத்துகிட்டிருக்காரு. தனக்கு வேண்டியவங்களை அவர் காப்பாற்றுவாரு. ஆனால் நீங்க அவருக்காக என்ன செய்யப்போறீங்க, சொல்லுங்க? சங்கரப்ப கௌடரின் மகன் என்று அவரை மதிக்கிறீங்க. ஆனால் சங்கரப்ப கௌடர் வீட்டிலே அவருக்குப் பங்கு இல்லே. மணியக்காரர் வீட்டிலே ஓர் அறை வாங்கிக் குடுக்கக்கூட ஒத்தருக்கும் தெறமை

இல்லே ஊர் மணியக்காரருக்கே தன் வீட்டில் எடம் இல்லேன்னு! 'நாளேக்காலேல எழுந்திருச்சு கௌடரை அவர் வூட்லே கொண்டுபோய் வச்சு வணக்கம் செய்யரோம்'னு என் காலேத்தொட்டு ஆணே இடுங்கோ. நாளேக்கு மணியக்காரர் வீட்டை வசப்படுத்திக்கொள்ள யார் யார் வறீங்க? அவங்க கையை மேலே தூக்குங்க'' என்று உணர்ச்சியோடு ஒரு பிரசங்கமே செய்துவிட்டார் படதையா.

எல்லோரும் கையைத் தூக்கித் தங்கள் சம்மதத்தை வெளியிட்ட பின்னும் படதையா திருப்தி அடையவில்லே.

'மக்களே! உங்களேப்போல் பத்துப்பேராலே மட்டுமே இந்த வேலே முடியும்னு நெனக்கிறீங்களா? ருத்திரா! பறச்சேரி ஜனங்க எல்லாம் நாளேக்கு ஒன்கூட வராப்பலே செய்யணும். மாயப்பா! குறும்பர்களே எல்லாம் கூட்டியாரது ஒன் பொறுப்பு. கரியா! மாளிகை வாரக்கார ஆளுகளெல்லாம் கௌடர் கட்சின்னு நீ செய்து காட்டணும். ஊரெல்லாமே தொண்டு வந்தாத்தான், கௌடர், தம் வீட்டுக்குள் நுழைய முடியும்' என்று மறுபடியும் சொன்னர்.

'அந்தக் கவலேயை விட்டுடுங்க சாமி!' என்று பரிவாரம் முழுதும் ஒரே குரலில் சொல்லித் தம் சம்மதத்தைத் தெரிவித்தது. அப்பொழுது அஞ்சல் மல்லப்பன் ரோந்து விஷயமாக லிங்கப்பா வுடன் பேச வந்தவன் இந்தப் பிரசங்கத்தை எல்லாம் நின்ற இடத்திலிருந்தே கேட்டுக்கொண்டான். உடனே நேராகப் பார்வதியின் வீட்டுக்குச் சென்று எச்சரிக்கை செய்துவிட்டு அங்கிருந்து பாளாச்சாரைப் பார்க்கப் போனன்.

சாமராவுடன் மாளிகை வாரக்காரர்கள் எழுப்பிய புரட்சியைப்பற்றிப் பேசிவிட்டு, ஆச்சார் அப்போதுதான் படுத்துக்கொண்டார். மல்லனுடைய குரலேக் கேட்டு எழுந் திருந்து வாசல் கதவைத் திறந்தார். மல்லன் பரபரப்புடன் நடந்தவற்றை அவரிடம் சொன்னன்.

பாளாச்சார் பெருமூச்சுவிட்டு, 'எல்லாம் ஸ்ரீ ஹரியின் இச்சைப்படி நடக்கிறது' என்று முணுமுணுத்துக்கொண்டார். பிறகு மல்லனேப் பார்த்து, 'நீ ரோந்துக்குப் போகவில்லேயா, என்ன?' என்று கேட்டார். மல்லனுக்குத் தன் வேலேயே வெறுப்பைக் கொடுத்தது. ''ஊர் மணியக்காரரே குந்திகிட்டு, 'லூட்டி அடியுங்கள்'னு ஜனங்களுக்கு உபதேசம் செய்யருரு. அப்பவும் நான் எனத்துக்காக ரோந்து சுத்தறதுங்க?'' என்று கையை உதறிக்கொண்டு சொன்னன்.

'யாரோ எப்படியோ போகட்டும் மல்லா! ரோந்து சுத்தறது உன் கடமை. உன் வேலையை நீ செய், போ' என்று ஆச்சார் அவனை அனுப்பிவிட்டுப் படுக்கையில் படுத்தார்.

மல்லன் சொல்லிவிட்டுப்போன செய்தியால் ஆச்சாருடைய மனம் துன்புற்றது. சங்கரப்ப கௌடர் உயிர் விடும்போது அவருடைய குடும்பத்தின் கௌரவத்தைக் காப்பாற்றுவதாக அவர் உறுதி சொல்லியிருந்தார். அதை நிறைவேற்றும் காலம் வந்திருக்கிறது. உலகத்தில் நடக்கும் அக்கிரமங்களைத் தடுப்பதாகத் நாம் சூளுரைக்கவில்லை. அடக்கும் அதிகாரமும் அவரிடம் இல்லை ஆனால் அக்கிரமம் தலைவாசலுக்கே வந்து விட்டால் அதை எதிர்ப்பதைத் தவிர வேறு வழி இல்லை. விளைந்த நிலம், நிறைத்த வீடு, தெளிந்த நீர், வளர்ந்துவரும் வாழ்க்கை எல்லாவற்றையும் இந்த வேட்டை நாய்களின் பிடியிலிருந்து விடுவிக்கும் வழிதான் எது? வாழ்வின் இதயப் பகுதியையே ஆக்கிரமிப்பதென்றால் அதை எதிர்த்துதானே ஆகவேண்டும்?

ஆச்சாருக்கு விடியவிடியத் தூக்கம் இல்லை. 'சாதுவான ஜீவனுக்குப் பலமே ஏன் இல்லை?' என்பது புரியாத பிரச்சினையாக இருந்தது. அசுர சக்தி, தெய்வ சக்தியைவிடப் பலம் வாய்ந்தது என்று அவர் புராணத்தில் படித்தது வாழ்க்கையிலேயேயா உண்மை ஆகவேண்டும்? கடவுளின் அவதாரம் எந்த நிலையில் அவசியம்? இப்படி மனத்தை உருக்கும் கவலையிலேயே ஆச்சாரின் உயிர் தவித்தது. அதற்குள் கோழி கூவிப் பொழுது விடிந்ததைத் தெரிவித்தது. ஆச்சார் எழுந்து குளிக்கப்போனார். ஸ்நானம், தினசரிப் பிரார்த்தனை எல்லாவற்றையும் முடித்துக்கொண்டு நேராகச் சங்கரப்ப கௌடர் வீட்டுக்குப் போனார்.

பார்வதி அம்மா அப்பொழுதுதான் எழுந்து இருந்தாள். பசுமாட்டுக்கு வைக்கோல் போடும்படி வேலையாளிடம் சொல்லிக் கொண்டிருந்தாள். தாமாகவே கூப்பிட்டனுப்பியதுபோல் பாளாச்சார் வந்ததைக் கண்ட அவளுக்கு மகிழ்ச்சி கட்டுக்கு அடங்கவில்லை. அவர் காலில் விழுந்து, 'ஒங்க பேச்சை மீறி என்ன என்னவோ செய்துவிட்டு இப்படிக் கெடக்கறேன் பாருங்க. செய்த தப்பை மன்னிச்சுட்டுக் காப்பாத்தணும். உங்க மகள்னு நெனச்சுக்குங்க' என்று கேட்டுக்கொண்டாள் பார்வதியம்மாள்.

ஆச்சார் பேசும் நிலைமையில் இல்லை. ஒரு கணம் பேசாமல் இருந்தார். மனத்தையே மிகவும் முயன்று வழிக்குக் கொண்டு வருவதுபோல் இருந்தது அவர் போக்கு. 'முதலில் தெருக் கதவைச் சாத்தச்சொல்லு. நான் வெளியே உட்கார்ந்துகொண்டு

வருவதையெல்லாம் கவனித்துக்கொள்கிறேன். தைரியம் வேணும். என்ன வந்தாலும் கடவுள் காப்பாற்றுவார்' என்று தடுமாறிச் சொல்லிவிட்டு அங்கிருந்து வாயிலுக்குச் சென்ருர். அவருடைய பேச்சு, முகத்தோற்றம், நடை எல்லாவற்றிலும் அசையாத தீர்மானம் வயிரத்தால் எழுதியதுபோல் இருந்தது.

ஒரு நாளும் கெளடர் வீட்டுத் தெருக் கதவைச் சாத்தியதே இல்லை. நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக இரவும் பகலும் அந்தப் பெரிய வாயில் திறந்தே இருந்தது. இன்று அதை மூடவேண்டும் என்று பார்வதியம்மாள் சொன்னவுடன் ஆட்களெல்லாம் ஆச்சரியம் அடைந்தார்கள். அது அச்சான்யம் என்று தோன்றியது. பார்வதியம்மாவுக்கும் அப்படித்தான் தோன்றியது. மணியக்காரர் குடும்பத்தின் வீரமும் பலமும் கதவைத் திறந்து வைத்துக்கொண்டே உலகை எதிர்க்கும் திறமை உள்ளதாக இருந்தது. ஆனுல் இன்று ஆச்சாருடைய பேச்சை மறுப்பதற்கு இல்லை.

தெருக் கதவை மூடவந்த வேலையாட்கள் ஆச்சார் வெளியே ஏழெட்டுப் பேருடன் தர்க்கம் செய்துகொண்டிருப்பதைக் கண்டார்கள். அவர்களும் வரப்போகும் ஆபத்தை உணர்ந்தார்கள். மறுபேச்சுப் பேசாமல் கதவை மூடினுர்கள். கதவின் கீல் கிர்ரென்று ஓசை இட்டது. வேலையாட்கள் அதன் பின் நின்றுகொண்டு கேட்டுக்கொண்டிருந்தார்கள். ஆச்சாரோடு தர்க்கம் செய்து கொண்டிருந்த ஜனங்கள் போனபின் ஆட்கள் கதவைத் திறந்து வெளியே எட்டிப் பார்த்தார்கள். ஆச்சார் நரசிம்மனைப்போல் முழங்கால் உயரம் உள்ள வாசற்படியில் உட்கார்ந்திருந்தார்.

வேலையாட்களுடைய தயக்கத்தைக் கவனித்த ஆச்சார், 'உங்களுக்குக் கதவைச் சாத்த இஷ்டம் இல்லாவிட்டால் திறந்து வைத்துவிட்டே போங்கள். ஆனுல் இங்கே வந்து நிற்க வேண்டாம். போய் உங்க வேலையைப் பாருங்க' என்று சொன்னுர். ஆட்கள் பேசாமல் போய்விட்டார்கள். நாலுபேர் தாராளமாகப் படுக்கக்கூடிய வாசற்படியில் ஆச்சார் ஒருவரே உட்கார்ந்திருந்தார். உட்கார்ந்த இடத்திலிருந்து அசையவில்லை. படியிலேயே வேரூன்றிவிட்டதுபோல் இருந்தது அந்தத் தோற்றம். விடிந்து நாலுமணி நேரம் ஆகியபின் படையாவும் லிங்கப்பாவும் வந்தார்கள். அவர்களைத் தொடர்ந்து நூற்றுக் கணக்கான மக்கள் வந்தார்கள்.

அவர்கள் ஆச்சாரை அங்கே எதிர்பார்க்கவில்லை. வாசற்படியின்மேல் எதிர்ப்பே உருவாக அமர்ந்திருந்த ஆச்சாரைக் கண்டவுடன் ஜனங்கள் தடைப்பட்டு நின்ருர்கள். அவர்கள்

எல்லோரையும் நெருப்புப் பொறிபறக்கும் பார்வையால் பார்த்து, 'இதோ பாருங்கள். என் உயிர் போன பிறகுதான் நீங்கள் வீட்டுக்குள் கால் வைக்க முடியும்' என்று இடி இடிப்பது போல் சொன்னார் ஆச்சார்.

'லிங்கப்பா தன் வீட்டுக்குப் போகிறான். நடுவிலே நீங்க ஏன் வந்து தடுக்குறிங்க' என்று படதையா எதிர்த்துப் பதில் சொன்னார்.

'அவனோட வீடு அஜராணிக் குறும்பர் குப்பத்திலே இருக்கு. இங்கே இல்லே. வேணுமானால் அங்கே போகட்டும். யார் தடுப்பாங்க?' என்று ஆச்சார் அலட்சியமாகவே பதில் சொன்னார்.

'அவன் சங்கரப்ப கௌடருடைய மகன்தான்னு சர்க்கார் கிட்டேயிருந்து எழுதி வந்திருக்கு ஆச்சாரையா! அவனுக்கு மணியம் வேலே கெடச்சுது தெரியுமா இல்லியா?' என்று சற்று அதிகாரத்துடனே கேட்டார் படதையா.

'சர்க்கார் எழுதினது ஆதாரமா இருந்தா வீட்டையும் சர்க்கார் மூலமாவே வசப்படுத்திக்கட்டும். அவ்வளவு சுலபமான வழி இருக்கச்சே அதை விட்டுட்டு இப்படி அடாவடி ஏன் செய்யணும்?' என்று கேட்டார் ஆச்சார்.

படதையாவின் தர்க்கம் இன்னும் வலுத்தது. 'ஊர்ஜனங்களுக்குத் தங்கள் கௌடர் திக்கில்லாதவனேப்போல் மடத்தில் இருப்பது சரியாகத் தோணலே. அது ஊருக்கே அவமானம். அதனாலே கௌடர், தம் வீட்டில் வந்து தங்கப் பார்வதியம்மாளேச் சம்மதிக்க வைக்கணும். இதுலே அடாவடி என்ன வந்தது?' என்று கர்ஜித்தார் படதையா.

ஆச்சார் அதற்கு ஒன்றும் பதில் சொல்லாமல் கற்சிலேபோல் உட்கார்ந்திருந்தார். படதையாவுக்கு என்ன செய்வது என்பது புரியவே இல்லே. ஆச்சாருடைய மனத்தை மாற்றுவது நடக்காத காரியம் என்பது அவருக்கு முன்பே தெரியும். 'இங்கே பாருங்க ஆச்சாரையா! தங்கள் கௌடர் எங்கே இருக்கணும்ங்கறது ஜனங்களுக்குத் தெரிஞ்சிருக்கு. சும்மா வழி விடுங்க. ஜனங்களுக்குக் கோபம் வந்தா என்ன நடக்கும்னு சொல்ல முடியாது' என்று படதையா பயமுறுத்தினார். லிங்கப்பாவும் அது போலவே திமிராகப் பேசினான்.

'இதோபார் லிங்கப்பா! நீ சங்கரப்ப கௌடரின் மகன் என்று என் காலேத் தொட்டு ஆணே இடு. அப்புறம் தாராளமாக உள்ளே போ. நான் குறுக்கே நிற்கமாட்டேன். இல்லே என்றால் என் பிணத்தை நீக்கிக்கொண்டுதான் உள்ளே போகவேண்டி இருக்கும்' என்று நிஷ்டூரமாகவே சொன்னார் ஆச்சார்.

சட்டத்தால் கிடைத்த உரிமைக்கு எதற்காக ஆணை இடணும்? பொய்யாகத்தான் ஆணையிட்டு உள்ளே போனால் என்ன? என்பது படையாவின் வாதம். 'லிங்கப்ப கௌடரே! நீங்க சங்கரப்ப கௌடருடைய மகன் என்று ஆணை இடுங்க. அதனாலே என்ன வந்திடும்?' என்று அவர் லிங்கப்பாவுக்கு ஊக்கம் கொடுத்தார்.

'கௌடர் பொய்ச் சத்தியம் செய்யத் தயாராக இருக்காரா?' என்று கூட்டம் கத்தியது.

லிங்கப்பா தயங்கினான். பொய்ச் சத்தியம் செய்ய அவனுக்குத் தைரியம் இல்லை. அதற்குப் பதிலாகத் தன்னுடைய செயலற்ற நிலைமையை நினைத்துக் கோபம் வந்தது. 'எதிர் பாராமல் எல்லாம் கைகூடி வரும்போது இந்தக் கிழவன் ஒருத்தன் குறுக்கிடுறானே! பட்ட பாடெல்லாம் சமுத்திரத்தில் கரைத்த பெருங்காயம் ஆகிவிட்டதே' என்று எண்ணியவன், 'ஏய், என்னடா, பாக்கறீங்க. ஆச்சாரையாவைத் தள்ளி விட்டு உள்ளே போங்கடா!' என்று கத்தினான்.

'யாரையா அது ஆச்சாரையாவைத் தள்ளறது? அப்படி ஏதானும் செய்தீங்களானால் உங்கள் எல்லோருக்கும் கைவிலங்கு போட்டு ஜெயிலுக்கு அனுப்பிவிடுவேன். படையா! நெருப்பை மடிலே கட்டிகிட்டுப் பொழைச்சுடலாம்னு பாக்கிறியா? எல்லாம் போங்க சும்மா' என்று கூட்டத்தில் நுழைந்து வந்த சேஷப்பா கத்தினான்.

சேஷப்பாவின் பேச்சைக் கேட்டு அங்கே கூடியிருந்தவர்களெல்லாம் தடுமாறினார்கள். அவர்கள் யாருக்கும் சேஷப்பாவைப் பகைத்துக்கொள்ள இஷ்டம் இல்லை. லிங்கப்பாவின் வாரிசு உரிமைத் திரிசமன் எல்லாம் அவனுக்குத் தெரியும் அல்லவா? செய்வதறியாமல் கப்சிப் என்று எல்லோரும் கலைந்து போய்விட்டார்கள். எல்லோரும் போனபின் ஒரு பெருமூச்சுடன் ஆச்சார், தம் வீட்டுக்குப் போனார். அவர் வீட்டுக்குள் நுழையாமல் அப்படியே போய்விட்டதைக் கண்டு பார்வதியம்மாவுக்கு வருத்தமாக இருந்தது.

பாதள்ளியின் மடம் எதிர்ப்பின்றி நடந்து வந்தது. ஊரை விட்டு ஓடிப்போன படையா, அது என்ன மாயத்தாலோ திரும்பி வந்து வழக்கம்போல் தம்முடைய தகிடுதத்தங்களைத் தொடங்கியிருந்தார். மடத்தின் சின்னச் சாமியாரான சிவயோகி சுவாமிகள், திரும்பத் தம் வீட்டுக்குப் போகும்படி ஆயிற்று. கிப்ஸன் துரையின் அலட்சியம், படையாவின் தீய முயற்சி, ஊர்ப் பெரியோர்களின் பொறுப்பற்ற தன்மை இவைகளால்

கிணற்றில் போட்ட கல் கிணற்றிலேயே இருப்பதுபோல் படதையா மடத்துப் பீடத்தில் இருந்து தர்பார் நடத்திக் கொண்டிருந்தார்.

ஆனல் சிவயோகி சுவாமிகளின் எதிர்காலத்தைப்பற்றிய கவலே கங்காதரையாவைப் பிடித்துக்கொண்டது. சதாசிவ யோகிகள் இருந்தபோதே அவருக்கு மடத்தின் தொடர்பு இருந்தது. அண்ணன், சுவாமிகளாக இருந்தார். தம்பி நிர்வாகப் பொறுப்பை ஏற்றிருந்தார். அப்போது மடத்துக்குக் கிருதயுதமாக இருந்த காலம் அது. இப்பொழுது தமது மகனே பீடத்துக்கு வந்தவுடன் அவருடைய பொறுப்பு அதிகமாயிற்று. கங்காதரையாவுக்கு மடம் உண்மையான அபிமானத்துக்கு உரியதாக இருந்தது. ஆனல் படதையாவைப் போன்றவர்கள் பீடத்தில் உட்கார்ந்ததால் மடத்தின் புனிதத் தன்மையே கெட்டுவிட்டது. கண்ணே மூடிக் கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தால் பயன் இல்லே என்று கங்காதரையா அதைப் பற்றிச் சர்ச்சை செய்ய ஆச்சாரிடம் வந்தார்.

பாளாச்சார் சாப்பிட உட்கார்ந்திருந்ததால் கங்காதரையா திரும்புவதாக இருந்தார். ஆனல் பாளாச்சாரே அவரை வற்புறுத்தி உட்காரவைத்தார். ஆச்சார் சாப்பாட்டை முடித்துக்கொண்டு வந்து கங்காதரையாவை வரவேற்ருர். அவர் ஆச்சாரின் வீட்டுக்கு வந்ததே அபூர்வம்.

'நீங்க எதற்காக வந்திருக்கீங்கங்கறது தெரியும் ஐயா! நேத்துச் சாமராஜாவினிடம் இதைப்பற்றித்தான் நான் யோசித்துக் கொண்டிருந்தேன். மகாராஜா இங்கே வந்திருந்தபோது சிவயோகி சுவாமிகளின் படிப்புக்கு ஏற்பாடு செய்வதாகச் சொல்லிப் போயிருக்கிருர். நானே உங்களே அழைத்து இதைச் சொல்லணும்னு இருந்தேன். அதைப்பற்றி நீங்க என்ன நினேக் கிறீர்கள்?' எனறு கேட்டார் ஆச்சார்.

சிவயோகி சுவாமிகளின் கல்விப் பொறுப்பை மகாராஜா ஏற்றிருக்கிருர் என்பதைக் கேட்டுக் கங்காதரையா மகிழ்ச்சி அடைந்தார். ஆனல் அதற்குமுன் மடத்தின் புனிதத் தன்மையைக் காக்கவேண்டும் என்று அவர் நினேத்தார். இதைப் பற்றி மகாராஜா ஒன்றும் சொல்லவில்லே. 'மடத்தைப்பற்றி ஏதாவது பேச்சு நடந்ததா? எத்தனே நாளேக்கு இந்தப் பழிச் செயலேப் பாத்துகிட்டிருக்கறது? பஞ்சாயத்தாரும் கண்ணே மூடிகிட்டு உக்காந்திருக்காங்க. மடத்தின் குழப்பத்தை நீக்க என்ன வழி இருக்குது சொல்லுங்க' என்று சரளமாகவே கேட்டார் அவர்.

அதற்கு ஆச்சார் மட்டும் என்ன பதில் சொல்ல முடியும்? பஞ்சாயத்தார் கண்ணை மூடிக்கொண்டிருக்கக் கூடாது; உண்மை தான். ஆனால் அவர்களுக்குள்ளேயே ஒற்றுமை இல்லை. மடத்தின் விஷயத்தில் யாருக்குமே அக்கறை இல்லை. வாழ்க்கை முறையே மாறிவிட்டது.

'அதுக்கு என்ன செய்யறது ஐயா? வெள்ளம் பெருகும்போது எவ்வளவு நேரம் எதிர்நீச்சல் போட முடியும்? நிலைமை கை மீறிப் போய்விட்டால் பேசாமல் பாத்துகிட்டு உக்காந்திருப்பதுதான் வழி' என்று பற்றில்லாமலே சொன்னார் ஆச்சார்.

கங்காதரையாவுக்கு இந்தப் பதில் திருப்தி அளிக்கவில்லை. 'மடத்தின் புனிதத்தன்மை கெடுவதைப் பார்த்து அவரால் பொறுக்க முடியவில்லை.' படதையா ஒன்றும் நம்பர் அயோக்கியன். இப்போது சிமனை அழைத்து வைத்துக்கொண்டு குடித்தனமே நடத்துகிறான்! 'சம்சாரிக்கு ஞானியின் மடத்தில் இடம் ஏது? குடிகாரர், போக்கிரிகள் இவர்கள்தாம் அவனுக்குக் கூட்டாளிகளாக இருக்கிறார்கள். மடத்தில் இரவும் பகலும் குடியும் சூதாட்டமும்தான் நடக்கின்றன. அதோடு பீடம் சூழ்ச்சிகளுக்குப் பிறப்பிடமாக இருக்கிறது. இதைப் பார்த்துக் கொண்டே எப்படிப் பேசாமல் இருப்பது? ஊர்ப் பஞ்சாயத்தார் எல்லாம் இது அற்ப விஷயம் என்று விட்டுவிட்டார்களா?' என்று கேட்டார் கங்காதரையா.

ஆச்சாருக்கு இதெல்லாம் தெரிந்துதான் இருந்தது. அவருக்குத் தெரிந்த மட்டும் கொஞ்சம்கூட நம்பிக்கைக்கு இடமே இல்லை. 'பஞ்சாயத்தார் என்றால் யார்?' அஜராணியின் அயோக்கியன் ஒருவன் மணியக்காரனாக வந்திருக்கிறான். படதையாதான் அவனுக்கும் ஊருக்கும் வழி காட்டியாக இருக்கிறான். பார்வதியம்மாளுக்குத் தன் வீட்டையும் நிலங்களையும் காப்பாற்றுவதே பெரும்பாடாக இருக்கிறது. சாமராவ் ஊருக்குப் புதியவன். அவன் பேச்சைக் கேட்பது அப்பறம் இருக்கட்டும். பலபேருக்கு அவனைத் தெரியவே தெரியாது! என் விஷயமா, தினந்தோறும் வெள்ளத்தில் எதிர் நீச்சல் போட்டுப் போட்டுக் கை ஓய்ந்துவிட்டவன். வெறும் நன்னடத்தைக்குப் பலம் எங்கிருந்து வரும்?

'அதற்குத்தான் சொல்றேன். பேசாமே உலகத்தைக் கை விட்டுவிடலாம். பாபக்குடம் நிரம்பியதும்தான் கடவுள் அவர்களுக்குத் தண்டனை கொடுப்பார். இருக்கும் ஒரு புண்ணியத்தின் அமிசத்தைக் காக்கும் வேலைதான் நாம் செய்யக் கூடியது. அதைச் செய்வோம். சிவயோகி சுவாமிகள் உங்கள்

மகன் ஆனாலும் நாளைக்குக் குரு பீடத்துக்கு வருகிறவர். அவருக்கு அந்தத் தகுதி வரும்படி இப்பொழுது முதலே முயல வேண்டும். அவரை இந்தச் சூழ்நிலையில் வளர்க்கக்கூடாது. எதிர்பாராமல் மகாராஜா சொல்லி அனுப்பியிருக்கிறார். நாளைக்கே சாமரானேவோடு அவரை அனுப்பிவிடுங்கள்' என்று ஆச்சார் தம் கருத்தைச் சொன்னார்.

கங்காதரையா, கவலைக்கு உள்ளானார். 'நீங்க சொல்ற தெல்லாம் சரி, ஆச்சாரையா! ஆனால் வயசான காலத்துலே மகனைக் கண்காணாதே அனுப்பிவிட்டு நான் எப்படி இருப்பேன்? இங்கேயே படிப்புச் சொல்லிக்கொடுக்கக் கூடாதா?' என்று கேட்டார்.

'இந்த நிலைமையில் அவர் இங்கே இருப்பது சரியல்ல. உங்களுக்கு இது நான் சொல்லித் தெரியணுமா? கெட்ட ஜனங்க வாழறது ரொம்ப சுலபம் ஐயா! ஆனா, புண்ணியம் வளரணு மானால் அதற்கு நாம் எல்லோரும் அபராதம் கொடுக்கவேண்டி யிருக்கும். மடத்துக்கு நன்மை வரணும்னு நீங்க நெனச்சா அவரை அனுப்பத்தான் வேணும்' என்று ஆச்சார் உறுதியாகச் சொன்னார்.

''என்றைக்காவது உங்க பேச்சை மறுத்திருக்கேனா? அன்று 'மடத்துக்குப் பையனைக் குடுன்'னு சொன்னீங்க; குடுத்தேன். இப்பொ 'ஊரைவிட்டு அனுப்பு'ன்னு சொல்றீங்க; அனுப்பறேன். சரிதானே? அது ஒரு பெரிய விஷயம் அல்ல' என்று கங்காதரையா தம் சம்மதத்தைத் தெரிவித்தார்.

ஆனாலும் அவருடைய மனத்தை ஒரு விஷயம் உறுத்திக் கொண்டே இருந்தது. 'படதையாவைப் போன்றவர்களை ஊரிலே தங்கவிடக்கூடாது. சமயம் வந்தால் வீரசைவ சமூகத்தின் பிரமுகர்கள் எல்லோரையும் அழைத்துக்கொண்டு போய் அவனைக் கீழே உருட்டி விட்டுவிடவேண்டும்' என்பது அவர் நினைப்பு. ஆச்சாருக்கு இந்தச் செய்கையில் சம்மதம் இல்லை. படதையா 'சிமணவை மடத்தில் கொண்டுவந்து வைத்திருப்பது சரி' என்பதால் அல்ல. ஆனால் இதே படதையாவுக்கு ஆசைநாயகி யான தானம்மா மடத்தில் இருக்கவில்லையா? அப்போது அது தெரிந்தும்கூட ஊரார் வாயையே திறக்கவில்லை. இப்போது அதைப்பற்றி என்ன பேச்சு?' என்பது ஆச்சாரின் கேள்வி.

கங்காதரையா மேலே பேசாமல் எழுந்திருந்தார். சிவயோகி சுவாமிகளை அனுப்பும்படி மற்றும் ஒருமுறை நினைவூட்டி அவருக்கு விடை கொடுத்தார் ஆச்சார். கங்காதரையாவுக்கு இன்னும் மடத்துப் பித்து விடவில்லை. படதையாவைப் போன்றவர்கள்

மடத்தின் புனிதத் தன்மையைக் கெடுக்கப் பிறந்தவர்கள். 'எப்பாடு பட்டாவது அவனை விரட்டவேண்டும்' என்று யோசித்துக்கொண்டே அவர் வெளியேறினார்.

அவர் போன சற்று நேரத்துக்கெல்லாம் சிலேதார் லக்ஷ்மணன் அழுதுகொண்டே அங்கே வந்தான். ஆச்சாருக்கு இது புதியதன்று. பாதள்ளியில் எத்தனையோ மாறுதல் ஏற்பட்டாலும் லக்ஷ்மணனுடைய அழுமூஞ்சித்தனம் மட்டும் மாறாது என்பது அவருக்குத் தெரியும். 'என்னப்பா, லக்ஷ்மணா! இன்னும் என்ன செய்தி கொண்டுவந்திருக்கே?' என்று கேட்டார். ''விதை தெளிக்கும் சாதனத்தை எடுத்துகொண்டு படுகேரன் வீட்டுத் திண்ணேலே போய்க் குந்திகிட்டிருந்தேன். சேரி ருத்ரன் அங்கே இருந்தான். 'அவன், ஏன் சும்மா வெதை தெளிக்கிறீங்க? மேட்டு நெலத்திலே நீங்க வெதைக்கவேண்டிய தேவையே இல்லே. நாளைக்குப் படதையா சிமணாபாயின் நெலத்தைச் சொந்த மாக்கிகிட்டு வெதைக்க ஏற்பாடு செஞ்சிருக்காங்க'ன்னு சொன்னானுங்க. நான் இதெல்லாம் வெளையாட்டுன்னு நெனச்சு நம்பவே இல்லீங்க. படிகேர சத்தியப்பனும் அப்படியே சொல்றானுங்க. கோடையிலெ பண்படுத்தின மேட்டு நெலத்தைப் படதையா வாயிலெ அடைச்சிட்டுச் சும்மா உக்காந்திருக்கணுமா? நாளைக்குத் தாதா என்ன சொல்லுவான்?'' என்று லக்ஷ்மணன் புலம்பினான்.

ஆச்சார் அவன் சொன்னதை எல்லாம் அமைதியாகவே கேட்டுக்கொண்டிருந்தார். கௌடர் வீட்டை ஆக்கிரமித்துக் கொள்ள முடியவில்லை என்ற கோபத்தில் படதையா மற்றொரு சதிக்குத் திட்டமிட்டிருப்பது தெரிந்தது. ஏதோ ஒருவிதத்தில் ரகளை செய்துகொண்டிருக்காவிட்டால் அவனுக்குப் பொழுது போகாது. 'அவ்வளவுதானே? வாரிசு ரிஜிஸ்தரில் சிமணாவின் பெயரை எழுதும்படி நீயே சம்மதம் கொடுத்துட்டு இப்ப அவளுடைய நிலத்துலே அவளுக்கு உரிமை கொடுக்காட்டி முடியுமா?' என்று ஆச்சார் அவனையே மடக்கினார். லக்ஷ்மணனுக்கு இந்தக் கேலி புரியவில்லை.

அழுமூஞ்சியாக இருந்ததுபோல் அவன் பிடிவாதக்காரனாகவும் இருந்தான். சொன்னதையே திருப்பித் திருப்பி சொல்லித் தன் பேச்சை உறுதிப்படுத்துவான். இப்பொழுதும் அதே கதைதான்.

''சிமணா நிலத்துக்கு வரட்டும். நான் தடுத்தா என் நாக்கைக் கிழிச்சுப் போடுங்க. ஆனா படதையா வரான்னுக்க எப்படீங்க சும்மாக் குந்தி இருக்கறது? 'சிமணாவைக் கூட்டியாந்து

நெலத்துலே கால் வை. இல்லாட்டி ஒன் காலே முறிச்சுக் கையிலே குடுத்துடுவேன்'னு நான் சொல்லப்போறேன்'' என்ருன் லக்ஷ்மணன்.

'நீ சரியான பைத்தியக்காரன் லக்ஷ்மணு! நாளைக்குச் சிமஞவே வந்து தன் பங்கு நெலத்தைப் படைதையாவுக்கு எழுதிக் கொடுத்திருப்பதாகச் சொன்ஞ, நீ என்ன செய்வே? சிமஞவே படைதயாகிட்டேப் போனப்பறம் அவளுடைய நெலமும் அவனைச் சேந்ததுதானே? சும்மா அர்த்தம் இல்லாமெ எதாவது செய்யாதே' என்று புத்தி சொன்ஞர்.

லக்ஷ்மணன் தலை தலையாக அடித்துக்கொண்டான். 'நாஞவின் மகளுக்கு, இந்தக் கதி வந்துவிட்டதே!' என்று அவனுக்கு வருத்தம். உண்மையில் நாஞ இறந்த பிறகு சிமஞவை வளர்க்கவேண்டியவன் அவன். ஆஞல் மடத்துக்கு அவள் வந்தபின் அவளைப் போய்ப் பார்க்கவும் முடியாமல் நிலைமை விபரீதமாக இருந்தது. சிமஞவுடன் தன் உறவு அற்றுப் போய் விட்டது என்ற கவலை, லக்ஷ்மணனுடைய வயிற்றைக் கலக்கியது. செயலற்றவஞகப் பேசாமல் அங்கிருந்து எழுந்து போஞன்.

காலையில் கௌடர் வீட்டைச் சொந்தப்படுத்திக்கொள்ளும் திட்டம் தோல்வியுற்றதால் மடத்துப் பரிவாரம் உத்ஸாகத்தை இழந்துவிட்டது. அன்று இரவு மடத்துக் கூட்டத்தில் ஒருவர் முகத்திலாவது சுரத்து இல்லை. படைதயா மட்டும் குன்ருத தன்னம்பிக்கையுடன் மேன்மேலும் ஊக்கமூட்டிக்கொண்டிருந்தார். அன்று காலையில் செய்த முயற்சியில் தோற்றுப் போனது பெரும் தவறு ஒன்றும் இல்லை. 'எல்லா முயற்சிகளும் பலன் அளிக்கவேண்டும்' என்று எழுதியா வைத்திருக்கிறது? ஆஞல் முயற்சியைக் கைவிட்டுச் சும்மா உட்கார்ந்திருப்பது கெட்டிக்காரத்தனம் ஆகாது. படைதயா பேசிக்கொண்டே மற்ஞெரு திட்டத்தை உருவாக்கிக்கொண்டிருந்தார். உணர்ச்சி வேகத்தால் அவர் பேச்சில் யக்ஷகானப் பிரசங்கத்தின் தீவிரம் இருந்தது.

'மற்றவருடைய வசத்தில் இருக்கும் சொத்தைக் கைவசப் படுத்துவது என்பது சின்ன விஷயமா? அது ஒரு பெரிய போராட்டம் போன்றது. போராடுவதாஞல் எதிரியின் பலம் எவ்வளவு என்பதை நாம் எடைபோட்டுப் பாக்கணும். அப்படிப் பாக்காததஞலேதான் நாம் தோத்துப்போனேம். அது ஒரு பெரிய விஷயம் அல்ல. ஏன்னு கேட்டால் கௌடர் வீட்டை வசமாக்கிக்கொள்றது பாதள்ளியையே ஜெயித்தது போல! அதை

இப்பொ விட்டுவிடுவோம். சண்டைக்குப் புது எடம் பாத்து வச்சிருக்கேன். நாளைக்கு நாமெல்லாம் நாணுவின் செம்மண் நெலத்துலே வெதை வெதைக்கப் போலாம்னு முடிவு செஞ்சிருக்கேன். கரியன், உழுது பரம்படிச்சு வச்சிருக்கான். லக்ஷ்மணன், பூமி தன்வசமே இருக்குன்னு தகராறு செய்யலாம். பாளாச்சார், சேஷப்பா, பிராதார கௌடர்கள், மணியக்காரரின் ஆட்கள் எல்லோரும் அவனுக்குப் பக்கபலமாக வந்து நிக்கலாம். நம்ம ஜனங்க அதிகமா இருந்தா அவர்களை எல்லாம் உதைத்து, விரட்டி, நெலத்தை வசமாக்கிக்கொள்ள முடியும்' என்று நிதானமாகச் சொல்லிய படதையா எல்லோருடைய முகத்தையும் ஆராய்ந்தார்.

படதையாவின் இந்தப் புதிய திட்டம் யோசித்து ஒழுங்காகத் தீட்டப்பட்டதாகும். முதலில் நாணுவின் நிலம்; பிறகு கௌடருடைய தானியக் குழிகள்; பிறகு கௌடருடைய வீடு—இப்படிப் படையெடுப்பதாகத் திட்டம். காலையில் அடைந்த தோல்வி, அவருடைய ஆத்திரத்தைக் கிளப்பியது. எச்சரிக்கையையும் கற்றுக்கொடுத்தது. அதோடு தோற்றுப்போய் வந்தவர்களுக்குப் புதிய உத்ஸாகத்தை நிரப்பவேண்டிய வேலையையும் அவர் செய்யவேண்டியிருந்தது. எப்படியும் இன்றுபோல் மறுபடியும் தோல்வியடையாமல் பார்த்துக்கொள்ளவேண்டும் என்ற உறுதியுடன் அவர் பேசினார்.

ருத்திரன் எழுந்திருந்து, 'சாமி! எங்க பறச்சேரி ஜனங்கள்ளாம் உங்களைச் சேந்தவங்கதான்னு நெனச்சுக்குங்க. அவுங்க இன்னிக்கு வந்தாப்பலே திரும்பிவரதானு ஊர் மூஞ்சீலே முழிக்க முடியாதுங்க. வீட்டே பிடிச்சுக்கறது, சோளக் குழியைக் கொள்ளை அடிக்கறதுன்னு சொன்னலே அவங்களுக்கெல்லாம் ரொம்ப உத்ஸாகமுங்க. வயித்துக்கு ஒரு மணி தான்யம் இல்லே. நாளைக்கு நாணு சாப் நெலத்தை வெதைச்சவங்களை வெறுங் கையோட வீட்டுக்கு அனுப்பக் கூடாதுங்க. திரும்பி வரத்துக்கு முன்னலே கௌடருடைய தானியக் குழியைத் தெறந்து தானியம் பங்கிட்டுக் குடுத்துடுங்க. அப்படியாணுக்க ஜனங்க குதி போட்டூட்டு வருவாங்க பாருங்க' என்று தன் அபிப்பிராயத்தைச் சொன்னன். குறும்பர் குப்பத்து மாயப்பன் கஞ்சாவின் மயக்கத்திலிருந்து தெளியாமலேயே, ''சாமி! 'நாணு சாபினுடைய நெலத்துலே வெதை வெதைக்கறத்துக்கு நீங்க யாரடா பயல்களா?' என்று யாராவது கேட்டா என்ன சொல்றதுங்க?'' என்று விவகாரத்துக்கு இடமான தடை ஒன்றை எடுத்துச் சொன்னன்.

படதையாவும் அந்தத் தடங்கலை எதிர்பார்த்திருந்தார். அதனால் அதற்குத் தகுந்த பதிலைத் தயாராக வைத்துக் கொண்டிருந்தார். 'மகனே! அந்தப் பேச்சு வந்தால் என்னைக் காட்டிட்டு நீங்க தப்பிச்சுக்குங்க அப்பா! அவங்க வந்து என்னைக் கேக்கட்டும். மறுபடியும் மொகத்தைக் காட்ட முடியாதெ பதில் சொல்லி அனுப்பறேன்' என்று அதிகாரத்தோடு அபயம் கொடுத்தார். என்ன செய்தாலும் நம்பியவர்களைக் கைவிடேன் என்று பரமாத்மாவே சொல்லும் தோரணையில் சொல்லிவிட்டுக் கிண்ணத்தில் இருந்த மதுவை எடுத்து உறிஞ்சினர்.

அவருடைய பேச்சைக் கேட்ட ஜனங்கள், கவலையை விட்டொழித்தார்கள்.

ஆனால் அதே சமயத்தில் மடத்தின் வாயிலில் நுழைந்த கங்காதரையா, படதையாவைப் பேச்சுக்கு இழுத்தார். 'இதோபார், இப்போது நானே அந்தக் கேள்வி கேட்கிறேன். யார் முகத்தைக் காட்டமுடியாதபடி செய்வாய்? அது என்ன பதில் சொல்லு' என்று உரக்கக் கத்தினர்.

கங்காதரையாவின் வரவு எதிர்பாராதது. ஊரில் பாளாச் சாருக்கு அடுத்தபடி கௌரவமான ஸ்தானத்தில் இருப்பவர் அவர்தாம். அவரிடம் எல்லோருக்கும் பயபக்தி உண்டு. அப்படிப் பட்டவர் மடத்தில் நுழைந்ததைக் கண்டு, படதையாவின் வயிரம் போன்ற நெஞ்சுகூட நடுங்கியது. சாராயக் கிண்ணங் களெல்லாம் எங்கெங்கோ புகுந்து ஒளிந்துகொள்ளப் பார்த்தன. படதையாவின் பக்தர்கள் பலர், நடுங்கியவண்ணம் எழுந்து நின்றார்கள். கங்காதரையா தனியாக வரவில்லை. அவர் பின் வீரசைவ சமூகத்தின் பிரமுகர்கள் எல்லோரும் வந்திருந்தார்கள்.

படதையா அதற்குள் சமாளித்துக்கொண்டார். மேலே போட்டிருந்த காவித் துணியை ஒழுங்குபடுத்திக்கொண்டார். உட்கார்ந்த நிலையை மாற்றிக்கொண்டு, 'யாரது என்னைக் கேட்பது?' என்று ஒரு ஞானிக்குரிய அலட்சிய பாவத்தோடு கேட்டார்.

'நான் இந்த மடத்தின் சிஷ்யன். சந்நியாசியான குருவுக்கு நாஞவின் நிலத்தில் விதை விதைக்கும் அதிகாரம் எப்படி வந்துதூன்னு கேக்கறேன். நான் ஒருவன் மட்டுமா? மடத்துச் சீடர்கள் எல்லோரும் கேட்கிறார்கள். குருவின் வாயிலிருந்து என்ன வருகிறது என்பதைக் கேட்கத் தயாராக இருக்கிறோம். உள்ளே வாருங்கள் எல்லோரும்' என்று சொல்லிக் கங்காதரையா தம்முடன் வந்தவர்கள் எல்லோரையும் உள்ளே கூப்பிட்டார்.

பெரிய பெரிய குடியானவர்கள் எல்லாம் வந்து நின்று கொண்டிருந்தார்கள்.

படதையா ஒருமுறை எல்லோரையும் ஏற இறங்கப் பார்த்தார். அன்று சாவடியில் 'மடத்தை விட்டுப் போ' என்று சொன்ன முகங்களே இன்றும் தெரிந்தன. எதிரில் தம் போட்டி யாளரான கங்காதரையாவும் நின்றிருந்தார். எல்லோரும் சேர்ந்து வந்திருப்பதன் காரணம் அவருக்கு உடனே தெரிந்து விட்டது.

'வாங்க ஐயா! நடுராத்திரீலே என்னைத் தேடீட்டு வந்திருக் கீங்களே, அப்படி என்ன வேலே? அதைக் கொஞ்சம் சொல்லுங்க. வாங்க எல்லாம் மேலே வந்து குந்துங்க' என்று சொல்லி அர்த்த மற்ற சிரிப்பொன்று சிரித்தார்.

கடை வைத்திருக்கும் வீரையா முன்வந்து, 'இது பரம் பரையா ஞானிகள் வாழ்ந்துவந்த யடம். நீங்க சம்சாரம் நடத்தினு நாங்க எப்படிச் சும்மா இருக்க முடியும்? சம்சாரம் நடத்தற சந்நியாசிக்குப் பீடத்திலே குந்தற அதிகாரம் எப்படி வரும்? இது வெளியூர்க்காரங்களுக்குத் தெரிஞ்சா, அவங்க யாரும் எங்களோடே கொடுக்கல் வாங்கல் சம்பந்தமே வச்சுக்க மாட்டாங்க. அதைக் கேட்கத்தான் நாங்க இங்கெ வந்தோம். நீங்க சம்சாரம் நடத்தறதானு மடத்தை வுட்டூடணும். இல்லாட்டி சம்சாரத்தை வுட்டூடணும்' என்று நிர்த்தாட்சண்ய மாகச் சொன்னுன்.

ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் இந்த விவகாரத்தை எதிர்க்கத்தான்வேண்டியிருக்கும் என்பது படதையாவுக்குத் தெரியும். அதனுல் இதற்கெல்லாம் தயாராகவே அவர் சிமனுவை மடத்துக்கு அழைத்துக்கொண்டு வந்தார். ஆனுல் எதிர்பாராமல் இப்படி வந்து பாய்ந்தால் என்ன சொல்வது என்பதை அவர் யோசிக்கவில்லை ஆனுலும் தைரியமாகத்தான் இருந்தார். ஒரு நிமிஷம் யோசித்தார். டக்கென்று ஏதோ வழி தோன்றியிருக்கவேண்டும். உரக்கச் சிரித்துப் பக்கத்தில் இருந்த லிங்கப்பாவின் தோளைத் தட்டினுர். 'இது என்ன பைத்தியமா? மயக்கமா?' என்று கூடியிருந்தவர்கள் தடுமாறி னுர்கள். படதையாவின் ஆட்களும் திகைத்தார்கள்.

''கௌடரே! நான் இதைப்பற்றி உங்களுக்கு முன்பே சொல்லவில்லையா? 'ஏன் வீணுக எனக்குப் பழியைக் கொண்டு வறீங்க?'ன்னு கேட்டேன். அப்ப நீங்க என்ன சொன்னீங்க? 'நான் மணியக்காரன். ஊர்லே நான் என்ன செய்தாலும் நடக்கும்'னு சொன்னீங்களா, இல்லையா? இப்பொ பதில்

சொல்லுங்க. இப்ப வந்திருக்கற சிஷ்யர்கள் எல்லாம் மடத்தின் உயிர் போன்றவங்க. 'சிமணுவைக் கூட்டியாந்தது நீங்க'ன்னு நான் சொன்னாலும் இவங்க நம்பமாட்டாங்க. உண்மையாக என்ன நடந்ததோ அதை நீங்களே சொல்லீடுங்க' என்று சிரித்துக்கொண்டே சொன்னார் படதையா.

லிங்கப்பா இந்தப் பேச்சைக் கேட்டுத் திடுக்கிட்டான். என்ன செய்வதென்று புரியாமல் அலங்கமலங்க விழித்தான். அதே சமயத்தில் தற்செயலாகச் சமையல் அறை வாசலில் தெரிந்தும் தெரியாமலும் நின்றுகொண்டிருந்த சிமணு, அவன் கண்ணில் பட்டாள். அவள் மடத்திலேயே இருந்தாலும் இதுவரையில் அவளைப் பார்த்ததில்லை. குழந்தை அழுதபோ தெல்லாம் அங்கும் இங்கும் பார்த்துவிட்டுச் சிமணுவைப் பார்க்க முடியாமல் ஏமாந்தது உண்டு. பொதுவாகப் பெண் களைப் பார்க்கவேண்டும் என்ற ஆசை அவனிடம் இருந்தது. முக்கியமாகப் படதையாவைப் போன்ற சந்நியாசி வெறிபிடித்து வரப்போகும் ஆபத்தையும் லட்சியம் செய்யாமல் அவளை அழைத்துவரத் துணியும்படி தூண்டிய அவளுடைய அழகைப் பார்க்கவேண்டும் என்று அவனுக்கும் ஆவல் இருந்தது. இப் பொழுது அந்தக் கனவு நனவாகியது. லிங்கப்பாவின் மனத்தில், சுருண்டு படுத்த பாம்பைப்போல் அடங்கியிருந்த ஆசை இப்போது தலைதூக்கிப் படத்தை விரித்தது.

லிங்கப்பாவின் மயக்கத்தைக் கண்ட படதையா, மறுபடி ஒருமுறை எச்சரித்தார். 'கௌடரே! சொல்ல வேண்டியதைச் சுருக்கச் சொல்லிவிடுங்க. இந்த ஜனங்க என்னைப்பத்தித் தவருக நெனச்சிகிட்டு வந்திருக்காங்க. இதிலே ஒங்க தவறு இருக்கற தாக எனக்குத் தோணலே. சிறிய வயசு. அதோடு ஊர் மணியக் காரர். சிமணு மாதிரிப் பெண்களைக் கொணர்ந்து வச்சுகிட்ட உங்களுக்குப் பழி ஒண்ணும் வராது. அதுக்குப் பதில் என்னைத் தான் சொல்லுவாங்க. மடத்துப் பெயருக்கு வந்த இந்த அபவாதத்தைத் தொடச்சு எறியணும்' என்று லிங்கப்பன் சொல்லவேண்டிய கட்டுக் கதைக்குத் தாமே உயிர்கொடுத்துப் பேசினர்.

லிங்கப்பாவுக்கு உடம்பெல்லாம் வேர்த்தது. போட்டுக் கொண்டிருந்த சட்டை நனைந்து ஜில்லென்றிருந்ததால் உடம்பு நடுங்கியது. படதையாவின் முகத்தைப் பார்த்ததும் தைரியம் வந்ததோ? சிமணுவின் அழகுதான் துணிவை உண்டாக்கியதோ? தெரியவில்லை! எப்படியோ படதையா சொன்னவற்றை எழுத்துக்கு எழுத்து அப்படியே ஊரார்முன் ஒப்புக்கொண்டான்.

யாருக்கோ பொய்யான மகன் என்று சொல்லிக்கொண்டு வந்ததில் பிறன்சொத்து அவன் மடியில் விழுந்தது. இப்பொழுது யாருக்கோ பொய்க் கணவன் ஆகி ஒரு பெண்ணை அடைய வேண்டி இருந்தது. லிங்கப்பாவுக்கு அப்பொழுதும் பயம், இப்பொழுதும் பயம்தான். ஆனால் பலனை மறுக்கும் தைரியமோ பற்றின்மையோ அவனிடம் இல்லை. அதனால் ஒப்புக்கொண்டான். கூடவே ஒரு விஷயமும் சொன்னான். நாளைக்குக் கௌடர் வீட்டில் தனக்குப் பங்கு கிடைத்தால் அங்கேயேபோய் இருப்பதாகவும் அவன் சொன்னான்.

வந்தவர்களுக்குப் பேச வாய் இல்லை. ஆத்திரத்துடன் அடிக்கத் தூக்கிய கையை யாரோ தடுத்ததுபோல் ஆயிற்று அவர்கள் நிலை. ஆனாலும் யாரோ ஒருவர் பேசினார்: 'அதுசரி சாமியாரே! குழந்தையின் தகப்பன் என்று உங்க பேரைத்தானே பதிஞ்சிருக்காங்களாம்'.

'நான் இல்லேன்னு சொல்லலையே. சர்க்கார் ரிஜிஸ்தரைக் கையில் வைத்திருப்பவங்க நெனச்சதைச் செய்வாங்க. பாபு சாஹேபின் மாமனாரே மணியக்காரன். தன் மாப்பிள்ளையின் பேரையே அவன் பதிய முடியுமா? தன் மருமகன் மரியாதைப் பட்டவன்னு காமிக்கறதுக்காக அந்தப் பாபச் சுமையை ஒரு சந்நியாசிமேல் சுமத்திவிட்டான் தீந்துபோச்சு' என்று வணக்கம் சொன்னார் படதையா.

படதையாவின் பேச்சை அங்கே வந்திருந்த கௌரவப்பட்ட மனிதர்கள் யாரும் நம்பவில்லை. ஆனால் லட்சியம் இல்லாமல் பொய் பேசும் மனிதனிடம் எப்படித் தர்க்கம் செய்வது? செய்து தான் என்ன பயன்? 'இப்படிப்பட்ட இடத்துக்கு வந்தோம் அல்லவா?' என்று அவர்களுக்குத் தோன்றியது. கங்காதரையாவுக்கு ஆச்சார் சொன்னது நினைவுக்கு வந்தது. படதையாவின் ஈனச்செயல் இவ்வளவு தூரம் போகும் என்று அவருக்குத் தோன்றவில்லை. இப்போது கண்கூடாகத் தெரிந்துவிட்டது. இனிமேல் அங்கே நிற்பதால் அர்த்தமில்லை என்று தெரிந்து கொண்டு அவர்கள் புறப்பட்டார்கள். அப்போது படதையா அவர்களைத் தடுத்து, 'இப்போது இன்னும் ஒரு செய்தியை ஒங்க காதிலே போடறேன். நாளைக்கு லிங்கப்ப கௌடர், சிமணவின் நிலத்தைச் சொந்தப்படுத்திக்கொள்ளப் போகிறார். அவருக்குத் துணையாக நானும் போனாலும் போவேன். அதையும் என்னோட தந்திரம்னு நெனச்சுக்காதிங்க. குடியானவர்கள் மணியக்காரருக்கு உதவி செய்யறதுதான் நியாயம்' என்று தாம் செய்யப்போகும் வேலையினால் வரவிருந்த அபவாதத்தையும் விலக்கிக்கொண்டார்.

எல்லோரும் மறுபேச்சுப் பேசாமல் போய்விட்டார்கள். படதையாவின் சீடர் கூட்டமும் கலைந்தது.

அன்று இரவு லிங்கப்பாவுக்குத் தூக்கமே வரவில்லை. தன் அதிருஷ்டத்தை நினைத்துத் தானே வியந்தான். அஜராணிக் குறும்பர் குப்பத்தில் வளர்ந்த அவனால் இந்தச் சுகத்தைப்பற்றிக் கற்பனைகூடச் செய்திருக்க முடியாது. ஆனால் இப்பொழுது கற்பக மரத்தின் நிழலிலேயே அவன் உட்கார்ந்திருந்தான். வெளிப்பகட்டுப்பற்றிய நினைவே அவன் நெஞ்சில் ஒட்டவில்லை. பாதள்ளி மணியக்காரர் பதவி அவனுடைய கற்பனையையும் மீறி உயர்வாக இருந்தது. அந்தப் பதவிக்கு ஏற்ற தகுதி அவனுக்கு இல்லை. அதனால் பயந்தான். படதையாவின் நட்பு அவனை வைரக்கவசமாகக் காத்தது. அவருடைய ஓயாத முயற்சியோ தன் அதிர்ஷ்டம் பலிக்கும் காலம் வந்ததாலோ மணியக்காரர் வேலை அவனுக்குக் கிடைத்தது. தனக்கு அதை நிர்வகிக்கும் தகுதி இல்லாவிட்டாலும் கிடைத்தமட்டும் லாபம் என்று இருந்தான்.

அடுத்தபடி சிமனு. படதையாவின் எதிரில் எவ்வளவு தெரிந்துகொள்ள முடியுமோ அவ்வளவுதான் அவளைப்பற்றிய அறிமுகம் இருந்தது. 'அவள் நடத்தைகெட்டவள்' என்ற வரலாறே அவன் காமத்தைக் கிளப்பியது. இன்று கண்ட அவளுடைய அழகு அவனுடைய தகுதிக்கு மீறியதாகவே இருந்தது. படதையாவின் தந்திரமே அவளை அவனுக்குச் சொந்தமாக்கியது. லிங்கப்பா, தன் அதிர்ஷ்டத்தைத் தானே புகழ்ந்துகொண்டான். தான் ஆசைப்படாமலேயே இத்தனை செல்வங்களும் சொந்தமாவதற்குத் தன்னுடைய தகுதி உயர்ந்ததாக இருக்கவேண்டும் என்று நினைத்தான். சிமனுவின் அழகு தீக்கொழுந்துபோல் அவனுடைய நெஞ்சைச் சுடத் தொடங்கியது. அந்த ஆசையால் தன்னுடைய தாழ்ந்த நிலையையும் உயர்த்திப் பெருமைப்பட்டுக்கொண்டான். சற்றுமுன் படதையா நாலுபேர் எதிரில் சொன்ன பேச்சையே கூடிய சீக்கிரத்தில் உறுதிப்படுத்திவிடவேண்டும் என்று சங்கல்பம் செய்துகொண்டான்.

ஆனால் இந்த வெளிப்பகட்டுகள் எல்லாம் அவனுடைய பண்புக்குச் சுமையாக இருந்தன. இவ்வளவு மகிழ்ச்சியிலும் அவனுடைய மனம் வருந்திக்கொண்டிருந்தது. அந்த வருத்தத்தின் காரணம் புரிந்திருந்தால் அவன் மிக்க தகுதி உள்ளவனாக இருந்திருக்கவேண்டும்.

# 39

மறுநாள் நாகசதுர்த்தி. ஆவணி மாதம் ஆனதால் செவ்வானத்து ஒளி இல்லாமலேயே பொழுது விடிந்தது. முதல் நாள் சிறிது மழை பெய்ததால் குளிர்காற்று வீசிக்கொண்டிருந்தது. தினந்தோறும் அருணோதயகாலத்தில் இருக்கும் உத்ஸாகம் இன்று அந்த ஒளியில் இல்லை. சாம்பல்நிறமான ஒளி அலுப்போடு எங்கும் பரவியது. கார்மேகங்கள் வானமெங்கும் நிரம்பி இருந்தன. சூழ்நிலை, காலைப்பொழுது தனியாக உட்கார்ந்து அழுவதுபோல் தோன்றியது.

கோழி கூவியது. யந்திரம் சுற்றும் ஓசையுடன் பாட்டின் ஒலியும் கேட்கத் தொடங்கியது. அன்று நாகசதுர்த்தி ஆனதால் பெண்களுக்கு அவசரமான வேலைகள் இருந்தன. மாமியார் வீட்டிலேயே பிறந்த வீட்டின் நினைவும் பிறந்தெழும் நாள் அது. சூழ்நிலையில் பண்டிகைக் களை கட்டிவிட்டது.

படதையாவின் மடத்தில் பண்டிகைக் கொண்டாட்டத்துக்கு இடம் இல்லை. விடியற்காலம் வரையில் தூக்கம் இல்லாததால் லிங்கப்பா கண்களில் எரிச்சலுடன் காலைப்பொழுதைக் கண்டான். மடத்தில் மங்கிய ஒளி, மெல்ல மெல்லப் பரவியது. சிமணுவின் நினைவு, நெஞ்சில் தீ வைத்ததுபோல் இருந்தது. அப்பொழுதுதான் விழித்துக்கொண்ட படதையா, மூலையில் படுத்துக்கொண்டிருந்த கரியனை உரக்கக்கத்தி எழுப்பிக்கொண்டிருந்தார். 'பெரிய வாரக்காரன்னு சொல்லிகிட்டிருந்தே! இன்னிக்கித்தான் வெதை வெதைக்கப் போவணும். நீ இன்னும் படுத்துக்கெடக்கறே. உன்னை எப்படித்தான் எழுப்பறது?' என்று கர்ஜித்தார்.

கரியன் கண்ணைத் திறந்து மறுபடியும் மூடிக்கொண்டான். பெரியதாக ஒரு கொட்டாவிவிட்டான். சோம்பல் முறித்து எழுந்திருந்தான். 'நேத்திக்குத் தீர்த்தம் கொஞ்சம் போதையை அதிகம் ஆக்கிட்டுதுங்க. தூக்கமே சரியா வல்லீங்க' என்று ஏதேதோ காரணம் சொன்னான்.

'ஆமாண்டா, இனிமேலயா வெதைவெதைக்கப் போறது? இத்தினி நேரத்துக்கு எருதுகளைத் தயாராக்குவாங்களா, படுக்கைலே படுத்துக்கெடப்பாங்களா?'ன்னு படதையா மறுபடியும் அதட்டினார். நொண்டிச்சாக்குச் சொல்வதில் கரியனுக்கு

ஈடு இணை இல்லை. 'சாமி நம்ம சொந்த நெலமா இருந்தா பொறப்பட்டிருக்கலாம். யாரோட நெலத்திலேயோ வெதைக் கறத்துக்கு இவ்வளவு அவசரம் எதுக்குங்க? சரி, வாங்க நான் பொறப்பட்டாச்சு' என்று சிரித்துக்கொண்டே சொன்னன்.

'வெதை வெதைக்க நான் எதுக்கு வரணும்? உங்களோடே லிங்கப்ப கௌடர் வருவார். அவர் முன்னல் நடப்பார். நீங்கள்ளாம் பின்னலேயே போய் வெதைச்சிட்டு வாங்க' என்ருர் படதையா.

லிங்கப்பாவுக்குப் படதையா தன் பொறுப்பைத் தட்டிக் கழிக்கிருர் என்று தோன்றியது. அதனல் எழுந்திருந்து வந்து, 'சாமி, எனக்குப் பஞ்சநிவாரணக் கடன் பட்டியல் போடற வேலே இருக்கு. என்னல் வர சரிப்படாது. நீங்களே போய் வெதைச்சிட்டு வந்திடுங்க' என்று சொல்லிவிட்டான்.

'சரி, மணியக்கார தஸ்தாவேஜு கைக்கு வந்திடுச்சு. புது உத்ஸாகத்தோடே வேலே செய்யத்தானே வேணும். செய்யுங்க. நாங்க போய் நெலத்தை வசமாக்கிகிட்டு வரோம்' என்று சொல்லிப் படதையா அவன் சொன்னதை ஒப்புக்கொண்டார்.

லிங்கப்பா, மறுபடியும் தன் படுக்கையில் உருண்டு, தலையை மூடிக்கொண்டான். தலையெல்லாம் சிமணவின் யோசனையே நிரம்பிக்கிடந்தது. 'என்ன செய்து அவளை வசப்படுத்திக் கொள்வது?' என்று திட்டம் போடத் தொடங்கினன். அப்படியே சிறிது தூக்கம் வந்தது. அஞ்சல் மல்லப்பன் வந்து கூப்பிட்டதால் விழிப்புக் கொடுத்தது. அப்பொழுது படதையா குளிக்கும் தடபுடலில் இருந்தார். லிங்கப்பாதான் எழுந்திருந்து வெளியே வரவேண்டியதாயிற்று.

'கணக்கப்பிள்ளை ஊருக்குப் பொறப்பட்டுகிட்டு இருக்காரு. பஞ்சப்படிக்குத் தகுந்தவங்க பேரைப் பட்டியல் போட்டிருக் காரும். அதை உங்ககிட்டக் குடுக்கணுமாம். உங்களைக் கை யோடே கூட்டியாரச் சொன்னருங்க' என்று மல்லப்பா விவரத்தை ஒப்பித்தான்.

'இதோ வருகிறேன்' என்று சொல்லியனுப்பிவிட்டு, லிங்கப்பா, புறப்படத் தயாரானன். படதையாவிடம் தான் புறப்படப்போவதாகச் சொன்னதும் அவர், 'இதோ பாருங்க, இந்தச் சாமராயன் போட்ட பட்டியலிலே என்னைக் கேக்காமெ கையெழுத்துப் போடாதீங்க. எனக்குக் காமிக் காமே பஞ்சப்படிப் பட்டியலையும் அனுப்பக் கூடாது' என்று முன்னெச்சரிக்கை கொடுத்தார்.

'இதை நீங்க சொல்லணுமா, என்னங்க?' என்று லிங்கப்பா உபசாரமாகச் சொல்லிவிட்டு வெளியே போனான். வழியெல்லாம் அவனை ஒரு கவலை அரித்தது. 'படதையா ஒவ்வொரு காரியத்துக்கும் குறுக்கே வருகிறாரே? எத்தனை நாளைக்கு இவர் கைப் பொம்மையாக இருப்பது? மணியக்காரனாகும் வரையில் அவருடைய பேச்சைக் கேட்டது போதாதா? இன்னும்கூட அவர் சொன்னதைக் கேக்கணும்னாக்க வெக்கக்கேடாகவல்லவா இருக்குது' என்று யோசித்தவண்ணம் லிங்கப்பா, சாமராவ் வீட்டுக்குப் போனான்.

சாமராவ் வீட்டில் வேறு யாரும் இல்லை. அவன் வாசல் கதவைப் பூட்டிக்கொண்டு புறப்பட்டான். அவனைக் கண்ட லிங்கப்பா, 'புறப்பட்டுட்டிங்களா!' என்று கேட்டு, வணக்கம் செய்தான்.

'வந்துவிட்டீர்கள். நல்லதாப்போச்சு' என்று சாமராவ் தன் ஜேபியிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்து, 'இதோ நான் பஞ்சப்படிக்குத் தக்கவர் என்று போட்ட ஆட்களின் பட்டியல். இன்னொன்று, பஞ்சநிவாரணக் கடன் கேட்டிருக்கும் குடியானவர்களுடைய பட்டியல். கையெழுத்துப்போட்டு அனுப்பிவிடுங்கள்' என்று அதை லிங்கப்பாவிடம் கொடுத்துவிட்டு அவசரமாகப் புறப்பட்டான். லிங்கப்பா அவனை நிறுத்தி முட்டாள்தனமாக, 'ஏன் கணக்கப்பிள்ளை, நான் ஒங்களைச் சந்திச்சிருக்காட்டி இந்தப் பட்டியலை யார்கிட்டக் குடுத்திருப்பீங்க?' என்று கேட்டான். சாமராவ் இந்தக் கேள்வியால் சலனம் அடையாமல், 'அதனால் என்ன? தாசில்தார் பேருக்கு விலாசம் எழுதித் தபாலில் போட்டு விடுவேன்' என்று சகஜமாகவே பதில் சொன்னான்.

'அப்படியானால் என் கையெழுத்து இல்லாமெயே பட்டியலை அனுப்பிச்சுட முடியுமா?' என்று லிங்கப்பா மறுபடியும் கேட்டான்.

சாமராவ் அவனுக்குப் புரியும்படி, 'இதொ பாருங்க கௌடரே! மணியக்காரர் கையெழுத்துப் போட்டு அனுப்பற காகிதங்கள் வேறே இருக்கு. ஆனால் இதுபோன்ற காகிதங்களை கணக்குப்பிள்ளை கையெழுத்துப்போட்டு அனுப்பினாலே போதும்' என்று சொன்னான்.

லிங்கப்பா விடவில்லை. 'நீங்க போட்ட பட்டியல் சரியா இல்லைன்னு வச்சுக்குங்க; அப்பொ என்ன செய்யறது?' என்று கேட்டான்.

'அதுக்கு நான்தான் ஜவாப்தாரி' என்றான் சாமராவ்.

'ம், சரிதான்; அப்படியானல் இதுலே என்னுடை பொறுப்பு ஒண்ணுமே இல்லெ. இதொ பாருங்க, இப்பவே உங்களுக்குச் சொல்லிட்டேன். எனக்குக் காமிக்காமெ என் கையெழுத்து வாங்காமெ நீங்க ஒண்ணும் செய்யவேண்டாம். இப்படிச் சொல்றேன்னு கோவிச்சுக்காதீங்க' என்ருன். லிங்கப்பாவின் குரலில் உணர்ச்சிவேகமும் பயமும் தொனித்தன.

'சாமராவுக்கு இதெல்லாம் வேடிக்கையாக இருந்தது. தன் தொழில் காரணமாக அவன் பல மணியக்காரர்களைப் பார்த்திருக்கிருன். ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாக இருந்தார்கள். லிங்கப்பா வேஞெரு மாதிரி அவ்வளவுதான். புதியதாக வந்த அதிகாரம் இயற்கையாக அவனிடம் இருந்த பணிவையே பாழாக்கிவிட்டது என்பதைப் புரிந்துகொண்டான் சாமராவ். முட்டாள்தனத்துடன் அதிகாரவெறியும் தலைக்கு ஏறிவிட்டது. அவனுடைய பண்பற்ற தன்மை ஒவ்வொரு கணமும் பளிச்சென்று தெரிந்தது. சாமராவ் அதைத் தெரிந்துகொண்டதாகக் காட்டிக்கொள்ளாமல் 'சே, சே, அதுக்கென்ன கோவம்? நீங்க பொறுப்பை ஏத்துக்கறேன்னு சொன்னப்பறம் கேள்விக்கு இடமே இல்லை. இன்றுமுதல் நீங்களே எல்லா வேலைகளையும் பார்த்துக்கொள்ளுங்கள்' என்று சொல்லி வணக்கம் தெரிவித்துப் புறப்பட்டான்.

கங்காதலைரயா முதல் நாளே சிவயோகி சுவாமிகளைச் சாமராவுடன் இந்துபுரத்துக்கு அனுப்ப முடிவு செய்தார். அவனுடன் மடத்துக்கு வந்திருந்த எல்லோரிடமும் இந்த விஷயத்தைத் தெரிவித்துவிட்டார். பாளாச்சாரின் பேச்சில் அவருக்கு அசைக்கமுடியாத நம்பிக்கை இருந்ததால் அவர் இந்த முடிவை மேற்கொண்டார். ஆனல் ஒரே மகனை வெகுதூரத்தில் இருக்கும் ஊருக்கு அனுப்புவதென்றுல் உயிரே போய்விடும்போல் இருந்தது. மடத்தின் கௌரவத்தைக் காப்பாற்றும் ஒரு காரணம் இல்லாவிட்டால் அவர் இதற்கு ஒப்புக்கொண்டிருக்க மாட்டார்.

'சிவயோகி சுவாமிகள் ஊரைவிட்டுப் போகிருர்' என்ற செய்தி அதற்குள் ஊர் எங்கும் பரவிவிட்டது. ஜனங்களுக் கெல்லாம் சிவயோகிகளிடம் அசைக்கமுடியாத நம்பிக்கை இருந்தது. அவருடைய மகிமையை யாரும் மறுக்கமாட்டார்கள். அவரை அலட்சியம் செய்பவர்களும் இருந்தார்கள். சமீபத்தில் ஒரு நாள், சிவயோகி சுவாமிகள் வழக்கம்போல் மதுகர பிட்சைக்குப் போயிருந்தபோது பாளராம் மார்வாடி அவருடைய ஜோல்நாப் பையைத் திருடிக்கொண்டான். மடத்துக்குப்

படையா திரும்பிவந்த பின்னும் 'சிவயோகி சுவாமிகள் மடத்தின் பெயரால் பிட்சை எடுக்கக் கூடாது' என்பது அவனுடைய தர்க்கம். இதைக் கேட்டவர்கள் மனம் வருந்தியது. துணிச்சல்காரர்கள் சிலர் மார்வாடியின் கடைக்குப்போய் அவனைத் திட்டிவிட்டு வந்தார்கள். ஊரில் இப்படித் தொல்லைகள் நேர்ந்ததால்தான் கங்காதரையா சிவயோகி சுவாமிகளை வெளியூருக்கு அனுப்பச் சம்மதித்தார். இந்தச் செய்தியும் ஊராருக்குத் தெரியும். அவர் ஊரைவிட்டுப் போவது ஊருக்கே கேடுகாலம் என்று அவர்கள் நினைத்தார்கள்.

சிவயோகி சுவாமிகளை வழியனுப்ப மக்கள் கூட்டம் கூட்டமாகப் போவதை லிங்கப்பா பார்த்தான். கூட்டத்தில் இருந்த அதிகப்பிரசங்கி ஒருவன் சும்மா இருக்கமுடியாமல், 'மணியக்காரர் பெரிய சாமியாரை வழியனுப்பவானல் போவார். நம் குழந்தைச் சாமியார் அவருக்குக் குரு இல்லைபோல் இருக்கிறது' என்று கிண்டலாக மற்றவர்களிடம் லிங்கப்பா காதில் விழும்படியாகவே சொன்னான். அந்தப் பேச்சு லிங்கப்பாவின் மனத்தை உறுத்திக்கொண்டே இருந்தது. ஊருக்குள் மணியக்காரனைப் 'படையாவின் வால்' என்று ஜனங்கள் நினைப்பதாக அவன் சந்தேகித்தான். உண்மையிலேயே அவன் ஊருக்குப் புதியவன் தான். சிவயோகி சுவாமிகளிடம் ஜனங்களுக்கு இவ்வளவு பக்தி இருக்கவேண்டுமானால் அவர் மிகவும் மகிமை உள்ளவராகத்தான் இருக்கவேண்டும் என்று தோன்றியது. அப்படியானல் 'தானும் மடத்துச் சிஷ்யன் என்று நடித்து ஜனங்களை ஏமாற்றச் சந்தர்ப்பம் கிடைத்திருக்கும்போது ஏன் விடவேண்டும்?' என்று நினைத்தான். 'அதிகமாகப் போனால் ஒரு நமஸ்காரம்தான் செலவாகும்' என்று நினைத்துத் தானும் ஆற்றுக்குப் புறப்பட்டான்.

ஆவணி மாத வெள்ளம் இரண்டு கரைகளையும் தொட்டுக்கொண்டு பெருகிக்கொண்டிருந்தது. சாமராவ் முன்னலேயே படகில் ஏறி உட்கார்ந்துகொண்டான். கரை ஓரத்தில் ஜனங்கள் வரிசை வரிசையாக நின்றிருந்தார்கள். சுவாமிகளை எதிர்பார்த்துப் படகோட்டிகள் காத்திருந்தார்கள். அப்பொழுது கங்காதரையா, மகன் கையைப் பிடித்துக்கொண்டு அங்கே வந்து சேர்ந்தார். அவரைத் தொடர்ந்து ஒரு பெரிய கூட்டம் வந்தது. உடம்பில் காவி அங்கி ஒன்று; தலைக்குச் சிறிய குல்லா; காலில் பாதக்குறடுகள்; இவற்றை அணிந்து வந்த சிவயோகி, சிவபெருமானுடைய இளமையை நினைவூட்டினர். பளிச்சென்ற விபூதி, சுடர்விடும் கண்களில் நிறைந்த இரக்கம், மலர்ந்த

புன்சிரிப்போடு கூடிய முகம், சாத்வீகத் தோற்றம்—இவற்றோடு சிவனே குழந்தை உருவத்தில் உலகத்தைக் காண வந்ததுபோல் அவருடைய தோற்றம் இருந்தது.

மக்கள் ஒவ்வொருவராக வந்து சுவாமிகளின் காலைத் தொட்டு வணங்கினார்கள். பெண்கள் விக்கி விக்கி அழலானார்கள். மற்றவர்கள் மௌனமாக இருந்தார்கள். நதியின் குறுக்களவிலும் அக்கரையிலும் கவிந்திருந்த மேகங்களைப்போல் சூழ்நிலையிலும் இறுக்கம் தெரிந்தது. அந்தச் சூழ்நிலையை மறக்கடிக்கும் மலர்ச்சியுடன் சுவாமிகள் எல்லோருடைய வணக்கத்தையும் ஏற்றுக் கொண்டிருந்தார். தான் மட்டும் பின்தங்கக்கூடாது என்று லிங்கப்பாவும் வணங்க முன்வந்தான். ஆனால் சுவாமிகள், அவன் தன் கால்களைத் தொட இடம் கொடுக்காமல் முன்நோக்கி நடந்தார். லிங்கப்பாவுக்கு இடி விழுந்ததுபோல் ஆயிற்று. 'சாமியாரே! கௌடர் காலில் விழ வந்திருக்காருங்க' என்று கூட்டத்திலிருந்த ஒருவன் உரக்கச் சொன்னான். சுவாமிகள் திரும்பிப் பார்த்து அதே முகமலர்ச்சியுடன், 'அவன் விழ வேண்டிய கால்கள் இங்கில்லை; மடத்தில் இருக்கின்றன' என்று சொல்லிப் படகில் ஏறிவிட்டார்.

படகு, கம்பீரமாக ஆற்றில் தண்ணீரைக் கிழித்துக்கொண்டு முன்னேறியது. படகில் சிவயோகிகள் புன்சிரிப்புடன் ஜனங்களைப் பார்த்தபடியே நின்றிருந்தார். தரையில் இருந்த எல்லோரும் கைகூப்பினார்கள். படகு மறையும் வரையில்—சிவயோகிகளின் ஒளிமயமான உருவம் மின்னல் கீற்றுப்போல் காணும் வரையில்—ஜனங்கள் வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருந்தார்கள். பாதள்ளியின் புண்ணியமே மிதந்து போவதுபோல் சிலருக்குத் தோன்றியது. வேறு சிலர் மேல்துண்டால் கண்ணைத் துடைத்துக்கொண்டு, 'என்ன செய்வது? கலிகாலம்! இப்படிப் பட்ட சுவாமிகளை ஊரில் வைத்துக்கொள்ள நாம் கொடுத்து வைக்கவில்லை' என்று பெருமூச்செறிந்தார்கள்.

ஜனங்கள் ஒவ்வொருவராக வீட்டுக்குத் திரும்பினார்கள். லிங்கப்பாவும் திரும்பினான். ஆனால் அவன் மனத்தைக் கவலைகள் சூழ்ந்துகொண்டன. இளமையிலிருந்தே முட்டாள்களுடன் சேர்ந்தே வாழ்ந்த அவனுக்கு மதம், தெய்வம் என்றால் பயம் மட்டும் இருந்தது. இந்தப் புதிய ஊரில் தன் வாழ்வு வேர் ஊன்றவேண்டிய காலத்தில் நடந்த இந்தச் சம்பவம் ஏதோ கெட்ட சகுனமாகவே தோன்றியது. சங்கரப்ப கௌடரின் ஆஸ்திக்குத் தான் வாரிசானது; அவருடைய மகன் என்று பொய் சொன்னது; சிமணாவைப்பற்றி மனத்தில் ஆசைகொண்டது;

இவை எல்லாம் பாபம் என்று அவனுக்கு லேசாகப் புரியத் தொடங்கியது. 'சுவாமிகள் தன்னை ஒதுக்கியதற்கு இவைதாம் காரணமாக இருக்கலாமோ?' என்று தெரிந்துகொள்ளும் ஆவலும் ஏற்பட்டது.

'அவரிடம் அப்படிப்பட்ட குணம் எதைக் கண்டீர்கள்?' என்று அங்கே கூடியிருந்தவர்களைக் கேட்டான் லிங்கப்பா. அவர்களுக்கும் சொல்லவேண்டும் என்ற ஆவல் இருந்தது. சிவயோகி சுவாமிகளை ஊருக்கு அனுப்பும் இந்தச் சமயத்தில் அவர்கள் எல்லோருக்கும் ஒரு தெய்வீக உத்ஸாகம் இருந்தது. வெளியூரான் ஒருவன் அதைப்பற்றிக் கேட்டால் சும்மா இருப்பார்களா? சிவயோகிகளின் மகிமை ஊருக்கே பெருமை தருவதாக இருந்தது. பாதள்ளியில் யாரைக் கேட்டாலும் அவரைப்பற்றிக் கதை கதையாகச் சொல்வார்கள். இப்பொழுதும் அதுவேதான் நடந்தது.

''அவரை யாருன்னு நெனச்சீங்க, ஐயா! சதாசிவயோகின்னு நம்ம பெரிய சாமியார் இருந்தாரே, அவரே அவதாரம் எடுத்து வந்திருக்காரு. 'பாதள்ளியைவிட்டு நான் எங்கும் போக மாட்டேன்' என்று அவர் முன்பே சொல்லியிருந்தாருங்க'' என்று பயபக்தியோடு ஒரு பக்தன் சொன்னான். மற்றவர்களுக்கும் ஆவேசம் நிறைந்தது. ஒவ்வொருவர் ஒவ்வொரு கதையைச் சொன்னார்கள். அவர்கள் சொல்லியவை எல்லாம் பாதள்ளிக் குரு பரம்பரையின் வரலாறுதான். லிங்கப்பா, ஆச்சரியத்துடன் கண்களை அகல விரித்தபடி கேட்டுக்கொண்டிருந்தான். அவர்கள் சொன்னார்கள் :

''படதையாவுக்கு முன்னால் மடத்தின் சாமியாராக இருந்த சதாசிவயோகிகள் ஐக்கியமாகும் காலம் வந்தது. அவருடைய பக்தர்கள் எல்லோரும் அழுதார்கள். அப்பொழுது அவரே இப்படித் திருவாய் மலர்ந்தாராம் : 'ஏனப்பா அழறீங்க? நான் இந்த ஒடம்பைவிட்டாலும் மறுபடியும் பொறந்து உங்களுக்குச் சேவை செய்வேன். நான் பொறந்திருக்கற அடையாளம் ஒன்னு சொல்றேன். நம்ம மடத்திலே இருக்கிற பசு, காளைக்கன்னு போடும். எந்தக் குழந்தைக்குப் பசு தன் மடியில் பால் கொடுக்கிறதோ அது நான்னு தெரிஞ்சுக்குங்க!' இப்படி அவர் சொன்னது எல்லாப் பக்தர்களுக்கும் நினைவு இருந்தது. சிவயோகி சுவாமிகள் பிறந்தபோது மடத்துப் பசு காளைக்கன்றை ஈன்றது. ஆனால் அந்தக் கன்று பிறந்த உடனேயே இறந்துவிட்டது. அதே சமயத்தில் சிவயோகிகளின் தாயும் கைலாசம் சென்றாள். பால் இல்லாமல் குழந்தை அழுவதைக்கேட்டுப் பொறுக்கமுடியாமல் கங்காதரையா குழந்தையைப் பசுவிடம் கொண்டுபோய் அதன்

வாயைப் பசுவின் மடியில் வைத்தார். பால் சுரந்ததைக் கண்டு பசுவும் பேசாமல் நின்றது. குழந்தையைக் கண்டவுடன் பசு அதன் நெற்றியை நக்கிக்கொடுத்துப் பாலும் கொடுத்ததாம். குழந்தை அழுகையை நிறுத்திப் பாலைக் குடித்துவிட்டு விளையாடியதாம். கன்றை இழந்த பசுவும் கவலை நீங்கி இருந்ததாம்'' என்று சொன்னார்கள்.

லிங்கப்பாவுக்குச் சிவயோகிகளின் மகிமையில் நம்பிக்கை பிறந்தது. இந்தக் கதை அவன் மனத்தில் மறக்கமுடியாத பக்தியை உண்டாக்கியது. 'இதுமட்டும் இல்லீங்க. இன்னும் இருக்குது கேளுங்க. சாமியாரின் மகிமை இவ்வளவுதான்னு பேச்சாலே சொல்லமுடியாதுங்க!' என்று மற்றொருவன் வேறொரு கதையைத் தொடங்கினான். லிங்கப்பா அதையும் கேட்கத் தயாரானான்.

'சிவயோகி சுவாமிகளுக்குப் பேச்சு வந்தவுடன் அவர் பேச்சில் எதிர்கால சூசகங்கள் நிறைய இருந்தன. அவர் சொன்ன வார்த்தைகள் எல்லாம் அப்படியே பெரிய சுவாமிகளின் பேச்சுகளாகவே இருந்தன. புண்ணிய பரம்பரையாகத் தொடர்ந்து வந்திருக்கும்போல் இருக்கிறது. அவருடைய பேச்சுகளுக்கு அர்த்தம் கண்டுபிடிக்க முயன்று ஆனைப்பட்டவங்கள்ளாம் தோல்வி அடைஞ்சிருக்காங்க. இந்த ஞானச் சுடரைக் கங்காதரையா பத்திரமாகக் காப்பாற்றி வருரு.'

ஒரு சமயம் இப்படி நடந்தது: ''சங்கரப்ப கௌடர் சாவதற்குச் சில நாட்கள் முன்பு இருக்கலாம். காலரா அப்பத்தான் தொடங்கியிருந்தது. சேரியிலே பாள்யா ஒருவன்தான் செத்துப்போயிருந்தான். முற்றத்தில் விளையாடிக்கொண்டிருந்த சிவயோகிகள், திடீரென்று ஏதோ நினைவு வந்ததுபோல், 'வளர்ந்தது அழியும்; அழிந்தது வளரும். மற்ற எல்லாம் வெள்ளத்தோடே போயிடும்'னு சொன்னார். ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லாத இந்த வார்த்தைகளைக் கேட்டு அங்கே இருந்தவர்கள் ஆச்சரியம் அடைந்தார்கள். கங்காதரையாவுக்கும் இதன் பொருள் புரியவில்லை. ஆனால் அவை ஜனங்களின் மனத்தைவிட்டு அகலவில்லை. மோடி வைத்ததுபோல் கேட்டவர்களை எல்லாம் அதைப்பற்றிய கவலை பற்றிக்கொண்டது. அப்பொழுது யாரோ பாளாச்சாரிடம் போய் இந்தப் பேச்சுக்கு என்ன அர்த்தம் என்று கேட்டார்கள். அவரும் வெகுநேரம் யோசித்துப் பார்த்தார். அவர் சதாசிவயோகிகளோடு பழகியவர். ஆதலால் அவருக்கு ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது. அவர், 'ஆம், நினைவுக்கு வருகிறது. இது பெரிய சுவாமிகள் சொன்ன வாக்கியமேதான்'. ஒருநாள் மடத்தில் புராணம்

வாசித்து முடித்திருந்தார்கள். அப்பொழுது கண்ணை மூடிக் கொண்டிருந்தவர் சட்டென்று கண்ணைத் திறந்து இப்படிச் சொன்னார்: 'ஊரில் வளர்ந்தவர்கள் போய்விடுவார்கள். சொத்தைச்சோழி மதிப்பும் அற்றவன் பெரிய மனிதனாக அட்டஹாஸம் செய்வான். அவனுடைய அக்கிரமத்தால் ஊரை வெள்ளம் அடித்துக்கொண்டு போகும்' என்று சொன்னார். அப்பொழுதுதான் ஜாகீர்தார் ராஜோஜிராவ் குதிரைமேல் இருந்து விழுந்து செத்துப்போனான். இன்னும் என்ன நடக்கப் போகிறதோ? பார்க்கவேண்டும் என்றார். அப்புறம் சில நாட்களுக்கெல்லாம் சங்கரப்ப கௌடர் காலராவினால் இறந்து விட்டார். அதில் ஒரு வாக்கியம் ராஜோஜிராவ், சங்கரப்ப கௌடர் இவர்கள் மரணத்தை முன் கூட்டியே தெரிவித்து விட்டது.

''அவர் பேச்சைத் தெய்வம் போன்றவர்கள்கூடச் சும்மா நம்பிவிடவில்லை. 'அவர் யார் வீட்டில் சாப்பிட நுழைகிறாரோ அவர் வீட்டில் பிறகு என்றும் சாப்பாட்டுக்குத் தட்டே இருப்பதில்லை' என்று ஒருவன் சொன்னான். கூப்பிட்டால்கூட அவர் யார் வீட்டுக்கும் போகமாட்டார். யாரையாவது, 'காசு கொடு' என்று கைநீட்டிக் கேட்டால் கொடுத்தவன் வீட்டில் பணம் குறையாமல் வளரும் என்று எல்லோரும் நம்புகிறார்கள். இல்லை என்றவன் வீட்டில் எல்லாமே இல்லை என்று ஆகிவிடும். ஒரு சமயம் இவர் பாபு சாஹேபிடம் பணம் கேட்டார். அவன் இல்லை என்று சொன்னான். நாளை செத்தது முதல் அவன் கைப்பணம் தண்ணீராகக் கரைந்து ஓடியது. கடைசியில் உடுத்த உடையுடன் அவன் ஊரைவிட்டுப் போனபோது கைச் செலவுக்கு நாலணாக்கூட அவன் கையில் இல்லை. ஒரு செய்கையால் ஒரு மனிதனுடைய அதிர்ஷ்டத்தையே மாற்ற வல்ல சக்தி அவருக்கு இருக்கிறது.''

''இவ்வளவு மகிமை உள்ளவங்க எங்கப்பன். இப்ப மூணு நாளாப் பாருங்க. 'உடம்பெல்லாம் ஒரே எரிச்சல்' என்று சொல்லிக்கொண்டே இருந்தார்'' என்று மடத்தின்மேல் அன்புள்ள சீடன் ஒருவன் சுவாமிகள் ஊரைவிட்டுப் போக நேர்ந்த காரணத்தையும் சொன்னான். 'மூன்று நாட்களாக உடம்பெல்லாம் எரிகிறது என்று ஓயாமல் சொல்லிக்கொண்டிருந்தது உண்மைதான். அதற்குக் காரணம் என்ன என்பது யாருக்கும் தெரியவில்லை. மடத்துக்குச் சிமணா வந்ததிலிருந்து இந்த எரிச்சல் தொடங்கியது. அதனால்தான் பலர் படதையாவிடம் சிமணாவின் விஷயத்தைப்பற்றிப் பேச வந்தார்கள்; அவளை அங்கே வைத்துக்கொள்ளக்கூடாது என்றார்கள். பயன்பட

வில்லை. சிவயோகிகள் ஊரைவிட்டே போய்விட விரும்பினர். அன்றைக்கு எவ்வளவு கேட்டுக்கொண்டும் படதையா ஒப்புக் கொள்ளவில்லை. நீங்களும்தான் குறுக்கே வந்தீர்கள். சின்னச் சாமியார் ஒரே குறியாக இருந்தபடியால் இப்ப அவரை அனுப்பிச்சிட்டோம்' என்று கூட்டத்தில் இருந்த வயதான ஒருவன் சொல்லி முடித்தான்.

இது ஜனங்கள் சொல்லிய கதை. அந்தக் கதையின் ஒவ்வோர் எழுத்தையும் அவர்கள் நம்பினர்கள்; சிரத்தை வைத்தார்கள். பலநூறு வருஷங்களாகத் தொடர்ந்துவந்த அந்தப் பரம்பரை அவர்களுக்கு அவ்வளவு நம்பிக்கையைக் கொடுத்திருந்தது. யாரும் அது உண்மையா பொய்யா என்று பரீட்சிக்க விரும்பவில்லை. பரீட்சிக்க அவசியமும் இருக்கவில்லை. அவர்களுடைய மத நம்பிக்கைக்கு அதுவே போதுமானதாக இருந்தது. சதாசிவயோகிகளைக் கண்டு அவருடைய மகிமைகளைக் கண்கூடாக அறிந்தவர்கள் இன்னும் பாதள்ளியில் இருந்தார்கள். அவரே தாம் அவதரிக்கப்போவதாகச் சொன்னதை நம்பாமல் இருப்பார்களா? சதானந்த சிவயோகிகளின் நல்லொழுக்கம் துடைத்து வைத்த கண்ணாடியைப்போல் பளிச் சென்றிருந்தது. அவருடைய அநுபவம் மட்டும் ரகசியமாகவே இருந்தது. அநுபவம் ரகசியமாகத்தானே இருக்கும். அவருடைய அவதாரமாக வந்திருக்கும் சிவயோகிகளிடமும் ஜனங்கள் புனிதமான மதிப்பு வைத்திருந்தார்கள். அவர் ஊரைவிட்டுப் போனது எல்லோருக்கும் அபசகுனமாகவே தோன்றியது. சீடர்களின் நெஞ்சில் சூடு போட்டதுபோல் இருந்தது.

ஜனங்கள் இந்தக் கதையைச் சொல்லி முடித்தார்கள். படகு மறைந்துவிட்டது. அக்கரையில் சுவாமிகளை வண்டியில் உட்காரவைத்துச் சாமராவ் நடந்து சென்றான். அதைப் பார்த்த ஜனங்கள் சோர்ந்த மனத்துடன் வீடு திரும்பினர்கள். சுவாமிகள் ஊரைவிட்டுப் போய்விட்டாலும் அவருடைய பெருமை சுற்றிலும் பரவியது. மழைக்காலத்தின் உத்ஸாகமற்ற சூழ்நிலை இந்த மகிமையை மேலும் வளர்த்தது.

லிங்கப்பா சோர்ந்த மனத்துடன் திரும்பினன். அவன் கேள்விப்பட்ட கதை தெளிவற்ற பல யோசனைகளை அவன் மனத்தில் உண்டாக்கியது. தன்னுடைய அதிர்ஷ்டம் பலன் கொடுக்கும் காலம் இது. பாதள்ளியில் இனிமேல்தான் அவன் மணியக்காரனைப் பிரகாசிக்கவேண்டும். சிமணைவைப்போன்ற அழகி தன் மனைவி ஆகவேண்டும். இதுவரையில் அஞ்ஞாதவாசத்தில் இருந்தவன் இப்போது மதிப்புமிக்க மனிதன் ஆகி நடமாடவேண்டும். இதற்கெல்லாம் பெரியவர்கள் ஆசீர்வாதம்

இருந்தால் நல்லதல்லவா? இதை நினைத்துத்தான் சுவாமிகளை வணங்கப்போனான். ஆனால் அவனுக்குக் கிடைத்தது என்ன? 'அவன் விழவேண்டிய கால் இங்கே இல்லை. மடத்தில் இருக்கு' என்றார் சுவாமிகள். அவருடைய பேச்சுக்கு மந்திரசக்தி உண்டு என்று பலர் சொல்லியிருக்கிறார்கள். அதற்கு உதாரணமும் காட்டியிருக்கிறார்கள்.

லிங்கப்பாவுக்கு அதன் பொருள் புரியவில்லை. குழப்பமாக இருந்தது. தான் விழவேண்டிய கால்கள் மடத்தில் இருக்கின்றன என்றால் என்ன பொருள்? படதையாவின் கால்களா? சிமணாவின் கால்களா? இதுவரையிலும் படதையாவின் கால்களில் விழுந்து ஆகிவிட்டது. இனிமேல் ஒருவேளை சிமணாவின் கால்களே தனக்குக் கதியாக இருக்கலாம். அப்படியானால் அதுவும் ஆசீர்வாதமாக இருக்குமோ? லிங்கப்பா தன் அஞ்ஞானத்துக்கு ஆசையாக ஜீவனை நிரப்பிக் குருவின் பேச்சுக்குப் பொருள் கொண்டான்.

இப்படி யோசித்துக்கொண்டே லிங்கப்பா மடத்துக்குப் போனான். பொழுதுவிடிந்து நாலுமணி நேரம் ஆகிவிட்டது. படதையா நாணாவின் நிலத்தை வசப்படுத்திக்கொள்வதற்காகத் தம் பரிவாரங்களுடன் புறப்படத் தயாராக இருந்தார். கொம்பு ஊதும் சிங்கன் சுயம்சேவகனுகக் கொம்பைக் கச்சத்தில் இடுக்கிக் கொண்டு மடத்தின்முன் உட்கார்ந்திருந்தான்.

## 40

லிங்கப்பா மடத்துக்கு வந்ததைக் கண்டு அங்கிருந்த எல்லோரும் எழுந்திருந்து வணக்கம் செய்தார்கள். படதையா லிங்கப்பாவைக் கூப்பிட்டுத் தம் பக்கத்தில் உட்காரவைத்துக் கொண்டார். அப்போது நடந்த சர்ச்சை மிகவும் முக்கியமானது. மணியக்காரருடைய தானியக் குழிகளைப் பலவந்தமாகத் திறந்து சோளம் பங்கிடுவதைப்பற்றி யோசித்தார்கள்.

லிங்கப்பா அதற்குத் தன் அபிப்பிராயத்தைச் சொல்லி விட்டான்: 'கௌடருடைய தானியத்தைப் பகலிலேயே கொள்ளை அடித்தால் நாளைக்குப் போலீஸ் மணியமாகிய அவனே சர்க்காருக்குப் புகார் கொடுக்கவேண்டி இருக்கும். போலீஸார் வந்து, கௌடர் மனைவியின் சொற்படி குற்றவாளிகளைப் பிடிக்கும்

போது லிங்கப்பாவே அவர்களுக்கு உதவி செய்யவேண்டும். என்ன ஆனாலும் தான் இந்த வம்பில் மாட்டிக்கொள்ளக்கூடாது. எல்லோருக்கும் எளிதில் தானியம் கிடைக்கவேண்டும். இதற்கு வழி கண்டுபிடிக்கவேண்டும்' என்று லிங்கப்பா சொன்னான்.

படைதையா அதற்கு ஒரு திட்டம் சொன்னார்: 'கௌடருடைய தானியக் குழிகள் மொத்தம் ஆறு. அவைகளுள் மூன்றைக் காலி செய்து தானியம் பங்கிட்டது ஊரில் எல்லோருக்கும் தெரியும். மற்ற மூன்று குழிகளில் தானியம் இருக்கும் செய்தி கௌடர் மனைவிக்கும் சில ஆட்களுக்கு மட்டும்தான் தெரியும். இரவில் கொள்ளை அடித்தால் கௌடர் மனைவி புகார் கொடுப்பதே கஷ்டம். அப்படிக் கொடுத்தாலும் இன்னார்தான் கொள்ளையடித்தார்கள் என்று சாட்சி சொல்ல ஜனங்கள் கிடைக்கமாட்டார்கள். ஒருவேளை சாட்சி கிடைத்துப் புகார் கொடுத்தாலும் தன் பங்கு தானியத்தைத்தான் ஏழைகளுக்குப் பங்கிட்டிருக்கிறேன் என்று லிங்கப்பா சொல்லவேண்டும். போலீஸாருக்கு லஞ்சம் கொடுக்க ஒரு கிராக்கியைத் தயார் செய்யவேண்டும். ஏழெட்டு மூட்டை சோளத்தைப் பாளராமின் கடைக்கு அனுப்பிவிட்டால் போதும். போலீஸார் வந்தால் தப்பித்துக்கொள்ள அவன் கட்டாயம் செலவு செய்வான்'. படைதையாவின் வலை வெகு நீளமாக இருந்தது. அன்று இரவே குழியைக் கொள்ளை அடிப்பது என்று தீர்மானம் ஆகியது. அதைச் சேரி ருத்திரனிடம் சொல்லிவிட்டார்கள்.

லிங்கப்பாவுக்கு இந்தத் திட்டம் பிடித்திருந்தது. 'பஞ்ச காலத்தில் வயிற்றுக்கு இல்லாத ஏழைகள் கௌடருடைய தானியக் குழியைக் கொள்ளையடித்திருக்கிறார்கள்' என்று செய்தி அனுப்பி மணியக்காரனுடைய கடமையைச் செய்துவிடலாம். குற்றவாளிகள் யாருமே தண்டனை அடையாதபடி காக்க இது நல்ல உபாயம் என்று நினைத்தான். சேரி ருத்திரனுக்கு மட்டும் இது சரியான திட்டமாகத் தோன்றவில்லை. 'என்ன சாமி! திருடங்களைப்போல ராத்திரிலே தானியக் குழிங்களைத் திறந்தூட்டு நாளைக்கு ஜெயிலுக்குப் போகச் சொல்றீங்களா? அது ஒன்னும் சரிப்படாதுங்க! பகல் வேளைலே கொம்பை ஊதிக் குழியைத் தெறந்து தானியத்தை எடுத்துப் பங்கிடறதுதான் எனக்குச் சரியாத் தோணறது' என்றான்.

'குழியைத் தெறந்து உங்களுக்குச் சோளம் கெடைக்கறுப் பலே செஞ்சால் போதாதா? பகல் என்ன? ராத்திரி என்னடா, மகனே?' என்று படைதையா அவனை அடக்கப் பார்த்தார். ஆனால் ருத்திரன் தான் பிடித்த பிடியை விடவில்லை. அவன் மற்றொரு

காரணத்தையும் காட்டினான். 'எங்க ஜனங்களுக்கு ஒரு துண்டு ரொட்டி இல்லீங்க. வூட்லே ஒருபிடி தானியம் இல்லீங்க. இன்னிக்கே குழியைத் தெறந்து சோளம் குடுங்க ஐயா! நாங்களும் வேலை செய்யறோம்' என்று மூக்கால் அழுதான்.

'பாளராமின் கடையில் உங்கள் ஆட்களுக்கெல்லாம் வெல்லம், பருப்பு, கோதுமை எல்லாம் கடனாகக் கொடுக்கச் சொல்லி இருக்கோம். நீங்கள்ளாம் இப்பவே போய்ச் சாமானை வாங்கி வூட்லே வச்சிட்டு வாங்க. இன்னிக்கி ராத்திரி, குழியைக் கொள்ளை அடிச்சதும் அவனைக் கணக்குக் கேட்டு அதற்குச் சரியான சோள மூட்டைகளை அவன் கடையிலே போட்டுடுங்க' என்று படதையா, தான் சொன்னதையே சாதித்தார். கடைசியாக அவர் பேச்சே முடிவாயிற்று.

பாளராமனுடைய கடையைப் படதையாவின் ஆட்கள் படையெடுத்தார்கள். பாளராமன் ஒவ்வொருவருக்கும் வெல்லம், பருப்பு, கோதுமை இவற்றைக் கொடுத்தான். கடை காலியாகி விட்டாலும் கௌடருக்கும் தனக்கும் சிநேகம் வளர்ந்ததல்லவா என்று அவன் பூரித்துப்போனான்.

நடுமத்தியானம் ஆயிற்று. வெயில் உறைக்காவிட்டாலும் வானம் மப்பாக இருந்ததால் ஒரே வெக்கையாக இருந்தது. படதையா, தம்முடைய விஜய யாத்திரைக்குப் பரிவாரங்களுடன் புறப்பட்டார். அவருடைய லட்சியமெல்லாம் இப்போது நாணுவின் நிலத்தின்மேல்தான் இருந்தது. அகழிக்குப் பக்கத்தில் வந்த போது, கரியப்பன், ''சாமியாரே! லட்சுமணனுடைய வீட்டுக்கு முன் போய்க் கொம்பை ஊதி 'வயலுக்கு வா'ன்னு சொல்லீட்டு வரேனுங்க''ன்னு சொன்னான். சொல்லாமல்கொள்ளாமல் நிலத்துக்குப் போவது திருட்டுத்தனம் என்பது அவர்களுடைய கொள்கை.

அதைக் கேட்ட பெரிய குறும்பன் மாயப்பா, 'அட பைத்தியமே! அவன் வீடு பூட்டிக்கெடக்குது. காலையிலே மடத்திலே கூடியிருந்த ஜனங்களைப் பாத்து பயந்துகிட்டுத் தாஸகாம் வேட்டகத்துக்கு ஓடிவிட்டானாம். அவன் போய் இந்த மாதிரி வேலைக்கெல்லாம் ஆப்பிட்டுக்குவானா? ஒனக்குத் தெரியவே தெரியாதா?' என்று கேட்டான்.

'தெரியாட்டி என்னங்க? திருட்டுத்தனமா நெலத்தை வசப்படுத்திக்கிட்டாங்கன்னு நாளைக்குத் தகராறு வரக்கூடாது பாருங்க. கொம்பு ஊதி அவனைக் கூப்பிட்டுட்டு நெலத்தை வசப்படுத்திக்கறது நம்ம கடமை. நாம்ப செய்யறதைச் செய்ய வேண்டாமா?' என்று கரியன் பிடிவாதமாகச் சொல்லிவிட்டுச்

சிங்கனிடம் கொம்பை ஊதச்சொன்னான். சிங்கன் அகழிக்கு முன் அகலக் கால்வைத்து ஜம்பமாக நின்று பத்துத் திக்குகளுக்கும் கேட்கும்படி கொம்பை ஊதினான். அமைதியான நடுப்பகல் வேளையில் கொம்பின் ஓசை காதை அடைத்தது. சிலர் கூட்டமாக லட்சுமணன் வீட்டு வாயிலில் நின்று, 'ஏய், வயலைக் காப்பாத்திக்கிறவங்க வாங்கடா'ன்னு பாதள்ளிக்கே சவால் விட்டார்கள். அவர்கள் அப்பொழுது போட்ட கூக்குரல் கொம்பின் ஓசையையும் அடக்கிவிட்டது. செவிப்பறையே வெடித்துவிடும்போல் கடூரமாக இருந்தது. கொம்பு ஊதலுக்கும் தங்கள் கூக்குரலுக்கும் பதில் வராததால் எல்லோரும் நேராக வயலுக்குப் போனார்கள்.

சாமராவ் பஞ்சப்படிக்குத் தகுதி உள்ளவர்கள் பெயர்ப் பட்டியலையும் பஞ்சநிவாரணக் கடனுக்குத் தேவையான பத்திரங்களையும் ஏற்கெனவே தயாரித்து வைத்திருந்ததால் லிங்கப்பாவுக்கு அந்தத் தொந்தரவும் இல்லை. படதையா தம் கூட்டத்துடன் ஊர் எல்லையைத் தாண்டும் வரையில் அவனும் அவருடன் போனான். அதற்குமேல் போகத் துணிவில்லை. படதையாவிடம், 'சரி, ஜாக்கிரதையாகப் போயிட்டு வாங்க. நீங்க வரத்துக்குள்ளே நான் வேலையை முடிச்சுடறேன்' என்று வேலையை ஒரு சாக்காகச் சொல்லித் திரும்பினான். படதையாவும் அவனைத் தம்முடன் வரும்படி வற்புறுத்தவில்லை. லிங்கப்பா மடத்தை நோக்கி நடந்தான்.

அவனுடைய மனத்தில் பல யோசனைகள் வெடித்துக் கொண்டிருந்தன. சிமணாவின் நினைப்பு வந்தபோதெல்லாம் தலையிலிருந்து கால்வரை மின்சாரம் பாய்ந்ததுபோல் இருந்தது. அப்போது மடத்தில் சிமணா மட்டுமே இருந்தாள். அதே நினைவுதான் அவன் நெஞ்சில் ஏறி ஏறி இறங்கிக்கொண்டிருந்தது. மனம் அவசரப்பட்டது; கால்கள் தயங்கின. மடத்துக்குப் போகும் வரையிலாவது அந்த நினைவைத் தள்ளிவிடவேண்டும் என்று மனம் தவித்தது. ஆனால் முடியவில்லை. சுற்றிலும் ஒருமுறை பார்த்தான். அன்று நாகசதுர்த்தி ஆனபடியால் பெண்கள் எல்லாம் புத்தாடை உடுத்துப் பாம்புப் புற்றுக்கு பால்வார்க்கப் போகும் பரபரப்பில் இருந்தார்கள். மறுபடியும் சிமணா மனக்கண்முன் தென்பட்டாள். அவளும் இப்படிப் புதுச்சேலை உடுத்துக்கொண்டிருந்தால் அவளுடைய அழகு இருமடங்காகப் பிரகாசிக்கும் அல்லவா? என்று தோன்றியது. அவனுடைய நெஞ்சு வேகமாக அடித்துக்கொண்டது; கால்கள் தடுமாறின. எங்கே பார்த்தாலும் எதைக் கேட்டாலும் சிமணாவின் நினைவைத் தவிர வேறு எதுவும் தெரியவில்லை.

காமத்தின் பிரம்மாண்டமான கண், அவன் மனம் முழுவதையும் ஆக்கிரமித்துக்கொண்டிருந்தது. எல்லாவற்றையும் அந்தக் கண்ணாலேயே பார்த்தான். நேராகப் பாளாராமின் கடைக்கு வந்தான். அவனுக்குப் பிடித்த மங்கிய நீலத்தில் ஒரு புடைவையை விலை பேசினான். மணியக்காரரின் வியாபாரம் எல்லாம் கடன் என்பது பாளாராமுக்குத் தெரிந்திருந்தது. நல்லவேளை, 'புடைவை யாருக்கு?' என்று கேட்கவில்லை. புடைவையைக் கக்கத்தில் இடுக்கிக்கொண்டு லிங்கப்பா மடத்திற்குள் நுழைந்தான்.

மடத்தில் யாரும் இல்லை. அது தெரிந்தும், லிங்கப்பா, சுற்றிலும் பார்த்துக்கொண்டே போனான். நடுப்பகல் வேளை. தெருவிலும் நடமாட்டம் இல்லை. லிங்கப்பா யோசித்தவண்ணம் கூடத்தில் உட்கார்ந்தான். 'இப்போதே எப்படிச் சிமணாவைப் பார்ப்பது?' என்பதே பெரிய பிரச்சினையாக இருந்தது. அவனுடைய காதல் விளையாட்டெல்லாம் வயலில் வேலை செய்யும் பெண்களிடம் நடந்தவைதாம். சிமணா, அவனைவிடப் பத்துமடங்கு பண்பட்டவளாகத் தோன்றினாள். அதனால் அவளை வலுவில்போய்க் காணப் பயந்தான். ஆனால் அவள் நிலைதவறிய செய்தியே அவனுடைய காமத்தைக் கிளப்பியது.

லிங்கப்பா, தான் இருப்பதைக் காண்பிக்க ஒருமுறை இருமினான். இருமல் பலமாக வந்தபடியால் காலியாக இருந்த மடம் எதிரொலித்தது. அதைக் கேட்டு அவனே பயத்தால் நடுங்கினான். மேலும் சற்றுநேரம் அப்படியே உட்கார்ந்திருந்தான். திருட்டுத்தனமாகச் சிமணாவின் அறைப்பக்கம் கண்ணை ஓட்டினான். கதவு தாழிட்டிருந்தது. எப்படி உள்ளே போகலாம்? என்று யோசித்துக்கொண்டிருந்தான்.

ஆனால் தாமதம் செய்யக்கூடாது. ஏற்கெனவே வெகுநேரம் ஆகிவிட்டது. படதையா வேலையில் வெற்றிகண்டிருந்தால் விரைவிலேயே திரும்பிவிடலாம். அந்த நினைவு வந்தவுடன் லிங்கப்பா, சட்டென்று எழுந்திருந்தான். புடைவையைக் கையில் பிடித்துக்கொண்டு தள்ளமுடியாத துணிகரச் செயலுக்குத் தயாராகிய கோழைபோல் சிமணாவின் அறைக்கதவைத் தட்டினான்.

அவனுடைய நல்லகாலம் கதவு திறந்துகொண்டது. லிங்கப்பாவுக்கு மேலும் பயம் அதிகமாகி ஒரே அடியாக நடுங்கினான். 'யாரது?' என்று சிமணா கேட்டதும் வேறுவழியில்லாமல் கையில் இருந்த புதுப் புடைவையை முன்னே நீட்டிக் கண்ணை மூடியவண்ணம் அறைக்குள் நுழைந்தான். திடீரென்று நேர்ந்த

இந்த நிகழ்ச்சியால் சிமஞ திகில் அடைந்தாள். வந்தவன் லிங்கப்பா என்று தெரிந்ததும் இந்த நிகழ்ச்சியின் பொருள் அவளுக்குப் புரிந்துவிட்டது. கண்ணை மூடிமூடித் திறந்து அவனைப் பார்த்தாள். குழந்தை தூளியில் கவலையற்றுத் தூங்கிக்கொண்டிருந்தது.

'சிமஞ!.. உனக்காக இதோ...சேலை வாங்கியாந்திருக்கேன். எடுத்துக்க' என்று லிங்கப்பா அசட்டுச் சிரிப்புடனும் எச்சிலை விழுங்கிக்கொண்டும் நாக்கைத் துழாவிக்கொண்டும் சொன்னான். அவன் முகம் பயத்தால் வெளிறிக்கிடந்தது. நெற்றியெல்லாம் வேர்த்தது. தலையிலிருந்த தலைப்பாகை நனைந்துவிட்டது.

அவன் கண்ணில் இருந்த பசி, சிமஞவுக்குப் புரிந்துவிட்டது. இரண்டு நாளைக்கு முன்பு இரவில் ஊர்ப் பிரமுகர்கள்முன் படதையா தன் பாவத்தை மறைக்கும் சூழ்ச்சியாகப் பேசிய பேச்சின் பலன் இப்போது அவள் எதிரேவந்து நின்றது. ஆணின் காமவேட்கை எல்லாம் பெண்ணின்முன் ஒன்றுசேர்ந்து நின்றால் என்ன சொல்வது? சிமஞ இதுபோன்ற விபத்தில் முன்பே கையைச் சுட்டுக்கொண்டவள். காமம் அவளைப் பொறுத்தமட்டில் இளமையிலேயே திருஷ்டிபட்ட சோறு ஆகிவிட்டது. அதை நினைத்தாலே அவளுக்குக் குமட்டல் வந்தது. இப்போது லிங்கப்பாவைப் பார்த்தவுடனும் அப்படியே ஆயிற்று.

'நான் இப்படித் தனியாக இருக்கும்போது கிட்ட வரது சரியில்லே. பேசாமே வெளியே போ! இப்படிக் குந்தியிருப்பது எனக்கும் நல்லதில்லே; உனக்கும் நல்லதில்லே' என்று சிமஞ பணிவாகவே சொல்லி அந்தச் சனியனை வெளியேற்ற முயன்றாள். ஆனால் லிங்கப்பாவின் சூடேறிய மனநிலை இதுபோன்ற பணிவான பேச்சுக்கு அடங்குவதாக இல்லை. பசித்த பார்வையுடன் வெட்கத்தைவிட்டு அவளையே பார்த்துக்கொண்டிருந்தான்.

'ஏன், நான் சொன்னது உனக்குக் கேக்கலையா?' என்று சிமஞ சற்று உரத்தகுரலிலே கேட்டாள். லிங்கப்பா அப்பொழுதும் வழக்கம்போல் அசட்டுச் சிரிப்புச் சிரித்தான். இவ்வளவு நேரம் அவளைப் பார்த்துக்கொண்டே இருந்ததால் அவனுக்குக் கண்ட கண்ட எண்ணங்கள் தோன்றின. ஜாகீர்தார் பாபு சாஹேப் அவள்மேல் ஆசைப்பட்டது; படதையா போன்ற சந்நியாசி அவளை இந்த மடத்தில் பலாத்காரம் செய்தது ஆகிய நிகழ்ச்சிகள் அவளுடைய அழகை இன்னும் அதிகமாக நினைக்கும்படியே செய்தன. 'உனக்காகவே புதுச் சேலை கொணந்திருக்கேன், சிமஞ! ஒருவாட்டி அதைக் கட்டிக்

கிட்டு நிக்கக்கூடாதா?' என்று தன்னால் முடிந்த அளவுக்கு வெளிப்படையாகவே சொன்னான்.

'எனக்கொன்னும் சேலை வேண்டாம். நீ யார் எனக்குச் சேலை வாங்கித்தர?' என்று சிமனு பல்லைக் கடித்துக்கொண்டே கேட்டாள். நிலைமை விபரீதம் ஆகிவிடும் என்று அவள் ஊகித்தாள். கோபித்துக்கொள்ளாவிட்டால் அவன் போவதாகத் தெரியவில்லை. ரோஷம் அதிகரித்தது. கண்கள் சிவந்தன. உணர்ச்சியற்ற பார்வையால் அவனைப் பார்த்துக்கொண்டே அவன் போய்விடுவான் என்று காத்துக்கொண்டிருந்தாள்.

'ஏன், நேத்திக்கிச் சாமியார் சொன்னதைக் கேக்கலியா? நான்தான் ஒன்னைக் கல்யாணம் கட்டிக்கப்போறவன்னு ஊருக்கெல்லாம் தெரிஞ்சிருக்கு. இன்னும் சந்தேகம் எதற்கு?' என்று உட்கார்ந்த இடத்திலேயே லிங்கப்பா கேட்டான். அதற்குப் பதில் வராதபடியால் வக்கணையாகச் சொல்வதுபோல், 'இதோ பார் சிமனு, இப்போ ஒன்னாலே என்ன செய்யமுடியும்? ஒரு தடவை கால் வழுக்கிச்சின்னா அவ்வளவுதான்! இனிமே சாமியாரோடே சிநேகம் ஏது? சும்மா என்னோடெ வா. கண்ணாலம் கட்டிக்கறேன். ஊர் மணியக்காரன் பொஞ்சாதியா சுகமா வாழறது பிடிக்கலையா?' என்று கேட்டான்.

அவனைப் பார்த்ததுமே சிமனுவுக்குக் கோபம் தலைக்கு ஏறியது. அந்த ஒரு கணத்தில் வாழ்க்கையின் தீவிர அநுபவங்கள் எல்லாம் வந்துசேர்ந்து மாறிமாறி உலக்கை போடுவது போல் மனத்தை நோக வைத்தன. கோபத்தால் உதடுகள் துடித்தன. கண்களில் நீர் நிறைந்தது. 'என்ன செய்வேனு? என் முன்னாலே வந்து பார். பண்ணிக் காமிக்கறேன்' என்று கத்தினாள்.

லிங்கப்பாவுக்கு அடியோடு வெட்கமே போய்விட்டது. 'முன்னாலே என்ன? பக்கத்திலேயே வறேன்' என்று சொல்லி அவளை நெருங்கினான். 'எங்கே நேரம் ஆகிவிடுமோ? இந்தச் சந்தர்ப்பம் நழுவிவிடுமோ?' என்று அவன் தவித்தான். போனபோது கால்கள் தள்ளாடின. மற்றச் சமயங்களில் சிரிப்புக்கு இடமான அவனுடைய பருத்த உடம்பு, பயங்கரமான கறுப்பு நிழலைக் காட்டியது. அவன் நெருங்கி வந்ததும் சிமனுவின் கண்ணுக்கு எதிரே அவன் உடம்பு தவிர வேறொன்றும் தெரியவில்லை. அவள் பயத்தால் கூக்குரலிட நினைத்தாள். அவளையும் அறியாமல் உடம்பில் பலம் எங்கிருந்து வந்ததோ! கையை ஓங்கி அவன் கன்னத்தில் ஓர் அறை கொடுத்தாள். அவனுடைய முரட்டுக் கன்னம் அவள் கையில் பட்டு அருவருப்பைத் தந்தது.

லிங்கப்பா இதையெல்லாம் எதிர்பார்க்கவில்லை. பேயறைந்தது போல் ஆயிற்று. கையால் கன்னத்தைப் பிடித்துக்கொண்டு தரையில் உட்கார்ந்தான். காலையில் சிவயோகிகள் சொன்னது நினைவுக்கு வந்தது. 'அவன் விழவேண்டிய கால்கள் இவை அல்ல; மடத்தில் இருக்கின்றன' என்ற ஜோஸ்யம் உண்மை என்று தோன்றியது. உட்கார்ந்த இடத்திலேயே சிமணுவைச் சாஷ்டாங்கமாக வணங்கி அப்படியே படுத்துவிட்டான். அதனால் சிமணுவின் ஆத்திரம் அதிகரித்தது. காலால் அவனைத் தூரத் தள்ளி, 'பேசாமல் வெளியே போ' என்று கத்தினாள். அவள் கத்தினதாலோ நடந்த ரகளையாலோ தூளியில் படுத்திருந்த குழந்தை விழித்துக்கொண்டு கத்தத்தொடங்கியது. சிமணு அவசரமாகப்போய்க் குழந்தையை எடுத்துக்கொண்டாள்.

லிங்கப்பாவின் கௌரவம் மண்ணோடு மண்ணாகிவிட்டது. சிமணுவிடம் உதைபட்ட தலைப்பாகை அங்கேயே கலைந்து கிடந்தது. தலைப்பாகை இல்லாத மொட்டைத்தலை சிரித்துக் கேலி செய்யும்படியாக இருந்தது. கன்னத்தில் விழுந்த அடியைவிட நெஞ்சில் விழுந்த அடி, பலமாக இருந்தது. சிறு பிள்ளையைப்போல அழுதுகொண்டே கீழே விழுந்த தலைப் பாகையை எடுத்துச் சுற்றிக்கொண்டான். பிறகு கெஞ்சும் குரலில் பேசத் தொடங்கினான். 'சிமணு! உனக்காக என் உயிர் எப்படித் தவிக்கிறது என்பது உனக்குத் தெரியலெ. எங்கிட்டெ இருக்கிறது எல்லாத்தையும் உன் மடியிலெ போட்டுடறேன். சுகமாக சம்ஸாரம் நடத்தறேன். உன்னுடைய வாழ்க்கை பாழானதைப் பாத்து என் மனம் கொதிக்குது' என்று முறையிட்டான்.

சிமணு பேசாமல் இருந்தாள். 'நாம் செய்தது தவறு' என்று அவளுக்குத் தோன்றியது. கண்ணீர் ததும்பியது. ஆனால் அதைக் காட்டிக்கொள்ளவில்லை. அவள் பேசாதிருந்ததைக் கண்ட லிங்கப்பா மறுபடியும் பேசத் தொடங்கினான். 'நான் சொல்வதில் தப்பு இருந்தால் சொல்லு சிமணு! ஒப்புக்கறேன். ஆண்பிள்ளை ஒரு பெண்மேல் ஆசைவைப்பது தப்பா?' என்று கேட்டான்.

'கல்யாணம் செய்துகிட்டுத் தாலி கட்டிகிட்ட பெண்சாதியோட வாழ்ந்தா கடவுள் மெச்சுவார். இப்படியெல்லாம் அறுத்திண்டு ஆடின அது தப்புத்தான்' என்றாள் சிமணு. சிமணு இன்னும் கோபமாகவே இருந்தாள்.

லிங்கப்பா, தான் செய்தது தவறுதான் என்பதை ஒப்புக் கொண்டான். 'இன்னும் ஒரு வாரம் தனக்கு அவகாசம்

கொடுக்கும்படி கேட்டுக்கொண்டான். அதற்குள் தன் மனம் மாறிஞல் பேச்சே இல்லே. இன்னும் ஆசை மிஞ்சியிருந்தால் சிமஞ தன்னேக் கல்யாணம் செய்துகொள்ளவேண்டும். இப்படி எச்சிற்கலேபோல் வாழ்வது நல்லதல்ல' என்று அவளுக்கு உபதேசம் செய்தான். தனக்குக் காலம் நன்ருக இருக்கிறது என்றும் அவளேப் படதையாவின் சிறையிலிருந்து தன் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போவதாகவும் சொன்ஞன்.

சிமஞ, 'பார்ப்போம்' என்று சொல்லிவிட்டுப் பேசாமல் இருந்தாள். அவளுக்குப் பேச்சை வளர்க்க இஷ்டம் இல்லே. 'இப்போதைக்கு வெளியில் போய்விடு' என்று வேண்டிக் கொண்டாள். லிங்கப்பா உத்தரவுக்குப் பணிந்து வெளியே போஞன். போகும்போது புடைவையை எடுத்துக்கொண்டு போகவில்லே. 'ஒருவேளே அவள் மனம் மாறிஞல்...... அங்கேயே இருக்கட்டும்' என்று நினேத்தான்.

லிங்கப்பா போனது சிமஞவுக்கு அப்பாடா என்று இருந்தது. இப்பொழுதெல்லாம் அவளுக்குத் தனிமைதான் பிடித்திருந்தது. தாதா அவளேக் கைவிட்டபின் உலகத்தின் முகத்திலேயே விழிக்க அவளுக்கு இஷ்டம் இல்லே. உலகமும் அவள் வம்புக்கு வரவில்லே. ஆஞல் இன்று நிகழ்ந்தது போன்ற சம்பவங்கள் மட்டும் வெளியுலகத்தோடு அவளுக்குத் தொடர்பை ஏற்படுத்தின. அது எப்படிப்பட்ட தொடர்பு? சிமஞவுக்கு வாழ்க்கையே கசந்தது. அஜராணிச் சிறையை விட்டுவிட்டுத் தன் குழந்தையைக் காப்பாற்றுவதற்காகத் தனக்குப் பிடிக்காதவனுடன் இந்த மடத்துக்கு வந்து சேர்ந்தாள். உள்ளே நுழைந்தவள் வெளியே வரவில்லே. ஆஞலும் உலகம் இந்தச் சிறைக்கு வெளியிலிருந்தே அவள் அழகை ரசித்துக்கொண்டிருந்தது. அவள் இருட்டில் மறைந்துகொண்டாலும் உலகத்துக்கு அவளுடைய அழகு, காவல் இல்லாத வயலில் விளேந்த பயிராக இருந்தது. படதையாவைப் போன்ற சந்நியாசியையும் இந்த ஆசை விடவில்லே. முதலில் பாபு சாஹேபைத் தான் விரும்பியதே தவறு என்று அவளுக்குத் தோன்றியது. தாஞக வந்த பெண், நீண்டு வளர்ந்த கொடிபோல் எல்லோருடைய கைக்கும் எட்டக் கூடியவள்.

இதுபோன்ற சந்தர்ப்பங்களில் அவளுக்குப் பழைய துக்க நினேவுகள் எல்லாம் வந்தன. நாஞவின் சாவு, புத்லாபாயின் துர்மரணம், தாதாவின் மனவருத்தம் எல்லாவற்றுக்கும் தன் அழகே காரணமாக இருந்தது. 'தான் பிறந்ததே இதற்காகத் தாஞே?' என்று நினேத்தாள். துக்கம் பொங்கிவந்தது.

இப்பொழுது லிங்கப்பா ஆசைப்பட்டு வந்திருக்கிறுன். இவன், படையாவைப்போல் அடாவடிக்காரன் அல்ல. ஆனுல் ஆணின் பலத்துக்குப் பெண் எவ்வளவு தூரம் ஈடுகொடுக்க முடியும்? இப்பொழுது அவளுடைய கோபத்துக்குப் பயந்து திரும்பிப் போய்விட்டான் என்பது உண்மைதான். மறுபடி வருவதாகச் சொல்லிவிட்டுப் போயிருக்கிறுன். தன் கதி என்ன ஆகும்? என்று சிமளு கவலைப்பட்டாள். உயிரே வெறுப்பாக இருந்தது. அவளுடைய வாழ்க்கைப் பாதை எல்லாம் அவளுக்குத் துர்மரணம்தான் முடிவு என்று பறைசாற்றியது.

வெளியே கூடத்தில் கம்பத்தில் சாய்ந்துகொண்டு லிங்கப் பாவும் யோசித்துக்கொண்டிருந்தான். அன்றைய இரண்டு அநுபவங்களும் அவனுடைய கௌரவத்தை அடியோடு தகர்த்து விட்டன. மனம் சல்லடைக் கண்களாக நைந்துவிட்டது. ஒரு கவலைதாளு? உடைந்த மனத்தின் அடியில் சிமளுவின் ஆசை உயிரோடு துடித்துக்கொண்டிருந்தது. ஒருவாரமாவது அவகாசம் கிடைத்ததல்லவா? அதுவே போதும் என்று நினைத்தான். படையாவிடம் இதைச் சொல்லிச் சிமளுவை வசப்படுத்திக் கொண்டால் என்ன? என்ற எண்ணமும் எழுந்தது. மறுகணமே அப்படிச் செய்யக்கூடாது என்று தோன்றியது. படையாவின் சுபாவம் தெரியாததல்ல. 'சுயநலத்துக்காக யாரை வேண்டு மானுலும் பலி கொடுக்கக்கூடிய கொடுமை அவனிடம் இருந்தது' என்று நினைத்தான்.

பாதள்ளிக்கு வந்தபின் லிங்கப்பா மணியக்காரன் ஆகிவிட்டான். ஒன்றன்மேல் ஒன்ருகக் கிடைத்த வெற்றிகள் அவன் எதிரில் வரிசையாக நின்றன. அவற்ருேடு சிமளுவையும் வெற்றிகொண்டுவிட்டால் தன்னைக் கட்டிப்பிடிப்பவர் யார்? ஆனுல் சிமளுவோ நினைக்க நினைக்க எட்டிப் போய்க்கொண்டிருக் கிருள். அவன் நினைத்தது வேறு. அவளிடமிருந்து பெற்றது வேறு. கன்னம் அப்பொழுதும் எரிந்துகொண்டே இருந்தது. அடிபட்ட சிறுவனைப்போல் அழுமூஞ்சித்தனமாகக் கன்னத்தைத் தடவிப் பார்த்துக்கொண்டான். அவமானம் பொறுக்கமுடியாத தாயிற்று. அது அவனுடைய சிறுமையையே எடுத்துக் காட்டியது. 'சேந்துகிணற்றைக் கண்டு தாகம் எடுத்த நாய் வீளுகக் குறைப்பதுபோல்' இருந்தது அவனுடைய நிலைமை.

பசித்தபோதிலும் லிங்கப்பாவுக்குச் சாப்பிட விருப்பம் இல்லை. தெளிவற்ற கவலைகள் துரத்திக்கொண்டே இருந்தன. உள்ளே சிமளுவும் வெளியே லிங்கப்பாவும் பெருங்கவலையில் ஆழ்ந்தார்கள். 'வயலுக்குப் போனவர்கள் ஏன் இன்னும்

வரவில்லே?' என்று லிங்கப்பா யோசித்தான். வெளியே காலடி ஓசை கேட்டது. பாதக்குறடுகளேச் சத்தம் செய்துகொண்டே மடத்துப் படிகளில் ஏறிவந்த படதையா, வாசலில் நின்று கொண்டே, 'கௌடரே! சிமணுவின் நிலத்தை வசப்படுத்திக் கொண்டுவிட்டோம்' என்று வெற்றிப் பெருமிதம் தொனிக்கும் குரலில் உரக்கக் கூறினர்.

# 41

சிராவண சோமவாரத்தன்று குடியானவர்களுக்கெல்லாம் ஓய்வுநாள். அன்றைக்கே நாகபஞ்சமியும் சேர்ந்ததால் எங்கே பார்த்தாலும் பண்டிகைக் கொண்டாட்டம் தடபுடலாக இருந்தது. ஊஞ்சல் கட்டாத மரமே இல்லே. ஊர்ப் பெண்கள் எல்லாம் புத்தாடை அணிந்து ஊஞ்சல் ஆடுவதற்காகக் கூட்டம் கூட்டமாகச் சென்ருர்கள். கோட்டையில் கூடிய கூட்டத்தைக் கண்டு, தாரம்மா, 'இன்னிக்கென்ன குஸ்தி ஆடராங்களா சின்னம்மா?' என்று பிராதார நிங்கம்மாவிடம் கேட்டாள்.

'ஊ ஹூம். குஸ்தி ஆடலே. குஸ்தி நடக்கக்கூடாதுன்னு தீர்ப்புச் சொல்றதுக்காகப் பஞ்சாயத்தாரெல்லாம் சாவடிக்கு வந்திருக்காங்க' என்று சொல்லி, நிங்கம்மா அவசரமாக நடை போட்டாள். அவளுக்குத் தலேக்குமேல் வேலே இருந்தது. ''இப்படி ஏன் ஓடறே, சின்னம்மா? உன்னே அவங்கள்ளாம் கூப்பிட்டு, 'உன் மகன் எவ்வளவு சோளம் கொணுந்து போட்டிருக்கான்'னு கேக்கப்போறதில்லே. தன் குழியில் இருந்த சோளத்தை ஏழைகளுக்குப் பங்கிட்டோம்னு சொல்லிக் கௌடர், பஞ்சாயத்தார் வாயைக் கட்டிவிட்டாராம்'' என்று பெரிய குடும்பன் வீட்டு நிம்பக்கா வேண்டுமென்றே நிங்கம்மாவைத் தூண்டிவிட்டாள். நேற்றிரவு லிங்கப்பா, பார்வதியம்மாவின் குழிகளில் இருந்த தானியத்தைப் பங்கிட்ட செய்தியை முழுதும் தெரிந்துகொள்ளவேண்டும் என்ற ஆவல் அவளுக்கு.

நிங்கம்மாவுக்கும் அதுதான் வேண்டியிருந்தது. ஆனுல் பேச்சுக்கு எதிர்த்துப் பேசாவிட்டால் அவளுக்குத் திருப்தி இருக்காது. 'என்னம்மா? என் மகன் சோளத்தைக் திருடிக் கொணுந்தூட்டாப்பலே கேக்கறயே? மணியக்காரரே வீடேறி

வந்து, சாப்பாடு இல்லாதே சாகவேண்டாம்னு சொல்லிச் சோளம் கொடுத்திட்டுப் போளுரு. மணியக்காரர் தன்னுடை சோளத்தை ஏழைங்களுக்குப் பங்கிட்டாப் பஞ்சாயத்தாருக்கு ஏன் வயிறு எரியது?'' என்று எதிர்க்கேள்வி போட்டாள்.

ஆனால் அது சாமானிய விஷயம் அல்ல என்பது நிம்பம்மாவுக்குத் தெரியும். படதையாவும் லிங்கப்பாவும் சேர்ந்து தானியத்தைக் கொள்ளையடித்தார்கள் என்றே அவள் சாதிக்க விரும்பினுள். ''போன வருசம் சங்கரப்பா ஏழைகளுக்குத் தானியம் பங்கிட்டார். அவர் இவங்களைப்போலப் பாதி ராத்திரிலே குழியைத் தெறந்து முடிஞ்சமட்டும் அள்ளிகிட்டுப் போங்கன்னு சொல்லலே. என்னம்மா, உனக்குத் தெரியாது? நேத்திக்கி சேரி ஜனங்கள்ளாம் கூட்டம் போட்டுக் கைகொண்ட மட்டும் அள்ளிகிட்டுப் போனுங்களாமே? அந்தப் பாளராமன் ஏழையா? வயிற்றுக்குச் சோறு இல்லாமல் சாகிருனு? அவனே பன்னண்டு மூட்டை அடுக்கி வச்சிருக்கான். பஞ்சாயத்தார்கூட இதைத்தான் கேட்டாங்களாம். 'எம் பங்குச் சோளத்தை நான் பங்கிட்டா உங்களுக்கு என்ன வந்துது?'ன்னு லிங்கப்ப கௌடன் சொன்னுனும்'' என்று நிம்பம்மா தனக்குத் தெரிந்த செய்தியைப் பரப்பினுள்.

'வீட்டுக்கும் ஆட்டுப்பட்டிக்கும் நடக்கறத்துலேயே ஒன் வாழ்வு முடிஞ்சுபோகும். நீ ஊர் வெவகாரமெல்லாம் தெரிஞ்ச மாதிரி பேசறயே?' என்று நிங்கம்மா அவளைக் கேலி செய்தாள். இரண்டுபேரும் பேசிக்கொண்டே கௌடர் தெருவில் இருந்த ஊஞ்சலுக்குப் பக்கத்தில் வந்தார்கள். அங்கே கூடியிருந்த பெண்களுக்கு இவர்களுடைய தர்க்கத்தைக் கேட்டுத் தாங்களும் ஊஞ்சலில் உட்காரவேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று.

தலையாரிவீட்டு நாகம்மா முதலியோருக்குத் தங்களுக்குச் சோளம் கிடைக்கவில்லையே என்ற குறை. பிராதார நிங்கம்மா வீட்டில் பொழுது விடிவதற்குள் ஆறு மூட்டை சோளம் சேர்த்து விட்டார்கள் என்று கேட்டு அவர்களெல்லாம் சங்கடப் பட்டார்கள்.

'அதற்கில்லே நிங்கம்மா! பத்துக் குழந்தைங்க வீட்டிலே இருந்துட்டுப் பட்டினி கெடக்கற காலம் வந்துட்டுது எங்களுக்கு. தாயும் மகனும்மட்டும் இருக்கற வூட்லே கௌடருடைய குழியிலிருந்து ஆறு மூட்டை சோளத்தைக் கொணுந்து ரொப்பிக் கிட்டிருக்கீங்க! புது மணியக்காரனுக்குச் சித்தியா இருக் கறத்திலே லாபம் இருக்கு, போ' என்று நாகம்மா குத்தலாகப் பேசினுள்.

நிங்கம்மா இப்போது விவரமாகச் சொல்லவேண்டி வந்து விட்டது. 'அந்தச் சோளமெல்லாம் எங்களுக்குன்னே நெனச்சுக்காதே நாகம்மா! லிங்கப்ப கௌடர், தனக்கு வேணும்னு சொல்லித்தான் எங்க வூட்லே வச்சிருக்கார்'னு சமாளிச்சுப் பேசினுள்.

'அதனுல் என்ன, சின்னம்மா! மகன், மருமகள், பேரன் எல்லாரும் வந்து வீட்டைக் கலகலப்பாக்கப் போருங்க. நல்லது தானே' என்று நாகம்மா அந்த ரகசியத்தை அம்பலமாக்கினுள். அவளுடைய பேச்சிலிருந்த அபூர்வமான கிண்டல் சிமணுவின் கதையை வெளிக்குக் கொண்டுவருவதாக இருந்தது. அந்த விஷயம் எல்லோருக்கும் கொஞ்சம் தெரிந்துதான் இருந்தது. படதையா, மடத்துக்கு வந்த ஜனங்களிடம் தன் பாவச்செயலே மறைப்பதற்காகச் சொன்ன பொய் அது.

நிங்கம்மாவுக்கு அதைப்பற்றிப் பேச இஷ்டம் இல்லே. 'அப்படி ஒரு பேச்சும் என் காதிலெ விழல்லேயே. அது கிடக்கட்டும் நிம்பக்கா! அந்தத் தானம்மா மறுபடியும் மடத்துக்கு வரப்போருளாமே? ஏதாவது ஒன் காதிலெ விழுந்துதா?' என்று பேச்சை மாற்றினுள்.

'அவ இங்கெ ஏன் வரா சின்னம்மா? பிஜாபுரத்திலெ ஒரு அடகுக்கடைச் சாவகாருக்கு வப்பாட்டியா வெகுஜோர்லே இருக்காளாம். போன வாரம் எங்களவரு பிஜாபுரத்துச் சந்தைக்குப் போயிருந்தபோது தானம்மா அவருக்குச் சாப்பாடு போட்டு உபசாரம்பண்ணி அனுப்பிச்சாளாம். ஒருவாட்டி விட்டுட்டுப் போனவ திரும்பிவந்து இங்கே என்னத்தை வாரிக் கட்டிக்கப்போரு?' என்ருள் நிம்பம்மா.

இப்படியே அவர்களுடைய அரட்டை சிமணுவின் கதையைச் சுற்றிச் சுற்றி கடைசியில் லிங்கப்பாவின் குணங்களைப்பற்றிப் பேசுவதில் வந்து நின்றது. படதையாவின் ஆதரவாலேயே லிங்கப்பா பெரிய மனிதன் ஆகிவிட்டான் என்று நிம்பம்மா வாதித்தாள். 'நிஜமாகப் பார்க்கப்போனுல் இவன் ரெண்டாவது பாபு சாஹேப்' என்ருள். நாகம்மாவும் அதையே ஆமோதித்தாள். அவளுக்கு அது சொந்த அநுபவம். 'இப்படிப்பட்ட மணியக்காரன் ஊர்லே இருந்தா வசதி உள்ளவங்க, ஏழைங்க எல்லாம் சேந்து சாகவேண்டியதுதான்! திருடங்கமட்டும் கிரீடம் வச்சுப்பாங்க. எங்க வூட்டுக்காரன் பழைய கெட்ட கொணத்தை விட்டுட்டு மரியாதையா இருந்தான். கௌடர் வந்தப்பறம் குடிச்சுட்டு என்னே அடிக்க ஆரம்பிச்சுட்டான்' என்ருள் கல்லன் மனைவி நாகம்மா.

'ஒம் புருசனோட குணம் அப்படியெல்லாம் நல்லா இருந் தூட்டா நீ எவ்வளவோ புண்ணியம் பண்ணியிருக்கணும். பாபு சாஹேபின் தர்பாரில் அவனைக் கட்டிப் பிடிக்கவே முடியலே. படதையாவுக்குச் சிஷ்யன் ஆனான். ஜின்னப்பா வோடெ வக்கப்போருக்கு நெருப்பு வச்சான். ஊரெல்லாம் காறிமூஞ்சுது!' என்று நிங்கம்மா பழைய குப்பையைக் கிளறினாள்.

'ஊர்க்காரர் காறிமூஞ்சது சரிதாம்மா. அன்னிலேருந்து அவன் சாராயத்தைத் தொடவே இல்லை. அன்னிக்கி லிங்கப்ப கௌடர் ஊருக்குச் சக்கரை கொடுத்தாரே அப்ப மடத்துக்குப் போறேன்னு போனான். குடிச்சு மயங்கிட்டே வந்தான்'னு சொல்லி நாகம்மா பெருமூச்சுவிட்டாள்.

நிம்பக்கா கதையும் அதுவேதான். வீட்டில் அநுபவித்து அடக்கி வைத்திருந்த துக்கம் இப்பொழுது அநுதாபத்தை விரும்பியது. 'குடிகாரரைப்பத்தி என்ன சொல்றது, தங்கச்சி. என் மகன் மாயப்பா குந்திகிட்டுத் தின்னுகிட்டிருந்தா நெலம் சோளம் கொடுக்குமா? இப்பக் குடிக்கக் கத்துகிட்டான். மடத்தைவிட்டு வீட்டுக்கு வருவதே கொறஞ்சு போச்சு. பாதிராவுக்கு வரான். படுத்துகிட்டான்னா மறுநாப்பொழுது எறங்கும்போது எந்திருக்கறான். நம்மூர்ப் பசங்கள்ளாம் தாலீம் கானவை விட்டூட்டு மடத்துலெபோய் விழறாங்க. எங்க மாயன் பண்டிகையன்னிக்குக்கூட வீட்டுக்குச் சாப்பிட வல்லே. என்ன செய்யறது? படதையா ஊருக்கு நல்லது செய்யமாட்டார். கௌடர் வீட்டைப் பாழாக்கினார். அவங்க பொழப்பு, காசு, பணம் எல்லாத்தையும் பட்டம் பறக்கவிட்டூட்டாரு. இன்னம் என்ன மிஞ்சியிருக்கு? கௌடர் பூமியை நாளைக்கு இவங்க உழப் போறாங்களாம்' என்று சொல்லி, நிம்பம்மா தாங்கமுடியாமல் கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள்.

பார்க்கப்போனால் யாருடைய வாழ்க்கைதான் சுகமாக இருந்தது? நிங்கம்மாவும் அதே பாட்டைத்தான் பாடினாள். அவளுடைய மகனுக்கு முதலில் லிங்கப்பாவைக் கண்டாலே ஆகாது. இப்போது அவன் லிங்கப்பாவின் வாலாகவே சுற்றிக் கொண்டிருக்கிறான். அதனாலே பார்வதியம்மாவிடம் முகத்தைக் காட்டவே வழி இல்லாமல் போய்விட்டது. 'கௌடரின் வீட்டு உப்பைத் தின்றே வளர்ந்தவன். தவிர, மகன், குடிக்கப் பழகித் தகப்பனின் முகத்தில் கரியைப் பூசிவிடுவானோ?' என்று நிங்கம்மாவுக்குக் கவலை. ஒரே பிள்ளை. அவனோடு சண்டை பிடித்துக்கொள்ளவும் முடியவில்லை. அவனுக்கு வேண்டிய

லிங்கப்பாவை அவளும் கௌரவமாகவே நடத்தவேண்டி யிருந்தது. 'சிமஞவை லிங்கப்பா வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்துவிடுவானே?' என்று நிங்கம்மா கவலைப்பட்டாள். அதற்குச் சம்மதித்துவிட்டால் நாலுபேர் நடுவில் தலைநிமிர்ந்து நடக்க முடியாது.

ஊஞ்சல்கள் ஆகாயத்தைத் தொடுவதுபோல் ஏறி இறங்கு வதைப் பார்த்தவண்ணம் நின்றிருந்த இவர்கள் பார்வை அங்கே நிலைக்கவே இல்லை. மணலுக்கு அடியில் ஓடும் தண்ணீர்போல் அவர்களுடைய வாழ்க்கையைத் துன்பம் அரித்துக்கொண்டே இருந்தது. மற்றச் சமயங்களில் அடங்கியிருந்த துக்கம் இது போன்ற சந்தர்ப்பங்களில் பொங்கிவந்து வெளிப்பட்டது.

முதல் நாள் இரவு, படதையா, லிங்கப்பா இருவரும் சேர்ந்து கௌடருடைய தானியக் குழிகளைக் கொள்ளையடித் ததைப்பற்றி விசாரணை நடத்த, அன்று பஞ்சாயத்தார் கூடி யிருந்தார்கள். அங்கும் குழப்பந்தான். ஜனங்கள் தலைக்கு ஒருவிதமாகப் பேசிச் சபை ஒழுங்காக நடக்கவொட்டாமல் செய்தார்கள். பார்வதியின் கட்சிக்காரர்கள், லிங்கப்பா செய்தது குற்றந்தான் என்று கடைசிவரையில் சாதித்தார்கள். லிங்கப்பாவின் கட்சிக்காரர்களுக்கு அவன் தெய்வமாகவே தோன்றினன். 'ஏழைகளுக்குத் தானியம் கொடுப்பதால் என்ன தவறு? பார்க்கப்போனல் சங்கரப்ப கௌடரின் வழியையே அவர் பின்பற்றி இருக்கிருர்' என்று சிலர் தர்க்கம் செய்தார்கள். அதனல் தீர்ப்புச் சொல்வதே கஷ்டமாக இருந்தது. பாளாச் சாரும் சேஷப்பாவும் வெகுதூரம் விவாதித்தும் பயன்படவில்லை. 'நாங்கள் செய்தது திருட்டு அன்று' என்று வாதிப்பவர்களை எப்படி மாற்றமுடியும்? திருட்டு என்பதை எப்படி உணரவைக்க முடியும்? இருந்தாலும் பாளாச்சார் இன்னும் இரண்டொரு வார்த்தை சொல்லவேண்டும் என்று இருந்தபோது, யாரோ ஒருவன் அவரை இகழ்ச்சியாகப் பேசிவிட்டான். அதுவரையிலும் பாளாச்சாரை யாரும் இப்படிப் பேசியதில்லை. அவருக்கு அது அவமானமாகத் தோன்றியது. அதைப் பார்க்கத் துக்கம் அதிகமாக இருந்தது. பதில் பேசாமல், அவர், தோளில் துண்டை எடுத்துப் போட்டுக்கொண்டு சாவடியில் இருந்து வெளியேறினர். லிங்கப்பாவின் பரிவாரம் அவர் அப்படிப் போவதைக் கண்டு, 'ஹோ! ஹோ!!' என்று கேலியாகச் சிரிக்கவும் பின்வாங்கவில்லை. லிங்கப்பா நிரபராதி என்றே ருஜுவாகிவிட்டது.

லிங்கப்பாவுக்கு அதிர்ஷ்டம் நன்முக இருந்ததென்றே சொல்லவேண்டும். சமீபத்தில் அவனுக்குத் தன்னம்பிக்கையும்

உண்டாகிவிட்டது. அதை உறுதிப்படுத்தும் வகையில் மற்றொரு சம்பவமும் நிகழ்ந்தது. நாகபஞ்சமிக்கு மறுநாள் குதிரைச் சேவகன் ஒருவன் கொண்டுவந்த உத்தரவால் லிங்கப்பாவின் பெருமை பாதள்ளியில் நீடித்திருக்கச் சந்தர்ப்பம் ஏற்பட்டது.

பஞ்சத்தால் கஷ்டப்படும் பாதள்ளிக் குடியானவர்களுக்குத் தாராளமாகக் கடன் கொடுத்துவிட்டு மொத்தம் என்ன செல வாயிற்று என்பதை உடனே தெரிவிக்கும்படி கிப்ஸன் துரை தாலூகா ஆபீசுக்கு உத்தரவு அனுப்பியிருந்தார். அதனால் பஞ்சநிவாரணக் கடன் பெற விரும்பும் குடியானவர்களை அழைத்துக்கொண்டு உடனே தாலூகா ஆபீசுக்கு வரவேண்டும் என்று தாசில்தார் அவசர உத்தரவு அனுப்பியிருந்தார். சாம ராவ் தன் மனைவி மக்களை அழைத்துக்கொண்டு வர இந்து புரத்துக்குப் போயிருந்தான். அதுவும் நல்லதுக்கே என்று லிங்கப்பா நினைத்தான். புகழைத்தரும் வேலை இவ்வளவு சுலப மாகத் தன் மடியில் வந்து விழுந்திருக்கும்போது அதை இன்னொரு வருக்கு ஏன் விட்டுக்கொடுக்கவேண்டும்? லிங்கப்பா சந்தோஷத் தால் ஒரு சுற்றுப் பருத்துவிட்டான். ஒன்றொன்றாக இதுபோன்ற வேலைகள் செய்வதாலேயே தன்னுடைய மணியக்காரர் பதவி நிலைக்கலாம் என்று அவன் எதிர்பார்த்தான்.

பஞ்சநிவாரணக் கடன் பெற விரும்பும் சொந்தச் சாகுபடிக் குடியானவர்களும் மற்றவர்களும் நடுப்பகலுக்குள் சாவடிக்கு வர வேண்டும் என்று லிங்கப்பாவின் பெயரால் தண்டோரா முழங் கியது. அதற்குச் சம்பந்தம் இல்லாதவர்களுக்குக்கூட லிங்கப் பாவின் வேலைப்பற்றிய சந்தேகம் நீங்கியது. தண்டோராப் போடுபவன் ஊரெல்லாம் சுற்றித் திரும்பச் சாவடிக்கு வருவதற் குள்ளேயே குடியானவர்கள் சாவடியில் வந்து உட்கார்ந்திருந் திருந்தார்கள். சாவடிக்குமுன் இருந்த வெட்டவெளியில்கூட அவர்களே நிரம்பிவிட்டார்கள். லிங்கப்பாவும் அங்கே வந்து 'ஊருக்குப் புறப்படத் தயார் செய்துகொண்டு வரவேண்டும்' என்று எல்லோரிடமும் சொல்லிவிட்டு மடத்துக்குப் போனான்.

லிங்கப்பா எந்த வேலையையும் படதையாவுக்குத் தெரியாமல் செய்யும் நிலைக்கு வரவில்லை. அதனால் இந்த விஷயத்தையும் சொன்னான். இவ்வளவு சுலபமாகக் குடியானவர்களுக்குப் பஞ்ச நிவாரணக் கடன் உதவியைச் செய்யக்கூடாது என்பது படதை யாவின் கருத்து. இந்தச் சந்தர்ப்பத்தைச் சாதகமாக்கிக் கொண்டு அவர்களிடம் இருந்து பெரும்பயனை அடையவேண்டும் என்று அவர் முடிவு செய்தார். 'லிங்கப்பா, பார்வதியம்மாளின் நிலத்தை வசப்படுத்திக்கொள்ளும்போது குடியானவர்கள்

மனப்பூர்வமாக உதவி செய்யவேண்டும் என்று நிபந்தனை போட வேண்டும்' என்றார். லிங்கப்பாவும் அதற்கு ஒப்புக் கொண்டான்.

தாலூகாவுக்குப் புறப்படவேண்டும் என்று குடியானவர்கள் எல்லாம் கூட்டமாக மணியக்காரரை அழைக்க மடத்துக்கு வந்தார்கள். படதையாவைச் சந்திக்காமல் எப்படிப் போவது என்று மடத்துக்குள் நுழைந்தார்கள். அவர் என்றைக்கும் இல்லாத அக்கறையோடு அவர்கள் எல்லோரையும் வரவேற்று உட்காரவைத்தார். மெல்ல மெல்ல அவர்களிடம் தமது திட்டத்தை விளக்கிச் சொன்னார். லிங்கப்ப கௌடர் இப்போது செய்யப்போகும் உபகாரத்துக்குப் பதிலாகக் குடியானவர்கள் எந்தவிதமான பிரதியுபகாரம் செய்யவேண்டும் என்பதே அவருடைய பேச்சின் சாராம்சம். கௌடருடைய உதவிக்குக் குடியானவர்கள் பிரதி உபகாரம் செய்தே தீர வேண்டும் என்று கேட்டார். அதுமட்டும் அல்ல. கௌடருக்குத் துணை இருப்பதாக அவர்கள் எல்லோரும் ஆணையிடவேண்டும் என்றும் சொன்னார். ஆணையிடாத குடியானவர்களுக்குப் பஞ்ச நிவாரணக் கடன் வாங்கித்தருவது கௌடருடைய பொறுப்பல்ல என்பதையும் தெளிவாகச் சொல்லிவிட்டார்.

பஞ்சநிவாரணக் கடன் கிடைக்கும் என்று கேள்விப்பட்டு ஓர் ஏகரா மட்டுமே உள்ள குடியானவர்கள் வந்திருந்தார்கள். கையகல நிலம்கூட இல்லாதவனும் அந்தக் குடியானவனிடம் வேலை செய்பவன் என்று சொல்லிக்கொண்டு வந்திருந்தான். அவர்கள் எல்லோருக்கும் படதையா ஒரே வார்த்தை சொன்னார். 'இங்கே பாருங்க, உங்களை எல்லாம் கைதூக்கிவிடத்தான் கௌடர் இந்த ஊருக்கு வந்திருக்கிறார். இவருடைய முயற்சியாலேதான் வலுவிலே சர்க்கார் கடன் கொடுக்கறாங்க. இவர் செய்த உபகாரத்துக்குப் பதிலாக நீங்க என்ன செய்யப் போறீங்க?' என்று கேட்டார்.

கௌடர் தம்மிடம் என்ன பிரதி உபகாரம் எதிர்பார்ப்பார் என்பதை அநுபவம் உள்ள குடியானவர்கள் புரிந்துகொண் டார்கள். கூடியிருந்தவர்களுள் ஒருவன் எழுந்திருந்து சகஜ மாகவே இப்படிச் சொல்லிவிட்டான்: 'அதைப்பத்தி என்னங்க? தெரிஞ்சதுதானே. முன்னாலே கொடுத்துகிட்டு வந்ததுபோலெ கௌடருடைய மாமூலை அவருக்குக் கொடுத்துடறோம்'—இதற்கு மற்றவர்களும் சம்மதித்தார்கள்.

ஜனங்களுடைய அஞ்ஞானத்தை நினைத்துப் படதையா இகழ்ச்சியாகச் சிரித்தார். கையை முன்னால் நீட்டி, 'அட

பைத்தியங்களா! புத்தியை எங்க வச்சிட்டு வந்தீங்க? ஏழைக பொழைச்சுப் போகட்டும்னு, தன் தானியக் குழாயைத்தெறந்து சோளம் கொடுத்த கௌடர், உங்ககிட்ட எல்லாம் லஞ்சம் வாங்கிப் பொழப்ப நட.த்துவார்னு நெனச்சீங்களாடா! அவர் கையிலே துட்டு இருந்தா இங்கேயே உங்களுக்கெல்லாம் பங்கிட்டுக் கொடுத்திருப்பாரு. அவர் ஊருக்கே தகப்பன். அவருக்கு நன்றிக்கடன் செலுத்தற வழியே வேறெ' என்று சொல்லித் தம் பேச்சால் அவர்களுடைய முகபாவம் எப்படி மாறுகிறது என்பதைக் கவனித்தார்.

'சாமியாரே! அந்த வழியைத்தான் சொல்லுங்க. இப்படிப் பட்ட நம்ம கௌடருடைய கடனைத் தீர்க்காத நன்றிகெட்ட ஜாதீன்னு எங்களை நெனைக்காதீங்க' என்றார்கள் குடியானவர்கள்.

படதையா அதற்காக அவர்களைப் பாராட்டிவிட்டுத் தமது பேச்சைத் தொடர்ந்தார். 'இதை நான் சொல்லக்கூடாது. உங்களுக்கே தெரிஞ்சிருக்கணும். ஊர் மணியக்காரர் ஒரு சாண் பூமி இல்லாமெ ஊர்லே வாழறது எப்படி? அது அவருக்கும் கௌரவம் இல்லே; உங்களுக்கும் இல்லே. கேவலம் சிமணுவைப் போன்ற பெண்பிள்ளை தன் நெலத்தைச் சொந்தமாக்கிக்கறத் துக்கு முன்னாலே ஊர் ஜனங்கள்ளாம் கட்சி கட்டிகிட்டு வந்தாங்க. மணியக்காரருக்கு அவர் பங்குக்கு வர சொந்த பூமியைப் பிடிச்சுக் குடுத்தூட்டா அவருக்கு நன்றி செலுத்தினதுபோல ஆகும்' என்று சொன்னார்.

குடியானவர்களுக்கு இப்பொழுது விஷயம் தெளிவாகப் புரிந்தது. அவர்கள் சற்று யோசித்தார்கள். படதையா சொல்வதை மறுக்கமுடியவில்லை. ஆனால் சில தடங்கல்கள் இருந்தன. ஒரு குடியானவன் எழுந்திருந்து, 'சாமி! நீங்க சொன்னதெல்லாம் சரிதானுங்க. நானுவோட பூமீலே அப்ப விதை தெளிக்கலே. நீங்க வெதை தெளிச்சு நெலத்தைச் சொந்தமாக்கிக்கிட்டீங்க. அது சரியாப் போச்சு. ஆனால் கௌடருடைய செம்மண் பூமியிலே பார்வதியம்மா முன்னாலேயே வெதை வெதைச்சூட்டாங்க. அறுவடையாற வரைக்கும் அந்த நெலத்தை எப்படீங்க வசமாக்கிக்க முடியும்?' இந்த நீதியின் நுட்பம் படதையாவுக்குத் தெரியாததன்று. ஆனால் அவர் வலியச் சண்டைக்குப் போக விரும்பினார். 'ஏய்! வெதைச்சிட்டா என்னடா? இப்ப நாம் அந்த நாத்தெல்லாம் அழிச்சிட்டு மறுபடியும் வெதை வெதைச்சா அப்ப நமக்குச் சொந்தம்தானே?' என்று சொன்னார். லிங்கப்பாவும் அதற்கு ஒத்துப்பாடினான்.

அங்கே கூடியிருந்தவர்கள் எல்லாம் குடியானவர்கள். கல்வியறிவு இல்லாதிருந்தாலும் பண்பு உள்ளவர்கள். ஏழைகளானாலும் மானம், மரியாதை உள்ளவர்கள். நிலம் அவர்களுக்கு வயிற்றைக் காப்பாற்றும் வெறும் சாதனம் அல்ல; தெய்வமாகவே இருந்தது. படதையாவின் பேச்சைக் கேட்ட அவர்கள் இடி விழுந்ததுபோல் ஆனார்கள். எந்தக் குடியானவனும் இந்தச் செயலுக்கு இசையமாட்டான். விதைத்த பூமியைப் பரம்படிப்பதும் விபசாரம் செய்வதும் ஒன்றுதான்.

'சே, சே! நாங்கள் பூமியாலேயே பிழைக்கும் வேளாளருங்க சாமி! குடியானவன் அன்னை பூமியின் மகன். அவள் வயிற்றிலேயே வாழ்கிறோம், அங்கேயே சாகிறோம் நாங்கள். விதைத்த பூமியைப் பரம்படித்து மறுபடி விதைத்துத் தாயைப் பெண்டாள எங்களால் முடியாது! அது குடியானவனுடைய தர்மம் அல்ல. இதைத் தவிர வேறே எதுவானாலும் சொல்லுங்க. நடத்திக் கொடுக்கறோம்' என்று குடியானவர்கள் எல்லோரும் ஏக்கப் பெருமூச்சுடன் சொன்னார்கள்.

'அந்தத் தருமம் எங்களுக்குத் தெரியாதா, அப்பனே? ஆனால் சந்தர்ப்பத்தைப் பாத்துத் தர்மத்தை நடத்தணும். வெதையை அழிச்சு வெதைக்கறது பாவந்தான்; ஒப்புக்கறேன். ஆனா ஊர் மணியக்காரனைப் பட்டினிபோடறது அதைவிடப் பாவம் இல்லியா? மொதல் பட்டத்துலே மழை இல்லாட்டா அதை அழிச்சு வெதைக்கறதில்லையா? இப்பவும் அப்படித்தான்னு நெனச்சுக்குங்க. கண்ட கண்ட யோசனையை எல்லாம் மூளைலே ஏத்திகிட்டுப் பேசக்கூடாது. அது என்ன பாவம் வந்தாலும் சரி; கட்டிக் காக்க நான் தயாரா இருக்கேனே. உங்களுக்குச் சொந்தமான நெலத்திலே வேறே யாராவது வெதைச்சா நீங்க சும்மா இருப்பீங்களா? கௌடருடைய பங்கு நிலம் அவருக்கு வந்தே தீரணும்! அதற்காக நீங்கள்ளாம் ஒதவி செஞ்சே ஆகணும்!' இப்படிப் பேசப் பேச படதையாவுக்கு ஆவேசமே வந்துவிட்டது. 'விதைத்த பூமியை அழித்து விதைப்பது இப்ப ரொம்ப அவசியம்' என்று சாதித்தார். அதற்குச் சம்மதம் உள்ள குடியானவர்கள் படதையாவின் பாதத்தைத் தொட்டு ஆணை இடவேண்டும். சம்மதம் இல்லாதவர்கள் வெளிப்படையாகச் சொல்லிவிடவேண்டும். 'தம்மை எதிர்த்து நிற்கும் ஜனங்கள் யார் என்பது கௌடருக்குத் தெரியட்டும்' என்றார்.

குடியானவர்களுக்குள் அபிப்பிராயம் மாறியது. நிலத்தின் மேல் அக்கறை இல்லாதவர்கள் 'சம்மதிக்கலாம்' என்றார்கள். எதிர்க்கட்சியினர் அதற்குமேல் உறுதியாக இருந்தார்கள்.

படையாவின் பேச்சால் அவர்களுடைய பணிவு விடைபெற்றுக் கொண்டது. 'இதுபோல் பேசுவதுகூடப் பாவம்' என்று வாயால் சொல்லாவிட்டாலும் மனம் குரல் கொடுத்தது. சற்று நேரம் தங்களுக்குள்ளேயே கிசுகிசுத்தார்கள்.

பெரியகுறும்பன் மாயப்பன் கூட்டத்திலிருந்து எழுந்துவந்து படையாவின் காலைத்தொட்டு, 'குருவின் பாதத்தைத்தொட்டு ஆணை இடறேன். மணியக்காரருக்கு நெலத்தை வசப்படுத்திக் கொடுக்க அவர் சொன்னதையெல்லாம் செய்ய நான் தயாரா இருக்கேன்' என்று தன் கட்சிக்குப் பிரதிநிதியாகக் கோஷித்தான். படையாவின் முகம் மலர்ந்தது. அன்போடு அவன் தலையைத் தூக்கி அவனுடைய முதுகைத் தட்டிக்கொடுத்து, ''இதைத்தான் குருபக்தின்னு சொல்லுவாங்க. இப்படிப் பத்துப்பேர் இருந்தா ஊரையே ஆளலாம்! சுயநலக்காரங்க ஆயிரம்பேரு இருந்தாத் தான் என்ன? கொண்டுபோய் ஒடப்புலே போடவா? பஞ்ச நிவாரணக் கடன் வாங்கித்தரக் கௌடர் வரணும். எருதையும் கலப்பையையும் கொணுந்து அவருடைய பூமியை உழுது வெதைக்க வாங்கன்னு, 'தர்மம், புண்ணியம், கர்மம், பாவம்'ன்னு சாஸ்திரமா படிக்கிறீங்க? இப்படிப்பட்டவங்களை வச்சிகிட்டு என்ன செய்யறது? மாயப்பா! நீ ஒரு சிஷ்யன்தான் வீரன்!'' என்று படையா அவனைப் புகழும் சாக்கில் மற்றவர்கள் மேல் குற்றம் சாட்டினர்.

'இல்லீங்க சாமீ! இன்னிக்கி நாம் அழிச்சு வெதை வெதச்சா, பார்வதியம்மாவோட ஆள்கள் வந்து பறம்படிச்சா, பூமி பாழாப்போகாதா?' என்று ஒரு குடியானவன் குறுக்குக் கேள்வி கேட்டான்.

''ஒரு நல்ல காரியம் நடக்கணும்னு பூமி பாழானாலும் லட்சியம் பண்ணக்கூடாது. வேணும்னு தரிசாப்போட்டா அது பாவம். கௌடருக்கு உதவி செய்ய மொனஞ்சு வந்தவங்க இதையெல்லாம் கண்டுக்கக்கூடாது. 'நிலம் தரிசாக்கிடந்தா அப்பறம் என்ன கதி?'ங்கற கவலை ஒங்களுக்கு வேண்டாம். இந்தத் தகராறு காரணமாக ஒரு வருஷம் பூமி தரிசாக் கெடந் தாலும் யாரும் செத்துப்போயிடமாட்டாங்க'' என்று அவனை அடக்கினர் படையா.

இவ்வளவு பேச்சு நடந்த பின்னும் குடியானவர்கள் சிலருக்குப் படையாவின் யோசனை பிடிக்கவே இல்லை. பல தலைமுறைகளாகச் சங்கரப்ப கௌடரின் குடும்பத்து உப்பு அவர்களுடைய ரத்தத்திலும் சதையிலும் இரண்டறக் கலந் திருந்தது. தின்ற சோற்றுக்கும், இருந்த வீட்டுக்கும், வேலை

செய்யும் நிலத்துக்கும் துரோகம் செய்வது குடியானவர்களுடைய பண்பாட்டிலேயே இல்லை என்பது அவர்களுக்குத் தெரியும். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அவர்கள் நம்பிய நியாயத்தோடு இந்த யோசனை ஒத்துவரவில்லை. 'தங்களால் இந்த வேலையைச் செய்யமுடியாது' என்று அவர்கள் தெளிவாகச் சொல்லிவிட்டார்கள். 'அப்படியானால் அவர்கள் பஞ்ச நிவாரணக் கடன் ஆசையை விட்டுவிடவேண்டும்' என்று படதையாவும் தெளிவாகச் சொல்லிவிட்டார். மற்றவர்கள் இந்த யோசனையை நிராகரித்த குடியானவர்களையே இகழத் தொடங்கினர். 'மணியக்காரரை எதிர்த்து நின்று வாழ முடியுமா? அவர் நிலத்தை அழிச்சாலும் சரி; தரிசு போட்டாலும் சரி; நமக்கென்ன வந்துது? நமக்குக் கடன் வாங்கித் தராறு. அவர் சொன்னபடி நாம கேக்கணும்' என்று சொல்லிவிட்டு மாயப்பனைப்போல் மற்றவர்கள் சிலர் படதையாவின் காலைத் தொட்டு ஆணையிட்டார்கள்.

ஆணை இட மறுத்தவர்கள் ஏமாற்றத்துடன் திரும்பினார்கள். அவர்களுடைய மனம், இனம் புரியாத பயத்தால் நிரம்பியிருந்தது. நடந்தது நடக்கட்டும் என்று போய்விட்டார்கள். லிங்கப்பாவின் ஆதரவாளர்கள் வேண்டிய பேர் இருந்தார்கள். லிங்கப்பா இந்தக் கூட்டத்துடன் தாலூகாவுக்குப் பயணமாவதற்கு முன்பு படதையாவை வணங்கி அவருடைய ஆசீர்வாதம் பெற மறக்கவில்லை. ஊரிலிருந்து திரும்பிவந்தபின் கௌடருடைய நிலத்தை வசப்படுத்திக்கொள்ள வேண்டும்' என்று முடிவு செய்தார்கள்.

மடத்தில் தீர்மானமான செய்தி ஊரெங்கும் உடனே பரவிவிட்டது. இதைக் கேட்ட எல்லோரும் கலவரம் அடைந்தார்கள். சிமணாவின் நிலத்தை ஆக்கிரமித்தபோதே சிலர் புலம்பினார்கள். இப்பொழுது பாதள்ளியின் கௌரவத்துக்கே படதையா உலை வைத்துவிட்டார். சாமானிய மனிதர்களுடைய எண்ணமெல்லாம் இதைப்பற்றியே தீவிரமாக இருந்தது.

'கௌடருடைய குடும்பத்துக்கு வழிவழியாகச் சொந்தமாக இருந்து வந்த நிலம் இனிமேல் கைவிட்டுப் போய்விடும்' என்று யாராரோ பார்வதியம்மாளிடம் போய்ச் சொன்னார்கள். தான் செய்த அப்பீல் தோற்றுப்போனதிலிருந்து அவள் சோர்ந்து போய்விட்டாள். வேலையாட்களைத் தவிர உலகத்தின் தொடர்பே அவளுக்கு இல்லை. இனிமேல் என்றைக்கும் போட்டி, வறட்டுக் கௌரவம் இவைகளுக்கு வசமாகிக் கட்டிச் சண்டைபோடக் கூடாது என்று முடிவு செய்துகொண்டாள். ஏற்கெனவே நேர்ந்த

அவமானம் போதும் என்று ஆகிவிட்டது. ஒருமுறை இந்த ஊரைவிட்டுக் குழந்தைகளுடன் தன் அண்ணன் வீட்டுக்குப் போக நினைத்தாள். ஆனுல், அதற்கு அவள் மனம் இடம் கொடுக்க வில்லை. சங்கரப்ப கௌடர் இருந்தபோதே அவள் ஊரை விட்டுப் போனதில்லை. அவர் இறந்தபின் வீட்டைப் பாழ்போட்டு விட்டுப் போவாளா? 'குடும்பத்தை முன்னுக்குக் கொண்டுவரத் திறமையற்றவள் ஆகலாமா?' என்று யோசித்து, அந்த எண்ணத் தையும் விட்டுவிட்டாள். நாளடைவில் வீட்டுக்கு வெளியே என்ன நடக்கிறது என்பதையே கவனிப்பதை விட்டுவிட்டாள். வீட்டில் மாடு கன்று, ஆள் அம்பு இவர்களின் வேலையே எப்பொழுதும் இருந்துகொண்டிருக்கும். குழந்தைகளின் பொறுப்பு வேறு. பார்வதியம்மாள் வீட்டு விவகாரத்திலேயே அமிழ்ந்துபோய்விட்டாள்.

ஆனுல், அவள் மறந்தாலும் உலகம் அவளை மறக்கவில்லை. சங்கரப்ப கௌடர் காலத்துக்குப் பின்பு வெளியே இருந்து கௌடர் குடும்பத்துக்கு ஆயிரம் விபத்துக்கள் வந்தன. அந்த வீடும் அந்தக் குடும்பமும் பாதள்ளியின் உயிர்நாடியாக இருந்தன. குறி வைத்ததுபோல் அவற்றின்மேலேயே அடிகள் விழுந்துகொண்டிருந்தன. பாரதப் பௌர்ணமி அன்று நிலம் கொள்ளாமல் விளைந்த பயிர் கொள்ளைபோக இருந்தது. ஹோலிப் பௌர்ணமி அன்று வீடே கொள்ளைபோக இருந்தது. கார்ப் பௌர்ணமியன்று அவர்கள் வீட்டுக் காளைகள் வரவேற்கப் படவில்லை. லிங்கப்பா, மணியக்காரன் என்று உறுதியானதும் வீட்டில் பங்கு கேட்க ஒரு முற்றுகையே இட்டுவிட்டான். இது வரையிலும் பெரியவர்கள் செய்த புண்ணியம் காப்பாற்றிக் கொண்டு வந்தது. இப்போதும் அதுவே குடும்பத்தைக் காக்க லாம் அல்லவா? என்பது, கௌடர் மனைவியின் ஆசை. என்ன ஆனுலும் ஜனங்கள் கௌடரை மறக்கமாட்டார்கள். அவர்க ளுடைய குடும்பம் பாதள்ளிக்கு உயிர்கொடுத்து வாழவைத்தது. திடீரென்று காலராவால் இறந்த சங்கரப்ப கௌடரின் பெருந் தன்மையையும் தயவையும் ஜனங்கள் இவ்வளவு சீக்கிரம் மறந்து விடுவார்களா? அவருடைய கடைசி யாத்திரையின்போது ஊரே திரண்டு வந்துவிட்டதல்லவா? கௌடருடைய சுகதுக்கங்களைத் தம்முடையனவாகவே நினைக்கும் ஜனங்கள் இன்றும் இருக் கிறுர்கள். படதையாவின் யோசனைக்கு இணங்காத சிலர், பஞ்ச நிவாரணக் கடனைக்கூட விட்டுட்டு வந்ததே இதற்கு ஒரு நல்ல உதாரணம் என்று பார்வதி எண்ணமிட்டாள்.

அதெல்லாம் சரி. தெய்வம் திரும்பத்திரும்ப இந்தக் குடும் பத்தையே ஏன் சோதனை செய்கிறது? என்னதான் இருந்தாலும்

அவள் ஒரு பெண். இவ்வளவு அபாயகரமான செய்தியைத் தாங்க முடியாது. தனக்கு ஆப்த நண்பர்களே இல்லை என்றே அவள் குறைபட்டுக்கொண்டாள். நம்பியவர்கள் எல்லோரும் சமயத்தில் கைவிட்டுவிட்டுப் போய்விட்டார்கள். பார்வதிக்கு எதிர்காலம் ஒளியற்றதாகத் தெரிந்தது. எப்படியிருந்தாலும் பேசிப் பார்க்கலாம் என்று ரகசிய ஆலோசனைக்குச் சேஷப்பாவையும் பாளாச்சாரையும் வரச் சொல்லி அனுப்பினாள்.

## 42

சாவடியில் நேர்ந்த அவமானத்தால் ஆச்சார் மனம் உடைந்து போய்விட்டார். 'இனிமேல் பொது வேலைகளில் தலையிடக் கூடாது' என்று முடிவு செய்தார். 'அறுபது வயதைத் தாண்டிய நாம் சாவின் நிழலிலேயே இருக்கிறோம். இப்படிப்பட்டவர்களுக்கு வாழ்வின்மேல் ஏது அதிகாரம்? அவர் உபதேசங்களை யார் கேட்பார்கள்? உபதேசம் செய்து செய்து பழக்கப்பட்ட ஜீவன், என்ன செய்ய முடியும்? அநுபவத்துக்கு வந்த எந்த உண்மையும் கொடியதாகவே இருந்தால் தாங்கிக்கொள்வது எப்படி?' ஆச்சார் எல்லாவற்றிலிருந்தும் விலகிக்கொள்ள விரும்பினார். மனம் கல்லாகவேண்டும். வாழ்க்கையில் வரிசையாக வந்த துக்கங்கள் எல்லாம் அடிமேல் அடி கொடுத்திருந்தாலும் மனம் காய்த்துப்போகவில்லை. அவர் தம்முடைய சூட்சுமமான அநுபவங்களை இன்னும் இழக்கவில்லை. உடல் மூப்படைந்தது; நைந்து போய்விட்டது. நடைப்பிணம்போல் இருந்தது. ஆனால் மனம் இப்படி இல்லை. தம்முடைய திருஷ்டியில் பாதள்ளி வாழ்க்கை சுகமாக இருக்கவேண்டும் என்று அவர் இன்னும் வாழ்த்திக்கொண்டிருந்தார். 'ஏராளமான வசதிகள் இருந்தாலும் மனிதன் தன் அவிவேகத்தால் எல்லோரையும் ஏன் பாழாக்குகிறான்'—இந்தப் பிரச்சினை ஆச்சாருக்குப் புரியாத புதிராகவே இருந்தது.

வாழ்க்கைத் திட்டத்தின் அஸ்திவாரமே ஆட்டம் கண்டுவிட்டது என்பது ஆச்சாருக்குத் தெரியாமல் இல்லை. தினந்தோறும் கண்ணில்படும் விவேகம் அற்ற செயல்கள் அதற்குச் சாட்சியாக இருந்தன. ரத்தத்தில் கலந்த விஷம் உடல் முழுவதும் பரவிவிடாதா? பார்க்கும் பார்வைகூட விஷமாகவே இருந்தது. இப்படிப்பட்ட காலத்தில் நன்மையை எப்படிப்

பார்ப்பது? மனம், புத்தி, இருதயம் எல்லாம் ஸ்திரமாக இருக்க வேண்டும். தள்ளாடும் மனிதனுக்கு உலகமே தள்ளாடுவதுபோல் தோன்றுவதில் என்ன ஆச்சரியம்? பித்தம் தலைக்கு ஏறிய மனிதனுக்கு உலகமே சுற்றுவதுபோல் தோன்றுவதில்லையா? குழப்பம் அடைந்த கண்ணுக்குக் குழப்பத்தைத் தவிர வேறு என்ன தெரியும்?

ஆச்சார் கீதையை அவிழ்த்தார். சமீபத்தில் அந்த நூலைப் படிக்க முடியவில்லை. சிறுவராக இருந்தபோது பெரியவர்களுக்குப் பயந்துகொண்டு இஷ்டம் இல்லாமலேயே கீதா சுலோகங்களை மனப்பாடம் செய்திருந்தார். பெரியவர் ஆனபின் வயிற்றுப்பாட்டுக்காகப் புராணப் பிரவசனத்தால் கீதையை உபயோகித்துக்கொண்டிருந்தார். ஆனால் தம் உள்ளத்தின் பிரச்சினைகளை விடுவித்துக்கொள்ள முயலவில்லை. இப்பொழுது கவலை தலைக்குமேல் போய்விட்டபடியால் கீதையைப் பார்க்கத் தோன்றியது. சுற்றிலும் குழப்பம் நிறைந்திருந்தபோது, புத்தி கலங்கியபோது, பங்காளிகள் ஒருவர்மேல் ஒருவர் கத்தி வீச நின்றபோது, தர்மத்துக்கும் அதர்மத்துக்கும் இடையே உள்ள எல்லைக்கோடு அழிந்துவிட்டபோது பகவான் கீதையை உபதேசம் செய்தார். அர்ஜுனனைப் போன்ற உயர்ந்த மனிதன் வழி தவறவில்லையா?

பாளாச்சார் சுவடியை புரட்டினார். 'என்ன செய்தால் மனக்கொதிப்பைத் தடுக்கலாம்?' என்ற வேகத்துடன் தேடலானார். இரண்டாம் அத்தியாயம் கண்ணில் பட்டது. 'ஸ்திதப் பிரக்ஞனுடைய லட்சணம் என்ன?' என்று அருச்சுனன் கேட்டபோது, கண்ணன், அவனைப்பற்றி விவரமாகத் தெரிவித்த பகுதியை ஒருமனத்தோடு படிக்கத் தொடங்கினார். அவர்களுடைய ஒவ்வொரு பேச்சுக்கும் ஆச்சாருடைய நீண்ட வாழ்க்கையின் அநுபவம் பாஷ்யம் எழுதத் தொடங்கியது. மனத்தின் ஆசைகள் எல்லாவற்றையும் ஒழித்து ஆத்ம திருப்தி பெறுபவனே 'ஸ்திதப்பிரக்ஞன்' எனப்படுகிறான். 'தமக்கு ஆசைகள் இல்லையா?' இதை எப்படி அறுதியிட்டுச் சொல்ல முடியும்? உயிர் உள்ள மட்டும் ஏதோ ஓர் ஆசை அதோடு ஒட்டிக்கொண்டு இருந்துதான் தீரும். ஒருவிதத்தில் பார்த்தால் தமக்குத் தனிப்பட்ட ஆசை இல்லை. கடவுள் தம்முடைய வாழ்க்கையையே அப்படி உருவாக்கியிருக்கிறார். ஆனால் ஊன்றிப் பார்த்தால் புற வாழ்க்கையில் அது பரவியிருக்கவில்லையா? 'சுற்றிலும் இருப்பவர்கள் நாம் சொன்னபடி கேட்டு நடக்கவேண்டும்' என்ற ஆசை இல்லையா? 'ஆசை எந்த உருவில் இருந்தாலும் துன்பமே தரும்' என்பதுதான் கீதையின் உபதேசம். ஆசையை எப்படி விடுவது?

புலன்கள் மனத்தை விழுங்குகின்றன. மனம் தேகத்தை விழுங்கு கிறது. அப்புறம்? அப்புறம் என்ன? 'புத்தி நாசாத் பிரணஸ்யதி —புத்தி நாசத்தால் அழிகிறான்'.

'இன்பம் வரும்போது கூத்தாடக்கூடாது; துன்பம் வரும் போது குன்றிப்போய்விடக்கூடாது. ஆனால், மனத்தின் அமைப்பே மேடுபள்ளங்கள் கொண்டதுதானே? புலனடக்கத் தோடு இருக்கவேண்டும். ஆனால், அதை எங்கிருந்து தொடங்கு வது? ஆயிரக்கணக்கான ஆறுகள் வந்து புகுந்தாலும் அசைந்து கொடுக்காத கடல்போல் ஸ்திதப் பிரக்ஞன் நிறைகுடமாகத் தளும்பாது இருப்பான்'—பாளாச்சார் வெகுநேரம் இந்த உப மான உபமேயங்களையே ஆராய்ந்தார். மனம் ஆற்றைப்போல் ஆகக்கூடாது. மலைநாட்டில் மழை பெய்தாலும் எங்கேயோ இருக்கும் பாதள்ளியில் பெருகும் ஆறு நிரம்பிப் பேயிரைச்சல் போடுவதை அவர் கண்டிருக்கிறார். இதுபோன்ற நூற்றுக்கணக் கான ஆறுகள் ஓயாமல் பெருகினாலும், யானையின் உயரத்துக்கு அலைகள் வந்து மோதினாலும், கடல் கரையைக் கடப்பதில்லை. ஆச்சார், தம் வாழ்நாளில் கடலைக் கண்டதே இல்லை. ஆனால் கற்பனை செய்ய முடிந்தது. சுற்றுப்புறத்துக் கொடுமையைத் தைரியத்தோடு எதிர்க்கவேண்டியிருந்தது. இதற்குமுன் இது போல் பலமுறை உறுதி செய்துகொண்டிருந்தார். ஆனால் தோல்வியே அடைந்தார். இப்போதைய தீர்மானம் அசைக்கமுடியாததாக இருக்கவேண்டும். அவர் யாருக்கும் எந்தத் தீமையும் செய்ததில்லை என்பது உண்மைதான். அவரால் யாரும் கெடவில்லை. அப்படித் தவறு செய்தாலும் மனம் அமைதியை இழந்துவிடும். அது சில சமயம் மயங்கிவிடும்; சில சமயம் விகாரத்தை அடைந்துவிடும். பாதள்ளியில் நடந்த சம்பவங்கள் எல்லாம் அவருடைய மனத்தைக் கலக்கிவிட்டன. 'இனிமேல் அதற்கெல்லாம் இடம் கொடுக்கக்கூடாது' என்று எண்ணமிட் டார் ஆச்சார்.

அவர் கீதையைத் திறந்து வைத்துக்கொண்டு அதோடு தன் வாழ்க்கையை ஒப்பிட்டுப் பார்த்தார். அது எவ்வளவு வெறிச் சோடிக் கிடந்தது என்பது அவருக்குத் தெரிந்தது. '' 'இவர் இந்த நல்ல செயலைச் செய்தார்' என்று சுட்டிக்காட்டும்படி எதையும் செய்யவில்லையே?'' என்பது அவர் வருத்தம். செயல் தடுக்க முடியாதது என்பது என்னவோ உண்மை. ஆனால் விவேகத் தோடு செய்த செயலில் ஆசையின் தொடர்பு இருக்காது. அது நிஷ்காம்யமாக இருக்கும். அதனால் உடனே விடுதலை கிடைத்து விடும். முன்பு ஆச்சாருக்கு இவையெல்லாம் வேதாந்த பரி பாஷையாக இருந்தன. இப்போது புத்துயிர் பெற்றுவிட்டன.

அவற்றுள் புதிய பொருள் பளிச்சிட்டது. இதுவரையில் ஏனோ ஞானம் இல்லாமல் வீணாக வாழ்க்கையை நடத்தி ஆயிற்று. இனிமேலாவது அறிவு விழித்துக்கொள்ள வேண்டும்.

அவருடைய இந்த மனநிலை காரணமாகக் கௌடர் மனைவி வரச் சொல்லி அனுப்பியபோதும் ஆச்சார் அங்கே போகவில்லை. எல்லாத் தொல்லைகளில் இருந்தும் விடுபட விரும்பினார். திரும்பத் திரும்ப மனம் கேட்காமல் அங்கே போய் அந்த வலையில் சிக்கிக் கொள்ள அவருக்கு விருப்பம் இல்லை. தம்மை முழுவதும் கீதையில் ஈடுபடுத்திக்கொண்டு லௌகீக விவகாரங்களில் இருந்து விலகியிருந்தார். அதனால் அவரைக் காணவந்த சேஷப்பா, அவரைப் பெயர் சொல்லி இரண்டு முறை கூப்பிடவேண்டி யிருந்தது.

ஆச்சார் நிமிர்ந்து பார்த்தார். எதிரில் சேஷப்பா. அவன், தம்மால் விடுதலை அடைந்திருந்தாலும் அவன் வீட்டுப்பக்கம் எட்டிப் பார்க்கவில்லை. சாமராவ் கணக்கப்பிள்ளை ஆனதும் வெளி நடமாட்டத்தையே சேஷப்பா குறைத்துக்கொண்டுவிட்ட தாகப் பாளாச்சார் கேள்விப்பட்டார். நாளடைவில் வழிக்கு வந்துவிடுவான் என்று அவர் நினைத்தார். இப்பொழுது அவன் சொல்லாமல்கொள்ளாமல் வந்து நிற்கிறான். அவருக்கு ஆச்சரியமாக இருந்தது. கூப்பிட்டு உட்காரச் சொன்னார். சேஷப்பா வழக்கப்படி பொடியை நீட்டினான்.

ஏற்கெனவே அவன் பார்வதியின் வீட்டுக்குப் போயிருந்தான். ஆச்சார் வரவில்லை என்று அவள் மிகவும் குறைபட்டுக் கொண்டாள். அவளுடைய துக்கத்தைக் காணச் சகிக்காமல் தான் அழைக்க வந்திருப்பதாக அவன் சொன்னான். ''நான் எல்லா வழிகளையும் சொல்லிவிட்டு வந்திருக்கிறேன், ஆச்சார். நாளைக்கு ஊர்ப் போக்கிரிகள் அடாவடியாக நிலத்தில் விளைந்த பயிரை அழிக்கப்போகிறார்கள். அதைத் தடுக்கப் போலீஸ் பார்ட்டியை அனுப்பவேண்டும் என்று விண்ணப்பம் கொடுக்கச் சொல்லி வந்திருக்கிறேன். 'விண்ணப்பம் கொடு' என்று நீங்கள் சொன்னால்தான் கையெழுத்துப்போட அவள் சம்மதிப்பாள். முன்பு ஒருமுறை கையெழுத்துப் போட்டதற்காக நீங்கள் கோபித்துக்கொண்டீர்களாம். அதனால் வருந்தி மனம் நொந்து போயிருக்கிறாள். பாவம்! பெண்பிள்ளை. ஊரார் லிங்கப்பாவின் பின்னால் சுற்றுவதைக் கண்டு பயந்திருக்கிறாள். நாம் இருவரும் தான் அவளுக்கு நன்மை செய்வோம் என்று அவள் தைரியமாக இருக்கிறாள்'' என்று கௌடர் மனைவிக்குப் பரிந்து பேசினான் சேஷப்பா.

ஆச்சார் ஒன்றும் சொல்லவில்லே. கைவிரலால் நிலத்தைக் கீறிக்கொண்டு சும்மா உட்கார்ந்திருந்தார். சேஷப்பா பொறுத்துப் பார்த்தான்; இருமினன்; பொடியை உறிஞ்சினன். ஆச்சார் 'கப்சிப்' என்று இருந்தார். மறுபடியும் சொன்னதையே சொன்னன்.

'இதற்கெல்லாம் என்ன சொல்வது என்றே எனக்குத் தெரியவில்லே சேஷப்பா! நீ சொல்லிய வழிகள் உன்னுடைய பார்வையில் ரொம்ப சரி. ஆனல் எனக்கு அது சரியாகத் தோணலே. ஊரில் இரண்டொருவர் அக்கிரமம் செய்தபோது உன்பாடு கொண்டாட்டமாக இருந்தது. இப்ப ஊரே ஒன்று சேர்ந்து அக்கிரமம் செய்யறது' என்று ஆச்சார், நிலேமையைச் சீர்தூக்கிப் பார்த்தது போல் சொன்னர்.

'அப்படியான, என்ன செய்யச் சொல்றீங்க, ஆச்சார்! இந்த மடையன் லிங்கப்பன், படதையா, இவங்க பின்னலே சுத்தற அயோக்கியங்க எல்லோருக்கும் மனச்சாட்சி இருக்குன்னு நெனக்கறீங்களா? இவங்களேச் சமாளிக்கறத்துக்குள்ளே ஊரே பாழாகப் போயிடும். அதுக்காகத்தான் இருக்கறத்துக்குள்ளே பாதுகாப்பான வழியை நான் சொன்னேன். அது வேண்டாங்கறீங்க. அப்படியான என்னதான் செய்யறதுன்னுவது சொல்லுங்க' என்று சேஷப்பா பாதி விஷயத்தைத் தெரிந்துகொள்ளும் ஆவலுடனும் பாதி ஆத்திரத்துடனும் கேட்டான்.

'அது என்னவோ அப்பா! எனக்கும் தெரியலே. முன்னப் போலே இந்த வம்பெல்லாம் எனக்கு வேண்டியிருக்கலே அப்பா! பேச்சு வந்தா இப்படிச் சொல்லுவேன்: பார்வதி அந்த நெலத்தை லிங்கப்பனுக்குக் குடுத்தூடட்டும். அவன் கடன் பாக்கி இருக்கும். இல்லாவிட்டா அவன் சங்கரப்பாவின் பிள்ளேயாக வந்திருப்பான?' என்று ஆச்சார் சலிப்புடன் சொன்னர்.

சேஷப்பாவினல் ஆச்சரியத்தை அடக்க முடியவில்லே. 'ஆச்சாருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதோ?' என்று சந்தேகித்தான். முன்பு அக்கிரமத்தை எதிர்த்துக் கடுமையாகப் போராடி அநாவசியமாகப் பகையைக்கூடத் தேடிக்கொண்ட இந்தக் கிழவர், இப்போது ஏன் இப்படிச் செய்கிருர்? வரவர ஏன் இப்படி ஆகிவிட்டார்! என்று ஒரு கணம் சேஷப்பாவுக்கு இரக்கமும் தோன்றியது.

சேஷப்பா அதோடு விடவில்லே. மறுபடியும் தர்க்கம் செய்தான். லிங்கப்பாவின் அக்கிரமத்தை வருணித்தான். தான் செய்வதெல்லாம் மணியக்காரப் பதவியின் நன்மைக்கு என்றே

நம்பவைக்கிறான். இந்தச் சமயத்தில் கையைக் கட்டிக்கொண்டிருப்பது அநியாயம் என்று சொன்னான். ஆச்சார் மசியவில்லை. சேஷப்பாவின் ஆச்சரியம் அதிகம் ஆகியது. அவருடைய சுபாவம் அவனுக்கு நன்றாகத் தெரியும். அவருடைய அன்பையும் துவேஷத்தையும் பற்றி அவனுக்கு வேண்டியமட்டும் பழக்கம் இருந்தது. ஒரு சமயம் ஆச்சார் வீட்டில் ஒரு தகராறு மூண்டது. அவருடைய தம்பியின் மகன் நாராயணாச்சார் ஆஸ்தியில் தனக்குச் சரியாகப் பங்கு கிடைக்கவில்லை என்று புகார் கிளப்பினான். ஊர்ப் பிரமுகர்கள் பத்துப்பேரை அழைத்து உட்கார வைத்து, ஆச்சார் தமக்கென்று வைத்துக்கொண்டிருந்த ஐந்து குழி நிலங்களைத் தனக்குக் கொடுத்துவிடவேண்டும் என்று பிடிவாதம் பிடித்தான். ஆச்சார் அது கிடைக்காது என்றார். லிங்கப்பாவைப்போல் நாராயணாச்சாரும் பங்காளிக் காய்ச்சலில் ஆத்திரம்கொண்டு அந்த நிலத்தில் விதை தெளித்து தனக்குச் சொந்தமாக்கிக்கொண்டான். அதனால் கோபம்கொண்ட ஆச்சார் கோர்ட்டுக்குப்போய் நிலத்தைத் தம்முடையதாக்கிக் கொள்ளவில்லையா? சேஷப்பா இந்த நிகழ்ச்சியை மறக்கவில்லை. இந்தச் சந்தர்ப்பத்தில் அதை நினைவூட்டினான்.

'ஆம் சேஷப்பா! நீ சொல்றது நெஜந்தான். அதனால் இப்போது என்ன பயன் கிடைத்தது. அதே நிலம் நாராயணனுக்குக் கெடைச்சிருந்தா அவன் சௌக்கியமாக இருப்பான் அல்லவா? குழந்தைகுட்டிக்காரன். இப்போது சோற்றுக்கு லாட்டரி அடிக்கிறான் அல்லவா? அந்தக் கேஸ் காரணமாகத் தன் பங்குக்கு வந்த சொத்தை எல்லாம் இழந்தூட்டான். இந்தக் கேஸால் சுகம் இருப்பதாக எனக்குத் தெரியலே. கோர்ட் ஏறி ஏறித்தான் ஊர் குட்டிச்சுவர் ஆயிடுத்து. அது என் மனசுக்குப் பிடிக்கலே விடு' என்று எதிலும் சிரத்தை இல்லாமல் விட்டேத்தியாகப் பதில் சொன்னார் ஆச்சார்.

கடைசியில், 'பார்வதியின் வீட்டுக்கு வந்து அவளிடமே சொல்லிவிடுங்கள்' என்று சேஷப்பா வற்புறுத்தினான். அப்படியாவது அவள் பயம் நீங்கி ஆறுதல் அடையட்டும் என்பது அவன் எண்ணம். 'என்னவானாலும் ஒரு பெண். ஊரே தன்னை எதிர்த்து நிற்பதாகப் பயந்து கவலைப்படுகிறாள். கௌடர் குடும்பமே அழிந்துவிடுமோ என்று கவலைப்படுகிறாள். அவளுக்குத் தைரியமாவது சொல்லலாமே. அதிலே ஒண்ணும் தவறில்லையே' என்றான் சேஷப்பா. பாளாச்சார் ஒருகணம் யோசித்துவிட்டுச் சேஷப்பாவுடன் புறப்பட்டார்.

சேஷப்பா சொன்னதுபோல் கௌடர் மனைவி, கவலையே உருவாக உட்கார்ந்திருந்தாள். அவர்கள் போனபோது வீட்டில்

வேறு யாரும் இல்லை. வேலையாட்கள் வேலை முடிந்து வீட்டுக்குப் போய்விட்டார்கள். காவலுக்கு என்று இருந்த ஆட்கள், கொட்டகையில் படுத்துக்கொண்டிருந்தார்கள். மங்கிய விளக்கின் வெளிச்சத்தில் அவள் பிரமை பிடித்து உட்கார்ந் திருந்தாள். ஆச்சாரைக் கண்டவுடன் அவளுக்குத் துக்கம் பொங்கிவந்தது. விக்கி விக்கி அழுதுகொண்டே எழுந்துவந்து அவருடைய கால்களைத் தன் கண்ணீரால் கழுவினுள்.

ஆச்சார் அவளுக்கு எதிரில் ஒரு தூணில் சாய்ந்துகொண்டு தம் எண்ணத்தைச் சொன்னுர். 'இதோபார் பார்வதி அம்மா! இதுபோன்ற விஷயங்களில் போட்டி போடக்கூடாதூன்னு சொல்லத்தான் நான் வந்தேன். இதனுல் யாருக்கும் சுகம் கெடச்சதில்லை; இனிமேலும் கெடைக்காது' என்று தொடங் கினுர்.

சேஷப்பாவைப் போலவே பார்வதியும் ஆச்சரியம் அடைந் தாள். 'அப்படியாளு அந்தப் பிசாசை என் வீட்டிலே நொழைய விடுங்கறீங்களா? என்ன?' என்று சந்தேகத்துடன் கேட்டாள்.

'அதுமட்டும் இல்லை. இருக்கற ரெண்டு குழியையும் தெறந்து ஊருக்கெல்லாம் பங்கிடணும். அப்பறம் இந்த நெலத்தை லிங்கப்பாவுக்குக் கொடுத்துடணும்' என்கிறுர் ஆச்சார். 'இல்லையா ஆச்சார்?' 'இப்படிப் பயந்துகொண்டு நடக்கும்படி என்ன வந்தூடுத்து?' என்று சேஷப்பா கேட்டான். கௌடர் மனைவியின் முன் தன் தர்க்கம் பயனை அளிக்கும் என்பது அவனுடைய எண்ணம்.

'பயமோ கியமோ எனக்கு அதெல்லாம் தெரியாதப்பா! ஊர்லே நெலம் தரிசாக் கெடந்து ஜனங்கள் சாப்பாட்டுக்கு இல்லாமெ சாகக்கூடாது என்பதுதான் என் நெனைப்பு. கௌடருடைய பூமி ஊருக்குச் சொந்தமானது. அப்படியிருக்க அதற்காக இவ்வளவு தகராறு வேண்டாம்னு எனக்குத் தோணு கிறது' என்று சொல்லி நிறுத்திக்கொண்டார் ஆச்சார். சேஷப்பாவுக்கும் பார்வதிக்கும் ஆச்சாரின் பேச்சு விபரீதமாகத் தோன்றியது. 'இவருடைய மூளை கெட்டுவிட்டதோ?' என்று பார்வதிக்குச் சந்தேகம் தோன்றியது. 'இவரும் லிங்கப்பாவின் கட்சியில் சேர்ந்துவிட்டாரோ?' என்று திகில் அடைந்தாள். ஆனுல் ஆச்சாருடைய பேச்சில் நேர்மையும் கபடின்மையும் ஒப்பற்று விளங்கின. அவருடைய கண்களில் சூதுவாதின் சுவடே இல்லை.

பார்வதியம்மாள் அவர் பேச்சை ஏற்றுக்கொள்ளும் நிலையில் இல்லை. ஒன்றன்பின் ஒன்ருக நடந்த பல சம்பவங்கள் அவளுடைய

கௌரவத்துக்கே சவால் விட்டன. தன்னுடைய தானியக் குழிகளைக் கொள்ளையடித்து நிலத்தைப் பறித்துக்கொள்ள வந்தவர்களைப் பழி வாங்காவிட்டால் அவளுடைய மனம் நிம்மதி அடைவதாக இல்லை. மணியக்காரர் குடும்பத்து க்ஷாத்திரம் பெயர்போனது. எதிர்த்தவர்களுக்கெல்லாம் பணிந்துபோய், இருப்பதை எல்லாம் அவர்களுக்குக் காணிக்கையாகக் கொடுத்தால் சொர்க்கத்தில் இருக்கும் சங்கரப்ப கௌடருக்குச் சம்மதமாக இருக்குமா?

'அது முடியாது ஆச்சாரையா! என் மனம் கொதிக்குது. கௌடர் பொண்டாட்டிக்குக் கோவம் வந்தா என்ன ஆகும்? என்பதை அவங்களுக்குக் காட்டணும். கணக்கப்பிள்ளை சொல்றுப்பலே சர்க்காருக்கு நான் புகார் குடுத்தா நீங்க கோவிச்சுக்க மாட்டீங்களே?' என்று கேட்டாள். அவள் குரலில் உணர்ச்சி வேகமும் நேர்மையும் தொனித்தன.

ஆச்சார் லேசாகச் சிரித்தார். ஆனால் கண்ணோரம் இரண்டு கண்ணீர்த் துளிகள் சிந்தின. அவற்றை விரலால் தெறித்துவிட்டு, 'எனக்கு என்னம்மா கோவம்? உனக்குத் தோன்றினபடி நடக்க ஒனக்குச் சுதந்திரம் இருக்கு. அதனாலே நல்லதில்லேன்னு சொல்லறது என் கடமை. சொன்னேன். இன்னும் ஒரு வார்த்தை சொல்லணும். அதையும் சொல்லிடறேன். ஊர்லே நெலமை ரொம்பச் சீர்கெட்டு இருக்கு. ஊருக்குள் பிசாசு குடிபுகுந்து விட்டது. நாளைக்கு என்ன நடக்கும்னு சொல்ல முடியாது. அதனாலே கொஞ்ச நாளைக்காவது நீ ஊரைவிட்டுப் போகணும். குழந்தைகள் சிறியவர்கள். நீ தனியாக இங்கே இருப்பது சரியில்லை' என்று ஆச்சார் ஜோசியம் சொல்வதுபோல் சொன்னார். பெருமூச்சின் பாரத்தால் பேச்சு, தடைப்பட்டு வெளிவந்தது.

பார்வதி, ஆச்சாரின் முகத்தைப் பார்த்தாள். அதில் பயம் ஒன்றைத்தவிர வேறு எந்த பாவமும் காணப்படவில்லை. சேஷப்பாவின் முகத்தைப் பார்த்தாள். அவனும் பேயறைந்தவன் போல் இருந்தான். தனக்கு என்ன நேர்ந்துவிட்டது. அதை நினைக்க வயிற்றைச் சங்கடம் செய்தது. கண்ணில் நீர் ததும்பியது. தலைப்பால் முகத்தை மூடிக்கொண்டு தேம்பினாள். அந்தத் துன்ப நிலையில் ஆச்சாரும் சேஷப்பாவும்கூடத் தன்னுடைய துரதிருஷ்டத்தின் உருவாகவே தோன்றினார்கள். சூழ்நிலை நிஜமாகவே பயங்கரம் ஆகிவிட்டதா? அப்படி இருந்தாலும் தைரியம் சொல்ல இதுவா வழி? 'மணியக்காரர் குடும்ப கௌரவத்தை உள்ளங்கையில் வைத்துக் காக்கிறோம்' என்று

சங்கரப்ப கௌடரின் கடைசிக் காலத்தில் வாக்குக் கொடுத்த தீரர்களா இவர்கள்? தன்னை ஓர் அநாதைப் பெண்பிள்ளையாகத் தான் அவர்கள் நினைத்துவிட்டார்களா? தன்னைக் காக்கும்படி அவள் கேட்கவில்லை. குடும்ப கௌரவத்தைக் காக்கவேண்டும் என்கிறாள். அது ஊராரின் பொறுப்பு என்று நினைத்தே அவர்களை உதவி கேட்டாள். தன்னைத்தான் காத்துக்கொள்ளக் கூடச் சக்தியற்றவள் ஆகிவிடவில்லை இந்தப் பார்வதி என்பதை அவர்களுக்குக் காண்பித்துவிடவேண்டும் என்று நினைத்தாள்.

'கண்ணாலம் கட்டி இந்த வூட்லே கால்வச்சவ திரும்பிப் பொறந்த வீட்டுக்குக்கூடப் போகலே, ஆச்சாரய்யா! என் புருஷன் இதையெல்லாம் ஒப்பிச்சுட்டுப் போயிருக்காரு. நான் விட்டுட்டுப் போயிட்டா வூட்டுலே நாய்கள் நடமாடும். இந்த ஊரிலேயே வேறொருத்தர் வீட்டுப் படி ஏறினதில்லே. இனிமேல் வேற ஊருக்குப் போவேனா? குழந்தைகளை அனுப்பச் சொன்னா வேணும்னா அனுப்பறேன்' என்று கௌடர் மனைவி தளராத உறுதியுடன் சொன்னாள்.

'அப்படியே ஆகட்டும். அதையாவது செய். காலம் கடத்தாமெ நாளைக்கே பசங்களை ஊருக்கு அனுப்பிச்சிடு. இந்த ஒரு காரியத்தை நடத்திக் கொடு' என்றார் பாளாச்சார்.

'நிச்சயமா நடத்திக் கொடுக்கறேன், ஆச்சாரய்யா! அது என்னோட கடமை. ஆனா என்னை ஊரைவிட்டுப் போன்னுமட்டும் சொல்லாதீங்க. நாளைக்கே அவங்களை மாமன் வூட்டுக்கு அனுப்பிச்சூடறேன். நானே வூட்டுக்குக் காவலாக நிக்கறேன். என்னோட எலும்பு வூட்லேயே பொதைஞ்சாலும் சரி, வூட்டை விட்டுப் போகமாட்டேன். கோவிச்சுக்கக்கூடாது. ஆச்சாரய்யா! குடும்பக் கௌரவத்தைக் காப்பாத்தற பொறுப்பு உங்களுக்கும் உண்டு; எனக்கும் உண்டு. கணக்கப்பிள்ளை புகார் எழுதுங்க. கொள்ளையடிச்சவங்க கையிலே வெலங்கை மாட்டி இந்தக் கண்ணாலே பாக்கணும். மணியக்காரரு ஜோலிக்குப் போனா என்ன நடக்குங்கறதை அவங்க தெரிஞ்சுக்கணும்' என்று ஆவேசத்துடன் கௌடரின் மனைவி சொன்னாள். என்ன சமாதானம் சொன்னாலும் அவளுடைய ஆக்ரோஷம் குறையவில்லை. நன்மை தீமைகளையும் விவேகத்தையும் மீறிய ஆவேசம் அது. அது என்றும் இல்லாத தைரியத்தை உண்டாக்கிவிட்டது. தான் பேசுவதெல்லாம் முடிந்த முடிவுதான் என்ற முறையில் பேசினாள். அவள் வாழ்நாள் முழுவதும் உள்ள பலமெல்லாம் சேர்ந்து இப்படிப் பேச வைத்தது. இவள் பழைய பார்வதி அல்ல. அப்பொழுது இருந்த கையாலாகத்தனமும் பயமும் மறைந்து

விட்டன. அவள் குரல் வச்சிரம் தடவியதுபோல் ஒலித்தது. அது மணியக்காரக் குடும்பத்துக்கு உள்ள தனித்தன்மையோ என்னவோ? சாகுமுன் சங்கரப்ப கௌடரும் இப்படித்தான் பேசினர். ஆச்சாருக்கு அந்தக் காலம் நினைவுக்கு வந்தது.

யாரும் எதுவும் சொல்லும் நிலையில் இல்லை. பார்வதி பேசாமல் இருந்தாள். ஆச்சார் பேசும் நிலைமையில் இல்லை. சேஷப்பா, தன் யோசனை வென்றுவிட்டது என்று சந்தோஷப் பட்டான். ஆனல் அது என்ன சந்தோஷம்! பார்வதியம்மாளின் வேகத்தைப் பார்த்த அவனுக்கும் உள்ளூரப் பயம் உண்டாயிற்று. பார்வதியம்மாள், ஆச்சார் சொன்னபடியே கேட்டிருக்கக் கூடாதா? என்று தோன்றியது. ஊருக்கே சவால்விடும் தைரியம் ஒப்பற்றதுதான். ஆனல் அது அடத்தை விலைக்கு வாங்குவதாக இருந்தது. ஜனங்களுடைய கீழ்த்தரமான நடவடிக்கை அவளுடைய பொறுமையைச் சோதித்துவிட்டது; அவளுடைய திறமையையும் பரிசோதித்துவிட்டது. ஒரு பெண்பிள்ளைக்கு இதைவிட அவமானம் என்ன வேண்டும்?

நள்ளிரவு ஆகிவிட்டது. சேஷப்பாவும் ஆச்சாரும் புறப் பட்டார்கள். தெருக்களில் நடமாட்டம் இல்லை. ஆனல் வெறி பிடித்ததுபோல் ஊர் நாய்கள் எல்லாம் போட்டி போட்டுக் கொண்டு குரைத்தன.

'அப்ப! மிகவும் மானம் உள்ள பெண்பிள்ளை! உங்கள் யோசனைக்குச் சம்மதம் இல்லை என்பதைத் தெரிவித்துவிட்டாள். பாருங்க, ஆச்சார்! என்னவானலும் புகார் குடுத்தூடுன்னு சொல்லிட்டா. நான் குடுத்தூடறேன். இந்த லிங்கப்பனையும் படையனையும் கம்பி எண்ண வைக்கிறேன். கணக்கப்பிள்ளை வேலை போனு என்ன ஆச்சார்? அது இல்லாமலே சேஷப்பா என்ன செய்வான் என்பதைக் காண்பிக்கிறேன்' என்று சொல்லிக் கொண்டே நடந்தான் சேஷப்பா.

ஆச்சார் அவனுடைய பேச்சைக் காதில் வாங்கிக்கொள்ளவே இல்லை. அவருடைய லட்சியமெல்லாம் வருங்காலத்துத் திரையை ஒதுக்கிப் பார்ப்பதில் ஈடுபட்டிருந்தது.

லிங்கப்பா தாலூகாவிலிருந்து திரும்பிவந்தபோது அஞ்சல் மல்லப்பன் ஊரில் இல்லை. கௌடர் மனைவி எழுதிக்கொடுத்த புகாரைப் போலீஸில் கொடுக்கப் போயிருந்தான். செய்தியைக் கேட்ட லிங்கப்பாவுக்குக் கோபம் வந்தது. தான் நிலத்தைச் சொந்தப்படுத்திக்கொள்ள முடியாதபடி பார்வதியம்மாள் செய்கிறுள் என்று ஆத்திரம் அடைந்தான். அதைப் படதையா விடம் சொன்னுன். அதற்கு அவர், ''இதற்காக ஏன் கவலைப்படறீங்க? புகார் கெடைச்சவுடனே வந்தாலும் சப் இன்ஸ்பெக்டர் நாளைக்கு வரலாம். நாம இன்னிக்கு ராத்திரியே நெலத்தைப் பரம்படிச்சுடலாம். சப் இன்ஸ்பெக்டர் வந்து நெலத்தை உழவேண்டாம்னு சொன்னு, 'பயிர் பண்ணுமே நெலம் வீணுப்போகுதூன்'னு சொல்லி வெதை வெதைக்க அவங்கிட்டேயே அநுமதி வாங்கிடணும். ராத்திரி வேளைலே பரம்படிச்சு வெதைக்க முடியாது. அதனுலே இப்பவே போய் ஆரம்பிச்சுடுவோம்'' என்று ஆறுதல் சொன்னுர்.

குடியானவர்கள் எல்லாம் லிங்கப்பாவின்கூடவே வந்திருந் தார்கள். பஞ்சநிவாரணக் கடன் பணத்தை இடுப்பிலிருந்து எடுப்பதற்கு முன்பே பரம்பு, களைக்கொட்டு, எருதுகள் முதலிய வற்றுடன் நிலத்துக்கு வரவேண்டும் என்று படதையா குடியானவர்களிடம் சொன்னுர். பணமுடிச்சை வைத்துவிட்டுச் சாப்பிட்டவுடன் படதையாவின் உத்தரவுப்படி அவர்கள் புறப் படத் தயாராஞர்கள்.

ஊரார் விளக்கை அணைத்துவிட்டுப் படுக்கும் நேரம் ஆகிவிட்டது. லிங்கப்பாவும் சாப்பிட்டுவிட்டுத் தயாராக இருந்தான். கௌடருடைய செம்மண் பூமியில் விதைத்திருந்த பயிரைப் பரம்படித்துவிட்டு நிலத்தைச் சமன் செய்வதற்காக லிங்கப்பாவின் தலைமையில் நாற்பது ஜோடி எருதுகள் புறப் பட்டன. சேரி ஆள் ஒருவன் பிடித்திருந்த தீவட்டியின் ஒளியில் லிங்கப்பாவின் முகம் கொடூரமே நிறைந்ததாகக் காணப்பட்டது. கௌடருடைய வீட்டைப் படையெடுத்தபோது காட்டிய பேடித் தனத்தை இனிமேல் என்றும் காண்பிக்கக் கூடாது என்று உறுதியாக இருந்தான். தானும் ஆஸ்தியுள்ளவனுக விளங்க வேண்டும் என்ற ஆசை அவனைப் பிசாசாகத் துரத்தியது. அதிகாரத்திலிருந்து ஒவ்வொன்றையுமே அவன் போராடிப் பெற

வேண்டியிருந்தது. ஓயாத முயற்சியில் வெற்றி அடங்கியே இருக்கிறது என்பது தற்சமயம் அவன் கண்ட உண்மை.

அவனுடன் குடியானவர்கள் புறப்பட்டார்கள். யாருடைய முகத்திலும் சுரத்தில்லை. ஏதோ செய்யத் தகாத செயல் ஒன்றைச் செய்யப் போகிறோம் என்ற நினைவு எல்லோரையும் வருத்தியது. ஆனால் மணியக்காரர் வாங்கிக் கொடுத்த பணம் அவர்கள் வாயை மூடிவிட்டது. இருட்டில் பாப நினைவை மறைத்துவைக்க முடியும். கூட்டமாக வந்த தெம்பில் எல்லோரும் அந்த நினைவை மறந்ததுபோல் இருந்தார்கள். பாவம் செய்யும்போது துணைவேண்டும். புண்ணியச் செயலுக்கு அது தேவையில்லை. புண்ணியம் ஆத்ம பலத்தில் காலூன்றியே வளர்ந்துவிடும். பாவிக்கு நிச்சயமாக மற்றொரு பாவியின் துணை வேண்டும்.

படைதையா மட்டும் அவர்களுடன் போகவில்லை. செய்தியை அறிந்து பரம்படிப்பவர்களை யாராவது தடுக்கவந்தால் அவர்களைத் தடுப்பதற்காகச் சேரி ஆட்களையும் கூலிக்காரர்களையும் ஒரு படையாகச் சேர்த்துக்கொண்டு அவர் மடத்திலேயே தங்கினார். பரம்படிக்கப் போனவர்களைத் தரும பீடத்தின் சார்பாக ஆசீர்வதித்து அனுப்ப அவர் மறக்கவில்லை.

மடத்திலும் போதுமான ஜனங்கள் இருந்தார்கள். அவர்கள் எல்லோரும் படைதையாவின் அன்புக்கு உரிய சீடர்கள். தீர்த்தப் புட்டிகளை ஒவ்வொன்றாகத் திறந்துகொண்டிருந்தார்கள். அத்துடன் மட்டமான பேச்சுக்களும் குறும்புத்தனமான சேஷ்டைகளையும் தாராளமாகக் கையாளப்பட்டன. தீர்த்தம் குடித்துப் போதை ஏறியபின் சாமியாரின் வாயிலிருந்து புறப்படும் பேச்சைக் கேட்கச் சீடர்கள் எல்லாம் ஆவலோடு உட்கார்ந்திருந்தார்கள்.

சீடர்களுள் சிறந்தவனாகிய வாரக்காரக் கரியனுக்கு வீட்டில் மனைவி சொன்ன ஒரு பேச்சால் ஒரு யோசனை வந்தது. அந்த விஷயத்தில் சாமியார் வாயிலிருந்து என்ன பதில் வருகிறது என்பதைக் கேட்டுத் தெரிந்துகொள்ள நினைத்தான். குவளையில் தீர்த்தத்தை ஊற்றி அவருக்குக் கொடுத்தான். பிறகு பணிவுடன் கீழே விழுந்து வணங்கி, 'சாமி, கௌடருடைய நெலத்தைச் சொந்தம் ஆக்கிக்கறபோது ஜாகீர் வாரக்காரர்களை எல்லாம் வச்சுகிட்டுத்தான் இந்தக் கௌடர் வேலை செய்வார்னு சொன்னீங்க. இப்பக் குடியானவங்களை மட்டுமே அனுப்பிச்சிட்டீங்க. நாளைக்கு அவங்க, தங்களுக்கே சாகுபடி உரிமை கொடுக்கணும்னு கேட்டா இல்லேன்னு மறுக்க முடியுமா?' என்று முறையிட்டான்.

படதையா அன்று வேண்டுமென்றே குறைவாகத் தண்ணி போட்டிருந்தார். அதனால் போதை ஏறவில்லை. தலைமைச் சீடனுடைய பேச்சைக் காதில் வாங்கிக்கொண்டார். ஆனால் கேட்காததுபோல் நடித்தார். அவன் பேசியதெல்லாம் அவருக்குப் புரிந்தது. நேராகச் சொல்வதில் பயனில்லை என்று நினைத்துப் புதிய அவதாரம் எடுக்க விரும்பினார். கண்கள் பாதி திறந் திருந்தன. உதடுகள் அளவோடு அசைந்தன. புருவங்கள் சுருங்கின. முதலில், 'ஹாம்' என்ற இடிகுரல் மட்டும் கேட்டது. சீடர்கள் எல்லோரும் தயாராக ஆகும்படி கொடுத்த ஆணை இது. அடுத்த கணம் கண்கள் திறந்துகொண்டன. கரியன்மேல் அருட்பார்வை விழுந்தது. அவன் பக்தியோடு கை கூப்பினான்.

'மகனே! கேள். உன்னோட நெலம் உன் மடியிலேயே கெடக்கு. சோள மூட்டை அடுக்கியிருக்குது' என்று கர்ஜித்தார். அதைக் கவனித்துக் கேட்ட கரியனுக்கு ஒன்றும் புரியவில்லை.

'நெலத்தைக் குத்தகைக்குப் பிடிச்ச குடியானவங்க நெலத்தை உழுது பரம்படிச்சிருக்காங்களே சாமி! புரியறாப்பலே சொல்லுங்க சாமி' என்று பொருள் தெரியாமல் கெஞ்சிக் கேட்டான்.

'வெதைச்ச பயிர் எல்லாத்தையும் சாப்பிடறதில்லை. வூட்லே பணமுடிச்சு வைச்சவனுக்கு அது தெரியறதில்லை. தானியமாக் குவிச்சவன் வாயிலே மண்ணு; உன் வீட்டுலே வந்து விழுது பொன்னு' என்று மற்றொருமுறை தெய்வ வாக்குக் கர்ஜித்தது. இதைக் கேட்ட கரியன் மேலும் குழம்பினான்.

'ஐயா அவுங்க மகிமையே புரியாதது. அவர் சொன்னதை மனசிலயே நெனைச்சு நெனைச்சு அர்த்தம் புரிஞ்சுக்கணும். உடனே அர்த்தம் புரிஞ்சிட்டா அது தெய்வ வாக்கா? இதை மறக்காம நெனப்பிலே வச்சிகிட்டு அறிவாளிகளான யார் கிட்டேயாவது கேட்டு அர்த்தம் தெரிஞ்சுக்கணும். அர்த்தம் வெளிப்படையா இருக்கற வாக்குச் சொல்றத்துக்கு அவர் என்ன சில்லறைச் சாமியாரா?' என்று எண்ணிக் கரியன் அவர் சொன்னதையே உருப்போட்டுக்கொண்டிருந்தான்.

சற்று நேரம் சூழ்நிலை அமைதியாக இருந்தது. பிறகு ருத்திரன் கைகூப்பி, ''சாமி! நேற்றிக்கிச் சோளம் குடுத்தே. ஊட்லே பண்டிகை நடத்திட்டோம். ஆனா ஆகாத ஜனங் கள்ளாம், 'அந்தப் பார்வதியம்மா வீட்டுக் குழியையெல்லாம் கொள்ளை அடிச்சிட்டீங்க. அதனாலே அந்த அம்மா புகார் கொடுத்திருக்காங்க'ன்னு சொல்லறாங்க. அதிலேருந்து தப்பிக்க என்ன வழி சொல்றீங்க சாமி!'' என்று கேட்டான்.

போலிச் சமாதியில் (ஆவேசத்தில்) இருந்துகொண்டு விழிப்பாகவே இருந்த படதையாவுக்கு இந்தக் கேள்வி காதில் விழுந்தது. சமாதியை (ஆவேசத்தை) எறக்கறதாலை அவருக்குத் தொந்தரவாக இருந்தது. எப்படியோ சமாளித்துக்கொண்டு விழிப்புநிலைக்கு வந்தார். 'ஏண்டா, ருத்திரா! என்னடா சொல்றே? கௌடர் பொண்சாதி புகார் கொடுத்திருக்கான்னு பயந்திட்டியா, மகனே?' என்று கேட்டார். குரலில் தெய்வ ஆவேசம் ஒலிக்கவில்லை. கரகரப்புத்தான் இருந்தது.

'ஐயா! நீ இருக்கறச்சே எனக்கு என்ன பயம்? ஆனா புகார் கொடுத்தது நெஜம்னு உனக்குத் தோணுதா?' என்று ருத்திரன் கேட்டான்.

படதையாவுக்கு உண்மையில் அந்தச் செய்தி தெரியாது. 'நெலத்தை வசப்படுத்திக்க வந்தவங்களைத் தடுப்பதற்காகச் சர்க்காரிடம் உதவி கேட்டிருக்கலாம்' என்று அவரே நினைத்தார். ஆனால் ருத்திரன் சொன்ன செய்தியே வேறாக இருந்தது. புகார் கொடுத்தாலும் தப்பித்துக்கொள்ளும்படியாக மூன்று குழிகளுள் லிங்கப்பாவின் பங்கான ஒரு குழியிலிருந்தே தானியத்தை எடுத்துப் பங்கிட்டிருந்தார். இது முன் ஜாக்கிரதையாகச் செய்தது. நாளைக்குப் போலீஸார் வந்து கைக்கு அகப்பட்டவர்களைப் பிடித்து அடித்தால் அவர்கள் ஏதாவது உளறிவிடுவார்கள். தாமே தூண்டிவிட்டவன் என்று தெரிந்துவிடலாம் என்ற கவலை படதையாவுக்கு இப்போது வந்துவிட்டது. அப்படி நேர்ந்தால் மேலே என்ன செய்வது? என்று யோசித்தார்.

குடிபோதையில் படதையாவின் புத்தி சுறுசுறுப்பாக வேலை செய்தது. இதற்கு முன்பே செய்த சூழ்ச்சி ஒன்று அவருடைய மனத்தில் உருவெடுக்கத் தொடங்கியது. எதிர்பாராமல் ஊர் காவல் இல்லாமல் இருக்கிறது. தம் மடத்தில் விசுவாசம் உள்ள ஊழியர்கள் இருந்தார்கள். ஒவ்வொரு வீட்டிலும் இன்று வந்த பண முடிச்சு இருந்தது. இவர்களை அனுப்பி அந்தப் பணத்தை எல்லாம் தருவித்துவிடலாமே. நாளைக்கு லிங்கப்பாவின்மீதும் அவனுடைய குடியானவர்களின்மீதும் பழிவாங்கக் கௌடர் மனைவியே திருடிவிட்டாள் என்று குற்றத்தை அவள்மேல் சுமத்திவிடலாம் அல்லவா? இதுபோன்ற சந்தர்ப்பம் மறுபடியும் கிடைக்காது என்று முடிவு செய்து, திட்டத்தை உருவாக்க மற்றொரு குவளை சாராயத்தை உறிஞ்சினார்.

'ருத்திரா! கௌடர் பொண்சாதி புகார் கொடுத்தால் கொடுக்கட்டும். தான் கொடுத்த புகாரை வாபஸ் வாங்கிகிட்டு அவள் உங்க எல்லோருடைய கால்லேயும் விழணும். அதுக்குத் தகுந்த வேலை செய்யத் தயாரா?' என்று கேட்டார்.

சீடர்கள் எல்லோரும் விழிப்புடன் படதையாவின் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தார்கள். என்ன உபாயம் சொல்லப்போகிறரோ, யாருக்குத் தெரியும்?

'இதோ பாருங்க! அறுபது குடியானவங்க அவங்க அவங்க வூட்லே பணத்தை வச்சிட்டு வயலுக்குப் போயிருக்காங்க இல்லியா? அவங்க வீட்டுக் கதவையெல்லாம் ஒடைச்சுப் பணத்தைக் கொணந்து இங்கே வையுங்க. அதை நான் குடியான வங்ககிட்டச் சேத்துடறேன். பார்வதியம்மாதான் அவங்க வூட்லே கொள்ளையடிக்கச் செய்ததாகக் குடியானவங்க புகார் கொடுத்தா, என்ன நடக்கும் தெரியுமா?' என்று சிரித்துக் கொண்டே கேட்டார்.

வேலை இல்லாமல் கிடந்த சோம்பேறிகளுக்குச் சுறுசுறுப்பு உண்டாயிற்று. குடியானவர்கள் எல்லாம் துணிகரமான ஒரு செயலுக்காகப் போயிருக்கும்போது தாங்கள் மட்டும் சும்மா உட்கார்ந்திருப்பது அவர்களுக்குப் பிடிக்கவில்லை. படதையா அவர்களுடைய அந்தரங்க ஆசையை இப்போது தூண்டிவிட்டு விட்டார். எல்லோரும் மறுபடியும் ஒருமுறை குடித்துவிட்டுச் சுறுசுறுப்பை அதிகமாக்கிக்கொண்டார்கள். வெளியே இரவு கேட்பாரற்றுக் கிடந்தது. இந்தச் சந்தர்ப்பத்தை வீணாக்கக் கூடாது. பரம்படிக்கப்போன குடியானவர்கள் திரும்ப எவ்வளவு நேரம் ஆகுமோ? ஒவ்வொரு வீட்டுக்கு ஒவ்வொருவராகப் போய்ப் பணத்தைத் திருடி வரவேண்டும் என்று முடிவாயிற்று. வீட்டில் உள்ளவர்கள் எதிர்த்தால் அவர்களை மிரட்டிக் கொண்டு வந்துவிடுவது என்று தீர்மானித்தார்கள். கூடியமட்டும் ஓசைப் படாமலும் தகராறு இல்லாமலும் வேலையை முடிக்கவேண்டும் என்ற முடிவுடன் படதையாவின் சீடர்கள் எல்லோரும் ஒவ்வொருவராக அந்தச் சாகசச் செயலுக்குப் புறப்பட்டார்கள்.

கொள்ளையடிக்க அவர்களுக்கு யாரும் சொல்லித் தர வேண்டிய அவசியம் இல்லை. அதன் நெளிவு சுளிவுகள் எல்லாம் ஏற்கெனவே அவர்களுக்குத் தெரிந்திருந்தன. கரிய 'கும்' என்ற இருட்டு மேகமூட்டத்தால் இன்னும் நெருக்கமாக இருந்தது. ஒருவர் முகம் ஒருவருக்குத் தெரியவில்லை. நாய்களை எங்கே அனுப்பிவிட்டார்களோ? ஒன்றுகூடக் குரைக்கவில்லை. ஒருமணி நேரத்துக்குள் பாதள்ளித் தெருக்களில் இருந்த வீடுகளில் எல்லாம் தெருக்கதவுகளின் வெளிப்புறம் சங்கிலி போடப்பட்டிருந்தன. குடியானவர்கள் வீட்டுக் கதவுகளின் கீல்களை நகர்த்திக் கதவு களைத் தூக்கி ஓசைப்படாமல் உள்ளேபோய் பணத்தைத் திருடிக் கொண்டு வந்துவிட்டார்கள். இரண்டுமணி நேரத்தில் அவர்கள் கொண்டுவந்த பணமுடிச்சுகளைப் படதையா மடத்துப் பெரிய

பெட்டியில் வைத்துப் பத்திரப்படுத்தினர். திருடியவர்கள் தாம் திருடிவந்த நகைகளைமட்டும் மறக்காமல் தம் தம் வீட்டுக்குக் கொண்டு சென்றனர்.

சந்தடியில்லாமல் பொழுது விடிந்தது. இரவெல்லாம் உழுத சால்கள் அரைகுறையாக வெளியில் தெரிந்தன. விதை விதைத்த கௌடருடைய நிலம் வெறிச்சோடிக் கிடந்தது. நிலத்தின் கர்ப்பம் கலைந்ததுபோல் ஆயிற்று. மண்ணாங்கட்டிகளுடன் வெளியே கிடந்த இளம்பயிர்கள் எருதுகள் மிதித்ததால் நசுங்கி விட்டன. ஒரு மாதத்தில் போர்வை கிழிந்த ஆயிரக்கணக்கான சிதைந்த கருவைப்போல் தோன்றின. நிலம் பார்க்கக் கண்ணராவியாக இருந்தது. திருட்டுக் கர்ப்பம் வெளியாகி துர்நடத்தையின் ரகசியமெல்லாம் வெளிப்பட்டதால் கருவைச் சிதைத்துத் தற்கொலை செய்துகொண்ட பெண்ணின் உடலைப் போல் நிலம் தாறுமாருகக் கிடந்தது.

விடியற்காலம் நாலாம் ஜாமத்தில் இந்தத் துணிகரச் செயலை முடித்துக்கொண்டு குடியானவர்கள் வீடுகளுக்குத் திரும்பியதும் அவர்கள் அங்கே கண்டது என்ன? பஞ்சநிவாரணக் கடன் பணமெல்லாம் மாயமாகிவிட்டது. வீட்டில் பெண்கள் சொன்ன செய்திகளைக் கேட்டு அவர்கள் இன்னும் கவலை அடைந்தார்கள். விதைத்த நிலத்தை அழித்ததால் கிடைத்த தண்டனை இது என்று அவர்கள் முறையிட்டபோது அதுவும் நிஜம் என்று தோன்றியது.

லிங்கப்பா விடியற்காலம் மடத்துக்கு வந்ததும் படதையா அவனிடம் இந்தச் செய்தியைச் சொல்லவில்லை. அவனிடமே செய்தியைக் கேட்டுத் தெரிந்துகொண்டார். 'இப்பத்தான் நீங்க நிஜமான மணியக்காரர் ஆனீங்க' என்று பாராட்டினர் படதையா. மகிழ்ச்சியாலோ விடிய விடியத் தூக்கம் இல்லாமல் குளிரில் அலைந்ததாலோ லிங்கப்பா களைத்திருந்தான். அந்தப் பாராட்டை ஏற்று வாயாரப் பேசும் நிலையில் அவன் இருக்கவில்லை.

பொழுது விடிந்தது. குடியானவர்கள் எல்லாம் கூட்டம் கூட்டமாக மடத்துக்கு வரத்தொடங்கினர்கள். பஞ்ச நிவாரணக் கடன் பணத்தோடு வீட்டில் இருந்த நகைகளும் களவு போய்விட்டதைப்பற்றிப் படதையாவிடம் சொல்லி முறையிட்டு அழுதார்கள். அவரும் ஆச்சரியப்படுவதுபோல் நடித்து மிகவும் அநுதாபத்துடன் அவர்கள் சொன்னதைக் கேட்டுக்கொண்டார். தாமும் வருந்துவதுபோல் நடித்தார். ஆனால் குடியானவர்கள் அங்கிருந்து நகருவதாகத் தெரியவில்லை.

'இந்த மண்ணின் குணமே அது. வழிப்பறி செய்து அரசாண்ட ராஜாவின் ஊர் இது. இங்கே புலிவேட்டைக் காரர்களும் அதையே பின்பற்றினார்கள். இப்போது ஜாகீர்தாரின் ஆதரவை இழந்தபின் அவர்கள் நிலங்களைப் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள். இப்போது கௌடர் மனைவியே அவர் களுக்கு யஜமானி ஆகிவிட்டாள். உங்கள் வீடுகளில் களவுபோன பொருள்கள் இன்னவை என்று கௌடரிடம் சொல்லுங்கள். அவர் பட்டியல் போடுவார். நாளைக்கு ரிப்போர்ட் செய்து போலீசைத் தருவிப்பார். அதோடு இந்தக் கௌடர் மனைவியின் ஆட்டம் ஒடுங்கிவிடும். தெரிஞ்சுக்குங்க' என்று சொன்னார் படதையா.

'கௌடர் மனைவி இருந்தால் என்ன? ஒழிந்தால் என்ன? நாங்க சோத்துக்குக் கதி இல்லாதவங்க ஆயிட்டோம். பஞ்ச நிவாரணக் கடன் வாங்கி ஆச்சு. திங்க ஒருபிடி சோறு இல்லே. எங்க அதிர்ஷ்டத்தை என்ன சொல்லறது?' என்று முறையிடும் குடியானவர்களுக்கு ஆறுதல் சொல்ல லிங்கப்பாவால் முடிய வில்லை. செய்தியைக் கேட்டவுடன் அவன் மனம் உடைந்து விட்டது. முகம் களையிழந்துவிட்டது. தான் குற்றம் செய்து விட்டதாக நினைத்தான்; நம்பினான். தவிர இத்தனை குடியானவர் களுடைய நஷ்டப் பொறுப்பையும் அவன் ஏற்கவேண்டிய தாயிற்று. மணியக்காரனாக இருப்பவனுக்கு இந்தப் பொறுப் பெல்லாம் இருக்கும் என்பதை அவன் கற்பனைகூடச் செய்து பார்த்ததில்லை. இப்பொழுது உண்மை அநுபவம் பெரும் சுமையாகத் தோன்றி அழுத்தியது.

படதையா இதைக் கவனித்துவிட்டார். 'இதோ பாருங்க, உங்க வூட்லே எல்லாம் கள்ளன் புகுந்ததைக் கேட்டுக் கௌடருக்கு வருத்தமா இருக்குது. உங்களுடைய நஷ்டத்தைத் தம்முடையதாக நெனச்சுகிட்டுத் தெகைச்சுப்போய் உக்காந் திருக்காரு. அவர் எப்படியாவது திருட்டைத் துப்பறிந்து நீங்கள் நஷ்டப்பட்டதில் கொஞ்சமாவது ஈடு செய்வார்' என்றார். 'கௌடரே! விடிய விடிய உங்களுக்குத் தூக்கம் இல்லே. இப்ப ஸ்நானம் செய்து, சாப்பிட்டுவிட்டுத் தூங்குங்க. அப்பறம் பார்க்கலாம்' என்று சொல்லி லிங்கப்பாவை அனுப்பிவிட்டார். கூடியமட்டும் நிலைமையைச் சமாளிக்க முயன்றார். தம்முடைய சாமர்த்தியம் முழுவதையும் உபயோகித்துக் குடியானவர்களுக்கு ஆறுதல் சொன்னார். ஆனால் அவர்கள் முணுமுணுத்துக் கொண்டே வீட்டுக்குச் சென்றார்கள்.

அன்று பாதள்ளியில் எல்லோருடைய முகமும் களையிழந்து இருந்தது. ஜனங்கள் எல்லோரும் நடைப்பிணம்போல் காணப் பட்டார்கள். மனம் ஈடுபடாமலேயே வேலைகள் நடந்தன.

பொழுதே போகாது என்று நினைத்தார்கள். விதைத்த நிலம் காலியாகி வெறிச்சோடிக் கிடந்தது. நிறைந்திருந்த வீடுகள் எல்லாம் காலியாகிவிட்டன. மனத்திலும் ஒரு வெறுமை. ஓயாமல் உழைத்துச் சேர்த்ததெல்லாம் ஒருநாள் பொழுது விடிவதற்குள் மாயமாகிவிட்டால் யாருக்குத்தான் துக்கமாக இருக்காது? ஒழுங்கு தவறிவிட்டது. வீட்டின் நிழலும் நிலத்தின் ஆதரவும் இருந்தபோதிலும் வெட்டவெளியில் அநாதையாக உட்கார்ந்திருப்பதுபோல் தோன்றியது. பாதள்ளியே துரத்துவதுபோல் இருந்தது.

நாள் தவறாமல் நாற்பதாண்டுக்காலமாகக் கிருஷ்ண நதிக்குப்போய் ஸ்நானம் செய்துவந்த பாளாச்சாரின் விரதம் அன்று தடைப்பட்டது. தெருக்கதவு வெளியே சங்கிலியிடப் பட்டிருந்ததால் அவரால் ஆற்றுக்குப் போக முடியவில்லை. தெருவில் ஜனங்கள் நடமாடும்வரையில் அவர் காத்துக்கொண் டிருந்தார். சேஷப்பாவும் காலையில் எழுந்ததும் இந்தச் செய்தியைகேட்டு திகில் அடைந்தான். ஊரில் குடியானவர்கள் வீட்டில் திருடர்கள் புகுந்ததைக் கேட்டுப் பார்வதியின் நெஞ்சம் பதைத்தது. திருடர்களைத் தூண்டிவிட்டவள் அவள்தான் என்னும் செய்தி உடனேயே அவள் காதுக்கும் எட்டியது. எந்தத் துக்கத்தைத் தாங்குவது என்பதே தெரியவில்லை. இரவெல்லாம் நிலத்தை உழுது பறம்படித்தது நெஞ்சிலே உழுததுபோல் இருந்தது. விதைத்த பயிரை அழித்துவிட்டார்கள். பொழுது விடிவதற்குள் திருட்டுக் குற்றமும் அவள்மேல் விழுந்தது. விதி வாசலிலேயே உட்கார்ந்துகொண்டு குடும்பத்தையே வாதுக்கு இழுப்பதுபோல் இருந்தது. பாளாச்சாருக்குச் சொல்லியனுப் பினாள். அவரை அழைக்கப்போன ஆள் திரும்பிவந்து சொன்ன பதிலைக்கேட்டு அவள் உடம்பு நடுங்கியது: 'இன்றோடு பாதள்ளி யின் நல்லகாலம் தீர்ந்துவிட்டது' என்று அவர் சொல்லியனுப்பி யிருந்தார். அப்படியானால் ஊருக்குக் காவலே இல்லையா! ஒவ்வொரு நாளும் பயங்கர நிலையை அதிகப்படுத்திக்கொண்டே இருக்கின்றது. இரவில் செய்த பாவமெல்லாம் பகலில் பயங்கர மாகக் காணப்பட்டன. முன்பெல்லாம் வீட்டுக்குவந்து, 'சௌக்கியமா?' என்று விசாரித்துவிட்டுப் போகும் ஜனங்களே இன்று கீழ்த்தரமான செயலில் ஈடுபட்டிருக்கிறார்கள். அப்படி யானால் ஒருவருடைய சுபாவம் என்பது அதிருஷ்டம் பூசும் வெறும் வர்ணந்தானா?

பாதள்ளியின் புண்ணியம் தீர்ந்துபோய்விட்டதா? எப்படி நம்புவது? அவர்கள் குடும்பத்து முன்னோர்கள் ரத்தத்தைச் சிந்தி நிலத்தைக் காப்பாற்றினார்கள். அது கட்டுக்கதை அன்று.

சங்கரப்ப கௌடர் அப்படித்தான் இருந்தார். அவரைப் பார்த்தால் போதும்; தீய நினைவுகள் காலில் நசுங்கிய புழுவைப்போல் அழிந்துவிடும். தேவையானால் தம் உயிரைக் கொடுத்தே பாதள்ளியைக் காக்கக்கூடியவர் அவர். அவருடைய புண்ணியம் ஊரைக் காக்காமல் போய்விடுமா? பாளாச்சார் இருக்கிறார். அவர் செய்த புண்ணியம் கொஞ்சமா? காலராவின்போது வீடு வீடாகப்போய் மருந்து கொடுத்துப் பிழைக்க வைத்தார். துக்கம் நேர்ந்தவர்களுக்கு ஆறுதல் சொல்லிக் காப்பாற்றினார். ஊரில் அவரை யோசனை கேட்காதவன் பாவி. அப்படிப்பட்டவர் ஜீவ ஒளியாக இன்னும் பாதள்ளியில் இருக்கும்போது நல்லகாலம் தீர்ந்தது என்று எப்படிச் சொல்வது?

தானியக் குழிகள் கொள்ளை போனதைப்பற்றிக் கௌடர் மனைவி கொடுத்த புகாரைப் போலீஸில் கொடுப்பதற்காகப் போயிருந்த அஞ்சல் மல்லப்பன் திரும்பி வந்தவுடன் இந்தச் செய்தியைக் கேள்விப்பட்டான். தான் ஊரில் இல்லாத ஓர் இரவில் எப்படிப்பட்ட விபரீதம் நடந்துவிட்டது என்று தலையில் அடித்துக்கொண்டான். மல்லப்பனுக்குத் தனிப்பட்ட வாழ்க்கை என்று ஒன்று இல்லை. எப்பொழுதுமே சங்கரப்ப கௌடரின் அந்தரங்க வேலையாளாகவே இருந்துவந்தான். அவனுக்குக் கௌடரிடம் அசைக்கமுடியாத பக்தியிருந்தது. விதைத்த நிலத்தைப் பறம்படித்து அழித்துவிட்டார்கள் என்பதைக் கேட்டு அவன் வயிற்றைச் சங்கடம் செய்தது. பார்வதியின் சோகம் நிறைந்த முகத்தைக் காண அஞ்சிச் சாவடித் திண்ணைக்கு வந்து பிரமை பிடித்தவன்போல் உட்கார்ந்திருந்தான்.

ஆவணி மாதம்; மேகம் நிறைந்த வானம் உருத்துப் பார்ப்பது போல் இருந்தது. பொழுது விடிந்து நான்கு மணி நேரம் ஆன பின்னும் கிரகணம் பிடித்ததுபோல் எங்கும் இருட்டாக இருந்தது. எங்கேயோ பார்த்தவண்ணம் மல்லப்பன் அசையாமல் உட்கார்ந்திருந்தான். 'கௌடர் பொண்சாதி எங்க வூட்டைக் கொள்ளை அடிச்சிருக்கா. அவ மக்களை எங்க வவுத்தெரிச்ச தாக்காதெ இருக்குமா?' என்று சொல்லியவண்ணம் ஜனங்கள் நடமாடிக் கொண்டிருந்தார்கள். மல்லப்பன் காதில் விழுந்த இந்தச் செய்தி அவனைத் தூக்கிவாரிப்போட்டது.

'அம்மா இந்த வேலை செய்வாங்களா!' என்று தனக்குத் தானே ஆச்சரியப்பட்டான். அவன் மூளையே குழம்பிவிட்டது. முன்பே இதுபோன்ற பல சம்பவங்கள் நடந்திருக்கின்றன. சங்கரப்ப கௌடருக்கு மந்திரிபோல் இருந்த மல்லப்பனுக்குச் சில விவகாரங்களின் ரகசியம்கூடத் தெரிந்திருந்தது. ஆனால் மனிதன்

என்றுமே இவ்வளவு தாழ்ந்த நிலேக்கு இறங்குவதில்லே. இதற்கும் பார்வதியம்மாளுக்கும் என்ன சம்பந்தம்? வாரக்காரன் கரியப்பன் அப்போது சாவடியைத் தாண்டிப் போய்க்கொண்டிருந்தான். மல்லப்பனேப் பார்த்துவிட்டு வேண்டுமென்றே நின்ருன். 'ஏனப்பா, மல்லப்பா! போலீஸைக் கூட்டியாந்து எங்களுக் கெல்லாம் கைவிலங்கு போடும்படியா நாங்க என்ன செய் திட்டம்?' என்று கேட்டு, அவனேச் சண்டைக்கு இழுத்தான். மல்லப்பன் காதில் அது விழவேயில்லே. ஒன்றும் அறியாதவனுய்த் தலேநிமிர்ந்து பார்த்தான். கரியப்பா திரும்பவும் அதே கேள்வியைக் கேட்டான். 'தானியக் குழிகளேக் கொள்ளேயடிச்ச வங்க மேலே மணியக்காரர் வீட்டு அம்மா பிராது எழுதி அதைப் போலீஸிலே குடுக்கச் சொன்னுங்க. அதைச் செய்வது அஞ்சல் காரன் வேலே. நான் கொடுத்தே ஆகணும். கரியப்ப மாமா! ஒங்களுக்கெல்லாம் கைவெலங்கு போடறது ஹேட் ஐயாவின் இஷ்டம். ஏன் ரொம்பப் பயமாப்போச்சோ?' என்று மல்லப்பன் பாதி அலட்சியமாகவும் பாதி கிண்டலாகவும் கேட்டான்.

கரியப்பனும் அப்படியே பேசினன். 'கௌடர் மனேவிதான் தங்கள் கூட்டத்தினர்மேல் உள்ள கோபத்தால் தங்கள் வீடுகளேக் கொள்ளேயடிக்கச் செய்தாள் என்பதை அவனும் நம்பினன். மல்லப்பன் எவ்வளவோ சொல்லிப் பார்த்தும் கேட்கவில்லே. அவனுக்கே அலுத்துவிட்டது. 'போகட்டும் விடு, மாமா! திருப்பித் திருப்பி அதையே சொல்லிகிட்டிருந்தா என்ன லாபம்?' என்று சொல்லிப் பேசாமல் இருந்தான். கரியப்பனும் இனிமேல் பேசிப் பயனில்லே என்பதை உணர்ந்து வீட்டை நோக்கி நடந்தான்.

பொழுது சாயும்வரையில் மல்லப்பன் சாவடித் திண்ணேயி லேயே உட்கார்ந்திருந்தான். சாப்பிடக்கூட வீட்டுக்குப் போக வில்லே. காலி வீட்டில் ஒரு பூனேமட்டும் சுற்றுவதுபோல் அவன் மனம் சுற்றிச் சுழன்றது. இருட்டியவுடன் அங்கிருந்து எழுந் திருந்து கௌடர் வீட்டுக்குப் போனுன். அங்கே பிராதார லிங்கம்மாவின் மகன் ஒருவனேத்தவிர மற்றப் பிராதார கௌடர் கள் எல்லோரும் கூடியிருந்தார்கள். ஜெயின் ஜின்னப்பா, தன் தெருவைச் சேர்ந்த சிலருடன் அங்கே வந்து உட்கார்ந்திருந்தான். ஒருவர் முகத்திலும் ஈயாடவில்லே.

அஞ்சல் மல்லப்பா வந்து வணங்கியதும், ஜின்னப்பா, 'வா மல்லப்பா, வா. ஹேட் ஐயா என்ன சொன்னர்?' என்று கேட்டான். 'பாழ் ஊரில் எலிவிழ ஆரம்பிச்சிருக்குதுங்களாம். அங்கே போய் ஊரைக் காலிபண்ணீட்டு நம்ம ஊருக்கு வராரும்' என்ருன் மல்லப்பன்.

'எலிகள் விழுந்தால் போலீஸ் ஹேட் எதற்காக அங்கே போக வேண்டும்' என்பது அவர்களுக்கெல்லாம் புரியவில்லை. அதைப்பற்றி மல்லப்பனிடமே கேட்டார்கள். அதற்கு அவன் பதில் சொன்னான்: 'எலி விழுந்தே ஜனங்கள்ளாம் சாகுறாங் களாம். அதென்னமோ வியாதி வருதாம். அதற்காக அவர் போகணும்னு சொன்னாருங்க' என்று விளக்கினான். 'ஐயோ, சிவனே! எலி விழுந்தா ஜனங்க சாவுறாங்களா? நம்ம வீட்டுச் சாமான் அறையிலே எத்தினி எலீங்க விழுந்திருக்குது? எலி விழுந்தா அவன் வருவான்னு தெரிஞ்சா நான் அதையும் சொல்லி யனுப்பி இருப்பேனே' என்றாள் பார்வதியம்மாள். எலி விழுந்து மனிதர் சாகிறார்கள் என்பது அவர்களுக்கு வேடிக்கையாக இருந்தது.

கடைசியில் அந்தக் காரணத்தை முன்னிட்டே மறுபடியும் மல்லப்பனை அனுப்பிப் போலீஸை வரவழைப்பது என்று முடிவாயிற்று. மல்லப்பன் ஆகட்டும் என்று சொல்லிக் கும்பிட்டு விட்டுப் புறப்பட்டுப் போனான். கௌடர் மனைவியின்மேல் ஊர் ஜனங்கள் எல்லாம் அடங்காத கோபம் கொண்டிருக்கிறார்கள் என்றும், அவர்கள் எல்லாம் சேர்ந்து பார்வதியின் வீட்டை வசப்படுத்திக்கொள்ள லிங்கப்பாவுக்கு உதவப்போகிறார்கள் என்றும் ஜின்னப்பா சொன்னான். ஹெட் கான்ஸ்டபிளிடம் இந்தச் செய்திகளை எல்லாம் சொல்லி இனிமேல் பயமில்லாமல் ஏற்பாடு செய்துகொள்ளவேண்டும் என்று முடிவு செய்தபின், எல்லோரும் வீட்டுக்குப் புறப்பட்டார்கள். தெருக்கதவைத் திறந்தவுடன் வெளியே இருந்த இருட்டு, குளிர்காற்றுடன் உள்ளே வேகமாகப் புகுந்தது. மழை கண்ணைத் திறக்காமல் பெய்தது. கௌடர் வீட்டுக் கொல்லைப்புறத்தில் ஓயாமல் தவளைகள் கத்திக்கொண்டிருந்தன. இரவு அபசகுனத்தால் நிரம்பியதுபோல் பயங்கரமாக இருந்தது.

## 44

எலிகள் விழத் தொடங்கிவிட்டதால், ஜனங்களை வீடுகளி லிருந்து வெளியேற்றி, ஊருக்கு வெளியே குடிசை போட்டுக் கொண்டு தங்கச் செய்யும்படி தண்டோராப் போடவேண்டும் என்று லிங்கப்பாவுக்குத் தாலூகா ஆபீஸிலிருந்து அவசர உத்தரவு வந்திருந்தது. மற்றவர்களைப் போலவே அவனும் அது

மிக அபாயகரமானது என்பதை உணராமல் இருந்தான். ஆனால் உத்தரவை அமலாக்கவேண்டும் என்று நினைவு வந்தபோது அவனுக்கு ஒரு யோசனை உண்டாயிற்று. இந்தச் சாக்கிலேயே கௌடர் மனைவியை வீட்டிலிருந்து வெளியேற்றித் தான் வீட்டை ஏன் வசப்படுத்திக்கொள்ளகூடாது? நிலம் கிடைத்து விட்டது. வீடும் கிடைத்துவிட்டால் அவனைக் கட்டிப் பிடிப்பவர் யார்?

வரவர எல்லாம் தனக்கு அநுகூலமாவதைக் கண்டு அவன் ஆச்சரியம் அடைந்தான். நிலம், வீடு, பொன், பெண் எல்லாம் வரிசையாக வந்து அவன் காலடியில் விழுந்தன. எலி விழும் சாக்கில் ஊரார் எல்லோரையும் வீட்டிலிருந்து வெளியேற்றும் அதிகாரம் வேறு கிடைத்திருக்கிறது. அடுத்தாற்போல் சிமணு தனக்கு வசமானால் தன்னுடைய விருப்பங்கள் எல்லாம் நிறை வேறிவிடும். லிங்கப்பாவின் காமவெறி பல கற்பனைச் சித்திரங் களை உருவாக்கிக்கொண்டிருந்தது. எல்லா வீட்டிலும் விழும் எலி, மடத்திலும் விழக்கூடாது என்பது இல்லை. அந்த நிகழ்ச்சியை முன்வைத்துச் சிமணுவை மடத்திலிருந்து வெளி யேற்றலாம் அல்லவா? அவன் பிராதார நிங்கம்மாவின் வீட்டில் தங்கியிருக்கிறான். எலிகள் என்ன? பிணமே விழுந்தாலும் மணியக்காரனாகிய அவன் ஊரைவிட்டு நகரக்கூடாது. எலி களுக்குப் பயந்து படதையா ஊரைவிட்டுப் போகலாம். அப்படிப் போகாவிட்டால் தானே அவரைப் பயப்படுத்தி ஊரைவிட்டுப் போகச் சொல்லவேண்டும். அதற்குப்பின் சிமணு எங்கே தங்குவது என்ற பிரச்சினை வரும். படதையா அவளைத் தம்கூட அழைத்துப்போவது நடக்காத காரியம். அதனால் அவர் சிமணுவை லிங்கப்பாவுடனே இருக்கச் சொல்லிவிடலாம். அல்லது தானே அவரை அப்படிக் கேட்டுவிடலாம். அதில் என்ன தவறு? ஊர்ப் பிரமுகர்களின் முன்பு, அவர், சிமணுவைத் தன்னிடம் ஒப்பிக்கவில்லையா? லிங்கப்பாவின் ஜடமான மனம் காமத்தீயால் சுறுசுறுப்படைந்து இப்படியெல்லாம் எண்ண மிட்டது.

அன்றிரவு தொடங்கிய மழை ஓயாமல் பெய்துகொண்டே இருந்தது. அதற்கு இரண்டு நாள் முன்பு மழையை நிறுத்தி, மேகங்கள் காலை நீட்டிக்கொண்டு வானத்தில் படுத்துக்கிடந்தன. இப்பொழுதோ சற்றுப் பின்போ மழை வரும் என்று எல்லோரும் எதிர்பார்த்தார்கள். வியாழனன்று இரவு பெரிய காற்று ஒன்று வீசியதுதான் தாமதம். மழை வந்துவிட்டது. வெளியே அது நடத்திய ஆர்ப்பாட்டத்தைக் குளிருக்கு அடக்கமாக வீட்டுக்குள் படுத்திருந்தவர்கள் அறியவில்லை. 'ஏற்கெனவே சூடேறிய

நிலத்தை இன்னும் காயவைத்துவிட்டோமோ?' என்ற இரக்கம் அதிகரித்ததாலோ என்னவோ? இரவின் ஏகாந்தத்தில் மேகம் பூமியைக் கட்டிக்கொண்டு ஓயாமல் கண்ணீர் வடித்தது. ஓராண்டுக்காலத்துப் பிரிவுத் துக்கத்தை எல்லாம் கண்ணீராகப் பெருக்கியது. அப்படி அல்ல. பிறவி முழுவதும் தாங்கள் அநுபவித்தே தீரவேண்டிய பிரிவின் வேதனையை மேகமும் பூமியும் ஒன்றிடம் ஒன்று முறையிட்டுக்கொண்டன. மேகத்தின் துக்கம் குறைந்ததாகவே தோன்றவில்லை. இவ்வளவு தீவிரமான கருத்துப் புரட்சியிலும் நிலம் அமைதியாகவே இருந்தது. மௌனமாகவே மேகத்தின் கண்ணீரை ஏற்றுக்கொண்டது. தொடுவானத்தின் பக்கத்தில் இரண்டும் இறுகத் தழுவிக் கொண்டபோது மெய்மறந்த நிலத்தின் உள் ஜீவனுக்குள் கருமை படர்ந்தது. மேகமும் மகிழ்ச்சி அடைந்திருக்கவேண்டும். மின்னியது, இடித்தது, மழைத் தாரையாகிய பெருங் கைகளை நீட்டி ஒரே பிடியில் நிலத்தை அணைத்துக்கொள்ளப் பார்த்தது. இந்த மகிழ்ச்சியிலும் துக்கம் விட்டபாடில்லை. நிலத்தின் துன்பத்தைப் பார்த்த மேகத்துக்குச் சங்கடம் வயிற்றைக் கலக்கியது. அதன் துக்கம் ஓயாமல் கண்ணீராகக் கொட்டிக் கொண்டிருந்தது.

பூமியின் இரக்கம் பொங்கி வழிவதுபோல் ஆறு விசுவரூபம் எடுத்தது. ஆற்றுத் தண்ணீருக்கும் மழை நீருக்கும் ஏற்பட்ட நட்புக் காரணமாக இரண்டு கரைகளையும் அடைத்துக்கொண்டு பெருகியது. நிமிஷத்துக்கு நிமிஷம் அதன் பரப்பு அதிகரித்தது. உடம்பு பூரித்தது. அலைகள் கரையில் வந்து மோதின. கரைகளில் மண் சரிந்து கரையத் தொடங்கியது. வெயிலில் வாடி உத்ஸாகம் இழந்து பாதாளத்துக்குப் போவதற்காக முயலும் பெரிய பாம்புபோல் கிருஷ்ணா நதி, நிலத்தைக் கிழிக்கத் தொடங்கியது.

பொழுது விடிந்த பின்னும் மழை நிற்கவில்லை. மழையாகிய சல்லடைக் கண்கள் வழியாகத்தான் வெளிச்சத்தைப் பார்க்க முடிந்தது. கண்ணீரால் அழிந்து வழியும் மையைப்போல் மேகங்கள் கரைந்து இறங்கிக்கொண்டிருந்தன. மழை நிற்கும் சுவடே இல்லை. இரவில் ஓயாமல் மழை பெய்ததால் வீடுகள் எல்லாம் ஒழுக ஆரம்பித்தன. மண்ணால் கட்டிய மாடிகள் எல்லாம் நனைந்து தண்ணீர் சொட்டுச் சொட்டாக விழுந்தது. மேகங்கள் கவிந்து இருட்டிவந்தது. விடாத மழையால் ஆற்றுக்குப்போய்க் குடிதண்ணீர் கொண்டுவரவும் முடியவில்லை. வீட்டிலே சும்மா உட்கார்ந்திருக்கவும் முடியவில்லை. ஒழுகும்

இடங்களில் கம்பளியைக் கட்டித் தண்ணீர் எல்லாம் ஒரே இடத்தில் விழும்படி செய்யவேண்டியிருந்தது.

சனிக்கிழமையன்று இரவு ஒரு புதிய தொல்லை உண்டாயிற்று. நனைந்த சுவர்கள் இடிந்து விழுந்தன. தண்ணீர் வழிந்ததால் மண் கரைந்து எதிர்பாராதபோது சுவர்கள் தடதடவென்று சரிந்து விழுவதைக் கேட்டு, 'என்ன ஆபத்து வந்து விட்டதோ?' என்று ஜனங்கள் நடுங்கினார்கள். ஒழுகுவதால் வீட்டில் படுக்க முடியாதவர்கள் கோயில்களிலும் பாழ்மண்டபங்களிலும் படுத்துக்கொண்டிருந்தார்கள். சத்தத்தைக் கேட்டுத் தம் வீடு தான் விழுந்துவிட்டதோ என்று பயந்து எதையாவது போர்த்துக் கொண்டு நனைந்துகொண்டே போய்த் தம் வீட்டுச் சுவரின் ஒரு பகுதி விழுந்திருப்பதைக் கண்டு அழுதுகொண்டே திரும்பினார்கள் சிலர். மனிதர்களின் வாழ்க்கையே இப்படிப் 'பிண்டம் பெருங் காயம்' என்பதுபோல் இருந்தால், மாடு கன்றுகளைக் கேட்பார் யார்? கடவுள்தான் கவனிக்கவேண்டும்! மழையின் காரணமாகப் போரிலிருந்து வைக்கோல் கொண்டுவந்து போடமுடியவில்லை. வசதி உள்ளவர்கள், வீட்டில் இருந்த தானியங்களைப் போட்டே அவைகளை வளர்த்தார்கள். மற்ற வீடுகளில் அவைகளுக்குப் பட்டினிதான் கதி! அதோடு ஒழுகும் தண்ணீரால் அவைகளின் முதுகு நனைந்து பள்ளம் விழுந்துவிடும்போல் இருந்தது. கால் வைத்த இடமெல்லாம் சேறு. எங்கே திரும்பினாலும் ஓர் அங்குலங் கூடக் காய்ந்த நிலப்பகுதி இல்லை. வாயில்லாப் பிராணிகள் ஊமைபோலவே துன்பத்தை அநுபவித்தன.

சனிக்கிழமை மழை நின்றதுபோல் இருந்தது. அதற்குப் பதிலாக மரம் செடி கொடிகள் வேருடன் விழும்படி பெரிய சூறைக்காற்று வீச ஆரம்பித்தது. கண்ணுக்குத் தெரியாத காற்றுத் தெரிய ஆரம்பித்தது. மழையோடு போட்டி இடுவது போல் மேற்குத் திசையிலிருந்து ஓயாமல் வீசிக்கொண்டே இருந்தது. மரங்களெல்லாம் இந்தத் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் நடுங்கின.

இந்தக் காற்று மழையின் பயங்கரப் பேயாட்டத்தின்போது பாளாச்சார் வீட்டைவிட்டு நகரவே இல்லை. அவர் வீட்டுக் கூடம், நடு அறை, சமையல் அறை எல்லாமே ஒழுகிக் கொண்டிருந்தன. விட்டங்களிலிருந்து மெதுவாக வழிந்துவரும் தண்ணீரைப் பார்த்துக்கொண்டே உட்கார்ந்திருந்ததுதான் அவர் வேலை. சமையல் அறையில் அடுப்பு மூட்டவே இடம் இல்லை. பூஜை அறை ஒன்று மட்டுமே குளிருக்கு அடக்கமாக இருந்தது. அங்கே மழை ஒழுகவில்லை.

சனிக்கிழமை விடியற்காலை நான்கு மணி இருக்கலாம். அவருடைய வீட்டின் மேற்குப் பக்கத்துச் சுவர் மழையில் நனைந்து ஊறிப்போயிருந்தபடியால் காற்றில் தடதடவென்று இடிந்து விழுந்தது. கோபாலகிருஷ்ணன் கோயிலில் படுத்திருந்த சிலர் அங்கே ஓடிவந்தார்கள். கௌடர் வீட்டில் தங்கியிருந்த சிலரும் சத்தம் கேட்டு ஓடிவந்தார்கள்.

எல்லோரும் ஆச்சாரின் வீட்டில் நுழைந்து பார்த்தார்கள். வீடெல்லாம் ஜலமயமாக இருந்தது. வீட்டிலிருந்த ஒரே திரை மழைத் தண்ணீரைத் தடுக்க வீணாக முயன்று மொத்தையாக விழுந்து கிடந்தது. ஆச்சார் வீட்டிலேயே இல்லை. அந்த நேரத்தில் எங்கே போனாரோ கடவுளுக்குத்தான் வெளிச்சம். ஜனங்கள் பூஜை அறையில் எட்டிப் பார்த்தார்கள். சுவாமிக்கு எதிரில் வைத்திருந்த நந்தாவிளக்கு மேல்காற்றின் வீச்சுக்குத் தாங்காமல் அணைந்துவிட்டது. ஆச்சாரின் மனைவி அங்கேயே படுத்திருந்தாள். பக்கத்தில் மான்தோல் விரித்திருந்தது. ஆச்சாருடைய ஜபமாலையும் பாராயணத்துக்காக எடுத்து வைத்த கீதையும் அதன்மேலேயே இருந்தன. சுவர் விழுந்து விட்டதால் மேற்குப் பக்கம் திறந்து கிடந்தது. அந்தச் சூறைக் காற்றிலும் ஆச்சாரின் மனைவி சுகமாகப் படுத்திருந்தாள். எல்லோருக்கும் இது ஆச்சரியமாக இருந்தது. 'ஆச்சார் எங்கே?' என்று உரக்கக் கேட்டார்கள். பதில் வரவில்லை. 'கடந்த மூன்று நாட்களாக மழையால் தூங்கவில்லையோ?' என்று நினைத்தார்கள். வெளியே வந்து ஆச்சாரைத் தேடத் தொடங்கினார்கள்.

ஆற்றங்கரையிலிருந்து ஆச்சார் வந்துகொண்டிருந்தார். பொழுது விடிந்துவிட்டது என்று ஜனங்கள் தெரிந்துகொண்டார்கள். மேகங்கள் நெருக்கமாகக் கவிந்திருந்தபடியால் நேரமே தெரியவில்லை. ஸ்நானம் செய்திருந்ததால் ஆச்சாரின் உடம்பெல்லாம் ஈரமாகவே இருந்தது. கீதா ஸ்லோகம் ஒன்றைத் திரும்பத் திரும்ப சொல்லிக்கொண்டிருந்தார். 'நைநம் சிந்தத்தி சஸ்த்ராணி, நைநம் தஹதி பாவக:—இதை ஆயுதங்கள் வெட்டா, நெருப்பு எரிக்காது!' இதை மற்றவர்களுக்கும் கேட்கும்படி ஆச்சார் உரக்கப் பாராயணம் செய்துகொண்டிருந்தார்.

கூட்டத்தில் ஒருவன், 'ஆச்சாரையா! உங்க வீட்டு மேலச் சுவர் விழுந்தூட்டுதுங்களே?' என்று உண்மையான வருத்தத்தால் பரபரப்புடன் சொன்னான். அதைக் கேட்ட ஆச்சார் சிரித்து, 'அந்தச் சுவர் விழறுப்பலெதான் இருந்துது அப்பா!

கடைசீலே விழுந்துடுந்தா? நான் இருக்கறபோது விழலேயே?' என்று ஏதேதோ சொன்னார். அடுத்தகணம் கீதையின் நினைவு வந்து, 'ந சைனம் கிலேதயந்த் யாபோ, ந ஸோஷயதி மாருத: —இதை தண்ணீர் நனைக்காது; காற்று உலர்த்தாது' என்று மறு பாதி சுலோகத்தைச் சொன்னார். மழை பெய்துகொண்டிருந்தது. காற்று, விலா எலும்பைத் துளைப்பதுபோல் வீசியது.

ஜனங்கள் ஆச்சாரைத் தொடர்ந்து அவர் வீட்டுக்கு வந்தார்கள். அப்பொழுதும் இருட்டுப் பிரியவில்லை. அஞ்சல் மல்லப்பன், 'ஆச்சாரையா! சக்கிமுக்கி தட்டித் தீப் பத்த வைக்கட்டுமா? சுவாமி முன்னாலே இருந்த வெளக்கே அணைஞ்சு போச்சே?' என்று கேட்டான். 'அதற்கென்ன பார்ப்போம்' என்று சொல்லியவண்ணம் ஆச்சார் உள்ளே நுழைந்தார்.

ஆச்சார் மனைவியின் உடல் ஜில்லிட்டுவிட்டது; மூச்சு நின்று விட்டது. ஆச்சார் அங்கேயே சற்றுநேரம் மௌனமாக உட்கார்ந்துவிட்டார். ஒருமுறை சுற்றிலும் பார்த்தார். 'ந சைனம் கிலேதயந்த் யாபோ ந சோஷயதி மாருத:' அங்கே ஈரம் இல்லை. மழை ஒரு சொட்டுக்கூட விழவில்லை. ஜன்னலே இல்லாததால் காற்றும் இல்லை. உயிர் உள்ளமட்டும் காற்று மழைக்கு ஒதுங்கவேண்டி இருந்தது. இப்பொழுது? சுவர் விழுந்து காற்று வீசினாலும் ஒன்றுதான்; ஓயாமல் மழை கொட்டினாலும் ஒன்றுதான். ஆச்சார் மனைவி அமைதியாகப் படுத்துக்கொண்டிருந்தாள்.

ஆச்சார் மல்லனைக் கூப்பிட்டார். 'மல்லா! குடும்பத்தின் பாதிச்சுவர் விழுந்துவிட்டதல்லவா? போ, சேஷப்பா, நம்ப நாராயணன், ஹநுமு சித்தப்பாவின் மகன் சீனப்பா எல்லோரிடமும் சொல்லிவிட்டு வா. அவர்கள் வந்த பின்புதான் மேலே காரியம் நடக்கணும்' என்று சொன்னார். ஆச்சாரின் முகபாவம், பேச்சு எல்லாம் பயத்தைத் தருவதாக இருந்தன. மல்லனுக்குக் கவலையாக இருந்தது. ஏதோ சொல்ல நினைத்தான். அவருக்குத் தன்னாலான உதவியைச் செய்ய விரும்பினான். ஆனால் ஆச்சாரின் தோற்றத்தைக் கண்டதும் அவனுடைய நெஞ்சில் ஏதோ ஒடிந்து சிக்கிக்கொண்டதுபோல் ஆயிற்று. அவனுக்கு என்ன பேசுவது என்றே தெரியவில்லை. 'ஆகட்டுங்க' என்று சொல்லிவிட்டுப் போனான்.

அஞ்சல் மல்லப்பன் விடுவிடுவென்று ஆச்சார் சொன்ன இடத்துக்கெல்லாம் போனான். கணக்கப்பிள்ளை சேஷப்பா ஊரில் இல்லை. பார்வதியம்மாளின் மணியம் விவகாரத்தைப்பற்றிக் கமிஷனரிடம் அப்பீல் செய்வதற்காக யோசனை கேட்க பெல்

காமுக்குப் போயிருந்தான். சேஷப்பாவின் மனைவி துளசக்கா, செய்தியைக் கேட்டுத் தாங்கமுடியாமல் ஆச்சாரின் வீட்டுக்கு ஓடோடியும் வந்தாள். அஞ்சல் மல்லப்பனின் சோகம் நிறைந்த முகம், நாராயணச்சாரை அடித்து எழுப்பியது.

வீட்டுக்கு வந்தவர்களை ஆச்சார் வரவேற்ருர். 'கடைசியில் வந்துவிட்டீர்கள் நல்லதாயிற்று' என்ருர். பாளாச்சாரின் சகோதரன் மகன் நாராயணன்தான் முதலில் பேச்சைத் துவக்கினன். அவன் முகம் பயத்தால் வெளுத்துக்கிடந்தது.

'பெரியப்பா! என்ன நடந்தது? ஏன் இப்படி உக்காந்திருக்கே? ஈரத்தை அவிழ்க்கவே இல்லையே?' என்று சம்பந்தம் இல்லாமல் ஏதேதோ கேட்டான்.

'முதலில் ஆற்றுக்குப்போக ஏற்பாடு செய்யுங்கள். என் வீட்டுக்காரி இப்போது முக்தி அடைஞ்சூட்டா. எல்லோரும் சேர்ந்து அந்திமக்கடன்களைக் கூடியமட்டும் சுலபமாக முடிச்சுடுங்க' என்று துக்கப்படக்கூடாது என்ற உறுதியுடனேயே ஆச்சார் சொன்னர்.

நாராயணச்சாருக்குத் துக்கம் கரையை உடைத்துக்கொண்டு வந்தது. துண்டை முகத்தில் போட்டுக்கொண்டு சிறு குழந்தை போல் பெருங்குரல் எடுத்து அழத்தொடங்கினன். துக்க மிகுதியால் 'பெரியப்பா!' என்று கத்திக்கொண்டே ஆச்சாரைக் கட்டிக்கொண்டு அழுதான். அழக்கூடாது என்று இருந்த ஆச்சாருக்கும் கண்ணீர் பெருகியது. சிலநாட்களாக கீதைதான் அவருடைய மூச்சுக்காற்ருக இருந்தது. கவலையின் இழைகளிலும் கீதையின் பொருளை நெய்து நெஞ்சைக் கல்லாக்கிக்கொண்டிருந்தார். ஆனல் மகனுடைய துக்கத்தைக்கண்டதும் இதயமே பிளந்துவிட்டதுபோல் இருந்தது. அதுவரையில் பேசாமல் இருந்த மற்றவர்களும் இந்தக் காட்சியைக் கண்டு அழத் தொடங்கினர்கள். கோடை மழையைப்போல் கண்ணீர் சொரிய ஆரம்பித்தார்கள்.

ஆச்சார், தம் நிலையை அடைந்தார். நாராயணச்சாரின் கண்ணைத் துடைத்து, ''நாணி! நீ அழக்கூடாதப்பா! அவ வந்த வேலை முடிஞ்சுபோச்சு. விடுதலை அடைஞ்சூட்டா. உன் பெரியம்மா புண்ணியவதி நாணி! 'வயசாயிடுத்து. இனிமேலாவது தர்மகாரியங்களைச் செய்'ன்னு நான் சொன்ன போதெல்லாம், 'அதெல்லாம் நீங்களே செய்யுங்க. உங்களுக்குச் சேவை செய்யறேனே அதுவே எனக்குப் போதும்' என்பாள். கடைசி வரையில் அதைச் செய்துவிட்டுத்தான் போயிருக்கிருள். யாரிடமும் சேவை செய்துகொள்ளவில்லை. இந்தப் பாக்கியம்

உனக்கும் எனக்கும் கிடைக்குமா?'' என்று சொல்லி மகனைச் சமாதானப்படுத்தினார்.

நாராயணாச்சாருக்கு இந்தப் பேச்சு ஆறுதலைக் கொடுக்கவில்லை. குடும்பம் பிரிந்தபின் பெரியப்பாவின் வீட்டில் இப்பொழுதுதான் நுழைந்திருக்கிறான். அவரிடம் அவ்வளவு பகை பாராட்டினான். அவரிடம் சண்டை போட்டிருக்கிறான். அவரைப்பற்றி விஷமப் பிரசாரம் செய்திருக்கிறான். சமீபத்தில் கிருஷ்ணாவின் புஷ்கரத்தின்போது அவரை வலுச்சண்டைக்கு இழுத்தான். கொஞ்சங்கூடத் தயங்காமல் அவமானப்படுத்தினான். 'இந்தப் பெரியப்பாதான் தங்கள் சொத்தையெல்லாம் சாப்பிட்டுவிட்டார்' என்ற எண்ணம்தான் இவற்றுக்கெல்லாம் காரணம். அவரைக் காணுதபோது 'கிழவன்' என்றே சொல்லுவான். ஆனால் இவ்வளவு அவிவேகத்துக்கும் அடியில் அன்பிழை ஒன்று ஓடிக்கொண்டிருந்தது அவிவேகம் அதை மூடி மறைத்தது. வறட்டுக் கௌரவம் அதை நெருங்கவிடவில்லை. வறுமையால் ஏற்பட்ட பல சிக்கல்கள் அந்த அன்பைத் தலை தூக்காமல் நசுக்கிவிட்டன.

ஆனால் அந்த அறிவு பெரியம்மாவின் விஷயத்தில் திரும்பத் திரும்ப புத்துயிர் பெற்று வந்துகொண்டிருந்தது. பெரியப்பாவிடம் எவ்வளவு தீவிரமான பகை இருந்ததோ அவ்வளவுக்கவ்வளவு பெரியம்மாவிடம் அளவற்ற அன்பும் ஆசையும் இருந்தன. இளமையிலேயே தாயை இழந்து அநாதையாகிவிட்ட நாராயணாச்சாரைக் கையில் சாதம் பிசைந்து போட்டுப் பெரியம்மா வளர்த்தாள். தான் இந்த நிலையிலாவது இருப்பது அவளுடைய புண்ணியத்தினால்தான் என்பது அவனுக்குத் தெரியும். குடும்பம் பிரிந்து பெரியப்பாவிடம் சண்டையிட்டபின் அவன் அந்த வீட்டில் திரும்பக் கால்வைக்கவில்லை. ஒருநாள் இருட்டும் நேரம் கோபாலகிருஷ்ணன் கோவிலுக்குப் பக்கத்தில் பெரியம்மாவைச் சந்தித்தான். சிலநாட்களாக அவளுக்குக் கண் சரியாகத் தெரிவதில்லை. அதனால் அவன் மெதுவாக நழுவ முயன்றபோது அவள் அந்த மங்கிய வெளிச்சத்திலும் அவனை அடையாளம் கண்டுபிடித்துவிட்டாள். அவனைக் கூப்பிட்டு வீட்டுக்கு வராததற்காகக் கோபித்துக்கொண்டாள். அவன் வெட்கத்தால் முகத்தைத் தாழ்த்திக்கொண்டு அழுதான். 'அட அசட்டுப்பிள்ளை! ஏண்டா அழுகிறாய்? சந்தியாகாலம்; அழாதே! சும்மா இரு. சண்டை போட்டுக்கொண்டாலும் அவர் உங்க பெரியப்பா என்பது பொய்யா? வேறு யாருக்காவது பெரியப்பா என்று சொல்லிக்கொள்ள முடியுமா?' என்று அவன் மனத்தில் படும்படி பேசினாள். அன்று அவளிடமிருந்து தப்பினால் போதும் என்று ஆகிவிட்டது.

அப்படிப்பட்ட பெரியம்மா இன்று இல்லை என்றால் நம்ப முடியவில்லையே? அந்த நினைப்பே தாங்க முடியாததாக இருந்தது. 'பெரியப்பா, பெரியப்பா! அம்மாவை இழந்துவிட்ட எனக்குப் பெரியம்மாதான் அம்மாவாக இருந்தாள். அந்தப் பெரியம் மாவும் போய்விட்டாளே. இனி என்ன செய்வேன், பெரியப்பா?' என்று சொல்லி மறுபடியும் ஓவென்று அழுதான். உடம்பின் நினைவே இல்லாமல் தரையில் உருண்டு புரண்டான். கண்டவர்களை எல்லாம் எடுத்தெறிந்து பேசிக்கொண்டிருந்த நாராயணச்சார் இப்பொழுது சின்னஞ்சிறு குழந்தையைப்போல் தவித்தான்.

பாளாச்சார் மறுபடியும் அவனைச் சமாதானப்படுத்த முயல வில்லை. 'அழுது அழுது அவன் துக்கம் குறையட்டும்' என்று விட்டுவிட்டார். நாராயணன் அழுகையைச் சற்று நிறுத்தி, 'பெரியப்பா! சாகும்போதாவது பெரியம்மாவுக்கு ஒருவாய் தண்ணீர் ஊற்றக்கூட நான் கொடுத்து வைக்கவில்லை. என்ன நடந்தது பெரியப்பா? எனக்கு ஏன் சொல்லியனுப்பவில்லை? கடைசிக் காலத்திலாவது அவளுக்குச் சேவை செய்து கடுகளவாவது என் கடமையைச் செய்திருப்பேனே! ஏன் சொல்லியனுப்பலை, பெரியப்பா?' என்று மறுபடி அழத்தொடங் கினான்.

ஆச்சார் இதற்கென்ன பதில் சொல்லுவார்? கணவன், மனைவி இருவருமே நான்கு நாட்களாக பிரயாண முஸ்தீபில் இருந்ததாகத் தோன்றியது. ஆச்சாருக்கு வாழப் பிடிக்கவில்லை. உலகத்துக்குத் தம்முடைய தேவை இல்லை என்று அவருக்குத் தோன்றியது. உலகம் வேகமாக மாறிக்கொண்டிருந்தது. புதிய வெள்ளத்தில் பழைய குப்பைகூளங்களெல்லாம் அடித்துக் கொண்டு போகவேண்டும் அல்லவா? உலகுக்குப் பாரமாக இருப்பதைவிடக் கௌரவமாகப் போய்விடுவதேமேல் என்று தோன்றியது. அதற்காகவே முயன்றுகொண்டிருந்தார். அதற்காகத்தான் கீதா பாராயணமும் செய்துகொண்டிருந்தார். சாவுக்குப் பயப்படக்கூடாது என்றே இப்படித் தைரியத்தை வளர்த்துக்கொண்டிருந்தார். இதை ஆச்சாரின் மனைவி எப்படியோ புரிந்துகொண்டுவிட்டாள். அவரே போய்விட்டால், தான் இருந்து என்ன செய்யவேண்டும்? ஆரம்பத்திலிருந்தே கணவனுடைய நிழல்போல் நடந்துகொண்டிருந்தாலும் இந்த ஒரு விஷயத்தில் அவர் பேச்சைக் கேட்கக்கூடாது என்றே அவள் நினைத்தாள்போலும்!

''நாணீ! அவள் கொடுத்துவைத்தவள் என்று நான் சொல்லலையா? யாருடைய சேவையும் அவளுக்குத் தேவைப்

படவில்லை. லேசாக ஜுரம் வந்திருந்தது. 'பூஜை அறையில் படுத்துக்கொள்ளலாமா?' என்று கேட்டாள். படுக்க வேறு இடமே இல்லை. சரி என்றேன். அங்கேயே படுத்துக்கொண்டாள். உடம்பைத் தொட்டால் நெருப்பாகத் தகித்தது. தூங்குவதைப் போலத்தான் படுத்துக்கொண்டிருந்தாள். குடிக்கத் தண்ணீர் கூட வேண்டாம் என்றாள். நேற்று ராத்திரிதான் இங்கே படுக்கவிட்டேன். விடியற்காலம்வரை பக்கத்திலேயே உட்கார்ந் திருந்தேன். மழையினால் சளியும் ஜுரமும் வந்திருக்கும் என்று நினைத்தேன். குறைந்துவிடும் என்று நினைத்து நான் கீதையைப் படித்துக்கொண்டிருந்தேன். விடியற்காலையில் வழக்கம்போல் ஸ்நானம் செய்யப் போனேன். நான் வருவதற்குள் பகவான் பாதத்தில் சேர்ந்துவிட்டாள். அது, சளி ஜுரம் இல்லை என்று இப்பத்தான் தெரிகிறது'' என்று ஆச்சார் சுருக்கமாகவே தம் மனைவி இறந்த கதையைச் சொன்னார்.

கூடியிருந்தவர்கள் எல்லோரும் அநுதாபத்துடன் கேட்டுக் கொண்டிருந்தார்கள். ஆச்சார் மனைவியின் சாவு அவர்களுக்குப் பயத்தை உண்டாக்கியது. 'இப்படித் திடீரென்று சாவு வருமா?' மழை வந்தது; காற்று வீசியது; எல்லோருடைய வீட்டுச் சுவர்களும் விழுந்தாற்போலவே இந்த வீட்டுச் சுவரும் விழுந்தது. சீதை பூமிக்குள் மறைந்தாற்போல் ஆச்சாருடைய மனைவியும் யாருடனும் சொல்லாமல்கொள்ளாமல் போய்விட்டாள். வாழ்வு, சாவு எல்லாம் விளையாட்டுத்தானா? என்று நினைத் தார்கள்.

ஈமக்கடன்களை விரைவில் முடித்துவிடவேண்டும் என்று ஆச்சார் சொன்னபோதிலும் அப்படிச் செய்யவேண்டுமென்று யாருக்குமே தோன்றவில்லை. ஆச்சாரே மறுபடியும் எச்சரித்தார். அஞ்சல் மல்லப்பன் மூங்கில்களையும் வேண்டிய மற்றச் சாமான் களையும் கொண்டுவந்து போட்டான். அதற்குள் ஊரெல்லாம் செய்தி பரவி, யார் யரோ ஆச்சாரைப் பார்க்க வந்தார்கள். வீடுகொள்ளாமல் கூட்டம் வந்தது. வந்தவர்கள் மழையில் நின்றார்கள். யாருக்கும் எதைப்பற்றியும் நினைவு இல்லை. புதுப் புடைவை, மாலை, குங்குமம் எல்லாம் வந்தன.

ஊர்ப் பெண்கள் எல்லாம் அங்கே கூடியிருந்தனர். ஒவ் வொருவராக ஜாதி பேதம் இல்லாமல் உள்ளே போய் ஆச்சார் மனைவியைக் கடைசியாகப் பார்த்துவிட்டுக் கண்ணீருடன் வெளியே வந்தார்கள்.

நெற்றியில் பெரிய குங்குமம், மை, பூமாலை, காலில் மெட்டி, பீலி முதலிய அலங்காரங்களுடனும் சகல சௌபாக்கியங்

களுடனும் வளைக் கைகளை மேலே உயர்த்தியபடி ஆச்சார் மனைவி கடைசி யாத்திரைக்குத் தயாரானாள். உடன் செல்ல ஊரே திரண்டு வந்தது. சூரியோதயமாகும்போது யாத்திரை புறப் பட்டது.

இந்தச் செய்தியைக் கேட்டு ஆச்சாருக்கு ஆறுதல் சொல்ல லிங்கப்பாவும் படதையாவும் வந்திருந்தார்கள். உலக ரீதியாக நாலுவார்த்தை சொல்லிவிட்டுப் புறப்பட்டார்கள். காடுவரையிலும் லிங்கப்பா போக விரும்பினான். படதையா மட்டும் மடத்துக்குப் போய்விட்டார். லிங்கப்பா அகழி வரையிலும் கூட்டத்தோடு போனான். அவனிடம் பேச்சுக் கொடுக்க யாரும் இல்லை. எல்லோருடைய மனத்திலும் துக்கம் நிறைந்திருந்தது. எல்லோருடைய வாயிலும் பாளாச்சாரின் மனைவியைப்பற்றிய புகழ்மாலையைத் தவிர வேறே பேச்சு வரவில்லை. அவளுடைய வாழ்க்கைச் சித்திரம் அவர்கள் கண்ணிலேயே நின்றது. அப்போதுகூட அவளை மறக்கமுடிய வில்லை. இதுவரையிலும் மேகங்களின் பின் மறைந்திருந்த ஒளி போல் அவள் வாழ்ந்திருந்தாள். ஒரு நாளும் ஒருவர் மனம் நோகப் பேசி அறியாள். எல்லோரும், நினைத்ததையே நினைத்துச் சொன்னதையே சொல்லிக்கொண்டிருந்தார்கள். 'இது ஈடு செய்யமுடியாத நஷ்டம்' என்று எல்லோரும் நினைத் தார்கள். 'கிழவர் வாழ்க்கை இனிமேல் கஷ்டந்தான்' என்று ஆச்சாருக்காகச் சிலர் வருந்தினார்கள்.

ஆச்சார்மட்டும் மனம் தளராமல் மயான யாத்திரையோடு நடந்துகொண்டிருந்தார். அவர் வாய் பேசாமல் இருந்தாலும் இதயம் கீதா சுலோகங்களை அசைபோட்டுக்கொண்டிருந்தது. 'நைனம் சிந்தத்தி சஸ்த்ராணி, நைனம் தஹதி பாவக: ந சைநம் கிலேதயந்த் யாபோ, ந ஸோஷயதி மாருத:'. இதுதான் ஆத்மாவின் சொரூபம் என்று நிலை இல்லாத இந்த உலகத்தில் நினைவூட்டிக்கொள்ள வேண்டியிருந்தது. மழை பெய்துகொண் டிருந்தது. காற்று வீசிக்கொண்டிருந்தது. தூரத்தில் ஆற்றங் கரையில் மூட்டிய தீ எரிந்துகொண்டிருந்தது. ஆத்மா இவை களையெல்லாம் மீறி அமரத்வம் பெற்றிருக்குமாம். அதன் சொரூபம் கண்ணுக்குத் தெரியும்படி தெளிவாக இருக்க வேண்டும். எப்படி? ஆச்சார் கடவுளிடம் முறையிட்டார். 'திவ்யம் ததாமி தே சட்சு:' இந்த வரத்தை யார் கொடுப் பார்கள்? ஆச்சாருடைய மனம் ஒரே மூச்சாகத் தியானத்தில் ஆழ்ந்தது.

ஆச்சாருடைய மனைவியின் உடலை அகழிவரையில் சென்று அனுப்பியதே லிங்கப்பாவுக்குப் போதும் போதும் என்று ஆகி விட்டது. மழை, கால் புதையும் சேறு, குளிர்காற்று இவை களைப் பார்த்த லிங்கப்பாவுக்கு முன்னேற மனம் வரவில்லை. உடனே மடத்துக்குத் திரும்பிவிட்டான். படதையா, கூட்டத் தோடு போனதற்காக லிங்கப்பாவைக் கேலி செய்தார். ஆச்சார் மனைவி இறந்ததால் படதையாவுக்கு ஒன்றும் துக்கம் ஏற்பட இடம் இல்லை. சொல்லப்போனால் அவருடைய மனம் வைரம் போன்றதுதான். இந்த அழுமூஞ்சித்தனம் அவரிடம் என்றுமே இருந்ததில்லை. தான் மணியக்காரன் ஆனதால் நாலு பேருக்கு ஒப்ப மயான ஊர்வலத்துடன் போனதாக அவரிடம் சொல்லிச் சமாளித்துக்கொண்டான் லிங்கப்பா. ஏதேதோ பேசிய பின் பேச்சுச் சிமனுவின் பக்கம் திரும்பியது. லிங்கப்பா சுற்றிவளைத்துப் பேசத் தொடங்கினன். படதையாவுக்கு வேண்டியதும் அதுதான். லிங்கப்ப கௌடனே சிமனுவின் நிரந்தரக் காதலன் ஆகிவிட்டால் அவருடைய பாரம் பாதி குறைந்துவிடும். சிமனு அவருடைய பாதத்தில் ஒட்டிக்கொண்டு பாவத்திலும் ஒட்டிக்கொண்டிருக்கிறாள். ஏதோ திடீரென்று தோன்றிய காம நினைவால் இரவெல்லாம் தூக்கம் இல்லாமல் இருந்து அவர் அவளை அழைத்துக்கொண்டு வந்திருந்தார். ஆனால் அவளைப் போஷிப்பது முள்ளை மடியில் கட்டிக்கொண்டது போல் இருந்தது. மனச்சாட்சியை மறப்பதிலேயே படதையா சுகம் கண்டவர். அவர், தம் வாழ்க்கை முழுவதையுமே மறப் பதில் ஈடுபட்டிருந்தார். நூற்றுக்கணக்கான பொது விஷயங் களை அவர் ஏற்றுக்கொண்டதற்கு இதுதான் காரணம். இயற் கையாக மத விஷயங்களில் அவருக்கு அக்கறையே இல்லை. வைராக்கியம் என்பது அவருக்கு வேப்பங்காயாக இருந்தது. ஆனால் சந்நியாசியின் பொறுப்பற்ற தன்மை அவருக்குச் சுகமாக இருந்தது. அதனல் மடத்தை விட்டுப் போக இயலவில்லை. 'அற்ப லட்சியத்துக்காக வில்லை வளைக்ககூடாது'. உண்மைதான். ஆனல் நமது புத்திபலத்தால் எவ்வளவு பெரிய பாவத்தையும் மறைத்துவிட்டு வைராக்கியத்தையும் சம்ஸாரத்தையும் இணைப் பது சாத்தியம் ஆகிவிடலாம் அல்லவா? படதையா அதைச் சாதித்துவிட்டார். மற்றொருவருடைய குற்றங்களை அம்பலப் படுத்துவதில் அவர் கைதேர்ந்த புள்ளி. தம்முடைய கூரிய புத்தி

என்னும் உறுதியான சூத்திரத்தாலேயே ஒன்றுக்கொன்று ஒவ்வாத தம் இரட்டை வாழ்க்கையை இணைத்திருந்தார். விரக்தியென்னும் முக்காட்டுக்குள் ஆசை என்னும் அட்சய பாத்திரத்தைப் பத்திரமாக வைத்துக் காப்பாற்றினார்.

ஆனால் பாவம், அந்தப் புத்திபலத்தையே தடுமாறவைத்தது. சிமணா, தாம் வைத்த சிறையிலேயே இருந்தாலும் அவள் இருப்பதை அவரால் தாங்கவே முடியவில்லை. இந்த ஒரு விளையாட்டில் படதையா மனமறியத் தோற்றுவிட்டார். சிமணா வேண்டியும் வேண்டாமலும் இருந்தாள். அதனால் புத்திக்கும் இதயத்துக்கும் போராட்டம் நடந்துகொண்டே இருந்தது. வெறுப்பும் மோகமும் மாறி மாறித் தாக்கி மனத்தைப் புண்ணாக்கிவிட்டன.

இந்தச் சமயத்தில்தான் லிங்கப்பா அவர் கண்ணில் பட்டான். அவனுடைய காம இச்சையை அவர் சூட்சுமமாக அறிந்துகொண்டார். லிங்கப்பா பல சமயங்களில் அசட்டுத்தனமாகச் சிமணாவின்மேல் ஆசை இருப்பதை வெளிப்படுத்தினான். அதை அறிந்தே படதையா எளிதாகத் தம் பாபச்சுமையை எல்லோருக்கும் தெரியும்படி அவன் தலையில் சுமத்திவிட்டார். அவன் பயப்பட்டான்; ஆனால் அதை மறுக்கும் தைரியமே அவனுக்கு இல்லை. அன்றுமுதல் படதையா இந்தக் கவலையிலேயே மூழ்கியிருந்தார். இப்பொழுதும் அதே பேச்சை எடுத்தார்.

லிங்கப்பா, சிமணாவிடம் தனக்கிருக்கும் ஆசையை ஒப்புக்கொண்டான். அந்த ஆசையை எப்படித் தீர்த்துக்கொள்வது என்பதே அவனுடைய கவலை. 'எப்படியோ, கௌடருக்கு ஒரு துணை வேண்டியிருக்குன்னு சொல்லுங்க. வாழ்க்கையிலே ஒரு மட்டத்துக்கு ஏறியபின் அது தேவைதானே' என்று படதையா அந்தரத்தில் தொங்கிக்கொண்டிருந்த அவனுடைய ஆசைக்கு ஒரு பிடிப்புக்கொடுத்தார். 'அதுக்கென்னங்க, எத்தினி நேரமாகும். நீங்க மனசுவைக்கணும். சிமணாவை உங்களிடம் ஒப்பிப்பது என்னைச் சேர்ந்தது' என்று அபூர்வமாக உதவி செய்யும் வார்த்தையைச் சொன்னார்.

லிங்கப்பாவுக்குச் சொல்ல முடியாத மகிழ்ச்சி. தன் அதிர்ஷ்டத்தைப்பற்றிய நம்பிக்கை வலுத்தது. படதையாவின் தலையில் இருந்த ரத்தினம் இவ்வளவு சுலபமாகத் தன் கையில் விழும் என்று அவன் நினைக்கவில்லை. ஆனால் பாம்புக்கு, அதுவே சுமையாக இருந்தது என்பது அவனுக்குத் தெரியாது. அந்த ரத்தினத்தை வேறொருவர் கையில் போட்டுவிட்டு விடுதலை பெறவேண்டுமென்று பாம்பு விரும்பியது. இந்தப் புதையலைக் காத்துக்கொண்டு ஒரே இடத்தில் உட்கார்ந்திருப்பது அதனால்

முடியாது. அதற்கு ஆசையும் இல்லை. படதையாவுக்கு இதுவும் ஒரு தோல்விதான். சுபாவத்துக்கு விரோதமாக வெற்றி பெறுவதில் என்ன பயனுண்டு? திருட்டு, கொள்ளை, சூழ்ச்சி இவை எல்லாம் பாவந்தான். ஆனால் அவை பேயாகத் துரத்த வில்லை. சிமனுவை அழைத்து வந்ததே தப்பாகிவிட்டது. அவள் இல்லாமல் இருப்பதும் சாத்தியம் இல்லை என்றே அழைத்துக் கொண்டுவந்தார். சுகபோகங்களின் தன்மையே அதுதான். ஒருமுறை கொலை செய்தவனையே மற்றொருமுறை கொலை செய்ய முடியாது. வேறு கொலை செய்யாமலும் இருக்க முடியாது. மனம் வைத்தால் மற்றப் பாவங்கள் எல்லாவற்றிலிருந்தும் விலகிவிடலாம். ஆனால் சுகபோகங்களை ஒருமுறை பின் தொடர்ந்தால் போதும். வாழ்க்கை முழுவதும் அது நம்மைப் பின் தொடர்ந்து வந்துகொண்டிருக்கும். சிமனு உட்புறத்து அறையிலேயே சிறைப்பட்டு இருந்தாள். ஒரு வார்த்தை பேச மாட்டாள். தமக்கு விருப்பம் இல்லாவிட்டால் அவள் முகத்தைக் காணுமலே இருந்துவிடலாம். ஆனால் அவளுடைய நினைவு படதையாவைச் சுற்றிச் சுற்றி வந்துகொண்டுதான் இருந்தது. தற்செயலாகக் கண்ட அவளுடைய அகன்ற பெரிய கண்கள் ஆசையைத் தூண்டின. அவள் தினசரி செய்யும் சாமான்ய வேலைகளை ஒரு கோணத்திலிருந்து பார்த்தால் உலக ரீதியாக இல்லாமல் உயர்வாகத் தெரிந்தன. ஆனால் அவளுடைய பொறுப்பும் ஏற்றுக்கொள்ள முடியாததாய் இருந்தது. இப்பொழுது லிங்கப்பாவின் கழுத்தில் பொறுப்பைக் கட்டி விட்டுத் தாம் விடுபட விரும்பினார்.

இந்தத் தீர்மானமும் துக்ககரமாகத்தான் இருந்தது. தம்முடைய அற்பத்தனம் அவருக்கே பெரும் பூதம்போல் தோன்றியது. எவ்வளவுதான் மறைத்தாலும் அது வீணாயிற்று. நம்மை நாமே மறப்பது எப்படி முடியும்? வாழ்க்கை என்பது ஒரு நீண்ட தூக்கமா? பாபம் உறுத்திக்கொண்டிருந்தால் தூக்கம் கூட வராது. படதையா கடைசியில் இந்தப் போட்டியில் தோற்றுவிட்டார். மர்மத்தில் அடிபட்டுவிட்டது.

எப்படியோ ஆகட்டும். இப்பொழுது லிங்கப்பா ஒருவன் கையில் அகப்பட்டிருக்கிறான். எதிர்பாராமல் மற்றொரு யாகப் பசு கையில் கிடைத்திருக்கிறது. இந்தக் கட்டை அவன் கையில் கட்டிவிட்டுத் தப்பித்துக்கொள்ளவேண்டும். லிங்கப்பா பூரித்துப்போயிருந்தான். அவர் சொல்லுக்குச் சம்மதித்ததோ டல்லாமல் இன்னும் ஓரடி முன்னேறிவிட்டான். தான் சிமனுவை மணந்துகொள்ளத் தயார் என்று சொன்னான்.

படதையா அதற்கு ஒப்பவில்லை. மற்ருெரு முறை அவருடைய அற்பத்தனம் தலை தூக்கியது. அவர் விரும்பியது தம்முடைய விடுதலையைத்தான். சிமஞ்ஞவைக் கைதூக்கிவிடுவது அன்று. லிங்கப்பாவின் அசட்டுத்தனத்தை நினைத்தால் அவருக்குச் சிரிப்பு வந்தது. 'என்ன பேச்சு பேசறீங்க கௌடரே? நாளைக்கு நாலு பேரு என்ன சொல்லுவாங்க. ஜனங்க சபாஷ்ங்கற முறையில வாழ்க்கை நடத்தணும். சிமஞ்ஞவைப் போன்ற பெண்ணேடெ உங்களைப்போன்ற மரியாதப்பட்டவங்க வாழறது பெருமை தராது. சிமஞ்ஞவோடெ தொடர்பு இருக்கட்டும். ஆனு கண்ணாலம் மாத்திரம் செஞ்சுக்காதீங்க' என்று வெகு மட்டமான யோசனை சொன்னார்.

லிங்கப்பா ஆச்சரியப்பட்டான். படதையாவுடைய பேச்சின் பொருள் அவனுக்குப் புரிந்தது. ஆனால் உட்பொருள் புரியவில்லை. சிமஞ்ஞவும் தானும் கல்யாணம் செய்துகொண்டால் இவர் ஏன் ஆட்சேபிக்கிருர். இது அவரவர் சொந்த விஷயம் அல்லவா? என்று நினைத்த லிங்கப்பா ஒன்றும் புரியாமல் திருதிருவென்று விழித்தான்.

'நான் சொன்னது உங்களுக்குப் புரியவில்லையே கௌடரே! இந்த மாதிரிப் பெண்ணைக் கல்யாணம் கட்டிக்கக் கூடாதுன்னு தான் நான் சொல்றேன். அதனால் உங்கள் கௌரவம் போய்விடும். நீங்க கல்யாணம் செய்துக்கலாம். அதுக்கும் நான் ஒரு திட்டம் வச்சிருக்கேன். சாத்தேனஹள்ளி கௌடருக்கு ஒரு மகள் இருக்கா. கௌடரும் நல்ல செயல் உள்ளவர். வீட்டில் பதினறு எருது சாகுபடி நடக்கிறது. அப்படிப்பட்டவரோட சம்பந்தம் பின்னால உங்களுக்கு ஆதரவாக இருக்கும். நான் போய் நிச்சயம் பண்ணிட்டு வரேன். உங்களுக்கு இந்த ஊர் மணியம், சொத்து, நிலம், நீச்சு எல்லாம் நீடித்து நிக்கணு மானல் நீங்க ருத்திரப்ப கௌடருடைய மருமகனுகணும். அப்படியும் உங்களுக்குச் சிமஞ்ஞமேல ஆசையாயிருந்தாச் சொல்லுங்க. அவளையும் உங்களுக்கே கொடுத்துடறேன். நீங்க எனக்கு வேண்டியவர். உங்க சந்தோஷம் என் சந்தோஷம்' என்று படதையா ரசமாக லிங்கப்பாவின் வருங்காலத்தை விமரிசிப்பவர்போல் சொன்னர். அந்தக் கணத்தில் லிங்கப்பா வுக்கு அவர் அப்படித்தான் காணப்பட்டார். இல்லாவிட்டால் அஜராணிக் குறும்பர் குப்பத்தில் கேட்பாரற்றுக் கிடந்த தன்னைக் கைதூக்கிவிட்டு உயர்த்தியிருப்பாரா. அவர் இருப்பதால்தான் பாதள்ளியில் இவ்வளவு மோசமான சூழ்நிலையிலும் தனக்கு இவ்வளவு கௌரவங்களும் கிடைத்தன. மடத்தின் ஆதரவு இல்லாவிட்டால் தன்னைத் தெரு நாய்கூடச் சீண்டாது என்பது அவனுக்குத் தெரியும்.

'உங்கள் யோசனையை மறுக்கமாட்டேன். அந்தப் பெண் எனக்குத் தகுந்தவள் என்று உங்களுக்குத் தோன்றினால் போய் வாங்க. நான் வரமுடியாது. ஊரிலே திருட்டுப் போனதாலெ ஜனங்க பயப்படறாங்க. அதோட மழையாலே வீடுகள் இடிஞ்சு விழுந்து வாழ்க்கை நடத்தறதே எல்லோருக்கும் கஷ்டமா இருக்கு. அவர்களுக்கெல்லாம் தைரியம் சொல்ல நான் இங்கே இருக்கணும். அப்பறம் எலி விழுந்த வீடுகளின் லிஸ்ட் எடுத்துப் போலீசுக்கு அனுப்பணும். ஊருக்கு அமைதி கெடச்சப்பறந்தான் கலியாண யோசனை. இன்னொரு விஷயமும் இருக்கு. இப்ப நான்தான் சிமணாவைக் கொண்டுவந்து மடத்திலே வச்சிருக்கேன்னு எல்லாரிடமும் சொல்லியிருக்கீங்க. இந்தச் செய்தி சாத்தேனஹள்ளி மணியக்காரர் காதிலே விழுந்தா எப்படியிருக்கும்?' என்று லிங்கப்பா தன் நெஞ்சில் உறுத்திய சந்தேகத்தை வெளியிட்டான்.

'அதைப்பத்தி என்ன? நம்ம மருமகன் ரொம்ப ரஸிகன்னு நெனைச்சுப்பாரு. ருத்திரப்ப கௌடருக்கு ரெண்டு பொண்சாதிக. அதுக்குமேலே வச்சுகிட்டிருக்கறவங்க எத்தனையோ பேரு! பணக்காரருக்கு இதெல்லாம் சகஜந்தான். நீங்க ஒன்னும் கவலைப்பட வேண்டாம்' என்று படதையா தைரியம் சொன்னார்.

லிங்கப்பா பேசாமல் இருந்தான். எல்லாம் தான் நினைத்தது போலவே தெய்வம் நடத்திக்குடுக்கிறது. அதற்குப் படதையா காரண புருஷராக இருக்கிறார். தன் வாழ்வின் பொறுப்பை அவர்மேல் சுமத்திவிட்டுக் கவலையற்று இருந்துவிடலாம். சிமணா விடமும் இந்தச் செய்தியைச் சொல்லிவிடுவதாகப் படதையா சொன்னார். ஒரு வழியாகப் பாதள்ளியில் தன் பிற்கால வாழ்க்கை தங்குதடையின்றி நடக்கும் என்று லிங்கப்பா மகிழ்ச்சியடைந்தான்.

படதையா இந்தத் தந்திரம் செய்வதற்கு மற்றொரு காரணமும் உண்டு. திருடிக்கொண்டு வந்த பணம் எல்லாம் அவருடைய பெட்டியிலேயே இருந்தது. அது தக்கும் வரையில் அதைக் காப்பதே பெரிய தொந்தரவாக இருந்தது. நாளையோ மறுநாளோ போலீஸ் வருவதாக இருந்தது. பார்வதியம்மாளின் தகராறு, ஊர்ப் புகார் எல்லாம் விசாரணைக்கு வரும். அப்பொழுது மடத்தில் மொத்தப் பணமும் கிடைத்தால் ரகளையாகிவிடும். எல்லாவற்றையும் யோசித்துச் சில நாட்கள் வரையில் ஊரைவிட்டுப் போவதே நல்லது என்று முடிவு செய்தார். அன்று இரவே லிங்கப்பாவிடம் பண முடிச்சுகளை எல்லாம் எடுத்துக் கொடுத்துவிட்டார்.

லிங்கப்பா படுக்கப்போனான். மெத்தையில் உட்கார்ந்திருந்த படதையா அப்படியே படுத்துக்கொண்டார். ஊரைவிட்டுப் போவதாக உறுதி செய்துகொண்டார். இப்போது அவருக்கு ஏனோ பாதள்ளி வெறுப்பைக் கொடுத்தது. ஊரார் எல்லாம் துரத்தியும் தாம் இந்த மடத்துக்குத் திரும்பி வந்தது ஏன்? அவருடைய எந்த விருப்பங்கள் எல்லாம் நிறைவேறின? அஜராணிக்குப் போய்ச் சிமனாவை அழைத்துவந்தார். இங்கே வந்தபின் அவருடைய சூழ்ச்சிகள் உருவாயின. விதைத்த நிலத்தை அழித்தாகிவிட்டது. மணியக்காரர் வீட்டைப் பிடிக்கப் படையெடுத்தாயிற்று. ஊரைக் கொள்ளையடித் தாயிற்று. லிங்கப்பாவை மணியக்காரப் பீடத்தில் உட்கார வைத்தாயிற்று. இதனால் தமக்கு என்ன திருப்தி? படதையாவின் மனம் திருப்தியையே காணவில்லை. இப்பொழுது வெறுப்பே தலைதூக்கி நின்றது. தற்சமயம் வேண்டியது விடுதலை. அதற் காகவே இப்படித் திட்டம் போட்டார். அடுத்தபடி சிமனா. அவள் தம்மையே நம்பிக்கொண்டா இருக்கிறாள்? தமது வாழ்க்கைக்கு அவள் அவசியம் என்று தோன்றவில்லை.

படதையா அப்பொழுதுதான் கண் அயர்ந்திருந்தார். அரைத் தூக்கமும் அரை விழிப்புமான மயக்கநிலை. அதற்குள் ஒரு கனவு கண்டார். அவர் குதிரை ஏறிப் போய்க்கொண் டிருக்கிறார். பார்த்த இடமெல்லாம் வெட்டவெளி, மைல் கணக்காக நீண்டிருந்தது. வெயில் சுள்ளென்று உறைத்தது. மரம் மட்டைகள் எல்லாம் எங்கே ஒழிந்தனவோ? ஒன்றுகூட இல்லை. படதையாவைத் தாகம் வறட்டியது. எங்கேயும் நீர் கிடைப்பதாகத் தோன்றவில்லை. தற்செயலாகப் பின்னால் திரும்பிப் பார்த்தார். பாம்பு ஒன்று தம்மைத் தொடர்ந்து வந்துகொண்டே இருந்தது. அது குதிரையின் காலடிச் சுவட்டை ஒட்டியே வந்துகொண்டிருந்தது. அதன் கோதுமை நிறம் வெயிலில் பளபளவென்று மின்னியது. சுருங்கிய படத்தைத் திடீரென்று விரித்து மேலே தூக்கியது. அப்போது பெண் ஒருத்தி கண்ணைத் திறந்து பார்ப்பதுபோல் தோன்றியது. ஆனால் அது பாம்பு என்று நினைத்தவுடன் பயம் உண்டாயிற்று. குதிரையைத் தட்டிவிட நினைத்தார். அதுவும் களைத்திருந்தது. வெயில் மண்டையைப் பிளந்தது. குதிரையிலிருந்து இறங்கி ஓடிப்போகலாம் என்றால் அதற்கும் சக்தி இல்லை. ஆனால் பாம்பு மட்டும் இணையில்லாத உத்ஸாகத்துடன் ஓடிவந்துகொண் டிருந்தது. அதைத் தடுப்பது எப்படி? அதை எங்கே துரத்துவது? படதையா கூச்சலிட நினைத்தார். குரல் எழும்பவில்லை. பயம் உடம்பைப் பிழிந்துவிட்டது.

ஆம்; உடம்பையெல்லாம் பிழிந்துவிட்டதுபோல் வேர்வை கொட்டிக்கொண்டிருந்தது. அவசரமாகக் கண்ணைத் திறந்தார். தாம் மடத்திலேயே இருப்பதை அறிந்து, படையா தைரியம் அடைந்தார். அதற்குப் பிறகு தூக்கம் வரவில்லை. மறுபடியும் கவலை தொடங்கியது. மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு தூங்க நினைத்தார். ஆனால் விடியற்காலையில் புறப்படவேண்டும். விழிப்பு வராவிட்டால் என்ன செய்வது என்று மறுபடி கண்ணைத் திறந்தார். படுக்கையிலேயே எழுந்து உட்கார்ந்தார். அதுவும் பிடிக்கவில்லை; படுத்தார். இப்படியும் அப்படியும் புரண்டு இரவு எவ்வளவு நேரம் ஆகியிருக்கும் என்று யோசித்துப் பார்த்தார்.

முடிவு செய்தபடி படையா விடியற்காலம் எழுந்து குதிரை ஏறிச் சாத்தேனஹள்ளிக்குப் புறப்பட்டார். அவருடன் வாரக் காரக் கரியப்பனும் புறப்பட்டுப் போனான். மடத்தில் லிங்கப்பா மட்டுமே இருந்தான். திரும்பவும் சிமனாவின் நினைவுவந்தது. அது மெல்ல மெல்ல அவன் இதயத்தை அரிக்கத் தொடங்கியது. சேற்றில் கால் வைத்ததுபோல் ஆயிற்று. ஒரு காலை வெளியில் எடுத்தால் மற்றொரு கால் இன்னும் ஆழத்துக்குப் போய்க் கொண்டிருந்தது. அந்த வேதனையை மறக்க லிங்கப்பா ஊருக்கு உள்ளே போனான்.

ஆச்சார் மனைவியின் திடீர் மரணம் ஜனங்களைக் கலங்க வைத்தது. ஒருநாள் ஜுரத்தில் சாவது உண்டா? ஜுரம் வந்தவர்கள் எல்லோருமே தாமும் இப்படி இறந்துவிட்டால் என்ன செய்வது என்று பயந்தார்கள். கடந்த மூன்று தினங் களாகப் பெய்த மழை காரணமாகவோ என்னவோ ஒவ்வொரு வீட்டிலும் ஜனங்கள் படுக்கையில் இருந்தார்கள். ஜுரம் கண்டு விபரீதமாக ஏறிக்கொண்டிருந்தது. உடம்பைத் தொட்டால் காய்ந்த வாணலியைத் தொடுவதுபோல் இருந்தது. கட்கத்திலோ தொடைசந்திலோ வீங்கிப் பொறுக்கமுடியாத வலி உண்டாயிற்று. கண்கள் குந்துமணிபோல் சிவந்துவிட்டன. கிட்டத்தட்ட எல்லோர் நிலையும் ஒரே மாதிரி இருந்தது.

மழை முழுவதும் நிற்கவில்லை. முன்போல் இடைவிடாமல் பெய்யவில்லை என்றாலும் நின்று நின்று பெய்துகொண்டிருந்தது. மழை நின்றாலும் வெயில் வரவில்லை. வீடுகளில் நிறைய ஒழுகி யிருந்ததால் தரையில் ஓதம் தட்டி 'நசநச'வென்றிருந்தது. ஜுரம் வந்தவர்களை அங்கேயே பாய்போட்டுப் படுக்க வைத்தார்கள். நாலைந்து நாட்களுக்குள் வாழ்க்கையே நரகமாகி விட்டது. நோய் கண்டவர்கள், காணாதவர்கள் எல்லோருமே ஜுரம் வந்தவர்போல் ஆனார்கள். யாருடைய முகத்திலும் உத்ஸாகம் இல்லை. வியாதியால் சலிப்பான பேச்சுகள்தாம்

வெளிவந்தன. இடிந்த வீடுகளைச் சரி செய்யவும் நேரமில்லை; மாடு கன்றுகளைக் கவனிக்கவும் முடியவில்லை. தெருப்படியில் வந்து நின்ற இடியையே (பிளேக்) முதலில் வரவேற்கும்படியாக இருந்தது.

மழை, காற்று, இடி இவற்றால் பாதள்ளியின் வாழ்க்கை துன்பமயமாயிற்று. ஜனங்கள் தெய்வத்துக்குக் கோபம் வந்திருக்கும் என்று முடிவு செய்தார்கள். முன்பு வந்த காலரா, காட்டுத்தீப்போல் பரவி ஊரைச் சுட்டது. இப்போது வேறொரு மாதிரியான கொள்ளை நோய். சுற்றுப்புறத்துக் கிராம தேவதைகள் எல்லாம் கோபித்துக்கொண்டிருப்பார்கள். முதலில் அவர்களைத் திருப்தி பண்ணவேண்டும். பூஜையும் நிவேதனமும் நடத்தவேண்டும். இப்படி நாலுபேர் சேர்ந்த இடத்தில் பேசிப் பேசி ஊரே அதை ஏற்றுக்கொண்டது.

அன்று ஆவணி மாதம் சுக்ல ஏகாதசி. அன்று இரவு கண் விழித்துப் பஜனை செய்யவேண்டும் என்று முடிவு செய்தார்கள். காற்றினும் கடிதில் பரவிய புதுநோய்க்குப் பயந்த ஜனங்கள் எல்லோரும் அதற்கு இசைந்தார்கள். கோபாலகிருஷ்ணன் கோயிலில் பஜனைக்கு ஏற்பாடு ஆயிற்று. நாராயணைச்சார் பஜனையில் நிபுணன். பஜனைகளை அவன்தான் முன்நின்று நடத்துவது வழக்கம். விடிய விடியச் சலங்கைகட்டிக் குதித்தாலும் அவனுக்கு அலுப்புத்தட்டாது. கோயிலில் பஜனை என்று கேள்விப்பட்ட மடத்து ஜனங்களும் பஜனை செய்ய முடிவு செய்தார்கள். ஊரில் வீடுகள் எல்லாம் ஒழுகி ஈரமாக இருந்தபடியால் ஜனங்கள் தங்கிப் படுக்கும் இடங்களில் எல்லாம் பஜனை மேளங்கள் கூடின. பஜனை செய்ய மனம் இல்லாதவர்கள்கூடப் படுக்க இடம் இல்லாததால் பஜனையில் சேர்ந்துகொண்டார்கள். சாவடி, அநுமார்கோயில் என்று பல இடங்களில் பஜனை ஏற்பாடாயிற்று. இரவில் ஜனங்கள் படுக்கும் இடங்களில் எல்லாம் தொற்றுநோய்போல் பஜனையும் பரவியது.

மடத்தில் படதையா இருந்திருந்தால் அங்கே நடக்கும் பஜனைக்குக் களைகட்டி இருக்கும் என்று சிலர் நினைத்தார்கள். கஞ்சாவும் தீர்த்தமும் இருந்தால் அந்தப் பஜனைக்கே அலாதி அழகுதான். அந்த வெறி, அந்த ஈடுபாடு, அந்த விறுவிறுப்பு இவற்றால் அடிக்கடி பரமாத்மாவை வசப்படுத்தலாம். வீட்டையும் குடும்பத்தையுமே நினைத்துக்கொண்டிருந்தால் அது என்ன பஜனை? பஜனையிலேயே மனம் ஈடுபட வேண்டுமானால் அதற்குக் கஞ்ஜா மயக்கம் இருக்கவேண்டும். ஆனால் இப்பொழுது அது கிடைக்காது. கூடிய ஜனங்கள் சோர்ந்துவிட்டாலும் ஒரு

விஷயத்துக்கு எல்லோரும் கட்டுப்பட்டார்கள். சிலர் கஞ்ஜாவும் தீர்த்தமும் இல்லாததால் பஜனை செய்தே ஆகவேண்டும் என்றார்கள். இல்லாவிட்டால் தண்டத்துக்கு மடத்தில் படுத்துக் கொள்வதால் என்ன பயன்?

வீட்டில் படுக்க இடம் இல்லாததாலோ பரவிவரும் நோய்க்குப் பயந்தோ பஜனைத்திட்டம் உறுதி ஆயிற்று. புழுதி படிந்துகிடந்த ஜாலராக்களெல்லாம் வெளியே வந்தன. ஒற்றைக் கம்பித் தம்பூராக்களைச் சுருதி கூட்டினார்கள். சிலர் தம் குரலைச் சரிப்படுத்திக்கொண்டார்கள். ஊரில் இதுபோன்ற பொது நிகழ்ச்சிகள் சமீபத்தில் நடக்கவில்லை. ஜனங்கள் உத்ஸாகமாக ஈடுபட்டார்கள்.

அந்திநேரம் வந்தது; இருட்டிவிட்டது. இருட்டு ஓசைப் படாமல் அடியிட்டு எங்கும் தன் கறுத்த நிழலைத் தங்கவிட்டு நடந்துகொண்டிருந்தது. மேல்காற்று ஜில்லென்று வீசியது. ஊர் அடங்கத் தொடங்கியதுமே ஆற்றங்கரைப் பக்கத்திலிருந்து 'ஹோ' என்ற அலையோசை கேட்கத் தொடங்கியது. ஆயிரக் கணக்கான சிள்வண்டுகள் மாலைச் சங்கீதத்தில் ஈடுபட்டன. மேகங்களின் வெடிப்பிலிருந்து ஏகாதசிச் சந்திரன் தன் மங்கிய ஒளியைப் பரப்பினான். வானத்தின் நெஞ்சில் ஏதோ குழப்பம் ஏற்பட்டிருக்கவேண்டும். இல்லாவிட்டால் ஏன் இவ்வளவு மாறுதல்? சற்றுமுன் கனமாக மிதந்துவந்த மேகம் ஒன்று உடனே பன்னிய பஞ்சுபோல் பரவலாக விரிந்தது. சற்று நேரத்துக்கெல்லாம் மற்றொரு மேகக்கூட்டம் காணப்பட்டது. கண்ணீர் உகுப்பதுபோல் சில தூற்றல்களை உதிர்த்துவிட்டுக் காற்றினால் வெளிவாங்கிவிட்டது. பெய்து ஓய்ந்துவிட்ட மேகங்களே எங்கும் நிறைந்திருந்தன. சந்திரன் ஏனோதானோ என்று ஒளிவீசிக்கொண்டிருந்தான். அவனைச் சுற்றிப் பனித்திரள் படர்ந்திருந்தது. அது, சாம்பிராணிப்புகை மூலமாக விளக்கைப் பார்ப்பதுபோல் இருந்தது. திடீரென்று சந்திரனைச்சுற்றிக் கோட்டை காணப்பட்டது. மாயாவியான அரக்கன் ஒருவன் அவனைச் சிறைப்பிடிக்க மந்திரக்கோடு போட்டதுபோல் அது இருந்தது. அங்கும் இங்கும் பார்க்கச் சந்திரனால் முடியவில்லை. நட்சத்திரங்களோ பாதி வெளிச்சத்திலும் பாதி மேகத்தில் மறைந்தும் காணப்பட்டன.

இரவு பத்துமணிக்குமேல் பஜனை நிகழ்ச்சி தொடங்கியது. கோபாலகிருஷ்ணன் கோயிலில் இருந்து, 'ஹரே கிருஷ்ண! ஹரே ராம!' என்று பஜனை நாதம் கேட்டது. டிடிக்கடி குரல்கள் மாறினாலும் அதே பல்லவி, திரும்பத் திரும்ப ஏற்றச் சால் கிரீச்சிடுவதுபோல் காதில் விழுந்தது. சாவடியில் இருந்தும்

அநுமார்கோயிலில் இருந்தும் அதேபோல் பல குரல்கள் எழுந்து ஒலித்தன. யாருக்கும் தூக்கம் தேவைப்படவில்லை. அன்று விழிப்பும் முழு எச்சரிக்கையும் அவசியமாக இருந்தன. வந்த கொள்ளைநோயைக் கடவுளிடம் முறையிட்டு விரட்டவேண்டி இருந்தது.

மடத்தில் காமா ஸோமா என்று பஜனை நடந்தது. 'குருவை பஜனை பண்ணு மனமே!' என்று அபசுவரமாகப் பாடினாலும் உத்ஸாகமாகவே பஜனையைத் தொடங்கினார்கள். வெண்கல ஜால்ராக்களின் ஒலி ஓயாமல் எழுந்து அமைதியை விரட்டியது. நரம்புகள் அறுந்துபோய்விடுவதுபோல் பக்தர்கள் ஆவேசத்தால் கூக்குரல் இட்டார்கள். கத்திக் கத்தி சிலருடைய தலைப் பாகைகள், கீழே விழுந்து அவிழ்ந்துகிடந்தன. பாடுபவர்கள் பாடிக்கொண்டிருந்தார்கள். மற்றவர்கள் எல்லோரும் 'சிவாய நம ஓம்' என்று நூறுவது முறையாகச் சொல்லிக் கையால் தாளம் போட்டுக்கொண்டிருந்தார்கள். ஆனால் அந்தச் 'சிவாய நம ஓம்' ஒன்றிலேயே எத்தனை பாவங்கள் ஏறியும் இறங்கியும் தோன்றிக்கொண்டிருந்தன! ஒருமுறை உத்ஸாகம், ஒரு தடவை பக்தி, மற்றொரு முறை சலிப்பு, இன்னொரு முறை தூக்கக் கலக்கம் இப்படி பக்தர்களுடைய மாறுபட்ட பல மெய்ப் பாடுகள் பஜனையில் தோன்றிக்கொண்டிருந்தன. லிங்கப்பன் அன்று மடத்தில் தனியாக இருந்ததால் பஜனையில் கலந்து கொள்ளவேண்டியதாயிற்று. அவனுக்கு இஷ்டம் இல்லை என்றாலும் கடமை என்று ஒன்று இருக்கிறதல்லவா? இடையில் ஏதோ வேலை இருப்பதாகச் சாக்குச் சொல்லிவிட்டு உள்ளுக்கும் வெளிக்குமாக அலைந்தான். யாரையோ அழைக்கவேண்டும் என்று வெளியிலும் போய்விட்டு வந்தான். பக்தர்கள் கூட்டம் மட்டும் தரையில் வேர் ஊன்றியதுபோல் பஜனையைவிட்டு நகர வில்லை. பஜனையில் சூடுபிடித்தது. மேல்காற்று வீசும்போது பயிர்கள் அடியோடு சாய்வதுபோல் பஜனை செய்பவர்கள் பாட்டின் லயத்துக்கு ஏற்றபடி ஆடிக்கொண்டிருந்தார்கள். லிங்கப்பாவுக்கு இவற்றையெல்லாம் பார்த்து அலுப்புத் தட்டி விட்டது.

அவனுடைய லட்சியம் வேறு எங்கோ இருந்தது. அன்று சிமணா கொடுத்த தவணை முடிந்திருந்தது. படதையாவும் ஊரில் இல்லை. மடத்தின் உட்புறத்து அறையில் சிமணா சிறைப் பட்டிருந்தாள். படதையா எப்படியும் அவளைத் தன்னிடம் ஒப்படைத்திருந்தார். காலம் அநுகூலமாக இருந்தது. கையால் தொட்ட மண்ணும் பொன்னாயிற்று. அவன் ஆசைப்பட்ட பொருள்களெல்லாம் காலின் கீழ் வந்துகிடந்தன. அன்று

தன்னுடைய ஆசையை எப்படியாவது நிறைவேற்றிக்கொள்ள வேண்டும் என்று பிடிவாதமாக இருந்தான். மனத்தைத் தவிர வேறு எதுவும் தடையாக இல்லை. நினைவை உறுதிப்படுத்திக் கொண்டால் போதும். வெளியே பஜனை நடந்துகொண்டுதான் இருந்தது. ஜால்ராவுடன் 'ஓம் நமச்சிவாய' ஓயாமல் ஒலித்துக் கொண்டே இருந்தது. அதைக் கேட்டுக் கேட்டு லிங்கப்பாவுக்கு எரிச்சல் வந்தது. ஒரே ராகம், ஒரே பாட்டு; அதே ஜால்ராவின் தொனி எல்லாம் சேர்ந்து காது செவிடாகும்படி துளைத்தன. லிங்கப்பாவின் மனம் திரும்பவும் சிமணுவைச் சுற்றிவந்தது. இன்று அவளைக் கேட்டுவிடவேண்டும். அவள் இணங்கும்படி செய்யவேண்டும். இன்னும் எத்தனை காலம் அவள் மடத்துச் சிறையில் இருப்பது? மணியக்காரர் வீட்டை ஆக்கிரமித்துக் கொண்டு அங்கே அவளுடன் சுகமாக வாழவேண்டும். சாத்தேனஹள்ளி மணியக்காரரின் மகளைப் படதையா நிச்சயம் செய்யருரோ இல்லையோ? நடக்காததைப்பற்றி நெனச்சு என்ன பிரயோசனம்? இங்கே சிமணு கைக்கு எட்டும் நிலையில் இருக்கிருள். அவளுடைய சம்மதம் ஒன்றுதான் பாக்கி.

லிங்கப்பாவின் ஆத்திரம் அதிகரித்தது. நெஞ்சு 'திக் திக்' கென்று அடித்துக்கொண்டது. சிமணுவின் உருவம் கண்முன் வந்து நின்றது. பயந்த எலியைப்போல் உட்கார்ந்த இடத்தி லேயே திருதிருவென்று விழித்துக்கொண்டிருந்தான். இன்னும் எவ்வளவு நேரம் காத்திருக்கவேண்டும்? தான் ஏன் காத்திருக்க வேண்டும்? ஊர் மணியக்காரனுக இருந்தும் தன் சுகத்துக்காகப் பிறர் தயவை நாடவேண்டுமா? சிமணு இஷ்டப்படாவிட்டால் அவளை நெருக்கியே தீரவேண்டும். ஆம்; சில விஷயங்களில் சொல்லிப் புரியவைக்க முடியாது.

பஜனை களைகட்டியது. தாளம் படிப்படியாகத் துரிதகதிக்கு ஏறியது. காய்ந்த வாணலியின்மேல் நிற்பதுபோல் பஜனை செய்பவர்கள் பறக்கப் பறக்க சுற்றிவந்துகொண்டிருந்தார்கள். சூழ்நிலையே அந்த லயத்தைச் சுற்றிவருவது போலும் தலை சுற்றுவதுபோலும் இருந்தது. ஒரு வட்டம் முடிந்தது.

லிங்கப்பாவின் காதுக்கு இவையெல்லாம் தாங்க முடியாதன வாக இருந்தன. பஜனையின் நாதம் நீர்வீழ்ச்சியின் ஓசையைப் போல் காதை அடைத்தது. உடனே பஜனை செய்பவர்கள் பக்கம் திரும்பினுன். பஜனையையும் மீறிய குரலில், 'ராத்திரி ரொம்பநேரம் ஆயிட்டுது. நிறுத்துங்க பஜனையை! என்று கத்தினுன். பஜனையிலேயே மூழ்கிவிட்ட அவர்கள் காதில் இது விழவில்லை. லிங்கப்பாவுக்குக் கோபம் வந்துவிட்டது. மறுபடியும் ஒருமுறை அதே சொற்களை உரத்த குரலில் சொல்லிக் கத்தினுன்.

பஜனை செய்பவர்கள் எல்லோரும் லிங்கப்பாவின் பேச்சைக் கேட்டு மிகவும் ஆச்சரியம் அடைந்தார்கள். நிமிர்ந்து அவனைப் பார்த்தார்கள். 'சே, சே! ஊரிலே ஜனங்க ஜுரம் வந்து பொசிங்கிப்போயிட்டிருக்காங்க. அதுக்காகத்தான் கடவுளை நெனச்சுப் பஜனை பண்ணிகிட்டிருக்கோம். இந்த ஒரு ராத்திரி யாவது பஜனை நடத்தணுங்க' என்று மீசை நரைத்த கிழவன் ஒருவன் சொல்ல, மற்றவர்களும் அதை ஆமோதித்தார்கள்.

லிங்கப்பா புருவத்தை நெரித்து 'எனக்கு இந்தப் பஜனையைக் கேட்டே தலைநோவு வந்திடுச்சு. என்னுலே கேக்கவே முடியலே' என்று சொல்லிவிட்டுப் படுக்கப்போனுன்.

பெரியகுறும்பன் வீட்டு மல்லன் எழுந்துவந்து லிங்கப்பாவின் கையைப் பிடித்துப் பார்த்துப் பயத்துடன், 'உடம்பு சுடுதுங்க. கௌடருக்கும் ஜுரம் வந்துட்டாப்பலெ தெரியுது' என்று சொன்னுன். அந்த ஒரு சொல் அங்கிருந்த எல்லோரையும் நடுங்கவைத்தது. லிங்கப்பாவும் நடுங்கினுன். உடம்பு வேர்த்தது. ஆனுல் அவன் மனம் அதை ஒப்புக்கொள்ளவில்லை. 'கொள்ளைநோய் தன் பக்கத்தில்கூட வராது' என்ற எண்ணம் எப்படியோ அவனுக்கு வந்திருந்தது. 'அட முட்டாளே! கம்பளியைப் போத்திகிட்டு அடக்கமாக் குந்திகிட்டு இருந் தேன். உடம்பு சூடாக இருக்கு. இத்தினி நேரம் தண்ணியை ஊத்திக் கஞ்சாக் குழாயைத் தேச்சே. அந்த ஈரக் கையாலே தொட்டுப் பாத்தா ஒடம்பு சுடாதே எப்படி இருக்கும்?' என்று அதற்கு ஒரு காரணம் கற்பித்துச் சொன்னுன். அங்கே நிற்கவும் அவனுல் முடியவில்லை. படுக்கவேண்டும் என்று சொல்லிவிட்டு உள்ளே போனுன்.

உண்மையாகவே லிங்கப்பாவின் உடம்பு சுட்டது. பகலெல்லாம் சிமனுவை எண்ணி எண்ணித் தலையில் சூடு ஏறிவிட்டது. ஏக்கம் உடம்பிலும் பரவியது. 'இன்றைக்கு எப்படியும் நினைத்ததைச் சாதித்துவிடவேண்டும்' என்ற ஆத்திரம் ஜுரத்தைப்போல் தீவிரமாக இருந்தது. பஜனையில் உட்கார்ந்திருந்த சில போக்கிரிகளுக்கு இந்த ரகசியம் புரிந்து விட்டது. அவனுக்குப் பின்னுலேயே தம் கண்களால் பேசிக் கொண்டனர். கௌடர் சிமனுவைப் பார்க்கத்தான் உள்ளே போயிருக்கிருர் என்று முடிவு செய்து, 'இனிமேலே கௌட

ருடைய ஜுரம் இறங்கிவிடும்டா' என்று சொல்லி ஒருவன் 'களுக்' என்று சிரித்தான்.

'அப்படியானல் வயசுக் காளைகளுக்கு வர ஜுரந்தான் வந்திருக்குன்னு சொல்லு' என்று மற்றெருவன் நீட்டி முழக்கிச் சொல்லிவிட்டுச் சிரிப்பை அடக்க முடியாமல் உரக்கச் சிரித்து விட்டுக் கையால் வாயைப் பொத்திக்கொண்டான்.

பக்தியோடு கண்ணை மூடிக்கொண்டு பஜனை செய்து கொண்டிருந்த சிலருக்கு இவர்கள் பேச்சைக் கேட்டுக் கோபம் வந்தது.

'போதும்; இந்த அசிங்கப்பேச்சை நிறுத்துங்கடா! அப்படிப் பேசறதானப் பறச்சேரிக்கோ சக்கிலியச் சேரிக்கோ போங்கடா!' என்று கர்ஜித்தார்கள். ஆனல் அவர்கள் இன்னும் பேசவேண்டி இருந்தது. இருவரும் தமக்குள்ளேயே கிசுகிசுத்தார்கள். அவர்களுள் ஒருவன், 'சித்தப்பா, சக்கிலிச்சேரி மல்லி பிள்ளை பெத்துக் கொழந்தை செத்துப்போயிடுச்சுன்னு அழுதுகிட்டுக் குந்தியிருக்கா. இல்லாட்டி இந்தக் கௌடர் அவ வீட்டுக்குப் போகாமெ இங்கே மடத்துலே குந்தியிருப்பாரா?' என்று கௌடரின் நடத்தையைப்பற்றிச் சுருக்கமாகச் சொன்னன். எவ்வளவு மெதுவாகப் பேசினலும் அது சிலருக்குக் கேட்டு விட்டது.

'அடேய்! சுவாமி பஜனை நடக்கும்போது என்ன பேச்சுப் பேசறீங்கடா? மனசுவச்சுப் பஜனை செய்யக்கூடாதா? சாமி கஷ்ட காலத்தை வெலக்கிடுவாரு' என்று நரைத்த மீசைக் கிழவன் பொறுக்காமல் கோபித்துக்கொண்டான். உடனே எல்லோரும் அடங்கிவிட்டார்கள்.

ஒருவன் எழுந்து நின்று, 'சித்தப்பா! குறும்பர் வீட்டு மாயப்பா ஒரு பதம் பாடருணும் கேளுங்க. அந்தப் பதம் முடிஞ்சப்பறம் இன்னெரு சுற்று ஓம் நமச்சிவாய நடக்கட்டும்' என்று சொன்னன்.

'நடக்கட்டும் அப்பா, மாயா! சுவாமி மேலே பதம் சொல்லு மகனே!' என்று மீசை நரைத்த கிழவர் சொல்லித் தட்டிக் கொடுத்தார்.

மாயப்பா இருமித் தொண்டையைச் சரிப்படுத்திக்கொண்டு ஒற்றைக் கம்பித் தம்பூராவை மீட்டினன்.

'இந்தப் பேச்சைக் கேளுங்க பெரும் மாயை' என்று ஆரம்பிக்கும் பாட்டைத் தொடங்கினன். எல்லோரும் அந்தப் பாட்டின் மயக்கத்திலேயே ஐக்கியமாகிவிட்டார்கள். மாயப்பனுடைய

குரல் வெண்கலம் போன்றது. நள்ளிரவின் அமைதியில் பாட்டு எல்லா இடங்களுக்கும் கேட்டது. லிங்கப்பா உள்ளே விளக் கேற்றினன். படுக்கையில் உட்கார்ந்து இருமினன். தான் வந் திருப்பதைக் கவனித்துச் சிமணு தானே வருவாள் என்று அவன் எதிர்பார்த்தான். வெகுநேரம் ஆகியும் சிமணு வரவில்லை. லிங்கப்பாவுக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை. அதை மாற்ற பஜனையைக் கவனித்தான். மாயப்பன் பாட்டு வளர்ந்து கொண்டேயிருந்தது. பாடிய அடியையே திருப்பித் திருப்பி பாடிக்கொண்டிருந்தான்.

''ஜீவனிடம் சொன்னதையா தேகம்
விட்டோடி விடாதே மகராஜா!''

லிங்கப்பாவுக்கு புரியவில்லை. எண்ணம் மறுபடியும் சிமணுவிடம் திரும்பியது. என்ன செய்தால் சிமணு வருவாள். நாமே போனல் போயிற்று என்று நினைத்து எழுந்திருந்தான். திடீ ரென்று போகத் துணிவு வரவில்லை. அறையிலேயே சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருந்தான். அதுவும் அலுப்பைக் கொடுத்தது. சிமணுவின் அறையை நோக்கி நடந்தான். கதவு தாழிட்டு இருந்தது. பழையகாலத்துக் கதவானதால் விரிசல் கண் டிருந்தது. லிங்கப்பா அதன் வழியாகப் பார்த்தான். வெளியே மாயப்பனுடைய பாட்டு கேட்டுக்கொண்டேயிருந்தது.

''நம்முட நட்புக் கீடில்லை; அது
முத்தும் பவளமும் சேர்ந்ததுபோல்''

லிங்கப்பாவின் காது பாட்டைக் கேட்டுக்கொண்டிருந்தது. மனம் உள்ளே தெரிந்த காட்சியில் ஈடுபட்டிருந்தது. சிமணு படுத்துக்கொள்ளவில்லை. குழந்தையை மடியில் போட்டுத் தட்டிக்கொண்டிருந்தாள். முகத்தைக் கவிழ்த்துக் குழந்தையைப் பார்த்துக்கொண்டிருந்தாள். கை குழந்தையின் தலையை வருடிக் கொண்டிருந்தது. முகத்தில் வெளிச்சம் விழுந்தபோது முகத்தில் துக்கச் சாயை படர்வது தெரிந்தது. லிங்கப்பா சற்றுநேரம் அவளையே பார்த்துக்கொண்டிருந்தான். அவனுடைய ஆத்திரம் அதிகரித்தது. கதவுச் சங்கிலியை ஓசைப்படுத்தித் தன் வரவை ஜாடையாகத் தெரிவித்தான். மாயப்பன் பாடிக்கொண்டே இருந்தான்.

''உங்களுக்கும் எங்களுக்கும் பகை இல்லை; இனி
கழுத்தை வெட்டும் பேச்செதற்கு?''

சங்கிலி ஓசையைக் கேட்ட சிமணு சட்டென்று எழுந் திருந்தாள். குழந்தையைத் தூளியில் படுக்கவைத்துவிட்டுக் கதவருகே வந்து நின்ருள். லிங்கப்பாவின் இதயம் 'திக் திக்'

என்று அடித்துக்கொண்டது. சிமணு உள்ளே கதவு தாளிட்டிருப்பதை உறுதி செய்துகொண்டு மற்றொரு தாழ்ப்பாளையும் போட்டாள். திரும்பிவந்து படுக்கையில் உட்கார்ந்து கொண்டாள்.

குழந்தைக்குத் தூக்கம் வரவில்லை. அம்மா மடியைவிட்டு எடுத்துவிட்டதால் அழத்தொடங்கியது. சிமணு மனது கேட்காமல் மறுபடியும் குழந்தையை மடியில் படுக்கவைத்துத் தட்டினாள். சீக்கிரம் தூங்கட்டுமென்று பால் கொடுத்தாள்.

லிங்கப்பா பொறுமையை இழந்தான். அவன் அந்தக் காட்சியைக் கண்டு வெறியனாகிவிட்டான். கதவைத் 'தடதட'வென்று இடித்தான். 'சிமணு' என்று கூப்பிட்டான். 'யாரது' என்று சிமணு பயந்துகொண்டே கேட்டாள். 'நான் சிமணு, நான் தான். கதவைத் திற' என்று லிங்கப்பா கெஞ்சினான். அவன் குரலைக் கேட்ட சிமணு கல்லாய்ச் சமைந்தாள். முகம் கடுமையாகியது. மறுபடியும் குழந்தையைத் தூளியில் படுக்கவிட்டாள். திடமான முடிவுடன் படுக்கையில் உட்கார்ந்தாள். லிங்கப்பா மறுபடியும் கதவைத் தள்ளினான். சிமணு பதிலே சொல்லவில்லை.

சிமணு வெறுப்புக்கொண்டாள். 'என்றைக்காவது ஒருநாள் தனக்கு இந்தச் சோதனை வந்தேதீரும்' என்பது அவளுக்குத் தெரியும். யசவந்தராவ் வீட்டிலிருந்து தான் வந்ததே தவறு என்று வருந்தினாள். ஒருமுறை சீர்கெட்ட வாழ்வு எப்படிப் போனால் என்ன என்ற வெறுப்பில் அவள் படதையாவுடன் வந்து விட்டாள். இங்கே தினந்தோறும் அரித்துத் தின்னும் கவலையோடு அவள் போராடவேண்டியிருந்தது. தன்னுடைய சுகதுக்கங்களையே இழந்துவிட்டாள். எப்போதாவது ஒருதடவை தாதாவின் நினைவுவந்து வாழ்வில் ஆசை துளிர்க்கச் செய்யும். அது மின்னல்போல தோன்றி மறையும் ஆசை. அடுத்தகணமே இருள் சூழ்ந்துகொள்ளும். அந்த வெறுப்பும் இப்பொழுது பழகிப்போய்விட்டது. தன் கதி இதுதான் என்று தீர்ந்த பிறகு அவளுக்கு ஒரு போலி ஆறுதல் உண்டாகிவிட்டது. அதுவும் வெகுநாள் நிலைக்கவில்லை. அன்று இரவு படதையா தன் குற்றத்தை மறைப்பதற்காகப் பலபேர் எதிரில் லிங்கப்பாவிடம் தன்னை ஒப்படைத்துவிட்டபோதே அவள் மனத்துக்கு இரண்டாந் தடவையாக பெரிய அடி விழுந்தது ஒரு தடவை கற்பை இழந்துவிட்ட அவளுக்கு எதிர்த்து நிற்கக்கூடச் சுதந்திரம் இல்லை. அன்று முதல் லிங்கப்பாவின் ஆசை நிறைந்த பார்வை அவளைச் சுற்றி வட்டமிட்டுக்கொண்டேயிருந்தது. புதிய பயம் ஒன்று துரத்தியது.

மோடியாட்டத்தை முடித்துவிட்டுப் போய்விடும் சுடுகாட்டுச் சித்தனைப்போல் படதையா மடத்தைவிட்டுப் போன பின்பு அந்தப் பயம் உறுதியாகிவிட்டது. அவள் லிங்கப்பாவுக்கு ஏழு நாட்கள் தவணை கொடுத்தது உண்மைதான். ஆனால் அதற்குப் பொருளே இல்லை. இன்றைக்கு வந்த சாவை நாளைக்குத் தள்ளி விடுவதுபோன்றது அது. சாவை வாழ்நாள் முழுதும் தள்ளிவைக்க முடியுமா? தள்ளிவைத்துத்தான் என்ன பயன்? அதைவிட விடுதலையே ஆயிரம் பங்கு மேலென்று தோன்றியது. லிங்கப்பா வுக்குப் பணபலம், அதிகாரம், மனித ஆதரவு எல்லாம் இருந்தன. தான் அவனை எதிர்த்தால் தனக்குத் துணையில்லை இந்தக் கவலை யால் சிமணுவுக்குக் கண்ணீர் தளும்பியது.

கதவு மறுபடியும் 'தடதட'வென்று தட்டும் ஓசை கேட்டது. எதிர்த்து நிற்கவே முடியாது. ஆனால் லிங்கப்பனுக்கு இணங்கு வதும் முடியாது. அவன் கதவு இடிப்பதை நிறுத்தவே மாட்டான். வெளியே பஜனை நடந்துகொண்டிருந்தது. பலர் கூடியிருந்தார்கள். அவனுக்கு அவர்களிடம் பயமும் இல்லை, வெட்கமும் இல்லை. பாவம் தெருவுக்கு வந்தாலும் கேட்பார் இல்லை. எதற்கும் கடைசியாக முயன்று பார்த்துவிடுவோம் என்று நினைத்தாள். லிங்கப்பா பலமாகக் கதவை இடித்து, 'சிமணு, கதவைத் தெறக்கிறயா இல்லையா?' என்று உதட்டைக் கடித்துக்கொண்டே கேட்டான். 'திறக்கமாட்டேன்' என்று கத்தினாள் சிமணு. 'அப்படியானா கதவை உடைச்சிட்டு உள்ளே வருவேன். பாத்திட்டிரு' என்று லிங்கப்பா வெறிபிடித்துக் கத்தினான்.

அவன் கையில் கதவு ஆடியது. நடுங்கியது. அவனுடைய பலம் எவ்வளவு என்பது சிமணுவுக்குத் தெரியும். இனிமேல் எதிர்ப்பதில் அர்த்தமில்லை என்று தோன்றியது. வெளியே பஜனையில் ஈடுபட்டிருப்பவர்கள் தனக்கு உதவ வரமாட்டார்கள் என்பது அவளுக்குத் தெரியும். வெளியே எங்காவது ஓடிப்போய் அடைக்கலம் புகவும் வழியில்லை. இந்தச் சமயத்தில் 'தாதா இருந்தால்' என்று ஒரு கணம் ஆசையோடு நினைத்தாள். அடுத்த கணமே ஏமாற்றம் அடைந்தாள். முன்வைத்த ஓரடி தவறாக வைத்துவிட்டாள். அது முழுக்க முழுக்கத் தவறான வழியில் தள்ளிவிட்டது. திரும்பிப் போகமுடியாது. திரும்பினாலும் சரியான வழி தெரியாது. யசவந்தராவ் வீட்டிலேயே இருந்திருக் கலாம். ஆனால் அது ஒரு வழியே அன்று. நின்ற இடத்திலேயே நின்றுகொண்டிருந்தால் வழி நம்மைத் தேடி வருமா?

துரதிர்ஷ்டம் வேண்டுமென்றே சதி செய்தது. வேண்டு மென்றே எல்லா வழிகளையும் அடைத்துவிட்டது. மிஞ்சியிருப்பது

ஒரே வழிதான். அதைத் தவிர்க்கவென்றே சிமனு அந்தச் சிறையைவிட்டு வெளியே வராமல் இருந்தாள். அவளுடைய வாழ்க்கைப் பிரயாணம் அங்கே வந்து நின்றுவிட்டது. ஓரடி முன் வைத்தால் போதும். சாவு வலிந்து கட்டிக்கொள்ள ஆத்திரத் தோடு நின்றிருந்தது. அதனால் முன்நோக்கி அடிவைக்கவில்லை. யாருடைய உதவியையும் எதிர்பார்க்கவில்லை. இப்பொழுது துரதிர்ஷ்டம் கதவைத் தள்ளுகிறது. வெளியே வரும்படி வற்புறுத்துகிறது. மறுக்கும் துணிவு இல்லை. சிமனுவின் தீர்மானம் உறுதியாயிற்று. 'இதோ தெறக்கறேன் இரு' என்று உரக்கச் சொன்னாள். லிங்கப்பா அப்போதைக்குப் பேசாமல் இருந்துவிட்டான். வெளியிலிருந்து பஜனை ஒலித்துக்கொண்டே இருந்தது. மாயப்பா இன்னும் அதே பாட்டைப் பாடிக்கொண் டிருந்தான்.

"இங்கே யாரிடம் அழுகின்றாய்?
உன் வீட்டை நீ பார்த்துக்கொள்;
உனக்கும் எனக்கும் கடன் இல்லை,
நான் போகின்றேன் மனம் வெறுத்து!"

திரும்பத்திரும்ப அதே வரிகள் காதைத் துளைத்தன. சிமனு சுற்றுமுற்றும் பார்த்தாள். படலையா குடிப்பதற்கு என்று காப்பாற்றிவைத்த சாராயப் புட்டிகள் இருந்தன. மற்றோ ரிடத்தில் லிங்கப்பா அவளுக்கென்று வைத்துவிட்டுப்போன புதுப்புடவை இருந்தது. சிமனுவுக்கு என்ன தோன்றியதோ? புதுச்சேலையை உடுத்துக்கொண்டாள். அறையின் ஒருபுறமாக ஒதுங்கிநின்று புட்டியிலிருந்த சாராயத்தை எல்லாம் உடம்பில் கொட்டிக்கொண்டாள். சாராய நாற்றம் வெளியிலிருந்த லிங்கப்பாவின் மூக்குக்கும் எட்டியது. மறுபடியும் கதவுச் சந்தில் கண்ணைவைத்துப் பார்த்தான். ரசிகத்தன்மை தலைக்கேறியது. 'ஊஹூம், நீகூடத் தண்ணி போடறயா, என்ன?' என்று கேட்டான். பதிலே வரவில்லை. லிங்கப்பா விழித்தகண் மூடாமல் பார்த்துக்கொண்டிருந்தான். புதுச்சேலை உடுத்தி சிமனு அப்பொழுது விளக்கடியில் நின்றுகொண்டிருந்தாள். கடலை எண்ணெய் விளக்கு அடக்கமாக எரிந்துகொண்டிருந்தது. சிமனு மெதுவாக அதை எடுத்துக்கொண்டு கதவுக்கு அருகே வந்தாள். அவள் பல்லாண்டுகளாகத் தூக்கம் இல்லாத பிசாசைப்போல் தோன்றினாள். ஜீவச்சுடர் அசைந்தாடிக்கொண்டிருந்தது. புதுச்சேலை சரசரத்தது. லிங்கப்பனுடைய உள்ளம் நடுங்கியது.

"ஆத்மா ராஜன் மிக வெகுண்டான்
மூன்று வழிக்கும் கொள்ளி வைத்தான்."

மாயப்பா அதே பாட்டின் அடுத்த அடியை எடுத்துப் பாடிக் கொண்டிருந்தான். கத்திக் கத்தி அவனுடைய குரல் உடைந் திருந்தது. இருந்தாலும் பாடிக்கொண்டே இருந்தான்.

சிமஞ்ஞ கதவைத் தொட்டாற்போல் வந்தாள். லிங்கப்பா, 'கையிலே ஏன் வெளக்கை வச்சிகிட்டிருக்கே?'ன்னு கத்தினுன். சிமஞ்ஞ பதில் பேசவே இல்லை. உள்தாழ்ப்பாள் ஓசைப்பட்டது. லிங்கப்பாவின் உள்ளம் ஆத்திரத்தால் திறந்தவாயிலாயிற்று. வெளியே மாயப்பாவின் பாட்டு ஓயாமல் கேட்டுக்கொண்டே இருந்தது.

திறந்த கதவின் வழியாகச் சிமஞ்ஞவின் கூக்குரலுடன் நெருப்பும் வெளியே வந்தது. சிமஞ்ஞவின் புதுச்சேலையை விளக்குத் தன் செந்நாவை நீட்டி விழுங்கிக்கொண்டிருந்தது. லிங்கப்பா பயத்தால் திறந்த வாயை மூடவே இல்லை. கால்கள் கிடுகிடுவென்று நடுங்கின. அவனுல் நிற்க முடியவில்லை. ஓடவும் சக்தி இல்லை. தீயின் வேகத்தாலோ மரண பயத்தாலோ சிமஞ்ஞ வெளியே வந்துவிட்டாள். எரியும் சேலைத்தலைப்புத் தன்னை மிகவும் நெருங்கிவிட்டதைக் கண்ட லிங்கப்பா மிகவும் பயந்து விட்டான். 'கீச்'சென்று கத்திக்கொண்டு ஓடினுன். அவனுடைய அபயக்குரல் கசாப்புக்கடைக்காரனிடம் அகப்பட்ட மாட்டின் கதறல்போல் கேட்டது. சிமஞ்ஞ தீக்கொழுந்துகளே ஓர் உருவமாக அவனைத் தொடர்ந்தாள்.

வெளியே மாயப்பனுடைய பாட்டு 'டக்'கென்று நின்று விட்டது. பஜனையில் ஈடுபட்டிருந்தவர்களெல்லாம் உள்ளே ஓடிவந்தார்கள். நாலுபேர் விலாவில் கைகொடுத்துப் பிடித்துக் கொண்டிருந்தும் லிங்கப்ப கௌடன் குளிர் வந்தவன்போல் நடுங்கிக்கொண்டே இருந்தான். மற்றும் சிலர் சிமஞ்ஞவின் சேலையில் பிடித்த தீயை அணைக்க ஓடினுர்கள். ஆனுல் நெருப்புச் சுவாலை அவர்களையே விழுங்குவதுபோல் வீசியதால் பயந்து திரும்பிவிட்டார்கள். அடுத்த கணம் சிமஞ்ஞ இடிவிழுந்த மரம் போல் நெருப்பு மயமாக நிலத்தில் உருண்டாள்.

நிலத்தில் விழுந்த பின்னும் சாராயத்தில் நனைந்த சேலை 'திகுதிகு'வென்று எரிந்துகொண்டிருந்தது. கூரையைத் தொட முயன்றுகொண்டிருந்த அந்தத் தீயின் ஒளியில் அங்கே நின்றிருந் தவர்களின் முகங்கள் திகிலாலும் ஏக்கத்தாலும் பயங்கரமாகத் தோன்றின. பஜனைக்காக மடத்துக்குவந்த ஜனங்கள் இந்தக் காட்சியைக் கண்டு பயத்தால் பிரமித்து நின்றுர்கள். 'எப்படித் தீப்பற்றியது?' என்று கேட்கக்கூட யாருக்கும் தோன்றவில்லை. தீயின் விளையாட்டைப் பார்ப்பது ஒன்றே அவர்களால் செய்ய

முடிந்தது. சிலர் அங்கே நிற்கவும் முடியாமல், 'தீ! தீ!!' என்று கத்திக்கொண்டே ஓடினார்கள்.

கோபாலகிருஷ்ணன் கோயில் பஜனையில் நல்ல சூடு பிடித்திருந்தது. தம்பூராவைக் கையில் பிடித்துக்கொண்டு நாராயணச்சார் பாடிக்கொண்டிருந்தான். எல்லோரும் உலகையே மறந்திருந்தார்கள். பாளாச்சார்மட்டும் பஜனையில் சேராமல் கோயில் வெளிப்புறத்துத் திண்ணையில் உட்கார்ந்து யோசித்துக்கொண்டிருந்தார். கீதா சுலோகங்களே திரும்பத் திரும்ப அவர் மனத்தில் சுழன்றுகொண்டிருந்தன. அவருக்கு அன்றிரவு பரிபூர்ணமான விழிப்பு. 'யா நிசா சர்வ பூதானும் தஸ்யாம் ஜாகர்த்தி ஸம்யமி'—வெளியே இருண்டு கிடந்தது; அவர் மட்டும் விழித்துக்கொண்டே இருந்தார். இதுமட்டும் போதுமா? கண்ணில் எண்ணெய் விட்டுக்கொண்டு விழித்திருந்தாலும் இருள் நீங்கி ஒளி வருவதாகத் தெரியவில்லை. அப்படியானல் என்ன பிரயோஜனம்? ஆச்சாருடைய உள்ளம் இந்தச் சிக்கலை விடுவிப்பதிலேயே ஈடுபட்டிருந்தது.

அப்பொழுது குறும்பன் மாயப்பன் 'தீ! தீ!!' என்று கத்தியது அவருக்குக் கேட்கவில்லை. அவன் மற்றொருமுறை அவர் காதருகில் வந்து கத்தினன். ஆச்சாருக்குத் தூக்கிவாரிப் போட்டது. ஒன்றும் புரியாமல் அவன் பக்கம் திரும்பி, 'எங்கே தீப்பற்றியது? எங்கே?' என்று திகிலுடன் கேட்டார். பஜனையில் ஈடுபட்டவர்களும் திரும்பிப் பார்த்தார்கள். 'மடத்திலேங்க.... சிமணுவோட சேலையைப் பிடிச்சூட்டுதுங்க!' என்று மாயப்பன் தடுமாறிக்கொண்டே சொன்னன்.

பாளாச்சார் எழுந்திருந்தார். ஏதேதோ புலம்பிக் கொண்டே நடந்தார். மற்றவர்களும் அவரைப் பின்தொடர்ந்தார்கள். 'பொண்சாதி போனப்பறம் ஆச்சாரையாவின் மூளையே சரியா இல்லை' என்று மாயப்பா அநுதாபத்துடன் சொல்லிக்கொண்டே கூட்டத்துடன் நடந்தான்.

சற்றைக்கெல்லாம் மடத்தில் ஜனங்களும் சந்தடியும் நிறைந்துவிட்டனர். கதிகலங்கிய லிங்கப்பா இன்னும் நடுங்கிக் கொண்டே இருந்தான். சிமணுவின் வெந்த உடல் அப்படியே தரையில் கிடந்தது. அசைவில்லை; கத்தவில்லை. திடீரென்று கீழே விழுந்தாள். உடனே உயிர் பிரிந்திருக்கவேண்டும். கூடியிருந்த ஜனங்கள் இப்படிச் சொன்னர்கள். அறைக்குள் தொண்டை கிழிந்துவிடும்போல் கத்திக்கொண்டிருந்த குழந்தையின் குரல் கேட்டுக்கொண்டிருந்தது. வெறி பிடித்தவர் போல் ஆச்சார் உள்ளே ஓடிப்போய்க் குழந்தைக்கு விளையாட்டுக்

காட்டத் தொடங்கினர். மற்றவர்கள் செய்வதறியாமல் திகைத்து நின்ருர்கள். 'படதையா அவங்க எங்கே இருக்காங்க?' என்று யாரோ கேட்டார்கள். 'ஊரில் இல்லே' என்று பதில் வந்தது. 'லிங்கப்ப கௌடருக்குப் பெண் பார்க்கப் போயிருப்ப தாக' மற்ருெருவர் சொன்னுர். ஆச்சார் எதுவுமே பேசவில்லே. குழந்தையைக் கையில் எடுத்துக்கொண்டு தயக்குள்ளேயே ஏதோ முணுமுணுத்துக்கொண்டிருந்தார்.

எல்லோர் முகத்திலும் குற்றக் களே கூத்தாடியது; நடை பிணம்போல் காணப்பட்டார்கள். உலகத்தில் ரகசியமாக நடக்கும் பாபத்தின் மூடியையே திறந்துவிட்டதுபோல் ஆயிற்று.

ஆச்சார் வெளியே புறப்பட்டார். அவரைத் தடுக்க யாருக்கும் துணிவு இல்லே; சுயநினேவும் இல்லே. மடத்துத் தலேவாயிலேத் தாண்டி வெளியேவந்தார். இருட்டு; குளிரால் உடம்பு விறைத்துவிடும்போல் இருந்தது. ஆச்சாருக்கு உடம்பைப் போர்த்துக்கொள்ள மேல்வேஷ்டிகூட இல்லே. கையிலிருந்த குழந்தையும் அம்மணமாகவே இருந்தது. ஆச்சார் எதையும் புரிந்துகொள்ளவே இல்லே. இப்பொழுது அவருடைய புத்தி முழுவதும் நிலேதவறி இருந்தது. எண்ணங்களெல்லாம் குழப்ப மாகவே இருந்தன. பேசும்போதே சிரிப்பார்; அடுத்த கணம் கண்ணீர் தாரையாகக் கொட்டும். தூக்கத்தில் நடப்பவர் போலவே வெளியில் வந்தார். ஊசிபோல் குத்தும் குளிர்கூட அவர் தூக்கத்தை அசைப்பதாக இல்லே.

சேரிச்சன்னன் வந்து அவருடைய காலே ஜில்லென்ற கைகளால் தொட்டபோதுதான் அவருக்கு விழிப்புவந்தது. காலில் ஏதோ தடுப்பதுபோல் திடுக்கிட்டார். 'என்னடா, சன்னு? எதுக்கு வந்தே? என்ன வேணும்?' என்று அரை விழிப் புடன் கேட்டார்.

'சாமி! இன்னொரு உபகாரம் கேட்கலாம்னு வந்தேன் சாமி!' என்று சன்னன் கெஞ்சிக்கேட்டான். ஆச்சார், 'என்ன விஷயம்?' என்று கேட்டார்.

அவன் சொன்னுன்: ''அவன் தங்கையான மல்லி முதல்நாள் குழந்தை பெற்ருள். ஆனல் குழந்தை, பிறந்தவுடனே செத்துப் போய்விட்டது. எவ்வளவுதான் ஆறுதல் சொன்னுலும் மல்லியின் துக்கம் குறையவில்லே. 'அப்பா, என்னுடைய குழந்தை' என்று புலம்பிக்கொண்டே இருக்கிருள். எப்படி அவள் துக்கத்தைக் குறைப்பது'' என்று யோசனே கேட்கச் சன்னன் வந்திருந்தான். அவனும் துக்கத்தால் நொந்துபோய் விட்டான்.

'ஆமாம், சன்ன! எல்லாப் பொருள்களும் கிடைக்கும். ஆனல் அவளுக்குக் குழந்தை எங்கிருந்து கிடைக்கும்? அவளுக்குக் குழந்தை வேணும்னுதான் இருக்கும். ஆனல் குழந்தையைக் குடுக்கக்கூடிய புண்ணியாத்மா யார் இருக்கா? ஒருவழியும் இல்லே' என்று சொல்லிவிட்டுப் பேசாமல் இருந்தார். குளிரால் விழித்துக்கொண்ட குழந்தை அழத்தொடங்கியது. ஆச்சார் சமாதானம் செய்யத் தொடங்கினர். 'அழாதே கொழந்தை! அழாதே! வீட்டிலே அவகிட்ட ஒன்னே குடுக்கறேன். ஒன்னேப்போல எத்தனேயே கொழந்தைகளுக்கு அவ வெளே யாட்டுக் காட்டியிருக்கா. வா, வீட்டுக்குப் போவோம்' என்று சொல்லிக்கொண்டே நடந்தார்.

சன்னனுக்கு ஆச்சாரின் பேச்சுப் புரியவில்லே. வீட்டிலிருந்த மனேவி செத்துச் சுடுகாட்டுக்குப் போனபின் ஆச்சார் ஏன் இப்படிப் பேசுகிருர். அவன் திகிலடைந்தான். அவனுக்குத் தாங்க முடியவில்லே. 'சாமீ, நெசம்னு நம்பினு நம்புங்க; பொய்யின்னு விட்டாலும் விடுங்க. அம்மா அவுங்க வீட்டில் இல்லே சாமி. அவுங்க இப்ப ஆத்தங்கரையில்...' என்று சொல்லி அதற்குமேல் பேச முடியாமல் தேம்பினன்.

ஆச்சாருடைய மரத்துப்போன மனம் அவன் நினேவூட்டிய தால் நெருப்பாய் எரிந்தது. 'ஆமாம், சன்ன; அவள் வீட்டில இல்லே. நீ நினேவுபடுத்தி உபகாரம் பண்ணின. பதிலுக்கு நான் என்ன செய்வேன்' என்று அங்கலாய்த்தார். 'இந்தக் குழந்தை யைக் கொடுத்தீங்கன்ன ரொம்ப உபகாரமா இருக்குங்க' என்று சன்னன் கெஞ்சிக் கேட்டான். 'சாமி, தாயில்லாக் குழந்தை, மல்லி வளத்துக்குவா சாமி. அந்தக் குழந்தைய வளத்து ஆளாக்குற பொறுப்பு என்னுது' என்று மன்ருடினன்.

ஆச்சார் குழம்பினர். சன்னன் சொன்னது உண்மைதான். ஆனல் குழந்தையை அப்படிக் கொடுத்துவிட முடியுமா? ஆச்சாருக்கு உடல் நெருப்பாய்ச் சுட்டதால் கையிலிருந்த குழந்தை அவரோடு ஒட்டிக்கொண்டுவிட்டது. முன்பின் யோசியாமல் அந்தக் குழந்தையைக் கொண்டுவந்திருந்தார். வளரவேண்டிய ஜீவன் ஒன்றைக் காப்பாற்றவேண்டும் என்ற எண்ணம். எல்லாமே அழிந்துகொண்டு இருக்கும்போது இது ஒன்ருவது மிஞ்சட்டுமே என்று நினேத்தார். இப்பொழுது சன்னன் அதைக் கேட்டால் எப்படிக் கொடுப்பது?

மறுகணமே இது என்ன அஞ்ஞானம் என்று தோன்றியது. கட்டிய மனேவி அவருக்கு முன்பாக முக்தி அடைந்து அவருக்கு வழிகாட்டிவிட்டுப் போயிருக்கிருள். தான் பிழைக்கவேண்டு

மென்ற ஆசையால் இந்தக் குழந்தையைக் கொண்டு வந்தது போல் ஆயிற்று. எல்லோரையும் காப்பாற்றும் கடவுள் இருக்கும் பொழுது தாம் அதனைக் காப்பாற்ற நினைப்பது முட்டாள்தனம். பாகவதக் கதை அவருக்கு நினைவு வந்தது. ஜடபரதர் இறப்பதற்கு முன்பு ஒரு மான் குட்டியைக் காத்த கதை அது. இதுபோல் மழை பெய்துகொண்டிருந்தபோது இடி இடித்தது. கருவுற்றிருந்த மான் ஒன்று அந்த ஓசையைத் தாங்க முடியாமல் ஈன்ற கன்றென்றை அன்புடன் எடுத்து வளர்த்தார். அவருடைய கதி என்னயிற்று! என்பது தெரியாதா? ஆம்; சன்னனிடம் கொடுத்துவிடவேண்டும். அப்பொழுதுதான் தனக்குச் சரியான பாதை கிடைக்கும் என்று நினைத்தார்.

ஆச்சாருக்கு ஏதோ புரிந்ததுபோல் இருந்தது. ஒரு நாழிகை நேரம் அவர் விழிப்பு நிலைக்கு வந்திருந்தார். கையில் இருந்த குழந்தையின் ஸ்பரிசம் இதமாய் இருந்தது. புத்துணர்வு தந்தது. 'இந்தா, இந்தக் குழந்தையைப் பிடி சன்னு. உன் தங்கையிடம் கொண்டுபோய்க் கொடு. அவளுக்கு ஆறுதலாய் இருக்கட்டும். இந்தக் குழந்தையை நல்லாக் காப்பாத்தணும்னு சொல்லு. போ சன்னு' என்று சொல்லியவண்ணம் குழந்தையை அவன் கையில் கொடுத்துவிட்டுக் காற்று உள்ளே புகுந்தவர்போல் ஆச்சார் விறுவிறுவென்று நடந்தார். ஒன்றும் புரியாத சன்னன் குழந்தையை எடுத்துக்கொண்டு அவர் போன வழியையே வெறிக்க வெறிக்கப் பார்த்துக்கொண்டிருந்தான்.

ஆச்சார் காற்றைவிட லேசாகக் கால் போனபடியெல்லாம் நடந்தார். அன்று அவர் சுத்தப் பட்டினி. தூக்கமும் இல்லை. மனஅமைதியை என்றைக்கோ இழந்துவிட்டார். விழமுடியாத மரம்போல் சக்தி இல்லாமல் உடல் நடமாடிக்கொண்டிருந்தது. ஆச்சார் எங்கெல்லாமோ அலைந்துவிட்டுக் கடைசியில் மாளிகைத் திண்ணையில் வந்து உட்கார்ந்தார். மேல்திசையிலிருந்து காற்று சாட்டைபோல் வந்து அடித்தது. காற்றில் உடலைத் திறந்து கொண்டிருந்த ஆச்சாருக்குப் பிரமை தட்டியதுபோல் இருந்தது. எதையோ நினைவுக்குக் கொண்டுவர முயன்றார். ஆனல் யார் யாருடைய முகங்களோ நெருப்பு வட்டத்துக்குள் வந்து போயின. தண்ணீரில் முழுகியவனுக்குத் தண்ணீரே மங்கலாகத் தெரியு மாம். அதுபோல் ஆச்சாருடைய மனத்துக்குச் சமீபத்தில் நடந்த நிகழ்ச்சிகள்கூட மங்கலாகத் தெரிந்தன. பெரிய வெள்ளம் ஒன்று பாதள்ளியின் வாழ்க்கையையே அடித்துக்கொண்டு போனதுபோல் இருந்தது. அவருக்குப் பிரளயக் கதை நினைவுக்கு வந்தது. பொங்கிய கடலில் பூமியானது ஆற்றில் குடம் முழுகு வதுபோல் முழுகிக்கொண்டிருந்தது. ஊழிக்காற்று மத்தைப்

போட்டுக் கடைவதுபோல் கடலைக் கடைந்துகொண்டிருந்தது. அடையாளம் காணமுடியாமல் வானமெங்கும் ஆவர்த்தகம் என்னும் ஊழிக்கால மேகங்கள் அசையாமல் பரவியிருந்தன. ஒளிக்கிரணம் ஒன்றுகூட அங்கே இல்லை. அப்பொழுது கரை யேற்றுபவர் யார்? தேவர்களே முறையிடும் காலத்தில் யார் காப்பாற்றுவார்கள்?

ஆனால் வாழ்வு தன் விதையை அந்தப் பிரளயத்தின் கருவிலும் வைத்துக் காப்பாற்றியது. ஏதோ ஒரு கையகலமுள்ள மீன் திமிங்கிலமாய் வளர்ந்து கொம்பையும் வளர்த்துக்கொண்ட தாம். வைவஸ்வத மனு அதன் கொம்பில் கயிற்றைக்கட்டி மேரு மலையின் உச்சிக்கு ஏறினார். பொங்கிய கடல் படிப்படியாய் வற்றியவுடன் அந்தக் கயிற்று வழியாய் மனு இறங்கி வந்தார். உலகம் பிறந்து வளர்வதற்காக அவர் பிழைத்து வந்தார்.

ஆச்சாருக்குப் பிரளய காலத்தைவிட மாற்றம் அதிகமா யிருந்தது. குழந்தைக்குக்கூட இதைப் பார்த்தால் பைத்தியம் பிடித்துவிடும். இந்தப் பிரளயம் அவனுடைய ஏற்பாடா? இப்பொழுது காப்பவர் யார்? ஆச்சாருடைய மனம் சாமான்ய மான அறிவின் வேலியைத் தாண்டிவிட்டது. கயிறறுந்த பட்டம் போல் கண்டபடி ஓடலாயிற்று. மாளிகையை ஒருதரம் பார்த்தார். கதவில் பெரிய பூட்டுத் தொங்கிக்கொண்டிருந்தது. இளமை முதற்கொண்டு மாளிகையின் பல மாற்றங்களை அவர் பார்த்திருக்கிறார். இப்பொழுது ஆள் இல்லாமல் வெறிச்சோடிக் கிடக்கும் அதைப் பார்க்கச் சகிக்காமல் அங்கிருந்து எழுந்திருந்தார்.

இரவு நீண்டுகொண்டே போயிற்று. ஏகாதசிச் சந்திரன் மேல்திசையிலேயே இறங்கியிருந்தான். ஆச்சார் சற்றுநேரம் அதையே பார்த்துக்கொண்டு நின்றார். இஷ்டம் இல்லாமலேயே சந்திரன் தொடுவானத்தின் இருளில் மறையவேண்டியிருந்தது. ஒருகணம் சந்திர வட்டம் தடுமாறியது. மேற்குத் திக்கின் இருட்டு அவனைத் தன் உள்ளங்கையில் வைத்து விளையாடித் திறந்த கையை மூடிக்கொண்டது. சந்திரன் மறைந்தான். அது வரையிலும் தெரிந்த மங்கலான ஒளியும் அவனோடு மறைந்தது. மந்திரம் போட்டாற்போல் எல்லா இடங்களும் இருண்டு வந்தன. குருட்டு ஈக்களின் வால்போல் பரவியது.

ஆச்சார் இருந்த இடத்திலேயே உட்கார்ந்து இருந்தார். அவருடன் வந்த சிலர் போய்விட்டார்கள். சிலர் கோயில் திண்ணையிலேயே படுத்துவிட்டார்கள். நேரம் போய்க்கொண்டே யிருந்தது. ஆச்சார் ஏதோ தெளிவில்லாத யோசனைகளைச் செய்து

கொண்டிருந்தார். ஒருமுறை மனைவி; அப்புறம் சிமஞ்ஞ; மற்றொருமுறை சங்கரப்ப கௌடர். இவர்களெல்லாம் நினைவில் வந்து போனுர்கள். கோழி கூவியது. படுத்திருந்த இருள் சோம்பல் முறித்து எழுந்திருக்கும்படி கூவியது. ஆச்சார் திடீரென்று எழுந்திருந்தார். தினசரிக் கடன்கள் நடத்தும் பழக்கம் அவரை எழுப்பிவிட்டது. கோயிலில் விரித்திருந்த கம்பளியை மடித்து வைத்தார். கோபாலகிருஷ்ணனுக்கு வந்தனம் செய்தார். துண்டைத் தோளில் போட்டுக்கொண்டு செம்பைக் கையில் எடுத்துக்கொண்டு நேராக ஆற்றங்கரைக்கு நடந்தார். தினந்தோறும் நடக்கும் வழியானதால் இருட்டுத் தடையாக நிற்கவில்லை.

விபரீதமாக மழை பெய்திருந்ததால் பெரிய ஆற்றில் ஏராளமாக வெள்ளம் வரத்தொடங்கியது. ஆற்றில் வெள்ளம் பொங்கித் தரையை ஆக்கிரமித்துக்கொண்டிருந்தது. இருட்டில் தெரியவில்லை. ஆனுல் அலைகள் பலங்கொண்டமட்டும் கரையில் வந்து மோதும் சத்தம் நெஞ்சை நடுங்க வைத்தது. ஆறு ஆக்ரோஷத்துடன் கண்ணில் கண்டதையெல்லாம் விழுங்கியது. உறுதியற்ற நிலம் அலையின் மோதலால் இடிந்து, கரைந்து கொண்டிருந்தது. இவை எதுவும் ஆச்சார் கண்ணில் படவில்லை. அவர் கண்ணுக்கு வேறு ஏதோ தெரிந்திருக்கவேண்டும் ஆற்றங் கரையிலிருந்து தள்ளி உயரமாயிருந்த ஒரு திட்டின்மேல் ஆச்சாரின் மனைவியை வைத்து எரித்திருந்தார்கள். ஆச்சாருக்கு அதே நினைவு. இப்பொழுது சிதை அணைந்திருக்கும். சிமஞ்ஞவின் உயிருள்ள சிதையே அணைந்தபின் இந்தச் சிதையைப்பற்றிக் கேட்க வேண்டுமா? சிதையைப் பார்த்துவிட்டே ஸ்நானம் செய்யலாம் என்று அந்தப் பக்கமாக நடந்தார். ஒரே மூச்சில் ஆற்றில் வெள்ளம் வந்துவிட்டதால் சிதை வெள்ளத்தின் நடுவில் அகப்பட்டுக்கொண்டது. மனைவியின் சாம்பல்கூட அகப்படாமல் ஆற்ருேடு மிதந்து போய்விட்டதோ! அஸ்திகளை யாவது ஆற்றில் சேர்த்திருக்கலாம். அதைச் செய்யாவிட்டால் அவளுக்குச் செய்யவேண்டிய கடமை தீராது. நீந்தியாவது அங்கே போய் அவற்றைக் கொண்டுவர வேண்டுமென்று ஆச்சார் ஆற்றில் இறங்கி நீந்தினுர்.

கரை தெரியாத வெள்ளம் ஆச்சாரை அணைத்துக் கொண்டது. அக்கரையிலிருந்து தர்மபத்தினி கையை அசைத்துக் கூப்பிட்டதுபோல் இருந்தது. 'வந்தேன், வந்தேன்' என்று சொல்லிக்கொண்டே ஆச்சார் நீந்தினுர். நினைத்ததற்குமேல் தண்ணீர் ஆழமாக இருந்தது. மதர்த்துப் பாய்ந்துவரும் அலைகளைத் தள்ளிக்கொண்டு எதிர்நீச்சல் போடும் சக்தி அவருக்கு

இல்லை. நீந்திக்கொண்டிருந்தவர் வெள்ளத்தின் இழுப்பில் அகப்பட்டுக்கொண்டார். அவருடைய இதயத்தில் கீதையின் சுலோகம் ஒலித்தது.

"ஆபூர்யமாண—மசல—ப்ரதிஷ்டம்
ஸமுத்ரமாப: ப்ரவிசந்தி யத்வத்|
தத் வத் காமாயம் ப்ரவிசந்தி ஸர்வே
ஸ சாந்தி—மாப்னோதி ந காமகாமீ||"

(எங்கும் நிரம்பியதும் நிலை குலையாததும் ஆன சமுத்திரத்தை எவ்வாறு நதிகள் தேடிப்போய் அடைகின்றனவோ அதுபோல் ஆசைகளெல்லாம் யாரைத் தேடிச்சென்று அடைகின்றனவோ அவன் அமைதியை அடைகிறான். ஆசைகளைத் தொடர்பவன் அந்த அமைதியை அடைய முடியாது.)

அருணோதயம் ஆயிற்று. ஜனங்கள் ஒவ்வொருவராக ஆற்றுக்கு வரத்தொடங்கினார்கள். கரையில் ஆச்சாரின் செம்பு மட்டும் காணப்பட்டது. ஆனால் ஆச்சார் கரையற்ற வெள்ளத்தில் மறைந்துபோய்விட்டார். தன் கரையோரமாக இருந்த ஏழைகளின் குடிசைகளையெல்லாம் ஒரே இரவில் விழுங்கி ஏப்பமிட்ட வெள்ளத்துக்கு ஆச்சார் ஒருபொருட்டா!

பொழுது விடிந்தது. பாதள்ளி மக்கள் எல்லாம் 'குய்யோ, முறையோ' என்று அழும்படி பொழுது விடிந்தது. இரவு மூடிய திரையைப் பகல் விலக்கியபோது அங்கே தெரிந்தது என்ன? இரவு முடியும் முன்பே சிமணு நெருப்பால் இறந்த செய்தி ஒவ்வொரு வீட்டுக்கும் எட்டிப் பயத்தைப் பரப்பியது பொழுது விடிந்தவுடன் ஆச்சார் ஜலசமாதி அடைந்த செய்தியைப் பாய்ந்து வரும் ஆற்று வெள்ளமே ஊர் வரையிலும் பரவிவந்து தெரிவித்தது. ஜனங்களுடைய கண்ணீர் ஆற்று வெள்ளத்தோடு கலந்தது. முதல் நாள் சாயங்காலமே பத்துப்பேர் 'ப்ளேக்'கால் இறந்தார்கள்.

மழை பெய்யாவிட்டாலும் அகழி எல்லாம் வெள்ளக்காடாகி விட்டது. முழங்கால் மட்ட நீரில் நடந்து சென்றுதான் ஒவ்வொரு வீட்டின் செய்தியையும் சேகரிக்கும்படி இருந்தது. ஒவ்வொரு வீட்டிலும் நெஞ்சைப் பிளக்கும் செய்திதான் காத்துக்கொண்டிருந்தது. கௌடர் வீட்டில் பார்வதி அம்மாள் ஜுரத்தால் நினைவற்றுக்கிடந்தாள். ப்ளேக் 'ஊரையே விழுங்கிவிடுவேன்' என்று பயமுறுத்தியது. ஜனங்கள் ஜுரத்தாலோ, பயத்தாலோ 'வெடவெட'வென்று நடுங்கிக்கொண்டு இருந்தார்கள்.

அன்று சாயங்காலம் பாதள்ளிக்கு வந்த ஹவில்தார் அது 'ப்ளேக் ஜுரம்' என்று சொல்லி இன்னும் பயத்தை அதிகப்

படுத்தினர். இரக்கம் இல்லாமல் ஜுரம் வந்தவர்களையெல்லாம் வீட்டைவிட்டு வெளியேற்றினர். யாரும் ஒன்றும் சொல்ல முடியவில்லை. பயத்தால் நாக்குப் பேசவே மறுத்தது. அதனல் தமக்கு வேண்டியவர்கள் எல்லோரும் கண்ணெதிரில் எலிகளைப்போல் 'பொத்துப் பொத்'தென்று விழுந்து இறப்பதை ஜனங்கள் கண்டார்கள். அவர்களுக்குத் திக்குத்திசை தெரியவில்லை. இறந்தவர்களுடைய பிணங்களை இருப்பவர்கள் தொடமுடியாது. ஈ, காக்காய் புகாமல் வீடுகளெல்லாம் காலியாயின.

ஆனல் பார்வதி அம்மாள் வெளியேவரச் சம்மதிக்கவில்லை. என்னதான் பயமுறுத்தியும் அதற்கு இசையவில்லை. அவளுக்கு எந்தவிதமான பயமும் இல்லை. மறுநாள் வீட்டிலேயே அவளுடைய பிணம் கிடந்தது. அவளுக்கு ஈமக்கடன் செய்யக் கூட யாரும் வரவில்லை. ஜனங்களுடைய பிடிவாதத்தையும் அறியாமையையும் கண்ட ஹவில்தாருக்குக் கோபமாக வந்தது. ப்ளேக்கின் தொல்லையை ஒழிக்க, கௌடருடைய வீட்டுக்கே தீ வைக்கச் சொன்னர். சேரி ருத்திரன் அழுதுகொண்டே வீட்டுக்குத் தீ வைத்தான். பார்வதி அம்மாளின் சடலம் அங்கேயே எரிந்து சாம்பலாயிற்று.

லிங்கப்பா, சிமணு செத்த மறுநாள் பைத்தியம் பிடித்து ஊரெல்லாம் அலைந்தான். ப்ளேக்கைவிட அவன் செய்த சேஷ்டைகள் மிகவும் பயங்கரமாக இருந்தன. அதைப் பார்த்த ஹவில்தார் அவன் பக்கமே நெருங்கவில்லை. லிங்கப்பா அன்று முழுதும் அப்படியே சுற்றிக்கொண்டிருந்தான். சாப்பாடு இல்லாததால் களைத்துப்போய் கௌடர் வீட்டுக்குப் பக்கத்திலேயே வந்து விழுந்துகிடந்தான். முதல்நாள் ஊரையே காலி செய்தபோதும் அவன் தலைமறைவாக மணியக்காரர் வீட்டுக் குள்ளேயே வந்து படுத்துக்கொண்டான். கௌடர் வீட்டைச் சொந்தமாக்கிக்கொள்ளும் வெறி அப்பொழுதும் அவனை விட்ட பாடில்லை. சேரி ருத்திரன் வீட்டுக்குத் தீ வைத்தபோதுமட்டும் சாவுக்குப் பயந்து, 'வீடு எனக்குச் சொந்தம்; கதவத் திறங்கடா!' என்று கத்தினனும். அப்பொழுதே நிலைமை கைமீறிவிட்டது. பாதி வீடு நெருப்புக்கு இரையாகிவிட்டது. பின்னல் ருத்திரன் தன் குற்றத்தை ஒப்புக்கொள்வதுபோல் இதைக் கதை கதையாகச் சொல்லிக்கொண்டு அலைந்தான்.

மூன்றே நாட்களில் ஊர் காலியாகிவிட்டது. பாதிப்பேரைப் பிளேக் விழுங்கிவிட்டது. ஊரின் சில பகுதிகளை பாதள்ளியைக் காப்பாற்றிவந்த நதியே காளியாக மாறி விழுங்கியது. நெருப்புச் சிலரை உணவாக்கிக்கொண்டது. யார் யாரோ, எப்படி

எப்படியோ தங்கள் முடிவை அடைந்தார்கள். ஆனால், ஹவில்தாருடன் சுற்றிக்கொண்டிருந்த அஞ்சல் மல்லப்பன் மட்டும் இதில் எதையுமே நம்பவில்லை. ‘சே, விடுங்க. ப்ளேக் என்ன செய்ய முடியும்? முன்ன காலரா வரவில்லையா? நிஜமா சொல்றேன் சாமி. பூமாதேவி எத்தனை பாவத்தைதான் பொறுப்பா? அந்தப் பாவந்தான் எல்லோரையும் விழுங்கிட்டு துங்க’ என்று பொறுமையை இழந்த ஹவில்தாரிடம் தான் சொன்னதையே திருப்பித்திருப்பி சொல்லிக்கொண்டிருந்தான். எது நிஜமோ! கடவுளுக்குத்தான் வெளிச்சம்.

## 47

நாகசதுர்த்திக்கு முதல்நாள் இந்துபுரத்துக்குப் புறப்பட்டுப் போன சாமராவ், பஞ்சமி முடிந்ததும் குடும்பத்தோடு பாதள்ளிக்குப் புறப்படுவதாக இருந்தான். அதற்குள் முக்கிய மான வேலை ஒன்று சேர்ந்ததால் அப்புறம் நாலுநாட்கள் தங்க வேண்டியிருந்தது. அதற்குப்பின் மழை பிடித்துக்கொண்டதால் பயணம் செய்ய முடியவில்லை. மழை நின்ற பின்னும் வழிகள் சரியாக இல்லாததால் மேலும் பதினைந்து நாட்கள் காக்க வேண்டி இருந்தது. கடைசியில் ப்ளேகுக்குப் பாதள்ளி ஆகுதியாகி விட்ட செய்தியைக் கேட்டு அவன் இந்துபுரத்திலேயே தங்கி விட்டான்.

படதையா சாத்தேனஹள்ளியில் இருந்தபோதே பாதள்ளிச் செய்தி அவர் காதில் விழுந்தது. அங்கே போனால் போலீஸால் தொந்தரவு ஏற்படும் என்று அறிந்து அங்கிருந்தே நேராக ஷோலாப்பூருக்குப் போய்விட்டாராம்.

வாரிசு உரிமை விவகாரத்தைப்பற்றிக் கமிஷனரிடம் அப்பீல் செய்ய வக்கீலைப் பார்க்கவேண்டுமென்று பெல்காமுக்குப் போயிருந்த சேஷப்பாவிற்கும் அங்கேயே இந்தச் செய்தி தெரிந்தது. ஆப்தரான ஒருவருடைய தொடர்பை வலுவில் ஏற்படுத்திக்கொண்டு அவன் பெல்காமிலேயே சிலநாட்கள் தங்கும்படி நேர்ந்தது.

தன் உறவினர்களைக் காணத் தாசகாமுக்குப் போன லட்சுமணன் திரும்ப அஜராணிக்கு வந்தவுடன் இந்தச் செய்தியைக் கேட்டான். அஜராணியிலும் ப்ளேக்கின் தொல்லை இருந்தது. ஆனால் அங்கே சர்க்கார் விரைவில் சிரத்தை

எடுத்துக்கொண்டதால் சாவு பாதள்ளியைப்போல் அங்கே ஊழிக்கூத்து நடத்தவில்லை. லட்சுமணன் யசவந்தராவின் வீட்டிலேயே தங்கினன். அவருடைய வாரக் குத்தகைதாரர் களுக்குத் தலைவனுக இருந்தான்.

ப்ளேக் முதல் தடவையாக வந்திருந்ததால் அறியாமையால் பலர் இறந்துவிட்டார்கள். இந்துபுரத்திலும் ப்ளேக் வந்தது. தாதாவுக்குப் பாதள்ளியின் செய்திகளே தெரியவில்லை. ப்ளேக் கிஞல் பலர் செத்துப்போய்விட்டார்கள் என்று யார் யாரோ சொன்னபோதெல்லாம் ஊருக்குப் போகவேண்டுமென்று தவித்தான். ப்ளேக் இருக்கும் இடத்துக்குப் போகக்கூடாதென்று மஹாராஜாதான் அவனைத் தடுத்து நிறுத்திவைத்தார். பிள்ளையார் சதுர்த்தி விழாவுக்காகச் சாங்கலி மஹாராணி அழைத்திருந்ததால் மஹாராஜா அங்கே போயிருந்தார். தாதாவுக்கு நல்ல சந்தர்ப்பம் வாய்த்தது.

உடனே தாதா பாதள்ளிக்குப் புறப்பட்டான். இந்து புரத்துக்கு வந்தபின் பாதள்ளியின் தொடர்பே அறுந்து போய்விட்டதுபோலிருந்தது. உண்மையில் பாதள்ளி அவனைச் சுகமாக இருக்கவிடவில்லை. சமீபத்தில் அங்கு நடக்கும் வாழ்க்கையை நினைத்தால் அந்த ஊரை நினைத்துக்கூடப் பார்க்காதே என்று அவன் நண்பர் சிலர் சொன்னுர்கள். லட்சுமணனைத் தவிர அவனுக்கு வேண்டியவர்கள் யாருமே அங்கு இல்லை. லட்சுமணனும் இப்போது வேறு எங்கேயானும் போயிருப்பான். ஆனுலும் பிறந்து வளர்ந்து விளையாடிய பாதள்ளி தாதாவின் இனிய நினைவுகளில் ஒன்ருக இருந்தது. மனத்துக்குச் சலிப்பு ஏற்பட்டபோதெல்லாம் ஊர் நினைவு அவனுக்கு இன்பத்தைக் கொடுத்தது. பாதள்ளியைவிட்டு அதிகமாகப் போனுல் ஒன்றரை மாதம் ஆகியிருக்கும். ஆனுலும் பல ஆண்டு களாக அந்த ஊரைப் பிரிந்து வந்துவிட்டதுபோல் இருந்தது. இப்பொழுது பாதள்ளியைப் பார்க்கும் ஆசை அளவுகடந்து விட்டது. மஹாராஜா ஊரில் இல்லாத சமயம் பார்த்து, தாதா, யாரோ அடித்து எழுப்பியதுபோல் ஊருக்குப் புறப்பட்டு விட்டான்.

பாதள்ளிப் பாதையில் தாதா வேகமாகவே நடந்து கொண்டிருந்தான். ஆனுல் மனம் இன்னும் வேகமாகப் போக விரும்பியது. இப்படியே போனுல் என்றைக்குப் பாதள்ளிக்குப் போய்ச் சேருவது? என்று அது சிணுங்கியது. அதற்குமுன் தனக்கு அறிமுகமான பல தோற்றங்களையும் எண்ணங்களையும் எழுதி எழுதிப் பார்த்தது. ஜாகீர் மாளிகை, கௌடர் வீடு,

பாளாச்சார் வீடு, தாலீம்கானு, சாவடி இப்படி ஒவ்வொன்றும் மனக்கண் எதிரில் தோன்றித்தோன்றி மறைந்துகொண்டிருந்தன.

பாதள்ளிக்குக் குறுக்கே இருக்கும் ஆற்றைப் பிடிக்கப் பின்னும் மூன்று மைல்கள் நடக்கவேண்டும். அங்கேயே முழங்கால் மட்டத்துச் சேறு இருந்தது. சேற்றில் புதைந்த ஒரு காலை எடுப்பதற்குள் மற்றொரு கால் சிக்கிக்கொண்டது. வழி நடப்பது முடியாதுபோல் இருந்தது. ஆற்றை அடைய இன்னும் மூன்று மைல்கள் இருந்தன. ஆனால் ஆற்றில் மூழ்கிவிட்டது போல் தரையெல்லாம் ஏன் இப்படிச் சேருக இருக்கிறது என்று சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டே வந்தான். 'ஆறு பெருகி அவ்வளவுதூரம் உள்ளே புகுந்திருக்கவேண்டும்' என்று ஊகித்தான் தாதா. அங்கிருந்த மரம் செடிகளில் அகப்பட்டுக் கொண்டிருந்த பொருள்களால் இது தெரிந்தது.

தாதா திகிலடைந்தான். ஆறு இவ்வளவுதூரம் உள்ளே புகுந்திருக்கும் என்றால் மக்கள் கதி என்னவது? ஒவ்வோர் ஆண்டும் மழைக்காலத்தில் இதே அழுகைதான். ஆனால் பெரிய வெள்ளம் வந்தது தாதாவுக்குக்கூட நினைவு இல்லை. அப்படி வந்திருந்தால் பாதள்ளியின் பறைச்சேரி, சக்கிலியச்சேரி எல்லாம் வெள்ளத்தோடு போயிருக்கும் என்று தோன்றியது. அகழிக்கும் தண்ணீர் வந்திருக்கும். குறும்பர் குப்பத்துக் கடைசியில் இருக்கும் மல்லியின் வீட்டிலும் தண்ணீர் புகுந்திருக்கும். கௌடர் வீடு, ஜாகீர் மாளிகை, மடம், கோபாலகிருஷ்ணர் கோவில், பிராம்மணர்களின் சில வீடுகள் இவைதாம் மேட்டில் இருப்பதால் அபாயம் இல்லாமல் தப்பியிருக்கும். ஊரில் இப்படி வெள்ளம் புகுந்திருந்தால் தெருக்களிலேயே துடுப்புப் போட்டுத் தண்ணீரைத் தாண்டவேண்டியிருக்கும்.

தனக்குத் தெரிந்தமட்டில் தாதா அந்தப் பெரும் வெள்ளத்தின் சித்திரத்தைக் கற்பனை செய்து பார்த்தான். ஊரை ஒட்டியே இரவும் பகலும் ஓயாமல் பெருகிக்கொண்டு அங்கேயே இருக்கும் நிலங்களுக்குப் பாலூட்டித் தாயாக இருந்த நதிக்கும் திடீர் திடீரென்று வெறிபிடித்துவிடுகிறது. காளிபோல் மாறிக் கண்டவற்றையெல்லாம் கபளீகரம் செய்துவிடுகிறது. அதன் கடுங்கோபத்துக்கு முன்னல் மனித வாழ்வு சருகைப்போல் அற்பமாகத் தோன்றுகிறது.

தாதா தான் பலசாலி என்ற தைரியத்தில் அந்தக் குழியில் இறங்கினுன். நட்டநடுவில் இருக்கும் சேற்றுப் பகுதியைத் தாண்டிப்போவது பெரும் துணிச்சலாகவே தோன்றியது.

ஈரமண் மெழுகைப்போல் இழுபறியாக இருந்தது. எப்படியோ மிகவும் சிரமப்பட்டு அதைத் தாண்டிஞன். பள்ளத்துக்கு முன்பு இருந்த மேடு வெள்ளத்தின் தாக்குதலால் மண் கரைந்துபோய் உறுதியாய்ச் சொரசொரப்பான நிலம்போல் ஆகிவிட்டது. இரத்தம், மாமிசம் எல்லாம் வற்றிப்போன எலும்புக்கூடுபோல் தோற்றமளித்தது. அதைக்கண்ட தாதா வருந்திஞன். பாதள்ளி வேளாளருக்கு விதைக்க மண்ணைக்கூட இந்த ஆறு விட்டுவைக்க வில்லை. குடியானவனுடைய வாயில் மண் விழுந்துவிட்டது.

தாதா சுற்றிலும் ஒருமுறை பார்த்தான். நதியின் சுற்றுப் புறத்து நிலங்களெல்லாம் பயனற்றனவாகிவிட்டன. அங்கே வண்டல் மண் வந்து சேர இன்னும் எவ்வளவு ஆண்டுகள் காத்திருக்கவேண்டுமோ! மரம், செடிகள் எல்லாம் வெள்ளத் தோடு போய்விட்டன. சில மரங்கள் மட்டும் அங்கேயே சாய்ந்து கிடந்தன. சில இடங்களில் கற்களைத் தவிர வேறென்றும் காணப்படவில்லை.

ஆறு இன்னும் முற்றும் வடியவில்லை. வெள்ளத்தின் நடுப் பகுதி பரவாமல் உள்நோக்கிச் சுழன்றே ஓடிக்கொண்டிருந்தது. இன்னும் ஓட்டம் பலமாகத்தான் இருந்தது. சுழல்களின் இழுப்பை வெளியேயிருந்தே கண்டுபிடித்துவிடலாம். தாதா அதைக் கண்ணாலேயே அளந்து பார்த்தான். கரையோரம் நின்று கொண்டு படகை எதிர்பார்த்தான். தாதா ஆற்றங்கரைக்கு வந்தபோது மணி பத்து. நடுப்பகல்வரை காத்திருந்தும் படகு வரவில்லை. அக்கரையில் ஓர் ஈ காக்கைகூடத் தென்படவில்லை. நாள்தோறும் அகழியிலிருந்து யாராவது வந்துகொண்டே இருப் பார்கள். யாராவது வந்தால் குரல் கொடுத்துப் படகு வேண்டு மென்று சொல்ல நினைத்த தாதாவுக்கு ஏமாற்றம் காத்துக் கொண்டிருந்தது. ப்ளேக் இப்படித்தான் இருக்குமோ என்று தோன்றியது. அக்கம்பக்கத்து வயல்களிலும் மனித நடமாட்டம் இல்லை.

தாதாவுக்கு உட்கார்ந்து உட்கார்ந்து அலுத்துவிட்டது. ஊருக்குப்போய் அவ்விடத்துச் செய்திகளைத் தெரிந்துகொள்ள ஆவலாயிருந்தான். வேறு வழியில்லாமல் அரை நிஜாருடன் வேஷ்டியைத் தலையில் சுற்றிக்கொண்டு, ஆற்றில் இறங்கி நீந்திஞன். அவன் சுறுசுறுப்பாகத்தான் நீந்திஞன். அவன் குதித்த வேகத்தில் அலைகள் சுற்றிலும் சிதறின. ஆற்றின் ஆழம் அவனுக்கு நிலைகொள்ளாமல் இருந்தது. கை மாற்றிப்போட்டு நீந்திஞன். ஆஞல் தான் பாதள்ளியைவிட்டு எட்டிப் போய்க்கொண்டிருப்பதை அவன் உணர்ந்தான். இடுப்பில்

கயிறுபோட்டு இழுப்பதுபோல் ஆறு ஏதோ ஒரு பக்கத்தில் இழுத்தது. பரபரவென்று நீந்திக் கரைசேர முயன்ருன். முடிய வில்லை. எதிர்நீச்சுப்போட்டுக் கைசோர்ந்து ஆற்ருேடுபோவதை விட, தண்ணீரின் போக்கில் போவதே சரி என்று தோன்றியது. வெள்ளத்தின் திருப்பங்களைப் பார்த்துக்கொண்டு அதன் போக்கிலேயே பொறுமையாக நீந்தி இரண்டு மைல்களுக்கப்புறம் ஹாவனூர்க் கரையை அடைந்தான்.

ஹாவனூரிலிருந்து பாதள்ளிக்குத் திரும்பிப்போக இரண்டு மைல் நடக்கவேண்டியிருந்தது. தாதா, பாதள்ளிக்குப் போய்ச் சேரும்பொழுது இருட்ட ஒருமணி நேரம் இருந்தது. கோட்டைக்குப் பக்கத்தில் வந்ததும் சாவடியில் புகை பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கும் மல்லப்பன் தன்னைக் கண்டு அன்புடன் பேசுவான் என்று ஒரு இனிய நினைவு வந்தது. ஆனுல் சாவடியில் யாருமே இல்லாததைக் கண்டு ஏமாற்றம் அடைந் தான். சாவடியில் குப்பைக் கூளங்கள் நிறைந்திருந்தன. படியின்மேல் சொறிநாய் ஒன்று படுத்துத் தூங்கிக்கொண் டிருந்தது. அது தன்னுடைய பழங்கால வாழ்க்கையின் நினைவில் மூழ்கியிருப்பதுபோல் இருந்தது. கோட்டையிலும் யாரும் தென்படவில்லை.

ஊரிலே மனிதர்களே இல்லையோ என்று பயந்தான் தாதா. இருந்தாலும் பார்க்கலாம் என்று தன் வீட்டை நோக்கி நடந்தான். வழியிலே யாரும் எதிர்ப்படவில்லை. அவன் வீட்டுக் கதவில் பெரிய பூட்டு ஒன்று தொங்கியது. அக்கம் பக்கத்து வீடுகளும் பூட்டியிருந்தன. தாதாவின் மனத்தில் ஏமாற்றம் வௌவாலின் சிறகுகள் அடித்துக்கொள்வதுபோல் துடித்துக்கொண்டிருந்தது.

பாளாச்சார் ஒருநாளும் ஊரைவிட்டுப் போகமாட்டார். அவர் வீட்டுக்குப்போனுல் எல்லாச் சங்கதிகளும் தெரியுமென்று நினைத்தான். உடனே அங்கே போனுன். பாளாச்சார் வீட்டுக் கதவு திறந்திருந்தது. மேல்புறத்துச் சுவர் விழுந்துவிட்டதால் மாலைச் சூரியனுடைய பொற்கிரணங்கள் ஆச்சார் வீட்டிற்கு ஒளி கொடுத்துக்கொண்டு இருந்தன. தாதா முதலில் அதைக் கவனிக்கவில்லை. வாசற்படியில் நின்றுகொண்டே 'ஆச்சாரையா', 'ஆச்சாரையா' என்று கூப்பிட்டான். பதிலில்லை. தெருவில் செருப்பை விட்டுவிட்டு உள்ளே நுழைந் தான். வீடு வெட்டவெளியாய் இருந்தது.

தன் குரலைக் கேட்டுத் தானே பயப்படும்படி இருந்தது. உள்ளே யாருமில்லை. கூடம், தாழ்வாரம், சமையலறை, பூஜை

அறை எல்லா இடங்களிலும் பார்த்தான். பூஜை அறையில் ஆச்சார் உபயோகித்த பொருள்கள் எல்லாம் கிடந்தன. ஒருபுறம் மான்தோல் விரித்திருந்தது. அதன்மேல் ஜபமாலையும் கீதைச் சுவடிகளும் இருந்தன. எல்லாவற்றின்மேலும் ஒரு சாண் உயரத்துக்குப் புழுதி படிந்துகிடந்தது. சூரிய கிரணங்கள் மிகவும் நெருங்கி வந்திருந்ததால் ஒளி கண்ணைக்கூசியது. சுவாமிக்கு முன் இருந்த நந்தாவிளக்கு மண்ணிலேயே புதைந்திருந்தது. அதிலிருந்த எண்ணெயிலும் மண் படிந்திருந்தது.

தாதா தலையில் கைவைத்தவண்ணம் அங்கேயே உட்கார்ந்து விட்டான். ஆசை ஆசையாகப் பாதள்ளிக்கு வந்ததற்கு அங்கே என்ன இருந்தது! தெரு வீடுகளெல்லாம் வெறுமையாகக் கிடந்தன. ஆச்சாரின் வீடு திருடன் புகுந்த வீடுபோல் இருந்தது. சுவாமி பூஜைப்பெட்டி, விளக்கு, மான்தோல் எல்லாம் இருந்தன. ஆனால் ஆச்சாரோ அவருடைய மனைவியோ இல்லை. தாதா சொல்லொணுத் துன்பம் அடைந்தான். ஊர் பாழாகித் தான் இருக்கவேண்டும். ஆனால் எப்பொழுது, எப்படி என்பதைத் தெரிந்துகொள்ள விரும்பினுன்.

சூரியன் மறைந்துவிட்டான். மங்கிய ஒளி எங்கும் பரவியது. தெருவில் யாரும் இருக்கவில்லை. கௌடர் வீட்டைக் கண்ட தாதா தன் கண்ணையே நம்பவில்லை. கௌடர் வீடு எரிந்து விட்டது. சுவர்கள் கலகலத்துச் சரிந்திருந்தன. இந்தப் பாழான தோற்றத்தைக் காண தாதாவுக்குப் பொறுக்கவில்லை. கண்ணீர் பொங்கிவந்தது. பாதள்ளிக்கு என்னதான் வந்துவிட்டது என்று ஆச்சரியப்பட்டுக்கொண்டே அங்கிருந்து திரும்பினுன்.

ஜாகீர் மாளிகையின் கதி என்ன ஆயிற்றோ என்ற திகிலுடன் தாதா அங்கே போனுன். மனிதர் நடமாட்டமற்ற தெருக்களில் அவனுக்குத் தன் காலடி ஓசையைக் கேட்பதே பயமாக இருந்தது. நல்லகாலம். ஜாகீர் மாளிகை நன்ருக இருந்தது. ஆனல் அங்கும் பெரிய பூட்டு ஒன்று அவனை வரவேற்றது. அங்கிருந்து மடத்துக்குப்போனுன். மடத்தில் படதையா இருந்தால் இப்படி யெல்லாம் பாழானதற்கு அவர்தான் காரணமோ! என்று கேட்கும் துணிவுடன் தாதா உள்ளே நுழைந்தான்.

மடத்துக்கும் அதே கதிதான். எல்லாக் கதவுகளும் திறந்திருந்தன. உள்ளே யாரும் இல்லை. சலிப்புற்ற தாதா அப்படியே படியின்மேல் உட்கார்ந்துவிட்டான். ப்ளேக் என்ருல் எப்படி யிருக்கும் என்பது அவனுக்குத் தெரியாது. ப்ளேக் வந்தால் பலரைக் கொன்றுவிடும் என்றுதான் கேள்விப்பட்டிருந்தான். இப்பொழுது இந்தச் சூழ்நிலையைக் கண்டதும் வேருெரு கற்பனை

மூண்டது. ஒருவேளை ஜனங்கள் தன் கண்ணுக்குமட்டும் தெரிய வில்லையோ என்னமோ! யாருக்குத் தெரியும்? அதற்குத்தான் ப்ளேக் என்று பெயரோ! என்று நினைத்தான். யோசித்து யோசித்து அவன் மூளை குழம்பியது.

மழைக்காலத்து மாலைநேரம், வெகுநேரம் ஒளி இருக்க வில்லை. அந்திச்சிவப்பு மறைந்து இருள் கவியத்தொடங்கியது. அங்கங்கே காக்கைகள் கரைவதுமட்டும் கேட்டது. ஊரிலும் மனிதர் நடமாட்டம் இல்லை. இருள் ஊரைத் தழுவிக் கொண்டது.

தாதாவுக்குத் தன் இளமையில் கேள்விப்பட்ட கதை ஒன்று நினைவுக்கு வந்தது. ஏதோ ஓர் ஊர்; அந்த ஊர் அரசனுடைய பாபத்தின் பயனாக ஊரையே யாரோ சபித்துவிட்டார்கள். ஒருநாள் அயல்நாட்டு ராஜகுமாரன் ஒருவன் அவ்வூருக்கு வந்தான். அப்போது பகல் நேரம். ஊரில் கோட்டை, கடைத் தெரு, தோட்டங்கள், தெருக்கள், மாடமாளிகைகள் எல்லாம் இருந்தன. ஆனால் ஜனங்கள்மட்டும் இல்லை. ராஜகுமாரன் பகலெல்லாம் சுற்றியலைந்தான்; யாரையும் காணவில்லை. அரண் மனையிலும் யாரும் இல்லையாம். ராஜகுமாரன் இவற்றை யெல்லாம் பார்த்துச் சலிப்படைந்தான். சாயங்காலம் ஆயிற்று; இருட்டிவிட்டது. அரண்மனைக்குப் பக்கத்தில் நின்ற ராஜ குமாரன் ஊரைவிட்டுப் போக நினைத்தான். இருட்டியவுடன் கோயில்களில் மணியோசை கேட்டதாம். கடைத்தெருக்களில் விளக்குகள் ஒளிவீசின. சுறுசுறுப்பாக வியாபாரம் நடந்தது. விசேஷமான ஆடை அணிகளுடன் மக்கள் தெருக்களில் நடமாடிக் கொண்டிருந்தார்கள். கோட்டையிலிருந்து மேளமும் முரசும் ஒலித்தன. அரண்மனையிலிருந்து அலங்கரித்த தேரில் அரசன் வந்துகொண்டிருந்தான். அவனுக்குமுன் படை அணிவகுத்து வந்துகொண்டிருந்தது. ராஜகுமாரன் ஆச்சரியத்தால் திகைத் தான். தெருவில் கண்ட ஓர் இளைஞனை, 'இதெல்லாம் என்ன?' என்று கேட்டான். அவன்மூலம் பின் கண்ட செய்தி தெரிய வந்தது. 'அந்த ஊர் பகலில் செத்து, இரவில் உயிர்பெற்று வாழ்ந்துவந்தது.'

அரசனுடைய பாவம்தான் அதற்குக் காரணமாம். இரவெல் லாம் கொண்டாட்டம், ஆட்டபாட்டங்கள் நடந்து விடியற் காலையில் எல்லாம் மறைந்துவிடும். இருட்டோடு எல்லா வற்றையும் முடித்துக்கொள்ளவேண்டியிருந்தது. அதனால் செய்தி சொன்ன இளைஞனுக்கு நிற்க நேரம் இல்லை. அவன் அவசரமாகப் போய்விட்டான். பொழுது விடிவதற்குமுன்

அவன் தன் மனைவியைப் பார்த்துவிட்டுத் திரும்பவேண்டும். ராஜகுமாரனிடம் சொல்லிக்கொண்டு அவன் போய்விட்டான். இரவெல்லாம் ராஜகுமாரன் ஊரைச் சுற்றிப்பார்த்தான். இளைஞன் சொன்னதுபோலவே எல்லாம் நடந்தது. அருணோதய மாகிச் சூரியனுடைய பொற்கிரணங்கள் பூமியைத் தொட்ட வுடன் ஏவல் வைத்ததுபோல் ஜனங்கள் திடீரென்று மறைந் தார்கள். பகல் ஒளி, சூனியமாகவே ஊரில் நுழைந்தது.

தாதாவுக்கு அந்தக் கதையின் நிகழ்ச்சிகளெல்லாம் நினைவுக்கு வந்தன. பாதள்ளியையும் ஏதோ சாபம் சூழ்ந்திருக்கும் என்று தோன்றியது. பாதள்ளியில் பாபத்துக்குக் குறைவில்லை. அதன் பலனாகவே பிளேக் வந்திருக்கவேண்டும். மெல்ல மெல்ல இருள் பரவியது. தாதாவுக்கு மறுபடியும் கதை நினைவுக்கு வந்தது. 'யாராவது வருவார்களோ?' என்று ஆவலோடு எதிர்பார்த் தான்; பயமாகவும் இருந்தது. அங்கே உட்கார முடியாமல் எழுந்திருந்து புறப்பட்டான். கதையில் வந்த ஊர், இரவிலாவது பிழைத்திருந்தது. பாதள்ளியின் நிலைமை அதைவிட வருந்தத் தக்கதாக இருந்தது. இங்கே இரவுகூடப் பகலைப் போலவே சூனியமாக இருந்தது. பகலில் இருந்ததைவிடப் பயம் அதிக மாயிற்று. இருட்டு, மனித நடமாட்டம் இல்லாமை, பயம் இவற்றால் தாதாவுக்கு வைப்பு, சூன்யங்களில்கூட நம்பிக்கை உண்டாயிற்று. ஜனங்கள் செத்துப்போயிருக்கமாட்டார்கள்; தன் கண்ணுக்குத்தான் தெரியவில்லை என்று நினைத்தான். இரவிலும் தங்கிப் பார்க்கத் தீர்மானித்தான்.

சாப்பாட்டுத் தொல்லை இல்லை. தாதாவுக்கு அந்த நினைவே இல்லை. ஆனால் நடந்து நடந்து களைத்துவிட்டதால் தூங்க வேண்டும்போல் இருந்தது. பாளாச்சாரின் வீட்டுக் கூடத்தி லேயே தன்னுடைய கம்பளியை விரித்துக்கொண்டு தாதா படுத்தான்.

இரவு நேரம் செல்லச்செல்ல ஆந்தைகளின் அரவம் கேட்கத் தொடங்கியது. ஆனால் நாய்கள் குரைக்கவே இல்லை. தாதா உடனே தூங்கிவிட்டான். பாதி ராத்திரி ஆகியிருக்கவேண்டும். எங்கே பார்த்தாலும் காரிருள் கவ்விக்கொண்டது. தொலைவில் ஜனங்கள் சண்டையிடும் சத்தம் கேட்டது. பேச்சுத் தெளிவாகக் காதில் விழாவிட்டாலும் குரல் உரக்கவே கேட்டது. சற்று நேரத்துக்கெல்லாம் அஞ்சல் மல்லப்பன் ஓடோடி வந்தான். 'கௌடர் வீட்டுத் தானியக்குழியை லிங்கப்பா கொள்ளையடிச் சுட்டான் தாதா, எழுந்திரு! தாதா! எழுந்திரு!' என்று கத்தினான். கௌடர் மனைவி கூப்பிடுவதாகவும் சொன்னான். 'கௌடர் வீடே எரிஞ்சுபோச்சேடா! கூப்பிடறத்துக்கு அந்த

அம்மா எங்கே இருக்காங்க?' என்று கேட்டான் தாதா. 'அங்கேயே வந்து பார்; உனக்குத் தெரியும்' என்று அஞ்சல் மல்லப்பன் அவனை அவசரப்படுத்தினான்.

தாதா அவன் பின்னாலேயே போனான். கௌடரின் வீடு முன்போலவே நன்றாக இருந்தது. பார்வதியம்மா கையை ஆட்டித் தாதாவை உள்ளே கூப்பிட்டாள். தாதா கூடத்துக்குப் போனான். 'லிங்கப்பா என் வீட்டைப் பாழாக்கிட்டான் தாதா! சாமி உனக்குத் தொணை இருக்கறதனாலே நீ தப்பிச்சிட்டே. நான் செய்த பாபம்! என்ன செய்யறது?' என்று கண்ணீர் விட்டாள்.

'உன் மகன் இருக்கறவரைக்கும் அழவேண்டாம் அம்மா! அந்த லிங்கப்பனை ஒரு கை பார்த்துடறேன்!' என்று தாதா பல்லைக் கடித்துக்கொண்டு எழுந்திருக்க முயன்றான். அப்பொழுது 'என்ன பாக்கறே? வீட்டைச் சொந்தமாக்கிக்கிட்டுவந்து குந்தியிருக்கேன்' என்று சிரித்துக்கொண்டே லிங்கப்பா தாதாவின்மேல் பாய்ந்தான். தாதாவுக்கு எதிர்க்கச் சக்தியே இல்லை. கீழே விழுந்தான். அதற்குள் ஜெயின் ஜின்னப்பன் வந்து, 'எழுந்திரு தாதா! மடத்திலே சிமணு செத்துக்கிடக்கறு' என்று கையைப் பிடித்து எழுப்பினான்.

தாதா பயத்துடன் எழுந்து உட்கார்ந்தான். வேர்வை கொட்டிய உடம்பில் காற்றுப்பட்டதால் குளிர் வந்ததுபோல் நடுங்கினான். கண்ணைத் துடைத்துக்கொண்டு பார்த்தான். இருட்டுப் பயங்கரமாக இருந்தது. இது கனவா அல்லது பிசாசின் சேஷ்டையா? என்பது அவனுக்குத் தெரியவில்லை. ஆந்தை மறுபடியும் அலறியது. தாதாவுக்கு அங்கே படுக்கத் தைரியம் இல்லை. 'சர்க்கார் தோட்டத்துக்காவது போகலாம்' என்று புறப்பட்டான். தோட்டத்தில் யாரையாவது சந்திக்கலாம் என்று நினைத்தான்.

இரவு வெகுநேரம் இருந்தது. தாதா தோட்டத்துக் குடிசைக்குப் பக்கத்தில் போய்க் குரல் கொடுத்தான். 'யாரது?' என்று உள்ளேயிருந்து கேள்வி வந்தது. தாதா தன் பெயரைச் சொல்லிவிட்டு உள்ளே போனான். வாரக்காரன் கரியப்பா அங்கே படுத்திருந்தான். தாதாவை அடையாளம் தெரிந்து கொண்டபின் கரியப்பா அவன் கழுத்தைக் கட்டிக்கொண்டு அழுதான். துக்கத்தின் வேகம் குறைந்தது. இருவரும் பேசிக் கொண்டே இருந்தார்கள். கரியப்பா பாதள்ளியின் நிலைமையை விவரித்துச் சொன்னான்.

பயத்தால் நடுங்கிக்கொண்டே தாதா, சிமனுவின் செய்தியைக் கேட்டான். கரியப்பா தனக்குத் தெரிந்தவரையில் சொன்னான். அதைக் கேட்ட தாதாவின் ரத்தம் கொதித்தது. 'அப்படியானால் அவள் குழந்தை எங்கே?' என்று ஏக்கத்தோடு கேட்டான்.

'குழந்தை சேரி மல்லியிடம் இருந்தது. ஆனால் சேரியில் ஆறு புகுந்து நாசமாக்கியபோது நிற்க இடமே இருக்கவில்லை. அப்போது சன்னன், மல்லியையும் குழந்தையையும் அழைத்துக் கொண்டு ஷோலாப்பூருக்குப் போனான். அவனுடைய அத்தை மகள் அங்கே இருக்கிறாளாம். பிழைத்திருந்தால் ஷோலாப்பூரில் இருக்கவேண்டும். 'அந்தக் குழந்தை வளர்ந்தபின் பாளாச்சார் பார்க்கக் கொடுத்துவைக்கவில்லையே!' என்றான் கரியப்பன்.

பாளாச்சார் வெள்ளத்தில் ஆற்றோடு போன செய்தியைக் கரியப்பா சொன்னபோது தாதாவின் கண்கள் இருண்டன.

'எப்படிப்பட்ட புண்ணியவான்! அவருக்கா இந்தச் சாவு வந்தது?' என்று தாதா பெருமூச்செறிந்தான்.

'தம்பீ! இந்த நோயிலே போனவங்கள்ளாம் புண்ணியம் செய்தவங்க; தெரிஞ்சுக்கோ. இப்பப் பாரு. வெதைக்கறவங்க இல்லாதெ பூமி தரிசாக் கெடக்குது. உழுத நிலம் மழை பேஞ்சாப் பதமாகும். பயிர் செய்ய ஆள்தான் இல்லே. இந்த ஊர்லெ செத்தவங்க யாரு? பொழச்சவங்க யாரு?ன்னு கணக்கே தெரியல்லே. பிளேக் வந்திடுச்சூன்னு வீட்டுக்குள்ளே இருந்த வங்க எல்லாரையும் கழுத்தைப் பிடுச்சு வெளியே தள்ளினாங் களாம். நோவுகண்டு தவிச்சவங்களைப் போலீஸார் இழுத்து வெளியே எறிஞ்சாங்களாம். ரொம்பப்பேர் பயத்தாலேயே செத்துட்டாங்களாம். தப்பிப் பொழச்சவங்க தங்க ஒறவுக் காரங்களைத் தேடிப் போயிட்டாங்களாம். பொழப்பு ஒண்ணும் சொகமில்லை தாதா' என்று சொன்னான் கரியன்.

கரியப்பன் சொன்ன கதை நெஞ்சை உலுக்கியது. சாரம் நிறைந்து செழிப்பாக வளர்ந்த வாழ்வு ஒரு கணத்தில் அழிந்து விடுவதென்றால் என்ன செய்வது? ஆறு, பிளேக், நெருப்பு என்று சாவு பல உருவங்களில் வெளிப்பட்டுப் பாதள்ளியை விழுங்கி ஏப்பம்விட்டது. தாதாவுக்கு ஏதேதோ கேட்கவேண்டுமென்று இருந்தது. ஆனால் கேட்க முடியவில்லை. எண்ணங்கள் குழம்பிக் கிடந்தன. தன் ஊர் இவ்வளவு விரைவில் எப்படிப் பாழாயிற்று என்பது, அவனுக்கு விடுவிக்க முடியாத புதிராய் இருந்தது. திகைத்து நின்றுவிட்டான். இருந்தாலும் ஏதேனும் கேட்க வேண்டுமென்று தோன்றியது. 'பின்னே, இவ்வளவு ஆபத்

துக்கள் இருந்தபோது நீ எப்படிப் பொழச்சே?'' என்று கேட்டான்.

கரியப்பா இருமினான். ஒருமுறை தலையை உலுக்கிக்கொண்டு விஷயங்களை நினைவுபடுத்திக்கொள்வதுபோல் கையை நீட்டிக் கொண்டு பேசினான்: ''என்ன சொல்வதப்பா? படதையாவோடு சாத்தேனஹள்ளிக்குப் போனேனோ, பொழச்சேனோ. சிமணா, செத்துப்போன செய்தி வந்தப்போ, படதையா அங்கதான் இருந்தார். உடனே ஷோலாப்பூருக்கு ஓடிவிட்டார். நான் இந்தப் பக்கமா வந்தபோது, சேத்துல தன் குடும்பத்தோட நடந்து விஜாபுரத்துக்குப் பொறப்பட்ட காசிம் சாயபு எதிரே வந்தான். 'ஏம்பா, ஊருக்குப் பொறப்பட்ட? உனக்கு வாழறத்துல ஆசை இல்லியா? வேணுமானா, நம்ம தோட்டத்தில போய் இரு'ன்னு சொன்னான். என் பெண்டுபிள்ளைகள்ளாம் செத்துப்போயிட்டாங்கன்னு அவன்தான் சொன்னான். இங்கேயே பழியாக்கெடக்க வந்துட்டேன். ஒவ்வொரு நாளும் ஜனங்க ஊரைவிட்டுப் போறதைப் பாத்துகிட்டே இருந்தேன். என் கண்முன்ன, எல்லாம் பாழாப்போச்சு; ஊரே சீண்டுவாரில்லாம அழிஞ்சுபோச்சு. நானும் போகணும்னுதான் நெனச்சேன். இந்த ஒடம்பு எசமான் வீட்டுச் சோத்தைத் தின்னு வளர்ந்தது. அவங்க பயிரைப் பாத்துகிட்டு இங்கயே விழுந்து போவட்டும்னு பின்தங்கிட்டேன். இங்கயே ஒருநாள் மண்ணோட மண்ணாப்போயிடுவேன். அப்பறம் என்ன? பெண்சாதி இல்லே, பிள்ளை இல்லே. படதையாவின் மடமானால் என்ன, எசமானின் தோட்டமானா என்ன, எல்லாம் ஒண்ணுதான்''—இப்படிச் சொல்லிப் பெருமூச்சுவிட்டான் கரியப்பா.

இருவருக்கும் பேச்சை முடிக்க இஷ்டம் இல்லை. தாதா எதையோ நினைத்துத் திருப்பித் திருப்பி கேள்வி கேட்டுக்கொண்டிருந்தான். கௌடர் வீட்டில் பார்வதியம்மா ஜுரத்தால் அவதிப்பட்டுக்கொண்டிருந்தது; வெளியிலே அவளை அனுப்ப முடியாமல் போனது; வீட்டுக்கு நெருப்பு வைத்தது; மடத்தில் ஏற்பட்ட ஆபத்து; சிமணாவின் தற்கொலை; பாளாச்சார் ஆற்றோடு போனது; எல்லாம் அவன் மனக்கண்முன் ஒரே சமயத்தில் நடந்த துக்க ஊர்வலம்போல் தோன்றின. செத்துப் போனவர்கள் எல்லோருமே உயிருக்கு உயிரானவர்கள். பேச்சு வாக்கில் கதை பின்னோக்கிச் சென்றது. தாதா தன்னுடைய வீரச்செயல்கள் எல்லாவற்றையும் ஒவ்வொன்றாக நினைத்துப் பார்த்தான். கௌடர் நிலத்துப் பயிரைத் திருடவந்தவர்களைத் தான் அடித்து விரட்டியது; தன்மேல் வாரன்ட் இருந்தபோது, பார்வதியம்மாள் தன்னைக் காப்பாற்றியது; ஹோலிப் பண்டிகை

யன்று கௌடர் வீட்டைக் காவல் செய்தது; ஒன்ரு, இரண்டா? இந்த எல்லாக் குழப்பங்களுக்கும் காரணம் கௌடருடைய சாவுதான். இன்னும் பின்னேக்கிச் சென்ருல், தன்னுடைய பெரியப்பா இறந்ததும் சிமணுவின் கற்பு அழிந்ததும் காரண மென்று சொல்லலாம். தாதா எல்லோரையும்பற்றி விசாரித் தான். பாளாச்சார் முதல் அஞ்சல் மல்லப்பன் வரையில் எல்லோரைப்பற்றிய செய்தியும் அவனுக்கு வேண்டி இருந்தது.

கிழக்கு வெளுக்கும்வரையில் இருவரும் பேசிக்கொண்டிருந் தார்கள். கரியப்பாவிற்குக் கொஞ்ச நாட்களாகத் தனியாக இருந்து இருந்து, மனிதர்களைக் கண்டால் தங்கத்தைக் கண்டது போல் இருந்தது. தாதா வந்தது, அவனுக்கு ஒரு புதையல் கிடைத்ததுபோல் இருந்தது. இருவரும் சலிக்கச் சலிக்க பேசிஞர்கள். பொழுது விடிந்ததும் பேச்சை முடித்துக்கொள்ள வேண்டி இருந்தது.

தாதாவுக்கு இன்னும் ஒருதரம் பாதள்ளியை ஆசைதீரப் பார்க்கவேண்டுமென்று இருந்தது. இந்துபுரத்துக்குத் திரும்பிப் போவதற்கு முன்பு, பாதள்ளியைப் பார்க்க விரும்பிஞன். கரியப்பனுடன் ஊருக்குப் புறப்பட்டான். கரியப்பா, மிச்சம் மீதி இருந்த பேச்சுகளையும் வழியில் பேசிக்கொண்டே வந்தான்.

வெறிச்சோடிக்கிடந்த பாதள்ளி மறுபடியும் அவனை வரவேற்றது. சூறைக்காற்றுக்கும் மழைக்கும் தாங்காமல் சில வீடுகள் விழுந்துவிட்டன. மிஞ்சிய வீடுகள்மட்டும் உருக் குலையாமல் அப்படியே இருந்தன. யாருடைய வரவுக்காகவோ காத்திருந்தன. மறுபடியும் பாதள்ளி என்றைக்கு நிரம்புமோ என்று தாதா கவலைப்பட்டான். ஓர் ஆண்டுக்கு முன்பே பாதள்ளி காலியாகத் தொடங்கியது. தேஷ்பாண்டேயின் மாளிகைக் கதவு அதற்கு முன்பே மூடப்பட்டுவிட்டது. புத்லாபாய் இறந்து, பாபுசாஹேபும் கனகேரிக்குப் போனபின் ஜாகீரின் பெரிய மாளிகை காலியாயிற்று. கௌடரின் சாவுக்குப்பின் அவருடைய வீடு அழிய ஆரம்பித்துவிட்டது. இப்பொழுது பிளேக்கும் பெருவெள்ளமும் வந்து மீதி இருந்தவர்களையும் வெளியேற்றி விட்டன. பாதள்ளி நிலத்துக்கு மனிதர் வசிப்பது பிடிக்க வில்லையோ, என்னமோ?

பாழ்பட்ட அந்தத் தோற்றத்தைக் கண்ணுல் பார்த்துக் கொண்டு தாதாவால் அங்கே நிற்க முடியவில்லை. பழைய நினைவு களெல்லாம் அங்கே பேயாக அலைவதுபோல் தோன்றியது. தாதா கார்ப்பௌர்ணமி அன்று, சாவடிக்குப் பின்புறமாகக் காளைகளை ஓட்டிஞன். சாவடியில் பக்ருத்தீன் சாயபுவுடன்

சண்டை போட்டான். கோபாலகிருஷ்ணன் கோயில் திண்ணையிலும் அக்ரஹாரத்திலும் பாளாச்சாரின் ஆஜானுபாகுவான உருவம் நடமாடியதை எப்படி மறக்கமுடியும்? தாலீம்கானுச் சுவர்களில் எழுதிய அனுமாரின் விகாரமான சித்திரத்திற்கும் இன்று எவ்வளவு ஜீவகளை வந்திருக்கிறது! மனித வாசனை அடித்து அடித்துப் பாதள்ளியின் நிலம் இன்னும் குத்துயிரோடுதான் இருக்கிறது. பாதிக் கதவு திறந்திருந்த வீடுகளைப் பார்க்கும்போது இன்னும் அங்கே யாரோ இருப்பதாகப் பிரமை தட்டியது. இருவரும் மௌனமாகவே சுற்றி வந்தார்கள். கடைசியில் நினைவுகளைத் தாங்கமுடியாததால் ஆற்றங்கரைக்குச் சென்றார்கள். அகழிக்குமுன் வந்தபோது, தாதாவுக்குப் பாளாச்சார் ஆற்றோடுபோன செய்தி நினைவுக்கு வந்தது. அந்த இடத்தைக் காணும் ஆவல் தூண்டக் கரியப்பாவைக் கேட்டான். கரியப்பா காட்டிய புளியமரம் சற்றுத் தூரத்திலேதான் இருந்தது.

'ஆச்சாரையா ஆற்றில் விழுந்தபோது, இதுவரைக்கும் வெள்ளம் வந்துதா?' என்று தாதா கேட்டான்.

'ஆமாம், அவர் அந்தக் கருவேல மரத்துக்கு அந்தப்பக்கம் போனதும் கரைப்பக்கம் கையை நீட்டிட்டு முழுகிட்டாராம். அப்பொ, கரைலே இருந்தவங்க சொன்னாங்க!' என்று கரியப்பா சொன்னான்.

ஆற்றில் வெள்ளம் அப்பொழுதும் திமிருடன்தான் ஓடிக்கொண்டிருந்தது. அதற்குப் பாதள்ளியை விழுங்கிவிட்டோமே என்ற துக்கமே இல்லைபோலிருந்தது. தானும் ஏன் இந்த வெள்ளத்தில் விழுந்து போகக்கூடாது என்று தாதா நினைத்தான்.

தாதா வெள்ளத்தைப் பார்த்துக்கொண்டே நின்றான். அலைகள் ஒன்றன்பின் ஒன்றாகப் பாய்ந்தோடின. காலனுடைய அதிருப்தியைப்போலவே அவற்றின் அதிருப்தியும் ஆச்சரியத்தை உண்டாக்கியது. ஆகாயத்தின் நிழலைப்போல் ஆறு நிலத்தைக் கவ்விக்கொண்டே முன்னேறியது. கரையில் வாழ்க்கை மாறிக்கொண்டே போனாலும் ஆற்றுக்கு அதைப்பற்றிக் கவலைப்பட அவகாசமில்லை. இந்த ஆற்றோடு ஒப்பிட்டால், பாதள்ளி, நேற்றுப் பிறந்து கண் திறந்த குழந்தை. பிறந்த குழந்தை ஆயுள் முடிந்தவுடன் இறந்துவிட்டது. ஆறு, தன் கடமை என்பதுபோல் பாதள்ளிக்குச் சிராார்த்தம் செய்துவிட்டுப் போய்க்கொண்டிருந்தது. நிலமும் நீரும் ஒன்றையொன்று தழுவிக்கொண்டு காதில் ஏதோ கிசுகிசுத்துக்கொண்டன.

தாதா பார்த்துக்கொண்டே இருந்தான். அலைமேல் அலையாக வரிசையாக நகர்ந்துகொண்டிருந்தன. பிறப்பும்

இறப்பும் இல்லாத நதியில் பிறந்த அலைகள் பிறந்து சாவது, வேடிக்கையாகவும் ஆச்சரியமாகவும் இருந்தது. கரையில் நின்று கொண்டு பின்னால் திரும்பிப் பார்த்தால், பாதள்ளி, உயிரற்ற உடல்போல் கிடப்பதாகத் தெரிந்தது; புத்துயிர் பெறும் ஆசை இல்லாமல் கிடந்ததுபோல் இருந்தது.

அப்படியும் சொல்லிவிடமுடியாது. கரை தெரியாமல் தண்ணீர் நிறைந்த ஆறு இன்னும் ஓடிக்கொண்டுதான் இருக்கிறது. நாற்புறமும் நிலம் உடலை நீட்டி நிமிர்ந்து பரவிக் கிடந்தது. கரையில் ஏற்கெனவே புல்பூண்டுகள் துளிர்த்துவிடவில்லையா? யாருக்குத் தெரியும்? வாழ்க்கை பிறப்பதே ஓர் அதிசயம். பாதள்ளி நிறைவுபெற்றுக் கலகலப்பாக மாறுதென்று எப்படிச் சொல்வது? பிளேக்குக்குப் பயந்து ஓடிப்போனவர்கள் திரும்பி வரலாம். பாதள்ளி அவர்களுக்காகக் காத்துக்கொண்டிருக்கிறது. இப்பொழுது தான் திரும்பி வரவில்லையா? பயிர்த்தொழிலில் ஈடுபட்டுப் புதிய சிருஷ்டியில் கரியப்பா தன் வாழ்வை அர்ப்பணித்துக்கொண்டிருக்கிறான் அல்லவா? அவன் ஜாகீர் தோட்டத்தைச் சாகுபடி செய்யும் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கிறான். லட்சுமிபாய் இன்னும் படோதையில் இருக்கிறாள். அவளுடைய வம்சம் பெருகி யாராவது இங்கே வரலாம். தேஷ்பாண்டே குடும்பத்தாரின் வம்சம் ஒருபுறம் வளர்ந்து கொண்டிருக்கிறது. பாதள்ளியின் நிறைவு இந்த விதைகளில் தான் அடங்கி இருக்கிறது. நிலம் ஓர் அட்சயபாத்திரம் போன்றது. அது என்றும் காலியாகாது. இறந்தவர்கள் திரும்பி வரமாட்டார்கள். ஆனால் மூலைக்கொருவராகச் சிதறிய பாதள்ளி மக்கள் ஓரிடத்தில் வந்து சேரத்தான் வேண்டும். அதற்குக் காலம் வரவேண்டும். எதுவும் அழிந்துபோய்விடாது என்பதற்கு இந்த ஆற்று வெள்ளமே சான்றாகும். பாதள்ளி காலியாகி விட்டதே என்று ஆறு வற்றிப்போய்விடவில்லை.

ஆனால் தாதாவால் துக்கத்தைத் தாங்க முடியவில்லை. சிமணாவின் துர்மரணம், பாளாச்சாரின் சாவு, லட்சுமணன் பரதேசியைப்போல் வேற்றூருக்குப் போய்விட்டது; இவை எல்லாம் அவனுடைய தனிப்பட்ட துக்கங்கள். அவற்றை நினைத்துக் கண்ணீர்விட்டான். அதைக்கண்டு கரியப்பா காரணம் கேட்டு வற்புறுத்தியதால் சொல்லத்தான்வேண்டியிருந்தது. 'நான் யாருக்காக வாழவேண்டும், சொல்லு கரியப்பா?' என்று சொல்லி அழுதான் தாதா.

"நீ சரியான பைத்தியக்காரன், தாதா. நான் ஊரிலேருந்து வரதுக்குள்ள என் பெண்சாதி, மூணு பசங்க எல்லாம் செத்துப்

போயிட்டாங்க. அதைக் கேட்டு நான் ஒன்னப்போல பைத்தியம் ஆகல. இதபார், மனுசன் இருக்கறமட்டும் செத்துப்போறேன்னு சொல்லக்கூடாது. வாழறபோதே செத்தாப்பல இருக்கக் கூடாது. நான் இருக்கறமட்டும் எசமானர் தோட்டத்தைச் சாகுபடி பண்ணி அவங்களுக்குச் சேவை செய்யலே? நீயும் அப்படித்தான் இருக்கணும். ஆச்சாரையா இருந்தபோது, 'கடவுள் நமக்குப் பிறவி குடுத்ததுக்கு ஏதோ காரணம் இருக்கணும். நம்மால ஏதோ வேலே ஆகணும்னுதான் நெனச்சிருப்பாரு. கடவுளுக்கு எல்லாரோட சேவையுமே வேணும்'னு சொல்லுவாரு. நாம சாகறத்துக்குன்னு பொறந்திருந்தா இத்தினி நாள் பொழப்பு நடத்தியே இருக்கவேண்டாமே? எந்திரி, எந்திரி'' என்று, என்றும் இல்லாத அக்கறையுடன் எழுப்பினன்.

தாதா எழுந்திருந்தான். அவன் மனது சோர்ந்து கிடந்தது. ஆறு அமைதியாக ஓடிக்கொண்டிருந்தது. தொலேவில் இருந்த பீடபூமியில் வெயிலும் நிழலும் ஓயாத விளேயாட்டில் ஈடுபட்டிருந்தன. மற்ருெரு சிருஷ்டியைத் தொடங்கத் திட்டம் போட்டிருந்ததுபோல் இயற்கை மௌனமாக இருந்தது. மேகங்கள் நகர்ந்தபோது உறைத்த வெயில் ஒத்தடம் கொடுப்பது போல் இருந்தது. பரந்தவெளி மழைக்காலத்துப் பசுமையால் நிறைந்து தேவர்களே விளேயாட அழைப்பதுபோலிருந்தது. புதிய சிருஷ்டி ஒன்றைத் தன் கருவில் அடக்கிக்கொண்டது போலிருந்த இந்த எதிர்பார்ப்பு மனேகரமாக இருந்தது. கரியப்பன் பின்னல் தாதா நிழல்போல் தொடர்ந்தான்.

முற்றும்.